

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீராமாயண வசனம்

சப்தகாண்டங்களின் சுருக்கமும்.

பீமகவிராயரியற்றிய

## ஸ்ரீராமர் அஸ்வமேதயாகமும்

திரிசிரபுரம் - வித்வான்

வி. கோவிந்தபிள்ளை யவர்கள்செய்த

## மகாவிந்த வசனமும்

இவை,

புதுவை - நாராயண தாசரவர்களால்

பெரும்பான்மை திருத்தியும், புதுக்கியும்,

விளக்கியும் தரப்பெற்று

லெத்தகிராப் படங்களுடன்

சென்னை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

1921

இதன் விலை] [ரூபா 2-0-0





ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

நம்மாழ்வார்திருவடிகளேசரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## தோத்திரக்கவிகள்.

உலகம்யாவையுந்தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலுநீக்கலுநீங்கலா
அலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கேசரணாங்களே. 1

சிற்குணத்தர்தெரிவருநன்னிலை
எற்குணத்தரிதெண்ணியமூன்றனுள்
முற்குணத்தவரேமுதலோரவர்
நற்குணக்கடலாடுதனன்றரோ. 2

ஆதியந்தமரியெனயாவையும்
ஓதினாரலகில்லனவுள்ளன
வேதமென்பனமெய்ந்நெறிநன்மையன்
பாதமல்லதுபற்றிலர்பற்றிலார். 3

தருகைநீண்டதயரன்றான்றரும்
இருகைவேழத்திராகவன்றன்கதை
திருகைவேலைத்தரைமிசைச்செப்பிடக்
குருகைநாதன்குரைகழல்காப்பதே. 4

அஞ்சிலேயொன்றுபெற்றானஞ்சிலேயொன்றைத்தாவி
அஞ்சிலேயொன்றாறாகவாரியர்க்காகவேகி
அஞ்சிலேயொன்றுபெற்றவணங்கைக்கண்டயலாரூரில்
அஞ்சிலேயொன்றைவைத்தானவனெம்மையளித்துக்காப்பான். 5

பொத்தகம்படிகமாலைகுண்டிகைபொருள்சேர்ஞான
வித்தகந்தரித்தசெங்கைவிமலையையமலைதன்னை
மொய்த்தகொந்தளகபாரமுகின்முலைத்தவளமேனி
மைத்தகுகருங்கட்செவ்வாயணங்கினை வணங்கல்செய்வாம். 6

நாடியபொருள்கைகூடும்ஞானமும்புகழுமுண்டாம்
வீடியல்வழியதாக்கும்வேரியங்கமலைநோக்கும்
நீடியவரக்கர்சேனைநீறுபட்டழியவாகை
சூடியசிலையிராமன்றோள்வலி[illegible]றுவோர்க்கே. 7

நன்மையுஞ்செல்வமுநாளுநல்குமே
தின்மையும்பாவமுஞ்சிதைந்துதேயுமே
சென்மமுமரணமுமின்றித்தீருமே
இம்மையேராமவென்றிரண்டெழுத்தினால். 8

வடகலைதென்கலைவடுகுகன்னடம்
இடமுளபாடையாதொன்றினாயினும்
திடமுளரகுகுலத்திராமன்றன்கதை
அடைவுடன்கேட்பவரமரராவரே. 9

வென்றிசேரிலங்கையானைவென்றமால்வீரமோத
நின்றராமாயணத்தினிகழ்ந்திடுகதைகடம்மில்
ஒன்றினைப்படித்தோர்தாமுமுரைத்திடக்கேட்டோர்தாமும்
நன்றிதுவென்றோர்தாமும்நரகமதெய்திடாரே. 10

இராகவன்கதையிலொருகவிதன்னிலேகபாதத்தினையுரைப்போர்
பராவருமலரோனுலகினிலவனும்பன்முறைவழுத்தவீற்றிருந்து
புராதனமறையுமண்டர்பொற்பதமும்பொன்றுநாள்தனினும்பொன்றா
அராவணையமலனுலகெனும்பரமபதத்தினையணுகுவான்றே. 11

இறுவரம்பினிராமவென்றோரும்பர்
நிறுவரென்பதுநிச்சயமாதலான்
மறுவின்மாக்கதைகேட்பவர்வைகுந்தம்
பெறுவரென்பதுபேசவும்வேண்டுமோ. 12

அன்னதானமகிலநற்றானங்கள்
கன்னிதானங்கபிலையின்றானமே
சொன்னதானப்பலனெனச்சொல்லுவர்
மன்னிராமகதைமறவார்க்கரோ. 13

ஆதியரியோநமநாராயணர்திருக்கதையறிந்தனுதினம்பரவுவோர்
நீதியனுபோகநெறிநின்றுநெடுநாவதினிறந்துசெகதண்டமுழுதுக்
காதிபர்களாயரசுசெய்துளநினைத்ததுகிடைத்தருள்பொறுத்துமுடிவில்
சோதிவடிவாயழிவில்முத்திபெறுவாரெனவுரைத்தசுருதித்தொகைகளே. 14

இளையநற்காதைமுற்றுமெழுதினோர்வியந்தோர்கற்றோர்
அனையதுதன்னைச்சொல்வோர்க்கருட்பொருள்கொடுத்துக்கேட்போர்
கனைகடற்புடவிமீதேகாவலர்க்கரசாய்வாழ்ந்து
வினையமதறுத்துமேலாம்விண்ணவன்பதத்திற்சேர்வார். 15



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீமத் கம்பராமாயண

# வசனச்சுருக்கம்.

## பாலகாண்டம்.

---

நெடியகடலாற்சூழப்பட்ட இவ்வுலகத்தின்கண் மிகவும் சிறப்புற்றோங்குங் கோசலநாடென்னும் அயோத்திமா நகரமானது பூமிதேவிக்குத் திருமுகமண்டலம்போலவும், திலதம்போலவும், கண்போலவும், திருமங்கல நாண்போலவும், மார்பிலசையா நின்ற முத்தாரம்போலவும், மகாலட்சுமிவாசமாயிருக்கும் பொற்றாமரைக் கமலம்போலவும், உலகங்களுக்கெல்லா மேலாகிய உலகம்போலவும், ஊழிகாலப் பிரளயத்திலுமழியாமல் நின்று சகலசீவகோடிகளும் வந்துசேர்ந்து வாசஞ்செய்திருக்கிறதற்கு மேலான ஒருவீடுபோலவும்பிரகாசித்துக்கொண்டு, மிகுந்த உயர்ச்சியும் விஸ்தீரணமும் பொருந்திய கோட்டையும், பாதாளமட்டும் ஆழ்ந்திருக்கின்ற அகழியும், அனேகமாடமாளிகை கூடகோபுரங்களுடனே கோடிசூரியப்பிரகாசம்போல விளங்கிக்கொண்டு பலபல விதங்களான பண்டங்களும் நிறைந்திருக்கிற கடைவீதிகளும் வீராதிவீரர் வீற்றிருக்கின்ற இராஜவீதிகளும், குபேரனுக்குநிகரானசம்பதுடைய வைசியவீதிகளும், அநேகசாம்பிராச்சியங்களுண்டானசூத்திரவீதிகளும், கல்விச்சாலைமுதலிய பலசாலைகளும், யானைகள்கட்டியிருக்கிற கூடங்களும், குதிரைத்திரள்கள்கூடியிருக்கிறபந்திகளும், நாடகச்சாலைகளிவைமுதலான சம்பிரமப்ராகாரங்கள் நிறைந்து நான்குவேதங்கள்போல நான்குவாயுண்டாகிப்பிரகாசித்திருக்கும் அந்ததேவேந்திரனுடைய

அமராவதியும், குபேரனுடைய அளகாபுரியும் இந்த அயோத்திமா நகரத்துக்குச் சமானமாகமாட்டாதென்றால் அப்பட்டினத்துக்கு நிகரான பட்டினம்வேறே எங்கேயிருக்கின்றது. மேலும், விண்ணளாவிய உப்பரிகைகடோறும் அநேகவர்னமுள்ள கொடிகளும், பூரணக்கும்பங்களும், மகரதோரணங்களும் நிறைந்திருக்கும் வீடுகள்தோறும் மங்கள கீதங்களும், பேரிகை முதலான மேளவாத்தியங்களும், சின்னங்கள் பூரிகாகளமுதலான கருவிகளின் ஒலிமிகுந்திருக்கும்பராபரவஸ்துவான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனத்தின்பொருட்டு ஸ்ரீராமமூர்த்தியாகவும், ஸ்ரீ இலக்குமிதேவியே சீதாபிராட்டியாகவும் திருவவதாரஞ் செய்தருளி, மகாலட்சுமியுடன் அனேககாலங் கூடியிருந்து இராச்சியபாரம் பண்ணிக்கொண்டிருந்த ஸ்தலம் இஃதானால் அதற்குச் சிங்காரமும் பெருமையும் மகிமையும் பிரமதேவனாலேயும் சொல்லக்கூடாத பிரதாபங்கொண்டிருக்கிற அப்பட்டணத்தினுடைய சிங்காரத்தை புத்தியீனமான அடியேன்என்னசொல்லப்போகிறேன் சுவர்க்கமத்தியபாதாளமென்னும் மூன்று லோகத்திலேயும் நிகரில்லாத அழகையுடையநகரமாகவிளங்கும் மேலும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் இருஷிகளும் நித்தியஸ்நானம்செய்து தத்துவக்கியானத்தைப் பெறக்கருதவும், இவ்வுலகத்தாருக்குப் பெருமையும் அருமையு நிறைந்த தாயைப்போலிரட்சிக்கும் தன்மையைச் சகலவளங்களுடனுதவி யிப்பாபவிமோசன பவுத்திரமுடன் பிரகாசிக்குஞ் சரயுநதிவளைந்து கோசல தேசஞ்சூழ்ந்த அயோத்திமாநகரம்.

## தசரதமகாராஜன் அரசியல்.

அந்த நகரத்தைச் சூரியன்முதல் பரம்பரையாய் ராச்சியபாரம் செய்துவந்த அரசருடைய வம்சத்தில் அயனெனு ராசனுடையபுத்திரன் இராசாதிராசன் அவன் தன்செங்கோலினுடையபிரதாபமும்ஈரேழுபதினாலுலகமும் சொல்லும்படியான கீர்த்தியுடையவன் தருமசொரூபன் உலகத்திலுண்டான உயிர்களை தன்னுயிர்போல் பாதுகாக்கப்பட்டவன் புலியும் பசுவும் ஒருதுறையில் நீரருந்தவும், சிங்கமும் யானையும்சிநேகித்துக்கூடிவிளையாடவும், பூனையும் எலியும் ஒருமித்து லா

வவும், மாதமும்மாரி பெய்யவும், முப்போகம் விளையவும் குடிகளிடத்தில் ஆறிலொரு கடமைகொண்டு மனுநீதி தவறாமல் செங்கோல் செலுத்தப்பட்டமகானுபாவன், தசரதமகாராஜாவென்னும் நாமதேயமுடையவன், தனது பத்தினிமார் மூவருடன் வாழ்ந்துக்கொண்டு உத்தமமாய் உலகத்தையாண்டு வருங்காலத்தில் வெற்றிமிகுந்த மன்னவனுக்குப் புத்திரனில்லாமையால் மெத்தவருத்தமுற்று குலகுருவாகிய வதிஷ்டரை நோக்கியழுது அவர் மலரடியைத்தொழுது நெடுநாளாய்ப் புவியாண்டேன் பிள்ளைகாணேன் இரவிகுலம் பழுதுபடலாச்சே என்னொருவனுடன் பேரற்றுப்போச்சேமலடனென்னும் வசையாச்சே புத்திரப்பேறுடையோர் என்னைப் பிள்ளைப்பேறற்றப்பாவி எனமொழிய இழிவாச்சே என்னால்மகனில்லையென்றுசொல்லவும் புத்தென்னும் நரகத்துக்காளாகி, மோட்சமில்லையென்ற வாக்கியத்தை வெல்லவும் தவம்பெறாப் பாவியானேனேஎன்றுவருந்துகையில்,வசிஷ்டமகாமுனியானவர் கியான திருஷ்டியினாலாராய்ந்து பிரம உருத்திராதி முதலிய தேவர்கள் இராக்கதர்கள் செய்யும் துன்பத்தைச் சகிக்கமுடியாமல் மகாவிஷ்ணுவினுடன் சொல்ல, அவர் அந்தராட்சதானை நாமே சங்கரிக்கிறோம் நீங்களஞ்சவேண்டாம்பூலோகத்தில் அயோத்தியாபுரியை ஆளும் தசரதமகாராசனுடைய பிள்ளையாக நாம் பிறப்போம் நீங்களெல்லோரும் வானரங்களாய்ப்பிறந்து அவ்விடம்வந்து சேருங்களென்று சொன்னதைத்தாமறிந்து சொல்லுகிறார்.

## புத்திரகாமேட்டியாகம் செய்தல்.

---

கேளும் சக்கிரவர்த்தியே இப்போது நீர்புத்திரகாமேட்டியாகம் செய்யவேண்டுமென்று அவ்வியாகத்தைக் கலைக்கோட்டுமகாரிஷியினால் மேற்படியாகஞ்செய்தால் புத்திரனைப்பெறலாமென்று சொல்லிய வதிஷ்டர் வாய்மொழிப்படி தசரதமகாராசன் யாகத்தைச்செய்து பூரணாகுதிகொடுக்குங் காலையில் ஒருபூதம் பொற்கிண்ணத்தில் பாயாசங்கொண்டு வரக்கண்டு அதைவாங்கி அந்தபாயாசத்தைசரிபாகமாகப்பகிர்ந்து கோசலைக்குப் பாதிகொடுத்து, மற்றப்பாதியை இரண்டாக்கி கைகேசிக்கொன்றும் இருந்தபங்கையும் உதிர்ந்தசேஷத்தையும் சுமித்திரைக்குக்கொடுக்க அவர்கள் நமஸ்கரித்து வாங்கி புசித்துக் கர்ப்பவதிகளானார்கள்.

# ஸ்ரீராமர்ஜனனம்.

கௌசலை கர்ப்பத்தில் சித்திரைமாசத்தில் சுக்கிலபட்ச நவமிதிதியில் புநர்பூசநட்சத்திரத்தில் நான்குகிரகங்கள் உச்சத்தில்நிற்க கற்கடகலக்கினத்தில் ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீராமராகவும், கைகேசியினிடத்தில்பரதர், சுமுத்திரையினிடமாக இலட்சுமணர் சத்துருக்கருமாக சுபமுகூர்த்தத்தில் நான்கு வேதங்களைப்போற் பிறந்தபுத்திரரைக்கண்டு களித்து ஜாதகன்மமுதலிய சத்கருமங்களும் நடத்திச் சுக்கிலபட்ச சந்திரனைப்போல விர்த்தியடைந்து வளர்ந்து வரும்காலையில் வசிஷ்ட மகாமுனியால் சகலசாஸ்திரங்களும் சதுர்வேதங்களும் ரதாரூடங்களும் யானையேற்றம் குதிரையேற்றம் முதலியனவை கற்றுணர்ந்தும் சந்திசெய்தலும்கலகித்தலும்போர்க்குப்போதலும் போர்புரியும் காலத்திற் கெதிர்நோக்கலும் போதித்தலும் பலவான்களை யாசரித்தலும் முதலான சட்குணங்களும் விளங்கக்கண்டு தசரதமகாராஜன் பரமானந்த முற்றிருக்கு நாளையில் விஸ்வாமித்திரர் தாடகையினால் வருத்தமடைந்து வந்து தசரதமகாராஜனைக்காண அவரெழுந்து நமஸ்கரிக்க கௌசிகர் இருகரக்கையுங்குவித்து இரப்பவர்போல எனக்கொருவரம்கொடுக்கவேண்டும் அஃதென்னெனில் இறைவனே என்னுடைய யாகம் நிறைவேற வுன்னுடைய பிள்ளைகளில் நீலமேக சியாமளவர்ணனாகிய ஸ்ரீராமனை அனுப்பவேண்டுமென்று கேட்டார்.

அப்போது தசரதனானவன் உடல்பற்றி உயிரை யெமன் கேட்கும்போது ஒருவனடையுந் துன்பம்போல் அயர்ந்து பூமியில்விழுந்து திருவடிகளிற்றொழுது சுவாமி அறியாத குழந்தையான ஸ்ரீராமனுக்கு சண்டைசெய்யுந்திரமைபோதாது தனுர்வேத முதலிய மந்திரங்களிலும் சிறிதேகற்றுணர்ந்திருக்கிறான். உமது திருவடிக்கடிமையாள் இருக்கும்போது என் சிறுவனாலாகத்தக்கதோ இராக்கதமாயையோ பெருஞ்சூது ஆதலின் நாயினேன் அவர்களையழித்து நாசப்படுத்தி உமது யாகத்தை நிறைவேற்றுவேனிப்போதென்று சொன்னார் அதைக்கேட்டவிஸ்வாமித்திரர் மிகவும்கோபித்தெழுந்த தன்மையை சமீபத்தில் இருந்தவசிஷ்டரானவர் அறிந்து அரசனைத்தேற்றி உன்குமாரனுக்கு இதுநல்லகாலம்இவருடன்கூட்டியனுப்புவதேநலம். இதுசமயம்இம்முனிவரால்சகல நன்மைகளும் இராமனடையவிருக்கிறார், இணையற்றகீர்த்தியு

தசரதரும் வசிஷ்டரும் யோசித்தல்.　　புத்திரகாமேட்டியாகம்.　　ஸ்ரீராமர்ஜனனம்.



ஸ்ரீராமரை விஸ்வாமித்திரர் அழைத்தேகுதல்.　　தாடகைவதை.　　சீதாகல்யாணம்.

மூமக் குண்டாகப்போகிறதென்று சொல்லிய வார்த்தையைத் தசரதர்கேட்டு கௌசிகர துபாதத்தைவணங்கி ஸ்ரீராமரையும் இலட்சுமணரையும் கையைப்பிடித்துக் கொடுத்துக் காப்பது ன்கடனென்று விடுத்தார்.

ஸ்ரீராமரையும் இலட்சுமணரையும்
கௌசிகர் அழைத்துக்கொண்டு போதல்.

---

விஸ்வாமித்திரர் மகிழ்ந்து தசரதமகாராஜனைப்புகழ்ந்து பிள்ளைகளிருவரையு மழைத்துக்கொண்டுபோய் இராட்சதமாயையும் அவர்கள்செய்யும் அக்கிரமத்தையுஞ்சொல்லி மந்திரார்த்தங்களு முபதேசித்து இருபக்கத்திலுங் காவல்வைத்து தனது யாகத்தை நிறைவேற்ற எத்தனமுற்றிருந்தார்.

தாடகை வதை.

---

அந்தச்சமயத்தில் தாடகைவந்துமலமாமுதலியவற்றை யெரிந்து யாகத்தையழிக்க அப்போது இராமரானவர்பெண்ணென்று நினைத்து நிதானிக்க அதைக்கண்டகௌசிகர்தருமசாஸ்திரஞ்சொல்ல, இராமர்கேட்டு விண்ணின்றிழிமேகம் போல் திண்ணென்று பூமியில்விழ கணைதொடுத்து தாடகையைக்கொன்றார் உடனே அவள்பிள்ளைகள் சுவாகுமாரீசனெனு மிருவருஞ்சேனையுடன் வந்துவளைத்துக்கொண்டுயுத்தஞ் செய்தார்கள் அவர்கள்பேரிலும்திவ்வியாஸ்திரங்களைத்தொடுத்து சுவாகுவையுங்கொன்று மாரீசனுடைய தலைக்குக்கணையைப்பிடித்தார் அஃதை மாரீசன்கண்டு மயங்கிகடலிலொளித்தான் உடனே விஸ்வாமித்திரர் யாகத்தை நிறைவேற்றிக்களிப்புற்றிருக்கையில் மிதிலையிலிருந்து சுப ஓலைவர அதை வாசித்தறிந்து இராமலக்ஷ்மணரிருவரையு மழைத்துக்கொண்டுபோகும் வழியில்.

அகலிகை சாபவிமோசனம்.

---

கருங்கல்லாய்க்கிடந்த உருவின்பேரில் இராமருடையபாதத்தூள்பட்டமாத்திரத்தில் வடிவுடையபெண்ணுய்வரக்கண்டு ஸ்ரீராமரானவர் இஃதென்னவென்றுவினவ, விஸ்வாமித்திரர் சுருக்கமாகச்சொல்லுகிறார் கேளும் ஸ்ரீராமா இவ்வகலிகை கௌதமர் மனைவி இவளை இந்திரன்சேர ஆயிரங் கண்ணுற்றான். இவள் கல்லானளென்று சொல்லக்கேட்டு கருணைகூர்

ந்து அகலிகையை அழைத்துக்கொண்டுபோய் கௌதமரிட த்தி லொப்புவித்தார்கள்.

### மிதுலாபுரிப் பிரவேசம்.

பின்பு மிதிலாபுரிக்குச்சென்று சபாமண்டபத்தி லிருந்த வேந்தர்வேந்தர்கள் யாவரும்களிக்க ஸ்ரீராமருடைய குலமு றைகளெல்லாஞ்சொல்லி இவரதுகரத்தின்றிரத்தை தாடகை சுவாகுபேரிற்கண்டேன் இவர்கால்வண்ணம்கல்லாய்க்கிடந்த அகலிகையின்பேரிற்கண்டேன். இன்று உம்முடையவில்லைக் காணவும் வந்தேனென்று விஸ்வாமித்திரர்சொன்னர். அந் தச்சொல்லைச் சகலருங்கேட்டு சந்தோஷ முற்றிருக்கச் சனக மகாராஜன் சொல்லுகிருன். அப்படியே நேரிடுமாகில் என் னுடைய தவப்பயன் தான் என்றுமகிழ்ந்து அறுபதினுயிரம் வில் வீரர்களால் வில்லையெடுப்பித்துக் கொண்டுவந்து சபை யிற்சேர்க்கவும், ஸ்ரீராமன்முகத்தை விஸ்வாமித்திரர் நாடவும் அக்குறிப்பையறிந்து அப்போது ஸ்ரீராமரானவரெழுந்திரு ந்து அறுபதினுயிரம் வீரர்களால் எடுப்பித்துக்கொண்டுவந்த அந்தவில்லைவெகுசுலபமாகவெடுத்து மளமளவென்று வளை த்து படீலென்று இரண்டுதுண்டாய் ஒடித்தெறிந்து விட்ட னர். அந்தவில்லின் ஓசையானது அண்டகடாகத்தையுமதி ரச்செய்தது.

### சீதா கல்யாணம்.

அக்கணமே மங்களஸ்திரீகள் சோபனம்பாடவும் பாங்கி மார்கள் சிதையம்மையிடத்தோடவும் சீதாபிராட்டியாருக்கு ம் ஸ்ரீராமருக்கும் கல்யாணங்குகூடவும் தசரதன்முதல் தாய் மார்களும் வந்து கொண்டாடவும் சகலசனங்களும் பிராமண ர்களும் புகழ்ந்துபாடவும் சகலவாத்தியங்கள்முழங்கவும் நம் பிமார்களியாவருக்கும்கலியாணச்சடங்கை நிறைவேற்றிவிவா கம்செய்துக்கொண்டுசனகமகாராசனிடத்தில் விடைபெற்றுச் சதுரங்க சேனைகள் புடைசூழ அயோத்தியைநோக்கி சகல ஆடம்பரங்களுடன் மிதிலையினின்றும் புறப்பட்டார்கள்.

### பரசுராம கர்வபங்கம்.

இப்படிச் சகல சம்பிரமங்களுடன் பவனிவரும்போது வழியில் பரசுராமர்வந்து தடுத்ததைத் தசரத சக்கிரவர்த்தி

கண்டு நடுநடுங்கி நிற்க, வந்தவர் சிற்சில வார்த்தைகளை பேசும்பொழுது இராமர் பயப்படாம லெதிர்நின்று அவரை ஓட்டிவிட்டு அவருடைய வில்லை வருணனிடத்தி லொப்பித்து அயோத்தியாபுரிவந்து நமஸ்கரிக்க எல்லாருக்கும் விஸ்வாமித்திரர் ஆசிர்வதித்து தமதிருப்பிடம்போய்ச் சேர்ந்தனர். சகலரும் அயோத்தியாபுரியில் மிருந்த சந்தோஷத்துடனிருந்தார்கள்.

பாலகாண்டம் முற்றிற்று.

---

## இரண்டாவது,
# அயோத்தியா காண்டம்.

### காப்பு.

*வானின் றிழிந்துவரம்பிகந்தமாபூதத்தின் வைப்பெங்கும்*
*ஊனுமுயிருமுணர்வும்போலுள்ளும்புறத்துமுளனென்ப*
*கூனுஞ்சிறியகோத்தாயுங்கொடுமையிழப்பக்கோற்றுறந்து*
*கானுங்கடலுங்கடந்திமையோரிடுக்கண்காத்தகழல்வேந்தை.*

அயோத்திமாநகரத்தில் ஸ்ரீராம இலட்சுமணபரதசத்துருக்கர்களுடனும் தந்தை தாய்மார் முதலியயாவருடனும் சுகமாக வாழ்ந்துக்கொண்டு வரும்போது மணவாளக் கோலமுடைய பரதனும் சத்துருக்கனும் பாட்டனாகிய கேகயனிடத்துக்குப் போயிருக்கப் பட்டணத்தில் இராமரும் இலட்சுமணரிருக்குநாளையில் ஒருநாள் தசரதச் சக்கிரவர்த்தியானவர்வசிஷ்டர் மந்திரிமார் முதலிய பெரியோர்களைப் பார்த்துச்சொல்லுகிறார், இதுவரையிலும் நான் சுமந்திருந்த இந்தபூமிபாரத்தை எனது ஜேஷ்டபுத்திரனாகிய இராமனிடத்தில் ஒப்பிவைத்து யான் நாட்டைத்துறந்து காட்டுக்குச்சென்று காய்கனிகளையருந்தி அரிய தவஞ்செய்யக்கருதுகிறேனென அதைக்கேட்ட பெரியோர்களெல்லாஞ் சந்தோஷித்து பிரமானந்தமுற்று நல்லகாரியமென்றார்கள். உடனே முகூர்த்தநாள் நேமித்து சகல சாமக்கிரியைகளையும் புண்ணிய தீர்த்தங்களுஞ் சேகரிக்கச்செய்து நாடு நகரங்களெல்லாம் அலங்கரிக்கும்படி பறையறைவித்துப் பட்டணமியாவும் புகழ்கொண்டாட மறுநாள்காலமே இராமருக்குப் பட்டாபிஷேகமென்று பாவசங்கொண்டு அன்றிராத்திரி யாவரும் தங்கள்தங்களிடத்திற்குச் சென்றார்கள்.

## கூனிகைகேசியைக் கலைத்தல்.

அரசனும் அரண்மனைக்குப்போயினன் சபையில் நடந்த சமாச்சாரமெல்லாங் கேட்டிருந்த மந்தாரையானவள்கேகயன் பாவையாகிய கைகேசியினிடத்திற்குச் சென்று அம்மா என் சும்மாவிருக்கிறாயென்று விம்மி உன் புருஷனாகிய தசரதமகாராஜன்கௌசலையின்பேச்சைக்கேட்டு அவளுடைய மனங் கோணாமல் ஸ்ரீராமனுக்குப் பட்டங்கட்ட நாளைக்கே நாள் நியமித்துக் கொண்டார்களாம். நீயேதுந் தெரியாமல் நித்திரை போகின்றாயே யென்றுசொல்ல அதைக் கைகேசி கேட்டு புளகமுற்று தன்கழுத்திலிருந்த முத்தாரத்தை கூனிக்கு வெகுமானமாகக்கொடுத்தாள். கூனியானவள் அதைவாங்காமல் கடுகடுத்துத் தடுத்துச் சொல்லுகிறாள்.

ஆ! ஆ! இஃகென்ன? அனியாயம் இராமனுக்குப்பட்டமானாலுன்பிள்ளை பரதன் அவனுக்குஊழியனாகவும் நீகோசலாதேவிக்குப் பணிப்பெண்ணாகவும் உன்மருமகள் சீதைக்கு வேலைசெய்யவும் உன்தகப்பன் இராமனுக்குப் பகுதிகட்டவும் உன்னுடைய மக்கள் வந்தால் கோசலையை நீவணங்கி அன்னவஸ்திரமுதலியவைகள் வாங்கிக் கொடுக்கவும் தன்னைப் பணிவாரைத் தான்பணிந்தேத்தவும் உன்னை நம்பியிருந்த நான்லைந்துவாடவும், ஏதொருசுதந்தரமு முனக்கில்லாமலே எல்லாம் மூத்தபெண்சாதி வசத்திலொப்பிவைத்துப் பிண்டமுந்துண்டமுங் கண்டதன்றி வேறொன்று மில்லை யென்று அரசன் உன்னையடக்கிவிட்டானே அஃதை யறியாமல்ஐயையோ! நீ பிறந்தசீரும் உன்பேரும் உன்தந்தையினாரும் உன் இச்சையின்படி நீ யனுபவித்த செல்வமும்போய் கோசலை வீட்டுத்தாதிக்குத் தாதியாய்ப் போகக்காலம் நேரிட்டதே சூரியன் முன்சந்திரனும் சந்திரன்முன் உடுக்கள் நிற்பதுபோலுமொத்த பிள்ளையை ஸ்ரீ இராமபிரானுக்கு நிகராய்ச்சொல்லத் தகாதே என, பரதனோ மெத்த அறியாதவன் கள்ளங்கபடு சூது வஞ்சகமொன்றும் தெரியாதவன். உன்னைப்போற்களங்கமற்றவன் அஃதெங்ஙனமெனில்கலியாணப்பிள்ளையும்பெண்ணும் வீட்டிற்குவந்து பெரியோரைப்பணிந்து ஆசிர்வசனம் பெறுவதற்கு முன்னமே கோசலையுரைத்த தலையணைமந்திரத்தை மனதிலே வைத்துக்கொண்டு வஞ்சகநினைப்புடன் வழியிற்றானே பாட்டன் வீட்டிற்குப் போய்வாவென்று சூட்டினையுடைய இராஜன் அனுப்பிவிட்டுப் பட்டத்தை இந்த இராம



கூனிகைகேசியைக்கலைத்தல்.



கைகேசி ராமலட்சுமணரைவனத்திற்கனுப்பல்.



தசரதர் மூர்ச்சை.



தசரதர்க்குக் கர்மம்செய்தல்.



குகன் ஓடம்விடல்



பாதுகைதந்தது.

னுக்குக்கட்ட நினைத்தான் இந்தகெட்ட நினைப்பைப்பார்த்தாயா இனி பேசுவதென்பது வார்த்தையா இன்னம் உன்னுடைய மனதுக்குத் தெரியவில்லையா எனக்கு மறுமொழி சொல்ல வாயில்லையா அழகிய சிங்காரவனத்தில் இராமனுனவனிருக்கச் சுமித்திரையினுடைய பிள்ளையாகிய இலட்சுமணனுங் கூடியிருக்க உன்பிள்ளையானபரதன் அவர்கள் கால்பிடித்துக்கொண்டிருக்க நேரிட்ட காலத்தைக்குறித்து நானென்ன செய்வேனென்று மார்பிலடித்துக் கொண்டு வாய்விட்டழுதனள்.

இந்தவார்த்தையைக்கேட்ட கைகேசி மெத்தவும் வியாகூலமுற்று மதிமயங்கி நீ சொன்ன வசனங்களெல்லா முண்மையே நானென்னசெய்வேன் இதற்கோருபாயம் எனக்குச் சொல்லுவாயாகில் அந்தப்படி நடப்பேனென்று கைகேசி சொல்ல, அதைக்கேட்டு கூனிசொல்லுகின்றுள், அம்மா தசரதமகாராஜன் உனக்குப் பூர்வத்தில் இரண்டுவரங் கொடுத்திருக்கிறுரல்லவா அவைகளைமறந்தனைபோலும் அதற்கு இது நல்லசமயம் வாய்த்தது சொன்னசொற்படிபேசஅறியாதஅரசனிடத்தில் முன்கொடுத்தவர மிரண்டையுந் தரவேண்டுமென்று நீகேட்டு பரதன் நாடாளஒருவரமும், இராமன்பட்டம் நீக்கிக் காடாள ஒருவரமும்பெற்றுக்கொள்ளுவாயாகில் நமக்கெதிர் ஒருவருமில்லை. சகலசெல்வமும் நம்முடையவைகளே என்று மந்தாரைசொன்னுள். அவள் புத்தியைக்கைகேசிகேட்டு தலைமயிர்களெல்லாம் விரித்துக் கீழேபுரளவும், வஸ்திரஞ்சோரவும், பரிமளகந்த புட்பமெல்லாம் பக்கத்தில் சிதறியிருக்கவும் அலங்கோலமாகப் படுத்துக்கொண்டிருந்தாள். ஆங்கு அப்போது தசரதராசன் ஆசையுடன் வந்து உன்குமாரனுக்குப் பட்டாபிஷேகம் நாளையென்று சொல்லி பார்க்கும்போது மிகுந்த விசனத்துடன்புலம்ப தேவியையெடுத்துமார்போடணைத்து இந்தமனோதுக்கம் உனக்கு வந்தவிதம்யாது உற்றதுரைப்பாய் சிற்றிடைமயிலே யென்று வருந்திக்கேட்க அப்போது கைகேசியானவள் சிற்சிலவசனங்களைவெடிப்பாகவும் வெறுப்பாகவும்பேசி யெத்தனைவித சமாதானஞ்சொன்னபோதிலும் கேளாமல் எனக்கு நீர் ஆதியில் கொடுத்திருக்கும் இரண்டுவரங்களை இப்போ தெனக்குத் தரல்வேண்டுமென்றுகேட்க தனதுதேவியைநோக்கி தசரதன்சொல்லுகிறுர். கேளும் பெண்ணே! அன்று சொல்லியவாக்கியத்தை அழித்

துப் பேசமாட்டேன், அப்படியே தடையில்லாமல் தந்தேன் பெற்றுக்கொள்ளும் எழுந்திரும் முகத்தை யலங்கரித்துக்கொண்டு உன்பிள்ளையாகிய இராமனுடைய பட்டாபிஷேகத்துக்குவாருமென்று அழைத்தார். அதைக்கேட்டு கைகேசி நகைத்து நீர்கொடுத்த இரண்டு வரத்தில் ஒருவரம் பரதன் நாடாளவும், மற்றொருவரம் இராமன்காடாளவும் வேண்டுமென்று சொன்னாள் அந்தசொல்லானது இரும்புநாராசங்காச்சிவிட்டதுபோல அரசனுடையகாதுகளில் நுழைந்துவேடன்கைப்பாணம்பட்டு வெருண்டு உருண்டு விழுந்த கிளேமான்போல அரசன் பூமியில்விழுந்து மூர்ச்சையடைந்து மறுபடியுந்தேறி எழுந்து பெண்ணே! கைகேசி, எனக்கு உயிர்ப்பிச்சை நீ தரவேண்டும் உன்மகன் பரதன் நாடாளட்டும் இராமன் மாத்திரம் வனத்திற்போகாம லிவ்விடத்திலிருக்கட்டுமென்று எத்தனைவிதத்திற் சொல்லியுங் கேளாமையால் முத்திரைமோதிரத்தைக்கழட்டி கைகேசிக்கு முன்னெறிந்துவிட்டு அடா குழந்தாய், ராமா ராமா வென்று பூமியில் விழுந்து தன்னைமறந்தான் தசரதமகாராஜன்.

## கைகேசியின் சோற்படி ஸ்ரீராமர்
## சீதா லட்சுமண சமேதராய் வனமேகுதல்.

---

இவ்விடத்திலிப்படியிருக்க மறுநாட்காலமே சபாமண்டபத்தில் வசிஷ்டர் முதலிய மந்திரிமார்களும் மன்னவர்களும் வந்து நிறைந்து மங்களவாத்தியமுழங்க இராமனுக்குப்பட்டாபிஷேகமென்றுயாவரும்உள்ளக் களிப்புடனிருக்குங் காலையில், அந்தப்புரத்தில் நடந்தசங்கதிகளியாவுமறிந்துகொண்டுராமன்மனமகிழ்ச்சியுடன் தசரதசக்கிரவர்த்தியினிடத்திற்கு வரும்போது அந்தப்புரவாசலில் நிற்கிற கைகேசியை நோக்கித்தீர்க்கதெண்டனிட்டார். அதைக்கண்ட தாயாகியகைகேசியார் இராமனைப்பார்த்துச் சொல்லுகின்றாள். ஏ ராமாஉன் தந்தை உன்னிடத்தில்சொல்ல மனம்வாராமல் சங்கடப்படுகின்றனர். ஆயினும் நான் சொல்லுகிறேன் கேள் நீ பதினான்குவருஷம் காட்டிற்றிரிந்து வரக்கடவை, உன் தம்பி பரதன் இந்நாட்டை யாளக்கடவனென் றுரைத்தாள் அந்த மொழியைக்கேட்டுமகிழ்ந்து அம்மணி என்பாக்கியமே பாக்கியமென்று அநேக முறைப்பணிந்து என்னரசன் சொல்லாமற்

போனாலும் தேவரீர்கட்டளையைத்தள்ளிநடக்கவென்றரமோ தாயே நீர்சொல்லிய வாக்கியமே வேதவாக்கியசிலாக்கிய மன்றிவேறில்லை இதுவே பிரயாணமாய்ப் போய்வருகிறேனென்றுவணங்கி அடிக்கடி மண்மீதில் வீழ்ந்து தாழ்ந்து எழுந்து விடைபெற்றுக்கொண்டுதந்தையிருக்கும் அந்தப்புரத்திற்குப் போகாமல் தன் சொந்த கிருகத்திற்புகுந்து ஆரகேயூரமணி மகுடகுண்டலமுதலிய யாவுங் களைந்து சிற்றன்னையா லனுப்பப்பட்ட மரவுரியைத் தரித்துக்கொண்டு காடே காணியாட்சியாகப்புறப்பட்டார். அப்போது தேவர்களெல்லாம் புகழ்ந்து பாரிசாதமலர்களைப் பொழிந்து எங்கள் குறையை யகற்றுமேந்தலே என்றுவாழ்த்தினார்கள், அக்காலையில்ஸ்ரீராமர் பட்டாபிஷேகக்கோலம் நீங்கி சடைமுடி மரவுரியுடன் வருந்தன்மையைக்கண்டு வசிஷ்டர் மன்னர்கள் முதலிய மற்ற யாவர்களும் வாடிக்கலங்கி யாதொன்றும் தோன்றாமல் ஏங்கியிருந்தார்கள். அப்போது ஸ்ரீராமரானவர் வசிஷ்டரைவணங்கி தாயாகிய கோசலையைத் தொழுதார். அந்தம்மாளும் அழுதுவிடைதர நீக்கிச் சீதையினிடத்திற்கு வரக்கண்டு கலங்கி கூடவரும்படி காட்டிய குறிப்பையுணர்ந் தழைத்துக்கொண்டு சுமித்திரையைக் கண்டிறைஞ்சி இவ்வார்த்தைகளைச் சொல்லக்கேட்டதம்பி இலட்சுமணன் கோபங்கொண்டதை மாற்றி அவனையுமழைத்துக்கொண்டு தாங்கள் மூவரும் (இராம லக்ஷ்மண ஜானகி) புறப்பட்டு அயோத்தியை விட்டு நீங்கும்போது உயிரிழந்த வுடல்போலும் யாவரும் துயரங்கொள்ள, அதைக்கண்ட கோதண்டராமரானவர் அவரவர்களுக்குத் தக்க சமாதானஞ்சொல்லி எல்லவர்களையும் நிறுத்திவிட்டு மூன்று யோசனைதூரஞ்சென்று கங்கையைக் கடந்து குகப்பெருமானுடைய உறவுகொண்டு அப்பால் சித்திர கூடம்போய்ச் சேர்ந்து, சிவனடியார் திருமாலடியார் பெரியோர்கள் வந்து ஆசீர்வதிக்கவும் அவர்களை இம்மூவர்களும் வணங்கி உபசரித்துக் கொண்டிருந்தார்கள்.

## தசரதமகாராஜன் சுவர்க்கமடைதல்.

---

இந்தச்செய்திகளெல்லாவற்றையும் ஆதியோடந்தமாக மந்திரியாகிய சுமந்திரன் சொல்ல தசரதமகாராசன் கேட்டு ஆ ஆ மகனே மகனே யென்று ஆவியகன்றார். உடனே வசிஷ்டர் திருமுகமனுப்பக்கண்டு பரதசத்துருக்கா ளிரண்டுபேரும் அயோத்தியா புரியில்வந்து அரண்மனையிற் புகுந்து

அரசனிறந்ததை யுணர்ந்து அண்ணன் அகன்றதுதெரிந்து தாய்முகம்பார்க்க வாயெறிந்து தந்தைக்குச் செய்யுங் கருமவிதிகளை யெல்லாம்புரிந்து கைகேசியைநோக்கி அடி பாதகி இப்படி என்னைப் பழிக்காளாக்கி விட்டாயேயென்று கண்ணீர் சொரிந்து கோசலை தாயைப்பரிந்து ஐபதபங்க ளனேகம்புரிந்து இனிமேல் என்தமையனைப்பிரிந்து இகத்தில் இமைப்போதும் உயிர்வைத்துயிருக்கேனென்றிறைந்து என் அண்ணனைப்போகுதல் நானுங்காட்டுக்குச் செல்கின்றேனென்று விரைந்து தவவேடங்கொண்டு பரதன்புறப்பட்டான்.

பரதமகாராஜன் சத்துருக்கருடன்
ஸ்ரீராமரைக்காண ஏகுதல்.

தாய்மார் மூவரும் வசிஷ்டர் முதலிய மந்திரி பிரதானிகளும் ரதகஜதுரகபதாதிகளும் நகரத்திலுள்ள ஜனங்களியாவரும் கடல் நெருங்கி வருவதுபோல் கலந்து சென்றார்கள் பரதரானவர் கண்ணீராறுகப் பெருகும் படியாய்க் கங்கைக் கரைபோய்ச்சேர்ந்து குகனைக்கண்டு சிலவார்த்தையாடி யோடத்திலேறிச்சென்று சித்திரகூடம்போய் இராமரைக்கண்டு தாயைக்கண்ட சேயைப்போலும், பசுவைநோக்கியகன்றைப் போலும் பரதன் கதறி முறையிட்டலறி தந்தையிறந்த சங்கதியைக்கூறி தாயாகிய சீதையம்மன் சரணங்களிற் பணிந்தான் அப்படிப்பணிந்த பரதனை வாரியெடுத்து மார்போடணைத்து மாமனிறந்த வகையுணர்ந்து கண்ணீர் மாரிபோற் பொழிய இராமலட்சுமணரும் வெதுவாகவிசனங் கொள்ளுங் காலையில் வசிஷ்டரு மற்றுமுள்ள மகாமுனிவர்களும் துயரம் நீங்க சில நீதிவசனஞ்சொல்லி ஸ்நானஞ் செய்வித்து அவ்விடத்தில் நடக்கவேண்டிய கருமங்க ளெல்லாவற்றையும் முடித்து பரதனைநோக்கி இராமர் சொல்லுகிறார். தம்பி மாதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்யும்படியாய் வனத்திற் பதினான்கு வருடங்கழிந்து பதினைந்தாவது வருடமுதலில் தசமி கூடிய சுபதினத்தன்று வருகிறேன். அதுவரையிலும் தாய்மார்கள் மனங்கோணாமல் நடந்து நீதிசெலுத்திமந்திரிமார் சேனாதிபர் ஆசிரியர் யாவருமகிழத் துரைத்தனஞ் செய்யக்கடவை யென்று கட்டளையிட்டார். அதற்குப்பரதன் சீதாராமருடைய திருவடிகளிற் பணிந்து தேவரீருடைய திருவடியுந் தாயாருடைய திருவடியுஞ் செல்லும் வனங்களிற் கல்

லும் புல்லும் நீக்கிக்கொண்டு வருகிறேன். அல்லும்பகலும் விழித்துக் காவலிருக்கிறேன். சொல்லும் ஏவற்றொழில்களைச் செய்துவருகிறேன் அண்ணாவென்றலறியழ, அதற்கு ஸ்ரீராமரானவர் பரதனையெடுத்தணைத்து தாய்தந்தையர் வாக்கியம் தப்பி நடப்பது தமக்குயோக்கியமல்லவே தம்பி யென்போலொத்த பிள்ளைபிறந்து மாதாபிதாவை வையகத்தார் பழிக்கச்செய்து நன்கு புரிவதழகல்ல, நமது குலமுறைக் கடுத்ததல்ல, என்வார்த்தையை நீதள்ளிநடப்பது இயற்கையுமல்ல ஆகையால் பதினன்குவருடமும் பதினறுநாளாய் நினைத்து அரசுசெய்திருப்பையாகில் நானும் பதினன்கு வருடத்தையும் பதினன்கு நாழிகையாகக் கழித்து வருவேனென்றுசொன்னர்.

அந்த வாக்கியத்தைக்கேட்டு பரதன்முகம்வாடிஇராமருடையபாதுகையைத் தேடிநாடி கண்ணிலொத்திக்கொண்டு இதையாகிலுங் கருணைபுரிந்தால் சிங்காதனத்திலேற்றி இறைவனை உம்மை பூசைபுரிந்து எப்போதும் நடந்துவரும் அரசாட்சியைத் தப்பாமலொப்பிவைத்துநானிப்போதிருக்குங் கோலத்துடன் தேவரீர்வருமளவும் முப்போதுண்ணுமலிருப்பேன். தேவரீர்வருங்காலமெனக்குச்சொன்னபடி வாராதிருப்பீரேல் அக்கினியிலிறப்பேனென்று சொன்னர்.

அப்படிச்சொல்லிய தம்பிக்குப் பாதுகை மகுடஞ் சூட்டியனுப்ப விடைபெற்றுக்கொண்டு யாவரும் உயிர் நீங்கிய உடல்போலும் துன்பமுடன் திரும்பி அயோத்தியா புரிக்கு வந்தார்கள். பரதமகாராஜன் நந்திக்கிராமத்தில் சிங்காதனமேற்படுத்தி அதன்பேரில் பாதுகையையமைத்து நித்தியசமாச்சாரங்களும் சுமந்திரனு லுணர்ந்துக்கொண்டு சடைமுடிமரவுரியுடன் இராம மந்திரத்தைச்செபித்து சிந்தைதளராமல் தென்றிசையைநாடி இராமரை விட்டுபிரிந்தநாளெண்ணிக்கொண்டு பரத சத்துருக்கரிருவரும் தங்கள் நாளைக்கழித்து அண்ணன்வரும் நாளை எதிர்பார்த்துக்கொண்டு சுகமுடன் இனிது வீற்றிருந்தார்கள்.

அயோத்தியாகாண்டம் முற்றிற்று.

---

மூன்றாவது,

# ஆரணியகாண்டம்.

காப்பு.

பேதியா துயிர்பேத உருவர்பிறழ்கலா
சோதியோதிஉணருந்தொறுமுணர்ச்சியுதவும்
வேதவேதியர்விரிஞ்சன்முதலோர்தெரிகலா
ஆதிதேவரவரெம்மறிவினுக்கறிவரோ.

ஸ்ரீராமரானவர் பரதசத்துருக்கர் முதலிய அனைவர்களுக்கும் விடைகொடுத்தபிறகு இவ்விட மிருந்தால் மறுபடியும் வருவார்களென்று நினைத்து ஸ்ரீராமர் முன்னும் சீதாதேவியார் நடுவிலும் இலட்சுமணர் பின்னுமாக நடந்துமகானுக்களை நமஸ்கரித்து அவர்கள் ஆசிர்வாதம்பெற்று யாளிசிங்க முதலிய மிருகங்கள் சஞ்சரிக்கும் வனங்களிற் சென்றார்கள்.

## விராதன் வதையுந்துதியும்.

அப்போது வடவாமுகாக்கினி குடியிருக்கும் கண்களும் சடைமுடியும் திடகாத்திர தேகமுடைய விராதனென்னுமிராக்கதன் வந்து திடுக்கிட்டுச் சீதாதேவியை யெடுத்துத் தோளிலேற்றிக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் செல்லும்போது லோகாபிராட்டி துயரமுற்று கூச்சலிட்டலரக்கண்ட ஸ்ரீராமரும் இலட்சுமணரும் பயப்படாதேயென்றுறுதிகூறி திவ்வியாஸ்திரங்களைத் தொடுக்கவும் அதைக்கண்ட விராதன் பூமியிலிறங்கி இவர்களிருவர்களையும் சேர்த்தெடுக்கவும் தோளிலேறிக்கொண்டு வாளையுருவி யோங்கி வெட்டிய காலையில் இரண்டுபுஜமு மற்றுப்பூமியில் விழவும், ஸ்ரீராமரும் சீதையம்மனும் இளைய பெருமாளும் நிலத்திநிற்றிடங் கொண்டிருக்க, விராதனானவன் தேவவிமானத்துடன் அனேக தோத்திரங்கள் புரிந்து பணிந்து சென்றான். தேவர்கள் அடங்காமகிழ்ச்சியுடன் புட்பமாரி பொழிந்தார்கள்..

## ஸ்ரீராமர் தண்டகாவனஞ் சேர்தல்.

அப்பால் மூவரும் நெடுந்தூரஞ்சென்று பிரபஞ்சத்தின் வாழ்க்கையை பொய்யென்றிகழ்ந்து மெய்யாகிய வஸ்துவை நாடிக் கொண்டிருக்கும் சரபங்கருடைய ஆசிரமத்திற்குச் சென்று அந்த மகரிஷி முதலிய மாதவத்தினர்க்கு நமஸ்காரஞ்செய்து அவர்களாசிர்வசனமும் பெற்று தண்டகாவனத்

தில் இராக்கதரால் வருந்தும் உத்தமரிஷிகளுடைய துன்பம் நீங்க அபயஸ்தங்கொடுக்க அப்போது அவ்விடமிருந்த அகஸ்தியர் சொல்லுகிறார். நீங்கள் போகும்வழியில் உனது தகப்பனுருக்கு மிகுந்த இஷ்டனுகிய சடாயுவென்பவர் இருப்பார். அவரைக்கண்டால் உங்களுக்குத் தகுந்தவிடம் சொல்லுவாரென்றுரைக்க மூவரும் நடந்துசடாயுவைக்கண்டுவார்த்தையாடி அவ்விடத்திலிருந்த கோதாவிரி தீர்த்தந்தாண்டி பஞ்சவடிதீர்த்தத்தில் லட்சுமணரால் கட்டப்பட்ட பர்ணசாலையில் சீதாசமேதராய் ஸ்ரீராமர் எழுந்தருளியிருக்க இளைய பெருமாள் கந்தமூல பழவர்க்கங்கள் கொண்டு வந்தவைகளாற் சீதாபிராட்டியையும் ஸ்ரீராமரையும் உபசரித்துக்கொண்டு தலைவாயலில் காவல்வைத்துக்கொண்டிருந்தார்.

## சூர்ப்பநகையை வின்னப்படுத்துதல்.

இப்படியிருக்க சூர்ப்பநகை யென்னும் அரக்கியானவள் திரிலோக சஞ்சாரியாகவும் கானகங்களிற்றிரிந்தும் முனிவர்கள் தவமுதலிய ஜெபங்களையழித்துவரும் நாட்களில் ஒருநாள் ஸ்ரீராமமூர்த்தி சீதாசமேதராய் எழுந்தருளியிருக்கின்ற பஞ்சவடி தீரத்திற்கு அவ்வரக்கிவந்து ஸ்ரீகோதண்டபாணியின் திவ்விய திருவுருவத்தைக்கண்டு தீராக்காமனேய் மேற்கொண்டு தியங்கி மயங்கி உயங்கி யிளைத்துகளைத்துதளர்ந்து விழுந்து எழுந்து கொழுந்து விட்டெரியுங் கொடியகாமத்தால் வருந்தி தனது இராக்கத ரூபத்தைமறைத்து அரம்பாஸ்திரீகளைப்போலே வேடந்தரித்தலங்காரத்துடன் துலங்கநடந்து குலுங்க நகைத்து ஆரியகுல வீரியத்தி லுதித்தவள் போல அபிநயித்து அவரை இணங்கி வணங்கி ஒதுங்கி ஒதுங்கி ஐயனே யான் செய்த மாதவபலனுற்றேன். கைநிரைந்த பொன்னிலும் கண்ணிறைந்த கணவனே போதும் என்பதைப் பெற்றேன் என்று தனதுமாய மோகினி நடத்தைகள் யாவற்றையும் பலவாருகக் காணப்படுத்தினுள். இவைகளையெல்லாம் மாருமற்கண்ட வீரகோதண்டபாணி அவளைநோக்கிச் சொல்லுகின்றார்.

ஓ பெண்பாவாய்! உன் எண்ணமெல்லாந் திண்ணமே? ஆனல் எனக்கோர் மனைவியிருக்கிருள், தருமவிருத்தமாகக் கொண்டவளை விட்டுக் கண்டவளைச்சேரலாமோ உலகப்பழிப்புக்குடன்படலாமோ ஓர் உறையிலிரண்டுவாளோ ஆகை

யால் அதோ இலட்சுமண னென்றிருக்கும் குமாரப்பருவமு ள்ள பிள்ளைக்குத் தருமபத்தினி இவ்விடத்திலில்லை அவனி டம்போய்ச் சேருவையாகில் உனக்குத் தருந்தபடி செய்யத் தக்கவன் என்று வழிகாட்டினர் பழிவினையுடைய பாவி இளை யவனிடத்தில் மேவி மோகத்துயரினைக்கூவி இருகரத்தை யும் விரித்துத்தாவி பஞ்சபாணனல் அடிபட்டு என்னுவி பதைக்குதே தாலிகட்டிக்கொண்டு பணிவிடைக்கு தகுந்த என்மேற் பரிந்து உங்கள் பட்சத்தைவையும் என்று பற்பல விதத்தில் அவரைமயங்கப்பண்ணினுள், இளையபெருமாளா னவர் அதற்குமனஞ்சலியாமல் திடசித்தராகி அவ்வரக்கிதன் அண்ணனிடத்திற்போய் பேசிவந்த வண்மையும் அவளது நடைநொடிபாவனைகளையுமுணர்ந்து இவள் அரக்கியேயல் லது வேறல்லவென்னுந் தன்மையையும் அறிந்துகொண்டு பெருங்கோபத்துடன் தன் அரையிலிருக்கும் வாளை உருவிக் கொண்டு அவள் தலையிலிருக்கும் சுருட்டைமயிரையும்பிடித்தி ழுத்துத் தள்ளிக்கொண்டு மலைக்குகை போலொத்த மூக்கை யும், கறுத்தமணியினையுடைய தனத்தையும் அறுத்துவிட் டார். அப்போதவள் மனம்வெறுக்கவும், அண்டமும் நடு நடுங்க உறுக்கவும், அபயமபய மென்று காகுத்தனிடத்தி லோடிவந்து அலறிவிழுந்து தேவரீரையறியாமல் இளைய வனிப்படி செய்தான், ஆகிலும்பெரிதல்ல அடியேன் மீதில் ஏதோ தப்பிதமிருந்து தண்டித்தீர்கள், நான் சுதந்தரியாய் விட்டேன் என்னை அங்கீகரிக்கவேண்டும் சுவாமி கரும்புக் குக் கணுவிருந்தாலுங் கசக்குமா வென்றுசொல்லி செந்நீர் பெருகியோட திடுதிடுவெனச் சேரவருவதை வேர்த்த முகத் தினையுடையவரான இராமர்கண்டு உடைவாளை யுருவிக்கொ ண்டு அரக்கியைநோக்கி நீ ஓடிப்பிழை இவ்விடத்திலிருந் தால் இன்னம் பிழைவருமென்று சொல்ல அதை அவள் கேட்டு சப்தமேகம்போல் இரைந்து தனிவனமெல்லாங் கரி ந்து புகையவும், தாரைதாரையாய் உதிரம் பெருகவும் தம்பி அறுத்த மூங்குமூலை கொண்டையையும் கைக்கொண்டு கரனி டத்திற் சென்று கதறிப்பதறிக்கலங்கியழுதாள்.

## கரதூஷணுள் வதை.

---

அதைக்கண்ட கரனுடைய கண்களிரண்டுஞ் சிவந்து மெய்மறந்து பதினலாயிரந் தேர்கூட்டமும் திரிசிரன் தூஷ ணன் மற்றுமுள்ள படைகளும் பயணப்படவும், சூர்ப்பநகை

வழிகாட்ட நடந்து காட்டில்வந்திருக்கும் ஸ்ரீராமமூர்த்தியை யைச்சூழ்ந்து கொண்டார்கள். அப்போது ஸ்ரீராமரானவர் தம்பியை நோக்கிச் சொல்லுகிறார் தம்பீ நீ ஜானகியைச் சற்றுநேரம் காத்திரு இந்தச்சேனைகளை இதோ எமலோகம் ஏற்றித் தூற்றிவிட்டு வருகிறேன் என்று விஜயகோதண்டத்தையெடுத்துப் பிடித்து வளைத்து இழுத்து நாணிமாட்டிடங்காரஞ்செய்து ஓங்காரமிட்டு வந்த சேனைகளையும் திரிசிரன்தூஷணனையுங் கொன்றுவிட்டார். கரன் அதைக்கண்டு வாகைவிற்கொண்டு கையோயாமற் போர்செய்ய ஸ்ரீராமரானவர் அவன் வில்லை முறித்துப் பல்லைக்கடித்து தலையைத்தறித்து ஒரு நிமிஷநேரத்தில் வனமெல்லாம் இரத்தமும் பிணமலைகளுமாகும்படிச் செய்து தம்பியிடத்தில் வில்லைக்கொடுத்து கைகால் சுத்திசெய்துக்கொண்டு சீதை இலட்சுமணர் ஸ்ரீராமர் மூவரும் மகிழ்ந்திருந்தார்கள். இவைகளைக்கண்ட சூர்ப்பனகை நடுநடுங்கிப் பயந்து இனி நின்றால் நமது தலையும்போம் இன்னொரு முலையும்போம் என்று இலங்கையில் ஓடி இறைந்துவாடி இராவணனைநாடி ஓப்பனைச்சொல்லிப்படி இந்திரசித்தே என்னருமை மருமகனே யென்று கூவி ஆவினைப்பிரிந்த கன்றுபோற்கதறி ஓவென்றலறினாள். அவளைப்பார்த்து இராவணன் பதறினான். கோபாக்கினிப் பொறிச் சிதறிப்பறக்க ஓங்கி அறைந்து அஷ்டநாக மஷ்டகெஜங்களும் அலைந்து அலைந்து உலைந்து பெருமூச்சு விடவும் ஆங்காரமிட்டெழுந்து அதட்டி ஆரடி உன்னை அங்கவீனஞ்செய்தவன் அரனா அரியா அயனா மற்றரியாரோ! இவர்கள் மூவருங் கூடிச்செய்த வேலையோ! கரன்முதலிய நமது படைகள் அவ்விடத்தில் இல்லையோ! நான் பிழைத்த பிழைப்பு இன்று இப்படியாச்சே! என்கீர்த்தி முதலிய வலிமைகள் இன்றுபோச்சோ! ஓ! சூர்ப்பனகா சீக்கிரஞ் சொல் சொல்லென்று கேட்டான்.

இராவணனுடன் சூர்ப்பனகை முறையிடல்.

---

அதைக்கேட்டு சூர்ப்பனகை சொல்லுகிறாள் ஓ! அண்ணா தேவர்கள் முதலிய திரிமூர்த்திகளுமல்ல அயோத்தியை யாளும் தசரதனுடைய பாலரான இராமன் இலட்சுமணனென்னும் இருவர் ஸ்ரீராமர் பெண்சாதி சீதை என்பவள் இவர்கள் மூவரும் இருடிவேடத்துடன் பஞ்சவடியிலிருக்கக்கண்டேன்

கலைமகளும் மற்ற அரம்பாஸ்திரீகள் முதல் யாவரும் அந்த சிதையினுடைய அழகுக்கு நிகராகமாட்டார்கள். அந்த அம்மாளை வருணித்துச்சொல்ல ஆயிரநாவுடைய ஆதிசேடனுக்கும் அசாத்தியமென்றால் அப்பேர்பபட்ட நாயகி னழகை ஒரு நாவுடையவளாகிய யானோ பேசத்தகுந்தவள் திக்கெல்லாம் ஜெயங்கொண்ட செல்வப் பிராணனாகிய தேவரீருக்கு அவள் பட்டபு தேவியாகக் கிடத்திருந்தால் அதுவே இலட்சுமி கரமென எண்ணி எப்படியாகிலுங் கொண்டுவந்து உம்மிடத்திற் சேர்த்துவிடவேண்டுமென்று நினைத்து மெள்ள வசப்படுத்தப்போனேன் அவ்விடத்தில் காவலிருந்த இளையவன் என்னைப்பிடித்து இப்படி அங்கவீனஞ் செய்து உன் தமையனிடத்தில் சொல்லிக்கொள்ளடி யென்று அனுப்பினார்கள் நான் அழுது மூக்கு முதலியவற்றை யெடுத்துக்கொண்டு கரனிடத்திற்காட்டி முறையிட்டேன் அவன் கோபத்துடன் திரிசிரன் தூஷணன் முதலிய சேனைகளுடன்வந்து கொடிய யுத்தஞ்செய்தான் அந்தராகவன் நொடியில் புழுதிபோலமடியச்செய்து கெடிவீரப்பிரதாபனாகவு மிருக்கின்றான். அவர்களிடத்தி லிருக்கிற பெண்ணரசியை, பெண்கள் பெருமாளை பெண்கள் மாணிக்கத்தை, பேரெற் றிலகத்தை பெண்ணிற் பெருந்தகையை நீர் கண்ணுற்கண்டால் அண்ணா நான் அவ்விடத்திற்குப்போகத்தகும் தகாதென்று தேவரீருக்கு நன்றாகத் தெரியும், நான் இப்படி அங்கவீனமாய்ப் போனாலும் போகட்டும் அந்த அணங்காசியானவள் உன்னிடத்திலிருக்க என்கண்ணால் ஒருநாள்பார்த்தாலும் போதும் அண்ணா நானின்னமும் யென்னசொல்லப் போகிறேனென்றாள்.

## இராவணன் தண்டகாவனம் வருதம்.

---

இப்படிச்சொல்லிய சூர்ப்பநகையின் வார்த்தையைஇராவணன்கேட்டு அனலிற்காட்டிய மெழுகுபோலுருகி ஆசைமேலிட்டு ஐயோ! சூர்ப்பணகா நீசொல்லிய பெண்ணை நினைத்தால் என்னுடலுருகுது நல்லதாகட்டும் உன்னை யிப்படிபங்கப்படுத்திய மனிதர்களை யிக்கணமே இவ்விடங் கொண்டுவருகிறேன் நீ இவ்விடத்திற்றானே யிருவென்று சொல்லி இலங்கையைவிட்டுப் புறப்பட்டு கோகரணம்வந்தான். அவ்விடத்தில் தாடகை சம்மாரகாலத்திலே ஸ்ரீராமருடைய பாணங்களுக்குத் தம்பி தபசு செய்கிறமாரீசன் பக்கலிற்போய் நின்

ருன். அந்தமாரீசன் கண்டு திடுக்கென்றெழுந்து சாஷ்டாங்க தெண்டனிட்டு, இவ்வளவு தூரம் தயைசெய்ததை சொல்ல வேண்டுமென்று கேட்க இராவணன் சொல்லுகிருன் தசரத குமாரர்கள் இரண்டுபேரும் சீதாதேவியுங் காட்டி லிருக்கின் ருர்களாம் நமது சூர்ப்பனகையைக் கொண்டை மூக்கு முத லியவைகளை யறுத்து கரதூஷணன் முதலிய பேர்களைக்கொ ன்று இறுமாப்படைந்து மிருக்கிருர்களாம் அந்தச்சீதை பே ரழகுடையளா யிருக்கின்ருளாம் அவளை நான் கைப்பற்றும் படியாய் அந்த·ராமலட்சுமணுளிருவரும் சீதையை விட்டுப் பிரிந்து போகும்படியாகிய தந்திரங்களை நீ செய்யவேண்டும் இது உன்னைவிட மற்றொருவரால் நடக்கமாட்டாது என் எண்ணமும் நிறைவேற மாட்டாது எனக்கு இந்த உபகாரம் நீசெய்ய வேண்டுமென்று சொல்லவே மாரீசன் நடுநடுங்கிச் சொல்லுகிருன். அவர்களுடைய திருஷ்டிக்கு நீ 'நிகரல்ல உன்பலத்தையும் உன்வரத்தையும் பெரிதாக வெண்ணியிருக் கிருய் அவர்கள் பலத்துக்கு ஒருதிரணங்கூட சரிப்படமாட் டாய் இஃதல்லாமல் உன்னைச் செயித்த பலசாலிகளாகிய வீர ர்களை யெல்லாம் ஒவ்வொருகணையினுற் கொல்லத்தக்கவர்கள் வீராதிவீரர்கள் அவர்களை வஞ்சனை செய்வதென்பது நட வாது. ஒருவேளை வஞ்சனையினுற் பிரியச்செய்தாலும் உலக மாதாவாகிய வைதேகியை நீதொட்டு யெடுக்கமாட்டாய் எடு த்துப்போனுலும் உனக்குகந்த பொருளல்ல நாய்க்கு முழுத் தேங்காய் ஆகப்பட்டால் என்னசெய்யும் அக்கிரமம் யாரை யும் விடாது என்னும் பழமொழியை நீ யுன்னிப்பார் என் வார்த்தையைத்தள்ளி உன் எண்ணப்படி செய்யத் துணிவை யாகில் உன்புத்திராதிகளுடன் கோட்டையும் தனம் கனம் தம்பிமார்களுடன் நீயும் எல்லாரும் மடிந்துபோய் விடுவீர் கள் இதுமுடியாதகாரியம் நீமறந்து விடுமென்று மாரீசன் சொல்ல இராவணனுக்கு கோபம்பிறந்து கைலையங்கிரியைப் பேர்த்த தோளும், திக்கஜங்களைவென்றமார்பும் உடைய என் னை அந்த அற்பமனிதர்களுக்கு ஈடல்லவென்று சொல்லப் போமா ! ஐம்பதுலட்சம் வருஷம் கடந்தல்லவா ! சகலதேவ தைகளையும் நான் செயித்தேனே யல்லாமல் என்னைஒருவரும் வென்றவர்களில்லை அப்படியிருக்க சொற்ப மனிதர்களுக்கு இளைத்தவனுக வாய்புளித்ததோ மாங்காய் புளித்ததோவெ ன்று சொல்லிவிட்டாய், இப்போது என்படைகளுடன் வந்

தாயுத்தஞ்செய்து அந்த இரண்டுமனிதர்களேயுங் கொன்று அந்தச்சீதையை நான்கைப்பற்றிக் கொள்ளத் திறமிருந்தும் நாள்செல்லுமென்று யோசித்தும் நீயானல் விரைவாய்முடித்துக்கொடுப்பையென்று உன்னிடத்திற்சொன்னல் எனக்குப்புத்தி சொல்லுகிருயல்லவா நல்லது இப்போதும் நான் சொல்லிய வண்ணங்கேட்டு உனக்குத் தெரிந்தமாயைகளெல்லாஞ்செய்து அந்தப்பெண்ணே எனக்குக் கிடைக்கச்செய்யாவிட்டால் உன்னை யென்கைவாளுக்கு இரையாக்குவேன் இந்த மண்ணுலகத்தைவிட்டுப் போக்குவேனென்று சீறவும் அதைக்கேட்டமாரீசன் சொல்லுகிருன்.

ஓ! இராவணுகேளும், உம்முடைய கையினு லிறந்தால் கொடிய நரகங்கிடைக்கும், தசரதி கைக்கணையா லிறந்தால் சுவர்க்கங்கிடைக்கும், ஆதலால் உன்கையால் இறப்பதைவிட எனக்கு அதுவேமேல், இதோ நான்போய் இறந்து இடம்பண்ணிவைக்கிறேன் சீக்கிரத்திற் குடும்பத்துடன் நீயும்வந்து சேரக்கடவை என்றுசொல்லி பொற்பிரகாசமாகிய மானுருக்கொண்டான். அதை இராவணன் கண்டுமகிழ்ந்தான் அப்போதே அந்தமானனது ஸ்ரீராமருடைய பர்ணசாலையினிடமேபோய் சீதாதேவியார் கண்ணுக்கெதிரில் எத்தேசங்களிலுங்கிடையாத சிங்கார நிறத்துடன் திரிந்து விளையாட, அதைச் சீதையம்மன் கண்டு அற்புதமடைந்து ஒருநாளும் நான் பார்த்தறியாத இந்த மானேப்பிடித்துக் கொடுமென்று மேல்விளையப்போகிற காரணங்கள் தெரியாமல் ஸ்ரீராமரைக் கேட்க, இரகுபதியானவர் தம்பியைப் பர்ணசாலைக்கு காவலாக்கி வில்லும் அம்புங் கைக்கொண்டுவிரைவுடன் மானைத் தொடர்ந்துபோகையில், தம்பியாகிய இளைய பெருமாள் சில நீதிகளையும், இராக்கதர் மாயைகளேயுஞ்சொல்லித்தடுக்கவும், அதைக்கேளாமல் மானனது சமீபத்திலடுக்க அந்த சந்தோஷத்தின்பேரில் நெடுந்தூரம் போயும் கையில் அகப்படுந்தன்மைபோல் இளைத்தும் படுத்தும் ஸ்ரீராமர் எட்டிப்பிடிக்க ஓடியும், இப்படி ஒருயோசனைதூரங் கொண்டுபோகையில் ஸ்ரீராமருக்குக் கைகால்களெல்லாம் வருந்தி மேலும் வெய்யலால் ஆயாசமடைந்தபோது இது உண்மையான மானல்ல தம்பிசொல்லியபடி மாயமானென்று எண்ணி வில்விற்றொடுத்திருந்த பாணத்தை விட்டார் அந்த பாணம்பட்டு மாரீசனனவன் ஓலட்சுமணுவென்றுகூவி இராட்சத ரூபத்துடன்பூமியில் விழுந்து இறந்தான்.

அதை ஸ்ரீராமர் கண்டு விசுவாமித்திரர் யாகத்தில் அடிப்பட்டு ஓடிப்போனமாரீசன் இவன் ஏதோ ஒருவஞ்சனை செய்யக்கருதிவந்தான் இவன் கூவிய ஓசையால் பர்ணசாலையில் ஒருவித்தை யுண்டாயிருக்குமென்றுகருதி அதிகவிரைவுடன் ஐயன் நடந்து வருமுன்னேமே சீதாபிராட்டியார் காதில் இலட்சுமணாவென்று கூவிய ஓசையைக்கேட்டு மைத்துனனை நோக்கி அரக்கராலே ஏதோ அபாயம் வந்து உம்மைக் கூப்பிட்ட ஓசைக்கேட்டும் போகாமலும் பாராமலுமிருக்கலாமாவென்றுசொல்ல, அதற்கு இலட்சுமணர் சொல்லுகிறார் அம்மா தாயேகேளும், அரக்கராலும் அரசராலும் ஆகாயவாசிகளாலும் மற்றெவர்களாலும் எங்கள் அண்ணனுக்கு அபாயம் ஒருக்காலும் வராது இது மாறுபாடாகிய வஞ்சக மாயையே யன்றி வேறல்ல எங்களண்ணனுடைய கூக்குரலல்ல, இந்த பதினாலு உலகமழிந்தாலும் எங்களண்ணன் கலங்கத்தக்கவரல்லர், நீ மயங்கவேண்டாம் இதோ வரப்போகிறார் என்று அனேகவிதத்திற் றேறுதலை சொல்லியும் அதற்கு மனது ஒப்பாமல் சொல்லுகிறாள். செத்தவனுடைமை இருந்தவனுக்கு அடைக்கலம் என்னும் பழமொழி போலும் மைத்துனனிறந்தால் நமக்கென்ன கம்பளமெனக்காச்சு, என்பதுபோலும், மனம்பொறுத்து இருக்கின்றீரல்லவா வென்றுசொல்ல, இளையபெருமாளானவர் இரண்டு காதுகளையும் மூடி ஸ்ரீராமா ராமாவென்று தோத்திரம்செய்துக்கொண்டு தாயே உந்தன் இஷ்டப்படி இதோ போய்வருகிறேன் நீபத்திரமாய்ப் பர்ணசாலையில் இருமென்று சொல்லி பற்பலவிதமா யோசித்து ஏக்கங்கொண்டு நடந்தனர்.

## இராவணன் சீதையை யெடுத்தேகுதல்.

இவ்விடத்தில் சீதாதேவியார் ஸ்ரீராமரைக்குறித்து ஏங்கி பர்ணசாலையில் தனிமையாகவிருக்குங் காலத்தில் இது நல்ல சமயமென்று இராவணன் விருத்தவேடம் பூண்டு பர்ணசாலையில் வரக்கண்டு ஜானகியம்மனவள் எதிர்கொண்டோடி மகரிஷியென்று அர்க்கிய பாத்தியமளித்து ஆசனங்கொடுத்து உபசரிக்கவும், மாறுவேடத் தரக்கன் ஆசனத் திருந்து நீயார் இவ்விடத்தில் தனிமையாக விருக்கவேண்டிய காரணமென்ன வென்று கேட்க ஜானகியம்மன் சொல்லுகிறாள்

ஐயா அயோத்தியா புரியாளும் தசரதமகாராஜன் புத்திரர் களாகிய ஸ்ரீராமலட்சுமணர் பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்ய பதினான்குவருடம் கானகம் வந்தார்கள் நான் கோதண்டபாணியின் தருமபத்தினி என்பெயர் சீதை நான் இவ்விடமிருக்கிறேன் அவர்கள் ஒரு மானைத்தொடர்ந்து போயிருக்கின்றார்கள் இதோ வருவார்களென்று சொல்ல, அதைக் கேட்டு ஐயோ உம்மைப்போலொத்த சவுந்தரியவதிக்கு இந்த தக்காட்டில் பஞ்சைக்குடிசையி லிருக்கவும் அற்பமனிதர்களுக்கு ஸ்திரீயாகி யெவ்வனகாலத்தை வீணாய்போக்கவும் உனக்கேன் இந்தத்தலைவிதி என்று இன்னுஞ் சிலகடுஞ்சொற்களைச் சொல்லக்கேட்டு இடிவிழுந்த அரவம்போலேங்கி இந்தப்பாவி அரக்கனென்றுமதித்து சிலவசனங்களைப்புகலஅப்போது மாயரூபத்தைவிட்டு தன் சுயரூபத்துடனிற்க, சீதையம்மன் கண்டு தியக்கங்கொள்ள, இராவணனனவன் நிலத்துடன் சீதையம்மனைத் தூக்கித் தனதுதேரில் வைத்து ஆகாய மார்க்கமாய்ப் போகும்போது சீதையம்மனவள்இரதத்தில் விழுந்துபுரண்டு ஓ வென்றலறினாள்.

## சடாயுயுத்தம்.

---

அந்த சத்தத்தைக்கேட்டு சடாயுவானவர் வந்து வளைத்து அனேகம்புத்திகளைச் சொல்லியும் அரக்கன் கேளாமல் தேரை நடத்த ஸ்ரீராமஜெயமென்று இறக்கையால் மோதி தேரைப்பொடியாக்கிப் போர்புரியும்போது இராவணனுக்கு கோபம்வந்து வாளினால் இறகினைவெட்டி பூமியிற்றள்ளி புஜத்தின்மேல் ஜானகியைத் தூக்கி ஆகாயமார்க்கமாய்ப் போகையில் அம்மன் அழுது சடாயுவைக்கூவி சாமிவருமளவும் உயிருடனிருந்து என்செய்தியை யுரைக்கவென்று சொல்லித் துன்பமுற்றுப் போகையில் ஒருமலையினுச்சியினிற் சிலபேர் கூடியிருக்கக் கண்டு தன்னுபரணங்களைக்கழற்றி அழகியகச் சிற்சுருட்டி அவ்விடத்திற்போட்டு என்னாண்டவன் வந்தால் கொடுங்களென்று அயர்ந்து சோர்ந்திருக்க இராவணன் இலங்காபுரிசேர்ந்து அசோகவனத்தில் அம்மனைவைத்து அறக்கியர்களைக் காவல்வைத்து என்வசப்படுத்துங்களென்று சொல்லி இராவணன் தன்னரண்மனைக்குட் புகுந்து சந்தோஷமுற்றிருந்தான்.

## ஸ்ரீராமலட்சுமணர் சீதைபிரிவினலிறங்கல்.

இப்பால் தமையனைத்தேடிக்கொண்டுபோன தம்பி தன க்கெதிரில் வரும் ஸ்ரீராமருடைய பாதங்களில் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்ய தம்பி சீதையை ஒண்டியாய்விட்டு வந்தகாரணமென்ன வென்றுகேட்க அண்ணனுக்கு நடந்த சேதிகளும், தாயார்கூறிய கடுமொழியும் அதனால் தான்வந் துவிட்டதையுஞ்சொல்ல ஸ்ரீராமர்கேட்டு அந்தோ சீதையை யிழந்தோமென்று இரண்டு வீரர்களும் விரைவாக ஓடிவந்து சீதையைப்பார்க்க அங்குகாணமையால் பெருமூச்சு விட்டு வியாகூலமுற்று தம்பி சீதையைப்பிரிந்தோம் என்று ஏங்கி பூமியிற்சாய்ந்து விசாரத்துடன் ஸ்ரீராமர் மூர்ச்சையாக இல ட்சுமணர் தமயனைத்தேற்றி தேவரீரேயிப்படி விசனப்பட லாமா அடியேனுக்கு விடைகொடுத்தால் எப்பேர்ப்பட்டவ னாக விருந்தபோதிலும் அவனையுமுடித்து எங்கள் தாயாரை யும் தேவரீரிடங் கொண்டுவந்து சேர்ப்பேனென்று தம்பி சொல்ல, அந்த வாக்கியத்தைக் கேட்டு ஸ்ரீராமரானவர் பிர ளயகாலருத்திரனைப்போற் கண்கள்சிவந்து சினங்கொண்டு தேவர்களும் பார்த்திருந்தார்களல்லவா இந்த மூன்றுலோக த்தையும் மாண்டுவிழச் செய்கிறேன் தம்பியென்று கோதண் டத்தை வளைத்து நாணேற்றினர். அப்போது லட்சுமணர் சமீபித்து அண்ணா ஒருவன் செய்த பெரும்பழிக்கு உலகத் தைப்பாழாக்க நினைப்பது தருமமல்லவே, என்தாயை எடுத் துப்போன பாவியைக்கண்டு அவனுவியைக்கொண்டுதேவரீர் தேவியைப் பண்டுபோலிருக்கச் செய்வது எனதுவீரம் என்று தம்பிசொல்ல, அதை இரவிகுல புங்கவன்கேட்டு மனந்தேறி ஊழின்படி நடக்குமல்லாமல் வேறில்லையென்று சீதையைத் தேடி யிருவரும் போகையில் அவ்விடத்தில் ஓரிரதம்வந்து திரும்பிப்போயிருக்கும் வழியைப்பற்றிச் சிலதூரம் போகை யில் இறகு துணித்துகிடக்கப்பட்ட சடாயுவைக்கண்டு வினவ இன்னானெடுத்துப்போனா னென்று பெயரைச் சொல்லினவு டனே சடாயுவுக்குப் பிராணன் போய்விட்டது. உடனே சிறியதந்தை யென்று புலம்பித்தகனஞ்செய்து கருமக்கிரிகை கள் யாவற்றையுமுடித்து தென்திசையைநோக்கிச் சீதையை த்தேடி யிருவரும் வந்தார்கள்.

## கவந்தன் வதை.

அப்படி வரும்வழியில் கவந்தனென்னும் இராட்சதன் ஒருயோசனை தூரங் கைகளை நீட்டி அதற்குள்ளகப்பட்ட

ஜந்துக்கள் எல்லாவற்றையுந் தனக்குணவாக வாயிற்றள்ளிக் கொண்டு அனேகநாளாய் பிழைத்திருக்கிறவன் அவன் கையில் அப்போது இராமலக்ஷ்மணுளை அவன் தன்வயிற்றிற் றள்ளிக்கொள்ளக் கொண்டுவருவதை இவர்களிருவருங் கண்டு வாளையுருவிக்கொண்டு கவந்தனுடைய புயத்தை வெட்டித் தள்ளினவுடனே அவன் தேவவிமானத்திலேறி இவர்களை வந்தித்து பூர்வத்தில் நான் வித்தியாதரன் பிரமதேவர் சாபத்தினுல் இந்த தேகம்பெற்று வெகுநாளாய் துன்பமுற்றேன் தேவரீர் கிருபா நோக்கத்தினுற் சாபந்தொலைந்து பரிசுத்தனுனேன் நீள்கள்சுகமாக வாழக்கடவீர்களென்று வாழ்த்திவணங்கி, சீதாதேவியாரைத் திருடிக்கொண்டுபோனவன் இலங்கையிலிருக்கும் இராவணன் அவன் அனேகவரங்களையும் அனேகங்கோடி ஆயுளும்பெற்றவன் ஆகையால் இன்னுஞ்சிலதூரம் தெற்குநோக்கிச் செல்வீர்களாகில் பம்பாநதியொன்றிருக்கிறது அவ்விடத்தில் கிஷ்கிந்தமென்ருெரு நகரமிருக்கின்றது அந்த நகரத்தில் வாலிசுக்கிரீபரென்று இரண்டு சகோதரர்களிருக்கிருர்கள் அவர்களிலொருவருக்கொருவர் கொடியபகை நேரிட்டு சுக்கிரீபனென்பவன் குமுதமென்னப்பட்ட மலையிலிருக்கிருன் அவனுக்கு மந்திரிமார்கள் வாயுதேவனுக்கும் அஞ்சனு தேவிக்கும் பிறந்த அனுமார் முதல் நால்வரிருக்கிருர்கள். அவ்விடம் நீங்கள் போனுல் அவர்கள் உங்களுக்கு மிகுந்த நண்பராயேற்பட்டு எழுபத்திரண்டு வெள்ளம் வானரங்களுடனே சுக்ரீபனும் படைத்துணையாகவந்து கடலைக் கடந்து இலங்கையை வளைத்து இராவணனைக்கொன்று வெற்றியைப்பெறுவதற்கு உதவியாவார்கள், தேவரீர் என்தாயாகிய சீதையைக்கொண்டு வரலாம் சுவாமீயென்று வணங்கி வித்தியாதர லோகம்போய்ச் சேர்ந்தான். அதைக்கேட்டு இராமலட்சுமண ரிருவரும் சவரி ஆசிர்மத்திற்குப்போய் அன்றையதினம் அவளுடைய உபசாரத்தைக்கொண்டு அமுதுண்டு சவரிக்குமுத்திகொடுத்து அதன்பின்பு தெற்குநோக்கி நடந்தார்கள்.

ஆரணியகாண்டம்-முற்றிற்று.

---



ராம லக்ஷ்மணனை ஆஞ்சநேயர் கண்டது. வாலி சம்மாரம். சுக்ரீவருக்கு பட்டம்

வானரால் லங்கைக்குப்போதல. அனுமார் லங்கையைத் தாண்டுதல. சம்பாதி சம்பாஷணை.

நான்காவது,

# கிஷ்கிந்தாகாண்டம்.

காப்பு.

மூன்றுருவெனக்குணமும்மையாமுதற்
றோன்றுருவெவையுமிம்முதலைச்சொல்லுதற்
கேன்றுருவமைந்தவுமிடையினின்றவர்
சான்றுருவுணர்வினுக்குணர்வதாயினூர்.

பின்பு ஸ்ரீராமர் இலட்சுமணரிருவரும் பம்பா நதிக்கரையில் வந்திறங்கி சீதாதேவியை நினைத்து விசாரப்படுங் காலையில் சுக்ரீவன் அவர்களைக்கண்டு திகில்கொண்டு அனுமாரை அனுப்பிவைக்க அவர் சூட்சுமரூபமாய்வந்து விருட்சத்தினிழலி லிருக்கும் இவர்களுடைய திருவுருவத்தைப் பார்க்கும்போது ஸ்ரீராமர் அனுமாரைக் கண்டு குண்டல தாரியா யிருக்கும் நீயாரென்று வினவ வாயுவுக்கும் அஞ்சனதேவிக்கும் பிறந்த அனுமானென்று அடியிணைவணங்கி நிற்கக்கண்டு ஸ்ரீராமர் தங்களுடைய வரலாற்றைத்தெரிவித்தவுடனே அனுமார் தன்விஸ்வரூபத்தைக் காண்பித்து சுக்ரீபனை யழைத்து வந்து சரணமடையச்செய்து இருவருக்கும் உறவுண்டாக்கி யாவரும் வணங்க ஸ்ரீராமரை அழைத்துக்கொண்டு தாங்களிருக்கும் மலையிற்போய் அலங்காரச்சாலையில் எழுந்தருளச்செய்து சுக்ரீவனனவன் தன்னுடைய தமையனுக்கும் தனக்கும் பெண்சாதியினால் நேரிட்ட பகையைச்சொன்னான். ஸ்ரீராமர் கேட்டு விசனமுற்று அந்த வாலியைக்கொன்று உனக்கு கிஷ்கிந்தையைப் பட்டங்கட்டி வைக்கிறேனென்று அபயஸ்தங் கொடுக்க சுக்ரீவன் அதைப்பெற்று சுவாமி! அடியேனுக்கு ஒரு சந்தேகம் வாலியைக்கொல்வது உண்மையாகில் அந்த வாலியானவன் வருஷத்திற்கொருதரம் ஏழுமரத்தை இழுத்துப் பார்த்துவிட்டு விடுகிறதும் துந்துபி யென்னும் இராட்சதன் எலும்பை நித்தியம் அசைத்து விடுகிறதுமா யிருக்கிறான். ஆகையால் அவன் வலிமைக்குமேல் தேவரீருடைய வலிமையைக்காட்டினால் என்மனந் திடங்கொள்ளுமென்று சுக்ரீவன் சொல்ல அப்படியே நல்லதென்று ஸ்ரீராமரானவர் அந்த மராமரத்தி னடிவாரத்திற்போய் நின்று மிதிக்கவே ஏழுகோணலாயிருந்த மரம் ஒரே ஒழுங்கில் வரக்கண்டு ஒரு பாணத்தால் ஏழுமரமும் உருவச்செய்து துந்துபியின் எலும்பைத் தன்கால்விரலால் உந்திவிட அதைக்கண்டு சுக்ரீபனும்

மற்றயாவர்களும் புகழ்ந்து வணங்கி இவராலே வாலியைக் கொல்லப்படுமென்று நிச்சயங்கொண்டு, சீதாதேவி கழற்றி யெறிந்துபோன ஆபரணமூட்டையை ஸ்ரீராமருக்கு எதிரில் கொண்டுவந்து வைத்தான்.

### ஸ்ரீராமர் சீதையினுடைய ஆபரணத்தைக் காணுதல்.

அதை ஸ்ரீராமர் பிரித்து நகைகளைப்பார்த்து இது சீதையினுடைய ஆபரணமென்றறிந்து விசனப்படும்போது சுக்ரீவன் எழுந்து திருவடிகளில் விழுந்து விசனப்படவேண்டாம் என்னிடத்தில் எழுபத்திரண்டுவெள்ளம் வானரப்படைகளிருக்கின்றன ஒருநொடிப் பொழுதினில் இலங்கையைக் கலங்கச்செய்து இராவணனைச் சாகஅடித்துத் தாயாரையுங் கொண்டுவந்து தேவரீர் திருவடிகளில் ஒப்பி வைக்கிறேனென்று சுக்ரீவன் சொன்னான் அதை ஸ்ரீராமபிரான்கேட்டு மகிட்சியடைந்து இப்போது நடக்கவேண்டியகாரியமென்னவென்றுகேட்க வாலியை சங்கரிப்பதே யென்று சுக்கிரீவன் சொல்ல, நல்லதென்று சுக்ரீவனை யழைத்துக்கொண்டு வாலியினிடத்திற்சென்று போர்புரியும்படி அழைத்துக்கொண்டு வரக் கடவையென்று அனுப்பி, தானும் தம்பி இலக்குமணரும்குற்றுச்செடிமறைவில் கோதண்டபாணியாக நின்றார்கள்.

### ஸ்ரீராமர் பாணத்தால் வாலிவல்லபங் கேடுதல்.

அக்காலத்தில் சுக்ரீவன் வாலியின் அரண்மனைக்குப் போய் யுத்தத்திற்கு வாவென்று கூவுவதைவாலிகேட்டு புஜத்தைத்தட்டிக்கொண்டு யுத்தத்திற்குப் பயணப்பட்டுத் தம்பியின்பேரில் முனைந்துகொண்டு எழுந்து பதுங்கி தாவிமேவி கூவி இடம் வலம் வலம் இடமாகச்சுழன்று கோடையிடி போற்குத்தி கரத்தினாற்பற்றி சுக்ரீபனையடித்து உயிரை மூழ்த்திவிடவேண்டுமென்று நாடினான். அவனுடைய மனதைக் கண்டு சுக்ரீவன் ஓடி ஸ்ரீராமருடைய திருவடிகளில் முடி சூடினான் அப்போது ஸ்ரீராமர் சொல்லுகிறார், நீங்களிருவரும் ஒரேரூபமாக யிருப்பதால் நீயென்றும் அவனென்றும் வித்தியாசந் தெரியாமையால் மயங்கியிருந்து விட்டேன் இனி யிப்படியிரேன், இதோ இந்த மலர்மாலையை வேற்றுமை

தோன்ற நீ கழுத்தில் போட்டுக்கொண்டு இன்றையதினம் வாலியையழைத்து சண்டை செய்வாயாகில் எப்படியும் அவனைமாட்டி விடுகிறேன் சந்தேகமில்லை யென்று பூமாலையை மிடற்றிற்போட்டு அனுப்பினர். அதைப் பெற்று சுக்ரீவன் ஓடி அடாவாலி சண்டைக்குவாடா வென்று கூவி அழைக்க அவனுக்குக் கோபம் பிறந்து யுத்தத்திற்கு வருஞ் சமயத்தில் தாரை யென்பவள் ஓடிவந்து புருஷனைத் தடுத்து நேற்றையதினம் உன்னால் அடிப்பட்ட பச்சை உதிரம் காயாதிருக்கு முன்னமே வந்து சண்டைக்கு அழைக்கிறதை யோசிக்க வேண்டிய தென்றும், ஸ்ரீராமர் இராவணசம்மாரஞ் செய்யும் பொருட்டு சுக்ரீவனுக்கு அனுகூலமாக வந்திருப்பதையும், இன்னும் சிற்சில நியாயமொழிகளைச் சொல்ல, அதைக்கேட்டு வாலியானவன் சிலவசனங்களைப் புகன்று என்மயிரில் தொங்கிக்கொண்டிருந்த இராவணனை என்னைக்கொண்டு ஜெயித்துக்கொள்ளாமல் என்னாலடிப்பட்டு ஒதுங்கிக் கிடக்கும் அற்பனாகிய சுக்ரீவனைக்கொண்டு இவன்பகையை முடித்துக் கொள்ளப்பட்டவனா என்னைஜெயிப்பவன். மேலும் அந்த விராமனுக்கும் எனக்கும் எவ்விதபகையுமில்லை. அப்படியிருக்க அவர்களையும் இந்தச் சுக்ரீவனையும் முடித்துத் திரும்புவேன் நீ போவென்று அனுப்பிவிட்டு, சுக்ரீவனிடம் சமர் செய்யும்போது தாசரதியானவர் தனது கோதண்டத்தில் தரித்திருந்த பாணத்தை ஆகர்ணபரியந்த மிழுத்துவிட்டு வாலியின் கண்ணிற்படாமல் மறைந்து இருக்குங்காலையில் அந்தப் பாணமானது வாலியின் மார்பில் நுழையும்போது காலினாலும் தன் வாலினாலும் பிடித்து இழுத்துப் பார்த்தான். அதில் ஸ்ரீராமன் என்று எழுதியிருந்த முத்திரையைநோக்கி மூர்ச்சையாய் விழுந்துபோகவும் ஸ்ரீராமலட்சுமணர் வெளியில் வந்து வாலியினிடத்தில் நிற்க, அப்போது சுக்ரீவன், அங்கதன், அனுமார். தாரை முதலியபேர்கள் வாலியின்பேரில் விழுந்து ஓவென்று அழும்போது வாலி மூர்ச்சை தெளிந்து எழுந்து ஸ்ரீராமருடைய திருமுகத்தை ஏறநோக்கிச்சொல்லுகிறான்.

### வாலி ஸ்ரீராமரை நிந்தித்தல்.

---

இஃதென்ன ஆச்சரியம் சூரியவமிசத்திற் பிறந்த இராஜனாகிய உனக்கு சீதை போய்விடவே உன்னுடைய பொறுமை

யும் சாந்தமும் புகழும் சீவகாருண்யமும் பேரறிவும் தருமமும் நற்குணமும் கூடப்போய் விட்டாலும், மேன்மக்கள் மேன்மக்களே, என்னும் ஆன்றோர் வாக்கியமும் உன்னாலழிந்ததோ, மனுவிக்கியானமுதலிய நீதி சாஸ்திரத்தை மறந்தையோ, பாவம் பழிக்கஞ்சாதென்று துறந்தையோ, உன்னளவில் நான் ஒருகுற்றமும் செய்யாதிருக்க என்ன குற்றத்தைக்கண்டு இப்படிசெய்தாய், ஒரு இராக்கதன் உன்மனைவியை எடுத்துப்போயிருக்க மலையில் வாசமாயிருக்குங் குரங்கரசனைக்கொல்லும்படி வேதத்திற் கூறியிருக்கின்றதோ! உன் அப்பன் பாட்டன் போதித்ததா, சூரிய வமிசத்தில் நீபிள்ளையாகப்பிறந்து மிகுந்த பாவத்தையும் நிறைத்து வைத்தாயே, அப்பா ராமா! எனக்குப் பயந்துள்ளிருந்த பஞ்சையாகிய சுக்ரீவன்வார்த்தையைக்கேட்டு பாரியயோசனை செய்யாமலிக்காரியஞ்செய்தாய், உனது பத்தினியை யெடுத்துப்போன இராவணனை வெல்லவேண்டுமென்று ஒருவார்த்தை சொன்னல் என்னுடைய வால்மயிர் அவனையும் அவனிலங்கையையும் கொண்டுவந்து வைக்குமே, சீதாபிராட்டியாரை என் தோள் கொண்டுவந்துன் திருவடியிற் சேர்க்குமே, அப்படியிருக்க என்னை வஞ்சித்து மறைவிலிருந்து கணைவிடும்படி உனக்கு எந்த ஆசான் சொல்லிக்கொடுத்தான், என்ன விதியைக்கொண்டு எய்தாய், வீரனே காலத்திற்குத் தகுந்த புத்தி நேரிட்டதோ வென்று வெறுத்துக்கொள்ளும் வாலியைநோக்கி இளையபெருமாள் சொல்லுகின்றார். தம்பி பெண்டு தான் பெற்ற பெண்ணென்று நினையாமல் அபகரித்த உன்னைக்கொல்லாமல் விட்டால் தரும விருத்தமென்றும் எதிரில் நின்று அடித்தால் நீசரணம்புகுவை என்றும் சுக்ரீவனுக்குக் கொடுத்தபட்டம் தப்பிப்போமென்றும் மறைந் திருக்கலானோமென்று சொல்ல, அதைக்கேட்டு வாலிசொல்லுகிறான். கானகத்திலிருக்கு மிருகம், அதிலும் குரங்குஜாதி இவைகளுக்கு முறையுண்டோ நீங்கள் செய்ததருமத்தின் துறைகண்டோம் எதிரில் உங்களை நோக்கி சரணம் புகுந்தால் அனுக்கிரகஞ் செய்யக்கூடாதென்பது சூரியகுல நிறையோ! ஆனாலும் பரதமகாராஜன் தண்டிக்கவேண்டுமேயொழிய நீங்களார் சந்நியாசி உங்களுக்குப் பாணமேது வில்லேது அரசின் முறையைச்சார்ந்த சொல்லேது என்றுகேட்கும்போது ஸ்ரீராமர் தம்பியைக் கையமர்த்தி வாலியைப்பார்த்துச்சில்வசனங்கூறுகிறார். உனக்கும் எனக்கும் ஏதொரு பகையுமில்லை நான்கேட்பார்பேச்சைக்கேட்டு மனைவியைப் பிரிந்திருந்த விசனத்தால் மற்றொருவனுக்கும் இப்படிதானே துன்பமிருக்குமென்று

பாணப் பிரயோகஞ் செய்துவிட்டேன் மிஞ்சிப்போன தென்ன! இப்பவும் நான் விட்டபாணத்தை வரவழைத்து உன்னையும் பிராணனுடன் பிழைக்கச்செய்கிறேன் உன்மனோபாவம் இப்போது தெரியவந்தது உன் தம்பியும் நீயும் சுகமாக வாழ்ந்திருங்களென்றுசொல்ல வாலி சொல்லுகிறான்.

## வாலி சுவர்க்க மடைதல்.

ஓ! சுவாமி எங்கள் குலத்தில் காயம் படக்கூடாது, காயம் பட்டால் உயிருடனிருந்து வாழக்கூடாது, திரிமூர்த்தியாகிய தேவரீர் அவதரித்து அசுரர் குலம் வேரறுக்க வந்திருக்குங்கடவுள் உம்முடைய பாணத்தால் தானிறக்க எத்தனை நாள் தவஞ்செய்தால் எனக்குக்கிடைக்கும் இஃதன்றி தேவரீரைச்சிறிது இகழ்வாகப்பேசிவிட்டேன் அவைகளை யெல்லாம் பொறுத்துத் தேவரீருடைய திருவடி எனக்குக் கட்டளையிடவேண்டியது என்தம்பி சுக்ரீவன் அறியாதவன், என்பேரில் காட்டியகையை அவன்பேரில் காட்டாமல் கிஷ்கிந்தைக்கு அரசனாகப்பட்டங்கட்டி அங்கதனை இளவரசனாக்கி இரட்சிக்கவேண்டும் ஐயனேயென்று வாழ்த்தி சுக்ரீவனையும் அங்கதனையுமழைத்து ஸ்ரீராமமூர்த்திகையி லொப்பிவைத்து தன்பக்கத்திலிருந்து அழும் தாரையை நோக்கி, பெண்ணே! நான் அநேக ஜன்மங்களிற் செய்த தபோபலத்தினால் வைகுந்த வாசகனாகிய ஸ்ரீகோதண்ட பாணியின் திருவடிகளில் ஐக்கியமாகிறேன் நீயாதொன்றுக்கும் விசாரப்படவேண்டாம். எனக்கு மோட்சங்கொடுத்த தெய்வம் உன்னையிரட்சிக்கும் என்றுசொல்லி, அங்கதனையழைத்து அவன்கையில் தாரையை ஒப்பித்து சோனமேகம்போற் பொழியுங் கண்ணீரைத்துடைத்து ஸ்ரீராமமூர்த்தியை நோக்கி தேவரீருடைய பாணத்தை வரவழைத்துக்கொண்டு ஸ்ரீவைகுந்தங்கட்டளையிடவேண்டுந் தேவாதிதேவனே யென்று சிந்தையில் தியானஞ்செய்தான். அப்படியே ஸ்ரீராமரானவர் கிருபாநோக்கஞ்செய்யவே தேவர்கள் பாரிசாத புஷ்பங்களை வாரியிறைக்க வாலிநற்கதியடைந்தான். உடனே வானரவீரர் சுக்ரீவன் அனுமார் அங்கதன் தாரைமுதலிய சகலரும் வாலிக்கு உத்தரக்கிரியைகள் யாவும் செய்து நிறைவேற்றி வந்து ஸ்ரீராமர் திருவடிகளிற் பணிந்தார்கள்.

## சுக்ரீவனுக்குப் பட்டங்கட்டுதல்.

ஸ்ரீராமர் தன் தம்பியை யழைத்துகிஷ்கிந்தைக்குப்போய் வாலிசொன்ன வண்ணம் சுக்ரீவனுக்குப் பட்டங்கட்டி அங்கதனுக்கு இளவரசுபட்டமும் அளித்து தாரையினிஷ்டத்தின் வண்ணம் நடக்கும்படி திட்டமுஞ்செய்துவரக்கடவை யென்று ஆஞ்ஞாபிக்க இளையபெருமாள் அப்படியே சென்று சகலசம்பிரமத்துடன் பட்டங்கட்டிவைத்துவந்தார் எல்லோரும்வந்து ஸ்ரீராமருடைய பாதங்களில் வணங்கினார்கள். சுக்ரீவனும் வணங்கி சுவாமி? வானரப்படைகளை அழைக்கத் தூதர்களை அனுப்பிவிட்டேன். வருவதுமழைக்காலம் ஆகையால் இதையொழித்து வெய்யிற்காலம் வருகிறவரைக்கும் தயை செய்யவேண்டுமென்று சரணம்புக அப்படியே ஆகட்டுமென்று சொல்லி நீயுங் கிஷ்கிந்தைக்குப் போயிருக்கக்கடவதென்றார் நல்லதென்று நமஸ்கரித்து நடக்கஸ்ரீராமலட்சுமணரும் பர்ணசாலை ஏற்படுத்திக்கொண்டு மலைச்சாரிலிருந்து சீதையைக் குறித்து விசன மடைந் திருந்தார்கள். சூரியபகவானும் மகரராசியில்வந்து பிரவேசித்தான். சில நாட்சென்றவுடனே ஸ்ரீராமர் தம்பியை நோக்கி மழைக்காலம்கழிந்த பின்னர் வருகிறேனென்றுபோன சுக்ரீவன் இதுகாறும் வராமையால் அழைத்துவா வென்றனுப்பவும் இவரைக்கண்டவுடனே சுக்ரீவன் முதலியயாவரும் ஸ்ரீராமரிடம் ஓடோடியும் வந்து வணங்கி நான்கு திசைகளிலு மிருந்து வரும் வானரப்படைகளைச் சேகரித்தார்கள்.

## சீதையம்மனைத்தேட அனுமார் முதலியவர்களை யனுப்புதல்.

இஃதிப்படியிருக்க ஆஞ்சனேயர் சொல்லுகிறார். சுவாமீ சேனைகள் கூடுமுன்னாக எனது தாயாரிருக்கும் இடத்தை முன்னந் தெரிந்து கொள்ளவேண்டுமென்றுசொல்ல ஸ்ரீராமரும் சுக்ரீவனும் யோசித்து கிழக்கு வடக்கு மேற்கு இம்மூன்று திசைகளிலுந்தேடி வானரங்களை அனுப்பிவைத்து, தெற்குதிசைக்கு அனுமார் அங்கதன்சாம்புவந்தர் முதலிய வானர வீரர்கள் அனேகம்பேரை அனுப்பிவைத்தார்கள். மற்ற மூன்றுதிசைகளுக்கும் போனவானரங்கள் சீதையம்மனைத் தேடிக்காணமல் ஒருமாதத்திற்குள் ஸ்ரீராமரிடம்வந்து நாங்கள் போனதிசைகளிற்காணோம் என்று தெரிவித்துவண

ங்கி நின்றார்கள். தெட்சணதிசையிற்போன அனுமார் முத லிய வீரர்கள் பற்பலவிடங்களிலுந் தேடிக்கொண்டு போகை யில் மிகுந்த இருளுடனே ஒரு பிலத்துவாரத்தைக்கண்டு அ திலே வழிதெரியாமல் கால்களில் தடவிக்கொண்டு போகை யில் அங்குபிரகாசம் பொருந்திய ஒருபட்டணம் காணப்பட் டது, அதிற்புகுந்து தேடிப்பார்க்கையில் விரித்த சடையும், சரிந்தயிடையும் பிரிந்த உடையுமாக யோகஞ்செய்பவர்களைப் போலே அரைக்கண் பார்வையாய் கண்களை மூடிக்கொண்டு தபசிலிருக்கிற ஸ்வம்பிரபை யென்கிற தெய்வப் பெண்ணை அனுமார் முதலிய பேர்களும் சீதாதேவியார் இவள்தானோ அல்லவோ வென்று அனுமானங்கொண்டு அவ்விடத்தில் நின்று ஸ்ரீராமமந்திரம் செபிக்க அதைக்கேட்ட வுடனே அந்த ஸ்வயம்பிரபைக்கு இந்திரன் இட்ட சாபம் நீங்கி அனுமாரால் பிலத்துவாரத்தைவிட்டு சகலரும் வெளியில் வந்து அனுமாரிடத்தில் விடைபெற்று தேவலோகம் போ ய்ச்சேர்ந்தாள், அதை அனுமார் முதலியயாவருங்கண்டு சந் தோஷித்து அவ்விடம் விட்டு வெளிப்பட்டு தெற்கு நோக்கி கிச்சென்று பட்டணங்கள் நாடுகள் நகர்கள் மலைகள் குகை கள் வனமுதலிய பலவிடங்களிலுந்தேடி தென்சமுத்திரக் கரைவந்து சேர்ந்து மாலியவந்தமென்னும் கிரிமுதலிய இடங்களிலுந் தேடிநாடிவந்த தாயார் அகப்படாமையால் நாமென்னசெய்வோம் ஸ்ரீராமரிடத்திற் சென்று அம்மனைக் காணோமென்று சொல்வதிலும் புண்ணியசாலியாகிய சடாயு வைப்போல் ஸ்ரீராமகாரியத்தில் நாமும் பிராணனைவிட்டுவிட் டால் நற்கதியடையலாமென்று அனுமார் முதலியவர்கள்பே சிக்கொண்டிருந்தார்கள்.

## சம்பாதி வரலாறு.

---

அதைச் சடாயுதமையனாகிய சம்பாதிகேட்டு நீங்களார் இவ்விடம் வந்து விசனப்படுவானேன் சடாயுவின் வார்த் தை இவ்விடத்தில் வரவேண்டிய காரண மென்னவென்று கேட்க, அனுமார் சொல்லுகிறார். அயோத்திமா நகரத்தை யாண்ட தசரதச் சக்கிரவர்த்தியினுடைய குமாரர் ஸ்ரீராமர் சீதாதேவி இலட்சுமணருடனும் பிதுர்வாக்கியத்தால் காட் டில் வந்திருக்கவும், ஓரிராக்கதன் வஞ்சித்து வைதேகியைக்

கொண்டுபோகவும், அதைக்கண்டு சடாயுவானவர் எதிர்த்து தாயை மீட்கும்படி அமர்செய்யவும், அரக்கன் வாளினல் சிதைபட்டிறக்கவும், ஸ்ரீராமரும் இளையவருங்கண்டு உற்றுரிமைகளை நடத்தவும், எங்கள் அரசனகியசுக்ரீவனும் ஸ்ரீராமரும் நன்புபூண்டு ஜனகன்மாது இருக்கும் இடம் தேடிவர எங்களை அனுப்பவும், எவ்விடங்களிலுந் தேடிக்காணுமையால் நாங்கள் விசனமுற்று இறக்கத்துணிந்துக் கொண்டோம் என்று சொன்னர்கள். அதைச் சம்பாதிகேட்டு சடாயுவைக்குறித்து துன்பப்பட்டு நாங்கள் ஒருதாய் பிள்ளைகள் என்தம்பியாகிய சடாயு இராமகாரியத்திலிறந்ததே தனக்கு மோட்சமென்று மனமகிழ்ந்து ஐயா வைதேகியாரை திருடிப்போனவன் இலங்கையி லிருக்கும் இராவணன் நேர்தெற்காகச் சமுத்திரத்தைத் தாண்டிப் போனல் அம்மனையும் அவனூரையுங்காணலாம், பலசாலிகள் கடலைத் தாண்டவேண்டுமென்று சொல்லி நீங்களெல்லோரும் ஸ்ரீராமமந்திரத்தைக் கூவிச்சொல்லுங்களென்று யோகத்திலிருந்தான், இவர்கள் இராமா இராமாவென்று கூவிய மந்திரம் இருகாதிலுங் கேட்கவே முன்னளில் தீய்ந்த இறகுவளர்ந்து அனுமாரிடத்தில்விடைபெற்று ஆகாயத்திற் பறந்து போனன். அப்போதொருவரை ஒருவர்பார்த்துயோசித்து சாம்புவந்தர் முதலிய பேரும் அனுமாரைத்துதித்து சுவாமியின் முத்திரைமோதிரத்தைக்கொண்ட மகானுபாவா நீயே யன்றி வேரல்ல, ஆகையால் இப்போது நீரேபோய் சந்தோஷசமாச்சாரங் கொண்டுவந்து எங்களை யிரட்சித்து கீர்த்திசம்பாதித்துக் கொள்ளுமென்று சொல்ல, அதை அனுமார் கேட்டு சந்தோஷங்கொண்டு மகேந்திர பர்வதத்தின்மேலேறி விஸ்வரூப மெடுத்து வாலைசுருட்டிக்கொண்டு அதன் சிகரத்திலே நின்றூர்.

கிஷ்கிந்தாகாண்டம் முற்றிற்று.

---

ஐந்தாவது,

# சுந்தர காண்டம்.

காப்பு.

அலங்கலிற்றோன் றும்பொய்மை யரவெனப்பூதமைந்தும்
விலங்கியவிகாரப்பாட்டின் வேறுபாடுற்றவீக்கல்
கலங்குவதெவரைக்கண்டா லவரென்பர்கைவில்லேந்தி
இலங்கையிற்பொருதாரன்றே மறைகளுக்கிறுதியாவார்.

## அனுமார் கடல்தாண்டுதல்.

இப்பால் கிரிசிகரத்தின்மீது நின்ற அனுமாரானவர் தம் முடைய கண்ணுக்கு நேராய்ச் சமீபத்தில் தெய்வலோகம் பிரகாசிக்கக்கண்டு இதுதானோ விலங்கையென்று நினைத்து ஐயப்பட்டு உடனே இது உயரத்திலிருக்கிறபடியால் இலங்கையல்ல, தெய்வலோகத்தில் சீதாபிராட்டியா ரில்லையென்று தெரிந்துகொண்டு பார்வையைத் தாழ்த்திப்பார்க்க கூடகோபுர மாடமாளிகைகளுடன் இலங்கைதோன்ற அதைப்பார்த்து ஸ்ரீராமஜெயமென்றுகந்தமாதனம் பந்துபோ லெழும்பி ஆகாய மார்க்கமாய்ப் போகும்போது மைநாக மென்னும் பருவதத்தைக்கண்டு அதனிடத் தன்புகூர்ந்து அப்புறம் பாய்ந்துபோக சரசை என்பவள் மறிக்க அவள் வாயிற்புகுந்து வெளிப்பட்டு கேசரிமார்க்கமாய் எழும்பி காயாக்கிராணியையும் சிதைத்து, ஆவலுடன் பாய்ந்து இலங்கைக்கு அருகிலிருக்கும் பவளமலையின்மேற் குதித்து இலங்கைக்கு காவலாயிருக்கும் இலங்கணியை வதைத்து ஜயங்கொண்டு இலங்கையிற் புகுந்து அந்நகரத்திலுள்ள மாடமாளிகை கூட கோபுரம் மண்டபமேடை சாலைசோலை ஆலயமுதல் இராவணனும் மண்டோதரியும் சேரும் அந்தப்புரம் சயனக்கிரகங்களியாவும் புகைபோகா விடத்திலும் நுழைந்து தேடி அசோகவனத்திற் புகுந்து அணில் போற்ருவி அம்மனிருக்கும் இடத்தில்மேவி அவ்விடத்தில் நடக்கும் விதத்தையும் இராவணனாகிய பாவியின் எண்ணத்தையும் அறியவேண்டி மறைந்திருந்தார்கள். அப்படியிருக்க சீதா தேவியாரை இராவணன் எடுத்துவந்து அசோகவனத்தில் வைத்து இரண்டாயிரம்பேர் இராட்சத ஸ்திரீகளையும், விபீஷணன் பெண்ணாகிய திரிசடையையும் காவல்வைத்து பயங்காட்டி தனக்கு இணங்கும்படிச் செய்யகூறிப்போன வண்ணம் அரக்கி

லங்கைதாண்டுதல்



இலங்கணிவதை



ஆஞ்சனேயர்மோதிரம்கொடுத்தல்.





ஆஞ்சனேயர் அசோகவனமழித்தல்.



ஆஞ்சனேயர் மதுவனமழித்தல்.



ராமலட்சுமணர் தெற்குப்போகுதல்

யர் கும்புகூடிக்கொண்டு இராவணன் இஷ்டப்படி செய்தால் ஈரேழுபதினன்கு லோகமும் உமக்குப் பணிவிடை செய்யும், அப்படி நடவாவிட்டால் எங்கள் கையிலிருக்கும் ஆயுதங்களி ஞல் கொல்லுவோம், கசகசவென்று மெல்லுவோம், வெட்டித்தரிப்போம் என்று பலவித பயங்காட்டி மனதைக் கலக்க பிரயத்தினம் செய்யுந் தன்மையை திரிசடைதேற்றவும், இராமநாம மமிர்தமே சீவனமாகவும், வேறு அன்னம் தண்ணீர் காய்கனி அருந்தாமலும், நித்திரையில்லாமலும், இருந்தவிடத்தை விட்டசையாமலும், எதற்கு அஞ்சாமலும், கண்களில் தாரை தாரையாய் நீர்பெருகவும், அரக்கியர் முகத்தையேரெடுத்துப் பாராமலும் வடக்குபக்கம் முகம்வைத்து காலம் கழித்துவரும் தாயாரை அனுமார்கண்டு இவரே லோகபிராட்டியென்று நிச்சயங்கொண்டு இருக்கையில், சூரியன் அஸ்தமயமாகி சந்திர னுதயமாகினன்.

## இராவணனை சீதையம்மன் நிந்தித்தல்.

அந்தவேளையில் இராவணனனவன் அனேகம் ஸ்திரீகள் புடைசூழ அரக்கர் நெருங்கிவர சகல ஆடம்பரத்துடன் அசோகவனத்தில் வந்து சீதாதேவியாரைப்பார்த்துச் சொல்லுகிருன் நான் பிரமனுடைய பேரனுக்குப்பிள்ளை, ஜாதியில் பிர்மகுலம். அனேங்கோடி வேதங்களைச் சிக்கறுத்தவன். கயிலேயங்கிரியைப் பேர்த்தெடுத்தவன். அரைகோடி ஆயுள் பெற்றவன். இந்திரன்முதலியயாவரும் பணியப்பெற்ற திண்ணியன். நூறுயிரம் பிள்ளைகளைப் பெற்றவன். தீவிரபராக்கிரமசாலிகளாகிய தம்பிமார்களையுடையவன் அளவிறந்த சேனைகளுக்கு இறையவன். சமுத்திர மத்தியில் நகராமுடையவன். தசக்ரீவனுகிய நான் உன்னை விரும்பி வேறு ஸ்திரீகளையும் நினையாமல் விடுத்தும், உன்னையடுத்து வேண்டிக்கொண்டும் உன்மனம் இரும்பிலும் கொடியதாக விருக்கிறதே யென்று பலவிதமான பெருமைகளை எல்லாம் சொல்லி என்னளவில் அன்புவைத்தால் எல்லாபாக்கியமும் உன்னுடையதே, கோடிபெண்களும் உனக்கு அடிமையே; என்பிராணனும் உனக்குத் தத்தமே, அந்தமானிடர் இந்த சமுத்திரத்தைத் தாண்டிவர மாட்டார்கள். வந்தாலும் தப்பிப்பிழைக்க மாட்டார்கள். மும்மூர்த்திகளும் என்னை ஜெயிக்கமாட்டார்கள். உன்னைமீட்கமாட்டார்கள். ஆகையால் என்னிடத்தில்

கிருபா நோக்கம் வைத்து என்பிராணனை அடிமை கொள்ளு மென்று சாஷ்டாங்கமாகத் தெண்டஞ்செய்து எழுந்து கைகட்டி வாய்புதைத்து வணங்கி நின்றிருக்கும் இராவணனை சீதையம்மனுனவள் பாதகன்முகத்தை நோக்காமலே இராம மந்திரத்தைசெபித்து தன் பிராணன்பேரில் ஆசை வையாமல் ஒருதுரும்பைப்போல மதித்துச் சொல்லுகிருள் அடா இராவணத்துரும்பே, கைலையைப்பெயர்த் தெடுத்தும் அரைகோடி ஆயுள்பெற்றும் இலட்சம் பிள்ளைகளைப்பெற்று தம்பிமார்கள் உற்றும் ஆயிரம் வேதம் வருமென்றும் வித்தி யாகர்வமும் கொண்டிருக்கிற நீ உன்னுடைய பத்துத்தலை களும், இருபதுகைகளும் புத்திரமித்திரர்கள் அத்திராதிக ளுடனும் நாளையே நாசமடையப் போகிருய், பதிவிரதைக ளுடைய வயிற்றெரிச்சல் உன்குலகோத்திரம் யாவற்றையும் எரிக்கும். தேவர்கள்முதலிய தண்டகாரண்ணிய வாசிகளுக்கு ஸ்ரீராமர் கொடுத்திருக்கும்அபயாஸ்தம் உன்னைவிடுமோ உன் பத்துதலைகளையும் இருபதுகைகளையும் பூமியில்உருளகாக்கை கழு நரி நாய் பேய் பிடிங்கித்தின்னக்காலம் சமீபித்ததுவோ அடா ராவணப்பதரே என்றுசொல்ல, இராவணன் கோபங் கொண்டு வாளையுருவிவெட்ட கிட்டிவரவும் சமீபத்திலிருந்த திரிசடைதடுக்கவும் சீதைபோனல் தன்னுயிர் போமென்று நினைத்து இராவணன் இராட்சத ஸ்திரீகளைநோக்கி இன் னும் பயம் காட்டி வசியப்படுத்தும்படி சைகைசெய்து தன் னரண்மனைக்குப்போய்விட்டான் அப்படியே அவ்வரக்கியர் கள்கூடி சிலமொழிகளைக்கூறி அநீதியோதி நீ இராவண னைத் தழுவி வாழ்ந்தால் சுகப்படுவை இல்லாவிட்டால் வாளு க்கிரையாக்குவோமென்று பயமுறுத்த அவர்களை திரிசடை யானவள் கையமர்த்தி அப்பால் போகும்படிச்செய்து சீதை யைப்பார்த்துச் சிலவசனஞ் சொல்லுகின்ருள்.

திரிசடை சீதையம்மனைத் தேற்றுதல்.

அம்மா என்தகப்பனுகிய விபீஷணரால் ஸ்ரீராமருடைய செய்திகளைச் சொல்லக்கேட்டேன். அவை யென்னவெனில் மாயமானை துரத்திப்போனதும் இலக்குமணுவென்று அது மடிந்ததும், அவ்வோசை நீகேட்டு இலட்சுமணரை நீயனுப் பிவிட்டதும், இராவணன் மாறுவேடங்கொண்டு உன்னை

எடுத்துக்கொண்டுவந்ததும், ஸ்ரீராமலட்சுமணர் பரணசாலை யில் தேடிவிசனப்பட்டு வரும்வழியில் சடாயுவைக்கண்டு தக னஞ்செய்து சுக்ரீவர் சினேகங்கொண்டு அவர்பகைவனுகிய வாலியைக்கொன்று சுக்ரீவருக்குப் பட்டங்கட்டி மழைக்கா லம் நீங்கி வானரப்படைகளைக்கூவி நான்கு திசையிலும் அனுப்பி தேவரீரைத் தேடுகிறதாய்க் கேள்விப்பட்டேன். எனக்கும் ஒரு சொற்பனமாயிற்று ஸ்ரீராமதூதன் இவ்விடத் தில்வந்து உமக்கு நல்ல சமாச்சாரம் சொல்லக்கேட்கப்போகி றீர். பள்ளம் உள்ள விடத்தில் தண்ணீர் நிற்கும் பதிவிரதை களின்மேல் அந்நியர் பாசம்வைத்தால் நாசப்படுவார்கள் நீர் கிலேசிக்கவேண்டாம் அம்மாவென்று சிலதேறுதலான சொற்கள்மொழிய அவைகளைச் சீதையம்மன்கேட்டு பிரா ணனையொழிக்க நினைத்த எண்ணத்தைவிட்டு சந்தோஷ மடைந்திருந்தாள்.

## அனுமார் சீதையம்மனிடம்வந்து திருவாழி கொடுத்தல்.

---

அனுமாரானவர் தேகபுளகாங்கிதங்கொண்டு அரக்கிய ரெல்லாம் அமர்ந்து நித்திரைபோகும்படி அபிமந்திரித்து தான்மெள்ள இறங்கிதாயாருக்கெதிரில் ஸ்ரீராமராமாவென்று துதித்து வந்து தீர்க்கதெண்டன் சமர்ப்பித்து வணங்கி யெ ழுந்து அடக்கம் ஒடுக்கத்துடன் நிற்க, அதை சீதையம்மன் பார்த்து நீயாரப்பா, அரக்கர்மாயமோ, இராவணன் செய் யும் அநியாயமோ, அல்லது ஸ்ரீராமருடைய அன்பனோ, அரிபரந்தாமனுடைய தூதனோ, எனக்குத் தெரியச்சொல் லென்றுகேட்க, தாயாருடைய திடச்சித்தத்தை யனுமார் கண்டுகளித்து தெண்டனிட்டு தாயே, நான் ஸ்ரீராமருடைய தூதன். என்பேர் அனுமார், நான்கு திக்குகளிலும் வான ரச்சேனைகள் உம்மைத்தேடிப்பிடிக்கப்போய் இருக்கிறார்கள். நான் தட்சணதிசைக்குவந்தவன் என்றுசொல்லியதைக் கே ட்டு, ஸ்ரீராமரும் இலட்சுமணரும் சுகமாகயிருக்கிறார்களா, என்னை மறந்துபோனார்களோவென்றுவினவ. உம்முடைய வார்த்தையைத்தள்ளாமல் மாயமான்பின் சென்று அதைக் கொன்று திரும்புகையில் தம்பியைக்கண்டு பர்ணசாலையில் உம்மைக்காணமல் வருத்தமுற்று தேடி வருகையில் சடாயு

யைக்கண்டு சங்கதி தெரிந்து அவருக் குரியகடனை முடித்துக் கதியடையச்செய்து கவந்தனைமாட்டி பம்பாநதியோரத்தில் வந்திருந்து எங்களரசன் சுக்ரீவன்வந்து சரணம்புக அபயஸ்தங்கொடுத்து தேவரீர் எங்கள்வசம்போட்டு வந்த நகைகளைக்கண்டு விசனங்கொண்டு மறுநாள் வாலியைமாட்டி சுக்ரீவன்பயம் ஓட்டி அவருக்குக் கிஷ்கிந்தையைப் பட்ட நாட்டி அங்கதனை இளவரசாக்கிக்கூட்டி எழுபத்திரண்டு வெள்ளம் வானரப்படைகளைக் கூட்டச்செய்து மழைகாலங்கழித்து உம்மைத்தேட அனேக வானரப்படைகளை அனுப்பிவைத்து தெற்குத்திசைக்கு வெகு வானரச்சேனையுடன் நானும்வந்தது அவ்விடத்தில் அவர்களை நிறுத்திவிட்டு நான் மாத்திரம் இவ்விடம் புகுந்து இலங்கை முழுமையுந் தேடி இந்த அசோகவனத்தில் தாயாகிய உம்மைக்கண்டேன். காயாம்பூவை யொத்த திருமேனியையுடைய கருணையங்கடவுள் உம்மைக்காணும் வரையில் ஆவிவைத்திருப்பது அருமையாயிருக்கின்றாரம்மா வென்று அனுமார்சொல்ல, அதற்கு அம்மன்சொல்லுகிறாள். ஸ்ரீராமருடைய சமாச்சாரங்களெல்லாந் திரிசடை சொல்லக் கேள்வியுற்றேன். ஆனாலும் ஒரு பாவியானவன் தொட்டெடுத்துப்போனவன் நமக்குத் தேவியாகமாட்டாளென்று ஒருவேளை யிருந்தாலும் மோசஞ் செய்த பாவியை நாசஞ்செய்து வெற்றியைப்பெறுவது இராசதருமமென்று சொல்லக்கடவை, நானிருக்கும் சுகதுக்க முதலியயாவும் நீர் பார்த்தபடியேசொல்லுவாய், அப்பால் அவர் சித்தம் எப்படியோ நான் அறியேன் என்று கண்ணீர் பெருகச்சொல்லுந் தாயார் வசனத்தைக்கேட்டு, அம்மா உம்மை எப்போது காண்போமென்றும், இருக்கும் இடத்தை என்று கேட்போமென்றும், ஒருநாள் ஒருயுகமாகக் கழித்து வருகின்றனர். இப்போது நான்போய்ச்சொன்ன மாத்திரத்தில் எழுபத்திரண்டு வெள்ளம் வானரப்படையுடன் வந்து எட்டு நாளையில் இந்த துஷ்டனையும் அவன் குடும்ப முதலிய யாவரையும் நாசஞ்செய்து தேவரீரை மீட்க நாங்கள் பார்க்கப்போகிறோம் தாயே, இந்த திருவாழியை அடையாளமாகக் கொடுத்தாரென்று காட்டவும், கரங்களை நீட்டி வாங்கிச் சிரசின்மீது வைத்து கண்களில் ஒத்தி மார்பிலணைத்து மகிழ்ந்து அனுமாரைப் புகழ்ந்து குழந்தாய், அஞ்சனாதேவிக்குமா

வாயுவுக்கும் புத்திரனாகிய மாருதியே நீ எப்போதும் சிரஞ்சீவியாக வாழக்கடவையென்று ஆசீர்வதித்து என் துயர் நீக்கிய தெய்வமேயென்று மனமகிழ்ந்து அனுமாரை நோக்கி அனுமானே, ஸ்ரீராமருக்கு என்னுடைய சூடாமணியை அடையாளமாகக் கொடுவென்று கொடுத்து, இதுவரையிலும் ஒன்பது மாதமாயிற்று இன்றுமுதல் முப்பது நாளைக்குள்ளாக இவ்விடம் வந்து பாதகனாகிய இராவணனை மாய்த்து என்னை மீட்டுக்கொண்டு போகாமற் போனால் என்னுவியை வைத்திரேனென்று சொல்லுமையா அனுமானேஎன்று சொல்ல, அனுமாரானவர் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து அம்மணீ நானே இந்தலங்கையை யழித்து உன்னை மீட்டுக்கொண்டு போவேன், அல்லது இலங்கையோடும்மையும் என்றோள் மேலெடுத்து ஸ்ரீராமபிரான் முன்னேவைப்பேன், ஒரு தூதன் மீட்டான் என்கிறவசை பூமியுள்ளளவும் மாறாது ஆகையால் அதிக சீக்கிரத்தில் ஸ்ரீராமமூர்த்தியை இவ்விடமழைத்துவந்து பகையை முடித்து உமதுசிறையை விடுத்து சந்தோஷம் பெறச்செய்கிறேன் உத்தாரந்தாரும் தாயே என்று வணங்கி விடைபெற்றுக்கொண்டு அசோகவனத்தை யழிக்கத்தொடங்கினர்.

## அனுமார் அசோகவன மழித்தல்.

---

அப்போது அனேகங் கோடியரக்கரையும், சம்புமாலி முதலிய பஞ்ச சேனாபதிகளையும், அட்சதன் முதலாகியவர்களையுங்கொன்று செயங்கூறிய காலத்தில் இந்திரசித்து வந்து எதிர்த்து பிரமாஸ்திரத்தில் கூட்டிக்கொண்டுபோய் இராவணன் சமுகத்தில் விடுக்க, அனுமாரானவர்வாலைச் சுருட்டி உயர்ந்த ஆசனமாகவமைத்து இருக்க, இராவணன்பார்த்து கோபித்து ஆரடா குரங்கே யென்றவன் ஒருமொழிகேட்க, ஸ்ரீராமருடைய தூதன் நானடா, அடா இராவணா என்று ஆயிரமடாப்பட்டங்கூற, இருபது கண்களும் சிவந்துவாளையுருவி வெட்டவருங் காலையில் தூதரைக் கொல்ல லாகாதென்று விபீஷணன்விலக்க, வாலில் துணிசுற்றி தீக்கொளுத்தும்படி இராவணன் கட்டளையிட அப்படியே செய்தபோது அசோகவனத்தில் சீதையம்மன் இருந்தவிடம் தவிர மற்றவைகளும் இலங்கை பட்டணம் முழுதும் எரித்துக் கரியா

க்க, இராவணன் முதலிய பேரும் அந்தரத்தில் ஒளிக்க, அரக்கர் அரக்கி யாவருமிருக்க யிடமில்லாமல் எவ்விடத்திலும் அக்கினி மயமாகச்செய்து சீதையம்மனைக்கண்டு பணிந்து ஸ்ரீராமஜெயமென்று ஆகாயத்தில் எழும்பிப்பாய்ந்து மேனு தேவியின் பிள்ளையாகிய மைநாக பர்வதத்தின்மேல் குதித்து அங்கிருந்து கிளம்பி மகேந்திர பர்வதத்தின்மேல்குதித்தார்.

## அனுமார் முதலியவர்கள்மது வனத்தையழித்தது.

---

அனுமாரானவர் சூடாமணியைக் கைக்கொண்டு வருவதை அங்கிருந்த அங்கதன் சாம்புவந்தர் முதலியபேர்களும் கண்டு ஜெயம்ஜெயமென்று விண்டு அனுமாரை தழுவிக்கொண்டு சகல செய்தியும் கேட்டு மகிழ்ந்து மதுவனத்தில் வந்து நுழைந்து கொள்ளைகொண்டுதெற்கேபோன தூதரைக்காணேமேயென்று விசனப்பட்டுக்கொண்டு இருக்கின்ற ஸ்ரீராமர் திருவடிகளுக்கு எதிரில் வரும்போது கண்டேன் சீதையைக்கண்டேன் ராகவாவென்று ஓடிவந்து வணங்கி சகல சமாச்சாரங்களையுஞ் சொல்லி சூடாமணியைக் கொடுக்க, ஸ்ரீராமர் வாங்கி அளவிறந்த சந்தோஷமடைந்து புளகிக்கவும், சுக்ரீவன் முதலியபேர்கள் ஆனந்தக் கூத்தாடவும், அனுமாரையாவரும் ஆலிங்கனம் செய்துக்கொள்ளவும், அரம்பாஸ்திரீகள் சுபசோபனங்கள் பாடவும் வீற்றிருந்தார்கள்.

## ஸ்ரீராமர் வானரச் சேனையுடன் தெற்கு நோக்கி வருதல்.

---

அந்தச் சமயத்தில் நூறுகோடி வானரங்கள் புடைசூழ்ந்துவர நீலனென்னும் படைத்தலைவன் வந்து ஸ்ரீராமர் இலட்சுமணர் சுக்ரீவன், இவர்கள், பாதங்களில் வீழ்ந்து வணங்கினான், இரண்டு சதகோடி வானரரும் புடைசூழக் குமுதனென்னும் படைத்தலைவன் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து நின்றான். கனவயன் கனவயாக்கன், மயிந்தன்! அமிந்தன், கேசரி இவர்கள் முதலிய படைத்தலைவர்கள் அளவிறந்த வானரப்படைகளுடனே வந்து வணங்கியிருந்தார்கள். இன்னம் வரப்பட்டசேனைகளையும் பதினெ

ட்டு படைத்தலைவர்களையும் நோக்கி மகிழ்ந்து தென்முகமாகச் செல்லும்படி உத்தரவுசெய்து ஸ்ரீராமரும் இலட்சுமணரும் புறப்பட்டார்கள் இந்தசேனைகள் பத்துயோசனை அகலத்தில் பத்துநாள் இரவும் பகலும் நடத்துவதற்கு சமுத்திரக்கரையைச் சேரவும். ஸ்ரீராமர் சுக்ரீவனைநோக்கி நீர்சொன்ன தொகைக்கு மேற்பட்டிருக்கும்போல் இருக்கின்றன சேனைகளென்று சொல்ல, சுக்ரீவன்கேட்டு ஆதியில்பிரமன் ஏற்படுத்திய தொகை அவ்வளவு இதன் மத்தியில் விர்த்தியாகிய தெல்லாம் கூடியிருக்கிற தல்லவாவென்று சொல்ல, ஸ்ரீராமர் கேட்டு மகிழ்ந்து தென்சமுக்திரத்தைக்கண்டு இதைத் தாண்டிப்போகும் உபாயம் எப்படி யென்று யோசித்திருந்தார்கள்.

சுந்தரகாண்டம் முற்றிற்று.



விபீஷணர் சரணமடைதல்.



சுக்ரீவன் இராவணன்முடியை எடுத்துவரல்.



முதல்நாள் யுத்தம்.





கும்பகர்ண்ண யுத்தம்.



இந்திரசித்து யுத்தம்.



ஆஞ்சனேயர்சஞ்சீவிமலைகொண்டுவந்து மூர்ச்சை தெளிவித்தல்.

ஆ ரு வ து,

# உயுத்தகாண்டம்.

## காப்பு.

ஒன்றேயென்னினொன்றேயாம் பலவென்றுரைக்கிற்பலவேயாம்
அன்றேயென்னினன்றேயா மாமேயென்னினுமேயாம்
இன்றேயென்னினின்றேயா முளதென்றுரைக்கினுளதேயாம்
நன்றேநம்பிகுடிவாழ்க்கை நமக்கிங்கென்னோபிழைப்பம்மா.

## ஸ்ரீராமரிடத்தில் விபீஷணன் சரணமடைதல்.

ஆஞ்சநேயரால் கொளுத்தப்பட்டு எரிந்து நீருய்ப் போன இலங்கையை தெய்வதச்சனுகிய மயனென்பவனுல் முன்போல் சிருஷ்டித்து மந்திராலோசனை சபையில் இராவணன் வீற்றிருந்து தனது தம்பிமார் முதலிய மந்திரிமார்களுடன் ஆலோசிக்க கும்பகர்ணனனவன் சில நீதிகளை அண்ணனுக்குச்சொல்ல, இந்திரசித்தனனவன் அதைமறுக்க அடா பயலே! நாளைக்குத்தெரியுமென்று சீறி தன்னரண்மனைக்குப்போய்விட்டார். அக்காலத்தில் விபீஷணர் இராவணனுக்கு அநேக தரும நீதிகளைச் சொல்லி சீதாபிராட்டியாரைக்கொண்டுபோய்விட்டு ஸ்ரீராமரை வணங்கிக்கொண்டால் நமக்கு நலம், இல்லாவிட்டால் ஒரு குரங்கால்வந்த அவகேடு இப்படியிருக்க எழுபத்திரண்டு வெள்ளங் குரங்குகளும் வந்தால் இந்த இலங்கை, என்னபாடுபடுமோ! எப்படி முடியுமோ! வென்றுசொல்ல, இராவணன் கேட்டு கோபங்கொண்டு நீபயந்தால் ஓடிப்பிழை போவென்று காலாலுதைத்து வாளையுருவி வெட்டவரவும், கிட்ட நின்ற விபீஷணர் தப்பித்துக்கொண்டு தாயாரிடம்வந்து உரைத்து நாலு பத்தினிமார்களுடன் ஆகாயவீதியாய்ப் புறப்பட்டு வந்து இராமமூர்த்தியின் பாதங்களில் சரணம் அடைய, இராமர் அவனுக்கு அபயஸ்தங்கொடுத்து இலங்காபுரி பட்டணம் உன்னுடையதென்று அருள்புரிந்து சிரஞ்சீவியாக விருக்க வரங்கொடுத்து ஆதரித்தார். தேவர்கள் புட்பமாரி பொழிந்தார்கள். அப்பால் விபீஷணரானவர் இராவணனுடைய சம்பத்துமுதல் சேனைப்பெருக்கங்களையுங்கூறி அனுமார் இலங்கையில்வந்து அசோகவனமுதலிய இராட்சதரை யழித்ததும், இலங்கையைச் சுட்டெரித்ததும் ஆதியோடந்தமாகச் சொன்னுர்.

அஃதை இராமர் கேட்டு மகிழ்ந்து அநுமாரைப்பார்த்து நீ சிரஞ்சீவியாக வாழக்கடவை என்று ஆசீர்வதித்தார்.

திருவணை கட்டுதல்.

அதன் பின்பு கடலைத்தாண்டும் பொருட்டு ஏழுநாள்தர்ப்பாசனத்திலிருந்து வருணனைப்பிரார்த்திக்க, அவ்வருணன் வாராமையால் சினங்கொண்டு விஜயகோதண்டத்தைவளைத்து அக்கினியாஸ்திரத்தைத் தொடுக்க, வருணனனவன் பொரிந்துகரிந்து அபயம் அபயமென ஓடிவந்து திருவடிகளில்வீழ்ந்து புகழ்ந்து வருவதைக்கண்டு ஸ்ரீராமர் திருவணைக்கட்டுதற்கு எப்படிவகை யென்றுகேட்க யான்முதுகு கொடுக்கிறேன் என்று உடன்படவும், ஸ்ரீராமருக்குச் சந்தோஷம் வந்து வானரங்களை ஏவி மலைகளைப்பிடுங்கிவந்து போடும்படிசொன்னர் அப்படியே கோடி கோடி மலைகளைக் கொண்டுவந்து போடவும், நளன்வாங்கி அடுக்கி பத்துயோசனை அகலமும், நூறு யோசனை நிகளமுமாய்த்திருவணை ஏற்படுத்தி ஸ்ரீராமருடைய திருவடிகளில் நமஸ்கரித்து சொல்லக்கேட்டு இராமர் இலட்சுமண சுக்ரீவ அநுமனங்கதர்முதலாகிய சகலசேனைசைனியங்களுடன் சேதுபந்தனத்திற்சென்று கடலைக்கடந்து இலங்கைக் கருகாமையிலிருக்கும் வேலைமலையின்மீது வந்துசேர, நளனனவன் அவர்களுக்குத் தகுந்தபடி கூடார முதலியவைகளும் ஏற்படுத்த அதில் இராமலட்சுமணர் முதலானவர்களுமிருந்தார்கள்.

இந்த சங்கதிகளையெல்லாம் தசக்ரீவன்கேட்டு சுகசாரணரையழைத்து நீங்கள்போய் உளவறிந்து வாருங்களென்றனுப்ப அவர்கள் வானரப்படைகளில் வந்து புகுந்த மாயத்தை விபீஷணர்கண்டு அவர்களைப்பிடித்து ஸ்ரீராமமூர்த்தியின் முன்விட அவர்களிடத்தி லனேக நீதியைச்சொல்லி இராவணனுக்குத்தெரிவித்துப் பிழைக்கும் விதத்தைத் தேடிக்கொள்ளச்சொல்லும் என்று அனுப்ப, அவர்கள்போய் இராவணனிடத்திற்சொல்ல அதைக்கேட்டு கலகல வென்று நகைத்து நரித்திரள்கள் நாலுகோடி கூடிவந்தாலும் சிங்கத்தை அசக்கலாமோ இவர்களெல்லோரும் ஏககாலத்தில் என்கையால் மடியப் பிரமன் எழுதியிருந்தானுக்கும் என்று வீரமேன்மைகளைப்பேச, அவைகளைக் கேட்டிருந்த பாட்டனாகிய மாலியவா

ன் சொல்லுகிறன் கேளடா இராவணு, தூதர்கள்சொன்னல் ஏண்டாவாயைக் கிழித்துக் கொள்ளுகிறுய், நீபிழைக்கிறது மெய்யானல் சீதையை விட்டுவிடு, இல்லையாகில்உயிரைவிட்டு விடு, உண்டானவார்த்தை சொன்னேன் என்று சிலமொழிகளைச்சொல்ல, அவைகளைக்கேட்டு ஏழைமதியுடைய மாலியவானே விபீஷணனைப்போல் என்னை நினைத்தாயோ வாயை மூடடாவென்று பாட்டனை அவமதித்து, அநேக கன்னியர்கள் புடைசூழ உத்தரகோபுரத்தின் மீதேறி சுவேலமலை மீதிருக்கும் ஸ்ரீராமலட்சுமணர் சுக்ரீவன் முதலிய வானரப்படைகளை சாரணர்காட்ட இராவணன் பார்த்துக் கொண்டிருந்தான்.

### சுக்ரீவன் இராவணனுடைய கிரீடத்தை கொண்டுவருதல்.

---

அப்போது சூரிய குமாரனுகியசுக்ரீவனுக்கு வீராவேசம் வந்து கிளம்பி கோடையிடிபோல வடக்கு கோபுரத்தில்வேடிக்கை பார்த்துநின்ற இராவணன்மேற் பாய்ந்து இருவருங் கட்டிப்புரண்டு அகழியில்விழுந்துஎழுந்து கரகரவென்றுசுழன்று கரங்கள் பிடித்து சுழற்றியெறிந்து இடசாரிவலசாரி கால்மாடு தலைமாடாகத்திரிந்து, இராவணன் தலையிலிருந்த கிரீடங்கள் பத்தையும் பரித்துக்கொண்டு முண்டம் போலாகி சுவேல மலையிற்குதித்து இராமருடையபாதங்களில்வைத்து இராவணன் தலைகளைக்கொண்டு வந்தேன் கடவுளே யென்று வணங்கி நின்றுன். இதைக்கண்டு யாவரும் சந்தோஷமடைந்தார்கள். இராமர் சுக்ரீவனைநோக்கி விசனப்பட்டு இப்படி தனிமையிற் செல்லாகாதென்று சில நீதிகளையும் அரசமார்க்கத்தையும் போதித்தருளினர்.

### வானரச்சேனைகள் இலங்கையைவளைத்தல்.

---

இராவணன் பத்துகிரீடத்தையும் போக்கடித்துக் கொண்டு சுக்ரீவன் கைக்குத்தால்சரீரமுழுவதும் நொந்து இராஜமண்டபம் போயிருந்தான். இப்பால் இராமர் மறுநாள் இலங்கையின் வடக்குவாயலில் சுக்ரீவனையும், மேற்குவாயலில் அநுமானையும், தெற்குவாயலில் அங்தனையும், கிழக்குவாயலில் நீலனையும், இப்படியாக வகுத்து ஒவ்வொருவருக்கும்

தனித்தனி பதினேழுவெள்ளம் வானரப்படைகளையுங்கூட்டி இலங்கையைச்சுற்றி காவல் வைத்துத் தானும் தம்பி இலட்சுமணனும் விஜய கோதண்டத்தை ஏந்தி மற்ற வானரப் படைகளுடன் யுத்தத்திற்கு ஆயத்தமாக நின்றார்கள். இச் செய்தியை இராவணன்கேட்டு இலங்கைப்பட்டணம் நாலு வாசற்படியி லுள்ளும் இந்திரசித்து முதலாகியசிலவீரர்களை யேவிக் காவல்வைத்துத் தானும் யுத்தத்திற்குச் சித்தமாக விருந்தான்.

## அங்கதன் தூதுபோகுதல்.

அப்போது ஸ்ரீராமர் அங்கதனையழைத்து இராவணனிடத்திற்சென்று சீதையைக் கொண்டுவந்து விட்டு சரணம் அடைகின்றையா அல்லது யுத்தத்திற்குவந்து மடிகின்றையா இரண்டிலொன்று இராசமுறைப்பிரகாரம் கேட்டுவாவென்றனுப்ப, நல்லதென்று நமஸ்கரித்துப்போய் இராவணனுக்கு எதிரில் நிற்கவும் நீயாரென்றவனும் கேட்க, நான் இராமசாமி தூதன், உன்னைவாலில்கட்டியாட்டிய வாலியின் குமாரன், என்பேர் அங்கதன் என்பார்கள், நீவஞ்சித்து உலகமாதாவைத்திருடி வந்தையே பாவி அந்த அம்மனை கொண்டு வந்து விடுத்துச் சரணமடைந்தால் பிழைக்குமுன்னுவி இல்லாவிட்டால் இறப்பாய், உனக்கு நல்லகால மிருந்தால் என்னுடன் கூடவரலாம், பொல்லாத காலமிருந்தால் நிற்கலாம் "கெடுமதிகண்ணுக்குத் தோற்றுது, விநாசகாலே விபரீதபுத்தி" இவைகளை யெல்லாம் பரியாலோசித்து சரணமடையலாம், இல்லையாயின் யுத்தத்திற்கு வரலாம் எல்லாச்சேனையும் வந்து இலங்கையை வளைத்துக் கொண்டார்கள். என்னசொல்லுகிறுயென்று கேட்க வந்தேனென்ற அங்கதனைப்பார்த்து அரக்கைப்போற் கண்சிவந்து நெற நெற வென்று பல்லைக்கடித்து இராவணன் சொல்லுகிறுன். அடா அங்கதா, நீயோ சிறுபிள்ளை நான்கருதிக்கொண்டு வந்த சீதை திரும்பி வருவாளென்று கனவிலும் நினைக்க வேண்டாம். யுத்தத்திற்குவரச் சித்தமாயிருக்கிறேன். ஆனுல் ஒரு பாணத்தால் குரங்குகளையும் கறுத்தமனிதர்களையும் கொன்று விட்டால், அப்பாலிருக்கும் பாணத்திற்குயாரும் இரையில்லை யேயென்ன இலச்சைப்பட்டுக் கொண்டிருக்கிறேன் மேலும் உன்தகப்பனுக்கும் எனக்கும் நெருங்கிய சிநேகிதமென்று

நீயதை யறிந்திருந்தும் உன் தகப்பனைக் கொல்லச்சொல்லிய சுக்ரீவனையும், அவன்பேச்சின்படி கொன்ற ராமனையும் பகையாளிகளாய்க் கருதி என்னிடத்திற்சேர்ந்து அவர்களைக் கொன்று பழிக்குப் பழிவாங்காமல் அவர்களுக்கு அடிமைபோலிருப்பது ஞாயமா, இதுவீரமா, தீரமாய் யோசித்துப் பார் நீ என்ன தூரமா, எனக்கு நீ பிள்ளைமரியாதை உன்னைப் பார்க்கவே மெத்தவிசனம் நேரிட்டது. இப்போது சுக்ரீவனைக்கொன்று கிஷ்கிந்தைப்பட்டம் உனக்குக் கட்டுகிறேன். நரனையுங்கொன்று சீதையை நான் கட்டிக்கொள்ளுகிறேன் என்ற இராவணனை நோக்கி தனதுதோள்களைத்தட்டி அண்டங்குலுங்கநகைத்து அதட்டி அடா இராவணா, நீயோ சிங்கக்குட்டிக்குப் பட்டங்கட்டுவது நீ கெட்டாய்போடா ஸ்ரீராமமூர்த்தியும் இலட்சுமணரும் ஒருகட்டாகவந்து வில்லைவளைத்து பாணம்பூட்டி உன்தலைக்கு வைத்திருக்கிறதைத் தப்பித்துக்கொள்ளடா பதரே என்றேசவும், இராவணனுக்குக் கோபம்வந்து எதிரில்நிற்கும் நூறுயிரம்பேர் இராக்கதரை நோக்கி இவனைக் கொல்லுங்களென்றுசொல்ல, அவர்களும் வந்துநெருங்க, அதை அங்கதன் பார்த்து ஒவ்வொரு உதையும் இடியும் அடியும் அறையும் முறையாகக்கொடுத்து உதறி தரையில் வீழ்த்தி இராட்சதனைப் பார்த்து அடா துரோகி, தூதனைக் கொல்லச்சொல்லி மறையோன் கற்பித்ததா இதோவந்ததுவேதனை யென்றுகூறி ஸ்ரீராமரிடத்தில் வந்து பணிந்து சீதையம்மனை விடுகிறதானல் தன்னுவியை முன்னமே கொடுக்கிறேனென்று சண்டைக்குக் கங்கணங்கட்டியிருக்கிறனென்று சொல்ல, இளையபெருமாளுக்கும் அனுமாருக்கும் சந்தோஷமதிகரிக்க, ஆகாயவாசிகள் சுகப்பட்டோமென்றும்பூரிக்க ஸ்ரீராமரும் இலட்சுமணரும் வில்லைவளைத்துகுணத் தொனிசெய்து வானரப்படைகளைப்பார்த்து இலங்கை மதிலையும் கோட்டைக் கொத்தளங்களையும் பெயர்த்தெரியுங்களென்று கட்டளையிட்டருளினர்.

## வானரச்சேனைகள் இலங்கையை அதஞ்சேய்தல்.

---

அப்போது வானரப்படைகள் சுற்றும் மதிலைப் பெயர்த்து அகழியைத்தூர்த்து இலங்கைக்குப் பிரவேசித்துமாடமாளிகை கூடகோபுரங்களை இடித்துப் பொடியாக்கி இராக்க

தர் முதலிய பேர்களை வதைத்துப் பதைக்கப்புதைத்து ஆயு தங்களினாலும் கரங்களினாலும் சிதைத்து காலினாலும் உதை த்து துறத்தியடிக்க இராக்கதசேனைகள் பாதாளம் நடுங்கமீந லங்குலுங்க பற்பல முகத்திலும் பரவி குரங்கினங்களைக் குப் பல் குப்பலாய்க்குவித்து ஓடவிடாமல் அடித்தும் வளைந்து கவிந்து வாட்ட அவர்கள் ஓட்டங்காட்ட ஸ்ரீராமர் திருவடி யில் வந்து வீழவும் இதைக்கண்ட சுக்ரீவன் முதலிய வானர வீரர்களும் புறப்பட்டு ஓடிவந்த வானரப்படைகளைச் சேர்த் துக்கொண்டுபோய் இராட்சதர் இரதகஜதுரகபதாதிகள் இற ந்து இரத்த வெள்ளங் கடலைப்பொருதவும் இப்படியாக இல ங்கைப்பட்டினங் கிடுகிடுவென்று தங்குவதை சாரணர்கள் கண்டு ஓடி இராவணனுடனே சொன்னார்கள்

## இராவணன் முதனாள் யுத்தம்.

அந்தவார்த்தையைக்கேட்டு அதிககோபங்கொண்டு பத் து முடியுந்திருத்தி இருபதுதோளும் தினவுஎடுத்து ஆயுதந் தாங்கி ஆரகேயூரமணிமகுட குண்டலமணிந்து வீரகண்டை தரித்து இரதம் ஏறிவரவும், இந்திரசித்தனும் இருநூறு வெள்ளஞ் சேனைகளுடன் வரவும், கழுகு காக்கை அடித்து திரியவும், உதிரமாரி சொரியவும், இந்த அவசகுணத்தைக் கண்டு ஆருக்கோபங்கொண்டு, ஸ்ரீராமர் இலட்சுமணர் சுக்ரீ வன் அனுமார் அங்கதன் விபீஷணன் சாம்புவந்தன் முத லிய எழுபத்திரண்டு வெள்ளம் வானரப்படைகளுடன் இவர் களும்வந்து எதிர்த்து இருதிறச்சேனைகளும் கைகலந்து யுத் தஞ்செய்கையில் வானரவீரர்களெல்லாம் மலைகள் மரங்கள் இவைகளை ஓயாமாரிபோல வாரியிறைத்துச் சாயாமல் நிற்க இராட்சதர்களெல்லாம் யானைகுதிரை இரதம் விமானம் புலி கரடி சிங்கம் யாளி கோவேறு கழுதை பேய்க்கணங்கள் கூளி கள் நாய்முகம் நரிமுகத்துடன் வில் வாள் வேல் சூலம் பாசு கந்தம் சக்கரம் பிண்டி பாலம் எறியீட்டி வாங்கு குருந்தடி குண்டாந்தடி சுக்குமாந்தடி கிலுக்குத்தடி வளைத்தடி இன் னும் பற்பல ஆயுதங்களைக்கொண்டு போர்புரியும்போது ஆயு தங்களினால் சிலமர முதலியவைகளினால் மலை மரங்களினால் அஸ்திரசகஸ்திர ஆயுதங்க ளொழியவும், அரக்கர் அனே கர் இறக்கவும், வானரங்கள் வெகுபேர் பறக்கவும், உதி ரவெள்ளங்கள் எங்கெங்குஞ் சிதறவும் இவ்விதமாக சில

நேரம் யுத்தஞ்செய்து இருபடைகளும் இளைப்பாறி மறுபடி யும் போர்செய்யத் தொடங்கினார்கள்.

ஆங்கு இராவணன் வரும்போது இலட்சுமணர் வளைத் துக்கொண்டு பொருதினார். விருபாட்சன்சுக்ரீவனுடன்எதிர்த் தான்அங்கதன்அரக்கர்கூட்டத்தின்ஆண்புலிபோற்சீறியேறி னன். விபீஷணன் பிரகஸ்தனுடன் யுத்தஞ்செய்தான். இவ் விதமாக ஒருவருக்கொருவர் தேர்ந்த யுத்தஞ் செய்யுங்காலத் தில் இராவணன் வானரப்படைகளை வதைத்ததை அனுமார் பார்த்து ஆகாயத்திற்கிளம்பி இராவணனுக்கு நேர்குதித்து புஜத்தைத் தட்டி அடா இராவணா நாமிரண்டுபேரும் குத்து ச்சண்டை செய்வோம் வாடாவென்று அழைத்து அவனு டைய மார்பில் ஓங்கி ஒருகுத்துவிட்டார். அதோடே இரா வணன் மூர்ச்சைபோய் மறுபடியுந் தெளிந்து அனுமாரு டைய மார்பில் ஒருகுத்து விட்டார். அப்போது அனுமார் சற்றே அசைவற்று நின்றார். இப்படி குத்துச்சண்டை செய் தபிறகு அனுமார் இராட்சதசேனைகள் நிற்கத்தரியாமல் ஓட் டமெடுத்தன, இளையபெருமாளுடன் யுத்தஞ்செய்த இந்திர சித்தனனவன் சாரதி குதிரைதேரும்போல் வில்லுமுதலாகிய பேரும்போய்மிகுந்த பயமும் விசனமும் மேலிட்டு பாதசாரி யாகப் பட்டணம் போனான். விபீஷணனிடத்தில் யுத்தஞ்செ ய்த பிரகஸ்தனனவன் குடை கொடி குதிரைப் படைமுதல் தேருங் குமுங்கிப்போய் வையகமாசையை மறுத்து எமலோ கம் போய்ச்சேர்ந்தான், இராவணன் ஸ்ரீராமருடன் நெடுநே ரஞ் சண்டைசெய்து தேர்கள் குதிரைகள் கூளியாளிசாரதி கைவில்லும் பாணமும் கொடிபடை முதலிய யாவுமழிந்து இரத்தவெள்ளம் வழிந்து உள்ளமழிந்து இருநூறு வெள் ளஞ்சேனைகளும் பெருங்காற்றிலகப்பட்டபஞ்சுபோல் ஒழி ந்து கெஞ்சிப்பறந்தார்கள் தன்தேரும் ராமபாணத்தால் துறந்துபோனதை இராவணன்கண்டு லச்சைகொண்டு நாண முற்றுப் பத்துத்தலையும் நிலத்தைநோக்கி யிறங்கி நின்றதசக் ரீவனைத் தாசரதிபார்த்து ஜானகியைக்கொண்டு வந்துவிட்டு சரணம் அடைகிறது, நன்மையா, அல்லது சண்டை செய் வது நன்மையா, முதனாள்யுத்தத்தில் நீஇப்பேர்க்கொத்த கெ தியடைந்தாய், இதையோசித்துக்கொண்டு நாளைபோவானெ ன்றுசொல்ல, மறுவார்த்தையொன்றும் சொல்லாதவனுக்

கால் நடையாகதன் அரண்மனைபோய்ச் சேர்ந்தான் தேவர்க ளெல்லாம் ஸ்ரீராமரை ஏத்தித்தொழுதுபோனார்கள்.

### கும்பகர்ணனை யெழுப்ப அவன் இராவணனுக்குப் புத்தி சொல்லுதல்.

இப்பால் இராவணன் தன்பாட்டனாகிய மாலியவானு டன் நான்பட்ட அவஸ்தையெல்லாஞ் சொல்ல, அவன் இது சமயம் சீதையை விடென்று சொல்ல, மகோதரன் கே ட்டு இராவணனுக்கு சில துர்ப்புத்திகளுரைக்க, இடிவிழுந்த மரம்போலெரிந்து இவ்வளவு வானரங்களையும், இரண்டுநரர் களையும் எடுத்துவிழுங்க ஏப்பமிடும்படியாகிய என்தம்பி கும்ப கர்ணனை இப்போதே எழுப்பிவிடுங்களென்றுசொல்ல, உட னே கதை ஈட்டி உலக்கை முதலிய ஆயுதங்களா லெழுப்ப வும் எழுந்திராமல் ஆட்டுமந்தைகளை மேலே செலுத்தி விதி வசத்தால் பாதிதூக்கத்தில் விழித்துக்கொண்டு என்னகாரிய மென்றுகேட்க விளைந்த தன்மைகளை விபரமாகச்சொல்லக் கேட்டு மகம் மேரு இரண்டுகாலுங்கையும் முளைத்து வருவ தைப்போல் தமயனிடத்திற்குவந்துநிற்க, அவனை நோக்கி அடாதம்பி, இராமன் இலட்சுமணன் இரண்டுபேர் நரர்கள் சுக்ரீவனைத் துணைகொண்டு வானரவெள்ளத்துடன் வந்து பிரகஸ்தன் முதலிய படைத்தலைவர்களையுங்கொன்று சேனை களையும் வென்றுசெயங்கூறி நின்றார்களாம் அவர்கள் முழு மையும் உன் குலத்திற்கிரையாகவும் அமரர் முதலியவர்களின் சந்தோஷமழியவும் வெற்றி பெற்று வரக்கடவை விண்ண வர்க் கெமனேயென்று இராவணன் சொல்ல, கும்பகர்ணன் கேட்டு அண்ணா மும்மூர்த்திகளும் ஒருமூர்த்தியாகியவதாரஞ் செய்த இராமன் அவருடன் பகைத்து பாரினில் வாழ்வோர் அம்மனைக்கொண்டுபோய் இராமபிரானுடைய அடிமலர்சேர் த்து விட்டபய மென்றிருந்தால் அருள்பெறலாமே, தம்பி வார்த்தையுந் தள்ளினை முன்னம் துஷ்டர்வார்த்தையை இஷ்டமாகக்கேட்டனை, அழியாத இலங்கைக்கு அழிவுதே டிக்கொண்டனையென்று சொல்லிய இளையவனைவெகுண்டு எனக்கு நீதிசொல்லவா எழுப்பினேன் விபீஷணனைப்போல் நீயும் போய்ச்சேரு போபோவெனக்கடிந்து புழுங்கினான் கும்பகர்ணன் அந்தவேளையில் அண்ணன் அடிமலர்தொ ழுது அடியேன்மீது ஆயாசம் வேண்டாம் அண்ணாவென்று

சூலத்தைத்தாங்கி ஆயிரம்பேய்ப்பூண்ட ரதத்திலேறி யுத்த கோலத்துடனே வெளிப்பட்டு இராட்சதப் படைகளுடன் சர்வசம்மாரகால உருத்திரனைப்போல யுத்தத்திற்குப் புறப்பட்டுவந்தான்.

## கும்பகர்ணன் யுத்தம்.

ஸ்ரீ ராமர்கண்டு மகிழ்ந்து இவனாரென்று விபீஷணனைக் கேட்க என்தமயன் இராவணன்தம்பி கும்பகர்ணன் அண்ணனுக்கு அநேக புத்திகளைச் சொல்ல அவைகளைக் கேளாமல் கோபங்கொள்ள அவனாலிறப்பதைவிட தேவரீரால் மடிவது மோட்சமென்று கருதிவருகிறார் என்றுசொல்ல, ஸ்ரீராமர் கேட்டு நீபோய் அந்தப்பாவி அரக்கனால் அழியவேண்டாம் நம்மைமேவி சுகப்படலாமென்று அழைத்துவாருமென்றனுப்ப அப்படிபோன விபீஷணனைக் கும்பகர்னன்கண்டு தம்பீ ஏன்வந்தாய், ஐயோ நீ நல்லதவத்தையுடையவன், இம்மையில் தானே நன்மையைப் பெற்றாய், என்வினை எனக்கு உன் வினையுனக்கு ஸ்ரீராமரிடம்போய்ச் சேரெனச் சொல்லி வில்லைவளைத்து நெற நெற வென்று பல்லைக்கடித்து நாணியேற்றி கணைமாரி தூற்றி குரங்குபடைகளை கலங்க அடித்து கும்பல் கும்பலாகக் குவியச்செய்தான். இதுகாலையில் அனுமார் அங்கதன் நீலன் சாம்புவந்தன் முதலிய படைவீரர்களும் தொடை தட்டிக்கொண்டு மலைமரங்களையும் பிடுங்கி கும்பகர்ணன்மீதி லெறிந்து நான்குதிக்குகளிலும் வளைத்து நமனும் உயிரிளைத்து நடுங்கும்படிவீசி நானாவித வார்த்தைகளினால் பேசி போர்விளைத்தார்கள். சில வானரவீரர்களோடிவந்து பாரியபருவதங்களையும் வாரிக்கொண்டுவந்து அவன் மார்பில் எறிந்தும் கரங்களினாற் குத்தியும் கையிளைத்து இவன் காலகாலனோ ஊழிக்காலத்தில் உண்டாகும் ஆலகாலமோ வென்று வருந்தி யிருந்தார்கள். இஃதை ஆஞ்சனேயர் கண்டு ஒருபெரியகிரியை அடிவேருடன் பிடுங்கிவந்து கும்பகர்ணன் உரத்திலும் சிரத்திலும்பட எறியவும், அண்டமுகடு அதிரவும், அந்தமலை பொடியாய் உதிரவும், அதை அனுமார்கண்டு இவனைவெல்ல நம்முடைய தரமல்ல ஸ்ரீராமருடைய கோதண்டம் இவனைக்கொல்ல காத்திருக்கிற தென்றுபடைத்தலைவர்களுடன் சொல்ல, இதைக்கேள்விப்பட்ட சுக்ரீவன்வாயுவைப்போலெழுந்து அவன்ரதத்தில் விழுந்து

கொழுந்துவிட்டெரியுங்கண்களுடன்சுக்ரீவன் அடித்துத்தள்ள அந்தச் சுக்ரீவனேகும்பகர்ணன்பிடித்து தேரிற்கட்டி இலங்காபுரிக்குத்திரும்ப வசந்தன்முதலிய நீலன்வந்துமீட்கவசந்தனைக்கசக்கித் திலதமிட்டுச் சங்கத்தொனிமுழக்கி நடக்கும்போதுவானரச்சேனைகள் கரங்களைநெறித்து கண்ணீரால்கையலம்பிக் கலங்கி நிற்க அதைக்கண்ட இளயபெருமாள் கரத்திலிருந்த உத்தண்ட வில்லைவளைத்து கும்பகர்ணன் அப்பாற்செல்லாமல் அசந்துநிற்க அனேக பாணங்களை அனுசந்தித்து அவனுடைய நெற்றியில் பத்துபாணம் ஊடுருவிப்போகும்படிதொடுக்க அதனுல் அவன்மயங்கிமூர்ச்சையாய் படுக்க அந்தவேளையில் சுக்ரீவன் அவனுடைய மூக்கையுங் காதுகளையும் பிடுங்கிக்கொண்டு ஓடிவந்து ஸ்ரீராமருடைய பாதங்களிற்பணிய அனுமார் யாவரும் பனிமலர்களைச்சொரிய கும்பகர்ணன் மூர்ச்சைதெளிந்து மூக்குங்காதுகளும் மூளியாயிருப்பதையறிந்து தங்கைமூக்குப்போலே என்னையுஞ்செய்த சமர்த்தர்களே ஒருமூளிக் கிரண்டு மூளிகளாய் இலங்கைக்கு எப்படிப்போவது உங்கள் கரத்தால் சாவேன் இதோ வருகின்றது விஷயக்கணை என்று விடுத்து இலட்சுமணருடன் சண்டைகள் செய்து இரதமுதலிய சாரதியும் ஒழிந்து போகவே பூமியிற்குதித்தான்.

அப்படி பூமியிற்குதித்த கும்பகர்ணனுனவன்வானரச்சேனைகளைவாரியெறிந்து கரங்களால் எற்றி பாசங்களாற் கட்டி தரையில்தேய்த்து போர்க்களமெல்லாம் புருஷதீரனுய் ஆருக்குமடங்காமல் உலாவும்போது வானர அரசனும் பதினெண்படைத்தலைவர்களும் விபீஷணரும் இளயபெருமாளும் ஸ்ரீராமரிடம்வந்து மனம்நொந்து இந்தப்பாவியைக் கொல்லாமல் தேவரீர் வேடிக்கைப்பார்த்து விஷப்பரிக்ஷை செய்கிறதுபோலிருக்கின்றது இன்னஞ்சற்றுநேரத்தில் எம்மையும் உம்மையுமுறித்து அம்மையையும் அபகரிப்பான்என்றுசொல்ல இதை ஸ்ரீராமர்கேட்டு கரத்திற்பிடித்த வில்லை குணத்தொனிபண்ணி யுத்தகளத்தில் எதிர்க்கவும், கும்பகர்ணன் பல்லைக்கடித்து அளவிறந்த அஸ்திரங்களை அபாரமாய்ச் சொரியவும், அவைகளைப் பொடி பொடியாய்த் தகர்க்கவும், இருவரும் நெடுநேரம் யுத்தம்புரிந்து கும்பகர்ணன் வில்லை ஸ்ரீராமர் அழித்தார் உடனே ஒரு தண்டாயுதத்தைச்சுழற்றிக் கொண்டல் வண்ணன்மேல்வீச அது இரண்டாய்ப்போகவொரு சூலாயுதத்தைப்போடவும் அதைத் தூளாகமாற்றவும் இரண்டு மலைகளைப்பிடுங்கி அரக்கன் எறியவும், இரண்டுகணைகளால்

அவையும் பொடிபடவும், யுத்தகளமெல்லாம் உலாவி வானர ங்களை வாரிப்பிடித்து வாயில்போட்டு கசகசவென்று மென்று தின்னும் கரம் கால்வாய்களைப்பற்றிக்கொன்றும் ஸ்ரீராமர்பே ரில் குரங்குகளைப்பிடித்து கரகரவென்று சுழற்றியெறிந்தும் அமர்செய்யும் கும்பகர்ணனுடைய இரண்டு கைகளையும் ஸ்ரீ ராமர் அறுத்துவிட்டார், அப்போது இரண்டுகாலினால்உதை த்தும் மிதித்தும் குதித்தும் சின்னபின்னமாக்கும்போதுமறு படியும் இரண்டு அஸ்திரத்தினால் இரண்டுகாலையுந்தரித்தார். அக்காலையில் தேகங்குழவியாகவும், பூமி அம்மியாகவும், வா னரப்படைகளை அறைத்து மானிடரையுங் கொல்வேனென் று நாக்கை நீட்டி யுத்தகளத்திற்கிடக்கிற ஒருபெரிய மலையை க்கெல்லியிழுத்து வாயிற்சேர்த்து நடமுடவென்று கடிந்து சீனக்குழலில் ஊன்வைத்தூதுந் தன்மைபோலூதி ஸ்ரீராமல ட்சுமணர்முதல் யாவருக்கும்பட்டுமயங்கச்செய்தான் ஸ்ரீராமர் அவனுடைய வீரத்தைக்கொண்டாடிப் புகழ்ந்து ஸ்ரீராமபா ணத்தைவிட்டு அவன் தலையைக்கொய்து அவன்கேட்டுக்கொ ண்ட வரத்தின்படியே கடலில்விழும்படிசெய்து விட்டனர்.

## அதிகாயன் யுத்தம்.

இவ்விடத்தில் கும்பகர்ணன் யுத்தத்திற்குப் போனபிறகு இராவணனனவன் மகோதரன்சொற்படி மாயஜனகனை யுண் டாக்கி சீதையம்மன் முன்வந்து சிலவார்த்தைகளைச் சொல் லிக்கொண்டிருக்கும்போது சாரணர்களோடிவந்து கும்பகர் ணன் இறந்தானென்றுரைக்க அதைக்கேட்டு இராவணன் புலம்பிக்கொண்டிருக்க, அப்போது அவன் பிள்ளைகளில் இந்திரசித்துதவிர அதிகாயன் முதலியயாவரும்வந்து வண ங்கியுத்தத்திற்கு உத்தரவுபெற்று இரணக்களம் வந்து இலட் சுமணர் சுக்ரீவன் அனுமாருடன் போர்புரிந்து இராட்சத சேனைகள் மடிந்து இலட்சுமணர் பாணத்தால் அதிகாயன் இறந்ததை தூதர்சொல்ல இராவணன்கேட்டு மிகவும், மன வருத்தமடைந்து துக்கித்திருக்கும்போது, தானியமாலையெ ன்பவள் புத்திரசோகத்தால் இராவணன் முன்வந்து தலை விரித்து அழுதுசீதையம்மனை நீவிடாமல் உன்னைக்காமன் கொல்ல நீ என்மகனைக்கொன்றாயே என்று பலபலவிதமா ய்ச்சொல்லிப் புலம்ப அதனால் கடுஞ்சினமடைந்து இந்திர

சித்தையழைத்து அப்பாமகனே நீயிருந்தும் உன்தம்பியை யும் என்தம்பிமார்களையும் இழந்தேனென்று கண்ணீர்சொரி யவிட்டான்.

## இந்திரசித்து யுத்தம்.

அப்படிகலுழ்ந்த இராவணனைத்தேற்றி ஐயா அவ்விர ண்டுமனிதரையும் பழிக்குப் பழிவாங்கிக்கொண்டுவருகிறேன் என்று நாகபாசம் பிர்மாஸ்திரமுதல்சகல அஸ்திரங்களு மெடுத்து சேமத்தேரேரி அனேகஞ்சேனைகளுடனே யுத்தக ளம்வந்து வில்லைவளைத்து குணத்தொனிசெய்து விண்ணவ ரொடுங்க வீரப்பிரதாபங்கூறி குரங்குசேனைகள் கொட்டமெ ல்லாமடங்க அனுமந்தன் அங்கதன் சுக்ரீவன் சாம்புவந் தன் நளன் நீலன் குமுதன் குமுதாக்கன் இவர்களெல்லோ ருஞ்சேர்ந்து யுத்தந்தொடங்க நீங்களெல்லாம் படுங்களெ ன்று விஷங்களைப்போலச்சீறி வெகுவாய் வார்த்தைகளைக் கூறி நிராயுதருடன் யுத்தஞ்செய்வது நீதியல்லவென்று இலட்சுமணனென்னும் வில்லாளியுடன் சண்டை செய்வே னென்று வரவும் இளையபெருமாள் வில்லில் நாணிபூட்டி இழுத்துடங்காரஞ்செய்யவும், இந்திரசித்தன் பாணங்களை வாசாமகோசரமாய்ச் சாடவும் வானரவீராள் தலையறுந்தாட வும் இளையபெருமாளுக்கோடி பாணங்களைப்போடவும், இப் படி இருவரும் யுத்தஞ்செய்யும்போது இந்திரசித்தன் தேரி லேரியிருக்க இளையவர் பூமியில் நிற்பது நன்றல்லவென்று அங்கதன் தோளிலேற்றிக்கொண்டு இரதத்துடன் சுழன்று இடசாரிவலசாரியாக அங்கதன்தாவவும், வாயுவேகமும் அஞ் சநமது ரதவேகத்திலும் மிஞ்சவருகிறுனென்று இராவ ணன் ஒருகெதையைச்சுழற்றி அங்கதன்மார்பிலெறிய இளைய வர் அதைவெட்டிமுறிக்கமறுபடியும் ஒருவருக்கொருவர்ஓயா மல் கணைகளும் அஸ்திரங்களும் பற்பல ஆயுதங்களும் உற் பவம்போல எடுத்து விடுத்து சமர்செய்ய இலட்சுமணர் அனுமான்மீது ஆரோகணித்து அவனுடைய ஆயிரந்தே ரையும் பொடிபொடியா யுதிர்த்து நாற்பது வெள்ளஞ் சே னையையுங் கொல்ல அப்போதுசூரியன் அஸ்தமானுன். இந் திரசித்து ஒருவனுல்நின்று மாயையால் ஆகாயத்தில் ஒளித் துக்கொண்டு நாகபாசத்தைவிட அதனுல் இலட்சுமணர் முத ல்யாவருங்கட்டுபட ஸ்ரீராமர் அறிந்து துக்கித்து நாரதரால்

பூர்வக்கியானம் வந்து தமது வாகனமாகிய கருடபகவானை நினைக்க கருடபகவானறிந்துவர அப்போதேநாகபாசத்தின் கட்டறுத்து யாவருமெழுந்து ஸ்ரீராமரைவணங்கி அதிகசந்தோஷத்துடன் கர்ச்சனை செய்தார்கள். கருடனும் வைகுந்தம்போய்ச் சேர்ந்தான். இவைகளை சாரணர்களோடிவந்து இராவணனுடன் சொன்னார்கள். அவன் இத்திரசித்துடன் சொல்ல நாளைபோய் ஒரு பிர்மாஸ்திரத்தால் அடித்துக்கொன்று போடுகிறேன். இன்றைக்கு நான்போகமாட்டேன் அப்பா என்றுசொன்னான், இதைக்கேட்டு நீலன் முதலிய மகாஇராட்சதவிராசனை யேவினன் அவர்கள்வந்து வானரவீரர்களுடனே போராடி யாவருமடிந்தார்கள்.

இந்திரசித்துவிட்ட பிர்மாஸ்திரத்தால்
இலட்சுமணர்முதல் சகலருமூர்ச்சையடைதல்.

---

இந்தச் செய்திகளையெல்லாம் இந்திரசித்தன்கேட்டு அதிக கோபங்கொண்டு நான்போய் அந்த விரண்டுமெனிதர்முதலிய வானரசைனியங்களை யின்றைக்கேமுடித்துவருகிறேனென்று அறுபதுவெள்ளஞ் சேனையுடன் யுத்தகளம் வந்து வெற்றிபெற நற்போர்புரிந்து அனுமார்முதலியயாவரையும் ஜாடி வானரச்சேனைகளை நாடி இலட்சுமணரைக்கூடி சகல அஸ்திரங்களினால் மூடி இளையபெருமாள் பாணத்தால் வாடிஆகாயத்தில்மேவி இலங்கையிற்றுவி இராவணனிடம் சென்று சிலயுத்திகளைச்சொல்ல அவன் உடனே அகம்பனையும் மகோதரனையும் அழைத்து சிலசேனைகளுடன் யுத்தத்திற்குப் போவென்றனுப்ப அப்படியே அவர்கள்வந்து அனுமாருடன் பிரசண்டயுத்தம் செய்து அகம்பனிறந்தான்.

அனுமார்முதல் சகலரும் தனித்தனியாகப் போகச்செய்து இராக்காலமானதா லிளையவரிடம் போய்ச்சேர்ந்தார்கள் அக்காலையில் மகோதரனனவன் தேவேந்திரனைப்போல் வந்துசமர்விளைத்தான் இதை இலட்சுமணர்பார்த்து திகைத்து மயங்கி யிருக்கையில் இந்திரசித்தன் வந்து ஒளித்திருந்து பிரமாஸ்திரத்தைப் பிரயோகம் பண்ணிவிட்டான். ஆதலால் ஸ்ரீராமர் இலட்சுமணர்முதல் சகலரும் கீழேவிழுந்து சோர்ந்து மூர்ச்சையாய் விட்டார்கள் இந்திரசித்தனும் இராவணனிடம்போய்ச் சகலரும் மாண்டுவிட்டார்களென்று சொன்னான். அப்போது இராவணன் சிலதூதரையழைத்து ரணக்

களத்திற்போய் அவ்விடத்திலிருந்து கிடக்கும் நம்முடைய சேனைகளில் ஒருவரையாகிலும் விடாமல் எடுத்துக் கடலிற் போட்டுவிட்டு அசோகவனத்திலிருக்கும் சீதையை அழைத்துக்கொண்டுபோய் படுகளத்தைக் காண்பித்து முன்போல் அசோகவனத்தில் சீதையைவிட்டு அதிசீக்கிரமாய் எனக்குத் தெரிவியுங்களென்று சொன்னான். அப்படியே அசோகவனத்திற்சென்று சீதையம்மனைத் திரிசடையுடன் கொண்டு வந்து ஸ்ரீராமர் லட்சுமணர் முதலியவர்கள் படுகளத்தில் விழுந்து கிடக்கிறதைக்காட்டவும் அம்மன் அழுதுவாடவும், திரிசடை தேற்றி எந்தநந்தையிருக்குமளவும் சிந்தனையில்லை யென்று போற்றிப் பழயபடி அசோகவனத்தில்விட இவைகளை இராவணன்கேட்டு சந்தோஷங்கொண்டு ஸ்திரீகளுடைய ஆடல்பாடல்களைக்கேட்டு மனக்களிப்புடனிருந்தான்.

### அனுமார் சஞ்சீவி மலையைக் கோண்டுவந்து சகலரையும் மூர்ச்சை தேளிவித்தல்.

அப்படியிருக்க விபீஷர் அனுமார் சாம்புவந்தர் இம்மூவருக்கும் சிரஞ்சீவிபட்டமாகையால் விபீஷணர் மூர்ச்சைதெளிந்தெழுந்து கொள்ளிக்கட்டையைக் கையிற்றாங்கி அனுமாரைக்கண்டு பிடித்தார் அப்போது அனுமாரும் தூங்கிவிழித்தாற்போலக் கண்விழித்தார் பிறகு இவ்விருவரும் வார்த்தையாடி சாம்புவந்தரிடம் போய் அவரைக் கண்டு யோசித்து ஐம்பது லட்சம் யோசனை தூரத்திலிருக்கும் விசல்யகருணி சந்தனகருணி சவ்வானகருணி சஞ்சீவிகருணிஇவைகளிருக்கும் மலையினிடமும் வழியும் அவரால்சொல்லக் கேட்டு அனுமார் பாய்ந்து அதற்குக்காவலிருக்கும் கந்தர்வருடன் அமர்புரிந்து அம்மலையைப் பெயர்த்துக்கொண்டு யுத்தகளம்வந்து அவரவர்களுடைய தேகங்களிற் காயங்களில்லாமற்செய்து மாண்டுகிடக்கிற யாவரையும் பிழைக்கச் செய்து அனுமாரானவர் மறுபடியும் சஞ்சீவிமலையை முன்னிருந்தவிடத்தில் கொண்டுபோய் வைத்து பொழுதுவிடியுமுன் வந்துவிட்டார், அப்போது ஸ்ரீராமர் அதிக சந்தோஷத்துடனிருந்து அனுமாரைப் புகழ்ந்து வானரவீரர்களைப் பார்த்து இலங்கைக்ய அதஞ்செய்யுங்களென்று கூறினர். அதுகேட்டு வானரசேனைகள் வளைத்து இலங்கையிலே நெருப்பிட்டார்ப்பரிக்கும்போ திராவணன்கேட்டு மனங்கலங்கி இந்

நிகும்பலையாகம்.



மயில்ராவணன் ராமலட்சுமணனை எடுத்தேகுதல்.



மூலபலயுத்தம்.





சீதையக்கினிப்பிரவேசம்.



பரத்துவாஜர்விருந்திடல்.



பட்டாபிஷேகம்.

திரசித்தன் வெகுண்டு சிலசேனையுடன் வந்துஅனுமாருடைய மனதைவாட்டி ஜானகியை வாலால்சுருட்டி அயோத்திக்குப்போக்குகாட்டி ஆகாயமார்க்கமாய் நிகும்பலையாகஞ் செய்யப்போய் விட்டனன்.

நிகும்பலையாகத்தை யழித்தல்.

அப்பால் அனுமார் மிகுந்தவிசனமடைந்து ஸ்ரீராமருடன் சொல்ல, அவரும்மெய்கலங்கி திப்பிரமைகொண்டு ஒன்றுந்தோன்றுமலிருக்க இளையபெருமாளும் அப்படியே தளர்ந்து ஸ்ரீராமரைப் பார்த்துச் சிலகடுஞ்சொற்களை சொல்லினார் அப்போது சுக்ரீவன்சொல்லுகிறான். சுவாமி நாமிங்கிருந்து வருக்தப்படுவதேதுக்கு இந்தலோக மூன்றையு மழித்து சுற்றித்திரிந்து நமக்கு உதவிசெய்யாதிருந்த தேவர்களுடைய வமிசத்தையுங் கருவருத்து விடுகிறேனென்று லங்கையின்மேல் பாய்கிறதற்கு எத்தனித்தார். அப்போது ஆஞ்சனேயர் இந்திரசித்து அயோத்திக்குப்போனானென்று சொன்னார். அஃதை இராமர்கேட்டு முன்னிருந்த விசனத்தைவிட அதிகவிசனமடைய அதை அனுமார் அறிந்து சுவாமி தங்களையும் படைவீரர் முதலிய நமது சேனைசைனியங்களையும் எனது தோளிலேற்றி அயோத்தியிற்போய் குதிக்கிறேன் அந்த இந்திரசித்தை நானே வதைக்கிறேனென்று சொல்ல விபீஷணர்கேட்டு இலங்கையில் நான்போய் சகலமுமறிந்து வருகிறேனென்று ஒருவண்டாக ரூபமெடுத்து அசோகவனம் போய் அம்மனைக்கண்டு இந்திரசித்து செய்யும் நிகும்பலையாகத்தையும் பார்த்து சுவாமிமுன்வந்து அம்மன் இருக்கிறதும் சொல்லி, மேலும் அதிசீக்கிரத்தில் அழித்து இந்திரசித்தையும் கொல்லவேண்டுமென்று சொன்னார். இராமர்தம்பியை அழைத்து ஆலிங்கனஞ்செய்து சகல தருமங்களும் யுத்தமுறைகளும் கூறிவிடுக்க, இளையவர் கோபங்கொண்டு நிகும்பலையாகத்திற்சென்று அனுமார் முதலிய பேர்களால் யாகத்தையழிப்பித்து அவன் தேகமுழுமையும் அஸ்திரத்தினால் அழுத்தி அதனால் அக்கொடியன் வெகுளிகொண்டு தேரேறி இலட்சுமணருக்கு பிராணத்தியாகஞ்செய்வது நிச்சயமென்று தேறி இதோ பார் என்வீரத்திரம் பாணத்திறத்தினால் உன்னை அதஞ்செய்கிறேனென்று சீறி தூறி நாறுயி

ரம் கணைகளை வாரிமாரிபோற் பொழிந்தான் அவைகளுக்கு பதிலஸ்திர மெடுத்து இலட்சுமணர் அடுத்து கடுகடுத்து அடா இந்திரசித்தே! உனக்கும் இராவணனுக்கும் விபீஷணனைவிடுத்துக் கருமம்செய்யத் தொடுத்துவைக்கிறேன் பாரடா பாதியுத்தத்தில் ஒளியுந் திருடாவென்று சப்தமேகமும் தாரைவிடு சப்தம்போல் பாணங்களைத் தூற்றவும், இந்திரசித்து வளைத்து இரதத்திலிருந்து அம்புகளை யேற்றவும் இலட்சுமணரும் அங்கதன் தோளிலேறிக்கொண்டு அரக்கன் விட்ட அஸ்திரங்களை அறுத்தெறிந்து அவன் உடம்பெங்கும் சல்லடைக் கண்களாய்த் தொளைக்கவும் இலட்சுமணர் விடுங் கணைகளினுல் இராக்கதவீரர் ரதகஜ துரகங்கள் முதலியசேனைகள்யாவும் ஒன்ருெழியாமல் இளைக்கவும் இந்திரசித்தனுடைய கவசம் வீரபட்டம் கையில் தேர் குதிரை சாரதி முதலியவைகளழிய அஸ்திரங்களெல்லாம் பொடிப் பொடியாய்ப் படியில்விழக்கண்டு பயந்து ஆகாயத்தில் ஒளித்து இலங்கையிற்புகுந்து இராவணனைப்பணிந்து ஜானகியை விடுத்துச் சரணம் அடைவது நன்மை யில்லாவிட்டால் துன்மை, என்னுடைய மாய்கை வல்லமை பிர்மாஸ்திரம் நாகாஸ்திர முதலிய யாவும் சூரியனைக்கண்ட பனிபோலாய் விட்டன. குடத்திலிட்ட விளக்காயிற்று இனிமேல் என்னுல் சண்டைசெய்ய முடியாது ஆவது ஒன்றுமில்லை என்று சொல்லிய மகனைக்கொன்று தின்றுவிடத்தக்க கோபங்கொண்டு அண்டர்களை வென்று நீலகண்டனைக்கண்டு எண்டிசையுஞ் சென்று வென்று எமகண்டகன் என்றுபேர் கொண்டிருக்கும் சண்டப்பிரசண்ட உத்தண்டனுகிய என்னிடத்தில் கோதண்டனைக்குறித்துப் புகழ்ந்து நீ இளைத்துச் சொல்லியதை நோக்குங்கால் நீ என்குமாரனல்லன், கெட்டாய் போவென்றுவாளையுருவி வெட்டவந்தான் துஷ்டனுகிய இராவணன்.

## இந்திரசித்தன் வதை.

---

அதைக்கண்ட இந்திரசித்தன் விசனமடைந்து இவனிடத்தி லிறப்பதிலும் பட்டாபிராமனுல் மடிவது பாக்கியமென்று நினைத்து சிறுசதங்கைகள் கட்டி சப்திக்குந் தேரேறி இலட்சுமணருக்கெதிரில் வந்து நின்று இருகண்களிலும் சலம்பொழிந்து இந்திராஸ்திரம் சந்திராஸ்திரம் வாயுவாஸ்

திரம் தேயுவாஸ்திரம் முதலியவைகளையிறைக்க, இளையபெருமாளுக்குக் கோபம்அதிகரித்து எத்தனைதரம்ஓடி ஒளித்து இவனும்வருவான் என்று அர்த்தசந்திர பாணத்தைத்தொடுத்து அவன் விடுத்த அஸ்திரங்களெல்லாவற்றையு மழித்து அழகு பொருந்திய கிரீடந்தரித்த அவனது சிரத்தையும் கரகரவென்றறுத்துத் தள்ளினார். வானரப்படைகளும் அனுமார் முதலிய யாவரும் சந்தோஷங்கொள்ள யங்கதன் இலட்சுமணரைச் சுமந்துகொண்டு இந்திரசித்தன் தலையையுங் கைக்கொண்டுபோய் சுவாமியின் அடியிணையில் வைத்துப் பணிந்து நின்று மகிழ்ச்சிகொள்ள அரம்பாஸ்திரீகள் கற்பக மலரை வாரியிறைத்து மங்களம்பாட இளையபெருமாளும் பெரிய பெருமாளைப் பணிந்துபோற்ற தம்பியை மார்புடன் தழுவி மகிழ்ந்து ஸ்ரீராமரானவர் சந்தோஷங் கொண்டிருந்தார்.

அக்கணமே சாரணரோடி வந்து இராவணனைக் கண்டு இறந்தான் இந்திரசித்து என்றுகூற ஆறுத்துயரங்கொண்டு மாருக்கண்ணீர் பொழிய தேருவிசனமுற்று சிங்காதனத்திலிருந்து பூமியில் திட்டென்றுவிழுந்து மூர்ச்சைபோய்த்தேறி யெழுந்து மகனே! மகனே! என்றுகூவி ரணக்களமேவி இந்திரசித்தன் உடலைத்தாவி எடுத்துத் தனது அரண்மனையில் வந்துசேர்ந்தான். இதை மண்டோதரி யறிந்து கடகட வென்று புரண்டு ஒப்பாரி சொல்லி யழ அதைக்கேட்ட இராவணன் சீதையைக் கொல்வேனென்று வாளைக் கையிலெடுத்து அசோகவனம் போகையில் மகோதரனுனவன் பெண்களைக் கொல்லுதல் பெரியபாவம் ஆகையாலந்த இரண்டு மனிதரைக் கொன்று உன் பகையைமுடித்தால் கீர்த்தியென்று சொல்ல, அப்போதவன் கையிலிருந்தவாளை எறிந்துவிட்டு அரண்மனைவந்து ஒன்றுந் தோன்ருமல் என்ன செய்வதென்று யோசித்திருக்கும்போது மகோதரன் சொல்லுகிருன்.

கேளும் பிரதாப இலங்கேஸ்வரா உனக்கேன் மனக்கவலைபாதாள விலங்கையிலிருக்கும் உன் தம்பி மயிலிராவணனுடன் நீ ஒருவார்த்தை சொல்வேயேயானுல் அந்த மனிதரிருவரையும் நொடிப்பொழுதில் அதஞ்செய்து விடுவான் அதன்பின்னர் நீ சீதையைக்கூடிவாழலாமென்றுரைக்க, அதைக் கேட்டு மெய்தானென்று மதித்து அப்போதே மயிலிராவண

னை வரவழைத்தவனுடன் ஆதியோடந்தமாகச் சொல்ல, அவன்கேட்டு இராமலட்சுமணு ளிருவரையும் நாளை யிராத்திரி பதினைந்து நாழிகைக்கு வந்து எடுத்துப்போய் சூரிய உதயத்துக்குள் பாதாள விலங்கையிலிருக்கும் காளிகாதேவிக்குப் பலிகொடுக்கிறேனென்று உறுதி சொல்லி அரண்மனை வந்துசேர்ந்தான். இச்செய்தியை திரிசடையறிந்து வாயுபகவானுல் விபீஷணருக்குத் தெரிவிக்க அவர் இராமர் முதலிய சகலருக்குந் தெரிவித்து இதற்கெப்படி யென்றுயோசித் திருக்கும்போது சூரியன் அஸ்தமயமானுன். அப்போ தனுமார் தன் வாலினுல் கோட்டைகட்டி யதற்குள் எழுபத்திரண்டு வெள்ளம் சேனையும் இராமலட்சுமணரையும் இருக்கச் செய்து தான் மேலாகவிருந்தார். அக்கோட்டைக்கு வழி எப்படி யென்றுல்;—அனுமாருடைய வாயிற்புகுந்து செவியினிடமாகப்போகவேண்டும் மகா ஜாக்கிரதையுடன் அனுமாரிருக்கச் சுக்ரீவன் முதலியவர்களை நான்கு புறத்திலும்காவல் வைத்து விபீஷணரானவர் அக்கோட்டையைச் சுற்றிக்கொண்டிருந்தனர்.

## மயிலிராவணன் இராமலக்ஷமணுளை எடுத்தேகுதல்.

---

இப்படி யிருக்க இராத்திரி பதினைந்து நாழிகை வேளையில் பாதாள விலங்கையிலிருக்கும் மயிலிராவணனைவன் விபீஷணரைப்போல் வந்து அநுமாரே பத்திரம், பதினைந்து நாழிகையாகிறது மயிலிராவணன் என்னைப்போல் ரூபமெடுத்து வருவான் அவன் மகா மாயா விநேதி வழிவிடப் போகிறீர் என்று சொல்லி அனுமாருடைய வாயிற் பிரவேசித்து செவியினிடமாகப் புகுந்து வாயினிடமாய் வெளியில் வந்து அனுமாரே பத்திரமாக இருமென்று சொல்லி கஸ்துவருகிறவன்போல் பாதாள இலங்கையிற்போய் காளிகாதேவியினருகில் அப்பெட்டியை வைத்து தன் அரண்மனையிற் போனுன் இப்பால் விபீஷணர் அக்கோட்டையைச் சுற்றி அனுமாரிடம் வந்து ஜாக்கிரதையாயிரும் உள்ளேபோக வழிவிடுமென்று சொல்ல, இப்போது வந்து போனீரே மறுபடியும் வந்த காரண மென்னவென்று அனுமார் கேட்க, இருவரும்

ஆலோசித்து உட்சென்று பார்க்க இராமலட்சுமணரைக்கா ணாமல் விசனப்பட்டு விபீஷணரால் பாதாள இலங்கைக்குவ ழிதெரிந்து சூரிய உதயத்துக்குள் இராமலட்சுமணனையிவ்வி டம் கொண்டுவருகிறேனென்று சபதங்கூறி அனுமார் புறப் பட்டு சமுத்திரத்தின் மத்தியிலிருக்கும் தாமரைத் தண்டின் வழியாய்ப்பாதாள இலங்கைக்குப்போய் மச்சயந்த அனுமா னுடன்போர்புரிந்து முதற்கோட்டைமுதல் ஏழுகோட்டைக ளையும் அவ்விடமிருக்கு மரக்கர்களையும் அநஞ்செய்து உத்தி யானவனத்திலழுதுக் கொண்டிருக்கும் துரதண்டிகையுடன் சிலவார்த்தைகள்பேசி மர்மம்தெரிந்துகொண்டு நீலமேகனு டைய விலங்கை நீக்கி துலாயந்திரங்கடந்து இராட்சதாளை கொன்று மயிலிராவணனைக்கண் டமர்புரிந்தவனைக் கீழேதள் ளி அவன் மார்பிலொருகாலும், விந்தியாசலபருவதத்தில் ஒ ருகாலுமாகவைத்து அவ்விடமிருக்கும் ஐந்து வண்டுகளை யும் பிடித்துத் தேய்த்து மயிலிராவணனையுங் கொன்று நீல மேகனுக்குப் பட்டங்கட்டி காளிகாதேவியினிடம் வந்துஅந் தப் பெட்டியை எடுத்துக்கொண்டு பாதாள இலங்கையை வி ட்டு தாமரைத்தண்டில் வழியாய் வெளிப்பட்டு சூரியவுதயத் திற்குமுன் விபீஷணர் முதலியவரிருக்கும் கூடாரம் சேர்ந்து அந்தப் பெட்டியை வைத்து அனுமாரானவர்வணங்கி நின் ருர் உடனே பெட்டியும் மாய்கையாய் பொய்விட்டது அதன் பின் சூரியன் உதயமாஞன். இராம லட்சுமணர் இருவரும் நித்திரை தெளிந்தெழுந்து சகலமுந் தெரிந்த ஆஞ்சனேய ரைத் தழுவி மிகக்களிப்படைந் திருந்தார்கள் இந்தச் சங்கதி களைச் சாரணர்களோடி மயிலிராவணனிறந்ததையும், இராம லட்சுமணர் மற்றுமுள்ள சகரும் சுகமாக விருக்கிறதையும் சொல்ல இராவணன் கேட்டு சிந்தாக்கிரந்தனாய் மெய்ம்மறந் து பூமியில் விழுந்து மூர்ச்சை யடைந்திருக்கும் சதயத்தில் சாரணர்களால் மூலபலச் சேனைவருகிறதென்று இராவணன் கேட்டு எழுந்திருந்து கொலுவிருக்க. அப்போதுவந்த மூல பலத்தின் பெருமையைச் சொல்லக்கேட்டு மகிழ்ந்து இராம னைக் கொல்லுங்கள், வானரப்படைகளை வெல்லுங்கள் என க்கு ஐயத்தைத் தாருங்கள் இலங்கையில் என் கொடியை நா ட்டுங்கள் என்று சொல்லி யுத்தத்திற்கு விடை கொடுத்தனுப் பினன்.

## மூலபலச்சண்டை.

அப்போது ஆயிரம் வெள்ளம் சேனைகளுடன் வந்து மிகுந்த களிப்புடன் ஏழுசமுத்திரம் ஒன்றாய்த் திரண்டது போல வந்து நெருங்கி இராமர் தங்கியிருக்குமிடம் வரைக்கும் நிறைந்து யாரவன் மனிதன், ஆரவன் என்றண்டமிடியக்கூவி அகில புவனங்களையுந் தாவி நாய் நரிமுகம் பேய்முகம் கழுகு கழுதைமுகம் கரடிமுகம் புலிமுகம் இப்படி பல முகங்களும் விவகாரரூபங்களும் உடைத்தாய் விளக்கை விட்டிற் பூச்சிகள் வளைந்ததைப்போலும் பாம்பைத் தேரைகள் சூழ்ந்தன போலும் சூரியனைப் பனிமறைத்ததைப் போலும் வந்து வளைந்துக்கொண்டு சகலவித ஆயுதம் அஸ்திர சஸ்திரம் அம்பு கணை வில் வாள் கதை முதலியவற்றைக் கொண்டுமோதவும், வானரப்படைகள் காதவழி கடலைக் கடந்து ஓடவும், அனுமார் சாம்புவந்தவர் முதலியோரைத் தேற்றி அவர்கள் பயம் ஆற்றி திரும்பவும் பெரும்புறக்கடலை வுருஞ்சி குடித்து யேப்பமிட்டு வந்தெதிர்த்த சேனைகளை ஸ்ரீராமர் கண்டு விஜயகோதண்டத்தைக் கரத்திற் கொண்டு நாணியேற்றி குணத்தொனிகாட்டி சரமாரி பொழிந்து நான்கு திசை சேனைகளையும் பம்பரம்போலாட்டி பூமி முழுமையும் இரத்த வெள்ளங்காட்டி புரண்டழியமாட்டி போக்கிய சேனைகள் போக மீதிமேலிட்டு வரும்படைகளை மோகனுஸ்திரந்தொடுத்து எங்கும் இராமனாக நின்று நிலத்தோடு மடித்து வெறுங்களமாக்க அப்போது பூதப்பிரேத பைசாசங்கள் தின்றுகொழுத்துச் செயங்கொண்டாடின.

## இராவணனுக்கும் இலட்சுமணருக்கும் யுத்தம்.

இஃதிப்படியிருக்க இராவணனனவன் மூலபலச்சேனையை அனுப்பி விட்டு தேரிலேரி அனேகஞ் சேனைகளுடன் புறப்பட்டு இலட்சுமணருடன் வந்தெதிர்த்து பிரசண்டயுத்தம் செய்கையில் விபீஷண வந்தெதிர்க்க இராவணன் வேலாயுதத்தை விடுக்க இளையவர் கண்டு விபீஷணரைத் தள்ளி விலக்க அந்த வேலானது இளையவர் மார்பில் தாக்ககீழ் விழுந்து மூர்ச்சையடைந்தார் ராவணன் கெலித்தோமென்று இலங்கையிற் போய்ச் சேர்ந்தான். அப்போது அனுமார்

முன்போல சஞ்சீவி மலையைக் கொண்டுவந்து இளையவர் முதலிய சகலரையு மெழுப்பி ராமர் முன்சென்று சங்கதிகளைச் சொல்ல, ராமர் சந்தோஷங்கொண்டு சிரஞ்சீவியா யிருக்கக் கடவையென்று அநுமாரை ஆசீர்வதித்தார். விபீஷணரானவர் சுக்ரீவன் முதலிய யாவர்களுக்கும் மூலபலப்படுகளத்தைக்காண்பித்து மனவுச்சாகத்துட னிருந்தார்கள். இவைகளை தூதர்கள் பார்த்து இராவணனுடன்சொல்ல அதைக்கேட்டுமெய்ம்மறந்திருக்க மாலியவானனவன் இராமரைப்புகழ்ந்து இராவணனுடன் புண்ணில் கோலிட்டாப்போல சில வார்த்தைகள் சொல்ல, அதைக்கேட்டு தூதர்சொன்னதும் நீசொல்வதும் மெய்யென்று அறிய வேண்டுமென்று வடக்குக் கோபுரமேறிப் பார்த்து பிரம்மை கொண்டு கீழேயிறங்கிதுடிதுடித்து நகைத்து கிரீடஞ்சூட்டி மாலைதரித்து குண்டலமணிந்து அரைப்பட்டையைக் கட்டி ஆடைதரித்து வீரகண்டையை வீக்கி விதவிதமாகிய ஆயுதம் யாவுமமைத்துசந்தன புட்பம் சவ்வாது மணிந்து யுத்தகோலத்தை யடைய அதைக்கண்டு மண்டோதரியானவள் சொல்லுகிறாள்.

## இராவணனுக்கு மண்டோதரி புத்தி சொல்லுதல்.

கேளும் என்பிராண நாயகா! அந்த இராமலட்சுமணனை நீ ஒருக்காலும் செயிக்கப்போகிறதுமில்லை, அவர்கள் உன்னை விடப்போகிறது மில்லை ஆகையால் சீதையைக்கொண்டுபோய் விட்டுவிட்டால் நாம் சுகமாயிருக்கலாமென்று சொல்ல, அதைக்கேட்டு இராவணன் சஞ்சலமடைந்து எனது தம்பி கும்பகர்ணனையும் இந்திரசித்து முதல் சகலரையுங் கொன்றார்கள், அவர்களைவிட என்பிராணன் பெரிதோ, இதோ நான்போய் அவர்களைக் கொன்று வருகிறேன், அப்படியல்லாமல் அவர்கள் பாணத்தால் நான்மடிந்து போனால் நீ சும்மாயிருக்கவேண்டாம் அந்த சீதையை வாளினால் வீசிப்போடு நீயும் என்னுடன் கூட அக்கினிப் பிரவேசமாய் விடென்று சொல்ல, அதைக்கேட்டு சொல்லுகிறாள். மகா விஷ்ணுவானவர் மச்சக்கூர்ம வராக நரசிம்ம வாமன பரசுராமர் என்னும் ஆறு அவதாரமெடுத்து துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்து எழாவது திரிலோக கண்டனாகிய உம்மைக் கொல்லும் பொருட்டு தசரதருக்கு இராமாவதாரமாகப் பிற

ந்து விசுவாமித்திரருடைய யாகத்தை முடித்து மிதிலையில்
சனகனுடைய வீட்டிலிருக்கும் காளகண்டனுடைய வில்லை
யொடித்து ஜானகியை மணம்புரிந்து பரசுராமனைப் பங்கப்
படுத்தி பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்யும் பொருட்டு சீதா
லட்சுமணர் சமேதராய் தண்டகாரணியம் வந்து உனது தங்
கையின் மூக்கு முதலியவைகளைக் கொய்து கரதூஷணர் மா
ரீசன் முதலிய இராக்கதரை வதைத்து கிஷ்கிந்தையில் வா
லியைக் கொன்று சுக்ரீவனுக்குப் பட்டங்கட்டி அநுமாரால்
இலங்கையில் சீதையின் இருப்பிடத்தைத் தெரிந்து வானரச்
சேனையுடன் சமுத்திரமணைகட்டி இலங்கையைவளைத்து அர
க்கர் குலத்தை அதஞ்செய்து உன்னையு மடித்து இந்த இல
ங்கையை விபீஷணனுக்குப் பட்டந் தரிக்க நிச்சயித் திருக்கி
ருர்கள். எனக்கும் எனது தகப்பனுகிய மயனென்பவன் சா
கா வரமும் நோயில்லா வாழ்வும் கொடுத்திருக்கிருர். ஆகை
யால் சீதையம்மனை இராமரிடம் விட்டு நாம் தவம் செய்வோ
மேயானல் நமக்கு முத்திகிடைக்கு மென்று சொல்ல, அதை
க்கேட்டு நான்குதிக்கும் விஜயஞ்செய்து ரிஷிகள் தேவர்கள்
முதலிய திரிமூர்த்திகளையுஞ் செயித்து இப்போது இரண்டும
னிதருக்குப் பயந்து மூச்சைப் பிடித்துத் தவஞ்செய்தால் ரிஷி
கள் தேவர்கள்முதலியவரும் நகையார்களா! அதைவிடபோ
ர்புரிந்து இராமபாணத்தா லிறந்தால் நன்மை, மேலு
ம் நான் ஒரு ரகசியஞ் சொல்லுகிறேன் அஃதென்ன வெ
னில், ஸ்ரீமந்நாராயணனே ஸ்ரீராமனுகப்பிறந்தாரென்றும்மகா
லட்சுமியே சீதையாகப் பிறந்தாளென்றும், இந்தச்சீதையை
நானெடுத்துவர ஸ்ரீராமர்பாணத்தால் நான் இறந்து சாயுச்சி
யமாக வைகுந்தபதவியை நான் அடைவேனென்றும் அறி
வேன். ஆகையால் நீ சூரியனில்லாத தாமரைப்போலவும்,
அமங்கல ஸ்திரீயாய் இருக்கக் கடவதென்று சொல்ல, அ
தைக்கேட்டு மண்டோதரியானவள் தலைகுனிந்து நிற்க இ
ராவணனுனவன் அவ்விடம் விட்டு வெளியில் வந்து அந்
தரத்தேர்கள் அலங்கரித்துத்தர மகோதரன் முதல் அரக்கர்
சேனையாவும் நெருங்க குடை கொடி குஞ்சம் சாமரை முத
லிய விருதுகள் பறக்க, டமாரங் காகளம் பூரி கர்ணு சின்னம்
உடுக்கை பம்பை முதலிய வாத்திய முழங்க, பாதாளம்நடுங்க
மீதலம் ஒடுங்க, அண்டமளாவிய தேரிலேறி ராமனை யின்றே
யழித்து சீதையைக் கொண்டுவாழ்ந்திருப்பே னென்று சம

ர்க்களம்புக எரிகொள்ளிக்கட்டை தேரின்மேல்விழ இரத்த மழைபொழிய நாய் நரி ஊளையிட காரியமில்லை யென்று கண்கள் சிவந்து வீரியமாக யுத்தகளம் போனான். வீணைக் கொடி விண்டலம் அளாவ காண்போரெல்லாங் காலனென் றோட ராமர்முதலிய வானரவீரர்கள் யாவருங் கண்டு மகி ழ்ந்து கண்களிகூரக் கண்டனன். இவ்விதமாக இராவணன் தேரின்மேலிருக்க சுவாமி பூமியில் நின்று யுத்தம் செய்வது நன்றல்லவென்று அண்டர் நாயகன்கண்டு திருத்தேர் கொ ண்டுவரும்படி மாதலியாரும் சாரதிக்குச் சொல்ல அதிவேக மாக அவன் கொண்டுவந்த திருத்தேரின்மீது கோதண்ட பாணியானவர் ஏறிக் கோதண்டம் தாங்கி படைத்தலைவர்க ளுடன் வானரச் சேனைகள் இருபக்கத்திலும்சூழ, இளையபெ ருமாளும் அங்கதன் தோளின்மீதேறி எங்கும் உலாவிய அர க்கர்சேனைகளை அழைத்துக்கொண்டுவர குரங்குப்படைகள் குலாவிமகிழ ஸ்ரீராமரும் மாதலியை எச்சரித்து மகோதரனெ திரில் வந்து வளைத்து யுத்தம்புரிய இராமபாணத்தால் அவ னுடைய பெருவயிறு சரிந்து எமபுரஞ்சேர்ந்தான்.

## ஸ்ரீராமருக்கும் இராவணனுக்கும் கடைசிநாள் யுத்தம்.

---

அதன்பின்பு ஸ்ரீராமரும் இராவணனும் அதிககோபத் துடன் கண்கள்சிவந்து வில்லைவளைத்து குணத்தொனிகாட் டிகுயவன் திகிரிபோற் குறைவறச்சுழன்று இருவரும் பகை யோயாமல் சரங்களையெய்தனர் இராவணன் ஏவிய கணைகளை யெல்லாம் சுழல்காற்றிலகப்பட்ட துரும்புபோலழிந்துபறக்க அரக்கர்சேனைகளெல்லாம் கார்வண்ணன் கணையால் கருதி இறக்க அதைக்கண்ட இராவணன் மீசைகள் துடிக்க அளவி றந்த அஸ்திரங்களைப் பொழிந்தான். ஸ்ரீராமர் கலகலவென் று நகைத்து அநேகபாணங்களைப் பிரயோகஞ்செய்தார். இரு திரத்தவரும் ஆக்கிரமத்துடன் பராக்கிரமத்தைக்காட்டி யுத் தஞ்செய்யும்போது இராவணனனவன்மறைந்துபோய். இற ந்தவர்பிழைக்குந் தன்மையை நாடி மாயமந்திரத்தைசெபிக்க விபீஷணனறிந்து ஸ்ரீராமருடன் சொல்லக்கேட்டு ஞானஸ் திரத்தைப் பிரயோகஞ்செய்யவும் நெருப்பில் விழுந்த பஞ்சு போலமாயரூபங்கள் யாவுமடிந்து இராவணனுக்கு கோபம்

பிறந்து இராமருக்கெதிரில்வந்து மழுகொழு சக்கரம் முஷ்கரம் வேல்வாள்முதலிய திவ்வியாஸ்திரங்களையும் பலமாகிய ஆயுதங்களையும் வாரிவாரி ஆரியன்மீ திறைக்கவும் கோடிபாணங்களால் அவைகளைக் குறைக்கவும் இராவணன்தன்காலத்தைத்தானறிந்துகொண்டு ஒருவேலையெடுத்து சந்தித்து ஓ மனிதர்களே நீங்கள்மடிந்தீர்கள் ஐயோபாவம் இந்தவிடமா உங்களுக்கு விதித்திருந்ததென்று விடுத்தான். அந்தவேலானதுமகாமகிமையுடனேவருவதை ரகுநாதன்கண்டு க்ஞாவென்று ஓங்காரமிட்டார். அந்தசப்தத்தினால் அந்தவேலானது பொடிப் பொடியாய்ப் போய்விட்டது. இப்படியனேகநேரம் போராடி பிறகுராமரானவர் இராவணனைநோக்கி அடா அரக்கனே, இப்பவும் நானொரஸ்திரம் விடுகிறேனென்று ஒருபிர்மாஸ்திரத்தை யெடுத்து மந்திரவணக்கத்துடன் உந்திவிடவும், அந்தரத்தமரரியாவருமகிழ்ந்து இராவணனுடைய பத்துத்தலைகளையும் அறுத்துத்தள்ள உடனே சிரங்கள் முளைக்கவும் மறுபடியு மறுத்துத்தள்ளி திரும்பி முளைக்கவும் அப்போது ராமர் விபீஷணர்முகத்தைப் பார்த்தவுடனே அமுதம் உண்டவனென்று விளம்பி ராமரானவர் இராமனுடைய நாபிஸ்தானம்நோக்கி பிர்மாஸ்திரத்தை அன்புடன் விடுக்க உகாந்த காலத்து உருத்திரனைப்போல்வந்துவிழுந்து அமுர்த கல்சத்தைமாற்றி சிரங்களைச்சிதைத்து தேவர் கொண்டாட பாற்சமுத்திரம்போய்ப் படிந்து அம்புறுத்தூணியில் வந்தடங்கியிருந்தது.

இராவணனிறந்து பூமியில்விழவே ஆகாயவீதியில் அமரர்யாவரும் அரம்பாஸ்திரீகளும் வேதவேதியர்மிகுந்த தவத்தோர்கள்யாவரும் புகழ்ந்து மலர்மாரிபொழிந்து வாழ்த்தி மங்களலாலிகூறி அடங்காமகிழ்ச்சிகொண்டு நாமிப்பொழுது சுகப்பட்டோமென்று இந்திரன் புளகமுற்று ராமரைத் துதித்தான். அனுமார் முதலிய வானரவீரர்கள் யாவருங் களித்தார்கள், விபீஷணன் முகம் தளர்வுடனிருக்கக்கண்டு தாஞடாவிட்டாலும் தன்சதையாடுமென்னும் பழமொழி யிகத்தினில் வழங்கும் ஆனதால் நீர்போய் அடக்கஞ்செய்து வாருமென்று வானரச்சேனையுடனனுப்பித் தானுந்தம்பியுஞ் சுக்ரீவனைப்பார்த்து துன்பமுற இச்செய்தியை மண்டோதரிகேட்டு இராக்ஷதஸ்திரீகளுடன்யுத்தகளம்வந்து இராவணன்மேல் விழுந்தழுதுசோரவிபீஷணன் அண்ணனுக்குச் செ

ய்யுஞ் சடங்குகளைச்செய்து விட்டு அப்பாண்டரங்கன் அடியி ணைத்தொழுதான்.

## விபீஷணருக்குப் பட்டங்கட்டுதல்.

ஸ்ரீராமர் இளையபெருமாளைப்பார்த்து, தம்பி அந்தவிபீ ஷணனுக்கு இலங்கையைப் பட்டாபிஷேகஞ் செய்யென, அப்படியேசென்று மிகுந்திருந்த அரக்கர்களையும் வைத்துக் கொண்டு சம்பிரமத்துடனே இலங்கையை விபீஷணருக்குப் பட்டாபிஷேகஞ்செய்துவைக்க, அதைபெற்று மனமகிழ்ந்து ராமருடைய மலரடியில்வணங்கி ஆசிபெற்றிருந்தார்.

## சீதையம்மன் ஸ்ரீராமரிடம்வந்து சந்தேகம்தீர அக்கினியில் மூழ்கி வருதல்.

அந்தவேளையில் விபீஷணர் அனுமார் அங்கதன் சாம்புவந்தர் முதலியபேரும் தாயாரிருக்கும் அசோகவனம் வந்துசெயங்கூறி சுபசோபனம்பாடி தாயார் பாதங்களை தங்கள் முடியாகச் சூடி இராமருடைய செயத்தைப் புகழ்ந்துசுவாமியின் உத்தரவின்படி தரிசனத்திற் கெழுந்தருள வேண்டுமென்று வணங்கிச் சொல்ல, அந்தச்சொல்லை சீதாதேவியார் தேவாமிர்தம்போற் கேட்டு அவ்விடம் விட்டெழுந்து திரிசடையுடனே இராமர் பாதங்களில் தெண்டனிட்டுச் சமீபத்தில் நிற்க, அதைக்கண்டு தேவதேவன் சீதையைப்பார்த்துச் சொல்லுகிறார். ஒரு அரக்கன் தொட்டெடுத்துப்போய் பத்து மாதஞ் சிறையில் வைக்கவும், பிராணனுடனிருந்து நம்மிடத்திற்கு நீ வரவும், நாமங்கீகரிக்கவும், உலகம் பழிக்கவும், என்னுடல் நடுங்கி இலச்சைப்படவும், இச்சைப்பட்டு யுத்தம் செய்து என்னை மீட்கவந்த நாங்களல்ல, எங்களையா ஜடாயுவைக் கொன்ற பழியை முடித்துக்கொள்ள வந்து வெற்றி கொண்டோமேயன்றி மறுவில்லாச் சூரியகுலத்திற்கு வடுவு தேடிக்கொள்ளவந்த நாங்களல்ல, ஆகையால் மாசற்றவனென்னும் வாகையைத் தெரிவித்தால் உன்னை ஒப்புக்கொள்ளலாகுமென்று சொல்லிய இறைவன் மொழியைக்கேட்டு பக்கத்திலொருவரு மொன்றுஞ் சொல்லாதிருப்பதைப் பார்த்து அம்மன் சொல்லுகிறாள். சுவாமீ! அரக்கன் வஞ்சித்தென்னை யபகரித்தான் அவனும் புத்திரமித்திர களத்திராதிகளு

டன் தேவரீருடைய பாணத்தாலிறந்தபிற்பாடு சரீரத்தை விட்டுவிடுவது தருமம் ஆதலால் இப்போதவனிறக்கக் கண்டேன் இனிமேல் நான்பிறந்த குலத்திற்குப் பெருமை யுண்டாகும்படியாய் அக்கினி பிரவேசமாகிறேனென்று நமஸ்கரித்துத் திரும்பி அங்கதன் அனுமார் சுக்ரீவன் விபீஷணன் இவர்களைப் பார்த்து அருள்புரிந்து இளைய பெருமாளை நோக்கி என்வினை வசத்தா லும்மையிகழ்ந்து பேசினேன் அந்தக் குற்றத்தை மனதில் வைக்காமல் அக்கினிவிர்த்தி பண்ணிக் கொடுக்கவேண்டுமென்று கேட்க அண்ணனுடைய மனதறிந்த தம்பியானவர்ஒருநொடிப்பொழுதில் அக்கினியை வளர்க்கவும், வைதேகியார் அந்த அக்கினியைப் பிரதட்சணம் பண்ணி எனது வாக்கினுலும் மனத்தினுலும் சகாயத்தினுலும் குற்றங்க ளுண்டாயிருக்குமாகில் என்சரீரத்தை கொளுத்தி சாம்பலாக்கக் கடவதென்று இரவிகுல புங்கவனை இருதயத்தில் சிந்தனை செய்து அன்னமானது செந்தாமரைத் தடாகத்தில் இறங்குந் தன்மைபோல் அக்கினியிற்பாய அக்கினிதேவன் குளிர்ந்து தாயாரைக் கரத்திலேந்தி ஸ்ரீராமமூர்த்தியை வணங்கி சுவாமீ! உலகத்தி லுள்ள யாவற்றையுஞ் சுடுகின்ற என்னை இந்தக்கற்பின் சுவாலை சுடுகின்றது என்று வைத்து வணங்க, மகாலட்சுமியைக் கண்டு இராமரும் இலட்சுமணரும் மனமகிழ்ந்து விசனப்பட்ட வானரவீரர் முதலியபேரும் புளகாங்கிதங் கொள்ள பிரமதேவன் முதலிய தேவர்களும் இருடிகளும் ஸ்ரீராமரைக்கண்டு அவர்களுடைய விரப்பிரதாபங்களை வாழ்த்திப் புகழ்ந்து தாயாருடைய எண்ணமும் பதிவிரதா பக்தியையும் தெரிவித்து தசரத தரிசனமுஞ்செய்து வைத்து அயோத்தியாபுரிக்குப்போய் பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு சீதாலட்சுமண பரதசத்துருக்கர் அனுமசமேத ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியும் வாழக்கடவ தென்று வாழ்த்தி உமக்குவேண்டிய வரங்களைக் கேட்டால் தருகிறோமென்று சொல்ல, அதைக்கேட்டு ஸ்ரீராமர் சொல்லுகிறார். என்னுடன்வந்த எழுபத்திரண்டு வெள்ளம் வானரப் படைகளும் பதினெட்டுப் படைத்தலைவர்களும் யாதொரு குறைவில்லாமலிருக்க வேண்டுமென்றுகேட்க, அப்படியே அருள் புரிந்து தங்கள் தங்கள் இடம்போய்ச் சேர்ந்தார்கள். மாதலியும் திருத்தேரைக்கொண்டு போனன் இப்பா லிராமர் ஜானகியை நோக்கி ஆலிங்கனஞ்செய்துக் கொண்டு உன்னு

டைய பதிவிரதா தருமம்யாவருக்குந் தெரியும்படிச் செய்த தே அல்லது வேறல்லவென்று சந்தோஷித்துத் தானும் படைவீரர்களும் அகமகிழ்ந்திருந்தார்கள்.

ஸ்ரீராமர் முதலியவர்களும் இலங்கையைவிட்டு பரத்துவாசர் ஆசிர்மம் வருதல்.

இப்படி யிருக்க ஸ்ரீராமமூர்த்தியானவர் விபீஷணரைப் பார்த்துச் சொல்லுகிறார். நாம் அயோத்தியைவிட்டு வனம் வரும்போது என் தம்பி பரதனுக்குப் பதினாலுவருஷங் கழித்து தசமியன்று வருகிறேனென்று சொல்லி நான் வந்தபடியால் நாம்சென்றவனைப் பார்க்கவேண்டியதென்று சொல்ல உடனே விபீஷணர் புஷ்பகவிமானத்தைக் கொண்டு வந்து வைக்க அதில் யாவர்களு மேறிக்கொண்டு மந்திரத்தை ஜெபிக்க க்ஷணப்பொழுதிலிலங்கைப்பட்டண முழுமையுஞ் சுற்றிவர அப்போது ஸ்ரீராமர் சீதையம்மனுக்கு இலங்கையின் விநோதங்களைக் காண்பித்து திருவணையைத்தாண்டி கிஷ்கிந்தைக்குவந்து தாரைமுதலாகியவர்களை யழைத்துக்கொண்டு கம்பாநதி சடாயுவிறந்த இடம் அகஸ்தியர் ஆசிர்மம் பஞ்சவடிதீரம் யாவற்றையும் காண்பித்து பரத்துவாசர்ஆசிர்மத்திலிறங்கிப்போசனத்திற்கு ஒப்புக்கொண்டிருக்க,ஸ்ரீராமர் அனுமாரையனுப்பி குகப்பெருமானையும் பரத சத்துருக்கர்களையுங் கண்டு என்வருதலையுஞ் சொல்லி வரக்கடவையென் றனுப்பினர்.

அனுமார் பரதமகாராஜனுக்கு ஸ்ரீராமர் வருதலை யுரைத்தல்.

அப்போ தனுமாரானவர் ஸ்ரீராமஜெயமென் றந்தரத்தி லெழும்பி கங்கைக்கரையில் வந்தோரிடத்தில் பந்துக்களுடனிருந்து இராமரைக்காணேமென்றுகங்கையில் ஓடத்தைக் கவிழ்க்கப்போகிற குகப்பெருமானுக்கு இராமரிதோ பரத்துவாசர் ஆசிர்மத்தில் வந்தாரென்று சஞ்சீவி மருந்து உதயத்தைப்போல் குகப்பெருமானை நிலைநிறுத்தி விட்டு நந்திக்கிராமத்துக்கு வரும்போது கொசலை முதலிய தாய்மார்களும் பட்டினத்து சனங்களெல்லோரும் விசனப்பட அக்கினியை வளர்த்தி பரதமகாராசன் மூன்றுவது சுற்றில்விழப்போகுஞ் சமயத்தில் வந்தான் இராமரென்று வானத்திலிருந்து மழை

போற்குதித்து அக்கினியை யவிழ்த்து அருள்மொழி கொடுத்து இராமர் அயோத்தி நீங்கி ஆரணியஞ்சேர்ந்து சூர்ப்பனகையை மூக்கு முலையை யறுத்து, கரதூஷணரைக் காய்ந்து, மாயமானைக் கொன்று, இராவணன் சீதையைக் கொண்டுபோனபின் கிஷ்கிந்தைக்கு வந்து வாலியைக் கொன்று சுக்ரீவனுக்குப் பட்டந்தரித்து, வானர வெள்ளங்களுடன் கடலில் திருவணைக் கட்டி இலங்கையிற்சென்று இராவணன் முதல் யாவரையுங்கொன்று, சீதையம்மனுடன் பரத்துவாசருடைய ஆசிர்மத்தில் வந்திருக்கிறார். நான் இராமதூதன் என்பெயரனுமான் என்று விளம்பி யெழுந்து கிளம்பி ஆசிர்மத்திற்குவந்து இராமருக் குரைத்து யாவருடனும் சம்பந்தியிலிருந்து இராமருடைய பரிகலம்வாங்கிப் புசித்து பின்பு இராமர் இருஷிகள் முதலியபேர்களை நோக்கி உங்க ளாசிர்வசனத்தினலும் இந்த அனுமாருடைய பேருதவியாலும் இராவணசங்காரஞ் செய்தேனென் புகழ்ந்து வாழ்த்த எல்லவரு மகிழ்ந்து ஆசிர்வதித்தார்கள். அன்றவ்விடத்தி லிருந்து மறுநாட்காலமே புட்பவிமானத்தி லேறிவருகையில் குகனையு மழைத்துக்கொண்டு அயோத்தியாபுரி பட்டணம் வந்து சனங்கள் குதூகலிக்க சேர்ந்தார்கள்.

## ஸ்ரீராமர் பட்டாபிஷேகம்.

---

பரதன் சத்துருக்கன் மந்திரிமார்கள் பட்டினத்துச் சனங்கள் ஜனகன்முதலியபேர்களும் கோசல கேகய தேசாதிபர்கள்முதலிய சகலதேசத்தரசர்களும் வந்து நெருங்கிவணங்க, வசிஷ்டாதிமுதலிய மகாமுனிவர்களுக்கும் தாய்மார்களுக்கும் தானும் தம்பியுஞ் சீதையும் வணங்கிச் சகல செய்திகளையும் சம்பிரமாகப் பேசிக்கொண்டிருந்து எல்லோருக்கும் விடுதியமைத்தி யாவருமிருக்க எழுபத்திரண்டுவெள்ளம்வானரச்சேனைகளும் படைத்தலைவர்களும் நிரைந்திருக்க எந்தலோகமும் இந்தலோகத்திற்கு ஈடில்லையென்று எவாகளும்புகழ ஸ்ரீமந்நாராயணனுடையகர்ப்பம்போல நலம்பெற இருக்க, வசிஷ்டர்முதலியமகாமுனிவரும் தாய்மார்முதலிய தம்பிமார்களும் மந்திரிமார்களும் மண்டலமுழுமையும் எண்டிசைப்பாலரும் அண்டரும்யாவரும் தொண்டர்கள்பலரும் கண்டுகளிக்க விண்முடி சூட்ட இன்றுநாள் நன்றெனக்கூறி வதிஷ்டர் தம்பி

யருடனே சடைமுடிகளைந்து அம்புவியாள அணிமுடி தரிக்க புண்ணிய திர்த்தம் புநிதமாய் மூழ்கி மண்ணில் வேதியர் வாழ்த்தி அக்ஷதைகள் எண்ணிலாதளிக்க எவர்களுங் களிக்க மந்திரி ஓமாக்கினி முதலியன வளர்த்தி சுந்தரன் றன்னைத் துலங்க அணிய சீதாசமேத ஸ்ரீராமரெழுந்து சிங்காதனத்தில் ஜெயமுடனிருக்க எங்கோன் வதிஷ்டர் எடுத்தணி முடியை தினந்தோறும் வாழ்க, சத்தியமாக மன்னுயிரைவையும் தன்னுயிர்போல் காத்திரட்சிக்கக் கடனுனக்கென்றே மங்களவோசை மழையென முழங்க, தருமந்தழைக்க, தானம் ஓங்க வரிசையாய் அரசர்வாரி யிறைகொடுக்க, மந்திரிமார்களும் மனுமுறைகூற, பகைவரின்றித் தொகையிலாச் செல்வம் நாளுக்குநாள் அபிவிர்த்தியாக பாளையோதியாம் பாவை சானகியும் பரதசத்துருக்கர் இலட்சுமணருட னியாவருங் களிக்க அயோத்தியை ஆண்டனன் காயாம்பு மேனியன் களங்கரகிதன் இரவிகுலத்துங்கன் ஸ்ரீராமன் என்று இச்சரித்திரத்தை இயம்பினோர் கேட்டோர் நிச்சயமாக நினைத்துத் துதித்தோர் எழுதினோர் ஒருவருக்கின்பமாய்ச் சொன்னோர் யாவருங் களித்து இம்மைப்பயனை யடைந்து இன்பத்துடன் வாழ்ந்து மறுமையில் ஐயன்பதமடைந்து பேரின்பமடைவார்கள்.

உயுத்தகாண்டம் முற்றிற்று.

---

ஏழாவது,

## உத்தர காண்டம்.

---

காப்பு.

வெள்ளியங்கிரியைமீதே வேரொடுமெடுத்தவீரக்
கள்ளவன்புயநாலைந்துங் கனகமாமவுலிபத்தும்
துள்ளியம்புவிமேல்வீழ வொருகணைதொடுத்துவிட்ட
வள்ளலம்பயமேயன்ன மலரடிவணக்கஞ்செய்வாம்.

### குபேரன்கதை.

பூலோகத்தில் சுவர்க்கலோகம்போல் விளங்கும் அயோத்தியாபுரி பட்டணத்தில் தேவேந்திரன் சபையைப் பார்க்கிலும் அதிக சிங்காரம் பொருந்திய கொலுமண்டபத்தி னடுவில் ஸ்ரீராமரானவர் ஸ்ரீமகாலட்சுமியாக சீதாதேவி சமேத

குபேரன்சபை.　　ராவணன்கலியாணம்.　　ராவணன் கயிலாயம்போகுதல்.



இந்திரன் கட்டுப்படல்.　　கார்த்திகை வீரார்ச்சுனனால ராவணன கட்டுப்படல.　　வாலிவாலாலராவணன் சட்டுப்படல்.

ராய் சிங்காசனத்தின் மேவி வதிஷ்டர் முதலான மகரிஷிகளு
ம் தேவேந்திரன் முதலான சகலதேவர்களும் வேதப்பிராம
ணர் முதலிய சகலரும் நிறைந்திருக்கவும், அங்க வங்க கலி
ங்க காஷ்மீர மகத குகத மாளவசாளுவ மச்சர குச்சர கேகய
கோசர காம்போஜ விதர்ப்ப பாண்டிய பாஞ்சாலசிந்து சௌ
ராஷ்டர கொங்கண நேபாள மராட கர்னடக முதலான தே
சராஜாக்கள் வணங்கவும், பதினெட்டுவகை வாத்தியங்கள்
முழங்க, இன்னம் அனேக சம்பிரமத்துடன் கொலுவாக வி
ருக்குஞ் சமயத்தில், ஸ்ரீராமர் சமதக்கினிமுதலான மகாயோ
கிகளைப்பார்த்து தேவரீருடைய ஆச்சிரமங்களும் யாகசாலை
முதலானவைகளும் சுகமோவென்று கேட்டார். அப்படி
கேட்ட இராமரைப்பார்த்து மகாசந்தோஷமடைந்து சொ
ல்லத்தொடங்கினர்கள். கேட்பீர் ஏ! ராகவா சகல லோகங்
களும் நசிக்கும்படியாய் மிக வுபத்திரவந்தன் துஷ்ணன் கு
ம்ப னிகும்பன் அகம்பன் மகோதரன் மகாபாரிசுவன் தும்பி
ராட்சதன் விருபாட்சதன் விருபாட்ச னதிகாயன் பிரகஸ்தன்
கும்பகர்ணன் முதலானவர்களும் சேனதிபதிகளும் இராட்
சதசேனையும் மூலபலமும் தசக்கிரீவனும் யுத்தகளத்திலே
மடிந்து வெற்றிபெற்று வாகைமாலைசூடிய கோதண்ட பா
ணியாகிய தேவரீரும் இந்திரனை மாயாபாசத்தினற் கட்டிச்
சிறையில்வைத்து இந்திரசித்தை சங்கரித்து வெற்றிபெற்ற
இலட்சுமணரு மிருக்க உங்களுக்கொரு குறையுண்டாகுமோ!
வென்று சொல்லி வாழ்த்தினர்கள். அவ்வண்ணஞ் சொல்
லிய ரிஷிகளை நோக்கி இராகவர் சொல்லுகிறார். தசக்கிரீவ
ன் கும்பகர்ணன் இந்திரசித்து முதலியவர்களுடைய உற்பத்
தியும் அவர்கள்பெற்ற வரமும் இராட்சதர்களுடைய உற்
பத்தி காரணமும் நன்ருய்த் தெரிவிக்க வேண்டுமென்று கே
ட்க இருஷிகளெல்லாம் அகஸ்தியரைப் பார்த்து நீர் சொல்
லுமென்று சொல்ல ஸ்ரீராமரைப் பார்த்து அகஸ்திய முனி
வர் சொல்லத் தொடங்கினர்.

கேளும் ரகுநந்தனு மகாவிஷ்ணுவினுடைய நாபிக் கம
லத்திலேஅவதரித்தசதுர்முகனுகியபிரமதேவர்புத்திரராகியபு
லத்திய பிரமனனவர் திணபிந்து மகாரிஷியின் புத்திரியாகிய
குணவதியை மணம்புரிந்து விச்சரவாவென்பவர் பாரத்து
வாசர் புத்திரியாகிய தேவவள்ளியென்னும் கன்னிகையை
விவாகஞ்செய்து வைச்சிரவணனென்னும் புத்திரனைப் பெற்

ரூர் அப்புத்திரன் பதினாறு வயதுக்குள் சகல கலைக்கியானங்களும் ஓதியுணர்ந்துதபோதவனத்திற் சென்று பிரமதேவரை நோக்கித் தபசு செய்து திக்குப்பாலகருடன் தான் ஒருதிக்குப் பாலகனாகவும் நவநிதிக்கதிபதியாகவும் வரம்பெற்று நினைத்த இடங்களெங்கும் போய் மீண்டு வருவதற்குப் புஷ்பக விமானமும் பெற்று வைச்சிரவணனாகிய குபேரன் பிதாவாகியவிச்சிரவாவினிடம் வந்து அவரா லிலங்கை சேர்ந்து சகல தேவர்கள் தன்னை வணங்கும்படியாய் செல்வச்சிறப்புடன் வாழ்ந்திருந்தான்.

## அசுரர்கள் உற்பத்தி வரலாறு.

கேளும் ஸ்ரீராமரே பூர்வமொருகாலத்தில் பிரம தேவரானவர் பதினாலுலோகங்களையு முண்டாக்கிசகலசீவகோடிகளையும்படைத்து அதில் அறிவுள்ள பிராணிகளைப்பார்த்து இந்தலோகங்களையிரட்சிப்பீர் என்று பொதுபடச்சொன்னார். அதில் சிலபிராணிகள் யக்ஷயம்என்று சொன்னார்கள். சில பிராணிகள் யட்சரட்சமென்று சொன்னார்கள். அவர்கள் சொல்லியபடியே யக்ஷயென்றவர் யட்சரர்களும் ரட்ச என்றவர் இராட்சதர்களுமாகக் கடவீரென்ன அந்த ராட்சதரில்எதுஎன்றும் பரகெதியென்றும் அண்ணன் தம்பிகளிருவரில் பரகெதியென்னப்பட்ட மூத்தவன் எனக்கொருவரம் நிகரில்லை யென்று சுமப்பாடுடையவனாக விருந்து யமனுடைய தங்கையாகிய பயை என்பவளை விவாகஞ்செய்து வித்தியுற் கேசனென்னும் புத்திரனைப்பெற்றான். அப்புத்திரன் சால கடங்கடையென்னும் கந்தருவப்பெண்ணை மணம்புரிந்து தங்களுக்கிஷ்டமான விடங்களில் சுகமாக போகம் அனுபவிக்க அவள் ஒரு குழத்தையைப்பெற்று பிறந்தவிடத்திலே எறிந்துவிட்டு தன்கணவன் பின்னே தொடர்ந்துபோனாள். பரமசிவனும் பார்வதிதேவியாரும் உலாவிவரும்போழுது பரமசிவன் அக்குழந்தையைப் பார்த்துக் கிருபைகூர்ந்து நிறைந்த ஆயுசும் யௌவனபருவமும் அழகும் பலமும் உண்டாகக் கடவதென்று அநுக்கிரகஞ்செய்தார், பார்வதிதேவியாரும் உன்வமிசத்தி லுண்டாகிய எல்லோருக்கும் உடனே பிள்ளையாகப் பிறக்கவும் அப்பிள்ளைக்கு பெற்ற தாய்க்குள்ள பருவமுண்டாக வேணுமென்று அருளிச் செய்தாள். அப்படி யவர்கள் கொடுத்த வரத்தினாலே சகல சம்பத்தும் பொருந்தி ஒரு பெரியநகரத்திலே தேவேந்திரனைப்போல சுதேச மென்

னும் பெயர்வகித்து வீற்றிருந்து தெய்வத்திரை யென்னுங் கந்தருவப்பெண்ணைக் கலியாணஞ்செய்து அவள் வயிற்றில் மாலியவான்சுமாலி மாலியென்றுமூவர்பிறந்துஉலகத்திலுள் ளஎல்லாப்பிராணிகளும்ஏங்கிப்பயந்துநடுங்கும்படிக்கு நாளுக்குநாள் செழிப்பாய்வளர்ந்து மகமேருவுக்கு வடபாரிசத்திலிருக்கும் தபோவனத்தைச்சார்ந்து அசுரர்முதலிய யாவரும் நடுக்கமுற, அப்போது பிரமதேவர் பிரசன்னமாகி தேவர்கள் அரசர்கள் முதலியயாவரும் செயிக்கப்படாத பலமும் குறைவில்லாத ஆயுளும் சகல அஸ்திரங்களும்கொடுக்க அந்தவரங்களை இம்மூவரும்பெற்று தேவர்கள்முதலிய யாவரையும் இடுக்கண்செய்து விசுவகர்ம்மாவையழைத்து தேவலோகத்திற்கு மதிகமானதாய் நாங்களிருக்க ஒரு நகரமுண்டாக்க வேணுமென்று சொல்லி பூருவத்தில் ஆதிசேடனுக்கும் வாயுபகவானுல் மகாமேரு சிகரங்களில் ஒன்றுமுறிபட்டு தெட்சண சமுத்திரத்தில் விழுந்திருந்த சிகரத்தின்மீதில் மாடமாளிகை கூடகோபுரங்கள் ஆஸ்தான மண்டபங்கள் புஷ்பதடாகங்கள் இன்னுமனேக விசித்திரமாக நிருமித்து இலங்காபுரியென்று பெயரிட்டார் விசுவகர்மாவானவர்.

## மாலியவான் வரலாறு.

அந்த இலங்காபுரிபட்டணத்தில் மாலியவான்சுமாலிமாலியென்னப்பட்டவர்கள் மூன்றுலோகத்திலுள்ள யாவர்களையும் தங்களுடைய ஆக்கினைப்பிரகாரம் ஏவல்கேட்டு நடக்கும்படிராஜரீகஞ் செய்துக்கொண்டிருக்குங்காலத்தில் கந்தருவகுலத்திற்பிறந்த தருமதை என்பவளுடைய புத்ரிகள் மூவரில் மூத்தவளாகிய சுந்தரியென்பவளை மாலியவானும் அவளுக்கிளைய கன்னியை மாலியும் விவாகஞ் செய்துக்கொண்டு மகாசந்தோஷமடைந்திருக்கமாலியவானுக்கு வச்சிரமுஷ்டி விருபாட்சன் துன்முகன் பாபசித்தன் நியாயகோபன் மத்தன் உன்மத்தன் என்று ஏழுபேர்பிறந்தார்கள். சுமாலிக்கு கைகேசிபீ நிசியென்று இரண்டு பெண்பிறந்தனர்கள். மாலிக்கு குருரயுத்தன் நீலன் நிலயன் சம்பாதி யென்று நான்குபேர் பிறந்தார்கள் இப்படியாகப் புத்திரர்களைப்பெற்று தனக்கொருவரும் நிகரில்லாமல் தேவேந்திரன்முதலிய சகலதேவர்களையுந் துன்பப்படுத்தி குரூரதண்டமான அதிகாரஞ்செய்து வருங்

காலத்தில்மூன்றுலோகத்திலுள்ள இருடிகள்தேவர்கள்முதலியசகலரும் பரமசிவனிடத்திற்சென்றுவணங்கிமாலியவான்முதலான ராட்சதர்களால் தாங்கள்படுந் துன்பங்களைச்சொல்லி முறையிட்டார்கள் அப்போது பரமசிவன்பார்த்து அவர்களுக்குவரங்கொடுத்தது நாமாகையால் நாமேயழிப்பது தருமமல்ல ஆயினும் மகாவிஷ்ணுவினிடம் நீங்கள்போய்சொன்னால் அந்தராட்சதர்களை சங்கரிப்பாரென்று அனுக்கிரகஞ்செய்தார் அப்படியே போய் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைக் கண்டு நமஸ்கரித்து சுவாமீ மாலியவான் சுமாலி மாலியென்னும் மூவரும் அவர்களுடைய புத்திர மித்திர வர்க்கங்களும் ராட்சதசேனைகளும் திரிலோகத்தையும் அதஞ்செய்து எங்களையும் அதிக வருத்தப் படுத்துகிறார்களென்று முறையமிட அதைக்கேட்டு நாமே அந்த துஷ்டராகிய ராட்சதர்களைச் சங்கரித்து ரட்சிக்கிறோமென்று சொல்ல, அவ்வனுக்கிரகம் பெற்றுத் தங்களிருப்பிடம்போய்ச்சேர்ந்தார்கள். அப்படியிருக்க இவைகளையெல்லாம் உலகமெங்கும் சஞ்சரித்து சமாச்சாரங்களை விசாரிக்கும் சாரணர்கள்கேள்விப்பட்டு சீக்கிரமாக இலங்கைக்குப்போய் தங்களுடைய அசுரராசனுக்குச் சொல்ல அவ்வசனத்தைக்கேட்டு மிகவுங்கோபங்கொண்டு அந்த தேவர்களை இக்கணமே அதஞ்செய்ய வேண்டுமென்று ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளையுங் கூட்டி யுத்தகோலமாய்வர அதைக்கண்டுதேவர்கள் அஞ்சி ஓ தேவதூதனால் நாராயணமூர்த்தியானவர் பஞ்சாயுதபாணியாய்கௌஸ்துவாபரணமுதலிய ஆபரணந்தரித்து கருடபகவான் தோளிலேறி யந்தராட்சத சேனைகளிற்புகுந்து அனேக யுத்தங்கள் புரிந்து கண்டதுண்டங்கள் செய்து சக்கரத்தைவிட்டு மாலியென்பவனுடைய சிரசைக்கண்டிக்க அதைமாலியவான் சுமாலி இருவரும் பார்த்துப்பயந்து இலங்கைக்குவோடிப் போய் மிச்சமிருந்த இராட்சதசேனைகளைக் கூட்டிக்கொண்டு பாதாளலோகத்திற்குப்போய் மறைந்துக் கொண்டிருந்தார்கள்.

அப்படி அந்தப்பாதாளலோகத்திலே அநேககாலம்துன்பப்பட்டுக்கொண்டிருக்கும் நாளையில் ஒருநாள் சுமாலிமாலியவான் இருவருங்கூடி நாமெத்தனைகாலம் இத்துன்பத்திலிருப்போமென் றாலோசித்து மாலியவான் சொல்லுகிறான் கேளாய் தம்பி நீபெற்றகன்னிகளிருவரில்மூத்தப் பெண்ணான

வள் இந்த மூன்றுலோகத்திற்கும் ராசாக்களாயிருக்கத் தக்க புத்திரர்க்குத் தாயாவதற்கும் பிரமதேவனுக்குச் சமானமான ஒருபுருஷனுக்குஸ்திரீயாவதற்கும் காரணமாயுள்ள உத்தம லட்சணங்களைப்பொருந்தியிருக்கிறாள் ஆனதால் இந்தப்பெண்ணினாலே நாமும் சுகப்படலாம் குலமும் விர்த்தியாகும் இப்படி செய்வாயென்று தமயன் சொல்லியதை உண்மையாகக் கொண்டு அந்தயோசனைமுடியும் உபாயத்தைத் தேடினவனாகி தனது புத்திரியாகிய வைதேகியையழைத்துக்கொண்டு பாதாளலோகத்தைவிட்டு பூலோகத்தில்சஞ்சரித்துவரும்பொழுது இலங்கைப்பட்டணத்தில் ராசரீகஞ்செய்துக்கொண் டிருக்கும் குபேரனானவன் அனேக தேவர்களுடன் புஷ்பகவிமானத்தில் கயிலாயகிரிக்குப்போனார் அதைக்கண்டு சுமாலியானவன் பொறுமைப்பட்டு கேளாயம்மா நாங்கள்மூவரும் சகலசம்பத்துடன் ராசரீகஞ் செய்துக்கொண்டிருந்த எங்கள் காணியாட்சியான இலங்காபட்டணத்திலே இந்தக் குபேரனிருந்து ராசரீகம்பண்ணும்படியான காலம்நேரிட்டதே யென்று சொல்லிப் பின்னுமிந்தக் குபேரனுக்கு இவ்வளவு செல்வமுண்டானது இவன்பிதாவாகிய விச்சிரவாயென்பவருடைய மகிமையல்லது வேறில்லை ஆனதால் நீயும் அந்த விச்சிரவாவென்பவ ரிருக்குமிடத்திற்குப்போய் அவருன்னை கூடும்படிக்கு உபாயஞ்செய்து புத்திரரைப் பெறுவையேயானால் அந்தப்புத்திரராலே நமக்கு பகைவராயுள்ள இந்தக் குபேரன் முதலான தேவர்களையும் வென்றும் நாமும் இலங்கா புரியில் வாழ்ந்திருக்கலா மென்று சொல்ல, அப்படியே செய்கிறேனென்று விச்சிரவாயென்பவர் சாயங்காலம் சந்தியாவந்தனஞ்செய்யுஞ்சமயத்தில் அவருக்கெதிரில்கண்டோர்மயங்க அதிதியைப்போல் அடுத்து கலசங்கள்போல் நெருங்கிய கொங்கைகளின்மேல் முகஉத்தரீயத்தை அடிக்கடி விலக்கி மூடிகாட்டிமறைத்து புன்சிரிப்புடனே மயங்கி நின்றாள்.

விச்சிரவாவானவர் அவளைப்பார்த்து மோகங்கொண்டு நீயாரென்று கேட்க நான் அசுரேந்திரராகிய மாலியவான் றம்பிசுமாலியினுடைய புத்திரி, யென்பெயர் கைகேசி, நான் வந்த காரியம் தேவரீர் திருவுள்ளத்திற்கு தெரிந்திருக்கு மென்று மிருதுவாகச் சொல்ல, அதைக்கேட்டு பின்னு மதிக கோபங்கொண்டு பெண்ணே! நீபுத்திரார்த்தமாகவந்தாய்வந்

தவேளை சந்தியாவந்தனமான மாலைப்பொழுதாகையால் நம மோடுகூடிப்பெறுகின்றபுத்திரர்கள் மிகவுந்துஷ்டர்களா யிருப்பார்களென்று சொல்லக் கைகேசியானவள் சுவாமி! உம்மைக்கூடிப்பெறுகிற புத்திரர்கள் துஷ்டர்களாகப் பிறக்கலாமோ வென்று உபசரித்துச் சொல்லியதைக் கேட்டு சந்தோஷப்பட்டு எல்லாருக்கும் இளையவனுகப் பிறக்கிறவன் சற்புத்திரனுக விருப்பானென்று சொல்லி யப்பொழுதே அவளுடன் கூடியனுபவிக்குஞ் சமயத்தில் கருப்பமுண்டாகி பத்து தலைகளும் இருபது கைகளுமுடைய தசக்கிரீவன் பிறந்தான். பின்னுமப்படியே அனுபவிக்கும்பொழுது முன்போல் கருப்பமுண்டாகி இருண்ட நீலகிரிபோலச் சரீரமும் நெருப்புப்போலச் சிகையும் அர்த்த சந்திரனைப்போல வச்ரதந்தங்களையுடைய கும்பகர்ணன் பிறந்தான். அதன்பின்பு பருந்தமுலையும் முறம்போன்ற நகமும் அனேக அவலட்சணங்களுடன் பொல்லாத பாவியாகிய சூர்ப்பனகை பிறந்தாள் பின்னரும் மனமகிழ்ந்து கூடிப் புணர்ந்தார்கள். அப்போது மூவருக்குமிளையவனுய் நல்லகுணமுடையவனுய் கீர்த்திவானுய் புலஸ்தியருடைய குலமுதலியவைகள் தழைத்தோங்கும்படியாய் விச்சிரவாவென்னப்பட்ட பிதாவைப்போல சற்புத்திரனுன விபீஷணன் பிறந்தான் அதன்பின்பு தசக்கிரீவன் கும்பகர்ணன் இருவரும் பிதாவினிடத்திலே சகலவேத சாஸ்திரங்களுங்கற்று தனுர்வித்தைமுதலிய யாவற்றிலும் வல்லவர்களாய் மதோன்மத்தராய் அந்தப் பிரதேசத்திலுள்ள தபோதனர்களெல்லோரையும் உபத்திரவஞ்செய்துக்கொண்டிருந்தனர். விபீஷணனுனவன் பிதாவுக்குமனமகிழும்படி பணிவிடைசெய்து அவரால் சகல சாஸ்திரசம்பன்னனுய் யோக்கியத்தோடு கூடியிருந்தனன். சூர்ப்பனகையானவள் அடங்காத காமவிகாரத்தையுடையவளாய் இருடிகள் முதலிய யாவரையும்பற்றியிழுத்து நடுங்கும்படி வலியப்புணர்ந்து இன்பமனுபவித்துக்கொண்டு திரிந்தனள். இப்படி யிருக்குங் காலத்தில் இவர்களைப்பெற்ற கைகேசியானவள் தன்பிதாவாகிய சுமாலியென்பவன் குபேரனைக்கண்டு அவன் சம்பத்துக்கு பொருமைகொண்டு புஷ்பக விமானத்துக்கு ஆச்சரியப்பட்டுத் தனக்குப் போதித்த மனக்குறை தீரும்படிக்கு சமயம் பார்த்திருந்தவளாதலால் தன்னுடையபுத்திரராகிய தசக்ரீவன் முதல் மூவரையும்பார்த்து நீங்களொருசிறப்புமில்லாமல் இந்தவன

த்தி லிப்படியிருக்க உங்களுக்குத் தாயாதியாகிய குபேரனென்ன
வன் நவநிதிச்செல்வமும் எல்லாச்சிறப்புமுடையவனுகியபர
மசிவனுக்குத் தோழனுமாகிய உங்கள் பாட்டன்மார் அரசு
செய்திருக்க, இலங்கைமாநகரத்திலே தேவர்களெல்லோரும்
தன்னை வணங்கும்படி ராஜரீகஞ்செய்துக்கொண் டிருக்கிறுன
ல்லவா! இந்த அனியாயத்துக் கென்னசெய்வேனென்று
துக்கப்பட்டு அதிககோப முண்டாகும்படி சொன்னுள் அந்த
வசனங்களையெல்லாம் மூவருங்காதிற்கேட்டு மனங்கொதித்து
உதடுமடித்துப் பல்லை நெறநெறவென்றுகடித்துதாயே அந்
தக்குபேரனுக்கு இத்தனை மேன்மைகள் உண்டா யிருப்பது
அவன் செய்ததபோபலத்தினுலல்லவோ ஆகையால்தாங்க
ளும் தவங்களைச்செய்து அவனிலுமேலான மேன்மைகளைப்
படைத்து உன்மனக்குறை தீரும்படிச் செய்கிறேமென்று
அப்பொழுதே தாயாரிடத்தில் விடைபெற்று அந்த மூவரும்
தபோவனத்திற்சேர்ந்து தவஞ்செய்யத் தொடங்கினுர்கள்.

அவர்களில் கும்பகர்னனுனவன் பிரமதேவரைநோக்கி
பஞ்சாக்கினிமத்தியிலிருந்து ஆகாரம் நித்திரையில்லாமல்
பதினுயிரம்வருடம் தபசுசெய்தான். விபீஷணனுனவன் ஊசி
யைநிறுத்தி அதன்மேல் ஒருகாற்பெருவிரலை யூன்றி மற்றொ
ருகாலைமடித்து இரண்டுகைகளையும் நீட்டிக்குவித்துஐயாமுன்
போல்ஐயாயிரவருடம்மடிந்திருந்தகாலை நீட்டியூன்றியகாலை
மடித்துமுன்போலஐயாயிரவருடமுஆக பதினுயிரவருடந்தப
சுசெய்தான்மூத்தோனுகிய தசக்ரீவனுனவன்யாகசாலை நிருமி
த்துஅக்கினியைமூட்டிவளர்த்தியந்த அக்கினியிலேஆயிரம்வ
ருடத்துக்கொருசிரசாகஒன்பதுனுயிரம்வருடத்தில்ஒன்பதுசி
ரசுகளையறிந்து ஆகுதிகொடுத்து பதினுயிரம் வருடத்தில் பத்
தாவது சிரசையும் ஆகுதிகொடுக்க வாளினுலறியும்பொழுது
அந்தட்சணமே பிரமதேவர் பிரசன்னமாகி உனக்கு வேண்
டிய வரங்களைக்கேள் தருகிறேமென்ன, தசக்ரீவன் பிரமதே
வரை நோக்கி மானிடரை ஒரு பொருட்டாக எண்ணுமல்
தேவர்கள் இராக்கத யக்ஷகின்னரர்கள் முதலா யுள்ளவரும்
என்னுடைய ஆக்கினைப் பிரகாரம் ஏவல்கேட்டு நடக்கும்படி
க்கு எல்லாவல்லமையு மெனக்கு முண்டாக வேணுமென்று
கேட்க, அப்படியே கொடுத்தோமென் றனுக்கிரகஞ் செய்து
பின்பு விபீஷணருக்குப் பிரசின்னமாகி உனக்கு வேண்டிய
வரங்களைக் கேட்பாயென்றுகூற, விபீஷணன்வணங்கி சுவா

மி பாபகிர்த்தியங்க ளென்னுல் செய்யப்படாம லிருக்கும்படி யாகவும் தேவர்கள் முதலானயாவராலுஞ் செயிக்கப்படாத வெற்றிமேன்மைபொருந்தியிருக்கவும் வேண்டுமென்றுகேட்க, அப்படியே வரங்கொடுத்து பிரமதேவனுனவர் விபீஷணன் வரங்கேட்ட விவேகத்தைப் பார்த்து நீ யெப்போதுஞ் சிரஞ்சீவியா யிருப்பாயென்று அனுக்கிரகஞ்செய்ய, கும்பகர்ணனுக்கும் அனுக்கிரகஞ்செய்ய, வரும்போது தேவர்கள் முதலியசகலரும் நடுங்கி பிரமதேவரை நோக்கி சுவாமீ உமக்கு நாங்கள்செய்த அபராதமென்ன இளங்கன்றைகொடும் புலிக் கிரையாய்க்கொடுப்பதுபோல் கண்டகனுகிய கும்பகர்ணனுக்கு வரங்கொடுத்து அவனுல் எங்களை யழியச் செய்வதிலும் சிருஷ்டித்த நீரே கொல்வது மிகவும் நல்லதென்று முறையிட்டு வேண்டினுர்கள். அதை பிரமதேவர்கண்டு அந்தக் கும்பகர்ணனுல் உங்களுக்கு ஒரு துன்பமுண் டாகாதபடிக் குச் செய்கிறேமென்றனுக்கிரகித்து தமது தேவியாகியசரஸ்வதியைப்பார்த்து நாம் கும்பகர்ணனுக்கு வரங்கொடுக்கும் பொழுது நீ அவனுடைய வாக்கிலிருந்து அவன் கேட்கும் வரம்பலியாமற்போகும்படி மாறுபடுத்தச் சொல்லிவிப்பாயென்றுகூறி, கும்பகர்ணனுக்குப் பிரசன்னராகி உனக்குவேண்டியவரமென்னகேள் தருகிறேமென்று சொல்ல அதற்கு கும்பகர்ணன் நித்திய தத்துவந் தரல்வேண்டுமென்று கேட்கிற வசனத்தை அவனுலறிந்த சரஸ்வதியம்மன் மாறுபடுத்தி நித்திரைதத்துவந் தந்தருள வேண்டுமென்று கேட்கச் செய்தாள். அவ்வண்ணமே வரங்கொடுத்து சத்தியலோகத்திற்குப்போனுர். அப்பொழுதே கும்பகர்ணனுக்கு அறிவுமயங்கி சோகநித்திரை தோன்ற அதுகண்டு இப்படி மாறுபடுசெய்தவர்கள் தேவர்களே யல்லது வேறில்லை யென்று ஆலோசித்தவனுய்தமயனுகிய தசக்ரீவனிடத்திலும் தம்பியாகிய விபீஷணனிடத்திலும் புலம்பிப்பரிதாபப்பட அவனுக்கு பலவித வுபாயங்களைக்காட்டி தேறுதலடையும்படிசொல்லி அவனுடன் மூவரும் பின்பு தாங்கள் வாசஞ்செய்திருந்த வனத்திற் சேர்ந்தார்கள்.

### இராவணன் இலங்கையிற் சேருதல்.

இப்படியிருக்க தசக்ரீவன்முதலான மூவரும் தவஞ்செய்துபிரம்தேவனிடத்தில் வரம்பெற்றிருக்கிற மேன்மைகளெல்

லாந் தூதர்விசாரித்துவந்து பாதாளலோகத்தில்நெடுநாளாய்த் துன்பப்பட்டுக்கொண் டொளித்திருக்கும் மாலியவான்சுமாலிமுதலிய இராட்சதர்களுடன் சொல்ல அவர்கள்கேட்டுமகா சந்தோஷத்தையடைந்து அந்த மூவரிருக்கும் வனத்திற்கு வந்து அவர்களைக்கொண்டு உபசரித்து ஆதியோடந்தமாக தங்கள்சம்பந்த விருத்தாந்தங்களைச் சொல்லிமன மகிழ்ந்திருந்தார்கள் அப்படியிருக்க சுமாலியானவன் தசக்ரீவனைப்பார்த்து ஐயனே மகாவிஷ்ணுவினாலே இன்றையவரைக்கும் நாங்கள்படுந்துன்பங்களை அளவிட்டுச்சொல்லமுடியாது அன்றியும் குபேரனானவன் நம்முடைய இலங்காபட்டணத்தை யாண்டுவருகின்றான். அந்தக் குபேரனையும் உன்னையும் பெற்ற பிதா ஒருவராகையாலும் அவனுனக்கு மூத்தவனாகையாலும் தானேயுடையவனென்றெண்ணி அந்த இலங்கா பட்டணத்தை உனக்குக் கொடுக்கமாட்டான் ஆகையால் எந்தவிதத்தினாலும் நீயந்த இலங்கைப் பட்டினத்தை உன்னுடையதாகச் செய்துகொள்ளாத வரையில் நீ தவஞ்செய்து பெற்ற வரத்தினா லுண்டாகிய சவுரியங்களெல்லாம் அப்பிரயோசனமாய் விடும். நமக்குச் சத்துருக்களான தேவர்களும் இகழ்ச்சி செய்யும்படியான அபகீர்த்தி யுண்டாமென்று அனேக துர்ப்போதனைகளைச் சொல்ல அதைக்கேட்டு அப்பொழுதே பிரகஸ்தனைப்பார்த்து நீ தூதாகப்போய் என்னுடைய அபிப்பிராயத்தைச் சொல்லிவருவாயென் றனுப்ப அவனும் அவ்விலங்கைப்பட்டணத்தி லிருக்கும் குபேரனிடத்திற்சென்று உன்னுடைய தம்பியாகிய தசக்ரீவன் தன்னுடைய பாட்டன்மார் முதலானோர் நெடுங்காலமரசுசெய்த இந்தப் பட்டணத்துக்குடையவனேயன்றி வேறொருவருண்டோவென்று தன்னுடைய சிநேகம் வேண்டியிருக்குமாகில் இப்பொழுதே இந்த விலங்கையைவிட்டு அப்புறத்தே போகவேண்டுமென்றுஞ் சொன்னானென்றுசொல்ல, அதுகேட்டு குபேரனானவன் கால தேசவர்த்தமானங்கள் மூன்றையும் ஆலோசித்து இந்தப்பட்டணம் தசக்ரீவனுடையதே அவன் மனதின்படியே செய்கிறேனென்று அப்பொழுதே தன்னுடைய பரிவாரங்களோடு புட்பகவிமானத்தின் மீதேறி இயமகிரிசேர்ந்து தபசுசெய்து அவ்விடத்திலேயே வாசமாயிருந்தான் அதன்பின்பு தசக்ரீவன் தன்பாட்டனாகிய மாலியவான் முதலானவர்களுடன் இலங்கைப்பட்டணத்திற் பிரவேசித்து மந்திரி புரோகிதர்முத

லானவர்களினுல் மட்டாபிஷேகஞ்செய்துக் கொண்டு மகுடாதிபதியாய் சிங்காதனத்தின்மேவி இராசாதிகாரஞ் செய்துக் கொண்டிருந்தான்.

## ராவணன் மணம்புரிதல்.

---

இப்படியிருக்குங்காலத்தில் தசக்ரீவனுனவன்பித்துச்சிங்கலனென்னும் இராட்சதனுக்குத் தனதுதங்கையாகியசூர்ப்பணகையைவிவாகஞ்செய்துகொடுத்துஅதன்பின்பு தன்சேனைகளுடன் வேட்டையாட வனத்திற் செல்லுகையில் மயனைக் கண்டு சிலவார்த்தைகளாடி அவன்குமாரத்தியானவண்டோதரியை விவாகஞ்செய்து கொண்டு அந்தமயனுல் கொடுக்கப்பட்டவேலாயுதத்தைப்பெற்று வண்டோதரியுடன்தேரிலேறி சதுரங்கசேனைகள் புடைசூழ இலங்கையிற் பிரவேசித்திருந்தான். அதன்பின்பு கும்பகர்ணனுக்கு வச்சிரச்சுவாலை யென்பவளையும் விபீஷணனுக்கு கந்தருவப் பெண்ணுகிய சுரசை யென்பவளையும் விவாகஞ்செய்வித்து அவர்களும்மகிழ்ந்திருக்க தானும் வண்டோதரியும் சுபபோகமனுபவித்துக்கொண்டிருக்கும் காலத்தில் வண்டோதரி கருப்பவதியாகியமேகநாதனென்னும் பிள்ளையைப்பெற்ருள் அதன்பின்பு அநேகபிள்ளைகளும் அட்சயகுமாரனும் பிறந்தார்கள். கும்பகர்ணனுக்கு கும்பன் நிகும்பன் என்று இரண்டுபுத்திரர்கள் பிறந்தார்கள். இப்படியிருக்குங் காலத்தில் கும்பகர்ணனுக்கு நித்திரைவந்து ஒருமண்டபத்திற்போய் படுத்து நெடுநாள் நித்திரை செய்துக்கொண்டிருந்தனன்.

## அளகாபுரியை யழித்தல்.

---

சுவர்ணம்போலவிளங்கும் இலங்கைபட்டணத்தில் தசக்ரீவனும் தம்பிமார் புத்திரமித்திரர் முதலானசம்பத்தினுலும், பிரமதேவர் கொடுத்தவரத்தின் செருக்கினுலும், மதோன்மத்தராய் புண்ணியபாவத்தை இன்னதென்று சற்றேனும், எண்ணுமல் தேவர்கள் ரிஷிகள் எல்லோரையும் நிலைகெட்டோடத்துரத்தி தேவலோகத்தைக் கொள்ளைகொண்டு குரூரதண்டமான அதிகாரம்செய்து வருங்காலத்தில் அளகாபுரியி லிராநின்ற குபேரனுனவன் தசக்ரீவன்செய்கிற கொடுமைகளைக் கேட்டு ஒரு தூதனிடத்தில் சில நற்புத்திகளைச் சொல்லியனு

ப்பினுன், அந்த தூதன் தசக்ரீவனிடத்திற்சென்று குபேரன் சொல்லியனுப்பிய நற்புத்திகளைக்கூறினுன். அவனதைக்கேட்டு கண்கள் சிவந்து எவனே குபேரனும் பித்தனுகிய சித்தனுக்குத் தோழனும் அவன் தருமநியாங்கள் சொல்லியனுப்பினனென்று பயமில்லாமல் என் சபையில்வந்துசொல்லிய இவனுக்கு வெகுமதி இதுதானென்றுகைவாளினுலே தூதன் தலையை வெட்டினுன் பின்பு தன்னுடைய சேனுதிபதிகள் முதலானவர்களைப்பார்த்து எனக்கு பயமுறுத்திச் சொல்லியனுப்பிய குபேரனுக் கெதிரில் நான்சென்று என்மனக்குறையை முடித்துப் பின்பு தவஞ்செய்து அதிக மேன்மையையும் பெறுவேனுதலால் நீங்கள் சேனைகளுடன் அளகாபுரிக்குப் புறப்படுங்க ளென்றுசொல்லி தானும் ரதமேறி சகல சைனியங்களுடன் அளகாபுரியை யடுத்து வளைத்துக்கொண்டான் அதுகண்டு பட்டணத்திலுள்ள காவலாளிகள் குபேரனிடத்திற்சொல்ல, அவன்கோபங்கொண்டு தனதுசேனைகளுடனே வந்து பிரபலமான யுத்தம்புரிந்து தசக்ரீவனுல் அடிபட்டு குபேரன் மூர்ச்சித்தான். அப்பொழுது தசக்ரீவன் வெற்றி பெற்றவனுய் அளகாபுரியைக் கொள்ளையிட்டுகுபேரனுடைய புட்பகவிமானத்தைப் பற்றி சகலசைனியங்களுடன் அதின் மேலேறி அவ்விடம் விட்டு ஈசான்யதிசையில்கைலாயகிரியை நாடிச்சென்றுன்.

### இராவணன் கைலையைங்கிரியைப் பேர்க்கப் பிரயாசப்படல்.

---

மூன்றுலோகத்திலும் நிகரில்லாத ஐசுவரியம்சம்பத்தும் விசயபராக்கிரமம் சௌரியங்களும் பொருந்திய தசக்ரீவன்குபேரனைச்செயித்தோம் இனிமேல் நமக்கு எதிரிகளொருவருமில்லையென்கிற கெர்வத்தையடைந்தவனுகி புட்பகமிமானத்தின் மீதேறிக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் செல்லுமளவில் கைலாயகிரிக்குச் சமீபமாகவந்து தடைபட்டுநின்றது. அதுகண்டு தசக்ரீவன் இவ்விடத்தில் தடைபடவேண்டிய காரணமென்னவென்று ஆலோசிக்கும்போதுநந்திகேசுவரர் அவ்விடத்தேதோன்றி தசக்ரீவனைப்பார்த்து இந்தகைலாயகிரியின் எல்லைக்குட்பட எவரும் வாகனமேறி போகக்கூடாது ஆகையால் நீ உன்னுடைய வாகனத்தைத் திரும்பிக்கொண்டு போ

மென்று சொல்ல, அவன் நந்திதேவரைப்பார்த்து ஓ! குரங்கே நீயாரடா சொல்லுகிறவனென்று சில நிந்தைமொழிகளைக்கூறினன், அதுகேட்டு நந்திதேவருக்குக்கோபம்வந்து அடா நீ என்னைக்குரங்கேஎன்று நிந்தைசெய்ததால் உன்னுடைய பட்டணத்தையும் குரங்குகளே நாசமாக்குமென்று சாபங்கொடுத்துப் போயினர்.

அதையொரு பொருட்டாய் எண்ணுமல் பேயனென்னமோ! பிதற்றிப்போனுனென நினைத்து என்னுடைய விமானத்தைத் தடுத்த இந்தமலையை வேரோடேபிடுங்கி சின்னு பின்னப்படுத்துவேனென்று கோபத்துடனே நிலத்திற்குதித்து பாதாளத்திற் புகுந்து தன்னுடைய இருபது கைகளாலும் அடியோடே பெயர்க்கும்பொழுதில் அந்தமலையானது சற்றேயசைய அப்போது சிவகணங்கள் யாவரும் நடுக்கமுற உமையாளும்பயத்தினுலேபரமசிவனைத் தழுவிக்கொண்டாள் அதைப்பார்த்துப் பரமசிவன் தம்முடைய திருவடியின் பெரியவிரல் நுணியையூன்றி சற்றேஅமிழ்த்தினுர் அந்தப் பாரத்தினுல் கயிலைமலையானது கீழே அழுந்த தசக்ரீவன் சரீரமுழுதும் நெருங்குண்டு இருபதுகண்களும் அதிர தோள்களுநெரிய சற்றுமசையவொட்டாமல் கதறிக்கொண்டு கிடக்கின்றதை நாரதர்பார்த்து ஓ தசக்ரீவனே! பரமசிவனுல் வரப்பட்ட துன்பம் அந்த சிவனுலே தீர்க்கப்படுமல்லாமல்வேறொருவனுல் தீர்க்கப்படாத இப்பொழுது உன்னுடையசெயலுக்குத் தக்கதாக பரமசிவனை நோக்கித் தோத்திரம்பண்ணுவையாகில் இந்தத் துன்பம் நீங்கிப் பிழைப்பாயென்று சொல்லிப்போனுர். அவர் சொல்லியபடி மனவுறுதிகொண்டு நம்முடைய பத்துத்தலைகளிலொருதலையும், இருபது கைகளில் ஒருகையுமறுத்து யாழாகப் பண்ணிக்கொண்டு மிகவும் அன்புடனே சாமகானம்பாடினுன். அதை பரமசிவன்கேட்டு சந்தோஷப்பட்டு தசக்ரீவனை யழைத்து நீ இந்தப் பர்வதத்தின் கீழ் அகப்பட்டுக் கிடந்த காரணத்தினுலே உனக்கு இன்றுமுதல் இராவணனென்னும் பெயருண்டாகக் கடவதென்று பெயர்கொடுத்து மூன்றரைகோடி ஆயுளும்ஒருவாளாயுதமுங் கொடுத்தார் இப்படி வரம்பெற்ற இராவணன் புட்பக விமானத்தின் மேலேறிக்கொண்டுவரும்போது மகாவிஷ்ணுவானவர் பிரமசந்நியாசி வேடங்கொண்டு இராவணனுக் கெதிரில் வர அவன்கண்டு விமானத்தினின்றும் கீழே குதித்துவந்து

வணங்கினான். அப்போது உன்னுடைய விர்த்தாந்தங்களைச் சொல்லென்று வினவ அவன் அவரைப்பார்த்து தன்னுடைய பெருமையும் குபேரனைச் செயித்ததும் கயிலாயகிரியைப் பேர்த்ததும் விவரமாகச் சொல்ல, அதைக்கேட்டு நீ யெத்தனைகால மிருந்தாலும் உலகத்திற்கு அபகாரமே யானதால் குறையாயிருக்கிற அரைகோடி ஆயுளும் பெற்றாயானால் எல்லா வுலகத்திலும் உன்னுடைய அதிகாரஞ் செல்லுமென்று சொல்ல, அதைக்கேட்டு சீக்கிரமாகக் கைலாயகிரிக்குப்போய் சிவகாருண்யனாய் விளங்கப்படா நின்ற பரமசிவனை நோக்கித் தோத்திரஞ்செய்து வணக்கத்துடனிற்க, பரமசிவன்பின்னும் நீ வந்தகாரண மென்று கேட்க, எனக்கு அரைகோடி ஆயுளும் கொடுக்கவேண்டுமென்று சொன்னான். பரமசிவன் கேட்டு இராவணா, நீ கேட்டபடியே உனக்கு அரைகோடி ஆயுளும் கொடுத்தோம் மேலும் நீ எந்த காலத்திலாவது அக்கிரமம் செய்வையேயானால் அக்காலத்தில் நாம்கொடுத்தவரமும் ஆயுளும் நம்மைச் சேரும்படி திருவாய் மலர்ந்தருளினார்.

## வேதவதி வரலாறு.

தசக்ரீவனானவன் பரமசிவனிடத்தில் வாளாயுதமும்ஆயுளும் இராவணனென்னும் பெயரும் பெற்றவனாகித் தனது சேனைகளுடனே சகல தீவுகளிலுஞ் சஞ்சரீக்கு மளவில் ஒருநாள் இமயவனமென்னும் ஆரணியத்திற்சேர்ந்தான். அவ்வனத்தில் ஒரு கன்னிகையானவள் தபசு செய்துக்கொண்டிருந்தாள். அக்கன்னியை இராவணன்கண்டு மோகங்கொண்டு நீயாரென்று கேட்க அவள் சொல்லுகிறாள். குசத்துவனென்று சொல்லப்பட்ட பிராமணனுடைய புத்திரி, அவரோதப்பட்ட வேதசொரூபத்தில் நான் பிறந்ததால் எனக்கு வேதவதியென்றுபெயர், எனது பிதாவைசம்புவென்னும்அசுரனானவன் வதைசெய்து போனான். நான் மகாவிஷ்ணுவை நோக்கி தபசுசெய்கிறேன். என்றுசொல்ல, அதை இராவணன்கேட்டு தன்னுடைய குலமுறைமைகளும் பராக்கிரமும் வரங்களைப் பெற்றதும் ஆதியோடந்தமாகச் சொல்லிஎன்னை விவாகஞ்செய்துக் கொள்ளென்று விஷ்ணுவை தூஷித்து வலிமையாகக் கையைப்பிடிக்கப்போனான். அப்போது அவள் மிகவும் கோபங்கொண்டு உன்னுடைய குலமும் செல்வமும்

நீயுங் கெடும்படிக்கு நானேபெண்ணுகப்பிறப்பனென்று சாப மிட்டு அக்கினியில் வீழ்ந்திறந்துபோய் ஜனகமகாராஜாவின் யாகபூமியிற்பிறந்து சீதையென்றுபெயர் வகித்து உமக்குப் பாரியாக வந்திருக்கிற இந்த சீதாலட்சிமியென்று அகஸ்திய முனிவர் சொல்லக்கேட்டு ஸ்ரீராமர் மகிழ்ந்து பின்னுமந்த இராவணனுடைய சரித்திரங்களைச் சொல்ல வேணுமென்று கேட்க அகஸ்தியபகவான் சொல்லத் தொடங்கினர்.

மறுத்துவராஜன் வரலாறு.

கேளும் ஸ்ரீராமரே, இராவணனனவன் வேதவதியிட்ட சாபத்தைப் பெற்றவனய் புட்பகவிமானத்திலேறி அப்புறம் போம்பொழுதில் இமயகிரிக்குச் சமீபமான ஒரு வனத்தில் மருத்துவ மகாராஜனனவன் சகலமானதேவர்கள் இருடிகள் கூட்டத்துடனே யாகஞ் செய்துக்கொண்டிருக்கிற கோஷ்ட த்தைக்கேட்டு, இவ்வனத்தில் இப்படிப்பட்ட சத்தமேது இதையறியவேணுமென்று அவ்விடம்வந்தான். அவனைக் கண்டு தேவர்கள் இருடிகள் எல்லோரும்பயந்து இந்திரன் மயிலாகவும் எமன் காக்கையாகவும், வருணன் அன்னமாக வும் குபேரன் ஓந்தியாகவும், மற்றுமுள்ளவர் பற்பல ரூபங் களையெடுத்து ஒளித்தனர்கள். யாகசாலையில் மருத்துவராஜன் பிராணயாகஞ் செய்துக்கொண்டிருந்தான். அவனை இராவ ணன்பார்த்து நீயுத்தத்திற்கு வருகின்றையா அல்லதுதோற் றேனென்று சொல்லுகின்றையா என்னசொல்லுகிருயென் றன் அப்போது மருத்துவராஜன் யுத்தஞ்செய்யத் தொடங் குமளவில் வசிஷ்டனுடன் யுத்தம்பண்ணி வெற்றிபெற்ருல் தானே சிலாக்கியம் இல்லாவிட்டாலில்லையே லாபம்யாகம்மு டியாமற்போனல் குலத்துக்கு நாசம் வருமே என்றுசொல்ல, அதைக்கேட்டு முன்போலப்பிராணயாகம் நிஷ்டைசெய்துக் கொண்டிருந்தான் அவனைப்பார்த்து இராவணன் இகழ்ந் துபேசினன் பின்புதேவர்கள் இருடிகளெல்லாரும் யாகசா லையைநோக்கி வரும்பொழுது இந்திரன்ஒருமயிலைப்பார்த்து உன்னைப்போல்உடலெல்லாம் கண்களாகக்கடவதென்று வர ங்கொடுத்தான் எமன் ஒருகாக்கையைப்பார்த்து பிதுர்தேவ தைகளுக்குப் பிரீதியுண்டாகும்படி மனிதருனக்குப் பலிகொ டுக்கக் கடவரென்றும் சகலபிராணிகளிலும் அதிகமான ஆயு ளுண்டாகக் கடவதென்று வரங்கொடுத்தான் குபேரன்ஓர்ஓந்

திரையைப்பார்த்து பலபலநிறமான ரூபமெடுக்கவும் உடல் பச்சை நிறமாகவும் வரங்கொடுத்தான். அப்படி எல்லோரும் வந்து யாகத்தை நிறைவேற்றித் தங்களுடைய லோகத்தைச்சேர்ந்தார்கள். இராவணனும் தென்றிசை நோக்கிச் சஞ்சரித்துக்கொண்டுவந்தானென்று சொல்லிப் பின்னும் ஸ்ரீராமருக்கு அகஸ்தியர் சொல்லுகின்றார்.

## அரண்ணியன் வரலாறு.

கேளும் இராகவா, அந்த இராவணன் தென்றிசையை நோக்கிவரும்போது அங்குள்ள சகல இராசாக்களையும் அழித்து இந்த அயோத்தியாபுரிபட்டணத்திலேஉம்முடைய குலத்திலே தபோமகிமையும் கீர்த்தியும் பலமும் பொருந்தியிருக்கும் அரண்ணியராஜனைப்பார்த்து நீ எனக்குத் தோற்றேனென்று சொல்லுகின்றையா அல்லது யுத்தம்பண்ணவருகின்றனையா எனத் திடமாரென்று கேட்டான். அப்படியே யுத்தஞ்செய்வோமென்று இருதிறப்படைகளும் இவ்விருவரும் போர்புரியும்போது இராவணனனவன் தண்டாயுதத்தினாலே அரண்ணியராஜனை யடித்து மூர்ச்சையடையச்செய்து நீஎனக்கு தோற்றதற்குச் சந்தேகமில்லையென்று சிறித்து நிந்தையாக இகழ்ந்துபேசினான். அதைக்கேட்டு போர்க்களத்தில் முதுகு கொடுத்து ஓடினவ னல்லவோ உனக்குத் தோற்றவனப்படி யோடாமல் மூர்ச்சையடைந்த வேளையில் என்னை யிகழ்ந்து நிந்தித்தபடியினாலே என்னுடைய குலத்திற்பிறக்கும் இராமருடைய பாணத்தினால் உன்னுடையபத்துதலைகளு மறுபட்டு விழக்கடவதென்று மொழிந்து பொன்னுலகமுற்றனர். அந்தசாபத்தை எவ்வளவுமெண்ணாமல் அவ்விடத்து நின்று நீங்கிவரும்போது எதிர்ப்பட்ட விராசாக்களையழித்த பெருமையினால் அகங்காரத்தை யடைந்தவனாகவருமளவில் அந்த இராவணனுக்கெதிராக நாரதமகாமுனிவர்வந்து இராவணனைப்பார்த்து உம்முடைய சௌரிய வீர பராக்கிரமங்களிலே கோடியிலொரு பங்குக்கும் நிகரில்லாத மனிதரைக் கொன்று வெற்றிகொண்டதனால் என்ன புகழுண்டாகும் பின்னையெப்படியென்றால் கூற்றுவன் முதலானவர்களை வென்றால் அதனால் பெருமையுண்டாகுமென்று மித்திரபேதஞ்செய்து நாரதமுனிவர் போயினர். அந்த விராவணனும் அவ்விடமிருந்து ஆகாயமார்க்கமாக விமானத்தைச் செலுத்தி எமலோகத்

தைத்தேடிப்போனனென்று சொல்லிய பின்னும் ஸ்ரீராமர்கே ட்க அகத்திய முனிவர் சொல்லுவாராயினர்.

காலனை செயித்தல்.

---

கேளும் தசரதநந்தன நாரதமுனிவர் இராவணனிடத்தில் வந்து எமனிடத்தில் பகையுண்டாகும்படி செய்து சீக்கிரமாக எமனைக்கண்டு இராவணன் பிரமதேவரிடத்திலும் சிவனிடத்திலும் பெற்றவரத்தினல் குபேரனை ஜெயித்து பூலோகத்திலுள்ள அரசர்களையுமழித்து வெற்றிகொண்டோம்.தேவலோகத்தில் எமனை ஜெயித்தோமானல் மற்றதேவர்கள் தன்னைவணங்குவார்களென்றெண்ணி உம்மைத்தேடி வருகின்றானும் அதையுமக்குச் சொல்லவந்தோமென்று சொல்லிப்போனர். அந்தச்சமயத்தில் இராவணன் தனது பரிவாரசேனைகளுடனே எமலோகத்திற் பிரவேசித்து வரும்பொழுதுபுண்ணியாத்மாக்கள்சுவர்க்கலோகவாசிகளாய்சுவர்ணமயமான மண்டபங்களிலே வீற்றிருக்கப்பார்த்து ஆச்சரியமடைந்து அப்புறம்போம்பொழுது மகாபாவிகள் கோர நரகங்களிலே நாவிலும் சரீரத்திலும் புழுக்கள்சொரிய நெடுங்காலமழுந்தி துன்பப்பட்டுக் கிடப்பதைப்பார்த்து நீங்களெல்லோரும் எமனுக்குப்பயப்படாமல் நகரத்தைவிட்டுக் கரையேறிப்போவீர்களென்று உத்தரவுசெய்தான் அவர்களுமதைவிட்டு நீங்கிப்போக அதுகண்டகாவலாளிகள் எதிர்த்துப்போர்புரிய இராவணன் அக்காவலாளிகளை யழித்து அவ்விடத்தினின்று மேற்சென்றான். அதுகண்டு எமனனவன் அளவில்லாத சேனைகளுடன்எதிர்த்து ஏழுநாளோயாமல்யுத்தஞ்செய்துகடைசியில் இராவணனைக் கொல்லும்படி தனது காலதண்டைக கையிலெடுத்தான் அது பிரமதேவர் கண்டு உலகமழிந்துபோமென்றெண்ணி எமனுக்கெதிராகச் சென்று அவனே தருமங்கெட்ட துஷ்டன் அன்றியும் பரமசிவனிடத்தில் அதிகவரங்களைப் பெற்றிருக்கின்றான். ஆதலாலிவனை உம்முடைய தண்டமொன்றுஞ் செய்யமாட்டாது தண்டத்தைப்பிரயோகம் பண்ணி அபசயப்படவேண்டாமென்று பிரமதேவர்சொல்ல அதைக்கேட்டு நன்மையென்று நினைந்து கையிலே ஆயுதமெடாமல் நின்றான், அதைக்கண்டு இராவணன் எமன்தோற்றுப் போனனென்று வெற்றிபேசிக்கொண்டு அப்புறஞ் சென்றான்.

## வருணனை வென்றது.

அந்த இராவணன் எமலோகத்தில் தருமராசனைச் செயித்து வெற்றிகொண்டவனுய் அவ்விடத்துனின்று நீங்கி பாதாளத்திற்கேகி நகரையெல்லாம் வென்றுவசப்படுத்திக்கொண்டு அவ்விடத்தைவிட்டு மணிமதியென்று சொல்லும் பட்டணத்துக்குள் போகும்பொழுது அதில் வரப்பிரசாதம் பெற்றுகாலகேயர் நிவாதகவசர்முதலிய இராட்சதர்கண்டு நீயார் நில்லென்று தடுத்து ஒருவருக்கொருவர் யுத்தம்பண்ணி இரண்டு மாதம்போர்செய்துக் கொண்டிருந்தார்கள், அப்படியிருக்க அவர்களிடத்திற்கு பிரமதேவர்வந்து நீங்கள் இருவரும் வரம்பெற்ற பராக்கிரமசாலிகள் ஆகையா லொருவருக்கொருவர் உறவுகொண்டிருக்கும்படி சமாதானப் படுத்தினர். அதன்பிற்பாடு இராவணனனவன் வருணனைச் செயிக்க வேண்டுமென்றெண்ணி வருணலோகத்தை நாடிச்செல்லும்போது இராவணனனவன் தனக்கு மைத்துனனாகிய வித்துச்சிஹ்வனை காலகேயர்களால் கொல்லும்படிசெய்து பின்பு வருணலோகத்திற்குப் போம்போது காமதேனுவர அதற்கு உபகாரஞ்செய்தனுப்பிவிட்டு வருணனுடைய நூறு பிள்ளைகளுடனெதிர்த்து பிரசண்டயுத்தஞ் செய்து முதுகு கொடுத்தோடும்படி யடித்து அதிக வருத்தத்தையடைந்து வருணலோகத்தைவிட் டிலங்கையை நாடிபுறப்பட்டான். அப்படிவரும்போது கெந்தருவகன்னிகளும் பிராமணக்கன்னிகளுமாக விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களெல்லோரையும் பிடித்து புஷ்பகவிமானத்தி லேற்றிக்கொண்டுவர அவர்களைக்காக்கும் பொருட்டு வந்தவர்களையுங் கொன்று மிகவுஞ் சந்தோஷமாக இலங்காபட்டணம் வந்துசேர்ந்து அக்கன்னியர்களைச் சிறைசெய்தனன்.

## ஜனஸ்தானமேற்படுத்தியது.

அக்கன்னியர்களெல்லாம் புலம்பி இப்பாவிக்குப் பெண் மூலமாகவே முடிவுவருக வெனச்சபித்தனர் அந்த இராவணன் இச்சாபத்தைமதியாமல் அந்தப்புரத்தில் நுழைகையில் சூர்ப்பனகை வயிற்றிலு மார்பிலு மறைந்துகொண்டுகோவெனக்கதறி அடாபாவீ, என்னைக் கைம்பெண்ணாக்கினையே இதோ உன்காலின்கீழ் உயிரைவிடுகிறேனெனப் புலம்ப, அவ

ணவளையெடுத்து என் செல்வத்தங்காய், இது தெய்வச்செய லால் நேர்ந்ததற்கு யாரென்னசெய்யலாம் விசனப்படாதே யென்று தண்டகாரணியத்தில் ஜனஸ்தானமென வொருபட் டணமுண்டாக்கி கரதூஷணர்முதலிய சேனைகளைக்கூட்டி என்சகோதரியே, இதோ எனக்குச் சகாயமாகக் கரன்முதலிய சேனைகளை நியமித்திருக்கின்றேன் அவர்களுடன் நீபோய்விரு ம்பியபடி செய்துக்கொண்டிருவென்று அனுப்பினான் அது கேட்டு வெரும்படையோடு கரனையுங்கூட்டிக்கொண்டு ஜனஸ் தானஞ்சேர்ந்து வனவாசிகளை இம்சைசெய்துக்கொண்டு உல் லாசமாயிருந்தனள்.

இராவணனனவன் அளகாபுரி தெய்வலோகம் யமலோ கம் வருணலோகம் என்று சொல்லப்பட்டலோகங்களிற்போய் இலங்கைக்கு முன்னமே இராவணன் குமாரனாகிய மேகநா தனனவன் நிகும்பலையென்று சொல்லப்பட்ட வனத்திற்போ ய்சுக்கிரபகவான் முன்னிலையாய் பரமசிவனைக்குறித்து ஆறு யாகஞ்செய்து நிறைவேற்றி ஏழாவது யாகஞ் செய்துக்கொ ண்டிருக்கும்போது இராவணன்வந்து குமாரனைக்கண்டு பர மசிவனிடத்திலே பெற்றவரங்களைக்கேட்டு சந்தோஷத்துட ன்யாகத்தை நிறைவேற்றி குமாரனையழைத்துக்கொண் டில ங்காபுரி வந்து சேர்ந்தான் சிலநாள் சென்றபின்பு ஒருநாள் இராவணன் காமவிகாரமேற்பட்டு முன்கொண்டுவந்து வை த்த கன்னியர்களை அழைத்துவரச் சொல்லியதை விபீஷண ரறிந்து இராவணனிடத்திற்போய் சில நீதிகளைச் சொல்லி சாந்தப்படுத்தி இன்னமொரு குறைவான செய்திசொல்லக் கேளுமண்ணா என்னவென்றால் நீர் பட்டணத்தைவிட்டுப் போனபிற்பாடு மேகநாதன் யாகஞ்செய்துக்கொண் டிருந்தா ன் கும்பகர்ணனனவன் நித்திரையிலிருந்தான். நான்ஜலத்தி லே தபசுசெய்திருந்தேன் அந்தச்சமயத்தில் மதுவென்னப் பட்ட அசுரன் வந்து சேனைகளை யழித்து நமது சிறியதா யாராகிய கும்பநகியை வலிதிற்பற்றிக்கொண்டுதன்பட்டணம் போனானென்றுசொல்ல அவன்கேட்டு மனங்கொதித்து அவ னையிப்பொழுதே வதைக்கிறேனென கும்பகர்னன் முதலிய சகலசேனைகளையுங் கூட்டிக்கொண்டு மதுவென்னப்பட்ட வன் நித்திரையிலிருந்தான். அவன்பாரியாளாகிய கும்பீநசி யானவள் இராவணனுடைய காலில்விழுந்து அழுதாள் அவ னும் சிறியதாயையெடுத்து உபசரிக்க அவள் மங்கிலியப்பிச்

சைகொடுவென்று சில நீதிகளைச்சொல்ல, இராவணன்மனங்க சிந்து உன்னுடைய அபீஷ்டம் எனக்குஞ் சம்மதமே இனி யொரு விகற்பமுமில்லையென்று மதுவென்பவனுடன் மன மகிழ்ந்து விருந்துண்டு அன்றையதினம் அவ்விடத்தில் தங் கியிருந்தான்.

## இராவணன் அரம்பை நளகூபனிவர்களாற் சபிக்கப்பட்டது.

இராவணனனவன் மறுநாளுதயத்திலே மதுவென்பவ ன்தன்னுடைய சேனையுடனே வரும்படியாகப் புறப்பட்டுதே வலோகத்தை நாடிப்போக நடுவழியில் ஓர் வனத்தைக்கண்டு அதில் சகலசேனையோடு இறங்கித் தானொருவனாகப் புறப் பட்டு அந்தவனத்திலுள்ள சிங்காரங்களைப்பார்த்து வரும் போது அழகெல்லாந்திரண்டு ஒருவடிவமாகவிளங்கும் யதிரூ பசௌந்தரியத்தையுடைய அரம்பையானவள் நளகூபரனிட ம் நாடிச்சென்றனள். அவளைக்கண்டு மோகங்கொண்டு பலா த்காரமாய் மேல்விழுந்து புணர்ந்து சுகம் அனுபவித்தான் அவள் மனங்கொதித்து அடா பாவியே நீ யென்னுடைய பதிவிரதா தருமத்தையழித்துப்போகிறாய் எந்தகாலத்திலாவ துபதிவிரதைகளா யிருக்கிற ஸ்திரீகளைத் தீண்டுவாயானால் அவர்கள் சாபத்தினாலே இப்போதென் வயிறெரிகிறதுபோல நீயெரிந்துபோவாயென்று சாபங்கொடுத்து அவனைத் தப்பி க்கடந்து தனது நாயகனாகிய நளகூபரனிடத்திற்சென்று நட ந்த சங்கதிகளைச் சொல்ல அவர்கேட்டு பாவியான இராவண ன் எக்காலத்திலாவது ஒருவருடைய ஸ்திரீயைத் தீண்டுவா னானால் அவனுடைய பத்துத்தலைகளும் ஏழு பிளவாக வெடி க்கக்கடவதென்றுசாபங்கொடுத்தான், இராவணனனவன் அ ன்றிராத்திரி முழுதும் காமவிகாரத்தால் துன்பமுற் றிருந் தான்.

## இந்திரன் கட்டுண்டல்.

இந்தப்பிரகாரம் அந்தவனத்திலே இராத்திரி முழுதும் மோகவிகாரத்தினால் நித்திரையின்றி துன்பப்பட்டுக்கொண் டிருக்கிற விராவணன் மறுநாளுதயகாலத்திலே சிந்தைதெ ளிந்து சகலசேனைகளுடன் சுவர்க்கலோகத்தை நாடிப்போ கும் பொழுதில் அந்தச்சேதியை தேவேந்திரனறிந்து பயந்

துவைகுண்டத்துக்குப்போய் விஷ்ணுவைக்கண்டு சுவாமி இராவணனனவன் வரத்தின் பலத்தினால் பூலோகத்தைப்பாழாக்கி எங்களையுந் துன்பப்படுத்ததேவலோகத்தைநாடிசேனைகளுடன்வருகிறான் நாங்களென்னசெய்வோமென்று முறையிடமகாவிஷ்ணுகேட்டு நாமே அந்த இராவணன் முதலானவர்களைச் சங்கரித்து உங்களை யிரட்சிக்கிறோமென்று உத்தரவு கொடுத்தனுப்ப, தேவேந்திரன் நம்முடைய அமராவதி பட்டணத்திற்கு வருவதற்குமுன்னமே இராவணனுடையசேனைகள் சுவர்க்கலோகமெங்கும் பரவி ஆரவாரித்திருக்கிற சப்தங் கேட்டு தேவர்களெல்லோருங்கூடி ராட்சதாளுடைய துன்பத்தினால் உள்ள நாளளவும் உபத்திரவப்படுவமோ ஆனாலுமித்துடனே தேவர்களாவது அசுரர்களாவது செயிப்பதுஅல்லது இறப்பதென்று இரண்டிலொன்றை பின்றைக்கே யறியவேண்டுமென்று எல்லோருமொருமித்து வடவாமுகாக்கினிபோலக்கலந்து கொடியயுத்தம் செய்கையில் அந்த யுத்தத்தைப்பார்க்க பிரமதேவர் அவ்விடம் வந்தனர் அவர்மகிழும்படி தேவர்களெல்லோரும் அட்டகாசம்பண்ணி அஸ்திரங்களை பிரயோகித்து ராட்சதசேனைகளைக்கண்டதுண்ட மாக்கும்போது சுமாலியானவர் பானுகோபன் முதலிய சேனாபதிகளுடன் நெருங்கி சூலம்வேல்முதலிய ஆயுதங்களினால் தேவர்களைச் சின்னபின்னப்படுத்த அதைச்சாவித்திர னென்னும் தேவசேனாபதியானவன் கண்டு மிக்ககோபங்கொண்டு சுமாலியைத்தடுத்து அனேகபாணங்களினால் அவனுடையவில்தேர் முதலியவைகளை அதஞ்செய்து உடனே ஒருதண்டாயுதத்தையெடுத்து சுழற்றியெறிய அந்தத்தண்டாயுதமானது சுமாலியினுடைய சிரசை நசுக்கிக்கொன்றது அதை மேகநாதன்கண்டு தேவசேனையைமடக்கி தும்சஞ்செய்யும்போது தேவேந்திரன் குமாரனாகிய சயிந்தவனானவ னெதிர்த்துக் கொண்டு மேகநாதனிவனோ அவனோவென்று சந்தேகிக்கும்படி கொடுமையாகிய யுத்தம்செய்கையில் சயந்தன் சிலபாணங்களில் மேகநாதனுடைய சாரதி தலையை யறுத்துத்தள்ளினான். சாரதிபோனதைக்கண்டு அனேகபாணங்களினாலே சயந்தனுடையமார்புமுழுதும் பாணத்தால் நிறைத்தான் அதனால் சயந்தன் மூர்ச்சையடைந்தான் அதுகண்டு அவன் பாட்டனாகிய புலோமன் எதிர்த்துயுத்தஞ்செய்ய சயந்தன்மூர்ச்சையடைந்தசங்கதி தேவேந்திரன் கேட்டு மிக்ககோபங்கொண்டு மாத

லியை யிரதங்கொண்டு வரச்சொல்லி யுத்தசன்னுத்தனுய் சகலசம்பிரமத்துடனே தேரேறி யுத்தகளத்திற் பிரவேசிக்க மேகநாதன் கண்டு எதிர்த்து ஆகாயமெங்கும் பாணமயமாக நிறையும்படி சரவருஷம் பொழிந்து தேவர்களுடைய கண்ணிலுமனதிலும் தானுகவே காணும்படிக்கு வாயினுற் சொல்லிமுடியாத கொடியயுத்தஞ்செய்யும் அளவில் கும்பகர்ணனனவன் கண்கள் சிவந்து அண்டம் வெடிப்பட பூமிநடுங்க அதிசீக்கிரமாகச்சென்று போர்களத்திற்புகுந்து தண்டாயுதத்தினுலே அடித்து தேவர்களை நொறுக்கி மோதிசிதைத்துக்கொன்று இப்படி பலவிதமான யுத்தஞ்செய்தான் அதுகண்டுதேவர்கள் அஸ்திரங்களினுற்சாடினுர்கள், அப்போதிராவணன் பிரளயகால ருத்திரனைப்போலக் கோபங்கொண்டு அதிவேகமாகத் தேரைமுடிக்கி வில்லைவளைத்து நாணேற்றிட்டுநெருப்புமழை பெய்தாற்போல் பாணங்களை வருஷித்து சின்னபின்னமாய் வதைக்கும்போது தேவேந்திரன் பார்த்து மிகவுங்கோபங்கொண்டு சரமாரியாய் அஸ்திரங்களைப் பொழியும்போது இராவணன் சாரதியை யெச்சரித்து எதிரே நின்றசேனையைப்பேதித்து உள்ளேபோகும் பொழுது அதைக்கண்டதேவேந்திரன் பிந்திப்போனுன் அப்பொழுது இராவணனனவன் நாறுயோசனை தூரம் விஸ்தாரம் நிறைந்த தேவசேனையினுள்ளே தேரைமுடுக்கித்திரும்பி பாணங்களினுலேமடிக்கும்போது தேவேந்திரனனவன் அநேகசேனைகளைக்கூட்டிக்கொண்டு பலம்பொருந்திய ஐராவதத்தின் மேலேறிக்கொண்டுவந்து இராட்சதசேனைகளைக் கண்டதுண்டமாக்கும்பொழுது மேகநாதன்கண்டு இவனையுத்தஞ்செய்து வெல்லக்கூடாது வஞ்சனையினுலேவெல்லவேண்டுமென்றுகருதி உலகமெங்கும் யுகாந்தகாலத்திருள் மூடும்படிமாயைசெய்து மயக்கினனப்போது தேவேந்திரன் முதல் சகலரும்சிந்தைகலங்கி மயங்கி நின்றுர்கள். அதுகண்டுமேகநாதன்பாசத்தினுலே தேவேந்திரனைக்கட்டி இராவணனுக்கு எதிர்கொண்டுபோய் நிறுத்தி இந்த தேவேந்திரன் என்கையிலகப்பட்டான் இனிமேல் நமக்கொருபகையுமில்லை யென்றுசொல்ல அதுகேட்டு ராவணன் மிகச்சந்தோஷமாகி மகனைத்தழுவி உபசரித்துத் தானும் மேகநாதனுங் கட்டுப்பட்ட இந்திரனும் கும்பகர்ணனும் சகலசைனியங்களும் சுவர்க்கலோகம்விட்டு இலங்கைப்பட்டணத்திற் பிரவேசித்து தேவேந்திரனைச் சிறையில்வை

த்து மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்திருந்தான் அப்படி யி
ருக்க தேவர்களெல்லோரும் பிரமதேவரிடஞ்சென்று முறை
யிட்டார்கள் அதுகேட்டு தேவர்களையும் அழைத்துக்கொண்
டிலங்காபுரிக்குவந் திராவணனைக்கண்டு ஆசீர்வாதஞ்செய்து
ராவணனைப்பார்த்து கேளும் தசக்ரீவனே உமக்குச்சமானமா
னவர் திரிலோகங்களிலுமில்லை உம்முடைய புத்திரனானவன்
திரிலோகாதிபதியாகிய இந்திரனை செயித்து சிறையில்வைத்
தான் இக்காரணத்தினாலே மேகநாதனுக்கு இன்றுமுதல் இ
ந்திரசித்தென்று பெயர் விளங்கக்கடவதென்றுசொல்லி இந்
திரனை சிறைவிட்டனுப்பும்படிதயைசெய்ய வேணுமென்றார்.
அதற்கு இராவணன் சுவாமி! தேவரீர் கட்டளையை யாங்
கள் மறுப்பதில்லை ஆயினும் நித்தியதத்துவத்தை எனக்குக்
கொடுத்தீரேயாகில் நீர்சொல்லியபடிநான்விடுவேனென்றான்
அதை பிரமதேவர்கேட்டு ஈஸ்வரனைத்தவிர மற்றெவருக்கும்
நித்தியதத்துவங் கிடையாது நம்மாலேகொடுக்கப்படாத வர
த்தைக்கேட்கிறது தருமமல்லவென்று சொன்னார். அப்போ
து இந்திரசித்தனானவன் பிரமதேவரைப்பார்த்து நான் இனி
மேற்செய்யும் யாகத்திலுண்டாகும்பலன் இரதத்தின்மீதேறி
யுத்தகளம்புகுவேனாகில் செயம்பெறும்படியாகவரங்கொடுமெ
ன்றுகேட்க. அப்படியே அந்தயாகம் இடையூறின்றி முடியு
மானால் நீசத்துருக்களை செயிக்கக்கடவதென்று அனுக்கிரக
ஞ்செய்தார் இந்திரசித்தனானவன் மிகவுஞ்சந்தோஷத்தை ய
டைந்து சிறையிலிருக்கும் இந்திரனை வரவழைத்து பிரமதே
வருக் கெதிரில் விட்டான். அப்போது பிரமதேவர் இந்திர
னைநோக்கி கேளாய் தேவராசனே முன்பு கௌதமர் கொடுத்
தசாபத்தினாலே இப்படிப்பட்ட துன்பம் நேரிட்டது ஆன
தால் விசனப்படவேண்டாமென்று தேவேந்திரனுக்குச் சொ
ல்லி இராவணனிடத்தில்உத்தரவுபெற்று தேவர்களுடன்தே
வேந்திரனை சுவர்க்கலோகத்தில் போயிருக்கும்படி யனுப்பி
அந்தப் பிரமதேவர் தம்முடைய சத்தியலோகத்திற்குப் போ
யினார்.

## கார்த்தவீரியார்ச்சுனனால் இராவணன் கட்டுண்டல்.

---

இத்தப்பிரகாரம் அகஸ்திய மகாமுனிவர் ராவணனு
டையதிக்குவிஜயங்களெல்லாம் சொல்லக்கேட்டு ஸ்ரீராமர் மிகு

ந்த ஆச்சரியப்பட்டு அகஸ்தியரைப்பார்த்து அந்த ராவண னாலே அனேக ராசாக்கள் அழிந்துபோனாரென்றும் இந் திரன் கட்டுப்பட்டானென்றும் சொன்னீரே இந்த உலகத்தி லே ராவணனுக்கு மேலானவரொருவருமில்லையோ அவன் ஒருவராலே அபஜயப்பட்டதில்லையோவென்று கேட்க, அக ஸ்தியர் ஸ்ரீராமரைப்பார்த்து சொல்லுகிறார் கேளும் ராகவா இந்த உலகமெல்லாம் தனது ஆக்கினைப்பிரகாரம் நடக்கும்ப டி அரசுசெலுத்திய கார்த்தவீரியார்ச்சுனனிடத்திலும் வாலி யினிடத்திலும் இராவணன் கட்டுப்பட்டானென்று சொல்ல, பின்னும் அதிசயத்தை யடைந்தவராய் ராவணன் கட்டுப்ப ட்ட விதங்களை விவரித்து சொல்லுமென்றுகேட்க அகஸ்திய பகவான் சொல்லுகிறார். கேளும் ரகுநந்தனா முன்னமொரு காலம் ஆயிரந்தோள்களுடைய கார்த்தவீரியார்ச்சுன னென் னப்பட்டவன் உலகத்தில் யாவரையும் வெற்றிகொண்டு லங் காபட்டணத்தைச்சார்ந்து ராவணனென்பவனை யுத்தத்திற்கு வரச்சொல்லுங்களென்று சொல்லி ராவணனுடைய மந்திரி கள் கேட்டு நதிதீரத்துக்குப் போயிருக்கிறாரென்று சொல்ல அதுகேட்டு ராவணனைதேடிக்கொண்டு வரும் வழியில் விந் தை பருவதத்தைக்கண்டு அவ்விடத்திலிருந்தான் அவனுக் குமுன்போன ராவணனும் அந்தப்பருவதத்தின் பக்கத்திற் செல்லும் நருமதையைக்கண்டு தீர்த்தமாடி மணலாலே சிவ லிங்கம் வகுத்து பூசைசெய்திருக்குமளவில் அந்தநதிக்குமே லாக நெடுந்தூரத்தில் கார்த்த வீரியார்ச்சுனன் அனேகஸ்தி ரீகளுடன் ஜலக்கிரீடைசெய்ய தன்னுடைய கைகளினால் அந் த நதியை யணையாகக்கட்ட அதனால் ஜலம்பெருக அந்தஜல மானதுதேங்கி புரண்டுகரைகளையுடைத்து ஓடுகின்ற வெள் ளமானது ராவணன் பூசையை யழித்துப்போக அதுகண்டு வெகுண்டு சுகசாரணரையழைத்து வெள்ளம் வரவேண்டிய காரணமென்ன அறிந்து வாருங்களென்றனுப்ப அவர்கள் ஆக்கினைப்படிபோய்கண்டுவந்துராவணனைநோக்கிகார்த்தவீ ரியனால் வந்தவெள்ளமென்று சொல்லக்கேட்டு கடுங்கோபங் கொண்டு மந்திரிமார்களுடன் அதிவேகமாய்ச்சென்று யுத்த த்திற்கழைத்தவனுடைய மந்திரிமார்கள் முதலிய சேனைகளை தும்சப்படுத்தும்போது இதைக்கார்த்தவீரியன்கேட்டு கடுங் கோபங்கொண்டு எதிர்த்து இராவணனுடைய சகல சேனைக ளையும் சின்னாபின்னப்படுத்தி ராவணனுடனெதிர்த்துப்போர்

புரியும்போது ராவணனானவன் ஒருகதையெடுத்து தன்பல முழுதுங் கொண்டு கார்த்தவீரியன் மார்பிலடித்தான். அதற்கு எள்ளளவும் சலியாமல் நகைத்து அடா ராவணா என்பலத் தைப்பாரென்று கதையினால் ஓரடியடித்தான் அந்த அடிபொறுக்காமல் இடிவிழுந்த நாகம்போல் செயலழிந்து நின்றான் அதைக் கார்த்தவீரியன் கண்டு ராவணனைத்தோளோடுதோள் சேர்த்திறுக்கிக்கட்டி நடத்திக்கொண்டுபோகும் பொழுது பின்னுமெதிர்த்த மகோதரன் முதலிய சேனைகளைத் துரத்திய டித்து தன்னுடைய பட்டணம்போய் ராவணனைச் சிறையில் வைத்து சந்தோஷத்தையடைந்திருந்தான் இச்செய்தியை விபீஷணன்கேட்டு விசனமடைந்து தன்பாட்டனாராகிய புலஸ்தியரிடத்திற் சென்று சகலமுந் தெரிவிக்க அவர் உடனே புறப்பட்டு கார்த்த வீரியார்ச்சுனன் பட்டணம் வந்து அரசனை ஆசீர்வதித்துச் சொல்லுகிறார். இராவணன் நெடுங்காலம் தபசுசெய்து பெற்றபலத்தினால் இந்திரனைச் செயித்ததனாலிறுமாப்புற்று உம்மிடத்தில் அகப்பட்டுக்கொண்டான் உமக்கு னிகரானவர் ஒருவருண்டோ ஆகையால் ராவணன்மேல்வைத்த கோபத்தை நீக்கி சிறைவிடும்படி தயைசெய்ய வேணுமென்று சொல்ல புலஸ்தியரும் பிரமலோகம்போனார் இராவணன் லங்காபுரி பட்டணஞ் சேர்ந்தான்.

## வாலியின் வாலில் இராவணன் கட்டுண்டல்.

---

இந்தப்பிரகாரம் அகஸ்தியர்சொல்ல இராமர்கேட்டுசந்தோஷப்பட்டு வாலியினிடத்திலுங் கட்டுப்பட்டதை சொல்ல வேணுமென்றுகேட்க அகஸ்தியர் சொல்லுகிறார் கேளும்சீதாலட்சுமி நாயகா அந்தராவணன் கார்த்தவீரியனிடத்தில் முன்பு தான்பட்டபாட்டை எல்லாமறந்து அகங்காரத்தையடைந்து சகலசேனைகளுடன் புறப்பட்டு உலகத்தி லெதிர்ப்பட்ட யாவரையும் நாசமாக்கிக்கொண்டு கிஷ்கிந்தா பட்டணத்துக்குப்போய் வாலியென்னப்பட்டவன் எவன் அவனெங்கேபோயிருக்கிறனென்று கேட்டான். அதற்குவாலியினுடையமனைவியான தாரையானவள் இராவணனைப்பார்த்து நீவாலியைத்தேடுகிற காரியமென்னவென்றுகேட்டாள். நான் வாலியுடன் யுத்தம்பண்ணவந்தேனென்றான் அதற்கவள்கேளாய்இராவணா நீ வாலியுடன் யுத்தஞ்செய்ய வலியுடையவனோ முன்பு உன்னைப்போல அறிவில்லாமல் வந்துயுத்தம்பண்ணி

யிறந்துபோன துந்துமி முதலானவர்களுடைய எலும்பு குவிந்துகிடக்கிற இந்த மலையைப்பார்த்ததில்லையோ ஆகையால் நீபோர் செய்ய நினைப்பாயாகில் உன்னுடைய எலும்பு இம்மலையிற் குப்பையாய்ச்சேருகிறது நிச்சயந்தான். அப்படியல்லவென்றால் வாலியானவர் தென்சமுத்திரத்தீவுக்குப்போயிருக்கிறார் அவ்விடத்திற்குப்போனால் காண்பாயென்றுசொன்னாள். அப்படியே இராவணன் தன்னுடைய மந்திரிமார்கள் முதலானவருடனே அவ்விடத்தில் நின்று நீங்கிப்புறப்பட்டு தெற்கு சமுத்திரத்தீவு சேர்ந்தான். அப்பொழுது அங்கேமுன்னம் ஒருகாலம் முப்பது முக்கோடிதேவர்களும் ஒருபக்கமும் தானொருபக்கமாக நின்றுதிருப்பாக்கடலைக்கடந்து தேவர்களுக்கு அமிர்தங்கொடுத்த பராக்கிரமம் பொருந்திய வாலியானவன் சிவபூசைமுகத்திலே கண்மூடிக்கொண்டு தேவத்தியானம் பண்ணிக்கொண்டிருக்கிற வாலியைக்கண்டு எளிதிற்பிடித்துக் கொள்ளலாமெனக் கருதியடியோசைப்படாது மெதுவாக நடந்துவர இதைக்கீழ்க் கண்ணாற்கண்ட வாலியானவன்கண்டுங் காணாதவன்போலிருந்தான் அந்தச்சமயத்தில் இராவணன் வாலிக்குப்பின்னேவந்து ஒரேபாய்ச்சலாகப்பாய்ந்து இருபதுகைகளினாலும் கட்டிப்பிடித்தான் அப்படிப்பிடித்த இராவணனை வாலியானவன் ஒருகையினாலே பற்றிகக்கத்துக்குள் இடுக்கி நெருக்கி தன்னுடையவால் நுனியிலே ஒருமணியாகக் கட்டிவிட்டு சிவபூசைகுறைவில்லாமற்செய்து அந்தவாலியானவன் ஒரேபாய்ச்சலாக முப்பத்து மூவாயிரம் யோசனைதூரங்கடந்து மேற்கடற்றீவுக்குப்போய் அவ்விடத்தில் சிவபூசைமுடித்து அங்கிருக்கும் வடக்குக்கடல்முதல் கிழக்குக் கடல்வரைக்கும் பாய்ந்து அங்கங்கு சிவார்ச்சனைசெய்து பின்னுமொரு பாய்ச்சலாகப்பாய்ந்து கிஷ்கிந்தாபட்டணம் வந்துசேர்ந்தான் அப்போது அவன் பாரியாளாகிய தாரையானவள் வாலியைப்பார்த்து உம்முடைய வாலிலேகட்டுப்பட்டு சரீரமுழுவதும் நொறுக்கி மிகவுந் துன்பத்துடனே பயந்துகிடக்கும் இவன் எவனென்று கேட்டாள் அதற்கு அவளைப்பார்த்து இன்றைக்கு பத்துத்தலைப்பூச்சி யகப்பட்டது இதை நீபார்க்கும்படி கொண்டுவந்தேனென்று சொல்ல, அவள் உமது வல்லமைக்கு இவனொருலட்சியமோ ஆனதால் தயவுசெய்து விடவேணுமென்று வேண்டிக்கொண்டாள். அப்படியே செய்கிறேனென்று கட்டவிழ்த்துவிட்டு

இராவணனைப் பார்த்து யுத்தம்பண்ண இச்சையுண்டானால் இப்போதே செய்யென்று சொல்ல இராவணன் வாலியைப் பார்த்து நான் உம்முடன் யுத்தம்பண்ணத்தக்கவனல்லன் நீர் என்னைவேறுபாடாக நினையாமல் சிநேகிதனாகக் கொள்ள வேண்டுமென்று தாழ்ந்துசொல்ல, அப்படியே சம்மதித்து தன்னுடைய கிருகத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் போசனஞ்செய்வித்து நீ எனக்கு முதன்மையானதோழன் என்று சொல்லி யனுப்புவிக்க இராவணனும் வாலியினிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு தன்னுடைய இலங்கா பட்டணம் வந்து சேர்ந்திருந்தான்.

## அனுமார் வரலாறு.

இந்தப்பிரகாரம் வாலியினுடைய பலபராக்கிரமமுதலானமேன்மைகளையும் இராவணனுடைய உற்பத்தி முதற்கொண்டு வாலியினுடைய வாலிலே கட்டுப்பட்டதுவரைக்கு முள்ள சரித்திரங்களையெல்லாஞ் சொல்லக்கேட்டுஸ்ரீராமர்மிகவுஞ் சந்தோஷத்தை யடைந்தவராய் அகஸ்திய பகவானைநோக்கி முன்புதான் வனவாசஞ்செய்து வரும்போதுசுக்ரீவனுக்கும் எனக்கும் சிநேகம்செய்வித்து பெரிதான சமுத்திரத்தைத் தாண்டியும், அப்பொழுது எதிர்ப்பட்டசாயாக்கிரகணியுடைய குடலைப்பிடுங்கி அவளைவதைத்தும், அசோகவனத்தை அழித்தும், சம்புமாலிமுதலானவர்களைச் சிதைத்தும் இலங்காபுரி பட்டணத்தைக் கொளுத்தியும், சீதையினுடைய பிராணனை யிரட்சித்தும், பின்பு எனது இடத்திற்குவந்து என்னுடைய சோகத்தை தீர்த்தும், சமுத்திரத்திலே சுலபமாக அணை கட்டிவித்தும், பிரம்மாஸ்திரத்தினாலே கட்டுப்பட்டு மூர்ச்சை யடைந்திருக்கும் பொழுதில் வடக்கே வெகு தூரத்திலிருந்து சஞ்சீவிமலையைப் பேர்த்தெடுத்துவந்து சகலரையு மிரட்சித்தும் இன்னம் அனேகவித காரியங்களாலே எனக் குபகாரஞ் செய்தவனாய் தான் நினைத்தபடிக்கு ரூபங்கொள்ளத்தக்க சித்திவல்லமை முதலாயுள்ள சிலாக்கிய குணமெல்லாம் பெற்று விளங்கும் இந்த அனுமானுடைய உற்பத்தியும் சரித்திரமும் விபரமாகச் சொல்லவேணுமென்று கேட்க அகஸ்தியபகவான்சொல்லுகின்றார்.

கேளும் தசரதநந்தனா,முன்னமொருகாலம்வாய்வுபகவானிடத்திலிருந்த ருத்திர வீரியத்தினால் அஞ்சனாதேவி கர்ப்

பத்தில் சாமளவர்ணம் இரத்தினகுண்டலம் தவள எக்கியோ மவீதம் நீண்டகைகள் அகண்டமார்புகளுடன் அனுமான் பிறந்தவுடனே மாதாவைவணங்கி எனக்குமிகவும் பசியாயி ருக்கிறது இந்தப்பசிதீரத்தக்க பதார்த்தங்க ளென்ன வென் றுகேட்க, அதற்கவள் வனங்களில் சிவந்து பழுத்திருக்கும் மதுரமாகிய பழங்களென்றுசொல்லித் தன்மகனுடைய பசி யாற்றவேண்டி கனிகள் கொண்டுவர வனத்துக்குப்போனாள். தாய்வருவதற்கு முன்னமே அனுமாருக்கு கொடுமையான பசியுண்டாகி பரிதாபப்பட்டுக்கொண்டிருக்கிற சமையத்தில் உதையகாலத்திற் சூரியனுதித்தான் அந்த சூரியவிம்பத்தைக் கண்டு தனக்குச் சொல்லிய சிவந்த கனிவகைகளில் இஃது மொருகனிதானென்று நினைத்து சூரியன்மேற் பாய்ந்தான், அதை தேவர்கள்கண்டு நமது சத்துருக்களாகிய விராட்சதர் கள் இந்த அனுமானால் என்னதுன்பத்தை யடைவார்களோ வென்று ஆச்சரியத்தை யடைந்தார்கள், பிதாவாகிய வாயு பகவான்கண்டு சூரியகிரணங்கள் குளிர்ந்திருக்கக் கடவதென் று வரங் கொடுத்தபடிக்குப் பாய்ந்து கவ்விக் கொண்டிருக்கும் அனுமானுடைய பராக்கிரமத்தைக் கண்டு பயந்துதேவே ந்திரனிடத்திற்போய் சுவாமீ சந்திர சூரியமண்டலங்களைப் பற்ற வெனக்கு முன்னம் வரங்கொடுத்திருக்க இப்பொழுது வேறொருவன் பற்றும்படி நேரிட்டகாரணமென்ன நான்செய் தகுற்றமென்னமோவென்று முறையிட்டான் அதுகேட்டுதே வேந்திரன் கோபத்துடனேஐராவதமேறிக்கொண்டதிகவேக மாகப்போய் நீ சூரியனைப்பிடியென்றுராகுவையேவினான், அ தை யனுமான்கண்டுஇராகுவின்மேலேபாயஅவன்நடுங்கிஉள றிக்கொண்டோடி தேவேந்திரன்காலடியில்விழுந்து புலம்பி னான். அதுகண்டு தேவேந்திரன் மிகக்கோபத்துடனே ஐரா வதயானையை பிரசண்டவேகமாக நடத்தி யனுமார்மீதில் சீறி வரும்பொழுது ஐராவத யானைமுகத்தில் சிவப்பாய் விளங்கு ஞ்சிந்தூரப்பொட்டு வட்டத்தை யிதுவுமொரு கனிதானோ வென்றெண்ணி யனுமார் வெள்ளையானையின்மேற் பாய்ந்த னன், தேவேந்திரன் கண்டு தன்னுடைய வச்சிராயுதத்தினா லே அடித்தான், அந்த அடியினாலே அனுமார் மூர்ச்சைய டைந்து பூமியில்விழுந்தான் அதைவாயுபகவான் கண்டுகோ பித்து லோகமெங்கும் வாயுசஞ்சாரமில்லாமற்செய்துதனது புத்திரனாகிய அனுமாரையெடுத்துக்கொண்டு இமயகிரியைச்

சேர்ந்துஒருகுகையில்பிரவேசித்திருந்தான் அப்பொழுதுஉல கமெங்கும் வாயுவியக்கமில்லாதபடியினல் எண்பத்து நான் குநூறுயிரம் யோனிபேதங்களாயுள்ள சகலபிராணிகளும்வயி றுவீங்கி துன்பப்படுகிற சமயத்தில் தேவர் முதலானவர்கள் போய்பிரமதேவரிடத்திற் சொல்ல, அவர் வாயுபகவானிருக் குமிடம்வந்து தேறுதலைச்சொல்லி மூர்ச்சித்துக்கிடக்கும் அ னுமாரையெழுப்பி தம்முடன்வந்த தேவர்களைநோக்கி இந்த அனுமாருக்கு வரங்கொடுப்பீரென்றருள்செய்ய, அப்படியே இந்திரர்முதல் அஷ்டதிக்குப்பாலகரும் தங்கள் தங்களுடை ய ஆயுதங்களினல் மரணமடையாதிருக்கவும் விசுவகர்மாஎந் தஆயுதத்தினலும் சாவில்லாமல் வரங்களைக் கொடுக்க அத ன்பின்பு பிரமதேவர் தம்முடைய பிரமதண்டத்தினலே நாச ப்படாமலிருக்கக்கடவதென்று சிரஞ்சீவியாக விருக்கவும் வர ங்களைக்கொடுத்துபிர்மாஸ்திரஉபாய நிவாரண மந்திரோபதே சஞ்செய்து வாயுபகவானைநோக்கி உன்புத்திரன் இராவண னுடைய லங்காபட்டணத்தை யெரித்தழித்து இராட்சசர்குல த்தைவேரறுத்து ராமனையனுசரித்து அவருடையஅனுக்கிர கத்தினலே பிரமபதத்தை யடையக்கடவதென்று யனுக்கிரகி த்து தங்கள் தங்கள் லோகத்தைச்சேர்ந்தார்கள்.

கேட்டீரோ இப்படி சமஸ்ததேவர்களிடத்திலும் பெற்ற வரத்தினுடைய மகிமையினலே இவ்வனுமான் சற்றுச்செரு க்குற்று தனக்கு நிகரொருவரு மில்லையென்று அகங்காரகர்வ த்தையடைந்தவனய் மதோன்மத்தனய் மகா ரிஷிகளுடைய ஆச்சிரமங்களிற்புகுந்து யாகபாத்திரங்களை யுடைத்தன முத லான பலவித விகாதஞ்செய்து திரியுங்காலத்தில் ஒருநாள் மு னிவர்களெல்லோரும் அனுமார்செய்கிற துஷ்ட செய்கைக ளைச்சகிக்க முடியாமல்மிகவுங் கோபங்கொண்டு எல்லோரு மொருவாக்காகத்தன்னுடைய பராக்கிரமந்தனக்குத் தெரியா மற்போகக்கடவதென்று சபித்தார்கள் அந்த சாபத்தினலே அனுமார் தன்னுடைய அகங்காரமும் கோபமுமடங்கி சாப த்தையடைந்தவனகி நாமிந்த மகாரிஷிகளுக்கு அபசாரத் தைச்செய்தவனனேமென்று, வெட்கத்தை யடைந்தவனகிய தன்பின்பு மதங்கமாமுனிவருடைய ஆசிர்மத்தை யடைந்து அவ்விடத்திலிருக்கும் சுக்ரீவனைப் பிராணசிநேகிதனக தோ ழமைகொண்டு மதங்கமாமுனிவரைக்கண்டு வணங்கி அனு மதிபெற்று வேதவேதாங்கமுதலானசகலசாஸ்திரங்களுமோ

தியுணர்ந்தபின்பு இவன் அருக்கன் மாட்டுச்சென்று எல்லா வியாகரணங்களையும் அவற்றின் விருத்திபாடிய முதலானவுரைகளையும் நவ்வியாகரணமும் போதிக்கவேணுமென்று கேட்க, அதற்கவர்நாமேரியிருக்கும் இந்தரதமானது ஒருசுவாசகாலத்திற்கு இருபத்தோராயிரத்தறு நூறுயோசனை தூரம் வேகமாகச் சதாகாலமும் சஞ்சரித்துக்கொண்டிருப்பதால் ஓரிடத்திலிருந்து பாடஞ்சொல்வதற்கு சாவகாசமில்லையே இப்படியிருக்குமென்னிடத்தில் கற்றுக்கொள்வதற்கு வல்லமையுண்டாகில் ஓதுவிக்கிறேமென்றுசொல்ல அதற்கனுமான்சூரியபகவானைப்பார்த்துதேவரீருடைய அனுக்கிரகத்தினலே இந்தவித்தையைக்கற்றுக்கொள்வதற்கு எனக்கு வல்லமையுண்டாயிருக்குமென்றுசொல்லி யுடன்பட்டுக்குருவினிடத்தில்எதிரிலிருந்து பாடங்கேட்பதுபோல சூரியனுக் கெதிர்முகமாகவே அந்தரதவேகத்துக்குப் பின்னிடாமல்ஆகாசமார்க்கத்திற் பாய்ந்தபடியால் ஆறுதினத்திலே அந்தநவ வியாகரணமுழுதும் கற்றுக்கொண்டான் அன்றியும் தயாளம்சாந்தம்சத்தியம்ஞானம்நிகருவகுணம்பிரயத்தினம்செய்தகாரியங்களை விகாதபடாதபடி முடிக்கும் வல்லமை நம்பினேர்களைப் பாதுகாக்கும் மனேதிடமுதலான இவைகளில் இவனுக்குச் சமானமானவர்களொருவருமில்லை இவனலே தேவர்களெல்லாம் சவுக்கியத்தை யடைவார்கள், இவனுமளவில்லாதமேன்மை பொருந்திய இந்த அனுமானனவன் உம்முடையதிருவடிப்பணிவிடையை விரும்பி யும்மைவிட்டு நீங்காதிருப்பானகில் உம்முடைய குணத்துக்கும் கீர்த்திக்கும் சமானமுண்டோ வென்று இப்படியனுமானுடைய சரித்திரங்களெல்லாம் ஸ்ரீராமருக்குத் தெரியச்சொன்னர்.

## வாலிசுக்ரீவர் உற்பத்திவரலாறு.

---

அதுகேட்டு ஸ்ரீராமர் மிகவும் களிப்படைந்து வாலி சுக்ரீவருடைய உற்பத்தியும், தேவேந்திரன் சூரியன் அவர்களுக்குபிதாவானகாரணமுந்தெரியச்சொல்லவேண்டுமென்று கேட்க, குருமுனிசொல்லுகிறுர். கேளும் ஸ்ரீராமச்சந்திரா,பூருவமொருகாலம் நான்தவஞ் செய்யுமிடத்திற்குநாரதர்வந்தார் அவரைவாலிசுக்ரீவர் எந்தஸ்திரீனிடத்திற்பிறந்தார்களென்றுநான்கேட்க, அவர்சொன்னதைச் செல்லுகிறேன் கேளுமென்றுசொல்லுகிறுர். மகாமேருவின் மத்தியசிரகத்தில் பிர

மதேவரானவர்யோகநிட்டையி லிருக்கும்போதவருடையநே த்திரங்களிலிருந்து ஜலந்துளிவர அதை தமதுகரத்திலேந்தி நோக்கும்போது மகாசூரத்தன்மையுடைய ருட்சவிருஜ னென் னும் புருஷவானரம்பிறந்தது அதைப்பார்த்து சந்தோஷ மடைந்து நீ இந்தபருவதத்தின் வனங்களில்சஞ்சரித்துகனி வர்க்கமுதலியவைகளைப்புசித்திருவென்று ஆக்யாபித்தார் அ தேபிரகாரம் அந்தவனங்களிலுள்ள புட்பங்களை யெடுத்துவ ந்துபிதாவாகியபிரமதேவரைபூசித்துகனிவர்க்கமுதலியதைபு சித்து அவ்வனத்தில் சஞ்சரித்திருக்கும்போது ஒருநாள்வட க்குநோக்கும்போது அவ்விடத்தில் மகாசிரப்போடுங் கூடிய ஒருபொய்கையைக்கண்டு அதிலிறங்கி ஸ்தானபான முதலிய நேமநிஷ்டைகளைமுடித்துக் கரையேறி யக்குளத்தைப் பார்க் கும்போது அக்குளத்தில் தன்னுடைய சாயைதோன்ற அச் சாயை வேறொரு குரங்கென்று நினைத்து வானர புத்தியில் அதைப்பிடிக்கக்கருதி தடாகத்திற்குதித்துத்தடவி காணமல் படியேறி நின்றவுடனே அத்தடாகத்தின் மகிமையினலேஆ ண்ரூபம்போய்பெண்ரூபமாகி யவ்வனத்தில் சஞ்சரிக்கும்போ து பிரமதேவரிடம் வந்திருந்துபோகும் தேவேந்திரனுடை ய வீரியமானது வெளிப்பட்டு அந்தஸ்திரீயினுடைய சிரசில் விழுந்துவாலினிடநிற்க வாலியுற்பத்தியானன் அப்போதே சூரியனுடைய வீரியமானது ஸ்கலிதமாகி அவளுடையகண் டத்தில் விழுந்து கண்டத்தினிடமாகநிற்க சுக்ரீவன் பிறந் தான். இதைதேவேந்திரன்கண்டு மகிழ்ந்து வாலிகழுத்திற் போட்டு தன் தேவலோகத்தில் சேர்ந்தான். சூரியன் மகிழ்ந் துகண்டத்தினிடமாக நிற்கப் பிறந்தமையால்சுக்ரீவனென்று ம் பெயர்கொடுத்தனுப்ப மச்சகி விருத்தியடையக் கடவ தென்றுசொல்லி யஸ்தமானத்திற்குப் போய்விட்டான் இப்ப டியிருக்க மறுநாட்காலமே அவளுடைய ஸ்திரீரூபம் நீங்கி முன்போலப் புருஷரூபம்வந்தவுடன் கண்டு ஆச்சரியமடை ந்து தனது குமாரர்களிருவரையு மழைத்துக்கொண்டு பிரம தேவரிடம்வந்து நமஸ்கரித்து வணங்கி நடந்தசங்கதிகளைச் சொல்லி பிரமதேவர் தன் குமாரனையும் பேரப்பிள்ளைக ளிருவரையுங் கண்டுமகிழ்ந்து நீ வானரப்புத்தியினலே செ ய்த காரியம் ஆகிலும் பெரிதல்ல நீ இந்த குழந்தைகளை யழைத்துக்கொண்டு கிஷ்கிந்தா பட்டணத்திற்குப்போய் வா னரர்களுக்கு அரசனக வாலிக்குப் பட்டங்கட்டி சுக்ரீவனை

யிளவரசாக்கி நீங்கள் சுகித்திருங்களென்று சொல்ல அவ்வுத்தரவைப்பெற்று ருட்சவிருஜனென்னும் வானரன் சொல்லுகிருன். சுவாமி! அத்தடாகத்தில் முழுகினவுடன் ஸ்திரீயாகவேண்டிய காரணமும்மறுநாள் பழையபடி புருஷனுகவேண்டிய காரணமும் தெரியச்சொல்ல வேண்டுமென்றுகேட்க பிரமதேவர் சொல்லுகிருர். முன்னமொரு காலம் பார்வதிதேவியார் தனதுதோழிகளுடன் அக்குளத்தில் விளையாடிக்கொண்டிருக்கும்போது இராட்சதாள் ஸ்திரீரூபங்கொண்டு அவர்களும் அக்குளத்தில்வந்து விளையாடுவதைப் பார்த்து பார்வதிதேவியார் அறிந்து இன்றுமுதல் இக்குளத்தில் எவர்கள் வந்து முழுகிஞலும் ஸ்திரீயாகப் போகக்கடவதென்று சாபமிட்டுப்போயினுர். அப்படி யிருக்க நான் ஒருநாள் பார்வதி தேவியாரை அச்சாபத்தை நிவர்த்திசெய்யும்படி கேட்டேன் ஆனுல் ஒருநாள் மாத்திரம் ஸ்திரீ ரூபமாகி மறுநாள் முன்போல ஆண்ரூபமாகக் கடவதென்று வரங்கொடுத்தார். அதனுல் நீ முழுகினவுடனே பெண்ரூபமாயும் மறுநாள் எப்போதும்போல ஆண்ரூபமாயினையென்று பிரமதேவர் சொல்லி மூவரையும் கிஷ்கிந்தைக்கு அனுப்பிவைத்தார். அப்படியேகிஷ்கிந்தைக்குவந்து வானர அரசனுக வாலிக்குப் பட்டந்தரித்து சுக்ரீவனை இளவரசாகவும் இராச்சியபாரஞ் செய்துவந்தார். அதன்பிறகுநடந்த சங்கதிகளெல்லாம் தங்களுக்குத்தெரிந்ததே யொழிய வேறில்லையென்று அகஸ்தியர் சொல்ல ராமர்கேட்டு அடங்காமகிழ்ச்சி கொண்டிருக்க இப்பொழு தவ்விடத்திலுள்ள எங்களுக்கு நித்திய நியமகாரியங்க ளனேகமாயிருந்தாலும் சதாகாலமும் உம்மைவிட்டுப் பிரிந்திருப்பதற்கு மனங்கொள்ளவில்லையென்றுசொல்ல; அதுகேட்டு ராமர் உம்களுடைய தபோமகிமையிஞலல்லவோ எங்களுடைய ராஜரீகமும் லோகபரிபாலனமுண்டாயிற்று. ஆனதால் நீங்கள் நாடோறும் சகல நியமங்களினின்றும் தவருமல் நித்திய நித்திய நியமமான சத்கருமாநுஷ்டானங்கள் வழுவாமல் நடத்திவருவதே உங்களுடைய பாரமுங்களுடைய வாச்சிரங்களுக்கு எழுந்தருளலாமென்று உபசரித்துவணங்கி பின்சென்றனுப்பிவைக்க அகஸ்தியபகவான் முதலானமகாரிஷிக ளெல்லாரும் ஆனந்த சந்தோஷத்தை யடைந்தவர்களாய் ஸ்ரீராமனுக்கு அனேகமான ஆசீர்வாதஞ்செய்து வாழ்த்தித் தங்களுடைய ஆசிரம

த்தைச்சேர்ந்திருந்தார். அதன்பிற்பாடு ராமபிரான் தன்மாம னாகிய ஜனகமகாராஜாவைப்பார்த்துஐயா நீங்கள்இங்குவந் து நாட்செசன்றபடியால் நகரத்திற்கு செல்ல விருப்பமா யிரு க்கலாம், எல்லாம் உங்கள் அனுக்கிரகம் என்று அருமையா யுள்ள வஸ்திராபரண முதலானவைகளுங்கொடுத்து உபசரி த்தனுப்பிவிட்டு சகலவித அரசர்களுக்கும் பூஷணதிகள்கொ டுத்து அவரவர்களுக்குத்தக்க மரியாதைசெய்து விடைதந்து அளவில்லாத பிராமணர்களுக்கனேகங்கோடி திரவியதானங் கொடுத்து சுக்ரீவனுக்கு இரத்தினமாலையும், அங்கதனுக்கு வைடூரியமாலையும், அனுமாருக்கு முத்துமாலையும். விபீஷண னுக்குத் தன்னுடைய தேவபூஜையாகிய மூலதனமும், சயிந் தன் துவிதன்சாம்புவந்தன்சுசேஷணனன்ரிஷபன் முதலான வானரவீரர்களுக்கு விதம்விதமாயுள்ளவஸ்திரபுஷணங்களு ம் கொடுத்தனுப்பிவிக்க சுக்ரீவன் முதலானவெல்லோர்களும் மகாசந்தோஷத்துடனே தாங்கள் வாசஞ்செய்யு மிடங்களி ற்போய்ச்சேர்ந்திருந்தார்கள் பிறகு முப்பத்துமுக்கோடி தே வர்கள் வாழ்த்த அயோத்திமா நகரில் பரதசத்துருக்கலட்சு மண சீதாசமேதராய் ராமமூர்த்தியானவர்சகலவைபவத்துட ன் அரசுசெலுத்தி வந்தார்.

அப்படிவானரவீரர்முதலியசகலருக்கும் விடைகொடுத்த னுப்பி உலகத்திலுள்ள வெல்லோருஞ்சந்தோஷத்தையடை ந்துவாழ்ந்திருக்கும்படி மநுநீதிதவறுமற்செங்கோல்செலுத் தி யிராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டுவரும் நாளில் சில காலஞ்சென்றபின்பு ஒரு நாள் மிகுந்த விசித்திரமாய் அமை க்கப்பட்டு நந்தவனத்திலு மேற்பட்டதா இராநின்றபிருந் தாவனத்திற்சென்று மனையாட்டியாகிய சீதாதேவியுடன் ஸ்ரீ ராமமூர்த்தியானவர் வேடிக்கையான பலகதைகளைப் பேசிக் கொஞ்சிக்குலாவிக் கொண்டிருந்து கடைசியில் என்னுயிர்க் குயிரான காதலியாகிய சனகன்பெற்ற இரத்தினமே நீ வயிறு வாய்ந்திருப்பது எனக்குச் சர்வக்களிப்பைத் தருகின்றது, இ ப்போது உனக்கு என்னவேண்டுவது யாதுவிரும்புகின்றனை உண்மையாகஎனக்குச்சொல்லென்று ஸ்ரீராமமூர்த்தியானவர் மிகுந்தமனக்களிப்புடன்கேட்கஅதையந்தஜானகிபிராட்டியா ர்கேட்டு அதிக சந்தோஷத்தையடைந்து புன்னகையுடன் ஸ்ரீராமரைப்பார்த்துச் சொல்லுகிறாள்.சுவாமிதயதாட்சண்ய தயிரியசவுரியாதி சகலகல்யாணகுண பூர்ணரான கர்த்தாவா

கிய தேவரீரைப் பெற்றிருக்கிற அடியாளுக்கு விரும்பத்தக்க தேதுமில்லை ஆயினும் சுவாமியே இங்ஙனம் நியமிப்பதினால் ஒன்று வேண்டுகிறேன் அஃதென்னவெனில் இன்னமொரு தரம் கங்கைக்கரையிலுள்ள முனிவர்களின் ஆச்சிரமங்களிற் சென்று அவர்கள் திருவடிக்கீழ்க்குற்றேவல்செய்துக்கொண்டு அவ்விடத்தி னழகைப்பார்த்து அநுபவிக்க வேண்டுமென்னும் விருப்ப மிருக்கிறதென்று சீதாதேவியார் விண்ணப்பஞ் செய்தாள் அதற்கு அந்தஇராஜசிகாமணியான ராமமூர்த்தியானவர் அப்படியே ஆகட்டுமென் றருளிச்செய்து பிறகுசபாமண்டபத்தில் தம்பிமார்களுடன் அரசாட்சி செய்துக்கொண்டிருந்தார்.

இந்த உத்தரகாண்டத்தில் இராவணன் கும்பகர்ணன் விபீஷணன் இந்திரசித்து முதலாகிய அசுரர்களுடைய உற்பத்தியும், அவர்கள் தவஞ்செய்து பெற்றவரங்களையும், இராவணனுடைய திக்குவிஜயமும், அநுமாருடை யவுற்பத்தியும் வாலி சுக்ரீவர்களுடைய உற்பத்திமுதலானவைகளையுஞ் சொன்னோம், இனிமேல் சீதையம்மன்வனமேகுதலும், குசலவர்களுற்பத்தியும், ராமர் அஸ்வமேதயாகஞ்செய்ய குதிரையை விடுத்தலும், ஆங்காங்கு எதிர்த்தராசாக்கள் முதலியவர்களை வெல்லுதலும், குசலவாளுடைய யுத்தமும், அஸ்வமேதயாகமும், மகாவிந்தமும், இவைமுதலானவைகளை இனி கூறப் புகுவாம்.

ஸ்ரீமத் கம்பராமாயண வசனச்சுருக்கம்

உத்தரகாண்டத்துடன் ஏழுகாண்டமும்

முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீ ராமர்

# அஸ்வமேதயாகம்.

உத்தரகாண்டத்தின்

## கதையின் வரலாறு.

என்பதுஸ்ரீமத்ராமாயண காவியமாகியவிராவணசம்மார முடிந்தவுடனே இராமரானவர் அஸ்வமேதயாகஞ் செய்யும்படியாய் நினைத்து வசிஷ்டர் திருவாக்கின்படி அஸ்வத்தை மந்திரா பூதிகளினூற் பூசைபுரிந்து திக்குவிஜயஞ்செய்யும்படியாய் குதிரையின் பின்னல் சத்துருக்க மகாராசனையுஞ் சதுர்வித சேனைகளையுங்கூட்டி யனுப்பினுர்.

அப்போது அந்த அஸ்வமானது காடுகள் மேடுகள் வனங்கள் வனந்திரங்கள் ஊர்கள் இவைகளையெல்லாங் கடந்து வரும்வழிகளில் குதிரையைப் பிடித்துக்கட்டிய இராசாக்களையெல்லாஞ் சத்துருக்கமகாராஜன் தனது அஸ்திரங்களினூற் சின்னப்பட அடித்து புறமுதுகுகாட்டி யோடும்படி செய்து வீராவேசத்துடன் வரும்போது அஸ்வமானது வால்மீகமகாரிஷி ஆசிர்மத்திலிருக்கும் ஜானகியம்மன் இளைய குமாரனுகிய லவனுனவன் அந்த அஸ்வத்தைப் பிடித்துக் கட்டி குதிரையின் பின்னேவந்த இராட்சதரையுங்கொன்று சிங்கத்தைப்போல கற்சித்து நின்றுன். அதைக்கண்ட சத்துருக்கமகாராசன் லவனேடெதிர்த்து வெகுநேரம் போராடி அவனைமூர்ச்சையாக்கி கைப்பிடியாகப் பிடித்து தனதுதேறிற் கட்டினுன்.

அதனைக்கண்ட அவ்வனத்துப்பெண்கள் சீதையினிடத்திற்கு ஓடிவந்து அம்மா உன்னிளையகுமாரன் யாகத்திற்கு விட்ட குதிரையைப் பிடித்துக்கட்டி குதிரையின் பின்னே வந்த சேனைகளையெல்லாங்கொன்றுன். அந்தச்சேனைகளுக்கு எசமானுகவந்தசத்துருக்கன் லவனைப்பிடித்துக்கொண்டு போ

கிருன் அம்மணியென்ருர்கள். அதைக்கேட்ட ஜானகியம்மனடித்துமோதி பூமியில்விழுந்து ஐயோமகனே லவகுமாராவென்று புலம்புகிற சத்தத்தை குசலன்கேட்டு ஓடிவந்து ஏனழுகிருயம்மாவென்று கேட்க, அப்பா மகனே ஆரோ ஒருராசன் உன்தம்பியைப்பிடித்துக் கொண்டுபோகிருனும் நீபோய் அவனை செயித்து தம்பியை மீட்டுக்கொண்டு வருவாய்மகனே என்று இராமருடைய பிரசண்ட கோதண்டமும் அஸ்திரங்களுங் கொடுத்தனுப்ப குசலனப்படியே சென்று சேனைகளையெல்லாங்கொன்று சூரசேனனையும் வீரசேனனையும்மூர்ச்சையடையச்செய்து பின்பு சந்தனமகாராசன் சாத்மீகராசனைக்கொன்று சத்துருக்க மகாராசனேடெதிர்த்து அவரையும் பரதரையும் தோல்வியடையச்செய்து லவனைக் கட்டவிழ்த்து விடலவனும்வில்லை வளைத்துயெதிர்த்தான். அதுகண்ட அனுமார் அங்கதன் மட்சயந்தனுமார் முதலிய யாவருங் குசலனைக்கண்டு அக்கினியைக்கண்ட சருகுபோலும் அழகிய கருடனைக்கண்ட அரவங்கள்போலுமாகி அல்லோல கல்லோலப்பட்டு அஸ்திர சஸ்திரங்கள் முரிபட்டு அரக்கருடன் வானரர்களுங் குசலவர்களிருவரிடத்தில் வில்லாலடிப்பட்டு வெட்கங்கெட்டு விடாய்பட்டு விருதுகெட்டு வித்தைகெட்டு வெற்றியடையாமல் புத்திகெட்டு தடுமாறி இராமருடைய திருவடியைக்கோரி அவரிடஞ்சென்று அருகாமையில் நின்று இச்செய்தியைக் கூறினர்கள்.

அதனைக்கேட்ட இராமர் கோபமீறி தேரேறி சாரதியைத்தூறி கண்கள் சிவப்பேறி சித்தமிகநொந்து யுத்தகளம் வந்து மாண்டவர்களைப்பார்த்து மற்றவர்களைச்சேர்த்துநல்லதென்ன மனதிலெண்ணி வில்லைகுணத்தொனிபண்ணி அட்டகாசஞ்செய்து குசலவர்களைப்பார்த்து அவர்களோடெதிர்த்து அவர்கள் தீரத்தைக்கண்டு மதித்து புத்திரரென்ற வாஞ்சையினுற் பொய்ப்போரினைக்கொண்டு போராடி இராமர் பரதர் சத்துருக்கர் மீளாமல் மாளவே குசலவர்களும் அவர்களுடைய ஆபரணம் முடிவிருதுக் கொடியுமெடுத்துக்கொண்டு அனுமார் ஜாம்புவந்தர் அஸ்வமேதக்குதிரையுடனுந் தங்களிருப்பிடமாகிய வால்மீகர் வனம்வந்தார்கள். இதனை ஜானகியம்மன் கண்டு தந்தைகளைக்கொன்று வந்தார்களென்று பயங்கரங்கொண்டு வால்மீகருக்குக்கூற வால்மீகர்வாயுபகவா

ஞல் கமண்டலத்திலிருந்த அமிர்தத்திஞல் ஸ்ரீராமர் லட்சும ணர் பரதர் சத்துருக்கர் முதலியயாவரையுமெழுப்பிஞர். அக் காலேயில் தேவர்கள் புஷ்பமாரிவரிஷித்தார்கள்சகலரிஷிகளும் புடைசூழ முப்பத்து முக்கோடி தேவர்களுடன் நாற்பத்தெ ண்ணுயிரம் ரிஷிகள் சூழவும், பரமேஸ்வரர் பார்வதியுடன் வருகவும் அன்னவாகனத்தின்மீது பிரமதேவனுனவர் மேவ வுஞ்சிவசுப்பிரமணியர் வள்ளியம்மன் தெய்வானேயுடன் புள் ளிமயிலின்மீதுவந்து உலாவவும் வெள்ளேயானேயின்மீதில் இந்திரராசன்வந்து பொருந்தவும், கண்ணுவர் ஜமதக்கினி கலேக்கோட்டுமகாரிஷி வதிஷ்டர் கௌசிகர் துருவாசர்முதலா னதபோதனர்கள் வந்துபோற்றவும் ஸ்ரீராமலட்சுமணர் பரத சத்துருக்கர்களுடன் அவ்வனத்திற் கொலுவிருந்தார், அத் தருணத்தில் வால்மீகமகாரிஷியும் நாரதரும் இராமரைப்பார் த்து ஓ ராமமூர்த்தியே நீ உம்முடைய பெண்சாதிபிள்ளேகளே சுகமாக அழைத்துக்கொண்டு அயோத்தியாபுரிக்குப் போமெ ன்றுகூற இராமர் மௌனமாயிருந்தார். பின்னும் வால்மீகர் ஜானகியம்மன் தனது ஆசிர்மம் வந்ததுமுதல் பிள்ளேகளுற் பத்தியானது வரையில் விரிவாகச் சொல்லியும் வேறுமொழி கூறாமலிருந்தார்.

அதனேக்கண்டுணர்ந்த ஜானகியம்மனுனவள்முன்போல் மறுபடியும் அக்கினியைவளர்த்தி அதில் இருபிள்ளேகளோ டுதுதித்து மாசுமறுவில்லாமல் தேஜசுபொருந்திய இருபிள் ளேகளோடு நீந்திவிளேயாடி வெளியில்வந்ததைக்கண்ட தே வர்கள் முதலியயாவரும் ஆனந்தங்கொண்டு சிலர்வாழ்த்தவு ம்மலர்தூற்றவுமிருக்கையில் இராமபிராஞனவர் தேவர்களி டத்திலு முனிவர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டுசீதர் பிராட்டியுடன் இலட்சுமணர் பரதர் சத்துருக்கர் லவன் குச லரோடு தேரேறி யாவரும்புடைசூழ சேனேகள்தாழ அஸ்வ மேதக்குதிரையுடன் அயோத்தியாபுரிபட்டணஞ்சென்றுவதி ஷ்டர் திருவாக்கின்படி அஸ்வமேதயாகத்தை நிறைவேற்றி தேவர்களுக்கு அவிர்ப்பாகங்கொடுத்து அனேகதான தரும ங்களேச்செய்து பின்பு சிலநாள் பொறுத்து அயோத்தியாபு ரியை குசலவர்களுக்கு பட்டங்கட்டிவித்து தம்பிமார்களாகிய லட்சுமணர் பரதர் சத்துருக்கர் மூன்றுபேர்களுடனும் ஸ்ரீரா மரானவர் வைகுந்தஞ் சேர்ந்ததாக நாரதர் வால்மீகருக்கு

அறிக்கைசெய்ய வால்மீகர் குசலவர்களுக்கு ஸ்தானபானநேமநிஷ்டைகள் செய்துக்கொள்ளச் சொல்லியபின்பு அஸ்வமேத யாகமண்டபத்தில் தெர்ப்பாசனத்தின்பேரி லுட்காரவைத்துக்கொண்டு ஒருவர்பேரில் சுவாசம் விடாமலும் வாயில் தாம்பூலம் போடாமலும் அட்டங்கால் போடாமலும் பக்திவிசிவாசத்துடனே இராமாயணம்ஆதிமூதல் ஸ்ரீராமர் வைகுந்தம் போனவரையில் மேற்படி குசலவர்களுக்கு அருளிச்செய்த இக்கதையைப் படித்தவர்களும் ஸ்ரீராமருடைய கிருபாகடாட்சத்தினல் சகலபாக்கியங்களும் சம்பத்தும் அஷ்டஅயிஸ்வரியமுந் தீர்க்காயுளும் புத்திரசந்தானமும் மேன்மேலும் பெருகவுண்டாகி மிகவாழ்வார்கள் சரதம்.

கதையின் வரலாறு முற்றிற்று.

---



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

# ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம்.

## உத்தர காண்டம்.

காப்பு.

கலிவிருத்தம்.

கையிலாழி யெடுத்தருள் கண்ணனை
மையுலாம்விழி மங்கையர்பாகனை
உய்யவந் துதையஞ்செய்த பானுவை
வையமுண்ட செவ்வாயனை வாழ்த்துவாம்.

என்றுண்டவராய் விளங்கப்பட்ட வால்மீகர் சொல்விய ராமாயணத்தில் பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், உயுத்தகாண்டம், உத்தரகாண்டமென்று விளங்கும் ஏழுகாண்டத்தி லிப்போது சொல்லப்பட்டஉத்தரகாண்டத்தினுடையகதாப்பிரசங்கம் வால்மீகர் சுலோகப்படி பீமகவிராயரானவர் தமிழிலே அர்த்தசாரம் பண்ணிக்கொண்டு வருகிறூர், இராமாவென்றுல் பாவம்போம் ராமா வென்றுல் ஜென்மசாபல்யமாகும் ராமா வென்றுல் ஆபத்து நீங்கும் இப்படி சொல்லப்பட்ட உத்தரராமாயணப் பிரசங்கத்தில் சொற்பிழை பொருட்குற்றங்க ளிருந்தாலும் வித்துவ சிரோமணிகளா யிருக்கப்பட்ட பெரியோர்களங்கீகரிக்கக் கடவதென்று விநாயகர் பூசை செய்து உத்தரராமாயணத்தில் குசலவர்களுடைய கதாப்பிரசங்கங்களை திருவாய்மலருகின்றூர் எப்படியெனில்.

## ஸ்ரீராமர் அரசிருத்தல்.

ஸ்ரீராமச்சந்திர சுவாமியானவர் இராவண சம்ஹாரஞ் செய்து சீதாபிராட்டியுடன் பட்டாபிஷேகராயிருக்கையில் சதகண்ட ராவணனென்றுஞ் சகஸ்திரகண்ட ராவணனென்றுஞ் சொல்லப்பட்ட இரண்டு ராக்கதர்கள் பன்னீராயிரம்வெள்ளஞ்சேனைகளுடனேவந்து யுத்தஞ்செய்து ரணக்களத்தில் மடிந்தபிறகு சீதாதேவியுடன் அயோத்தியில்வந்து ராச்சியபாரஞ்செய்துக்கொண்டிருக்கும் நாளையில் ஒருநாட்காலமே எழுந்து காலைக்கடன்களை தீர்த்துக்கொண்டு போசனமருந்தி ஆடையாபரணங்களணிந்து கிரீடம்பூண்டுகையில் கோதண்டத்தைப் பிடித்துக்கொண்டு ஆசாரவாசலிலேவந்தார். அப்போது ஆயிரங்கன்னிமார்கள் வந்து ஆலாத்தியேந்த தம்பிமார் புடைசூழ பொற்பிறம்புக்காரர் பராக்கு எச்சரிக்கை கூற டமாரபேரிகை வாத்தியங்கள் முழங்கும்படியாய் சபாமண்டபம் வருகிறபோது படைத்தலைவர் சேனுபதிகளும் எதிரே வந்து பணிந்து நிற்க சகலமானபேரையும் ஆசீர்வதித்து சபாமண்டபத்தி லுட்கார்ந்தார் அங்குபரதர் லட்சுமணர் சத்துருக்கர் ஒவ்வொருபடி தாழ்ந்துட்கார்ந்தார்கள் கட்டியக்காரர் கட்டியங்கூற கவிவாணர் புகழ மேனகை அரம்பை ஊர்வசி திலோர்த்தமைக்ருச்சரியானமாதர்கள் நடனம்புரிய, ஊர்க்கணக்கப்பிள்ளைகள் கணக்கைஒப்புவிக்க ஊர்காக்குந் தலையாரிகள் அயோத்தியில் நடக்கப்பட்ட சமாச்சாரங்களை அன்றைக்கன்றுடம் வந்துசொல்ல, ஊர் பெரிதனக்காரர் தினந்தினங் காணிக்கைகப்பத்துடனே எதிர்கொண்டுவந்துஸ்ரீராமமூர்த்தியைவணங்க நால்வகைச் சேனைகளுடனும் நிறைந்து கொலுவாயிருக்கையில் இராசாக்களுஞ் சேனுபதிகளும் தளவாய்களுஞ் சினேகிதர்களும் ஊரிலுள்ள பெரியோர்களும் வந்துவணங்க ஸ்ரீராமரானவர் அவரவர்களை ஆசீர்வதித்து உட்காரும்படியாய் உத்தரவுகொடுக்க யாவரும் உட்கார்ந்தார்கள்.

இப்படியாக ஸ்ரீராமமூர்த்தியானவர் நிறைந்தகொலுவாய்வெகு ஆடம்பரங்களுடனே தேவேந்திரன் கொலுவைப்போல சகலதேசத்தரசர்களும்வணங்க அவரவர்களுக்குத் தக்கபடி உத்தரவு அளித்துக்கொண்டு ராஜநீதி முறைதவருமல்

ராஜரீகம் பண்ணுங்காலையில் திங்கள் மும்மாரிபெய்யயாதொன்றுங் குறைவில்லாமல் சம்பா கார் கேழ்வரகுமுதலியநவதானியங்களும் விளையும் அதில் ஒன்பதுபங்கு குடிகளுக்கு வாரங்கொடுத்து ஒருபங்கு தானதருமங்கள்செய்துகொண்டுசெபதபஹோமம் விரதம் புரிந்து தேவர்களும் ரிஷிகளும் வாழ்த்த ஒருவரும் நிகரில்லாமல் அயோத்தியாபுரிபட்டணத்தை அரசாட்சிசெய்து வருகிறநாளில் ஒருநாள் சூரிய னஸ்தமித்தவுடனே சகலருக்கும் விடைகொடுத்து ஸ்ரீராமர் லட்சுமணர் பரதசத்துருக்கருடனே சபாமண்டபம்விட்டு அரண்மனைசென்று மாலை ஜெபதபங்களை முடித்துக்கொண்டு போஜனமருந்திபள்ளியறைபோய் சயனித்துக்கொண்டார்கள் சகல வுயிர்ப்பிராணிகளும் அரவமடங்கினபிற்பாடு ஊர்க்காவற்காரரும் தலையாரிகளும் இராத்திரிபதினைந்து நாழிகைக்குமேல் தடிதமுக்கை யெடுத்துக்கொண்டு ஏழுசுற்றுக் கோட்டையுஞ் சுற்றிபட்டணத்திற்குள் நுழைந்து பிரம க்ஷத்திரியவைசிய சூத்திரரென்கிற நான்குசாதிவீதிகளுங் கஸ்துசுத்தி வருகிறபோது அந்த வீதிகள்சுபசந்தோஷ மங்களகரமாக ஆனந்தவைபோகத்துட னிருக்கிறதுகண்டு வீதிதோறுந்தப்பாமல் அங்கங்குசென்று வீடுகள்தோறும் பார்த்துக்கொண்டு வருகிறபோது ஒருவீட்டில் ஒருவண்ணான் தன்பெண்சாதியை யடித்தான். அப்பெண்சாதியானவள் பிணங்கி அண்டைவீட்டிற்போயிருந்தாள் மாமி நாத்தினரும்போய் அழைத்தார்கள் அதற்கந்தவண்ணான் மனையாள் சொல்லுகிறாள் நீங்களென்னை அழைக்கிறீர்கள் நான் வருகிறேன் மறுபடியும் என்னையடிப்பான் நானல்லவோபடவேண்டும் எனக்காக நீங்கள் தொந்தரவுபடவேண்டாம் என்புருஷன்வந் தழைத்தால்தான்வருவேனென்றாள். அதுகேட்டு அவர்களும் உண்மைதானென்று வந்துவிட்டார்கள்.

அப்போது அந்தவண்ணானவன் தன்றொழிலை யெல்லாஞ்செய்து வீட்டிற்குவந்துபோசனஞ்செய்துதாம்பூலமருந்திவாசலிற்பாயைப்போட்டுபடுத்துக்கொண்டான். அத்தருணத்தி லவன்தாயார் அவனைப்பார்த்து அடாதம்பி உன் பெண்சாதி சண்டைபோட்டு மூன்றுநாளாய் அயல்வீட்டில்போயிருக்கின்றாளே அவளைச் சமாதானப்படுத்தி நாளைகாலமே அழைத்துவாவென்றாள். அதுகேட்டவண்ணான் கண்சிவந்

து அதிககோபங்கொண்டெழுந்து தாயாரைப்பார்த்து அடி யம்மா பயித்தியம்பிடித்தவளே மூன்றுநாளாய் நமதுவீட்டை விட்டு அண்டைவீட்டுக்கு போயிருக்கிற பெண்சாதியை நா னென்ன கூப்பிடுவேனோ அந்தராமன்பெண்சாதியான சீதை யை ராவணனிடத்தில் பத்துமாதம்வைத்துவிட்டு குரங்குசே ணகளைக்கூட்டிக்கொண்டு ராவணனுடனே சண்டைபண்ணி ராவணனைக்கொன்று சீதையையழைத்துவந்து சிம்மாசனத் தின்பேரில் உட்காரவைத்து பட்டமுந்தரித்து பட்டாபிஷேக ராய் ராஜரீகம்பண்ணுகிறான் மூன்றுநாள் அப்புறம்போயிரு ந்தவளை யழைத்து வீட்டில்வைத்துக் கொள்வேனேயானால் என்சாதிக்கீனம் வந்துவிடும். நமதினத்தார் நகைக்கமாட்டா ர்களா! என்குலம் அந்தராமன் குலத்தைப்போலல்லவீடுவிட் டுப்போனவளை இனிநானழைக்கிற தில்லையென்றான். அதற் குவண்ணான் தாயாரானவள்மறுவார்த்தைசொல்லாமல்மௌ னமா யிருந்துவிட்டாள்.

இவைகளையெல்லாம் பதுங்கியிருந்து நன்றாய்க் கேட்ட தலையாரிக ளிதற்கென்னசெய்வோம் இராமருடனே எப்படி வாய்திறந்து சொல்லுவோம் சொன்னா லென்னமாய் முடியு மோ சொல்லாவிட்டாலும் ராமத்துரோகம்விடாது அவனை வெட்டித் தானெறிந்து போடுவோமானால் ராமத்துரோகம் விடாதே லட்சுமணர் கேட்டாரேயானால் ஒரேபாணத்திலெ ய்து போடுவாரே பரதர் சத்துருக்கர் கேட்பாரேயானால் வா ளுக் கிரையாக்கிவிடுவாரே மகாபதிவிரதா சிரோமணியாகிய சீதை கேட்பாளேயானால் சாம்பலாகஎரிந்துபோகசாபங்கொ டுப்பாளே நாம் ராமருடைய அரசில்பொய் சொல்லப்போகா தே என்னவென்று தான்மனம்வந்து இராமருடனேபோய் கூசாமற் சொல்லுவோம் சொன்னநாவு மழிந்து போமே லோகமாதாவான சீதாலட்சுமிபேரிலே குற்றஞ் சொல்லத் தருமோ லோகத்தையெல்லாம் யீன்றெடுத்த மாதாவாச்சுதே ரசகனவண்ணான் புத்தியில்லாமற் சொன்னசொல்லை நாம் எப்படிசொல்லுவோம் என்னசெய்வோம்ராமாராமாவென்று தலைமேற் கையைவைத்து கன்றிழந்த பசுபோற் கதறிக்கொ ண்டு வருகிறபோது பொழுதுவிடிய ஐந்துநாழிகையில் ராம ரெழுந்திருந்து காலப்பிரவிர்த்தி தீர்க்க வெளியிலே வந்தார் அதுகண்டு தலையாரிகளும் நமஸ்கரித்து நின்றார்கள் ராம மூர்த்திதிடுக்கிட்டு மனதுகலங்கி அழுதுக்கொண்டுவந்த காரி

யமென்ன மலைகலங்கினாலும் உங்கள்மனது கலங்காதே யார்தான் உங்களையடித்தவர்கள் அசுரரோ எவர்களானாலுஞ் சரி எமலோகமேத்தி விடுகிறேன் சீக்கரஞ் சொல்லுங்களென்று ராமமூர்த்தியானவர் வினவ.

அதுகேட்டு தலையாரிகள் சொல்லுகிறார்கள் ஐயாரகுநந்தனா நாங்கள் சொல்லப் பயப்படுகிறோமென்றார்கள். அதற்கு ராமமூர்த்தியானவர் வாரும் தலையாரிளே மழைகாற்று இடி நெருப்புஎன்கின்ற இந்நான்குக்கும் பயப்படுவீர்களே யல்லாமல் மற்றப்படி அசுரர் தேவர் எமன் இவர்களுக்கு என்கைபாணமிருக்கச்சே நீங்கள் பயப்பட்டுவந்தகாரண மென்னபயப்படாமல் மனதைத்தைரியப்படுத்திக்கொண்டு சஞ்சலமில்லாமற் சொல்லுங்களென்றார் அப்போதுதலையாரிகள் மனதைத் தயிரியப்படுத்திக்கொண்டு ஸ்ரீராமரைக்கொண்டாடி அவரைப் பார்த்து ஐயா ஜனார்த்தனா தங்க ளுத்தாரப்படிக்குத் தினந்தோறும்பட்டணத்தில் நகர்சோதனை பார்த்துக்கொண்டுவருவோம் உத்தமமானவிசேஷமாயிருக்கும் சிலமொழிகளை நாள்தோறும் அறிக்கையிட்டுப் போவோம். இன்றிராத்திரி பதினைந்துநாழிகைக்குமேல் அயோத்தியாபுரி பட்டணத்திலுள்ளவீதிகள் வீடுகள் தோறும் பார்த்துக்கொண்டு கடைசியில் வண்ணாரவீதிவருகிறபோதுபுருஷனுடனேசண்டைபண்ணி அண்டைவீட்டில் மூன்றுநாளாய்ப் போயிருக்கிறாள் நாளைகாலமே அவளைச்சமாதானப்படுத்தி அழைத்துவா வென்று மாதாவானவள் சொல்ல அதுகேட்டுபிள்ளையானவண்ணான் அம்மாபயித்தியம் பிடித்தவளே அந்தராமன் பெண்சாதியை ராவணன் எடுத்துக்கொண்டுபோய் பத்துமாதம் வரையில் வைத்திருந்தான். அதையறிந்து ராமன் குரங்குசேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய் அந்தராவணனையும்ராட்சதர்களையுங் கொன்று சீதையை யழைத்துக்கொண்டுவந்து பட்டாபிஷேகமுந் தரித்து சிங்காதனத்தில் வைத்துக்கொண்டு ராசரீகம் பண்ணுகிறான் அப்படி என்வாசற்படிவிட்டு அயல்வீடேறி மூன்றுநாளாக போயிருப்பவளை நானழைத்துக்கொண்டு வீட்டில் வைத்துக் கொள்வேனேயானால் என்குலத்தார் என்வீட்டில்கைநனைக்கமாட்டார்கள். அந்தராமன் குலத்தைப்போல என் குலமென்றெண்ணாதே அப்படியல்லவென் றழைத்தாலும் நம்முடைய குலத்தார் நம்மையேசுவார்கள் அந்தராமனைப்போல் என்னையுமெண்ணாதே போபோ பயித்தியக்காரி

யென்று வண்ணான்சொல்ல வாய்வராமல் சும்மாயிருந்துவிட்டாள். அதுசமாச்சாரந் தங்களுக்குச் சொல்லாமற் போனோமேயானால் எங்களுக்கு ராமத்துரோக மல்லவோவென்றுதலையாரிகள் கூறினார்கள்.

அதுகேட்டு ராமமூர்த்தி தலையையசைத்துக்குஞ்சிரிப்புக்கொண்டு தலையாரிகளைப்பார்த்துச் சொல்லுகிறார் தலையாரிகளே இதனால் அவன்மீது குற்றமென்னயிருக்கிறது "உலைவாயைமூடினாலும்ஊர்வாயைமூடப்போமோ" வென்று சொல்லித்தலையாரிகளை யனுப்பிவிட்டுத் தான் காலப்பிரவர்த்திக்குப் போய் காலலம்பிக்கொண்டு தந்தசுத்திபண்ணி அனுஷ்டானங்களைமுடித்து அரண்மனையில்வந்து போசனமருந்தி கற்பூரதாம்பூலமெடுத்துக்கொண்டு லோகமாதாவான சீதையம்மனுடனேமுகங்கோணாமல் சரசசல்லாபமாய்ப் பேசி விளையாடிக்கொண்டு சற்றுநேரமிருந்து ஆடையாபரணந்தரித்துகிரீடம்பூண்டு அம்புருப்பொதி முதுகிற்றரித்து கையிற்கோதண்டத்தைப்பிடித்து ஆயிரங்கன்னிமார்புடைசூழ, வெற்றிசங்குகுறிக்க சன்னமூதரத்தினகுடைகவிய, க்ஷாமரம் மயில்விசிறிபோடவேசியர்கள்நடனம்புரிய, கட்டியங்கூற, புலவர்கள் புகழ மத்தளம் புள்ளாங்குழல் ருத்திரவீணை சங்கீத மேளவாத்தியங்கள்முழங்க, ராமரானவர் அரண்மனையைவிட்டு வெளியே புறப்பட்டார்.

அப்போது லட்சுமணரும் பரதர் சத்துருக்கரும் ஆடையாபரணம்பூண்டு கிரீடமணிந்து அம்புருப்பொதியுஞ் சாத்தி தனுசை கையிலே பிடித்துக்கொண்டு ராமரைவந்து நமஸ்கரிக்க ராமமூர்த்தியும் அவர்களையெடுத்து ஆசீர்வாதஞ் செய்தார். பிறகுமந்திரிமார்கள் சேனாதிபதிகள் தனவான்கள்படைத்தலைவர்கள் எதிர்கொண்டுசேவிக்க சகலருக்கும் ஆசீர்வாதம் புரிந்து சபாமண்டபம்வந்து முப்பத்திரண்டுசிங்கங்கள் தாங்கப்பட்ட இந்திரசிம்மாதனத்தில் ராமரானவர் வீற்றிருந்தார் பரதலட்சுமணர் சத்துருக்கரும் ஒவ்வொருபடிதாழ உட்கார்ந்தார்கள். சேனாதிபதியான சூரசேனனும் படைத்தலைவர் சேனாதிபதிகள் நால்வகைச் சேனைத்திரளும்வந்து ராமரைச் சேவித்து அவராசீர்வாதம்பெற்றுஉட்கார்ந்தார்கள். இப்படி நிறைந்த கொலுவாக சுவர்க்கராசனைப்போல ராமர் தம்பிமார்களுடனேமந்திராலோசனைகளும் இராஜநீதி திட்டங்களும் பேசிக்கொண்டிருக்கையிற் சூரியனஸ்தமித்ததைக்கண்டு ராம

மூர்த்தியானவர் மந்திரிபிரதானி நால்வகைச்சேனைபரிவாரங்களுக்கும் விடைகொடுத்து சபாமண்டபம்விட்டு தம்பிமார்களுடன் கூடப்புறப்பட்டு முப்பத்திரண்டு மேளவாத்தியங்கள் முழங்க அரண்மனைவந்து சந்தியானுஷ்டானம் முடித்துக்கொண்டு போசனமருந்தி சீதையம்மனுடனே சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்து ஒருவருக்குத் தெரியாமல் கருப்புக்கம்பளியொன்றைப் போர்த்துக்கொண்டு கரத்தில் ஒருகோலைப் பிடித்து வண்ணா வீதியாக வருகிறபோது அப்பெண்ணுக்குத் தாய்தகப்பனூர் பத்துவண்ணரைக்கூடி புருஷனையழைத்துக்கேட்கிறபோது தலையாரிகள் கூறியபடியே சொன்னான் ராமமூர்த்தியும் ஒன்றுமறியாதவரைப்போல் கேட்டுக்கொண்டிருந்தார். அப்போ தந்தவண்ணனும் ஒரேபிடிவாதமாய் அயல்வீடுபோன பெண்சாதி வேண்டாமென்று தீர்ப்புச் செய்து விட்டான்.

அப்போது ராமபிரான் மூக்கின்மீது விரலைவைத்துஇந்தரசகனை வண்ணனுக்கு நாம் ஈடாகாமற் போய்விட்டோமென்று மனம்வெட்கித் தன்னரண்மனை வந்து வேஷத்தை மாற்றிக் கிரீடந்தரித்து புஜகீர்த்தியணிந்து ஆடையாபரணந்தரித்துக் கையிற் கோதண்டத்தைப்பிடித்து ஒண்டியாய்ப் புறப்பட்டு கொலுமண்டபம் வருகையில் அப்போதந்தக்கொலுமண்டப மெப்படியிருந்ததென்றால் தங்கத்தைச்சேறுசெய்து நவரத்தினத்தாலே கற்களழுத்திபவளத்தினுற்புதுக்கிவைத்து பத்தரைமாற்றுந் தங்கத்தினுற் கால்கள்நிறுத்தி தங்கப்பாளத்தினுற் பலகைசேர்த்து அந்தப்பலகையில் நவரத்தினத்தாற் சித்திரங்களெழுதி அந்தமண்டபங்களில் நிலைக்கண்ணாடிகள்கட்டி நவரத்தின ராந்தல்கள்வைத்து அந்தநவரத்தின ராந்தல் விளக்கேற்றி ரத்தினத்தோரணங்கள் கட்டிமண்டபத்திலுள்ளே பாவுகள்பரப்பி முத்து நவரத்தினத்தாலே கோலங்களிட்டு ரத்தினக்கம்பளிகள் விஸ்தாரமாய்ப் பரப்பி அதன்மீது ரத்தினசிம்மாசன மமைத்திருக்கின்றது. அந்த சிம்மாசனத்தில்வந்துட்கார்ந்து ஆரடா சேவகனே யென்றூர் அப்போது பதினாயிரஞ் சேவகரோடிவந்து சுவாமியை நமஸ்கரித்து கைகட்டி வாய்புதைத்து நின்றூர்கள். அது கண்டு ராமமூர்த்தி சேவகர் யாவரையு மனுப்பிவிட்டு ஒரு சேவகனையழைத்து பரதலட்சுமணர் சத்துருக்கரும்இந்தமூன்று பேரையும்உன் தமையன் அழைத்துக்கொண்டு வரச்சொன்னு

ரென்று சலுதியிற்போய் அழைத்துவாவென்று அப்படியே அந்தச்சேவகன் வாயுவேக மனோவேகமாயோடி பரதர்லட்சுமணர் சத்துருக்கரை நமஸ்கரித்து சொல்லுகிறான் ஓ சுவாமிகளே! உங்களை ராமமூர்த்தியானவர் அதிசீக்கிர மழைத்துக்கொண்டுவரச்சொன்னார். பின்னேயொருசமாச்சாரமுமறியேனென்றான் சேவகனானவன்.

அதுகேட்டு தம்பிமார்மூவருங் வஸ்திரந்தரிக்க நேரமில்லாமல் கோதண்டத்தைக்கையிற்பிடித்துக்கொண்டு ஓட்டமுநடையுமாகவந்து சுவாமியை நமஸ்கரிக்க, ராமர் தம்பிமார்களுக்கு ஆசீர்வதித்து தம்பிமாரைப்பார்த்து வாருந்தம்பிமார்களே, நம்முடையவம்மிசத்திலில்லாத நடத்தை நடந்தபடியினாலே சிரமும் நமக்கு அபகீர்த்தியும் வந்து சேர்ந்தது அதென்னவெனில், இராவணன்சீதையைப்பத்துமாதமசோகவனத்தில்வைத்து நாம்போய் அவனைச் சங்கரித்து சீதையையழைத்துவந்து பட்டாபிஷேகமாய்ப் பட்டணத்தில்வைத்துக்கொண்டபடியினாலே அபகீர்த்திவந்தது. அவளை அவ்விடத்திற்றானே விட்டுவந்தோமானால் நமக்கு அபகீர்த்திவரமாட்டாது. காரணம் யாதென்றால், இப்போது நகர்சோதனைக்குப் போயிருந்தேன் அவ்விடத்தில் என்னசமாச்சாரமெனில் புருஷனும் பெண்சாதியும் சண்டைபண்ணி பெண்சாதியானவள் அயல்வீடுபோயிருந்தாள். அவள் புருஷனுக்குத் தாயானவள் பிள்ளையைப்பார்த்து அடா! தம்பி? உன்பெண்சாதி பிணங்கிக்கொண்டு அண்டைவீட்டில் மூன்றுநாளாய்ப் போயிருக்கின்றாளே அவளைச் சமாதானப்படுத்தி அழைத்துக்கொண்டுவாவென்றுசொன்னாள். அதுகேட்டுபிள்ளையானவன் அடியம்மா போபோபயித்தியம்பிடித்தவளே அந்தராமன் பெண்சாதியை ராவணன்கையில் பத்துமாத மொப்பித்துப் போட்டு அதற்குபிற்பாடு குரங்கு சேனைகளைக் கூட்டிக்கொண்டு ராவணனைக்கொன்று சீதையை யழைத்துவந்து பட்டமுந்தரித்து ராச்சியமுமாளுகிறான். அந்தராமன் குலத்தைப் போல என்குலத்தை எண்ணாதே என்வாசற்படிவிட்டுமூன்று நாள் அயல்வீட்டிற்போ யேறினவளை நான்போ யழைத்தேனேயானால் என்குலத்தாரெல்லோருமென்னை யேசுவார்கள். அப்படி அயல்வீடுபோனபெண்சாதி எனக்கு அக்கரையில்லையென்று தீர்ப்புக்கொடுத்துவிட்டான் ரசகனானவண்ணானவன், ஆனபடியினாலே சீதையை இப்போதுதானே கொண்டு

போய் வனத்தில் விட்டுவந்தால் உத்தமமாய்காணுகிற தென்ருர் ஸ்ரீராமமூர்த்தியானவர். அவ்வார்த்தையைக்கேட்டதம்பிமார் மூவருமிடிவிழுந்து சாய்ந்தமரம்போல்ஒன்றுஞ் சொல்லாமல் நின்றுவிட்டார்கள். அத்தருணத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர் தம்பியாகிய லட்சுமணனைப் பார்த்துச் சொல்லுகிருர், இலட்சுமணு! இட்சணமே காலதாமதஞ் செய்யாமல் சீதையை ரதத்திலேற்றிக்கொண்டு காடாந்த காரமான புலி சிங்கம் யாளிகள் கண்டபேரண்டம் முதலான துஷ்டமிருகங்கள் சஞ்சரிக்கப்பட்ட வனத்திற் கொண்டுபோய் விட்டுவாவென்று திருவுளம்பற்ற லட்சுமணர்காதிலே நாராசத்தைக் காச்சி விட்டதைப்போல பிரமைகொண்டுவாருமண்ணு, முன்னுலே ராவணசம்மார முடிந்தபிற்பாடு என்னம்மணியாகிய ஜானகிபேரில் சந்தேகமாய்ச்சொல்ல, அப்போது அக்கினியைவளர்த்தி முழுகிவருகையில் அக்கினியில் நம்முடைய தகப்பனுராகிய தசரதர்வந்து பழுதில்லையென்றுசொல்லியிருக்க இப்போ வண்ணுன்சொன்னதினு லாகவேண்டிய தென்ன, மற்றபேர் சொல்லியும் ஆகவேண்டியதென்ன, நீர்பூத்த நெருப்புக்குகலக்கமுண்டோவென்றுகூறி, லட்சுமண ரானவர் பின்வாங்கினுர்.

அதனைக்கேட்ட ஸ்ரீராமர்பரதனைப்பார்த்து, வாராய்தம்பிபரதா நீயாகிலும்ஜானகியைரதத்திலேற்றிக்கொண்டுபோய் வனத்தில்விட்டுவாவென்றுசொல்லுகையில்பரதர் ஸ்ரீராமமூர்த்தியைநோக்கிகேளீர் அண்ணுவே, தங்களுக்குத் தெரியாத யோசனை அடியேன்என்னசொல்லப்போகிறேன் அந்தஜானகியம்மன் அக்கினிக்கொழுந்தென்று யாவருக்குந்தெரியவரும் தேவரீருக்குந் தெரியவரும் ஆனபடியினுலேயே உலகமாதாவாகிய லட்சுமியம்மன்பேரில் பழுதுசொல்லப்போமோ வென்றுபரதர் பின்னிடைந்தார் பிறகு ஸ்ரீராமமூர்த்தி சத்துருக்கரைப்பார்த்து, வாராய்தம்பி, சத்துருக்கா நீயாகிலும் சீதையைரதத்திலேற்றிக்கொண்டுபோய் யானைதோண்டான்நரிகள் வாழப்பட்ட ஆரணியத்தில்விட்டுவாவென்றுகூறச் சத்துருக்கர்மனதுவெகுவாய்நொந்து ஆயாசப்பட்டு சர்வலோக ரட்சகராகிய சுவாமியே சகலமுந்தெரிந்து நிறைந்த மனதையுடைய உமக்குரசகனுனவண்ணுன் பகர்ந்தவார்த்தையைப் பெரிதாகயெண்ணி, நீர் நமதுதந்தைமொழிக்கும் அதிகமான குருவாகிய வதிஷ்டரைப்பார்க்கிலும் வண்ணுன்சொல்லைச் சி

லாக்கியமாக நினைத்து சீதையம்மனை வனத்துக் கனுப்புதல் தருமோவென்று சத்துருக்கானவர்கூறிச் சற்றிடைந்தார்.

அப்போது ஸ்ரீராமமூர்த்தி ஆயாசமாய் வெருதுயரத்துடனே தம்பிமாரைப்பார்த்துச்சொல்லுகிறார். தம்பிலட்சுமணு பரதசத்துருக்காஉங்களை நான்சகோதரரென்றும்எனக்குவந்த ஆபத்தை தீர்ப்பீர்களென்றும், நினைத்தேன் அதுமாரிபங்காளியண்ணன் தம்பியைப்போல் பார்த்துக்கொண்டு என்வார்த்தையைத்தள்ளிப்போட்டீர்கள் இனி இப்பிராணனை வைத்துக்கொண்டு உங்கள்முகத்தில்முழிப்பதைபார்க்கிலும் இறப்பதே நலமென்று மந்திரவாளையுருவி கையிற்பிடித்துக்கொண்டுதம்பிமார்களே, நீங்களினிஎன்முகத்தின்முன்புநிற்கவேண்டாம் அப்பாற்போய் விடுங்களென்று மந்திரவாளைக் கழுத்தின்பேரில்வைத்தார்.

அதைக்கண்டபரதர் லட்சுமணர் சத்துருக்கர் ஓஓ மோசம்வந்ததென்று ஓடிவந்து கழுத்தின்மீதுவைத்த மந்திரவாளைக்கெட்டியாய்ப்பிடித்துக்கொண்டு லட்சுமணரானவர் சொல்லுகிறார். சுவாமி கொண்டபெண்சாதிக்காக உயிரைமாய்த்தால் தேவர்களும் நகைக்கமாட்டார்களா! நமது வமிசத்தில் அடாத குற்றத்தைச் சீதையம்மன்பேரிற்சொல்லி வனத்திற் கனுப்பிவிடலாமா! அப்படியே தேவரீருடைய மனதிற்கு கந்தபடி கொண்டுபோய் விடுத்து வருகிறேனென்று ராமமூர்த்திபாதத்தில் லட்சுமணர் விழுந்து நமஸ்கரிக்க, சுவாமியானவர் கோபந்தணிந்து மந்திரவாளைஉறயிற்போட்டுவிட்டார் பரதர் சத்துருக்கரும் நமஸ்கரித்து நின்றார்கள் அக்காலையில் சுவாமியானவர் லட்சுமணரைப்பார்த்து. வாருந்தம்பி லட்சுமணு, முன்னால் சீதையானவள் வனம்பார்க்க வேண்டுமென்று சொல்லியிருந்தாள் ஆனபடியினாலேசீதையைரதத்திலேற்றிக்கொண்டுபோய் ஆரண்யத்தில்விட்டுவாவென்றார் இலட்சுமணர் சுவாமியைப்பணிந்துகொலுவைவிட்டுபுறப்பட்டார் எப்படியென்றால், ஐயோதெய்வமே இப்பாதகத்திற்கு ஆளாகினேன் ஸ்ரீராமசுவாமியுடன் நான்பிறந்ததோஷம் என்னைப் பற்றிக்கொண்டது ஜானகியை அழைத்தால் அவளென்ன சாபமிடுவாளோ அண்ணு பரதா தம்பி சத்துருக்கா நீங்கள் நல்லபூசாபலம் பண்ணினீர்கள் முன்னாலே மாரீசனானவன் மானாகவரவும் ஜானகியம்மன்கண்டு அதைப்பிடித்துதரச்சொ

ல்லி என்தமயனைக்கேட்டுக்கொண்டதும், அவரென்னைசீதை யண்டையில் காவல்வைத்து மான்பின்போகவும். அந்தமான் அகப்படாமல்போகவே ராமபாணத்தினால் அதைக்கொல்ல வும், மாயாகவிருந்தமாரீசன் இலட்சுமணாவென்று கூச்சலிட் டிறந்துபோகவும், அந்தசத்தம ஜானகியம்மன்கேட்டு, இல ட்சுமணாஉன்தமையனுக்கென்னமோ ஆபத்துவந்தாற்போல காண்கிறது ஆனபடியினாலேலட்சுமணாவென்று கூப்பிட்டார் ஓடுமென்று ஜானகியம்மன்சொல்ல, என்னசொன்னாலுங்கே ளாமலிருக்க, பின்னுமந்த ஜானகியம்மனவள் கூறியது தமையனிறந்தால் தமையன்பெண்சாதி தம்பிக் குறியவளெ ன்றுகாத்துக்கொண்டிருக்கின்றாற்போல் காணுகின்றது அ ன்றியும் பரதன் உன்னுடனே சொல்லியனுப்பி யிருந்தார் அதையுங் கவனிக்காமற்போனபடியால் இனிநான்உனக்குச் சொந்தமல்லவோவென்றுஜானகிசொல்லவும் அப்பாவமான விசேஷத்தை என்காதில்கேழ்க்கவும், ஜானகியம்மனை விட்டு என்தமையனண்டைக்குப்போகவும், தமையனானவர் என்மீ துதூரிக்கொண்டு ஜானகியம்மனிருந்த பர்ணகசாலையைவந் துபார்க்கும்போது இராவணன் ஜானகியை எடுத்துக்கொண் டுபோய் அசோகவனத்தில் வைக்கவும் அதனாலே இராவ ணன் கும்பகர்ணன் இந்திரஜித்துடனே போராடி அவன் கையம்பினால் சரீரத்தில் உயிர்ச்சதை யுண்டோ இல்லையோ வென்று அடிபட்டு நொந்து, அவனையுங்கொன்று அவனாற் பட்டகாயம் இன்னமும் ஆறாமலிருக்க, இப்போது சீதையம் மனை வனத்துக்கு வாருமம்மாவென் றழைத்தால்என்னசொ ல்லுவாளோ ராமபத்திரா ராமச்சந்திரா என்னசெய்வேன் உமது கண்களுக்கு நேராக நான்தானோ அகப்பட்டுக்கொண் டேன். என்னைப்போல் இன்னம் இரண்டு தம்பிமார்களிருக்க வில்லையோ, அரி அரி நான்முன்செய்த தீவினையோ, இப் போது உம்முடனே கூடப்பிறந்த தோஷமோ. எவர்களும் படையாததமையனை நான்படைத்தபாவமோ, யிவ்வினைக்கெ ன்செய்வேன் தெய்வமேயென்று புலம்பிக்கொண்டு சீதையம் மனிருக்கும் அரண்மனைவந்து ஏழுகட்டுவாசற்படியுங் கடந் துஎட்டாவதுகட்டில் நுழைந்துபோகிறபோது சீதையம்ம னானவள் எப்படியிருக்கிறாளென்றால் பொன்னூஞ்சலிலேபஞ் சணைமெத்தையின்பேரில் பள்ளிகொண்டிருக்க, லக்ஷங்கன் னியர்கள் தாலாட்ட நவரத்தின குத்துவிளக்குகளெரிய, நிர்

த்தனமாதர் நடனம்புரிய, சங்கீதவாத்தியம்முழங்க,சர்வஆட ம்பரத்துட னிருக்கையில், இலட்சுமணர் சரேலென்று வந்து விட்டார். அரண்மனைவாசற்படி காக்கப்பட்ட பெண்கள் கண் டு ஓடிவந்து ஜானகியம்மனைச்சேவித்து அம்மணீ, இளைய பெருமாளாகிய லட்சுமணர் வருகிறாரென்று சொல்லவே ஜா னகியம்மனெழுந்து ஆடல்பாடல்களை நிறுத்தி உஞ்சலைவிட் டிறங்கி நின்றாள்.

அப்போது லட்சுமணர் சீதையம்மன் பாதாரவிந்தத்தில் தன்னுடைய கிரீடம்படியும்படியாக தீர்க்கதெண்டஞ்சமர்ப்பி த்தார். எப்படிக்கொத்ததென்றால், பிரமதேவர் தேவேந்திரன் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிக ள் ஏகாதசருத்திராள் சித்தர் கின்னரர்கிம்புருடர் கருடகாந்த ருவர் சித்தவித்தியாதரர் அஷ்டதிக்குப்பாலகர் அஷ்டவயிர வர்கள் வணங்கப்பட்டதும் சகலபுவனங்களையும் கெர்ப்பத்தி ல்வைத்திருக்கப்படா நின்ற ஸ்ரீமந்நாராயணருடையமார்பிலே உறைகின்றதுமான திருவடிகளில் நமஸ்கரித்த லட்சுமணரை யெடுத்து ஆசீர்வதித்து, சீதையம்மனவள் சொல்லுகிறாள் வாரும் தம்பிலட்சுமணா இந்நேரத்திலென்னகாரியமாய்வந் தீர்சொல்லுமென்றுகேட்க, லட்சுமணர் தன்னுடைய துயர மெல்லாம் அடக்கி திடப்படுத்திக்கொண் சொல்லுகின்றார்.

என்னம்மணியான சீதாகேளும், நீ முன்னாலே சுவாமியு டன் வனம்பார்க்க வேண்டுமென்று சொல்லியிருந்தாயாம் அ துவிஷயத்திற்காக சுவாமியானவர் இப்போது செலவுகொடு த்தார், வசந்தருதுகாலமாயிருக்கின்றது போய்வருவோம்வா ருமம்மாவென்று இலட்சுமணரழைக்க, ஜானகியம்மன் தன க்கு ஆபத்துவருவது தெரியாமல் மனதில் மகாசந்தோஷ மாகி தம்பி லட்சுமணா நான் ஒருநாள் சுவாமியுடன் வனம் பார்க்க வேண்டுமென்று சொல்லியிருந்தது மெய்தான். அந் தச்சொல் இப்போது சுவாமிக்கு கவனம்வந்தது,நான்செய்த பாக்கியமென்றெழுந்து, எங்கள்மாமியாரிடத்தில் செலவுவா ங்கிக்கொண்டு வருகிறேன், சீக்கிரத்தில் ரதத்தை சிங்காரித்து வாருந்தம்பியென்று சீதையம்மன்சொல்லி லட்சங்கன்னியர் கள்புடைசூழ, முத்துப்பல்லக்கிலேறிமாமியார்களிடஞ்சென் று பல்லக்கை விட்டிழிந்து தண்டை சிலம்பு பாதச்சுருள் கொலுசுகள் சப்திக்க, அரண்மனைக்குட்புகுந்து கௌசலை

கைகேசி சுமித்திரை மூன்றுமாமிமாருக்கும் பூசைகள்செய்து நமஸ்கரித்தாள்.

அப்படி வணங்கிய ஜானகியம்மனை வாரியெடுத்து வாழ்த்தி மார்போடணைத்து முத்தமிட்டு ஒரு பொற்பீடங்கொடுத்து உட்காரச்சொல்லி அம்மூன்று மாமிமார்களுஞ் சொல்லுகிறார். அடியம்மா சீதா இந்நேரத்தில் என்னகாரியமாக வந்தாய், அப்படிப்பட்ட அவசர முண்டாகில் ஒருதாதியுடன் சொல்லியனுப்பப்போகாதோ, அவ்வளவு அந்தரங்க விசேஷமுண்டானால் சொல்லுமம்மா வென்றுகேட்க, ஜானகியம்மன்சொல்லுகிறாள் அம்மா நான் வனம்பார்க்க வேண்டுமென்று சுவாமியுடனே சொல்லியிருந்தேன், இப்போது சுவாமிக்கு சித்தமிரங்கிச் செலவுகொடுத்தார் நான்போய்வனம்பார்த்து வருகிறேனம்மாவென, மாமியார் நீதான் எவ்வாறு போவாய் இப்போது காடுவனந்தான் பார்க்கப்போமோ, ஆறுமாதபிண்டம் கெற்பத்தில் நிற்கச்சே, ஆறுகள் கடக்கப்போகுமா, வாசற்படிதாண்டி வெளியில் போகப்போமோ சரீரம் அதிராதோ ரதத்திலேறினால் கெற்பங்கலங்காதோ நீபோகிறது யெங்கள்மனங் கலக்கமாகக் காணுகிறது நீபோகவேண்டாம் கெற்பமதிர்ந்து சரீரம்நோகும் எங்கள் வார்த்தையைத் தடுக்காதே உன்னரண்மனை போயிருமம்மாவென்று கௌசலையம்மன்சொல்ல, அதுகேட்டு சீதையம்மன் மூன்றுமாமிமாரையும்பார்த்து, அம்மாயெனக்கு வனம்பார்க்க பிரமையாயிருக்கின்றது, சுவாமிவார்த்தைக்கு மறுவார்த்தை யுரைத்தால்ராமத்துரோகம் வந்துசேரும். அவருக்குச் சித்தமிரங்கிதம்பியாகிய லட்சுமணரையுங் கூட்டியனுப்பினார். அவரும்ஆசாரவாசலில்வந்திருக்கிறார் நானிங்கே உங்களுத்தரவு கேட்கவந்துவிட்டேன் அதிசீக்கிரம் நீங்களும் மனங்களித்து விடைகொடுங்களென்று ஜானகியம்மன் மூன்று மாமிமாரையும் வணங்கினாள். அதற்கு கைகேசி சுமித்திரையும் சொல்லுகிறார்கள். அம்மா சீதா ஸ்ரீராமர்வனம்போகச் சொன்னாரென்றும் இலட்சுமணர்காத்திருக்கிறாரென்றும் மனங்கூசாமல் சந்தோஷமாக எங்களைச் செலவுகேட்கவந்தாய் அல்லவா, நீ கெற்பசிகாமணியாயிருக்கையில் இந்தராத்திரி காலங்களில் இரதமேறி நடந்தால் உன்சரீரம் அதிருவதன்றி கெற்பவாதை யுண்டாகும் அப்படியல்லவென்று ஸ்ரீராமன்வார்த்தை தள்ளாமற்போனாலும் வனங்களில் சஞ்சரிக்கப்பட்ட கரடி புலி சிங்க

ங்களைக்கண்டால் உனக்குப் பயத்தினாலே பிண்டமுங் கலங்கும். நீ வனம்பார்க்கப்போவது எங்கள்மனதிற்குச் சம்மதமில்லை, நாங்கள் சொல்லப்பட்ட வார்த்தை உன்கருத்திற்குத் தெரியவராதென்றுசொல்ல, அதுகேட்டு லட்சுமியான சீதாதேவி திடுக்கிட்டுக் கைகேசி சுமித்திராதேவியைப் பார்த்துச் சொல்லுகிறாள்என் மாமிமாரேகேளுங்கள் நீங்கள்சொன்னதெல்லாமெய்தான் இப்போதுநான்காடுவனம்பார்க்கத்தகாதுதான் அந்த ரகுநந்தனருடைய திருவாக்குக் கெதிர்வாக்குச் சொல்வேனேயானால் நரகம்வந்து சம்பவிக்கும் அப்படி அடியாளுக்கு வராதபடி மனமிரங்கி செலவுதரவேண்டுமம்மாவென்று மூன்று மாமியாரையும் பார்த்து நயந்துசொல்ல, அதற்குள் கௌசலை கைகேசி சுமித்திரை மூவரும் ஜானகியை நோக்கி அம்மா சீதா நீ காடுவனம்பார்க்கப் போகவேண்டாமென்று கூறவில்லை கெர்ப்பவதியானபடியால் இவ்வளவுதூரம்சொன்னோம் உன்மனத்திற்கு ஆயாசம்வேண்டாம் இராமன்மொழியைத் தள்ளாமல் ஆரணியத்தில் நீ நாள்படனில்லாமல் சலுதியில்வந்து சேரென்று மூன்று மாமிகளும் உத்தரவுகொடுக்கவே ஜானகியம்மன் மூவரிடத்திலும் செலவுபெற்றுக்கொண்டு முத்துப்பல்லக்கிலேறி ஊர்மளாதேவி சுருதகீர்த்தி மாண்டவி இம்மூன்று தங்கையர் அரண்மனைக்குப் போய் அவர்களிடத்திலும் உத்திரவு பெற்றுக்கொண்டு வருகையில் லட்சுமணரானவர் அச்சுக்கு எண்ணெயிட்டு மச்சுக்கு வர்ணந்தீர்த்து குத்துக்கால் கொடுங்கை குடைகொடிச் சீலைகளிட்டு சிங்கம் யாளிகளைக்கட்டி டால்துவசம் பறக்கத்தக்கநான்குகுதிரைகளைப்பூட்டி மகாவேடிக்கையுடனேரதத்தைச் சிங்காரித்து ஒருகையில் சவுக்கை யேந்தினர்.

## சீதாபிராட்டியார் தேர் ஏறுதல்.

சீதையம்மனும் பல்லக்கைவிட்டிறங்கி அரண்மனைக்குள் நுழைந்து ஆடையாபரணங்க ளணிந்து தாம்பூலந்தரித்து தனக்குவேண்டிய இஷ்டமான பண்டங்களையுந் தாதிகளால் எடுப்பித்துக்கொண்டு இலக்ஷங்கன்னிமார்கள் புடைசூழ மத்தளம் ருத்திரவீணை சங்கீதவாத்தியங்கள் தாம்தாமென்றுமுழங்க ரதத்தின்மீது வந்தேறினள் உலகமாதாவாய்விளங்கப்பட்ட சீதையம்மனவள்.

## இலட்சுமணரும் சீதாபிராட்டியும் தேர்ஏறி வனம்போகுதல்.

அதையறிந்து இலட்சுமணரும் அளவற்ற துயரத்துடனேசவுக்கினால்சடாலென்று குதிரையின்மீது தட்டிவிட்டார் அந்தச்சத்தங் கேட்டமாத்திரத்தில் குதிரைகளானது வாயுவேகமனோவேகமாய் நடக்கும்போது அச்சுகுலுங்கமச்சு அசைய டால்துவசம்பறக்கக் கருடக்கொடிசாய்ந்தாட ரதத்தில் கட்டிய மணிகளெல்லாம் கணகணவென்று ஓசைப்பட பூமியானது கிடுகிடென்ன மகா சிங்காரத்துடனே ரதமானது போகையில் அதைக்கண்டு தேவர்களெல்லாந் துயரமானார்கள் ரதம் நடக்கிற அதிர்ச்சியினாலே அயோத்தியாபுரி வீதியிலிருக்கப்பட்ட பிராமணஸ்திரீகளுஞ்சூத்திரஸ்திரீகளும் புருஷர்களுமெழுந்து கதவைத்திறந்து வீதியில்வந்து வேடிக்கைபார்ப்பவரும், அந்தரங்கமேறி பார்ப்பவரும், மேடைமெத்தைகளேறி பார்ப்பவரும் இன்னம் அந்தரதம்; போகிறது எப்படியிருக்கிறதென்றால் அயோத்தியில்வாழப்பட்ட இராஜலட்சுமி அந்தகரைவிட்டுப் பிரியமாட்டாமல் தானும் சீதையம்மனுடன்கூட வனஞ்சென்று பார்க்கப்போகிறவளைப்போலவும் சகலமானவர்கள் கண்களுக்குந் காணப்பட அப்போது ஜானகியம்மனவள் மனக்கலக்கமில்லாமல் மகாசந்தோஷமாய் பிரம்மக்ஷத்திரிய வைசிய சூத்திரனென்று சொல்லப்பட்ட நாலுவீதியுங்கடந்து கோட்டைவாசற்படிக்குள் நுழைந்து ஏழுவாசற்படியும்விட்டு மெத்தையைத்தாண்டி வருகிறபோது ரதமானதுகுலுங்க அச்சு ஆணி கழண்டு முறிந்தது லட்சுமணரும் சீதையம்மனும் திட்டென்று பூமியில் லகுவாய்குதித்து விட்டார்கள்.

அப்படி குதித்தமாத்திரத்தில் ரதமானதுபுரண்டுகீழேவிழுந்துபோய்விட்டது அதைப்பார்க்கத் தேவர்கள் மனஸ்தாபமடைந்தார்கள் இலட்சுமணரும் விசனமடைந்து ஆஹா இந்தரதமானது அச்சுமுறிந்து ஆணிகழண்டு பூமியில் விழக்காரணமென்ன இதென்னகாலக்கேடோ இந்த அயோத்தி நகருக்கென்ன அனர்த்தமோ தெரியவராதென்று மனதிலெண்ணி சிந்தாக்கிரந்தனாகச்சீதையம்மனை ரதத்தண்டை நிறுத்திவிட்டு தாம் அயோத்திக்குள் நுழைந்து ரதசாலையிற்போ


லட்சுமணர்சீதையும் சகுனம்பார்த்தல்.


சீதையம்மன்வால்மீகர் ஆசிர்மஞ்சேர்ந்தது.


சீதையம்மன் புத்திரனைப்பெற்றது.


ஆஞ்சநேயர் ராஜர்களுக்கு அறிவித்தல்.


ராஜர்கள் அயோத்தியைச்சேர்ந்தது.


குதிரையைவிட்டது.

ய் வேறொரு அச்செடுத்துவந்து ரதத்திற்பூட்டி ஆணியிகிந்து நான்கு குதிரைகளையும் அந்த ரதத்திற்கட்டி ஏறம்மாவென்ன அதுகேட்டு ஜானகியம்மன் சொல்லுகிருள். தம்பிலட்சுமணு ஒருகாலத்திலும் அழிவில்லாத ரதம் இன்றையதினம் அச்சியானது முறிந்து பூமியில் விழக்காரணமென்ன நான் வனம்பார்க்கப்போகையில் இப்படிப்பட்ட அவசகுனங்கள் எனக்குநேரிட்டது என்மாமிமார்களாகியகவுசலைகைகேசிசுமித்திரை யிவர்கள் உறியவசனம் முன்னுக்கு வந்தது ஆனபடியினுலே அயோத்திக்குரதத்தைத் திருப்புமென்று ஜானகியானவள் சொல்ல அதுகேட்டு லட்சுமணர் சொல்லுகிருர் வாருமம்மாசீதா எப்போதும் ரதத்தின்பேரிலேறினுல் விநாயகர் பூசைசெய்கிற துண்டு அதை நான் மறந்தபடியினுலே ரதத்திற்கு அழிவு நேரிட்டது இப்போது சூரியன் அஸ்தமித்து இரண்டரை ஜாமமாயிற்று இதோ விநாயகர்பூசைசெய்தேன் ரதத்தின்மீது யேறுமம்மா வெனவே சீதையம்மன் தயிரியமாய் வந்தேறினுள் அத்தருவாயில் அதிவேகமாய் லட்சுமணரானவர் இரதத்தை நடத்தவே அந்தரதமானது அயோத்தியாபுரிகோட்டையைவிட்டு ஐந்துநாழிகை வழிதூரம்வரையில் வந்துவிட்டது.

## சீதாபிராட்டிவழியில் சகுனங்காணல்.

அப்போது சீதையம்மன் நிலவிலே குளிர்ந்தநேரத்தில் இலட்சுமணருடனே வெகுசந்தோஷவார்த்தையாடி இராமரைத் துதித்துக்கொண்டுமனச்சஞ்சலமில்லாமல் போகும்போது ஒருநாயும்நரியும் லட்சுமணருடையாதத்திற்கு முன்வந்து நாய் அழ நரி ஊளையிடக்கண்ட லட்சுமணரானவர் இதென்ன நமதுரதத்தின்முன்னே நாயும் நரியும் அழவேண்டியதென்னவென்று சிந்தித்து நாள்படகலகம் வருமென்றறிந்தும் அறியாதவரைப்போல்ரதத்தை அதிக வேகமாய் நடத்தினுர் சீதையம்மனுனவள் தம்பிலட்சுமணு நமதுரதத்தின் முன்பாகநாயும் நரியும்வந்து அழுகிறதைப்பார்க்கவில்லையோ ரதத்தை நிறுத்தும்என்ருள். லட்சுமணரானவர்வாராயம்மாசீதா இப்படிக்கெல்லாம் துயரப்படவேண்டாம் இப்போது நாமிருப்பதற்கும் அயோத்தியாபுரிக்குங் காதவழிக்குமேலாச்சுது இதுநமது ஊரைச்சார்ந்த காடாகையால் சகுனம்பார்க்கவே

ண்டியதில்லைகவலைப்படாமல் வாருமம்மாவென்று ரதத்தை மெள்ள நடத்துகிறபோது அம்மன்மெய்தானென்று லட்சுமணருடன் சந்தோஷமாய்ப்பேசிக்கொண்டு போகுந்தருணத்தில் ஒரு இருண்டதோப்பானது தோன்றியது அத்தோப்பில்ஒரு ஆந்தையானதுசீறல் சீறினதுலட்சுமணர்இதென்ன விபரீதமானவார்த்தை சொல்லுகின்றது என்னமாய் முடியுமோ ஏதாய்விளையுமோ ஐயோசீதைதானிறந்துபோவாளோ தெரியவராதென்று சித்தம்நொந்துமெத்தவருத்தம்வந்துகர்த்தனேகமலக்கண்ணனே அரி அரியென்றுஎரியும்நெருப்பில் விழுந்த மெழுகுபோலாகிரதத்தைச்செலுத்துகையில் ஜானகியானவள் தம்பிலட்சுமணா ஆந்தை சீறல்சீறினது கேழ்க்கவில்லையோ நில்லென்றாள். அதற்குலட்சுமணர் அம்மணி நீயேன் சகுணம் பார்க்குறாய்காடானபடியினாலே கண்டபட்சிகளெல்லாம் காகூ வென்று கூச்சலிடும் இதெல்லாம் தெரிந்தவர்கள் பாராட்டுவார்களோ கலக்கமுறாமல் வாருமம்மா வென்று ரதத்தை நடத்தவே அதுவுமெய்தானென்று சீதையம்மனும் வருத்தமுந்தீர்ந்து நடக்குங்காலத்தில் ரதமானது அயோத்தியாபுரிபட்டணத்தைவிட்டு ஊர் நாடு கடந்து வெகுதூரம் வந்துவிட்டது அப்படிவருகிறபோது காடுசெடி மலைபர்வதங்களெல்லாம் கிடுகிடென்று அதிரும்படியாய் வருகையில் அக்காட்டில் ஓர்வேடுவச்சி ஒற்றைக் குரலிட்டு அழுதுக்கொண்டுரதத்திற்கெதிரே வருகிறதைக்கண்ட லட்சுமணரானவர் மெத்தவுந்திகிலடைந்து சிறகற்றபட்சிபோலுந் தீயில் விழுந்தபுழுப்போலும் தியங்கி மயங்கி ஐயனே! வைகுந்தத்தில்வாழும்மெய்யனே! சங்குசக்கரக்கையனே! நிகரில்லாத்துய்யனே! இந்த சீதையம்மனாலே அயோத்தியாபுரிக்கு என்ன அனர்த்தமுண்டாகிறதோ தெரியவில்லையென்றுசித்தத்திலெண்ணி செடியடர்ந்த காட்டை நண்ணி ரதத்தை வேகமாய்நடத்தினார்.

அப்போது சீதையம்மனானவள் அரவின்வாயகப்பட்ட தேரையைப்போலும் ஆலையிலிட்ட கரும்புபோலும் நைந்து சிந்தைநொந்து சொல்லுகிறாள். தம்பிலட்சுமணா பார்த்தாயோ ஒருவேடுவச்சியானவள் தலைமீதுகையைவைத்து ஒற்றைக்குரலிட்டு அழுதுக்கொண்டு வந்தாளே அவளையுங் கண்ணுற்காண வில்லையோ இந்தச் சகுணங்களாகாதென்பது மனதிற்றோண வில்லையோ ஆ! ஆ! அரி அரி நான்

வனம்பார்க்கவந்ததும் போதும் போதும் மூத்தோர்சொல் வார்த்தையமிர்தம் என்ற ஔவையார் மொழிக்கிணங்க, மாமிமார்கள் வார்த்தையைத்தடுத்து வந்ததற்கு வழியிற்கா ணுஞ்சகுணமே சாட்சியாகத் தோன்றுகிறதே ஆகையால் ரதத்தை அயோத்திக்குத் திருப்புமென்றாள் அதுகேட்டு லட் சுமணர் பயந்து வாருமம்மா தாயே துக்கமுள்ளபேர்கள் அழாம லிருப்பார்களா துதிமிகுந்தவர்கள் தொழாமலிருப் பார்களா நாம் இதுகளெல்லாம்பார்க்கவேண்டியதில்லைஸ்ரீரா மர் செலவுகொடுத்த சகுணமேபெரிது அந்த சகுணத்திற்கு முன்பு இந்தச்சகுணமெல்லாம்பெரிதல்ல, நீசஞ்சலப்படாம ல் வாருமம்மாவென்று சொன்னார். அதுகேட்டு ஜானகியம்ம ன் மனந்தேறி சந்தோஷவார்த்தைகளுடன் அதிகவேகமாய் ரதத்தை நடத்திக்கொண்டு பாலைவனம்போய்ச் சேர்ந்தார் கள்.

அந்தப்பாலைவனத்திற்கும், அயோத்தியா புரிபட்டணத் திற்கும் நூறுகாதமாகியும். பொழுதுவிடிகிறதற்கு ஜாமபரி யந்தமிருக்கிறது அப்போது ரதமானது ஆறுகள், மடுவு கள், குட்டைகள் கடந்து, அப்பால் வனத்தினடுவேபோகும் போது நான்குகுதிரைகளுக்கும், கால்கள் ஒய்ந்து ஓடமாட் டாமல் திகைத்து நின்றுவிட்டது. அதுகண்டு நான்கு குதி ரைகளையும் அதட்டினார். அந்தக்குதிரைகளானது, சீதையம் மனுனவள் நான்வனம் பார்க்கபோகிறது குதிரைகளுக்கு மனமில்லை, ஒதுங்கி நிற்கவேண்டியகாரணமென்ன, குதிரை களைச் சிக்குவாங்கி ரதத்தை அயோத்திக்குத் திருப்புமென் றாள், வாராயம்மாசீதாகாடுவிழுதுகொடியபள்ளமானதாலும் இராகுகாலமானபடியினாலும், குதிரைகள் வேசாரிக்கொடிவி ழுதில் கால்கள் சிக்குப்பட்டு. நடக்கமாட்டாமல் திகைத்து விட்டன. அதனுலாகவேண்டிய சகுனமென்ன. இதோசிக்கு வாங்கி ரதத்தைநடத்துகிறேன். விசனப்படாமல் வாருமம் மாவென்று சிக்குப்பட்ட குதிரைகளைத்தடவி தட்டிக்கொடு த்து ரதத்திலேறி அந்தப்பாலைவனத்தையுங் கடந்து, அப் பாற்செல்லுகையில், காடுசெடியில்லாமல் ஏகவெளியாய் ஓர் மைதானந்தோன்ற அம்மைதானத்தில் ரதமானது அதிக வேகமாய் வருகையில், ஒருசர்ப்பமானது இரதத்திற் குறுக் கேயோடிற்று ஓடவே இலட்சுமணர்கண்டு, ஐயோ, இந்தச் சீதையம்மனாலே நமக்கு என்னசாபம்வந்துநேரிடுமோ, எத்த

ஊ யென்றுதான் சொல்லுவோம். எவ்வளவுதான் மனந்தா
ளுவோமென்று சிந்தைவாடி ஒன்றுஞ்சொல்லாமல் ரதத்தை
விரைவாய்நடத்தவே அப்பால் சீதையானவள் தம்பிலட்சும
ணு, பாம்பு குறுக்காகப்பாய்ந்துதே நீபார்க்கவில்லையோ! எ
ன்ன பாபமோ எவரிட்டசாபமோ தெரியாது.

நான் வனம்பார்க்க வேண்டுமென்று சுவாமியுடன் கூறி
யதும்போதும். அவரின்றைக்குச் செலவுகொடுத்ததும் போ
தும் ரதத்தை திருப்புமெனவே வாராய் தாயே நாமிருவரும்
ரதத்திலேறி நடக்கிற அதிர்ச்சினலே பூமியிலுள்ள சீவராசி
கள் வெளிப்பட்டுவருகின்றது. இதொருசகுனமோ இச்சகு
னங்களை யோசிக்க வேண்டியதில்லையென்று சந்தோஷ வார்
த்தைகளைச் சொல்லிக்கொண்டு ரதத்தை நடத்துகையில்,
பொழுது நிலத்தெளிந்து வருவதைக்கண்ட சீதையம்மனு
னவள் மனந்தேறி விசனமாறி ஸ்ரீராமநாமத்தைக் கோறி,
ரதம்போகிற வேகத்தை இலட்சுமணருடனே சொல்லிக்கொ
ண்டுசெல்லுகையில், அந்தவேளையிலே ஒருஆலமர மானது
சொள்ளைவிழுந்து டோங்காயிருந்தது, அந்தடோங்கிலிருந்
து ஒருகோட்டானனது, வெளிப்பட்டுக் கூச்சலிடவே லட்சு
மணர்கண்டு, மிகவுந் திகிற்பட்டு, ரதத்தைநடத்து கையில்,
சீதையம்மனுனவள் தம்பிலட்சுமணு, கோட்டான் கூவின
தைக்கேழ்க்க வில்லையோ! இரதம்போகும் வேகத்தில் உன்
னுடைய காதுகேளாமற் போச்சுதோ, நான்வனம் பார்க்க
வந்த பிரமைஎனக்குப்போதும் போதும் கோட்டான் சகு
னம் பொல்லாதது. இத்தனைசகுனத்திலும் கோட்டான் சகு
னம்நான் சோதித்திருக்கிறேன். இந்தசகுனம்கண்டு அடியெ
டுத்துவைக்கப்போகாது தம்பிலட்சுமணு சுவாமிக்குத்தா னெ
ன்னமோ பரதருக்குத்தானென்னமோ வலதுபுஜமுந்துடிக்கி
ன்றது, முன்னலே இராவணன் என்னைப் பர்ணசாலையோ
டேதூக்கி, இரதத்தில் வைத்துக்கொண்டு போகிறபோது,
கண்ட சகுனமெல்லாம் இப்போது கண்டேன் ஆனபடியி
னலே என்வார்த்தையைத் தள்ளாமல் இரதந்தைத் திருப்பு
மென்று 'ஜானகியம்மன் சொல்லவே இலட்சுமணரானவர்
கேட்டு, வாராயம்மா சீதா ஆருக்கு ஆபத்துவந்தாலும், என்
தமயன்தம்பிமாருக்கு யாதொருதுன்பமுந் துயரமும்வரமாட்
டாது. நீ முன்பும் இப்படிதான் மானைப்பிடித்துக் கொடுக்கச்
சொல்லி, என் தமயனை மானின்பின்னலனுப்பிவிட்டு, என்

ளையுந் தூஷணித்து, துரத்திவிட்டாய் என்வார்த்தையைக் கேளாமலு மிருந்தாய், உன்னாலேநாங்கள் வெகுவாகக் கஷ்டமடைந்தோம். இன்னம் அந்தப்புண்ணானது ஆறவில்லை, அதெல்லாம் உனக்குத் தெரிந்தும் இப்போது நான் சொல்லிவருகிறதும் உனக்குத் தெரியவரும் அப்படி என்தம்பிமார் தமயனுக்கு இக்கட்டு வருவது ஒருக்காலுமில்லை. அல்லது அவர்களுக்குயேதாகிலும் சங்கடம்நேரிடுமாகில் இந்த உலகந்தானேது. அந்த உம்பருலகந்தானேது நீ யறியாயோ! அப்படிக்கிருக்க, அந்தச் சகுனமெல்லாம் என்தமயன் தம்பிகளை ஒன்றும் செய்யமாட்டாது நான் சொல்வதை நம்புமம்மணி உனக்கு ஆர்தானீடு தேவேந்திராதி தேவர்கள்தானீடோ! உலகந்தானீடோ! சர்வசம்மாரம் பண்ணப்பட்ட சங்கரன்றானீடோ! சர்வலோகத்தையுஞ் சிருஷ்டிக்கப்பட்ட சதுர்முகன்றானீடோ! சமஸ்தமும் ஒருகுட்சியில்வைத்த ஸ்ரீமந்நாராயணர்தானீடோ! எவர்கள்தான்உனக்குச் சமானமென்றுபயப்படுகிறாய். இவ்வுலகத்தை கவிழ்க்கவேண்டுமென்றாலும்கவிழ்ப்பாய், கார்க்கவேண்டியதானாலுங் கார்ப்பாய், அப்படிப்பட்ட லட்சுமியான உனக்கு இச்சகுனமெல்லாம் என்னத்திற்கு, இந்தலோகநடத்தையை விட்டுவிடு என்னைப் பயப்படுத்தாதேவிசனமின்றி, வாராயம்மாவென்று, லட்சுமணர்சொல்ல, அம்மொழியை சீதையம்மன்கேட்டவுடனே, அம்மனுக்குப் பூர்வக்கியானம்பிறந்து, இனிநடக்கப்போகிற தெல்லாந்தெரிந்து சந்தோஷமானாள். அதற்குள் அப்பூர்வக்கியானம் மாறிவிட்டது அப்போது அம்மனுக்குச் கினவுகண்டது போலாயிற்று.

அப்போது சீதையம்மன் இலட்சுமணரைப் பார்த்துச் சொல்லுகிறாள். தம்பிலட்சுமணா இப்போது நீ சொல்லிவருந்தருணத்தில் நானொருசொற்பனங்கண்டேன். அதனை யுன்னுடன் கூறும்படியாய்வாயெடுத்தேன், உடனேமறந்துவிட்டேன் இனிரதத்தை நடத்தென்றாள். அப்படியே லட்சுமணர் இரதத்தை நடத்துகையில் பொழுதுவிடிந்தது. பட்சிகள்யாவுங் காகூவென்று கூச்சலிட்டு வெளியேபுறப்பட்டதுகள் அக்காலையில் இலட்சுமணரும்ஓயாமல் இரதத்தை அதிகவேகமாய் காடுசெடி மேடுபள்ளங்க ளொன்றும் தோன்றாமல் நடத்தவே அந்தரதத்திற் கட்டியமணிகள் கலகலவென்று அடிபட கும்பகலசங்கள் குத்துக்கால்கள்குலுங்க இரதத்

திற்குள்ளே சீதையம்ம னுட்கார்ந்திருக்கிற நவரத்தின உஞ்சல்களசைய அந்தஉஞ்சலில் அம்மனுனவள் சாய்ந்தாடுகிற போது, சரீரம்புளகிதமாய், மகாசந்தோஷ வார்த்தையோடு இலட்சுமணருடனே நடக்கிறபோது சுக்கலாதேவிகுமாரனுன சூரியபகவானும், நம்முடையவமிசத்திற்பிறந்த மகாலட்சுமியான சீதையம்மனுனவள் வனம்பார்க்கப் போகிறவளை நாமும்போய்ப் பார்க்கவேணுமென்றுபுறப்பட்டவரைப்போல, ஒற்றைஉருளை பூண்டரதத்தின்பேரிலேறி அருணன் சாரத்தியம்பண்ண, இமயகிரி பருவதத்தில் உதயமானுன். அப்போது அந்த வெட்டார வெளியில் ஒருதோப்பானதுதோன்றிற்று அவ்விடத்தில் இரதத்தை லட்சுமணர் நிறுத்தினுர் சீதையம்மனும் நவரத்தினஉஞ்சலைவிட்டு ஆடைகுலுங்க ஆபரணமசைய, பாதச்சிலம்பு தண்டைச்சுருள்கொஞ்ச, மார்பிலணிந்த மாணிக்கமாலை முத்துமாலை மோகனமாலைகள் சோதிப்பிரகாசமாயசைய, கரத்திலிட்ட அவ்ஸ்தகடகமின்ன, இரண்டு காதிலும், இரண்டு சூரியனைப்பிடித்து வைத்ததுபோல கம்மல் ஜிமிக்கைகள் ஒளிவீச, இரத்தினமூக்குத்திமின்ன, முப்பத்திரண்டு சூரியனைப்பிடித்து ஒருபளிங்குமா மண்டபத்திலடைத்து பலகணியைதிறந்தால் எவ்வளவு சோதிவிளங்குமோ! அவ்வளவு பிரகாசத்துடனே எழுந்து இரத்தைவிட்டிழிந்து அத்தடாகத்தில் தந்தசுத்திசெய்து அபாஞ்சிப்பட்டுடுத்தி நேமநிஷ்டை முடித்துக்கொண்டுவந்து பலகார கச்சாயவர்க்கங்களை இலட்சுமணரும் தானுமருந்தி தாகசாந்திசெய்து, கையலம்பி, மரத்தடியில் வந்து, கற்பூர தாம்பூலம் நுகர்ந்து, சந்தோஷவார்த்தைகளாடி, சற்றுநேரம் இளைப்பாறினுர்கள். அத்தருணத்தில் சூரியபகவானுனவர் தன்னுடையமுப்பத்திரண்டு கிரணங்களையும் பரப்பி, உஷ்ணத்தையடக்கிக்கொண்டு, லட்சுமி தரிசனத்தைப் பார்க்கவந்தவரைப்போல, ஒரு மார்பொழுது வந்துவிட்டாரக்காலையில், இலட்சுமணரானவர் அம்மா சீதாய் வெய்யிலேறுகின்றது, முன்னேபோவோம் வாவென்றெழுந்து, நான்கு குதிரைகளையும் அவிழ்த்து இரதத்தில்கட்டி கரத்திற்சவுக்கைப்பிடித்து ரதமேறி முன்தட்டி லுட்கார்ந்தார்.

சீதையம்மனும் இரதமேறி நவரத்தின உஞ்சலில்வந்துட்கார்ந்தாள் உடனே லட்சுமணர் குதிரைகளைச் சவுக்கினுற்றூண்டினமாத்திரத்தில் வாய்வேகத்திலும் மனுேவேகமாய்

நடக்கையில் அம்மனவள் தாங்களிருந்தவிடத்தை எட்டிப்பார்த்தாள், கண்ணிற் கெட்டின தூரம் இரதமானது வருகையில், வலியனென ஒருகருங்குருவி ரதத்திற்குமுன் வலமாகப் போகக்கண்டு, இலட்சுமணரை நோக்கி, ஓதம்பி வலியனிப்போது வலமாச்சுது சுவாமிக்குத்தா னென்றுமில்லா விட்டாலும் கௌசலை கைகேசி சுமித்திரையிவர்களுக்கு இயாதோ ஏது தீதோ! தெரியாதென்று மனவாட்டமாகச் சொல்லுகையில், இலட்சுமணர் அம்மணி முன்னே சொன்னேனே லோக நடத்தையை விட்டுவிடென்று இன்னமுஞ் சகுனமா வென்ன, அம்மனவள் மௌனமாயிருந்தாள். இலட்சுமணரும் எண்ணதும் எண்ணி, இருதயங்குண்ணி, சுவாமியினுடைய திருநாமத்தை தியானம்பண்ணி ரதத்தை மகாவேகமாகச் செலுத்துகையில், ஒருவிச்சுளியானது வலத்திலிருந்து இடதுபக்கம் பாய்ந்தது. அதையும்பார்த்து விசாரமிட்டு மிகவும் துயரப்பட்டு செல்லுகையில், கருடன் ஒன்று இடதுபக்கமிருந்து வலதுபக்கமாகச் சென்றது. செல்லவே லட்சுமணரானவர் ஐயோ! இந்தசீதையம்மனுக்கு என்னகாலகதி வந்ததுவோவென்று துயரத்திலாழ்ந்து, துரிதமாய் இரதத்தைத் தூண்டுகையில், சீதையம்மனவள் அக்கருடன்போனதைக்கண்டு கண்களில் நீர்பெருகி, உள்ளமுருகி, ஓகோ! நம்முடைய அயோத்திக்கு என்னதுன்பமோ அல்லது சுவாமிக்குத்தான் யாதோவென்று வாதையுற்று வேதனையடைந்துபோகையில், ஒற்றைப்பார்ப்பான் எதிராகவந்தான். அவனைக்கண்டு, இலட்சுமணர் லவணசமுத்திர தீர்த்தத்தில் மூழ்கி, எழுந்திருந்தால் எவ்வாறு கண்கள் சிவப்பேருமோ அவ்வாறு கண்களானது செம்மானம்போற் சிவக்க, காதிரண்டிலும் புகைகளெழும்ப, பிராமணன் திடுக்கிடும்படியாய்க் கண்ணையுருட்டிப் பார்த்தார். அதுகண்டு சீதையம்மன் அவருடைய கோபந்தணியும்படியாய்ச் சொல்லுகிருள், தம்பிலட்சுமணு அவனோ ஏழைப்பிராமணன் புத்தியில்லாதவன், வேதசாஸ்திர விசாரணை செய்யாதவன், ஆனபடியினலே அவன் போகட்டுமென்றுசொல்ல, ஆடியநாகம் அமர்ந்ததுபோலச் சினந்தணிந்து, லட்சுமணரானவர்இரதத்தைவிடுகையில், அவ்விடத்தில் ஒருகாட்டுப்பூனையானது ரதத்திற்கு இடது புரமாய் குறுக்கேவருகிறதைக்கண்ட இருவரும் எல்லாச்சகுனத்திற்கும், பூனைச்சகுனம்பொல்லாதென்றுபெரியோர் சொல்லு

வார்களே ஐயோவென்று அழுது ஆண்டவனைத்தொழுது, அகம்வேர்த்து முகம்வேர்த்து வாராய்தம்பிலட்சுமணா; பூனைக் குறுக்கிட்டது, நீபார்க்கவில்லையோவென்றார் அதுகேட்டு லட்சுமணர் சொல்லுகிறார் இது காடாயிருப்பதினால் இதுகள் குறுக்கு நெடுக்குமோடும் இவைகளைப்பாராதேயென்று தைரியஞ்சொல்லி, இலட்சுமணர் பின்னும் வேகமாய் இரதத்தைவிட்டார்.

அத்தருணத்தில் புள்ளிமான் ஒன்றுதுள்ளி எதிராக வருவதைக்கண்ட அம்மனவள் தம்பிலட்சுணா புள்ளிமான் எதிராகவருவதைக்கண்டாயோ வென்றாள். அம்மணி எத்தனைவிதத்திற் சொன்னாலும், நீர் அடிக்கடி தொந்தரவுசெய்கிறீர். இதுகளெல்லாம் சகுனமல்ல, சும்மாவாருமம்மா வென்று லட்சுமணர்கூற, அம்மனவள் முன்னும் இப்படிதான் லட்சுமணர் வார்த்தையைக்கேளாமல், வெகு அவஸ்தைப்பட்டோம் ஆனபடியினாலே இலட்சுமணர் மனதிற்கு ஆயாசம் வருவதுபோற் காணுகிறதென்று வாயைமூடிக்கொண்டு சும்மாயிருந்துவிட்டாள். பின்னும் இலட்சுமணரானவர் இரதத்தை நடத்துங்காலையில் ஒரு செம்போத்தானது இடபாரிசமிருந்து, குறுக்கேபாய்ந்தது. அதுகண்டு, இலட்சுமணர் யோசிக்கிறார். இதைக்கண்டும், அப்பால்போகலாமோ ஐயோ சீதையம்மன் நம்மை என்னபாடுபடுத்துவாளோ என்னசாபம் நேரிடுமோ என்னசெய்வேன்ஸ்ரீராமாவென்று தியானம்பண்ணிக்கொண்டு தேரைநடத்துகையில் சரஸ்வதியாறு குறுக்கே நின்றுவிட்டது. அதுகண்டு லட்சுமணர் இரதத்தைவிட்டு பூமியிற்குதித்தார் சீதையம்மனுங் கீழேயிறங்கினாள். அந்த சரஸ்வதியாற்றின் பெருக்கமானது சமுத்திரம்போற் கோவென்ற சத்தமாய் அலைமோத நுறைகள் தளும்ப நீச்சு நிலைகொள்ளாமல்ஆழமாயிருக்கிறதைச்சீதையம்மன் கண்டுகலங்கி நிற்கையில் லட்சுமணர்ஓடக்காரனைக்காணமல் ஓடமாத்திரமிருக்கக்கண்டு ரதத்தையெடுத்து அவ்வோடத்தில் வைத்துமுன்பாகத்தோன்றி சீதையம்மனுக்குக் கைகொடுத்து ஓடத்திலேற்றி லோகமாதாவான சீதையம்மனை நவரத்தின உஞ்சலிலுட்காரவைத்து தன்கையில் ஓடந்தள்ளுகிற கோலையெடுத்து பூமியிலூன்றி ஓடந்தள்ளினார்.

அவ்வாறென்றால் பல்லாயிரங்கோடி அண்டத்தையுங் கெர்ப்பத்தில்வைத்துரட்சிக்கப்படாநின்ற ஸ்ரீமந் நாராயண

ராய்விளங்கா நின்ற பகவானுக்குப்படுக்கையான அந்த ஆதி சேடன் இலட்சுமணராயவதரித்து லட்சுமியான ஜானகியம் மனுக்கு ஓடந்தள்ளவே அம்மனுனவள் நல்லவசனத்தினுல் அவர் மனதைசந்தோஷப்படுத்தி தம்பிலட்சுமணு முன்னுலே சுவாமியும் நாமும் அயோத்தியைவிட்டு தண்டகாரணியவன ம்போகிறபோது குகன்விடுத்தவோடமும் நீவிடப்பட்ட ஓ டத்துக்கு முன்சரியாகாதென்பதைக்கேட்டு லட்சுமணர்மிகவு ஞ் சந்தோஷமாய் ஓடத்தைவிட்டிழிந்து ஜானகியம்மனே இ ரண்டுகையினுலும் ஏந்திக்கொண்டுவந்து பூமியில்விடவே சீ தையம்மனும் அந்த ஆற்றுமணலிலுட்கார்ந்து சற்று நேர ம்விளையாடிக்கொண்டிருந்து பின்பு லட்சுமணர்ஓடத்திலேறி ரதத்தை யெடுத்துவந்து பூமியில் நிறுத்தினுர்.

அந்த சரஸ்வதியாற்றுக்கும் அயோத்திமா நகருக்கும் நூற்றைம்பதுகாதவழி தூரமாம் அப்போது எவ்வளவு நா ழிகையாச்சுதென்றுல் ஒன்பதுநாழிகையாச்சுது அந்தச்சம யத்தில் லட்சுமணர் குதிரைகளைப்பூட்டி யதில் சீதையம்மனே யேற்றி ரதத்தை நடத்தவே ரதமானது மகாவேகத்துடன்வ ருகிறபோது அங்கொருவனம் தோன்றியது அவ்வன மெப் படிப்பட்டதென்றுல் ஈ நுழையாத காடாயி அப்பேர்ப்பட்ட வனத்திற் காட்டானே கரடிபுலிசிங்கம் யாளி கண்டபேரண்ட ம் சக்கிரவாளப்பட்சிகள் சஞ்சரிக்கப்பட்ட இடத்தில் ரதத் தைக்கொண்டுவந்து நிறுத்தினுர். நிறுத்தவே ஜானகியம்ம ன்பார்த்து தம்பிலட்சுமணு, இந்த அகாதமானகாட்டில் இர தத்தை ஏன் நிறுத்திவிட்டாய் இன்னம் தேரைநடத்தென்று சொன்ன வார்த்தையைக்கேட்ட லட்சுமணர் மனதுபொங்கி கண்ணீர் தாரைதாரையாய்ப்பெருக அழுது கருவி விம்மிவி ம்மிக்கொண்டு சொல்லத்தொடங்கினுர்.

வாராயம்மாசீதா ஸ்ரீராமர் சொன்னவசனத்தைமனந்து ணிந்து நான் எவ்வாறு கூறுவேன் என்று முகம்கோணி அ கம்நாணி துயரத்துடனே நிற்கின்ற லட்சுமணரைப்பார்த்து சீதையம்மன் மனதுகலங்கி தம்பி லட்சுமணு நீயேன் விச னப்படுகிருய்; உமதுதுக்கத்தையடக்கி மனதைத் திடப்படுத் திக்கொள்ளென்றுமிகவும் தேறுதல்செய்யத் திடங்கொண்டு லட்சுமணரானவர் கேளாயம்மணி என்தமயனுன ஸ்ரீராமர் இ ந்த இருண்டவனத்திலே உன்னைக்கொண்டுபோய் விட்டுவரு ம்படியாய்க் கட்டளையிட்டார் நானும் அவர்சொல்லைக் கடவா

மல் இந்தவனத்திற்கொண்டு வந்துவிட்டேன் அதேதென்
ருல் என்தமையனுன இராமபத்திரஸ்வாமி நேற்றிராத்திரி
நகர்சோதனைக்குப்போயிருந்தார். அவ்விடத்தில் ஒருவண்ணு
ஞனவன் பெண்சாதியுடனே சண்டைபோட்டுத் திட்டியடித்
தாளும் அதற்கவள்பிணங்கி மூன்றுநாளாய் அயல்வீட்டிற்
போயிருந்தாள் அதற்குஅந்தவண்ணுன்தாயானவள்அவனை
ப்பார்த்துஅடாதம்பி உன்பெண்சாதிபிணங்கிமூன்றுநாளாய்
அயல்வீட்டிற்போயிருக்கிருளே நீபோய்சமாதானம்பண்ணி
அவளை அழைத்துக்கொண்டு வாவென்று தாயார்சொல்ல
அதற்கந்தரசகனுனவண்ணுன் சொல்லுகிருன் தாயேஇராம
ன்பெண்சாதியை இராவணனெடுத்துக் கொண்டுபோய் பத்
துமாதம்வைத்திருக்கவும் அதன்பிறகு குரங்குசேனைகளை இ
ராமன்கூட்டிக்கொண்டுபோய் அந்தராட்சதனைக்கொண்டு சீ
தையை மீட்டுக்கொண்டுவந்து பட்டணமும் ஆளுகிருன், அ
வன்குலம்போல என்குலமென்றுபாராதே என்வாசற்படி வி
ட்டு மூன்றுநாளாய் அயல்வீடுபோயிருக்கிற பெண்சாதியை
அழைத்து வந்தேனேயானுல் என்குலத்திற்குஈனம் வருமெ
ன்று தள்ளிப்போட்டான் ஆனபடியினுலேஎன்தமையானுன
வர்.பரதசத்துருக்கரையும்என்னையுமழைத்துஇந்தச்சமாச்சா
ரத்தைச்சொல்லி என்னைவனத்தில் விட்டுவரச்சொன்னுர் நா
ங்கள்மறுத்தும் எங்கள் வார்த்தையுங்கேளாமல் வாளையுருவி
தன்பிராணனைவிட்டுக்கொள்ளுகிறேனென்று கழுத்தின்மீது
வைத்துக்கொண்டார். அதுகண்டுநாங்கள்பயந்து சுவாமிக்
கு நமஸ்கரித்து உன்னை அழைத்துக்கொண்டுபோய் வனத்தி
ல்விட்டுவருகிருேமென்றபிற்பாடுசுவாமிக்குச்சித்தமிறங்கி வா
ளையுறையிற்போட்டு என்னையழைத்து முன்னுலேநம்முடனே
சீதைசொன்னது வனம்பார்க்கவேண்டுமென்று சொல்லியிரு
ந்தாள். அந்த அடையாளஞ்சொல்லி ஜானகியை ரதத்திலே
ற்றிக்கொண்டுபோய் ஆரணியத்தில் ஒருக்ஷணப்பொழுதிலே
விட்டு வாருந்தம்பியென்றுசொன்னுர். அவ்வாறேநானும்அ
வர்சொல்லைத்தள்ளாமல் அழைத்துக்கொண்டு வனத்துக்கு
வந்தேனம்மாவென்ருர். அம்மொழியைக்கேட்ட சீதையம்ம
ஞனவள் மனதுகலங்கி பாயற்றமரக்கலம்போலும்வேடன்வ
லையிற்பட்டமான்போலும் நிலைகலங்கி ஐயோதம்பி லட்சும
ணு என்னை இந்த ஆரணியத்தில் வஞ்சனைசெய்து ஒண்டியா
ய்விட்டுப்போகவோவந்தீர் நான்செய்த பாவமிதுவோ ராம

மூர்த்தியேயென்று அடியற்றவிருட்சம்போல் ஆவென்றுவா யைத்திறந்து அலறியழுது மூர்ச்சையாய் விட்டாள்.

அதுகண்டு லட்சுமணரும் சீதையினுடைய அகோரத் தைப் பார்க்கமாட்டாமல் கோடுகோடென்று அழுது கடகட வென்று பூமியில் பிரண்டு மூர்ச்சையானர். இவர்களிருவரும் அப்படியழுத ஓசையை அவ்வனத்திலுள்ள பட்சிகள் மிருகஜாதிகளெல்லாங்கேட்டு இன்று நமக்கு நல்லயிறை யக ப்பட்டதென்று வெளியிற்புறப்பட்டு மூர்ச்சையா யிருக்கின்ற லட்சுமணர் முகத்தையும் லட்சுமியாகிய ஜானகியம்மன் முக த்தையும்வுறப்பார்த்துவிராடரூபமாயிருக்கப்பட்டவர்களென் றுதெரிந்துகொண்டுஅப்புறம்போய்நின்றுவிட்டது. இதற்கு ள் சீதையம்மனுனவள் மூர்ச்சைதெளிந்தெழுந்திருந்து லட் சுமணரை பார்க்கையில் அவர்மூர்ச்சையடைந்திருக்க அவர் குணத்திற்குமெச்சி தன்னுடைய திருக்கரத்தினல் அவருடை யமுகத்தைத்தடவிக் கொடுத்தாள் அமிர்தம் பொழியப்பட்ட அஸ்தமானது லட்சுமணரிற்பேரிற்படவே மூர்ச்சை தெளிந் தெழுந்திருந்து சீதையம்மனுக்கு நமஸ்கரித்து வாராயம்மா சீதா நீயிந்தவனத்தில் தானே வாசம்பண்ணிக் கொண்டிரு ப்பாயே யானல் நான் சுவாமிக்கு மனது திருப்தியாகும் படி பிரியவசனங்களைச் சொல்லி மறுபடியும் வந்து உன் னை யழைத்துக்கொண்டு அயோத்திக்குப் போகிறேன் சஞ் சலப்படாம லிருமம்மா வென்று லட்சுமணர் சொல்ல சீ தையம்மனுனவள் கிளியைப்போல வாயைத்திறந் தெழுந்தி ருந்து ராமரைத்தொழுது தம்பி லட்சுமண நான் கெர்ப்பசி காமணியாயிருக்கிற யிந்தவேளையில் ரசகனுனவண்ணுன் பே ரிற் குற்றஞ்சுமத்தி ராமர் என்னை வஞ்சனையினுல்இப்பேர்ப்ப ட்ட ஆரண்யமான கானகத்தில் விட்டுவரச் சொன்னரல்ல வோ தம்பி லட்சுமண நான்பழுது சொல்லவில்லை என்னு டைய கெர்ப்பத்தைப்பாரென்று காண்பித்தாள் அதைக்கண் ட லட்சுமணர் ராமா இந்தப்பாவமான சொல்லைக்கேழ்க்கமா ட்டேனென்று கண்ணையுங் காதயுமூடிக்கொண்டார். அது கண்டு அம்மனுனவள் லட்சுமணருடைய புத்திக்குமெச்சி உ ள்ளம்பொங்கவும் மேலுக்குதுக்கமாய் இந்தக்காட்டிலே கர டி புலி சிங்கம் காட்டானை யாளிகண்டபேரண்டம் அதிகமா யிருக்கின்றதே என்னைப்பக்ஷித்துப்போடுமே அயோத்தியாபு

ரிபட்டணத்திற்கு அருகாமையாய் விட்டுப்போமென்று மிகவு
ம்இரக்கத்துடன் கேட்கையில் லட்சுமணர் சொல்லுகிருர்.

வாராயம்மா சீதா நீ இனிதுயரப்படுவதினுல்ஆகவேண்
டியகாரணமென்ன எனக்குச் செலவுகொடுத்தால் அயோத்தி
யாபுரிக்குப்போய் வருகிறேனென்றுகூற சீதையம்மனுனவள்
தம்பி என்னை ரதத்திலேற்றிக்கொண்டுபோய்மனிதசஞ்சாரஞ்
செய்யப்பட்ட ஊர்கிராமத்தில் விட்டுப்போவீராஞல் நான் பி
ழைப்பேன் இல்லாவிட்டால் இப்போதே உமது முகத்தின்
முன்பாக என்ஜீவனைமாய்த்துக்கொள்ளுகிறேன் பாருமென்
று அழுதுசொல்லவே அதற்கு லட்சுமணர் என்னம்மணியா
ன சீதாகேளும் ராமர் சொன்னபடியே உன்னையிந்த வனத்
தில்விடாமல் மனிதர்கள்சஞ்சரிக்கப்பட்டவிடத்திலே விடுவே
னேயாஞல்உனக்கும்எனக்கும்இராமத்துரோகமல்லவோ அ
துவீண்போகாது நரகம்வந்துசித்திக்குமாகையால் நான்போ
ய்சுவாமிக்கு விண்ணப்பஞ்செய்கிறேன் எனக்குச் செலவுகொ
டுத்தனுப்புமம்மாவென்று சொல்லுகையில் அம்மனுனவள்
அழுதுபுலம்பி ரதத்தைவிட்டுக்கீழிரங்கிலட்சுமணு உன்தமை
யனுக்கு என்பேரிற் சந்தேகந் தோன்றினுல் அவ்விடத்திற்
ருனே வாளினுலே ஒரேவெட்டாக என்னை வெட்டிப்போடு
கிறதுதானே நான்மோட்ச மடைவேனே அதைவிட்டு இப்
படி என்னை சூதுபண்ணி வண்ணுன்மீது வழிகாட்டி என்
பேரிற் குற்றஞ்சுமத்தி நான்கெர்ப்பவதியென்றும் பாராமல்
துஷ்டமிருகங்கள் சஞ்சரிக்கப்பட்ட இருண்டகாட்டில் என்
னைவிட்டு வரச்சொன்னுரல்லவோ அவரே நன்ருக வாழட்டு
ம்என்மாமியார் மூன்றுபேருக்கும் உன் தமையனுக்கும் ஆயி
ரம் நமஸ்காரம் பண்ணினேனென்று விண்ணப்பஞ் சொல்
லும் என்தங்கைமார் மூவருக்கும் என்னுசீர்வாதஞ் சொல்ல
வும், என் மைத்துனன்மார் பரதசத்துருக்கருக்கும் உனக்கும்
ஆசீர்வாதஞ் செய்தேன். தம்பீ லட்சுமணு இதோ நீபோன
வுடனே கரடி புலி சிங்கம் காட்டானை இதுக ளேதாவது
என்னைப் பட்சித்துவிடும். இனி நான் உங்கள் முகம்பார்க்கப்
போகிற தில்லையென்று சிறகறுந்த பட்சியைப் போலவும்
சீதாலட்சுமியானவள் அழுது ஐயோதெய்வமே! அனுதியா
கினேன் திக்கற்ற பாவியானேன் ராமருடையகிருபையிப்படி
யிருந்ததேயென்று மனமுருகி கண்ணீரானது தாரை தாரை

யாகப் பெருகத் தம்பி லட்சுமணரே நீர் போய்வாருமென்று சொல்லிபூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தாள்.

அதைலட்சுமணர் பார்த்து அயோத்திக்குப்போக மனது வாராமல் அழுதுக்கொண்டு அசைவற்றசித்திரம்போல நிற்கையில் சீதையம்மனுனவள் மூர்ச்சைதெளிந்தெழுந் துட்கார்ந்து நான் பூமியிற் பெண்ணுகப் பிறந்து உன்தமையனுக்குமாலையிட்டநாள் முதற்கொண்டு காடு வனமே சஞ்சரித்தனே யல்லாமல் ஒருநாளாகிலுஞ் சுகத்தை யனுபவித்தவளல்ல என் விதிப்பயனிப்படியிருக்க அந்த ராமர்தா னென்னசெய்வார் நீதான் என்ன செய்வீர் அந்த ரசகனை வண்ணுன்தானென்ன பண்ணுவான் என்தலையெழுத்தைத் தள்ள என்னுற்றரமோ சகல சராசரங்களையும் உயிர்ப் பிராணிகளையும், உண்டு பண்ணின பிரமதேவனைத் தான் விட்டுவிட்டதோ யாரையும் விடாது இப்பவோ இன்னஞ் சற்று நாழிகையோ வென்றிருக்கிறது என்னுடைய காயமானது ஆனபடியினுல் நீர்போய் என்னைப்பற்றி ராமரது திருப்பாதத்தில் ஒரு விண்ணப்பம் பண்ணவேண்டியது அதென்னவென்றுல் என்பேரை நினைத்து எள்ளுந் தண்ணீரும் இறைத்துப் போடச்சொல்லும் போய்வாருமென்று சஞ்சல வார்த்தையாகச் சொன்னதைக்கேட்ட லட்சுமணரானவர் சொல்லுகிறூர். வாராயம்மா நீ இப்படிக்கெல்லாம் விசனப்படலாமோ கரடி புலி சிங்கம் காட்டானை உன்னை என்னசெய்யும் நெருப்பில் ஈ மொய்க்குமோ அப்படி யிருக்க உன்னருகில் யாதாவது நெருங்குமோ இந்த வனத்திற்றுனே ராமஸ்மரணைப் பண்ணிக்கொண்டிருப்பாயேயானுல் ஒரு காலத்திலும் உனக்குத் துன்பம் வரமாட்டாது இந்த லோகநடத்தையும் விட்டு அடியேனுக்கு சந்தோஷமாய் செலவு கொடுத்தால் நான் அயோத்திக்குச்சென்று சுவாமிக்கு தெரியப்படுத்தி உன்னை யழைத்துக் கொண்டுபோகிறேனென்று சீதையம்மனிடஞ் செலவு பெற்றுக்கொண்டு லட்சுமணரானவர் தேரேறி ரதத்தை அயோத்தியாபுரிக்குத் திருப்பி சரஸ்வதி யாற்றருகில் வந்து ரதத்தை ஓடத்திலேற்றி தாமும் யேறி ஓடத்தைத்தள்ளிக்கொண்டுபோய் அக்கரைவிட்டு ரதத்தை யெடுத்து பூமியில் நிறுத்தினுர் அப்போது என்னேரவேளையாயிற் றென்றுல் சூரியனுதயமாய் பதினெட்டுநாழிகை நேரமாச்சுதாம் அந்தச் சமையத்தில் லட்சுமணரானவர் என்ன யோசனை

செய்கிருரென்ருல் நான் சீதையம்மனிடத்தில் யிருக்கும்போ தே கரடி புலி சிங்கம் காட்டானைகள் செடி மறைவிற் காத்து க் கொண்டிருந்ததே இன்னேரம் ஜானகியம்மனைக் கொன் றனவோ பசிதீரத் தின்றனவோ என்னமோ வென்று லட்சும ணர் சரஸ்வதி யாற்றிலிறங்கி ஸ்நானஞ்செய்து ரதமேறி அ யோத்தியாபுரிக்கு நடந்தார்.

இப்பாற் சீதையம்மன் கண்ணுக்கெட்டின தூரம்பார்த் து ரதமறையவே கோவென்ற சத்தத்துடனே அழுது புல ம்பி பூமியின்மீது மோதி விழுந்து அலறி யெழுந்திருந்து என்னைக்'கைவிட்டாயே இனி யென்முன் கிட்டாயோ தம்பி லட்சுமணுவென்று கூவி மூர்ச்சை யடைந்தாள், அத்தரு ணத்தில் அவ்வனத்திலிருக்கப்பட்ட பட்சிகள் கரடி புலிசிங் கம் காட்டானைகள் வந்து காவலிருக்கையில் சற்று நேரத்தி ற்குள் மூர்ச்சை தெளிந்து அம்மனெழுந்திருந்து பார்க்கை யில் அவைகளெல்லாம் அப்புறம் விலகிப்போயின. அது கண்டு ஜானகியம்மனவள் எப்படி துக்கப்படுகிரு ளென்ரு ல், ஐயோ லட்சுமணு! என்னை இப்படி அனியாயமாய் ஆர ணியமான வனத்திலே விட்டு மோசம் பண்ணலாமா, நான் உலகத்திலே யாரும் படைக்காத அழகை படைத்தேனே, ராமா ராமா உம்மை என்ன வஞ்சனை செய்திருந்தாலும் இப் படி யிருண்டகாட்டிலே விட்டுக் கொல்லலாமோ ,நான் கெர் ப்பவதியா யிருப்பதுதெரிந்தும் மோசம் சூது வஞ்சனை பண்ணி மனிதர் சஞ்சரியாத காட்டிலே விட்டுகாட்டானைபுலி கரடி சிங்கங்கள் இவைகள் கையிற்காட்டிக் கொடுக்கலாமோ வென்று புலம்புகிறதைக்கண்டு பட்சிகளொருபுறமும் விலங் குகளொருபுறமு மிருந்தழவும் இந்த மண்டலமுழுதும் அந் த விண்டலமுழுதும் துக்கமுறவும் பூமிதேவி ஆகாயவாணி முதல் யாவரும் புலம்பிக் கொண்டிருந்தார்கள்.

## வால்மீகரிஷிவருதல்.

---

விருத்தம்.

திருவுரைகமண்டலந்தெண் டெண்பவைகரத்திற்கொண்டு
பருமணிருத்திராட்சம் பன்னகரெங்குந்துன்ன
அருந்தவமுனிவரென்றே அறையும்வால்மீகர்தானும்
கருணையாம்சீதைபக்கல் கடுகியேவருகுவாரே.

அந்தச் சமயத்தில் வால்மீக ரிஷியானவர் பாதத்தில் பாதக்குறடு துன்னவும் காவிவேஷ்டி யிடையிற்றரித்து சடா

மண்டலதாரியாய் அரிகோவிந்தா நமோ நாராயணுவென்று ஸ்ரீமந் நாராயணரைத் துதிசெய்துக்கொண்டு வருகையில் ஜானகியம்மனுனவள் தம்பிலட்சுமணு உன் தமையனுன ஸ்ரீ ராமர் சொற்படியே கொண்டுவந்து இருளோங்கிய வனத்தில் விட்டுபோகலாமோ நான் கண்ட அவசகுனமெல்லாம் என க்கே பலித்தது ஐயோ ஸ்ரீராமா என்னே வஞ்சனே பண்ண லாகுமா நான் என்னசெய்தேன் எனக்கு பயமா யிருக்கிறதே ஓய் ரகுநந்தனு ராமா ராமா வென்று அழுகிற ஓசையை வால்மீகர் கேட்டு ஏதடா இந்த அத்வானகாட்டிலே ராமா வென்கிற சத்தங் கேட்கிறதென்று கிட்டவந்து பார்த்தார் பார்க்கையில் அந்த அம்மனுடைய தேஜசு எப்படி யிருந் ததென்றுல் வைகுந்தத்தில் வாசமா யிருக்கப்பட்ட ஸ்ரீமந் நாராயணருடைய திருமார்பிலுரைகின்ற மகாலட்சுமியைப் போல விருக்கின்றதென்று வால்மீகர் கியான திருஷ்டி யினுல் அறிந்து அந்தமகாலட்சுமிதானென்று மனதிலெண் ணி சந்தோஷமாக துதிபண்ணி இன்றைக்கு எனது தவ மீடேறிற்று என்று ஆநந்தசாகரத்தில் முழுகினவரைப்போ ல் ஓ அம்மா நீயார் மனிதர் சஞ்சரியாத இடத்தில் வந்து இப்படிப்பட்ட துக்கமும் துயரத்துடன் பிரலாபித்து அழ வேண்டிய காரணமென்ன உன்னேப்பார்த்தால் இராச ஸ்தி ரீயைப்போற் காணுகின்றதே உன் வரலாற்றை சொல்லம் மாவென்றுகேட்க ஜானகியம்மனெழுந்து நமஸ்காரஞ் செ ய்து சொல்லுகிருள். ஐயோ அயோத்தியாபுரி பட்டணத்தை யாளப்பட்ட தசரத மகாராசாவினுடைய குமாரர் ஸ்ரீராமபுத் திரருடைய தேவி என்பேர் ஜானகி யென்றுள் அதற்கு வால் மீகரானவர் வாராயம்மா ஜானகிராமருடைய பட்டபு தேவி யாயிருந்தும் அயோத்தியைவிட்டு இந்தவனத்தில் வந்து அழவேண்டியது யாதுகாரண மென்றுகேட்டார்.

ஜானகி தன் வளப்பங்களே வால்
மீகரிடத்தில் கூறல்.

---

விருத்தம்.

துட்டனிராவணனென்னேச்சிறையில்வைத்த
தோஷத்தால்வன்குலத்தைசுட்டிலங்கை
பட்டணத்தைவிபீஷணர்க்குநல்கினுலும்
பரிவுடன்றீயினிற்குளித்துபலரும்போற்ற

திட்டமுடனயோத்திவந்துவாழுநாளிற்
றேசத்திலேளிதஞ்செய்கிருர்களென்றே
தொட்டமுடிராமரென்னேவனத்தில்விட்டார்
சுவாமிவுனைகண்டேனென்றுயர்விட்டேனே.

வாருமையா தபோநிதியே தசரதமகா ராஜாவுக்குப் பிள்ளையில்லாமல் கலைக்கோட்டு மகாரிஷியினுல் யாகம் வளர்ப்பித்து பிண்டப் பிரசாதங்களினுலே ஸ்ரீராமர் லட்சுமணர் பரத சத்துருக்கர் என்னும் நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். அக்காலையில் விசுவாமித்திரர் வந்து ஸ்ரீராம லட்சுமணரை யழைத்துக் கொண்டுபோய் தாட்கை சுபாகுவைக் கொன்று யாகத்தை முடித்து அகலிகை மோட்சங்கொடுத்து ஜனக மகாராசாவைத்திருந்த வில்லை யொடித்து என்னையும் விவாகஞ்செய்து பரசுராமன் கர்வத்தையடக்கி அயோத்தியில் வந்து பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்யும்பொருட்டு ஸ்ரீராமலட்சுமணரும் நானும் பதினுன்கு வருஷம் வனத்திலே வாசஞ் செய்யப் புகுந்து கங்கைக்கரை தாண்டி குகனுடைய ஆசிர்மத்திற் சிலநாளிருந்து அவரிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு நந்திக்கிராமம் வந்து சேர்ந்தோம்.

அக்காலத்தில் தசரதர் இறந்துபோனுரென்று பரத சத்துருக்கர்வந்துசொல்லசுவாமியும் லட்சுமணரும் நானுங்கேட்டு துயரப்பட்டு பரதருக்குச் சுவாமி திருவடியைக் கொடுத்துப்பரதசத்துருக்கரை யனுப்பிவிட்டு அத்திரி மகாமுனி யாசிர்மத்திற் சிலநாளிருந்து அவ்விடத்திலுஞ் செலவுபெற்றுக் கொண்டுபரத்துவாசர் ஆசிர்மஞ்சேர்ந்து சிலநாளங்கிருந்து அவரிடத்திலும் விடைபெற்று பஞ்சவடி தீர்த்தத்தில் சடாயு பர்ணசாலையில் வந்துசேர்ந்தோம் அப்போது லங்கையை யாளப்பட்ட ராவணனிடதங்கையான சூர்ப்பநகை வந்து ஸ்ரீராம லட்சுமணரைத்தேடி தோத்திரம் பண்ணினுள் இலட்சுமணர் அந்த சூர்ப்பநகையை மூன்ருக்கினையுஞ் செய்து துரத்திவிட்டார், சூர்ப்பநகையானவள் இலங்கைக்குப்போய் அவள் தமையனுன ராவணனைக்கண்டு அவனிடத்தில் தான் பட்ட அவஸ்தைகளைச்சொல்லி பங்கம்பண்ணினதையுங் காட்டி மாரீசனை மானுகருபங்கொண்டனுப்ப, அம்மானைக்கண்டு நான் ஸ்ரீராமரை பிடித்துக்கொடுக்கச் சொன்னேன் அவரும் என் சொற்பிரகாரம் மான்பின்செல்ல அது அகப்படாமல் ஓடுவதைப் பார்த்து ராமபாணத்தால் கொன்று போட்

டார், மானுகயிருந்தமாரீசன் உயிர் விடும்போது லட்சுமணு வென்று சத்தமிட்டிறந்தான். அந்தச்சத்தம்நான்கேட்டுஎன் மைத்துனனுன லட்சுமணரைப்பார்த்து தூரிக்கொண்டுதமைமயனிடத்திற்கு அவரையனுப்பிவிட்டேன் அந்தச் சமயத்தில் ராவணன்வந்து நானிருந்தபர்ணசாலையோடு பேர்த்தெடுத்துக்கொண்டு போம்போது நானழுகிறசத்தம் ஜடாயுபகவான்கேட்டு ஓடிவந்து குறுக்கேபாய்ந்து ராவணனைமறுத்தெதிர்த்து அவனுடைய வாளாயுதத்தினுலே சிறகான தறுபட்டு உயிரைவிட்டார்.

அப்பால் ராவணனுனவன் ரதத்தைநடத்தி லவணசமுத்திரத்தின் மத்தியிலிருக்கின்ற லங்காபுரிபட்டணத்திற் கொண்டுபோய்நிறுத்திப் பர்ணசாலையோடெடுத்து பூமியிலிரக்கித் திரிசடையைகாவலாகவைத்து என்னைபத்திரமாய் பார்த்துக்கொள்ளச்சொல்லி தான்ரதத்தை நடத்திக் கொண்டுகோட்டைக்குள் நுழைந்துவிட்டான் அதன்பின்பு சுவாமியும் லட்சுமணரும் என்னைவந்து பார்த்துக்காணுமல் தேடிக்கொண்டுவரும்போது அசுமுகியைக்கொன்று விராதனுக்கு மோட்சத்தைத்தந்து கவந்தனைமாய்த்து சவரிக்கு மோட்சமளித்து அனுமாரைக்கண்டு சுக்ரீவனை ஆதரணைசெய்து வாலிக்குமோட்சங் கொடுத்து சுக்கிரீவனுக்குப் பட்டங்கட்டி அனுமாரால் நானிருக்குமிடத்தைக்கண்டுபிடித்து எழுபத்திரண்டு வெள்ளம்வானரசேனையைக் கூட்டிக்கொண்டு நளனுலே சமுத்திர மடைத்து ராவணன் கும்பகர்ணன் இந்திரசித்து அதிகாயன் கும்ப நிகும்பன் இவர்களைக்கொன்று இரண்டாயிரம் வெள்ளம் ராட்சதர்களையும் நாசப்படுத்தி விபீஷணர்க்குப்பட்டங்கட்டி என்னையும் சிறை மீட்டி நானும் அக்கினியில் மூழ்கி அயோத்தியாபுரிபட்டணம் வந்து பட்டாபிஷேகந்தரித்து பட்டமும் ஆளுகிறநாளில் ராவணனுக்கு உபபலமாய்வந்த சதகண்டராவணனையும் சகஸ்திரகண்டராவணனையும் அவர்கள்சேனுசமுத்திரமான பதினுயிரம் வெள்ளம்ராட்சதர்களையும்கொன்று மகாமாயன் சலவசந்தன் இரண்டுபேருக்கும்பட்டந்தரித்து அயோத்திக்குவந்து நிகரில்லாதபட்டமும் ஆண்டுக்கொண்டிருந்தோம்.

அப்படி யிருக்கையில் அயோத்தியில் வசிக்கும் ஒருரசகனுன வண்ணுன்பேரில் போக்குக்காட்டி என்மீது குற்றஞ்செலுத்தி கெர்ப்பவதியென்றும் பாராமல் தம்பியாகிய லட்

சுமணரை விட்டு என்னையிந்த அத்துவான காட்டிலே விட்டு வரச்சொன்னாரென்று இப்போது என்மைத்துனரான லட்சுமணர் என்னை காட்டிலே விட்டு விட்டுப் போகிறார் நானென்ன செய்வேன் ஐயாவே ஐயாவென்று ஜானகியம்மன் சொல்ல வால்மீக ரிஷியானவர் கேட்டு மிகவும் வருத்தமடைந்து சொல்லுகிறார் வாருமம்மா சீதாய் நானிந்த வனத்தி லிருக்கப்பட்ட வால்மீகரிஷி என்னுடைய வனமிதுதான் நீ பயப்படாமல் நம்முடைய ஆசீர்மத்தில் வந்திரு எத்தனை கால மிருந்தாலும் என்புத்திரி யைப் போலே ஒரேசீராய்ப்பார்க்கிறேன் உன்வயிற்றிற் பிறக்கிற பிள்ளைக்கும் புத்திவித்தைகற்பித்துவருகிறேன் வாருமம்மாவென்றழைத்தார், ஐயா நான் கெர்ப்பவதியாச்சுதே போது காலமாயிற்றே எனக்கும் பெண்திக்கில்லையே நானெப்படி வருவேனென்று ஜானகியம்மன் கூற வால்மீகர் சொல்லுகிறார் கேளாயம்மா அப்படி உனக்குப்போதுகாலம் வரும்போது நான் தெய்வப்பெண்களை யழைப்பிக்கிறேன் மேலும் பெற்றபெண்ணைப் பார்க்கிலும் எண்மணங்கதிகமாய் பாவித்து பாதுகார்ப்பேன் ஒன்றுக்கும் சஞ்சலப்படவெண்டாம் வாருமம்மா வென்று மகாபிரிய வசனத்தோடு வால்மீக ரிஷியழைக்குந் தருணத்தில் ஜானகியம்ம னெழுந்து ஐயா நீரே எனக்குத் தாயுந் தகப்பன் குரு தெய்வமல்லாமல் வேறில்லையென்று சொல்லி ஆடைகுலுங்க ஆபரணங்க ளசைய ஒட்டியாணமின்ன ரத்தின மூக்குத்தி துலங்க முத்துமாலை மோகனமாலை மார்பிலசைய வால்மீகர் பின்னால்நடக்கும் நடத்தையைப்பார்த்து அந்தவனத்திலுள்ள அன்னங்கள்மயில்கள் பலபட்சிகளும் வெட்கி வேடிக்கைப்பார்த்துக் கொண்டிருந்ததுகள் அதன்பின்னும் அவ்வனமான தெப்படியிருந்ததென்றால் ஆச்சா அகில் சந்தனம் தேக்கு புன்னை வன்னிகாட்டுவாழை பலாவென்கிற விருட்சங்கள்உலகமாதாவானமகாலட்சுமியென்று கூறப்பட்ட ஜானகியம்மன்வருகிறாளென்று பூவும்பிஞ்சுகளும் காய்த்தும் பூத்தும் பழுத்தும் இருபக்கங்களிலும் நின்று சேவிப்பதுபோலக் காணப்பட்டது மேலும் மல்லிகை முல்லை சம்பங்கி மரு மருக்கொழுந்து ஆம்பல் செவ்வாம்பல் முதலிய இன்னம்பலவித புஷ்பச்செடிகளும் சர்வலோக தயாபரியாகிய ஜானகியம்மன்வருகிறாளென்று மலர்முகமலர்ந்து மொக்குகள் மலந்து குளிர்ச்சியாயின காற்று

டன் வாசனை பரிமளித்திருந்தன இவ்வாறாக அவ்வனத்தின் விநோதங்களைப்பார்த்து மகாகளிப்புடன் ஜானகியம்மன் வால்மீகர் ஆசிர்மம்வந்துசேர்ந்தாள் அப்போது சூரியன் உதயமாகி இருபத்தைந்து நாழிகையாயிற்று.

சீதையம்மன் வால்மீக ராசீர்மஞ் சேர்தல்.

---

விருத்தம்.

நம்மிட ஆசிர்மத்தில் நங்கைமாரனேகருண்டு
செம்மையாயேவற்செய்வார் சீருடனிருப்பாயம்மா
இம்மையில்வேணபாக்கிய மிட்சணமழைப்பிப்பேனுன்
நன்மையாசிர்மத்திற்கு நலமுடன்போவோம்வாராய்.

இப்படி ஜானகியம்மன் வால்மீகருடையஆசிர்மம்வந்து சேர்ந்தபோது அம்மனுக்குகாதுவிடாய்ப்பட்டு முகமெல்லா முத்து முத்தாய் குருவேர்வைகள் பரவ அதனை வால்மீகர் கண்டுகாமதேனுவை யழைத்து ஓ காமதேனுவே, சீதா லட்சுமி நினைத்தபோதுவந்து தனக்கு இஷ்டமான பதார்த்தத்தைக்கொடுவென்று உத்திரவுகொடுக்க அவ்வாறே காமதேனுவும் அம்மனிடத்தில் வந்துநிற்க அம்மனெழுந்து கைகாலலம்பி ஜெபதபங்களை முடித்துக்கொண்டுவந்துட்கார்ந்தாள் காமதேனுனது தலைவாழையிலைவிரித்து பஞ்சகச்சாயத்துடனே அமுதுபரிமாற சந்தோஷமாய்ப்புசித்து தாகசாந்திசெய்து கைகாலலம்பி ஆசிர்மத்தில் வந்துட்கார்ந்து காமதேனுவால் கந்தம் கஸ்தூரி பரிமளாதிகளுமணிந்து கற்பூர தாம்பூலமருந்தி வால்மீகருடனே ராமருடைய பிரதாபங்களைப் பேசிக்கொண் டிருக்கையில் சீதாபிராட்டியானவள் வால்மீகருடைய ஆசிர்மம் வந்திருக்கிறாளென்று கேள்விப்பட்டு ரிஷிகளும் தபோதனர்களும்வந்து அம்மனுடைய தெரிசனையைக்கண்டு தபம் நிறைவேற்றித் தங்கள்தங்கள் ஆசிர்மம்போய்ச்சேர்ந்தார்கள் அப்போது சூரியனும் அஸ்தமயமானார் சந்திரனுந் தனதுமுப்பத்திரண்டு கிரணங்களுடனே விளங்கினார். அக்காலையில் வால்மீகரெழுந்து நேமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு பர்ணகசாலையில்வந்து சீதையம்மன் மனவிசனந்திரத்தக்க கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

லன்சுமணர் சுவாமிக்குச் சீதைசேதி கூறல்.

---

விருத்தம்.

என்னென்றுசொல்வேனண்ணா என்மனம்பதைக்குதிப்போ
அன்னையாம்சீதையாரை அடவியில்விட்டபோது
தன்விதிதன்னைநொந்து சாமிக்கோர்சரணமென்று
என்னையேபோகுமென்று ஏங்கியேபுலம்பிநின்றார்.

ஜானகியம்மனுனவள் அவ்விடத்திலிப்படி யிருக்கையில் லட்சுமணரானவர் சீதையம்மனை நினைத்து கண்களில் நீர் சொரிய மகாதுயரத்துடனே அழுதுக்கொண்டு அயோத்தியாபுரி பட்டணத்தினுள் நுழைகிறபோது அப்பட்டணம் எப்படி யிருந்ததென்றால் பிரமக்ஷத்திரிய வைசிய சூத்திரரென்று கூறப்பட்ட நான்கு ஜாதிவீதிகளும் பாழடைந்து லட்சுமிகரம் நீங்கிச் சந்தடியில்லாம லிருப்பதைக்கண்டு துயரங்கொண்டு, அரண்மனை வாசற்படியில் ரதத்தை விட்டிழிந்து, ஆசாரவாசற்கு வந்து ராமரைக்கண்டு நமஸ்கரித்து நீர்சொன்னபடியேஜானகியம்மனைக் கொண்டுபோய் வனத்தில் விடுவித்துவந்தேன் இந்நேரமிருகங்கள் வாயிற்போட்டுக்கொண்டதோ யென்னமோ தெரியவராது, தேவரீர்கையில் எள்ளும் நீரும் இரைத்துபோடச் சொன்னாள் இதுவுமல்லாமல் உமக்கு ஆயிரநமஸ்காரஞ் சொல்லச்சொன்னாளென்று சொல்லிப் பிறகு தாய்மார்களிடத்திலும் வந்து சொல்லி தன்னரண்மனையைப் புகுந்திருந்தார்.

### ஸ்ரீராமர் சீதையின்பிரிவை நினைந்து விசனப்படல்.

---

அதுகேட்டு ராமமூர்த்தி சீதையை நினைத்து சீதாவென்றுதுயரமுற்று தனக்குத்தானே சொல்லிக் கொள்ளுகிறார், ஜனகராசனுடைய திருக்கண்ணே! என் அன்புநிறைந்த என் காதலியாகிய பெண்ணே! அந்தரசகனுன வண்ணான் சொல்லிய வார்த்தையினால் உன்னை யடவியில் விட்டேனே அவ்விடத்தில் கரடி புலி சிங்கம் காட்டானைபக்ஷித்துப்போட்டதோ என்னமோ தெரியாதே இனியாது செய்வேனென்று அழுது புலம்பி மூர்ச்சையடைந்து சற்றுநேரம் பொறுத்தெழுந்தும் மறுபடியும் சீதா சீதாவென்று மனமானது அனலிட்ட மெழுகுபோலுருகி ஐயனாகியராமர் அயர்ந்துநித்திரைபோய்விட்டார். பின்பு கௌசலைகைகேசிசுமித்திரைஊர்மளாதேவிசுகோதைமாண்டவிமுதலானசகலருங்கேட்டுக் கோவென்றொருவர்க்கொருவர் கூடிக்கொண்டழுகிறசத்தம் பரதர்சத்துருக்கமகாராசர்கேட்டு துக்கசாகரத்தி லழுந்தினவரைப்போல துயரம் பெருகி வாயைத்திறந்து கதறி மனம்பதறி அழுதார்கள். அந்த அழகுரலோசையை அயோத்தியாபுரி பட்டணத்திலிருக்கப்பட்ட பந்துவர்க்கங்கள் மந்திரிப் பிரதானிகள் இன்

னம் ஊரிலுள்ள சகலருங்கேட்டு நீங்காத துக்க சாகரத்தில் மூழ்கினவர்களாய் விசனமடைந் திருந்தார்கள். அதையறிந்து ஸ்ரீராமசந்திரமூர்த்தி அடங்காத துக்கத்தினால்சீதாசீதாவென்று விகாரமேலிட்டு தனக்குத்தானே தேறி அந்தப்புறஞ்சென்று ஸ்நானம்பண்ணி நேமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு அரண்மனை வந்து பரதரையழைத்து செங்கோல் முத்திரையுங் கையில்கொடுத்து நீதிமுறைதவறாமல் பட்டணத்தையாளுமென்று திட்டப்படுத்தி தான் சீதைபோன நாள்முதற்கொண்டு விசனமேலிட்டு ஆயாசத்தினா லிருந்துவிட்டார்.

பரதர்சத்துருக்கரும் பட்டணத்தில் வந்துநடக்கப்பட்ட அதிசயங்களை அன்றைக்கன்றாடம் சமாச்சாரஞ் சொல்லமந்திரிபிரதானிகளும் பெரியோர்களும் ஊரிலுள்ள பேர்களும் வந்து கண்டு கொண்டுபோவார்கள் இலட்சுமணர் மாத்திரந் தமையன் முகத்தில் முழிக்கப் போகாதென்று தன்னரண்மனையிலிருந்துவிட்டார். ஸ்ரீராமமூர்த்தியும் லட்சுமணர் என்னமா யிருக்கிறாரென்று கேளாமல் சீதைபிரிந்த வருத்தத்தினால் மறந்துவிட்டார் அக்காலையிற் கௌசலை கைகேசி சுமித்திரை மூன்று தாய்மாரும் ஸ்ரீராமரிடம்சென்று ஸ்ரீராமமூர்த்தியெதிர்க்கண்டு நமஸ்கரித்துநின்றனர் அந்த மூன்றுதாய்மார்களும் ஆசீர்வாதங்கூறி அப்பனே எங்கள்குமாரரத்தினமே உன்தேவியான சீதாக்கினி யென்னகுற்றம் பண்ணினாளென்று அம்மாதினை கரடிபுலிசிங்கம் காட்டானை வாழும் காட்டிற் கனுப்பி விட்டாய் கெர்ப்பவதி என்றும்பாராம லம்மிருகங்களுக்கோ இரையாக்கி விட்டாய் அவள் செய்தகுற்றத்தை தெரியச்சொல்லென்று அம்மூவரும்கேட்க ஸ்ரீராமர் சொல்லுகிறார். வாருமம்மா தாய்மார்களே நான் ஜானகியை விவாகம்பண்ணின நாள்முதற்கொண்டு அவதூருக்கு இடமானேன் அதேனென்றால் ஒரு வண்ணானுக் கிருந்த புத்திகூட எனக்கில்லாமற்போயிற்று ஆனபடியினாலே வனத்திற் கனுப்பிவிட்டேனென்றார் அதற்குகௌசலை கைகேசி சுமித்திரை என்னு மூன்று தாய்மார்களுஞ் சொல்லுகிறார்கள் என்னையனே ஸ்ரீராமபத்திரா அந்த சீதாதேவியைக்குறித்து உங்களையர்வந்து பழுதில்லையென்றுபகர்ந்து சீதை அக்கினியிற் குதித்தெழுந்துவர அக்கினிதேவன் குற்றமில்லை என்னவும் பிரமருத்திரேந்திராதி தேவரிஷிகள் முனிவர்கள்வந்து கூறியும்உனக்குநம்பிக்கையில்லாமற் போச்சுதே மேலும்நமது குலகுருவா

கியவதிஷ்டர்வந்து பழுதில்லையென்று சொல்லியிருக்க இப்போது வண்ணான் என்னதான்சொன்னான் விபரமாய்ச் சொலென்றுகேட்க ஸ்ரீராமர்சொல்லுகிறார் ஒருநாள் நகர் சோதனைபோயிருந்தேன், அவ்விடத்தில்வண்ணானொருவன் பெண்சாதியுடன் சண்டைசெய்ய அன்னாள்முதல் மூன்று நாளாய் அயல்வீடுபோயிருந்தாள் அத்தருவாயில் அவன்தாய் வந்து அப்பா உன்பெண்சாதி மூன்றுநாளாய் அயல்வீடுபோயிருக்கிறாளே அவளைச் சமாதானப்படுத்தி அழைத்துக் கொண்டுவாவென்றுசொல்ல அதுகேட்டு வண்ணான் சொல்லியதாவது ராமன் பெண்சாதியை ராவணனெடுத்துக் கொண்டுபோய் பத்துமாதம் வைத்துக்கொண்டிருந்தான்.

பிற்பாடு ஸ்ரீராமன் குரங்கு சேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய் ராவணனைக்கொன்று சீதையை மீட்டுவந்து பட்டாபிஷேகத்தில்வைத்து பட்டமுந்தரித்து ராச்சிய மாளுகிறான். அதுபோல என்வீட்டைவிட்டு மூன்றுநாள் அயல் விடுபோயிருப்பவளை அழைத்துவந்து வீட்டில் வைத்தேனேயானால் என்குலத்தார் என்வீட்டிற் கைநனைக்கமாட்டார்கள் அந்த ராமன் குலத்தைப்போல என்குலத்தைப்பாராதே என் வீட்டைவிட்டயல்வீடுபோயிருப்பவளை நானழைக்க மாட்டேனென்று தீர்ப்புகொடுத்தான் அந்த யீனகுலத்திலுதித்தவண்ணான் பழிக்கப்பேரெடுத்தேன் ஆனபடியினாலே ஜானகியை கெர்ப்பவதியென்றும்பாராமல் வனத்திற்கனுப்பிவிட்டேனென்றார், அதுகேட்டு தாய்மார் மூவரும் பதிலுத்தரவு சொல்ல வாய்வராமல் சற்றுநேரம்சும்மாயிருந்துபின்புசொல்லுகிறார், ஐயோமகனே! இந்தஅயோத்திமாநகருக்கு என்ன அனர்த்த காலம் வருகிறதோ தெரியாது. அதனால் மகாலட்சுமியான சீதையம்மன் பிரிந்து வனத்திற்குப்போய்விட்டதும் அன்றுமுதல் தம்பிலட்சுமணன் உன்னைவிட்டுப்பிரிந்ததுவும் நீகொலுமண்டபத்திற்குப்போகாமல் நின்றுவிட்டதும் என்னகாரணமோ லட்சுமியான சீதைவனம்போகவே அயோத்திமாநகரிலிருக்கப்பட்ட கொலுமண்டபமும் ஆசாரமண்டபமும் சபாமண்டபமும் அரண்மனைவீடுகளும் மேடைமெத்தைகளும் நான்குவர்னச்சாதிகளும் பாழடைந்து லட்சுமிகரமில்லாமல் திங்கள்மும்மாரி பொழியப்பட்ட மழையுமட்டிட்டு விளைவுகளுமில்லாமல் குடிகள்மனம் நொந்திருக்கிறார்கள். மேலும் உங்கள் முன்னோராகிய பகீரதன், அரிச்சந்திரன், லோகிதன்

இரணியன், இவர்களெல்லோரும் பட்டபுஸ்திரீ வார்த்தைக்குப் பதில்வார்த்தைசொல்லாமல் சத்தியந்தவறாமல்சக்கரத்தினுடைய ஆக்கினைப்பிரகாரம் அதிபத்திசிரேஷ்டராய் புருஷன்சொல்லைப் பெண்சாதிதள்ளாமலும்பயபக்தி பூஷணமாக ராஜநீதி முறைமை தவராமல் குடிகள்மனம்நோகாமல் திங்கள்மும்மாரிபொழிய அமோகமாய்விளையக் குடிகளுஞ் சாப்பிட்டு சுபேட்சையாய் வாழ்ந்திருந்தார்கள்.

மேலும் புலியும்எருதும் ஒருதுறையில் தண்ணீர் குடிக்கும் ஆனையும்சிங்கமும்ஒன்றாய்க்கூடியிருக்கும் கீரியும்சர்ப்பமும் சேர்ந்துவிளையாடும் இவ்வாறு சக்கரத்தினுடைய ஆக்கினைப்படியாக நடக்கும் அஷ்டலட்சுமிகளும் இந்த அயோத்தியில் வாசம்பண்ணுவார்கள், இப்போது அயோத்தியாபுரி பட்டணத்து லட்சுமியான சீதையம்மன் வனம்போன படியினாலே இன்னம் என்ன அனர்த்தம் வந்துவிளையுமோ தெரியவராதென்று மனஞ்சலித்து கண்ணீருதிர்த்து அழுதுக்கொண்டுபோய் விட்டார்கள். அப்போது ராமர் தாய்மார் சொன்ன விசேஷமெல்லாங்கேட்டு சீதையை வனத்திற் கனுப்பிவிட்ட துயரம் ஒருபக்கமும் லட்சுமணர் தன்னிடத்திற்கு வாராமலிருக்கிற துக்கம் ஒருபக்கமும் தாய்மார் மூவர்கள் சலித்துக்கொண்டு போனசங்கடம் ஒருபுறமும் பட்டணமும் பரதவிக்கிற வேதனை யொருபக்கமும் இப்படிபலவாறாய் சஞ்சலத்திலாழ்ந்திருக்கையில் ஜனங்களுக்கு சௌக்கியமும் முகத்தெளிவுமான லட்சுமிகரம் போய்விட்டது மண்மாரி பொழிந்தது மேடை மெத்தை கோபுரம்மண்டபம் அரண்மனைஆஸ்தானங்கள் மாடமாளிகை கூடகோபுரங்கள் காற்றுமழைகளாலடிப்பட்டுக்குன்றியது மனிதருடன் மனிதர் மோதிக்கொள்ளவும் யானைக்கொட்டாய் இடிந்தன மாடுகன்றுகுதிரைகள்மிதமில்லாமல் விபரீதகாலம்போல யிறந்துவிடவே அவைகளைநாய் நரி கழுகு கூளிகள் பிடிங்கித்தின்று பசியாரின இப்படி அயோத்தியாபுரி பட்டணமெங்கும் அழுகிறசத்தம் பரதர்கேள்விப்பட்டு சத்துருக்கருடனேசொல்லி இதென்னவிபரீதம் பிறந்தது நம்முடைய தமையன் நமக்குசெங்கோல்முத்திரைகொடுத்தநாள் முதற்கொண்டு இதுவரைக்கும் மழைகளில்லாமல் குடிகள்நொந்து மண்மாரி பொழிந்து பெருங்காற்றடித்து மேடை மெத்தைகளிடிந்து ஆனைகுதிரை பரிவாரங்கள் மா

ண்டு பிணநாற்றங்களெழும்ப வீதிகளும் பாழடைந்து போயிற்று.

நானென்னகுறைசெய்தேன் இதுஆரிட்டசாபம் என்ராச்சியத்துக்கு அழிவுவந்ததுபோற் காண்கிறது யாரைஅநீதஞ்செய்தேன் எவரை வதைத்தேன் நானென்னபாவம்பண்ணினேன் தம்பிலட்சுமணருங் கொலுமண்டபம் வருகிறதில்லை நமது தமயனிடத்திற்கும் போகிறதில்லை நம்மிருவரையுங் காட்டிகொடுத்துச் சாமியும் அரண்மனைவிட்டு வெளியில் புறப்படுகிறதில்லை யென்று பரதர் விசனப்பட்டழுகையில் சத்துருக்கர் சொல்லுகிறார் வாரும் அண்ணாவே நமது தமயன் தேவி மகாலட்சுமியான ஜானகியம்மன் அயோத்தியைவிட்டு என்றைக்கு வனம்போனாளோ அன்றே அஷ்ட லட்சுமிகளுங்கூடநடந்தார்கள். அந்தலட்சுமி மாது சீதைமனம் நொந்துஎன்னசாபமிட்டாளோ அந்தசாப மிப்படி விளைந்ததுமுன்னாலே அந்தராவணன் ஏகசக்கிராதிபதியாய் ஆயிரத்தெட்டண்டம் (உஉச) புவனம் ஈரேழுபதினாலுலோகம்சத்தசாகரத்திற்கு ராசனாகி தேவேந்திரனைப்பிடித்து விலங்கிற்போட்டு மகாரிஷிகள்தவத்தை ஈடேறவொட்டாமலும் சாம்பசிவன் கேட்டவரங்கொடுக்கவும் விஷ்ணு மனவர்த்தி செலவு நடத்தவும் பிரமதேவர் பஞ்சாங்கஞ்சொல்லவும்ரிஷிகள் தேவர்கள் மக்ஷம்பிடித்துவந்து போடவும் வருணன் சாணந்தெளிக்கவும் முத்தம்பெருக்கவும் சூரியன் லங்கையைப்பாராமல் பத்துயோசனை தூரம் விலங்கிப்போகவும் சந்திரன் குளிர்ச்சியாய் லங்கைக்குள் வந்துகாயவும் ஒருவருந் தனக்கெதிரில்லாமல் யாவரும் வணங்கும்படியாய்வாழ்ந்த ராவணன் ஜானகியம்மனைப்பர்ணசாலையோடே யெடுத்துக்கொண்டுபோய் அசோகவனத்தில்வைக்கவும் அப்போது அவளழுத கண்ணீரினால் இலங்காபுரிபட்டணம் ஏழுநாள் தீப்பற்றி யெறியவும் இராவணன், கும்பகர்ணன், இந்திரசித்து, அதிகாயன், கும்ப நிகும்பன், இவர்களுக்குண்டாகிய பந்துவர்க்கங்களும் குமாரவர்க்கங்களும் சினேகிதவர்க்கங்களும் ஆனைகுதிரை சேனைபரிவாரங்களும் அடியோடே போனார்கள், அப்படியிருக்க இப்போது சீதாலட்சுமி வனம்போகவே அவளழுகிறகண்ணீர் விருதாவாகப்போகாமல் மண்மாரிபொழிந்து மண் காற்றடித்து ஆனைகுதிரை பரிவாரங்களு மாண்டது இன்னம் என்னமாய் முடியுமோ யாதாய்வந்துவிளையுமோ அண்ணாவே யென்றான்

சத்துருக்கனனவன் அதுகேட்டு பரதாழ்வார் மிகவும் ஆயா சமடைந்து என்னசெய்வேன் ஸ்ரீராமா ராமாவென்றுராமஸ்ஸ துதிபண்ணி மனதைத்திடப்படுத்திக்கொண்டிருக்கையில் சத் துருக்கர் பரதருடைய வுத்திரவினல்களஞ்சியத்தைத்திறந்து ஊரிலுள்ள குடிகளுக்கும் ஏழைபரதேசிகளுக்கும் தானியங்க ளை அவாரியாய் வாரிக்கொடுத்து பட்டணங்கபராயில்லாமல் துரைத்தனம் பண்ணிக்கொண்டிருந்ததை ஸ்ரீராமமூர்த்தி யும்கேட்டு மகாவிசாரசித்தராய் சீதையைப்பிரிந்த துயரத்தி னல் ஒன்றுஞ் சொல்லாம லிருந்துவிட்டார் லட்சுமணரும் இதுகளெல்லாஞ் சீதாதேவியின் மகத்துவமென்று மனதி லெண்ணிக்கொண்டு துக்கசாகரத்தி லழிந்திருந்தார் அது கண்டு மந்திரியான சுமந்திரரும் ஸ்ரீராமமூர்த்தி யண்டையில் வந்து நமஸ்கரித்து தசரதருக்கு பாட்டனாகிய சக்கிரவர்த் திகளுடைய பிரதாபங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

அயோத்தியாபுரிபட்டணம் இவ்வாருகயிருக்கையில் வா ல்மீகமகாரிஷி ஆசிர்மத்தில் சீதையம்மன் யாதொரு குறைவு மில்லாமல் காமதேனுவால் தனக்குச் சகலவைபவமும் நடக் கச் சுகித்திருக்கையில் வால்மீகரானவர் தடாகத்திற்குச் சென் று ஸ்நானஞ்செய்து நேமநிஷ்டைகள் முடித்துக் கொண்டு ஏழுதர்ப்பைப் புல்லைக்கிள்ளி பூமியில்வைத்து மந்திர ஆவா கனஞ்செய்து ஏழுபெண்களை நியமித்தார். அந்தயேழுமாதர் களும் தட்சணமெழுந்து வால்மீகரடிபாதத்திற்பணிந்து நிற் க அவர்களுக்குவால்மீகர் ஆசீர்வாதஞ்செய்துசொல்லுகிறர் ஓவனத்துப்பெண்களே! நீங்கள் நமது ஆசிர்மத்திலிருக்கும் மகாலட்சுமியாகிய சீதையம்மனுக்கு ஊழியஞ் செய்துக்கொ ண்டு இடைவிடாமல் காத்துக்கொண்டிருங்களென்று அனு ப்பவே அம்மாதர்களெழுவருந் தட்சணம் அம்மனண்டையி ல்வணங்கி கைகூப்பி நின்றூர்கள். அவர்களை ஜானகியம்மன் பார்த்து நீங்கள் யாரென்றுகேட்க, அப்பெண்கள் அம்மா நாங்கள் வால்மீகர் நிஷ்டையில் உற்பவித்தவர்கள் அவர்எங் களை உனக்கு ஊழியஞ்செய்யும்படியாய் அனுப்பிவைத்தார். எங்கள்பேர் வனத்துப்பெண்கள் திரேகமே உனது பணிவி டைச்செய்ய உற்பத்தியாகையால் யாதுந்தடையில்லாமல்எங் கள்பணிவிடையை ஏற்றுக்கொண்டால் அதனல் எங்களுக்கு கீர்த்தியுண்டாம் நற்பேரடைவோமென்று சந்துஷ்டி யோடு கூறிய அவ்வெழுவர்களால் சகல ஊழியங்களுஞ்செய்யப்பெ

ற்றஜானகியம்மன் வால்மீகரையழைத்து எனக்குப்பள்ளிகொள்ள நவரத்தினஊஞ்சல் நியமித்து தரச்சொல்லிகேட்க வால்மீகர் அவ்வாறே நவரத்தினஊஞ்சல் நியமித்துக் கொடுத்தா ரவ்வூஞ்சலில் சீதையம்மனவள் சயனித்துக்கொள்ளவனத்துப்பெண்கள் எழுவரும் உஞ்சலாட்டுவது எப்படியிருந்ததென்றால், அயோத்தியாபுரியில் இலட்சம் கன்னியர்கள் நவரத்தினமான ஊஞ்சலில் திண்டு தலையணைபோட்டு சாய்ந்து பள்ளிகொள்ளத் தாதியர்கள் தாலாட்ட மத்தளம் ருத்திர வீணைமுழங்கக் கட்டியக்காரர் கட்டியங்கூற, நிர்த்தனம்புரிய இப்படிசகல ஆடம்பரங்களுட னிருக்கிறதுபோ லு மிருந்தன. அதுவுமன்றி வண்டுகள் கீதம்பாடவும் அன்னங்கள்குயில்கள்மயில்கள் நாட்டியம்பண்ணவும் ரிஷிகள்தபோதனர்கள் வந்துவணங்கவும் நினைத்தபோது காமதேனுவந்துபசியாற்றவும்சீதையம்மனுந் தன்னுடைய விசனமெல்லாந் தீர்ந்து அயோத்தியிலிருந்த சுகத்திலும் பதின்மடங் கதிகமாய்ச்சுகத்தை யனுபவித்துக்கொண்டிருந்தாள்.

### சீதையம்மன் புத்திரனைப் பெற்றது.

### விருத்தம்.

செந்திருவாஞ்சீதை சிறுவனைப்பயின்றாளன்று
துந்துமிவாத்தியங்கள் துலங்கவெஃக்காளமூத
லிந்திரன்மற்றுந்தேவ ரிஷிகளும்பார்த்திருக்க
வந்துவால்மீகர்தானும் வழங்குவார்வேணதெல்லாம்.

இப்படியிருக்கிற நாளையில் சீதையம்மனுக்குப் போது காலம்வந்தது கெற்பவேதனைபடுகையில் ஆகாசவாணி பூமிதேவி சப்தகன்னிகளும் ரிஷிஸ்மாதர்களும் ஜானகி யம்மனுக்கு கைகொடுத்தாதரிக்க பத்துமாதமுஞ்சென்று பூச நட்சத்திரம் கடகலக்கினத்தில் ஒரு புத்திரனைப் பெற்றாள், அப்புத்திரனெப்படி விளங்கினனென்றால் நீலமேகசுரூபமும் அகண்டமார்பும் நீண்டகரமும் ஆலிலைபோல் வயிறும் இளவாழைத் தண்டுபோல் துடையும் அமர்ந்தபாதமும் ஸ்ரீராமருக்கு நிகராய்வார்ப்படம்வார்த்த சிலையைப்போ லிருப்பதன்றியும் அந்தப்பிள்ளையைப் பார்த்தால் ஸ்ரீராமரைப் பார்க்க வேண்டியதில்லை அதுகண்டு சீதையம்மன் மகாசந்தோஷமாகி தன்மனதிலுள்ளவிசனமெல்லாம் நீங்கிப் பிள்ளையைப்பார்த்து மனதிலடங்காத ஆனந்தசந்தோஷமாயிருந்தாள்.

அப்போது வால்மீகர் சகலருக்கும் கற்பூர தாம்பூலங் கொடுத்தனுப்பி பிள்ளைபிறந்த லக்கினம் நட்சத்திரம் வாரங் களும்பார்த்து சந்தோஷமாகி பத்துவயதிற்குமேல் இப்பிள் ளைக்கு சிவன் விஷ்ணு பிர்மா தேவேந்திரன் தேவர்கள் ராட் சதாள் யாவரும் நிகரில்லையென்று ஜாதகமெழுதி சீதையம் மனுக்கு வாசித்து காண்பிக்க அம்மநுங்காதுகுளிரக் கேட்டு வால்மீகரைப்பார்த்து சொல்லுகிருள், ஐயா! வால்மீகரே! பிள்ளையின் சாமர்த்தியஞ் சொன்னீரே யல்லாமல் பிள்ளைக்கு வயது எவ்வளவென்றும் விவாகம் எத்தனை வயதிலாகுமெ ன்றும் பட்டாபிஷேகம் எவ்வளவுபிராயத்தில் நடக்குமென் றும் பிள்ளையானவன் தாய் தகப்பனுக்கு எப்போ கருமஞ் செய்வானென்றுஞ் சொல்லாமற்போனீரே அதுகளை நன் ருய் தெரியும்படி சொல்லவேண்டுமென்று ஜானகியம்மன் கேட்டருளினுள் அப்போது வால்மீகர் சொல்லுகிருர் வாரு மம்மா சீதா நமக்குறியநாள் முப்பதுங்கூடினுல் தேவர்களு க்கு ஒருநாள் இந்தநாள் முப்பதுஞ் சேர்ந்தால் ஒருமாதம் இப்படிப்பட்டமாதம் பன்னிரண்டானுல் தேவர்களுக்கு ஒரு வருஷம் இப்படிப்பட்ட வருஷம் எண்பதில் உன் பிள்ளை க்கு வயது சரியாப்போகும் இப்பேர்ப்பட்டவருஷம் பத்தொ ன்பதானுல் உமக்கு கருமஞ் செய்வான் முப்பதானுல் அர சாட்சி செய்வானென்ருர். அதுகேட்டு ஜானகியம்மன் அள வில்லாத சந்தோஷமடைந்து சரீரம் பூரித்து பிள்ளையை சீராட்டி வளர்த்து வருங்காலையில் வால்மீகரானவர் சீதைய ம்மனைப் பார்த்து பிள்ளைபிறந்து மூன்று நாளாச்சுது இவ னுக்கு என்னபேரிடுவோம் சொல்லென்று கேழ்க்க ஜானகி யம்மன் கூறுகின்ருள், வாருமையா வால்மீகரே இந்தப்பிள் ளைக்கு இருபதாம் பாட்டனுராகிய குசலவமகாராஜ ரென்று விளங்கினுர். அவருடைய நாமதேயத்தை சாற்றுமென்று கூறவே அவருஞ்சம்மதித்து இன்றையதினம் பன்னிரண்டு நாழிகைக்குமேல் நாள் நன்ருயிருக்கின்றது. அந்தச் சுப முகூர்த்தத்தில் நாமகரணம் வைக்கவேண்டும் ஆகையால் வ னத்துப் பெண்களை யழைப்பித்து ஓமத்துக்கு வேண்டிய சந் தனபுஷ்பம் சமூத்துமுதல் தருவித்துக்கொள்ளென்று திட் டஞ்செய்ய அவ்வாரே வனத்துப் பெண்களை சாமக்கிரிகை கள் கொண்டுவரும்படி யனுப்பிவிட்டு ஜானகியம்மன் தன் பிள்ளையை வால்மீகர் பக்கத்தில் வளர்த்தி அவரைப் பார்த்

துக் கொள்ளச் சொல்லித் தடாகத்திற் சென்றாள், அப்போ து வால்மீகரும் ஜெபத்திலிருந்து விட்டார் அந்தச் சமயத் தில் பிள்ளைக்குப் பசியெடுத்து காகூவென்றழவே அந்தச்சத் தஞ் சீதையம்மன் கேட்டு ஓடிவந்து பார்க்கையில் வால்மீகர் கண்ணை மூடிக்கொண்டு செபத்திலிருப்பதைக் கண்டு அழுகிற பிள்ளையை யெடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு தடாகத் திற்குப் போய்விட்டாள்.

சற்றுநேரம் கடந்து வால்மீகர் ஜெபத்தை விட்டு கண் ணைத் திறந்து பார்க்கையில் விளையாடிக் கொண்டிருந்த பிள் ளையைக் காணுமையால் கரடி புலி சிங்கம் யெடுத்து வாயிற் போட்டுக் கொண்டதோ என்னமோ யிதற்கென்ன செய்வோ ம் சீதையம்மன் தன்பிள்ளை யெங்கேயென்று கேட்டால் நா மென்ன சொல்லுவோம் அம்மன் பிள்ளை மீதில் அபேட்சை யாயிருக்கிறபடியினாலே நம்மை ரிஷியென்று பாராமல் சபித் துப் போடுவாளென்று சீக்கிரமாய் ஒரு தர்ப்பை புல்லைக்கிள் ளி பூமியில் வைத்து மந்திரோபதேசஞ்செய்து சீதா லட்சு மியின் பிள்ளைபோ லுருவுண்டாக்கி உயிர்கொடுத்து சிருஷ் டித்து வைத்தார் சீதையம்மனும் ஸ்நானம்பண்ணி பிள்ளை யைத் தூக்கி இடுப்பில் வைத்து ஜலந்திரட்டி ஒரு கையிலெ டுத்துக்கொண்டு பர்ணகசாலைக்கு வந்து இடுப்பிலிருக்கிற பிள் ளையை தொட்டிலில் வளர்த்தி ஜலத்தை பூமியிலிறக்கி ஆசீர் மம்வருகையில் வால்மீகர்சிருஷ்டித்த பிள்ளையானது காகூவெ ன்று அழும்போது அண்டையில்வந்துபார்த்து ஆச்சரியப் பட்டு, ஐயா! வால்மீகரே! இதேது என்பிள்ளையைப்போலி ருக்கிறதே சொல்லென்று ஜானகியம்மன்கேட்க வால்மீகரா னவர் அம்மா இதுவும் உன்பிள்ளைதான் எடுத்து வளர்த்து க்கொள் ளென்றுகூறவே சீதையம்மன் சந்தோஷமா யெடுத் துமார்போடணைத்து முத்தமிட்டு கொஞ்சிக் குலாவிக் கொ ண்டிருக்கையில் வனத்துப்பெண்கள் ஓமத்துக்கு வேண்டிய சாமகிரியைக ளனைத்துங் கொண்டுவந்தார்கள்.

அப்போது வால்மீகரானவர் பன்னிரண்டு நாழிகைக்கு மேல் ஓமம்வளர்த்தி விநாயகர்பூசைசெய்து நவக்கிரகப்பிரீதி பண்ணி மூத்தபிள்ளைக்கு குசலனென்றும் இளைய பிள்ளைக்கு லவனென்றும் நாமகரணமிட்டு இரண்டு பிள்ளைகளையு மெடு த்து ஆசீர்வாதஞ்செய்து சீதையம்மன்கையிற் கொடுத்தார் அ ம்மனவள் இரண்டு பிள்ளைகளையும் வாங்கி முத்தமிட்டுத்

தன்னுடைய பர்னகசாலையிற் கொண்டுபோய் வைத்துக்கொண்டு நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாய் வளர்த்துக்கொண்டு வருகையில் மதலைச்சொற்களை மாதாவான சீதையம்மன் கேட்டு மனமகிழ்ந்து அப்பிள்ளைகளுடனே தானுங் கொஞ்சிக்குலாவி இனி இல்லாத ஆபரணங்களை பூட்டி அழகானது ஜொலிக்கும்படியாய் விழிக்குமை நீட்டிவாஞ்சையாக வசனித்து வருகிறநாளில் பிள்ளைக்கு ஐந்து வயதாகிக்கல்விக்குப் பருவகாலமென்று வால்மீகர் அவ்விரண்டு பிள்ளைகளையும் அழைத்து நல்ல சுபமுகூர்த்தத்தில் ஆடையாபரணங்கள் அலங்கரித்து விநாயக ஸ்துதி செய்து ஹரி ஓம் நமோநாராயணு வென்கிற திவ்விய அக்ஷரத்தைச் சொல்லிக் கொடுத்தார். அவ்வாறே பிள்ளைகளும் வாசித்து வர ஆறும் வயதில் நாலுவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண் புராணம் சகலகணக்கு காரியங்களுங் கற்று யேழாம்வயதில் சிலம்பங்கற்று எட்டாம் பிராயத்தில் தனுர்வேத சாஸ்திரங்களெல்லாங் கற்பித்துக் கொடுத்து ஒன்பதாம் பிராயத்தில் கரவேக சரவேகமும் பார்த்து இவர்களுக்குப் பிர்மாதிகள் முதல்யாரும் ஈடல்லவென்று அழைத்து வந்து சீதையம்மனிடத்தில் தனுர்வேத பரிட்சைகளுங் காண்பித்தார் சீதையம்மனும் பார்த்து ஸ்ரீராமர் இலட்சுமணர் பரதசத்துருக்கரும் குசலவர்க்கு நிகரில்லை யென்று மனமகிழ்ந்து பிள்ளைகளுக்கு தானறிந்த வித்தைகளுங் கற்பித்துக் கொடுத்தார் பிள்ளைகளுந் தாஷ்டீகமாய் வளர்ந்து ஸ்ரீராமர் லட்சுமணரைப்போல இணைபிரியாமல் வால்மீகர் வனத்திற் காமதேனுவாற் சகல வுபசரணையும் பெற்றுக்கொண்டு அயோத்தியிலும் எண்மணங்கு அதிகமாய் அந்த வனத்தில் திங்கள் மும்மாரி சொரிய காடு செடிகள் தழைத்து செழிக்கும்படியாய் ஜானகியம்மனும் குசலன் லவனென்னும் பிள்ளைகளிருவரும் சுகமா யிருந்தார்கள்.

## வதிஷ்டர் அயோத்திக்கு வருதல்.

---

இப்படியிருக்குங் காலத்தில் வதிஷ்டரானவர் இதுசேதி யறிந்து ஆ! ஆ! குடிகெட்டுப் போச்சுதென்று ஜடாமண்டலதாரியாய் கரத்திற் கமண்டலமேந்தி காவிவேஷ்டி தரித்து காலில் பாதக்குறடணிந்து சிலரிஷிகூட்டங்களுடனே அயோத்திக்குப் புறப்பட்டு இலட்சுமணரிடம் வரவே இலட்சுமண

ரானவர் எழுந்திருந்து எதிர்சென்று அழைத்துவந்து அர்க்கிய பாத்தியங்கொடுத்து பூசைசெய்து ஆசனமளித்து உட்காரவைத்து தோத்திரம் பண்ணின இளைய பெருமாளாகிய இலட்சுமணருக்கு வதிஷ்டர் ஆசீர்வதித்துச் சொல்லுகிறார் வாராய் இலட்சுமணரே இவ்விடத்தில் நடந்த சமாச்சாரமென்ன அதை தெரியச்சொல்லென வதிஷ்டர்கேட்க இலட்சுமணர் சொல்லுகிறார் கேளுமையா முனிநாதரே ஸ்ரீராமபத்திர னவர் ஒருநாள் நகர்சோதனைக்குப்போயிருந்தார் அவ்விடத்தில் வண்ணானவன் தன் பெண்சாதியை யடித்தான் அவள் பிணங்கி மூன்றுநாளாய் அயல்வீடு போயிருக்கிறாள் அவளைச் சாமாதானப்படுத்தி யழைத்துவாவென்று தாயானவள் சொல்ல அதுகேட்டு வண்ணான் சொன்னது ஸ்ரீராமருடைய தேவியை இராவணன் எடுத்துக்கொண்டுபோய் பத்து மாதம்வைத்திருந்தான் அதன் பிறகு ராமன் சேனையைக் கூட்டிக்கொண்டு போய் இராவணன் முதல் இராட்சதர்களை யெல்லாஞ் செயித்துச் சீதையை அயோத்திக்கு அழைத்து வந்து பட்டாபிஷேகந் தரித்து இராச்சியம் ஆளுகிறான் அந்த ராமன் குலத்தைப்போல என்குலத்தைப் பாராதே வீடுவிட்டுமூன்றுநாளாய் அயல்வீடு போயிருப்பவளை நான் அழைத்து வீட்டில் வைப்பேனேயானால் என்குலத்தார் என்வீட்டில் கைநனைக்கமாட்டார்கள் என்குலத்திற்கு யீனம் வந்துவிடும் அப்படி வீடுவிட்டு அயல்வீடு போனவளை நான் அழைக்கிறதில்லையென்று தீர்ப்புக்கொடுத்தான்.

அச்சொல்லைக்கேட்ட என்தமையன் எங்களை யழைத்து அதனைச்சொல்லிச் சீதையைக் காட்டில்விட்டுவரச்சொன்னார் அப்போது நாங்களறிந்த நீதிமார்க்கங்களைச் சொல்லியுங் கேளாமல் வாளையுருவி கழுத்தின்பேரில் வைத்துக்கொண்டு பிராணத்தியாகம் பண்ணிக்கொள்ளுவேனென்றார். நாங்கள் பயந்து உனது மனதின்படியே ஜானகியை வனத்தில் விட்டு வருகிறோமென்று சொன்னபிற்பாடு வாளை யுறையிற்போட்டார் பின்புஜானகியம்மனை ரதத்திலேற்றிக் கொண்டுபோய் நான்கானகத்தில்விட்டுவந்துஎன்தமையனுக்குச்சமாச்சாரஞ் சொல்லி அன்றுமுதல் இன்றையவரைக்கும் என்தமையனிடம் நான்போகிறதில்லை அவரும் என்னை நினைக்கிறதில்லைபரதர் சத்துருக்கர் இராஜரீகம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள் சீதாலட்சுமி இறந்தார்களோ ! இருக்கிறார்களோ! தெரியவ

ராதென்று இலக்ஷுமணர்கூற வதிஷ்டர் ஞானதிருஷ்டியி னற் பார்த்துசிதாலக்ஷுமி சுகமாகப் பிள்ளையைப்பெற்று வால்மீக ராசிர்மத்தி லிருக்கிறார்களென்று தெரிந்துவாரும் இலக்ஷுமணரே சீதையைமிருகங்கள் பக்ஷித்து போட்டதென்று உன்மனதில் நினையாதே மேல்வருஷம் பிள்ளையுந்தாயுமாய் வரப்போகிறார்கள் நீ விசனப்பட வேண்டாமென்றார் இலக்ஷுமணர்கேட்டு விசன மெல்லாந்தீர்ந்து சந்தோஷமானார். அப்போது வதிஷ்டர் வாராய் இலக்ஷுமணரேஉனது தமையனானவர் சீதைபிரிந்த சோகத்தினாலே உன்னையும் நினையாமல் கொலுமுகம் வாராமல் இருக்கிறார் நீ இந்தவேளையில் ஸ்ரீராமரைப்போய் கண்டுகொள்ளென்று உத்தரவுகொடுத்து வதிஷ்டரானவர் தம்முடைய ஆசிர்மமெழுந் தருளினார். அந்தட்சணமே லக்ஷுமணரானவர் தேரேறி ஸ்ரீராமரிருக்கும் ஆசாரவாசலில் வந்து இரதம் விட்டிழிந்து அரண்மனைக்குள் நுழைந்து ஸ்ரீராமரைக்கண்டு நமஸ்கரிக்கவே ஸ்ரீராமரும் தம்பியைக்கண்டமாத்திரத்தில் தமது துயரத்தையெல்லாஞ்சொல்லி யாற்றினார். பின்பு ஸ்ரீராமரும் இலக்ஷுமணரும் சந்தோஷமாகிப் போசனமருந்தி தாம்பூலம் நுகர்ந்து கொலுமுகம் வந்தார்கள் வரவே பரத சத்துருக்க ரெழுந்து வணங்கினார்கள் சேனாதிபதிகள் படைத்தலைவர்களும்சேவிக்க கட்டியருங் கட்டியங்கூறினார்கள், அப்போது வதிஷ்டமகாமுனிவர் அச்சபைக்குச் சிலரிஷிகூட்டங்களுடன்எழுந்தருளினார் அதுகண்டு ஸ்ரீராமர் தம்பிமாருடன் எழுந்திருந்து பயபக்தி விசுவாசத்துடன் பூஜைசெய்து அழைத்துவந்துபொற்பீடம்வைத்து அதில் எழுந்தருளச்செய்து அவர்கள் ஆசீர்வாதம் பெற்றபின்பு ஸ்ரீராமமூர்த்தி சொல்லுகின்றார்.

ஐயா! குலகுருவாகிய வதிஷ்டரே! சீதையைப் பாணிக்கிரகணம் பண்ணின நாள்முதல் அவதாருக்கிடமானேன் அதேனென்றால் சீதையை இராவணன் எடுத்துப் போகவும், அதனால் அவனுடைய அண்ணன் தம்பிமாமன் மைத்துனன் பிள்ளைகள் பேரன்மார் பந்துவர்க்கம் சினேகிதர் இரண்டாயிரம் வெள்ளம் ராக்ஷதப்படையுடன் அவனும் என்பாணத்துக்கிரையானார்கள் மேலும் அவனுக்குச் சகாயமாக சதகண்டராவணனும் சகஸ்திரகண்டராவணனும் பதினாயிரம் வெள்ளம் ராக்ஷதர்களுடன் வந்து யுத்தஞ் செய்து, அவர்களும் மாண்டார்கள். இராவணன் கும்பகர்ணன் லேசானவர்

களல்ல மூன்றுகோடி சிவாலிங்கம் வைத்து பூசை செய்தவர் கள். அதுவுமன்றி, மாந்தர் மிஷ்டிகளா யிருக்கப்பட்ட அதி காயன் கும்பன் நிகும்பன் யவர்னனென்று சொல்லப்பட்ட அரிபக்தர்களையுங் கொன்றேன் அந்தகோரத்தை வாயினுற் சொல்லக்கூடாது, இந்த சீதையினுலே வெகு பாவத்தைக் கட்டிக்கொண்டேன், ஆதலால் என்ன ராச்சியம், என்ன பிழைப்பு, என்னசுகம், இனி இந்த ராச்சியத்தை வேண்டே ன் இதை தம்பிமார்வசத்தில் ஒப்பிவைத்து நான் பவித்திரனு கமரவுரிதரித்துக்கொண்டு, காட்டிற்குச்சென்று தவம்புரிந்து பாவத்தைப் போக்கடித்துக்கொள்ளல் வேண்டும் எனக்குச் செலவு தந்தருளுமென்று ஸ்ரீராமரானவர்கேட்க. வதிஷ்டர் சொல்லுகிருர்.

ஓய் இராமச்சந்திரா! நானுமக்கு எத்தனை விதமாய்ப் பாவமில்லை யென்று சொன்னுலுங் கேட்கவில்லையே. ராசாக் களுக்குத் தக்கது துஷ்டநிக்கரக சிஷ்டபரிபாலனஞ் செய் வதே, தர்மமென்று சொன்னுலும் உமக்கு தெளிவு பிறக்க வில்லை ஆகையால் நீர் அஸ்வமேத யாகம் பண்ணி தேவர்க ளுக்கு திருப்தி செய்து இராவணன் கும்பகர்ணனென்னும், இராட்சதாளுக்கு மோட்சத்தைக் கொடுத்து, உம்முடைய பாவத்தை போக்கடித்துக்கொள்ளுமென்று சொல்ல அது கேட்டு இராமபத்திரர் சந்தோஷமாகி, வதிஷ்டமகாமுனி யைப் பார்த்துச் சொல்லுகிருர். ஓய் சுவாமி, அந்தயாகம் பண்ணுகிற விதமெப்படி யெனக்குத் தெரியப்படச் சொல்லு மென்றுகேட்க. வதிஷ்டரானவர் கூறுகின்ருர் கேளும், ஸ்ரீ ராமபத்திரரே, அஸ்வமேதயாகம்பண்ணுகிற விதமெப்படி யென்ருல் யாகத்திற் குறித்தான அஸ்வமானது சரீரம் வெ ண்மையாகவும், கழுத்துகுங்கும நிறமாகவும், வலதுகாதுமஞ் சள் நிறமாகவும், இடதுகாலு பச்சை நிறமாகவும், உதடு பவ ழம்போலும், வயிறு கருப்புமாக யிருக்கவேண்டும், இப்படிக் கொத்த இலட்சணமுள்ள அஸ்வத்தைக் கொண்டுவந்து அதற்கு ஸ்நானஞ்செய்து வைத்து, உம்முடைய வீரப்பிர தாப சவுரியத்தை ஒருபொற்பட்டத்தி லெழுதி, அந்தப்பட்ட யத்தை அஸ்வத்தினுடைய நெற்றியிற்கட்டி, ஒருவருஷம் பூமிப்பிரதட்சணஞ் செய்துவைத்து, அங்கங்கே அந்தஅஸ் வத்தைப்பிடித்துக்கட்டியெதிர்த்த ராசாக்களையெல்லாம் செய

ம்பண்ணி, குதிரையை விடுவித்துக்கொண்டு, யாககுண்டத்தி லே அக்கினிதேவனை நிறுத்தி, மந்திரபூர்விகத்துடனேஎக்கி யம்வளர்த்தி அந்த எக்கியத்தில் அஸ்வத்தை ஆவாகனம் பண்ணி. பிறகு தேவர்களுக்கெல்லாம் அவிர்ப்பாகங் கொடு த்து, உத்தமராகிய பிராமணர்களுக்கு ஆனை, குதிரை-ரு-தேர் எ-காலாள் கூ-ஸ்திரீ-க-ஒருபாரந்தங்கம் இந்தவிதமாய்த்தான ங்கொடுத்து, அந்த அஸ்வமேதபலனை அனுபவிக்கவேண் டும், ஆனபடியினாலே உன்னுடைய தேவியும் நின்னுடன் எக்கிய பவுத்திரங்களைக் கட்டிக்கொண்டு யாகதீட்சையில் நிற் கவேண்டுமென்று வதிஷ்டர்சொன்னார். அதுகேட்டு ஸ்ரீராம மூர்த்தி சிந்தாகிரந்தராய், விசாரப்பட்டு வதிஷ்டரைப்பார் த்து, ஓய், சுவாமி சீதையை வனத்திற் கனுப்பிவிட்டேனே! இத்தனை நாள் சீதை யிறந்துபோயிருப்பாள்போல காண்கி றது நானென்னசெய்வேனென்று ஸ்ரீராமர் கூற, வதிஷ்டர் சொல்லுகிறார். வாரும் ஸ்ரீராமச்சந்திரரே. இலட்சுமியில்லா விட்டால் யாகத்திற்கும் பின்னம்வருமென்றார். அதுகேட்டு ஸ்ரீராமர் மிஞ்சிப்போன காரியத்திற்கு என்ன செய்யலாம். தங்கத்தினாற் சீதையைப்போல வார்ப்படம்வார்த்து யாகதீட் சைசெய்யலாமோவென்று கேட்க, வதிஷ்டர் சொல்லுகிறார். வாரும்ராமச்சந்திரா பௌர்ணமி இன்னம் ஒருமாத மிருக்கி ன்றது இதற்குள் யாகத்திற்கு வேண்டிய சாமக்கிரிகைகளெல் லாஞ் சேகரித்து வைத்துக்கொள் சித்திராப்பருவம் நவமி வந்தஉடனே என்னை நினைத்தால் நான் வருகிறேனென்று சொல்லி ஸ்ரீராமரிடத்திற்செலவுபெற்றுக்கொண்டு வதிஷ்டர் தன்னாசிரமஞ் சேர்ந்தார்.

இப்பால் ஸ்ரீராமமூர்த்தியானவர் தம்பிமார்களைப் பார்த் து, வாரும் தம்பிமார்களே! நாம் செய்யப்போகிற அஸ்வ மேதயாகத்திற்கு அனுமாரில்லாவிட்டால் முடியாது. ஆகை யால் அனுமாரையழைத்துவரச் சொல்லுங்களென்று ஆக் கியாபிக்க அவ்வாறு சத்துருக்கரும் ஒரு தூதனை யழைத்துக் கிஷ்கிந்தாபுரி பட்டணஞ்சென்று அனுமாரைக்கண்டு சுவா மியாரழைத்துவரச் சொன்னாரென்று சொல்லிச் சீக்கிரமா யழைத்துவாவென்றனுப்ப, அந்த தூதனும் வாய்வேகமா ய் புறப்பட்டுக் கிஷ்கிந்தாபுரி பட்டணஞ் சென்று அனுமா ரைக்கண்டு, நமஸ்கரித்து ஐயா ஸ்ரீராமமூர்த்தி தங்களை அ ழைத்துவரச் சொன்னாரென்று கூற, அனுமாரானவர் ஸ்ரீரா

மமூர்த்தியென்று சொல்லக்கேட்ட உடனே அதிக சந்தோ ஷமாய்ப் புறப்பட்டு, அயோத்தியாபுரிபட்டணம் வந்து, ஸ்ரீ ராமபத்திரசுவாமியைக்கண்டு, பயபக்திவிசுவாசத்துடன் நம ஸ்கரித்தார். அப்படி நமஸ்கரித்த அனுமாரைவாழ்த்தி, சுவா மி சொல்லுகிறார் ஓய் அனுமந்தா! நாம அஸ்தமேதயாகஞ் செய்யப்போகிறோம், ஆகையால் நாளையதினங் காலமே புற ப்பட்டு கிஷ்கிந்தைக்குப்போய், சுக்ரீவனுக்கும், அங்கதனுக் குந் தெரிவித்து அவருடைய சேனை சைனியங்களுடன் வரச் சொல்லி அப்பால் இலங்காபுரி பட்டணத்திற்குப்போய் விபீ ஷணரைக் கண்டு, தண்டு தளத்துடன் வரும்படியாய் உத்தி ரவு செய்து, மந்திராபுரிபட்டணஞ் சென்று, மகாமாயனை வ ரும்படியாய் அறிக்கையிட்டு, இரத்தினபுரத்திற்குச் சென்று சலவசந்தனையுங் கண்டு சொல்லி சீக்கிரம் வாவென்று திரு வாய் மலர்ந்தருளினர். அனுமாரும் மகா பாக்கியமென்றுபர தர் லட்சுமணர் சத்துருக்கருடன் வசனித்துக் கொண்டிருக் கையில் சீதாலட்சுமிபோன சமாச்சாரங் கேட்டு அனுமாரா னவர்மனஸ்தாபப்பட்டுக்கொண்டிருந்தார். சூரியனும் அஸ்த மாயினன்.

## அனுமார் அஸ்வமேதயாகத்தை அரசர் களுக்கு அறிக்கையிடல்.

மறுநாட்காலமே அனுமாரானவர் சந்தியானுஷ்டான ஜெபதபங்களைச்செய்துபோசனமுட்கொண்டுவாய்வேகமனோ வேகமாய்ப் புறப்பட்டுக் கிஷ்கிந்தாபுரி பட்டணத்திற்குவந்து சுக்ரீவனுக்கும், அங்கதனுக்கும், தண்டுதளத்துடன் அயோ த்தியாபுரிக்கு வரும்படியாயறிக்கை கூறி அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, மயேந்திரகிரி பருவதம் வந்துசேர்ந்து அப்பரு வதத்தின் உச்சியிலேறி இலங்காபுரிக்கு நேராய்ப் பார்த்து, விஸ்வரூபங் கொண்டு, ஓங்கி நிதானித்து ஸ்ரீராமா வென்று தியானித்துக் கொண்டே ஆகாயவீதியிற் கிளம்பினர், இப் படி அனுமார் கிளம்பும்போது அந்த பர்வதமானது ஐந் நூறு யோசனை தாழ்ந்து, பிறகு பந்துபோல மேலெழும் பியது. அப்பால் இரண்டு கரமும், கூப்பிக்கொண்டு ஸ்ரீராமபா ணம் விட்டதுபோல் எங்குந் தங்காமல் வருகிறபோது, பவ ழமால்கிரியைக் கண்டு, சந்தோஷமடைந்து, அவ்விடம் வந்துகுதித்தார். குதிக்கவே அந்தப் பர்வதமானது ஐம்பது

யோசனை பூமியிற்சூழ்ந்து, குலுங்கி யதிரத்தலைப்பட்டது. அதனால் லோகமெல்லாம் செவிடுபட்டது மேலும், அந்தப் பர்வதத்திலிருந்த மிருகங்களெல்லாம் வலசை வாங்கிக் கொண்டது. அப்பால் அனுமாரானவர் அப்பவழகிரியை விட்டுப் புறப்பட்டு அதிகவேகமாய் இலங்கையிற் குதித்து, சபாமண்டபத்திற்கு அனுமார் வருதலைக் கேள்விப்பட்டு, விபீஷணர் மந்திரி பிரதானிகளுடனே எழுந்திருந்து எதிர் வந்து அனுமாரைத் தழுவி ஆலிங்கனம்பண்ணி அழைத்து வந்து ஆசனங்கொடுத்து வீற்றிருக்கும்படி வேண்ட அனுமார் விபீஷணரைப் பார்த்து ஐயா விபீஷணரே ஸ்ரீராமமூர்த்தி அஸ்வமேதயாகம் பண்ணப்போகிறார். ஆகையால் நீர் உமது சேனை சைனியங்களைக் கூட்டிக்கொண்டு, சலுதியாய் வாருமென்றுத்தரவு செய்து அசோக வனத்தை நோக்கித் திரும்பவே விபீஷரானவர் பார்த்து ஐயா அனுமாரே இவ்வளவு ஆயாசத்துடனும் இளைப்புடனும் எங்கே போகிறீர் இருங்கள் தாகசாந்தி பண்ணும், போஜன முட்கொள்ளும் அப்பா லெங்கேயாவது போமென்று கூறுகையிலனுமார் சொல்லுகிறார் ஐயா விபீஷணரே நானெங்கும் போகவில்லை, பாதாள அறைக்குப்போய் தேவசுந்திரனுக்குச் சொல்லி விட்டுவருகிறேனென்று புகன்ற அனுமாருக்கு விடை கொடுத்து, விபீஷரானவர் காலசித்தனைப் பார்த்து, ஓய் காலசித்தனே ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம் பண்ணப்போகிறாராம், நாம் போகவேணும் தண்டுதளங்களைப் பயணப் படுத்தென்று உத்தரவுசெய்ய, அவனும் அவ்வாறே திட்டப் படுத்தினான்.

இப்பால் அனுமாரானவர் பாதாள அறைக்குட் புகுந்து தேவசுந்திரனைக் கண்டு, அஸ்வமேத யாகத்திற்கு அவரை சேனசமுத்திரங்களுடன் வரச்சொல்லி அசோக வனத்திற்கு வந்து, கோட்டைக்குள் நுழைந்து, சபாமண்டபஞ் சேர்ந்தார், அத்தருணத்தில் விபீஷணர் மந்திரி பிரதானிகளுக்கு விடை கொடுத்தனுப்பி விட்டு அனுமாருடன் கூடி அரண்மனைக்குள் நுழைந்து, நேமநிஷ்டைகள் முடித்து போசன மருந்தி, கதம்ப கஸ்தூரிகளணிந்து கற்பூர தாம்பூலந் தின்று, சற்றுநேரஞ் சந்தோஷவார்த்தைகள் பேசிக் கொண்டிருந்தார்கள். இதற்குள் சூரியனுதயமானார். அப்போது அனுமா ரானவர் விபீஷண ரிடத்திற் செலவு பெற்

றுக் கொண்டு, இலங்காபுரி பட்டணத்தின் கோபுரவாசற்படி யால் நுழைந்து, வெள்ளியங்கிரி பர்வதத்தின் உச்சியிலேறி, இருகரத்தையுங் கூப்பி, ஓங்கி யுத்தரணித்து ராமஸ்துதிப ண்ணி அவ்வெள்ளியங்கிரி பர்வதத்தை யுதைத்துக் கொ ண்டெழும்பி சண்டமாருதம் வீசியதுபோல் எங்குந் தங்கா மல் ஆறுசமுத்திரமுந் தாண்டி, அப்பால் சமுத்திரக்கரை ஓரமாயிருக்கப்பட்ட சுவேலை பர்வதத்தில் வந்து குதித்தார் குதிக்கவே, அந்த பர்வதமானது நெக்குவிட்டதில் வாழும் பட்சி மிருகங்களும் நசித்துப் பிராணனை விட்டதுக ளதுவு மன்றிச் சகரபுரி பட்டணமுழுது மதிர்ந்து அதிலுள்ள சீவ ராசிகளுந் திடுக்கிட்டு, பிதிர் கலங்கியதுகள். அக்காலையில் அனுமாரும் சுவேலை பர்வதத்தை விட்டு, தாழவிரங்கிச் சக ரபுரி பட்டணத்தினுள் நுழைந்து வருகிறதைக் கேள்விப் பட்ட மகாமாயனனவன் மந்திரி பிரதானிகளுட னெதிர் கொண்டு, வந்தழைத்துப் போய் பொற்பீட மளித்து, உட் காரச்செய்து சொல்லுகிறார், ஐயா, அனுமாரே சுவாமி இல ட்சுமணர் பரதர் சத்துருக்கர் சுகமோ வென்று கேட்க அனு மார் கூறுகிறார். ஓய் மகாமாயனே சுவாமி அவர் தம்பிமார் களும் உமதனுக்கிரகத்தினாலே சுகமாயிருக்கிறார்கள், குறை வில்லை, இப்போது ஸ்ரீராமபத்திர சுவாமியானவர் அஸ்வ மேதயாகஞ் செய்யப்போகிறார். அது காரியமாக உம்மிடத் திற்குவந்தோம். நீர் சலுதியாய் தண்டு தளத்தைக் கொண்டு, அயோத்திக்குப் போய்ச்சேருமென்று கூறி, அன்றையதினம் சகல மரியாதைகளுடன் அங்கிருந்து மறுநாட்காலமே மகா மாயனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு சுவேலைபர்வதத் துச்சியிலேறித் உத்தரணித்து ஸ்ரீராமாவென் றெழும்பினார்.

அஃதெப்படி யிருந்ததென்றால். கைதேர்ந்த வீரன்விட் டெறிந்த பந்தைப்போலவும், சரத்தைப்போலவுங் கிளம்பி, எங்கும் நிகரில்லாமல் சமுத்திர மத்தியிலிருக்கப்பட்ட பவழ வர்ணமலையிலேவந்து குதித்தார். அந்த பர்வதமுங்குண்ணி, பூமிநகர்ந்து (௩௰) யோசனை தாழ்ந்து போய்விட்டது, அப் போதனுமாரானவர் அப்பர்வதத்தை விட்டுக்கிளம்பி, ரத்தி னபுரம்வருதலைத் தூதுவர்களாற் கேள்விப்பட்ட சலவசந்த னனவன் மந்திரிபிரதானிகளுடன் எதிர்கொண்டு வந்தழை

த்துப்போய் சோடசவுபசாரத்துடன் ஆசனங்கொடுத்துவீற்றிருக்கச் செய்ய, அனுமார் சொல்லுகிறார்.

ஓய், சலவசந்தனே! கேளும், இராமபத்திர சுவாமியானவர் அஸ்வமேதயாகஞ் செய்யப்போகிறார் அதுகாரியத்திற்கு உன்னுடைய தண்டுதளத்தைக் கூட்டிக்கொண்டு விரைவாய் வரச்சொன்னார். வாருமென்று சொல்ல, சலவசந்தனும் மகாபாக்கியமென்று ஸ்ரீராமருடைய க்ஷேமங்களைக் குறித்து, இருவரும் பேசிக்கொண்டிருக்கையில், சூரியனும் அஸ்தமயமானார். அப்போது சலவசந்தன் மந்திரிபிரதானிகளுடன் படைத்தலைவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டு, அனுமாரை அழைத்துக்கொண்டு, அரண்மனைக்குட் சென்று நேமநிஷ்டைகளைச்செய்து, பண்டுபலாதிகளுடன் அன்னம்புசித்து, கந்தகதம்பகஸ்தூரிகளை மெய்யிலணிந்து, தாம்பூலந்தரித்துக்கொண்டு, ஆடல்பாடலில் சங்கீதவினோத கேளிக்கைகளைப் பார்த்திருந்தார்கள்.

## சுக்கிரீவன் அயோத்திக்குவருதல்.

---

இப்படியிருக்க, கிஷ்கிந்தாபுரிபட்டணத்தில் சுக்ரீவனானவன் அனுமார்வந்து, சொன்னவுடனே தீவு தீவாந்தரங்களுக்கு ஓலையெழுதி யனுப்பிவைக்க, அந்தப்படியே அவர்களும் ஓலையைப்பார்த்த நாழிகைக்கு, இருபத்துநாலு படைத்தலைவர்களும் எழுபத்திரண்டு வெள்ளஞ்சேனைகளும், கிஷ்கிந்தாபுரி பட்டணம்வந்து சேர்ந்தார்கள். அப்போது சுக்ரீவனனவன் நீலனையழைத்து தண்டுகளை சேகரப்படுத்தென்று உத்திரவுகொடுத்தார். அந்தப்படியே, நீலன் வானரசேனையெல்லாம் பவுஞ்சிட்டு நிறுத்தினன். அக்காலையில் சுக்ரீவனும், அங்கதனும், பட்டணத்தைமந்திரிகள்வசம் ஒப்பிவைத்து கிரீடமணிந்து. ஆடையாபரணந் தரித்து, பட்டாவை யிடுப்பிற்கட்டி, அவரவர் ஸ்திரீகளுடனே வாகனம்பல்லக்கு தண்டிகையிலேறவும் தாரையானவள் மூடுபல்லக்கிலேறி, ஆயிரங்கன்னியர்கள் புடைசூழவும், ஜெயபேரியானது தாம்தாமென்று முழங்கவும் கொடிச்சீலைபறக்கவும், சேனைசைனியங்களுடன் புறப்பட்டு வருகையில், கருந்தூளானது எழும்பவும், காடுமலைகள் கிடுகிடென்று அதிரவும், அட்டகாசஞ் செய்துக்கொண்டு, பூமிதேவியதிர, ஆதிசேஷனுங் கலங்க, சேனைகளுடன் புறப்பட்டான்.

## விபீஷணர் அயோத்திக்கு வருதல்.

இவர்களிப்படி நடக்க, இலங்கையில் விபீஷணர் நீலாக்ஷதசன் முதலான தூதுவர்களையனுப்பி, புஷ்பக விமானத்தையெடுத்துவரச்சொன்னார். அப்படியே கொண்டு வந்தார்கள். அத்தருணத்தில் பத்துவெள்ளம்யானையும், இருபதுவெள்ளந்தேரும், நாற்பதுவெள்ளம் புரவியும், எண்பதுவெள்ளங்காலாள்களும், இன்னம் பலம்பொருந்திய ராட்சதர்களும் அருபத்தையாயிரங்கோடி சேனாதிபதிகளும், நாற்பத்து நாலாயிரங்கோடி படைத்தலைவர்களும், ஏகோபித்து, புட்பக விமானத்திலேறினார்கள் விபீஷணரும் சனமாளிகையுடனே சிங்காரித்துக்கொண்டு லக்ஷங்கன்னியர்கள் புடைசூழத் தன் மகளான திரிச்சடையும், பாட்டனான மாலியவானையும், ஐயாயிரங்கோடி ராசமன்னரையும், காலசித்தனையுங் கூட்டிக்கொண்டு புஷ்பகவிமானத்திலேறி, இலங்காபுரியரசை மந்திரிவசத்திலொப்பிவைத்து, விமானத்திற்கு மந்திரோபதேசஞ்செய்யவே, கேசரிமார்க்கமெழும்பி, விமானமானது லவணசமுத்திரந்தாண்டி, ஆகாயமார்க்கமாகவந்து, தண்டகாரணியவனஞ்சேர்ந்தது.

## தேவசுந்திரன் அயோத்திக்கு வருதல்.

இப்பால் தேவசுந்திரனனவன் படைத்தலைவனனசுந்திர ராட்சதனைப் பார்த்து ஓய்சுந்தரராட்சதனே! ஸ்ரீராமர் அவ்வமேதயாகஞ்செய்யப்போகிறாராம் நாமும்போகவேண்டும் நம்முடையபாளையத்தைப் பயணப்படுத்தென்று சொல்லி தன்னுடைய அரண்மனைசென்றான். பின்பு சுந்தரராட்சதன் தண்டுகளை வெளிப்படுத்தினன். அஃதெப்படியென்றால் கன்னமதம் கரடமதம், கபோலமதமென்றுஞ் சொல்லப்பட்டயானைகளானது கரியமலைகளைப்போல, கால்கைகள் முளைத்து வந்தது போல்யானைகள்பேரில் சவுடாலும் அம்பாரிகளும் வைத்து இராசமன்னரும் ரணவரிசைகள் பூண்டு முப்பத்திரண்டுவித ஆயுதங்களும் எடுத்துக்கொண்டு கையிற்றனுசேந்தி யானையின்பேரிலேறிக்கொண்டு புறப்பட்டார்கள். அதெவ்வளவென்றால் மூன்றுவெள்ளம் யானைகளும் அதின்பின்னே இரதங்களானது அச்சுக்கு எண்ணெயிட்டு மச்சுக்குவர்ணந்தீர்த்து சிங்கலலாடவும் சிரக்கத்துவசம்பறக்க நான்குகுதிரைகள்பூட்

டியும் இழுக்கப்பட்ட ரதத்தின்மீது இராசமன்னரும் முப்பத்திரண்டாயுத முஸ்தீப்புகளுடனே தனுசைக்கையிற் பிடித்துக்கொண்டு புறப்பட்டார்கள், அதெவ்வளவென்றா லொரு வெள்ளம் இரதங்களும் அதன்பின்னுற் சூரியன் ரதத்திற்கட்டியிழுக்கப்பட்ட புரவிகளுக்குச்சமானமான புரவிகளின்மீது கல்லணைவைத்துக்கொண்டு கத்திகேடயம் பிடித்துயேறிசுத்த வீரர்கள் புறப்பட்டாாகள்.

அதெவ்வளவென்றால் பன்னிரண்டுவெள்ளங் குதிரைகளாம் அதன்பின்காலாள்களான ராட்சதர்கள் புறப்பட்டார்கள். அவர்களெப்படிப்பட்டபலவான்களென்றால் ஒவ்வொரு ராட்சதனுக்குஇந்திரலோகமும்போதாது, அப்பேர்ப்பட்டபலசாலிகளான ராட்சதர்கள்கையில் ஈட்டி எறியீட்டி குந்தம் வாள் சூலம் கத்தி சக்கரம் வேல் இடியீட்டி முதலியதும் பிடித்துத் தயாரானர்கள். அப்போது தேவசுந்திரனும் கிரீடம் பூண்டு ஆடையாபரணந் தரித்து முதுகில் அம்புறுப்பொதியுங்கட்டி பட்டணத்தை மந்திரிவசங்கொடுத்து நானவிதவாத்திய முழக்கத்துடனும் சேனைகளுடனும் யானைகுதிரைகளுடனும் ரதமேறிப் புறப்பட்டதெப்படியிருந்ததென்றால், ஈசலானது பெரும்போக்குப் புறப்பட்டாலெப்படியோ அப்படியாக அசோகவனத்துவழியாய் யாவரும் வந்து லவணசமுத்திரந்தாண்டி யானைகள்முன்னுந் தேவர்கள்பின்னும் குதிரைகளும்அதன்பின்கால்பலங்களும்அணிஅணியாகப்புறப்பட்டு வெளிப்பிரதேசம் பார்த்து பவுஞ்சிட்டுக் கூடாரங்க ளடித்து தண்டிறங்கினர்கள் அப்போது சூரியனும் மேற்றிசைக்கடலில் மூழ்கினன்.

## மகாமாயன் அயோத்திக்கு வருதல்.

அப்போது மகாமாயனனவன் பானுகோபனை யழைத்துச்சொல்லுகிறன் ஓ! பானுகோபா ஸ்ரீராமர் அஸ்வமேதயாகஞ்செய்யப்போகிறராம் நானும்போகவேண்டும் நம்முடைய சேனைகளை பிரயாணப்படுத்தென்று உத்தரவுசெய்து அரண்மனைக்குப்போனன் பானுகோபனுஞ் சேனைகளை சித்தப்படுத்தினன். அதெப்படியென்றால் கன்னமதம் கரடமதம் கபோலமதமென்று சொல்லப்பட்ட மும்மதங்களும் பொழியாநின்ற கருமையான யானைகள்பேரிலே அம்பாரிசவுடால்கள்வைத்து யானைகள் கையில் இரும்புசங்கிலியைக்கொடுத்து இராசமன்

ணரும் ஆடையாபரணந்தரித்து ரணவரிசைகள் பூண்டு கை யில்வில்லேந்தி முப்பத்திரண்டு ஆயுதங்களும்பிடித்து யானை யின்பேரிலேறிப் புறப்பட்டார்கள் அதெவ்வளவென்றால்பதி னேழு வெள்ளம் யானைகளும் அதன்பின் ரதங்களின் அச்சு க்கு எண்ணெயிட்டு மச்சுக்குவர்ணந்தீர்த்து கொடை கொடிச் சீலைகட்டி டால்துவசம்பறக்க, நாலுகுதிரைகள்பூட்டியும்எட் டுகுதிரைகள் பூட்டியும் பிசாசுபூதங்களால் இழுக்கப்பட்ட ரதத்திலே ராசமன்னர்கள்கையில் மகமேருவைப்போல வில் லைப்பிடித்து புறப்பட்டார்கள் அதெவ்வளவென்றால் முப்ப த்து நான்குவெள்ள ராஜமன்னர்களும் அதன்பின்னுற் சூரிய னிரதத்திற் கட்டியிராநின்ற புரவிகளுக்கு சமானமான குதி ரைகள்பேரில் கல்லணைவைத்து இருப்புசீருதரித்து கத்திகே டயமெடுத்து ஏறிபுரப்பட்டார்கள். அதெவ்வள வென்றால் அறுபத்தெட்டுவெள்ளம்வீரர்கள் அதன்பின் கால்பலமான ராட்சதாள் ஈட்டிஎறியீட்டி சுரிகைவாங்குவளைதடி சக்கரம் இருப்புலக்கை கண்டகோடாலி சூலம் வேல் கத்திகள் முத லான முப்பத்திரண் டாயுதங்களும் பிடித்துக்கொண்டு புற ப்பட்டார்கள். அவர்களோ! அண்டத்தைகையிற்பிடித்து பந் தாடப்பட்டவர்கள் வெகுயுத்தங்களிற் கைகண்டவர்கள் அவ ர்களுக்குதிரிமூர்த்திகளுமீடல்லஎப்போது அஸ்வமேதயாகயு த்தம்வந்ததென்று கேட்டார்களோ. அப்போதேமகாசந்தோ ஷத்துடனே அட்டகாசங்களும் வீரப்பிரதாபங்களும் பேசிக் கொண்டுபுறப்பட்டார்கள் அதெவ்வளவென்றால் நூற்றுமுப் பத்தாறுவெள்ளம்காலாள்கள் அத்தருணத்தில்மகாமாயனை வன் கிரீடம்பூண்டுவச்சிரகவசமணிந்து ஆடையாபரணந்தரி த்து மந்திரிபிரதானிகள்சூழ தன்னுடைய தேவிகளையும் அ ழைத்துக்கொண்டு ரதத்தில்வந்தேறினன் அவன்ஏரவே ஜெ யபேரிகைவெண்கலபேரிகை அடித்தார்கள் எக்காளைசின்னம் தவுண்டைமல்லரி குடைமுழா தம்பட்டம் மத்தளம் வுருத்திர வீணைகள்முதலான வாத்தியங்கள் தாம்தாமென்று முழங்கச் செய்தார்கள் அப்போது நூற்றுமுப்பத்தினுலாயிரங்கோடி ப டைத்தலைவரும்ரதமேறி மகரக்கொடிபிடித்து புறப்பட்டார்க ள். இப்படியாகசகலஆடம்பரத்துடனேஆகாயமார்க்கத்திலெ ழும்பி சமுத்திரந்தாண்டி லவணசமுத்திரக் கரையோரமாய்த் தண்டுவிட்டிறங்கினர்.

## சலவசந்தன் அயோத்திக்குவருதல்.

இவ்விடத்தில் இப்படியிருக்க அனுமாரானவர்போனபி
ற்பாடு சலவசந்தனனவன் சேனாதிபதியான பஞ்சகண்டனைய
ழைத்து ஓய்பஞ்சகண்டனே! ஆதிபராபரவஸ்துவாகவிளங்
கப்பட்ட ஸ்ரீராமமூர்த்தி அஸ்வமேதயாகஞ் செய்யப்போகிரு
ராம் அந்தயாகத்திற்கு நாம்போகவேண்டும் நம்முடையதண்
டுதளங்களைப் பயணப்படுத்தென்று கட்டளையிட்டு தன்னரண்
மனைக்குச்சென்றான். அப்போது பஞ்சகண்டனனவன் தண்
டைவெளிப்படுத்தி யானையின்மீது அம்பாரிவைத்து முப்பத்
திரண்டு ஆயுதங்களைக்கொண்டு கையில் வில்லெடுத்து யானை
யின்மீதேறிப் பதிமூன்று வெள்ளம் ராஜமன்னர்கள் புறப்ப
ட்டார்கள் அதன்பின் ரதங்களானது குடை கொடிச் சீலைக
ளால் அலங்கரித்து டால்துவசம்பறக்க அநேகங்குதிரைகள்
பூட்டியும் இருபத்தாறுவெள்ளம் ரதம்புறப்பட்டது வாய்வே
கத்திலு மிஞ்சினவேகமாகிய ஐந்துவெள்ளங் குதிரைகளின்
மீதேறிப் புறப்பட்டார்கள். அதன்பின்னாற் கால்பலமான ப
னிரண்டுவெள்ளம் ராட்சதாள் ஈட்டி எரிஈட்டி சுரிகை வாங்
கு வளைதடி சக்கரம் குந்தம் பாசம் இருப்புலக்கை தண்டாயு
தம் கத்தி கேடயம் என்று சொல்லப்பட்ட முப்பத்திரண்டு ஆ
யுதங்களு மேந்திக்கொண்டு புறப்பட்டார்கள். சலவசந்தனும்
இரத்தினகிரீடம் பூண்டு ஆடையாபரணலங்கிர்தனகி பட்ட
ணத்தை மந்திரி வசப்படுத்தி ஸ்திரீயுந்தானு மிரதத்திலேறி
யாவரையுங் கூட்டிக்கொண்டு ஜெயபேரிகை ரணபேரிகை யடி
த்துப் புறப்படுகையில் அண்டங்கிடுகிடென்று நடுங்கத்தக்க
தாக கோட்டையை விட்டு சமுத்திரக்கரைவந்து யானைதேர்
பரிகளுடன் ஆகாயத்திலெழும்பி சமுத்திரத்தையுந் தாண்டி,
வருகிறகாலையில் ஏழாவது சமுத்திரத்தில் யானைகளானது
நீய்ந்துநடப்பதால் அச்சமுத்திரம் சேராகக்குழம்ப அக்க
ரையேறி கூடாரம்போட் டிரங்கினார்கள். சூரியனும் மேற்றி
சைக்கடலில் மூழ்கினன். அப்போதவ்விடத்தில் தேவசுந்திர
ன்பாளையமும் ஒன்றாய்க்கூடிக்கொண்டு சமுத்திரக் கரையில்
நூறு யோசனைவிஸ்தீரணம்பரவி ஒருவர்க்கொருவர் வினவி
சந்தோஷவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள், இப்
படியிருக்கையிற் பொழுதுவிடிந்தது சூரியபகவானும் உதய
கிரிபர்வதத்தில் உதயமாகவே மூன்று தண்டுகளும் ஒன்றாய்ச்

சேர்ந்து நடக்கிறபோது பூமியானது கிடுகிடென்று நடுங்கி யது அஷ்டதிக்குப்பாலகரும்பயப்பட்டார்கள். அஷ்டகுலபர் வதங்களும் நடுக்கமுற்றது அண்டகடாகங்களும் குலிங்கிற்று தேவர்கள் திகிற் கொண்டார்கள். காட்டில்வாழுங் கரடிபுலிசி ங்கம் யாளியென்றுசொல்லு மிருகங்கள் பாரிவேட்டை விட் டாற்போல காட்டைவிட்டு ஓடிப்போயின. இப்படிசகலரும் நடுங்கும்படியாக தண்டகாரணியவனம் வந்துவிட்டது தண் டு வருகிறதற்கு இடமில்லாமல்காடு செடி மலைகுன்றுகள் சக லமும்வெட்டி நிறவி பத்துயோசனைவிஸ்தீரணம் அகலமாக வழியுண்டாக்கி கங்குகரைகாணுமல் சேனைகளானது வருகிற கை தண்டகாவனத்து ரிஷிக ளெல்லாங் கண்டு மற்றொருவன ம் ஓடினுர்கள்.

இப்படியிருக்க அனுமாரானவர்கந்தாபுரிபட்டணம்போ ய்தன்னுடையபாளையமெல்லாம் தயார்படுத்தி தன்பிள்ளையா னமட்சயந்த அனுமானை அயோத்தியாபுரிபட்டணம்வரவுத் தரவுசெய்து கங்கைக்கரைக்குவந்து குகனை தன்னுடனேவர ச்சொல்லி ஆக்கியாபித்து குகனிடத்திற் செலவுபெற்றுக்கொ ண்டு அனுமார் அயோத்தியாபுரி பட்டணம்வந்து ஸ்ரீராம ரைக்கண்டு நமஸ்கரித்துச் சுவாமி தேவரீர் உத்தரவு செய்த பிரகாரம் சமுத்திரந்தாண்டி சகலரையும் சேனு சைனியங்க ளுடன் வரும்படி உத்தரவுசெய்து வந்தேன். அவர்களுமிப் போதே இன்னஞ் சற்று நாழிகைக்கோ வரப்போகிருர்க ளென்று அனுமார்சொல்ல ஸ்ரீராமமூர்த்தியும் அனுமாருடை ய வேகத்திற்கு மெச்சிஇராசகாரியங்களைக்குறித்துபேசிக்கொ ண்டிருக்கையில் தண்டுகளானதுகோவென்று பிரசண்ட வா ய்வு சப்திப்பது போலக் கருந்தூள் செந்தூளெழும்பக் கண் ணுக்கெட்டாததூரம் பரவிக்கொண்டுவருகிறபோதுபட்டண த்து ஜனங்களானவர் கண்டு வலசைவாங்கி ஓடிப்போகிறவர் கள் சொல்லிக்கொண்டுபோகிற தென்னவென்றுல் நமது அ யோத்தியாபுரி பட்டணத்திற்கு என்னமோ அழிவுகாலஞ் ச ம்பவித்ததுபோ லிருக்கின்றது சும்மாயிருக்கிற வானரர்களை யெல்லாங் கூட்டிக்கொண்டுபோய் ராட்சதசேனையெல்லாங் கொன்றுபோட்டான் அவர்கள்கண்குத்திப்பாம்புபோலச் ச மயம்பார்த்துவந்துவிட்டார்கள். ஓடிப்போவோமென்பாரும் ஒளிப்போமென்பாரும், ஐயோசீதாலட்சுமிஎன்று வனம்போ னுளோ அன்றே போய்விட்டது ஸ்ரீராமன் வாழ்வென்பாரும் சில ஸ்திரீகள் அடியோடேஇப்படிஅழிவுகாலம்வருகிறதற்கு

த்தாளுமுன்னமேமண்மாரிபொழிந்துபெருங்காற்றடித்தது இனிஇந்தப் பட்டணத்தி லிருக்கப்போகாதென்று ஒருத்திக்கொருத்தி சொல்லிக்கொள்ளவும், அடியம்மா ஸ்ரீராமர் என்னமோ அஸ்வமேதயாகம் பண்ணப்போகிருர் அதற்கு சேனைவருகிறதென்பாரும், அடிபோடி பயித்தியக்காரி சீதையில்லாமல் அஸ்வமேதயாகம்பண்ணினால் உடனே பின்னம் வருமென்பாரும், அடிதங்கை இன்னும் ஒருநாழிகைக்குள் எல்லாந் தெரியவருமென்பாரும், சிலமாதர்கள் அடிதங்கையே ஸ்ரீராமர்என்ன கையிலாகாதவரோ அவர்தம்பி லட்சுமணருக்கு இதுவெல்லால் ஒரு நிகராவென்பாரும், அடிபோடி பரதர் என்ன லேசானவரோ சத்துருக்கரென்ன அற்பமானவரோ அவர்களுக்கு ஆர்தான்யீடென்பாரும், அடியம்மா அனுமாரென்னப்பட்ட ஒருகுரங்கு அவர்களிடத்தி லிருக்கிறமட்டும் அவர்களுக்கென்ன சங்கை யிருக்கிற தென்பாரும், அம்மா சீதையில்லாமல் யாகம் நிறைவேற மாட்டாதென்பாரும், அடிதங்கையே ஸ்ரீராமர் இலட்சுமணர் சிறுபோதில்தாய்சொற் றள்ளாமல் வனத்திற்குப் போய் வனத்து ரிஷிகளுக்கு அபயஸ்தங்கள் கொடுத்து இராவண ராட்சதரை யெல்லாம் கொன்று விபீஷணருக்குப் பட்டங்கட்டிப் பேர்பெற்றவர்கள் என்பாரும்சிலமாதர்கள் அடிமச்சி இப்போது இந்த சேனைகளைக்கொண்டு தான் யாகம்பண்ணி ராசாக்களையெல்லாஞ்செயித்து ஒருதடையின்கி ழாளகாத்திருக்கிருரென்பாரும், இப்படிப் பட்டணமாதியந்தமுஞ் சொல்லிக்கொண்டிருப்பதை ஸ்ரீராம லட்சுமணருங்கேட்டு அனுமாரைப்பார்த்து சொல்லுகிருர்.

ஓய், அனுமாரே! இவ்வளவு ஆரவாரத்துடன் உலகம் நடுங்கும்படியாய்வருகிறவன்யாரென்றுகேட்க அனுமாரானவர் பொன்மண்டபம் விட்டு வெளியேவந்து விஸ்வருபங்கொண்டு எட்டிப்பார்த்தார் அப்போது ஆர்வருகிருனென்ருல், முன்னே சுக்ரீவனும் அங்கதனும் தங்கள் தண்டுடனேவருகிறதைக்கண்டு விஸ்வருபத்தைவிட்டு சபாமண்டபம்வந்து சுவாமியை நமஸ்கரித்து சொல்லுகிருர்.

ஓய் நாதனே கிருபைக்கடலே சுக்ரீபனும் அங்கதனும் வருகிருர்களென்ருர் அதுகேட்டு இராமபத்திரசுவாமி சந்தோஷமாய் பரதரையுஞ் சுமந்திரனையும் பார்த்துச்சொல்லுகிருர் பரதாழ்வாரே மந்திரிசுமந்திரரே நீங்கள் சிலதுசேனை

களைக் கூட்டிக்கொண்டு போய் சுக்ரீபமகாராசனையும் அங்க தனையுந்தழுவி அழைத்துக்கொண்டு வாருங்களென்று உத்த ரவுபண்ணினர் அந்தப்படியே பரதாழ்வாருஞ் சுமந்திரரும் எழுந்து சேனைகளைக்கூட்டிக்கொண்டு டமாரபேரிகை முழங்க எதிர்சென்றார்கள்.

அப்போது வானரப்படையானது தென்கோபுர வாச ற்படி முன்கோட்டைக்குவெளியில் நின்றுவிட்டன அக்கா லையில் சுக்ரீவனும் அங்கதனும் இருபத்துநான்கு படைத் தலைவருஞ்சூழ காணிக்கை கப்பணங்களுடன் வந்து ஒருவ ர்க்கொருவர் தழுவி ஆலிங்கனம்பண்ணிக் கொண்டு பட்ட ணத்திற்குள் வரும்போது பட்டணத்து ஜெனங்கள் இவன் றானே எழுபத்திரண்டுவெள்ளம் வானரர்களுக்கும் இராசா வான சுக்ரீவனென்றும் இவன்றானே அங்கதனென்பவனு ம் என்றுபேசிக்கொள்ள சுக்ரீவமகாராசன் அங்கதனுடன் கூடிக்கொண்டு அவர்களைப் பாராததுபோலும் ஏழுகோபுர வாசற்படியுந்தாண்டி பட்டணத்துக்கு வருகிறபோது பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர ரென்றும் சொல்லப்பட்ட நான்கு வீதிகளும் பாழடைந்து ஸ்ரீ லட்சுமி வனம்போன சமாச்சார ம் பரதர் சுமந்திரர்சொல்ல சுக்ரீவர் கேள்விப்பட்டு வெகுமன ஸ்தாபமாய் நான்குவீதியுங் கடந்துசபாமண்டபம்வந்து ஸ்ரீ ராமபத்திர சுவாமியார் பாதத்தில் தன்னுடையகிரீடம்பட ந மஸ்கரித்தான் அப்படிவந்து நமஸ்கரித்த சுக்ரீபனைவாரியெ டுத்துமார்போடணைத்து ஆசீர்வதித்தார் அவர் ஆரென்றால் பல்லாயிரங்கோடி அண்டங்களையுங் கெர்ப்பத்தில் வைத்து ரட்சிக்கப்படா நின்ற ஆதிகர்த்தாவாகிய விஷ்ணுவே ஸ்ரீரா மனுகவும் அவதரித்த ஸ்ரீமந்நாராயணன்பின்பு சுக்ரீவன்இல ட்சுமணரை சேவிக்க இலட்சுமணருஞ் சுக்ரீவனுக்கு ஆசீர்வ தித்து உட்காரச் செலவுகொடுத்தார்.

அப்போது அங்கதனும் இருபத்துநான்கு படைத்தலை வருங் கொண்டுவந்த காணிக்கை கப்பங்களை யெல்லாம் நிறு த்திப்போட்டு சுவாமியைவந்து நமஸ்கரித்தார்கள், அப்படி நமஸ்கரித்த அங்கதனுக்கும், இருபத்துநான்கு படைத்தலை வருக்கும் ஆசீர்வதித்தார். அவர்களும் எழுந்திருந்து இலட் சுமணரை சேவிக்க. இலட்சுமணரும் ஆசீர்வதித்து வுட்கார ச்செலவுதந்தார் அக்காலையில் ஸ்ரீராமர் சுக்ரீவனை நோக்கி

ஒய் வானரசிரேஷ்டரே யாவருஞ் சுகமாவென்று வினவ, சுக்ரீவமகாராசன் சொல்லுகிறார். ஒய் நாதனே! கிருபைக்க டலே தங்களுடைய கருணுகடாட்சம் அடியார்கள்பேரிலிருக் கிறவரைக்கும் நாங்களனைவரும் சுகமென்றான். அதுகேட்டு ஸ்ரீராமமூர்த்தி சந்தோஷமாய்ப் பேசிக்கொண்டிருந்தார். அந்தச்சமயத்திலே தாரையுஞ் சுக்ரீவனுடைய பெண்டுகளும் அங்கதன் பெண்டுகளும் இன்னம் இரண்டுலக்ஷசங் கன்னி யர்கள் பல்லக்கு தண்டிகை விட்டிறங்கி அரண்மனைக்குள் நுழைந்து கௌசலை கைகேசி சுமித்திரை இவர்கள் மூன்று பேருக்கும் நமஸ்கரித்தாள், அன்னவர்கள் அவர்களுக்கு ஆசீர்வதித்து உட்காரச்சொல்லி ஆசனம்போட்டு சற்றுநே ரம் பேசிக்கொண்டிருந்து அவர்களுக்கு விடுதிகொடுக்க அவ் விடுதியில் அவர்களும்போயிருந்தார்கள்.

இப்படியிருக்க, வீபீஷணரானவர் வடக்குகோபுரவாசற் படியாய் புட்பக விமானத்தை விட்டிரங்கி புற்றிலிருந்த ஈச லானது பெரும்போக்கு புறப்பட்டா லெப்படியோ அப்படி யாக விமானத்திற் குள்ளிருந்து ஆனைகளானது கருமலையை ப்போல பேரிலக சவுடால்களுடனே புறப்பட்டது அதின் பேரில் இராசமன்னரும் வில்லை கையிற் பிடித்து முப்பத்தி ரண்டுவித ஆயுதங்களுடனும் புறப்பட்டு அயோத்தியாபுரி பட்டணந் திடுக்கிட வருகிறபோதுண்டாகிய ஆரவார சத்த த்தைக்கேட்ட ஸ்ரீராமபத்திரசுவாமி அனுமாரைப்பார்த்துச் சொல்லுகிறார்.

ஒய் அனுமாரே இப்படி அதிக ஆரவாரத்துடன் பூமி நடுங்கும்படியாய் வருகிரவர் ஆரென்றுகேட்க அனுமா ரெ ழுந்திருந்து சுவாமி லங்காதிபதியான விபீஷணர் வருகிரு ரென்றார் அதுகேட்டு ஸ்ரீராமமூர்த்தி கூறுகிறார் தம்பி பரதா லக்ஷுமணா சத்துருக்கா நீங்கள் நமது சபையிலுள்ள மந் திரி பிரதானிகளையுங் கூட்டிக்கொண்டுபோய் விபீஷணரை த்தழுவியழைத்து வாருங்களென்று கட்டளையிட அந்தப்ப டியே அம்மூவரும் ஊர்வசி திலோர்த்தமை அரம்பை மேன கை இவர்களுக்குச் சமதையான பெண்கள் நாட்டியம் புரிய ஏழுகோபுர வாசற்படியுங் கடந்துவருகிற விபீஷணரையும் மாலியவானையுங்கண்டு இரதத்தை விட்டிழிந்து காணிக்கை கப்பங்களுடன் மந்திரிபிரதானிகள் புடைசூழ ஆடல்பாடல் பார்த்துக்கொண்டு மேளசங்கீதத்துடன் புறப்பட்டு எதிர்

கொண்டுவந்து ஒருவர்க் கொருவர் தழுவி வினவிக்கொண்டார்கள் சேனாதிபதியான காலசித்தனும் நீலாக்ஷசதனும் வந்து பரதர் லக்ஷ்சுமணருக்கு நமஸ்காரஞ்செய்ய பரதலக்ஷ்சுமணர் சத்துருக்கரும் ஆசீர்வதித்தார்கள் சேனாசமுத்திரங்களெல்லாங் கோட்டைக்கு வெளியிலே நிறுத்திப்போட்டுக் கிழக்கு கோபுரவாசற்படியுங் கடந்து பட்டணத்துக்குள்வருகிறபோது பட்டணத்திலுள்ள ஜெனங்கள் விபீஷணரையும் மாலியவானையும் பார்த்து ஒருவர்க்கொருவர் சொல்லிக் கொள்ளுகிறார்கள் இவர்தானோ இராவணனிட தம்பியான விபீஷணன் நல்லகுணசாலி இவராலேதான் ஸ்ரீராமர் இராவணசம்மாரம் பண்ணி இவருக்குமுடி சூட்டினது இவர்தானோ விபீஷணர் இவரில்லாவிட்டால் அன்றேஇராமலக்ஷ்சுமணர் இறந்துபோய்விடுவார்களென்பாரும் இந்தவிபீஷணன் சச்சரவுசெய்து ஸ்ரீராமருடன் சேர்ந்துக்கொண்டு தமயன்குடியைக் கெடுத்தானே இவன் முகத்தில் முழிக்கப்போகாதென்பாரும், அப்போது சீதையம்மனை இராவணன்யெடுத்துக்கொண்டுபோய் அசோகவனத்தில் வைக்க அது கண்டு இராவணன் சகோதரனை கும்பகர்ணன்மீது தூறிக்கொண்டான் பிறகுவிபீஷணர் வந்து தமயனுக்குச் சீதையம்மனை விட்டுவிடும்படி பல நீதிகளை யோதியும் இராவணன் கேளாமல் வாளையுருவிக்கொண்டு வெட்டவந்தபோது அந்தவாளுக்குபயந்து தம்பியான விபீஷணன் ஸ்ரீராமரண்டைவந்து சேர்ந்தான் ஸ்ரீராமரும் தன்னுடைய பகையாளியின் தம்பியென்றும் பாராமல் அவனுக்கு அழிவில்லாத சிரஞ்சீவியுங் கொடுத்து இராவணனையுங் கொன்று பட்டமுந் தரித்தார் இந்தவிபீஷணர்நான் சுவாமிக்கு வுகந்த பிள்ளை யென்பாரும் அப்படியல்ல தமையனைவன் தம்பியைக் கண்டவுடனே தம்பியானவன் தமயனைக் கண்டவுடன் சரியாய் நடந்துக் கொள்ளுவான். அப்படி இராவணனிடத்தில் துற்புத்தியில்லாவிட்டால் தமயன்பேரிற் கோட்சொல்லிக் கொன்றதற்கு இலக்ஷ்சுமணர் முன்னுக்கு ஹரிஹரப்பிரம்மாதிகளுமீடல்ல, தமயன் மனதிற்குச் சந்தோஷமானல் தம்பி லட்சுமணனுக்கு சந்தோஷமாகுமே பாரும் அல்ல இந்த விபீஷணன் இராட்சச வம்சமாயிருக்கிறார், இராஜவடிவாய் காண்கிறது இவருடைய அழகுக்கு மன்மதனும் ஈடல்ல, இவர் பராக்கிரமமும் இவர் வில்சிங்காணியும் அம்புராப்

பொதியும் இரத்தினக்கிரீடமும் தேவேந்திரனுக்கும் வரா தென்பாரும், இப்படியாகச் சொல்லிக் கொள்ளும் நாலுவர் ணசாதிகளுடைய வீதிகளுங் கடந்து ராமருக்குஞ் சபா மண்டபம் வந்து அவர் பாதத்தில் தன்னுடைய ரத்தினகிரீ டமும் படத்தாழ்ந்து சேவித்தார். அப்படி வந்து சேவித்த விபீஷணரை யெடுத்து ஆசீர்வதித்து பொற்பீடம் போட்டு உட்காரவைத்தார். மாலியவானும் சேனாதிபதியும் மந்திரி பிர தானிகள் சபாமண்டபத்தில் நடந்து வருகையில் ராமர் விபீ ஷணரை பார்த்து இவரார் மகாபெரியவராயிருக்கிறாரென்று கேழ்க்க விபீஷணர் சொல்லுகின்றார்.

கேளும் ஓ நாதனே இவர்தான் எங்கள் பாட்டனாகிய மாலியவான். என் தமையனான இராவணனுக்குச் சீதையம் மனைவிட்டுவிடும்படி வெகு புத்திகளைச்சொல்லி உம்மையுங் கொண்டாடினவர் இவர்தானென்றுசொல்ல ஸ்ரீராமர்கேட்டு சிங்காதனம்விட்டுக் கீழிறங்கி மாலியவானுக் கெதிர் வர வே மாலியவான்கண்டு பயபக்தியுடன் தெண்டனிட அந்த மாலியவானை ஸ்ரீராமர் கிருபைகூர்ந்து வாரியெடுத்து ஆசீர் வதித்து ஓர் ஆசனங்கொடுத்து உட்காரவைத்து அவர்களு டைய சுபக்ஷேமசங்கதிகளைப் பேசிக்கொண்டிருந்தார் அப் போது விபீஷணனிடம் பட்டபுதேவியான சனமாலிகையும் மகளான திரிச்சடையம்மனும் இரண்டு லக்ஷசங் கன்னியர் கள் கௌசலை கைகேசி சுமித்திரை மூன்றுபேரையுஞ் சேவிக் க அன்னவர்கள் அவர்களையும் ஆசீர்வதித்து பீடம்போட்டு உட்காரவைத்து சற்றுநேரம் பேசிக்கொண்டிருந்தது அவர் களுக்குத்தக்க விடுதிகளமைத்து சகலசம்பிரமத்துட னடப்பி த்தார்கள்.

இப்படி யிருக்கையில் மகாமாயனானவன் தன்னுடைய பரிவாரமான யானைதேர் பரிசேனைகளான தண்டு தளங்களு டனே தண்டகாரணிய வனத்தைவிட்டுப் புறப்பட்டுக் கங்கை க்கரை யிரங்கிப் போகையில் யானைகளானது தும்பிக்கைகளை உயரத் தூக்கிக்கொண்டு நடந்தது அதன்பின் வரும் யானை கள் ஜலங்களைக் குடித்து புரவிகளுந் தாகவிடாய் தீர்ந்து நட ந்ததுகள் அதன்பின் வருங் குதிரைகளுக்கு சலமில்லாமற் சேராடி குழப்பிவிட்ட கால்பலமான இராக்ஷதர்கள் நடக்கிற போது காய்ந்து உலர்ந்து தும்புந் தூளுமாய்க் கருந்தூளு ஞ் செந்தூளு மெழும்புப்படியாய் ஆரவாரத்துடனே அட்

டகாசஞ்செய்து இரைச்சலிட்டு வருவதை ஸ்ரீராமர் கண்டு ஒய் அனுமாரே! இப்போது வருகிறவர் யாரென்று கேட்க அனுமார் சொல்லுகிறார். ஓ சுவாமி இப்போது மகாமாயன் வருகிறதுபோல காண்கிறதென்றார், அதுகேட்டு ஸ்ரீராமர் தம்பியாகிய சத்துருக்கனைப்பார்த்து தம்பிசத்துருக்கா நீ சில படைத்தலைவரையுஞ் சேனைகளையுங் கூட்டிக்கொண்டு போவென்றார், அவ்வாறே சத்துருக்கர் சொல்லுகையில் மகாமாயன் தெற்குகோபுர வாசற்படியிற் பாளையங்களை நிறுத்திவிட்டு மந்திரி பிரதானிகள் படைத்தலைவர்சூழக் காணிக்கை கப்பங்களுடனே எதிர்கொண்டு வந்து சத்துருக்கரைக்கண்டு ஒருவர்க்கொருவர் தழுவி வினவிக்கொண்டு சந்தோஷமாய் வருகையில் அப்பட்டணத்து ஜனங்கள் மகாமாயனைப்பார்த்து ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளுகிறார்கள்.

அண்ணே இவனைப்பார்த்தால் பயமாயிருக்கின்றது இவனுடைய கோரப்பல்லுங் கையிற்பிடித்திருக்கின்றவில்லும் பாரென்றான் மற்றொருவன் கூறுகின்றான். அப்பா இவன் முகத்திலிருக்கிற மீசைகளும் இவனுடைய புஜபல பராக்கிரமமும் பார்க்கவே யாவருக்கும் உதரலும் மனப்பதரலுமாமென்றான் வேறொருவன் கண்டு பயங்கொண்டு ஐயா இவன்கையோ கயிலையங்கிரியைக் காக்குமாப்போற் காலேற்கும் கண்ணே விண்ணைமருட்டும் புஜமோபதினாயிர மலையைப் புரட்டுமென்று சொல்லிக் கொள்ளும்படியாய் வீதிகளைக்கடந்து சபாமண்டபம் வந்து ஸ்ரீராமரை நமஸ்கரித்தான். அப்படி நமஸ்கரிக்க மகாமாயனுக்குப் பலவாசிகள் கூறியபின்பு மகாமாயனனவன் பரதலட்சுமணரைச் சேவிக்க அவர்களும் ஆசீர்வதிக்க பிறகு மாலியவானையும் விபீஷணரையுங் கண்டு நமஸ்கரித்தான். அப்படி நமஸ்கரித்த மகாமாயனுக்கு இவர்களும் ஆசீர்வதித்து உட்காரசெலவு கொடுத்தார்கள். அப்போது ஸ்ரீராமர் ஒய் மகாமாயனே நீங்களனைவரும் க்ஷேமமா வென்றார், ஓ! நாதனே கிருபைக்கடலே தங்களுடைய அனுக்கிரகம் அடியேன்பேரி லிருக்கிறமட்டுக்கும் அடியேன் க்ஷேமமே தவிர குறைவொன்றுமில்லை யென்று பணிவாகக்கூறினான். இதற்குள் மதனரஞ்சினி யென்னப்பட்டவள் ஆயிரங்கன்னியர்கள் சூழ முத்து பல்லக்கிலேறி கௌசலை கைகேசி சுமத்திரைமா ரிருக்கும் அந்தப் புரத்திற்குட் சென்று அந்த மூன்றுபேருக்கும் நமஸ்கரிக்க அவர்களும்

இவர்களை ஆசிர்வதித்து அவர்களுக்கு விடுதிகள் கொடுத்து சகல சம்பிரமத்துடன் நடப்பித்துக் கொண்டுவந்தார்கள்.

இப்படியிருக்கையில் சலவசந்தனுனவன் தன்னுடைய யானைசேனை பரிவாரங்களுடன யானைகள் முன்னடக்க, அதன்பின் ரதங்கள் நடக்க அதன்பின்பு குதிரைகளும் அதன்பின் கால்பலமான சேனைகளும் நடக்கிறபோது பூமியானது கிடுகிடுவென்று நடுங்க ஆதிசேஷன் புஜமாற்ற அஷ்டகுல பர்வதங்களுமதிரப் பெருத்த ஆரவாரத்துடனே இராக்கதச் சேனைகளானது வருகிறபோது ஸ்ரீராமர் அனுமாரைப்பார்த்து அதோ வருகிறவன் யாரென்றுகேட்க, அனுமார் சொல்லுகிறுர். ஓ நாதனே! இன்னஞ் சலவசந்தன் வரவில்லை இவ்வளவு ஆரவாரத்துடன் வருகிறவன் சலவசந்தனே யல்லாமல் மற்றொருவரு மல்லவென்று அனுமார் சொல்ல, அதுகேட்டு ஸ்ரீராமர் தம்பி சத்துருக்கா நீ நமது மந்திரி பிரதானிகளுடன் சேனைகளைக் கூட்டிக்கொண்டு எதிர்நோக்கிச் சென்று சலவசந்தனை அழைத்துவாவென்று கூறுகையில் சத்துருக்கர் அந்தப்படியேசர்வாடம்பரத்துடன்சலவசந்தன் முன் செல்லவே சலவசந்தன் கண்டு சட்டென்று ரதத்தை விட்டுக்கீழேகுதித்து சாஷ்டாங்க தெண்டம் சமர்ப்பிக்கச் சத்துருக்கரானவர் தழுவி ஆசிர்வாதஞ்செய் தழைத்து வருகையில் சேனுசமுத்திரங்களைக் கோட்டை வெளியில் நிறுத்திவிட்டு படைத்தலைவனுன பஞ்சகண்டகன் சேனுதிபதிகள் தளவாய்கள் சூழும்படியாய்க் காணிக்கைக் கப்பங்களுடன் வருகிறபோது பட்டணத்து ஜனங்கள் சலவசந்தனைப் பார்த்துச் சொல்லிக் கொள்ளுகிறுர்க ளிவனைப்பார்த்தால் இராக்கதனைப்போற் காண்சிறது சிறியவயதுபோலுந் தோன்றுகின்றது இவனுடைய அகோரதந்தங்களைப் பாாத்தால் சந்திரனை இருபிளவாய்ப்பிளந்து இரண்டு கடைவாயிலும் வைத்ததுபோலு மிருக்கின்றதென்று சொல்லிக் கொள்ளுகையில் சலவசந்தனுனவன் ஸ்ரீராமமூர்த்தியைக்கண்டு வணங்கினுன். அப்படி வணங்கிய சலவசந்தனை யெடுத்து வாயார வாழ்த்தினுர் பிறகு சலவசந்தனுனவன் பரத லட்சுமணரையும் சேவித்தான் அவர்களும் ஆசீர்வாதஞ்செய்து ஆசனங் கொடுக்க அதன்மீ துட்கார்ந்தான் அப்போது ஸ்ரீராமமூர்த்தியானவர் ஓய் சலவசந்தனே! நீ ரும்முடைய சேனுசைனியங்களும் சுகமோ வென்றுர் சலவசந்தன் சொல்லுகிறுன்

உங்களுடைய அனுக்கிரகம் அடியேனுக் கிருக்கிறமட்டுக்கும் ஒரு குறையுமில்லை யென்றான்.

இப்படி யிருக்கையில் சலவசந்தனுடைய பட்டபு தேவியான திருமாலியும் நூறு தாதியர்கள் புடைசூழ முத்துப் பல்லக்கிலேறி கைகேசி சுமித்திரைகள் அரண்மனைக்குச் சென்று அவர்களடிவணங்கி நமஸ்கரித்தாள் அவர் களித்து திருமாலினுக்கு ஆசீர்வதித்து ஒரு பீடம்போட்டு உட்கார்வைத்து வந்தவர்களுக்கெல்லாம் விடுதியும்விடுக்க அதில் சகல வைபவத்துட னிருந்தார்கள் அப்படியிருக்கத் தேவசுந்தரனைவன் யானை தேர் பரிகள் அணியாகவும் நாற்பத்தைந்து வெள்ளம் ராட்சத சேனைகளுடனும் இருபத்து நாலாயிரங் கோடி லானராள்கூட்டத்தோடு கங்கைக்கரைக்கு வந்தான் அப்படிவந்த தேவசுந்திரனை மட்சயந்த அனுமான்கண்டு ரதத்தை விட்டிழிந்து யெதிர்கொண்டு வந்து அழைத்துப் போய் தழுவி வினவிக்கொண்டு இருவர் தண்டுகளையும் ஒன்ராய்க் கூட்டி சங்கீதமேள வாத்தியங்கள் தாம்தா மென்று முழங்க பூமியதிர அஷ்டகுல பர்வதங்களும் நடுங்க வானரும் ராட்சதாளும் ஒன்ராய்க்கூடி ஆரவாரத்துடனே வருகிறபோது எங்குமிறங்க யிடமில்லாமல் நாலுமூலை கோபுர வாசற்படியும்போய்ப் பார்த்தார்கள். அவ்விட முழுமையும் ஆனையும் குதிரையும் ரதமும் வானராளும் ராக்ஷதாளும் எங்கும் டமார பேரிகை மேளவாத்தியங்களும் கொடைகளும் கொடிகளும் அவுதாக்களும் கூடாரங்களும் ஆடல் பாடல்களும் கூச்சல்களும் கோபுரவாசற்படிக்குத் தென்புறமாகக் கொஞ்சம் சந்து வெளிச்சமாய்க் கண்டது அதுகண்டு தேவசுந்திரன் மட்சயந்த அனுமாரைக்கண்டு தளத்தை விட்டு காணிக்கைக் கப்பங்களுடனே நாற்பத்து நாலாயிரங்கோடி சேனாதிபதிகள் சூழ ஏழுகோபுர வாசற்படியுங் கடந்து கோட்டைகள் நுழைந்து மகா ஆரவாரத்துடனே வருகிறபோது சபாமண்டபச் சபையிலுள்ள ஸ்ரீராமர் பரதலட்சுமணர் சத்துருக்கர் விபீஷணர் மாலியவான் சுக்ரீவன் அங்கதன் மந்திரியான சுமந்திரன் சகலருங் கேட்டு அவர்களார் வருகிறவர்களென்று மனதிலேயெண்ணினார்கள், அப்போது ஸ்ரீராமர் ஓ அனுமாரே! இப்போது வருகிறவர்களாரென்றுகேட்கவே அனுமார்கூறுகிறார் சுவாமி வானரசிரேஷ்டர் இராட்சதசிரேஷ்டர் எல்லாரும்வந்து நிறைந்திருக்கி

ன்றார்கள் தேவசந்திரன்மாத்திரம் வரவில்லை அவன்றான்வரு கின்றதுபோற் காணுதென்றார். அதுகேட்டு ஸ்ரீராமமூர்த்தி யானவர்தம்பி சத்துருக்கனைப்பார்த்துச் சொல்லுகின்றார், நீ சிலதுசேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய் மரியாதைசெய்து அழைத்துக்கொண்டுவாவென் றுத்தரவுசெய்தார் அப்படியே சத்துருக்கர் மந்திரி சுமந்திரனையும் எதிர்கொண்டுபோகவே தேவசுந்திரனும் மட்சயந்த அனுமாரும் நமஸ்கரித்தார்கள் அப்படி நமஸ்கரித்த அவ்விருவருக்கும் ஆசீர்வாதஞ்செய்து அழைத்துக்கொண்டு வருகிறபோது தேவசுந்திரனையும் மட்சயந்த அனுமானையும் ஸ்ரீராமமூர்த்திகண்டு ஓ அனுமாரே! இராட்சதரூபனும் வானரரூபனுமாக வருகிறார்களே இவர் களாரென்றுசொல்லென்று கேட்கையில் அனுமார் சொல்லு கிறார்.

ஓ சுவாமி! அதோராட்சதசிரேஷ்டனாக வருகிறவன்பா தாளலோகத்தை பரிபாலனம் பண்ணப்பட்ட மயிலிராவண னுடையமருமகனான தேவசுந்திரன் வானரரூபமாய் வருகிற வன் அடியேனுடையகுமாரன் மட்சயந்த அனுமானென்ன ப்பட்டவன் இருவரும்வருகிறாரென்று சொன்னார். அதுகே ட்டு இராமலட்சுமணர் சந்தோஷப்பட்டு ஓய் அனுமாரே நீர் நித்தியதத்துவ பிர்மாச்சாரியராயிற்றே உமக்குப்புத்திரனேது எனக்குத் தெரியச் சொல்லவேண்டுமென்று ஸ்ரீராமமூர்த்தி கேட்க அனுமார் சொல்லத்தொடங்கினார்.

## ஸ்ரீராமருக்கு அனுமார்
## மட்சயந்த அனுமான் வரலாறு கூறுதல்.

---

ஐயா ஜகநாதனே! அடியேன் சீதா லட்சுமியம்மனைத் தேடிக்கொண்டு சமுத்திரந் தாண்டுகையில் அடியேனுடைய சுக்கிலங்கலிதமாய்ச் சமுத்திரத்தில்விழுந்தது அதையொரு மச்சமானது விழுங்கிற்று. அந்தநாழிகைக்கு ரிஷி பிண்டம் இராத்தங்காமல் மட்சயந்தன் பிறந்தான். பிறந்த மாத்திரத் தில் சமுத்திரகரை யோரமாகத் தத்தளித்துக் கொண்டிருந் தான் அப்படியிருக்கையில் மயில் ராவணன் வேட்டைக்குப் பாதாளத்தைவிட்டு வெளியேவந்து சமுத்திரந்தாண்டிவருகி றபோது ஜலத்திலேதத்தளித்துக்கொண்டிருக்கிற மட்சயந்த னைக்கண்டு வெகுஆசையன்புடன் எடுத்துவளர்த்தான். அப் படியிருக்க அடியேன் சீதாலட்சுமியைக் கண்டு சமுத்திரந்தா ண்டி தங்களுக்கு வந்துசொல்லத் தாங்களும் இளையபெருமா ளுமாக எழுபதுவெள்ளம் வானராளுடனே சமுத்திரத்தைய

டைந்து இலங்கைக்குப்போய் இராவணனைக்கண்டு கும்பகர்
ணன் இந்திரசித்து அதிகாயன் மூவரையுங் கொன்ற பிறகு
இராவணனுனவன் யோசனைசெய்து பாதாள லோகத்தி லிரு
க்கப்பட்ட மயிலிராவணனையும் அவன் தம்பிமார் மூன்றுபே
ரையுமழைத்து தங்களையும் இளைய பெருமாளையும் பாதாள
லோகத்திற்கொண்டுபோம்படி உத்திரவு பண்ணினுன் அந்த
ச்சமாச்சாரந் திரிச்சடையம்மனுல் விபீஷணரறிந்துஉமக்கும்
இளையபெருமாளுக்குங் அடியேனுக்குஞ்சொல்ல, வாலினு
லே சந்தில்லாமல் கோட்டையாய்கட்டி பத்திரமாய் காத்துக்
கொண்டிருக்க, விபீஷணர் மந்திராபூதினுலே ஒருபெட்டிசெ
ய்து அந்தப்பெட்டியில் தாங்களும் இளையபெருமாளும் பள்
ளிக்கொள்ள அந்தச்சமயத்தில் மயிலிராவணன் விபீஷண
ரைப்போல வடிவுகொண்டு இந்தக்கோட்டைக்குவழி யெப்ப
டியென்றுகேட்டான். அந்தமர்மம் அடியேனுக்குந் தெரி
யாமல் ஒருகாலைவாங்கினேன், அந்தக்கால்வழியாக நுழைந்
துதங்களுக்கும் இளையபெருமாளுக்கும் சொக்குபொடியைத்
தூவி பெட்டியுடனேயெடுத்துப் பாதாளலோகம் போய்விட்
டான்.

கூடவே விபீஷணர் கோட்டையின்மீதில் வாளையுருவிக்
கையில்பிடித்துக்கொண்டுவந்துவிட்டார். அப்படிவந்த விபீ
ஷணரை அடியேன்பார்த்து ஐயாவிபீஷணரே! இப்போது
தான்உள் நுழைந்தீரே எந்தவழியாக எதிரேவந்தீரென்றுகே
ட்டேன். அப்போதுவிபீஷணர் சொன்னது நான்வரவில்லை
யேமோசம்போனீரே அனுமாரேயென்று கேட்டார்அப்படி
கேட்ட விபீணரும்அடியேனும்வந்துபார்த்தோம்உம்மையும்
இளையபெருமாளையுங்காணுமல் மோசம்வந்ததென்று விபீஷ
ணரும்சொன்னவழியைப்பிடித்துக்கொண்டுபாதாளவரைக்கு
ம்போனேன். அவ்விடத்திற் சமாச்சாரம்ஒன்றுமகப்படாமல்
தண்ணீர்துறையில் வந்திருந்தேன். அத்துறைக்கு மயிலிரா
வணன்தங்கையானவள் அழுதுகொண்டுவர அவளைநோக்கி
நீ யிப்படி அழுதுகொண்டுவரவேண்டியதென்ன, அம்மா
வென்றுகேட்டேன். அதற்கந்தம்மாள் நான்மயிலிராவணன்
தங்கை எனக்கொருபுத்திரன்பிறந்தான் அதற்காக என்தமை
யன் சோதிடரையழைத்து பிள்ளைபிறந்த லக்கினத்தைப்பார்
க்கும்போது அவர்கள்சொன்னது நல்லம்மானுக்கு ஆகாது
பதினுறுவயதிற் பட்டாபிஷேகனுகி இந்தப்பட்டணத்தை
யாளுவானென்று சொன்னுர்கள். அதுமுதல் லிதுவரையில்

என்னையும் என்புருஷனையும் என்பிள்ளையையும்விலங்குபூட்டி வைத்திருந்தான் இப்போது ஆரோ இரண்டுபேரை பெட்டியுடன்கொண்டுவந்து காவற்படுத்தியிருக்கிறான், அதுவன்றி இன்று என்கால்விலங்கைவிடுத்து என்கையிற்குடத்தைக்கொடுத்து தண்ணீர்கொண்டுவரச்சொல்லி என்பிள்ளைக்கும் அந்த இரண்டுமானிடர்களுக்கும் ஸ்நானம் பண்ணிவைத்து காளிகாதேவிக்கு பெலிகொடுக்க இருக்கிறான், அதனால் அழுதுக்கொண்டுவந்தேனென்றாள்.

அதனைக்கேட்டு, அடியேன் சொன்னது அம்மா இங்கே வாரும்என்னையிந்தகுடத்திற்குள்சந்தடிபண்ணமல்வைத்துக்கொண்டுபோவீரேயானால் உன் தமயனான மயிலிராவணனைக்கொன்று யுன்பிள்ளைக்குப் பட்டங்கட்டிவைக்கிறே னென்று சொன்னேன் அதுகேட்டு அந்தஅம்மனும் அடியேனை குடத்திலேவைத்துக்கொண்டு கோட்டைவாசற்படியில் நுழைகிறபோதுகோட்டைகாவற்காரர்கள் அதைக்கண்டு குடத்தையிறக்கச்சொன்னார்கள். அப்போது அடியேன் திடுக்கென கீழேகுதித்து அங்கிருந்தகாவற்காரரையெல்லாங் கொன்று அப்பாற்போகும்போது மச்சயந்த அனுமானெதிர்த்தான். அவனுடனுத்தம்பண்ணிப்பார்த்தேன் என்னால்முடியாமல் அவனுடையகுலங்கோத்திரத்தைக் கேழ்க்கிறபோது அடியேனுடைய குமாரனாய்விளங்கினான். மேலும் அடியேன் அவனுக்குத்தந்தையென்றறியாமற் சண்டைசெய்த பாவந்தீர காசிக்குப்போய்ஸ்நானம்பண்ணி கந்தாபுரிபட்டணஞ் சேரென்றனுப்பிவிட்டு மயிலிராவணனையும் அவன் தம்பிமார்களையுங் கொன்று தேவசுந்திரனுக்குப் பட்டங்கட்டிவைத்துப் பெட்டியை யெடுத்துக்கொண்டு லங்கைக்கு வந்தேனென்று அனுமார் சொன்னார்.

அப்போதுஇராமலட்சுமணர்கேட்டு அதிகசந்தோஷமாகிவிபீஷணரைப்பார்த்து ஓய்விபீஷணரேஇப்படி நடந்தசமாச்சாரம் இதுவரையில் எங்களுக்குச்சொல்லாம லிருந்துவிட்டீர்கள், அதேனென்றால் மூன்றுகாலமுந்தெரிந்த பெரியோர்கள் தங்கள்பெருமையுந்தாங்கள்செய்த உபகாரத்தையுஞ்சொல்லிக்கொள்ளமாட்டார்களென்று ராமமூர்த்தியும் இலட்சுமணருஞ்சொல்லுகையில் அனுமாரும் விபீஷணரு மெழுந்து சுவாமியை நமஸ்கரித்துசுவாமி இதொருகாரியமோவென்று சொல்லாமலிருந்துவிட்டோம் இப்போதுதருணம்வந்துவா

ய்த்தபடியால்சொல்லவேண்டியதாயிற்று. அடியார்கள்செய்த அபசாரத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று அடிவணங்கித்தெண்டனிட்டார். அதுகேட்டு சுவாமியும் இலட்சுமணரும்பூரித்து மனங்களித்தார்கள். அச்சமயத்தில் தேவசுந்திரனும் மட்சயந்த அனுமாரும்வந்து சுவாமியின்பாதாரவிந்தத்தை துதித்துவணங்கினர்கள். அவர்களுக்கு சுவாமியானவர் ஆசீர்வதித்து உட்காரும்படி உத்தரவுகொடுக்க அவர்களுமிருந்தார்கள். அந்தவேளையில் தேவசுந்திரன்பட்டபுதேவியும் முத்துப்பல்லக்கிலேறி நூறு கன்னியர்சூழ, கௌசலை கைகேசி சுமித்திரையம்மன் இம்மூவரும் வசிக்கும் அந்தப்புரத்திற்குப்போய் மூன்றுபேரையுஞ்சேவிக்க, அவர்களும் வாழ்த்திவசனித்துக்கொண்டிருந்து விடுதிகளமைத்து சம்பிரமத்துடனடத்திக்கொண்டிருந்தார்கள்.

## ஸ்ரீராமரிடம் குகன்வருதல்.

---

இப்பாற் குகனனவன் தன்னுடையபதினோரக்குரோணி சேனைகளைக்கூட்டிக்கொண்டு டமாரபேரிகை சங்கீதமேளவாத்தியங்கள்முழங்கப்புறப்பட்டு வருகிறபோது கண்காணுதசேனைகளைக்கண்டு ஆச்சரியப்பட்டுதாங்களிருக்கிறதற்கிடமில்லாமல் நாலுகோபுரவாசற்படியும்போய்ப் பார்த்தார்கள். போகயிடமில்லாமல் வாசற்படிபக்கம் பார்க்கையில் கொஞ்சமிடமிருக்கக்கண்டு அவ்விடத்திற் றண்டுவிட்டிறங்கிக் குகனுஞ்சில சேனாதிபதிகள்சூழக் கோபுரவாசற்படிக்குள் நுழைந்து பிர்ம க்ஷத்திரியவைசிய சூத்திரரென்றுசொல்லப்பட்ட நாலுவர்ன ஜாதிவீதிகளும் கடந்து சபாமண்டபம் வந்து ஸ்ரீராமமூர்த்தியைச்சேவிக்க, அவரும்குகனையெடுத்து மார்போடணைத்து ஆசீர்வாதஞ்செய்யக்குகனும் பரதலட்சுமணர் சத்துருக்கரென்கிறமூவருக்கும் நமஸ்காரம்பண்ணி அவர்களுங்குகனுக்கு ஆசீர்வதித்து ஒருபீடத்தின்பேரில் உட்காரச்செலவுகொடுக்க குகனுஞ்சந்துஷ்டியாய் இருந்தான்பின்பு குகனுடையதேவியும் சிலகன்னியர்கள் சூழும்படியாய் முத்துப்பல்லக்கி லேறி கௌசலை கைகேசி சுமித்திரை அரண்மனைபோய் அவர்களுக்கு சாஷ்டாங்கமாகதெண்டஞ்செய்ய, அவர்களும் ஆசீர்வாதஞ்செய்துசிலநேரம் வார்த்தையாடி விடுதிகளமைத்து தேவிகளும் தாதிகளும் சந்துஷ்டியோடிருந்தார்கள்.

## ஸ்ரீராமர் சுக்ரீவனையும் விபீஷணரையுங் கேட்டுக்கொள்ளல்.

இப்படியிருக்க, ஸ்ரீராமபத்திரசுவாமியார் சிம்மாதனத்திற்சகலஇராசசிரேஷ்டரும், வானரசிரேஷ்டரும், படைத்தலைவர்களும், சேனாதிபதிகளும் தண்டுதளங்களோடும் மந்திரிபிரதானிகளுடன் முத்துக்குடை ரத்னக்குடைகவிய, ஆலவட்டம் தாலவட்டம் க்ஷாமரங்கள் சுருட்டிகள் மயிர்க்குச்சு சொரிய. இந்திரன் கொலுவைப்போற் கட்டியக்காரர் கட்டியங்கூற, பாடகர் புகழ, தேவதாதிகளுக்குச் சரியான பெண்கள் பாட, எக்காளம் சின்னமத்தளம் ருத்திரவீணை சங்கீத மேளவாத்தியங்கள்முழங்க, நிறைந்தகொலுவாயிருக்க அப்போது சுக்ரீவ மகாராசனையும் இலங்காதிபதியான விபீஷணரையும் ஸ்ரீராமமூர்த்திபார்த்துச் சொல்லுகிறார். நீங்கள்முன்னாலெங்களுக்காக அவஸ்தைப்பட்டு இராவண சம்மாரம் பண்ணி சீதையைசிரையும் விடுவித்து எனக்கிந்தஅயோத்தியாபுரிபட்டமுஞ்சூட்டிவைத்தீர்கள். அதுபோல் இப்போது அஸ்வமேதக்குதிரையின்பின்னால்போய் எதிர்த்த ராசர்களைச் சங்கரித்து உங்கள்கையினால் யாகத்தை நிறைவேற்றி வைக்கவேணும் இந்தநன்றியை யென்றுமறவே னென்றா ரதுகேட்டு சுக்ரீவரும் விபீஷணரும் சுவாமியைப்பார்த்துச்சொல்லுகிறார்கள். ஓசுவாமி அடியார்களாலாவ தொன்றுமில்லை எல்லாக் காரியமும் பலாபலமும் தேவரீருடைய மகிமையேயல்லாமல் வேறொன்றுமில்லையென்று பணிவாகச்சொல்ல, ஸ்ரீராமர் சந்தோஷமாய் சுமந்திரரையழைத்து ஐம்பத்தாறுதேசத்தரசர்களுக்கும் ஓலையெழுதியனுப்பி இராசாக்களெல்லாரும் வரும்படி திட்டஞ்செய்யுமென்றார்.

## சுமந்திரர் ஐம்பத்தாறுதேசத் தரசர்களுக்கு நிருப மனுப்புதல்.

அப்போது சுமந்திரரும் ஓலையெழுதி தூதுவரிடங் கொடுத்தனுப்ப அவர்கள் ஓலையையெடுத்துக்கொண்டுவாயுவேகமனோவேகமாய்ப்புறப்பட்டு ஐம்பத்தாறுதேசத் தரசர்களுக்குங் கொடுக்க அவர்கள் வாசித்துப்பார்த்து உடனேபுறப்பட்டார்கள் அவர்களாரென்றால் கொங்கணராசன் முப்பதக்ரோணியானைதேர் பரிசேனைகளுடனே காணிக்கைகப்பங்கொண்டுபு

றப்பட்டார்கோசலமகாராசாவும் இருபத்தைந்தக்ரோணியா னேதேர்பரிவாரங்களுடன் காணிக்கை கப்பங்கொண்டு புறப்ப ட்டார். புறப்பட வேகேரள தேசத்தையாளப்பட்ட கேரளமகா ராசாவும் கலிங்கதேசத்தை யாளப்பட்ட கலிங்கமகாராஜாவும் மாளவதேசத்தையாளப்பட்ட மருத்துவமகாராசனும், பாண் டியதேசத்தரசனுகிய உக்கிரசேனமகாராசனும், சிந்து தேச த்திறைவனுகிய சிந்துமகாராசனும், காம்போதிமகாராசனும் விக்கிரமதேசத்து வேந்தனுகிய வீரவிக்கிரமராசனும் ஒட்டி யதேசத்தரசனுகிய ஒட்டியமகாராசனும், நகரதேசத்தையா ளப்பட்ட வீரவர்மமகாராசனும் இன்னுமிருக்கப்பட்ட ஐம்ப த்தாறுதேசத்தரசர்களும் ஓலைகண்ட நாழிகைக்கு அவர்களு டைய யானை தேர் பரி காணிக்கை கப்பங்களுடனே கொடிச் சீலைகளுடனும் விருதுகள்பிடித்துக்கொண்டு எக்காளம் சின் னம் வெங்கலமுரசு சாமரம் பேரிகைகள்முழங்க வடகிழக்கு தெர்க்குமேற்கு தென்கிழக்கு தென்மேற்கு வடகிழக்குவட மேற்குஎன்கிற அஷ்டதிக்கிலுமிருந்து இராசாக்கள் மகுட மாந்தாதிகள் அதிரதர் சமரதர் அர்த்தரதரென்றுசொல்லப்ப ட்ட இராசாக்களும் வெள்ளைக்குடை வெண்சாமரம் செகப் புக்குடை செகப்புக்கொடி கறுப்புக்குடைகறுப்புதுவசம் பச் சைக்கொடி நீலக்கொடி மஞ்சகுட்டை மஞ்சட்கொடிபறக்கப் புறப்படும்போது பூமியானதுகிடுகிடென்று நடுங்கவும், ஆதி சேஷன் புஜமாற்றவும், அஷ்டகுல பர்வதங்கள் அசைந்தாட வும், ஆர்ப்பரித்து அயோத்தியாபுரிபட்டணத்துநாலுமூலையு ம்கோபுரவாசற்படியும் வந்துபார்த்தார்கள், அப்படிவந்தசே னைகளும் இராசாக்களும் கருமலை பர்வதங்களைப்போலிருக்க ப்பட்ட ராட்சதர்களையும் வானரக்கூட்டங்களையும் சேனுதிப திகளையும் தளகர்த்தர்களையும்பார்த்து ஒருவர்க்கொருவர் சொ ல்லிக்கொள்ளுகிருர்கள் ஓ! ராசாக்களே இவர்களார் இவர்க ளைப்பார்த்தால் கரியபர்வதங்களைப்போ லிருக்கின்ருர்களிவர்க ளென்ன மனிதப்பிறப்போ இவர்கள்முகத்தைப்பார்த்தால் ம கமேருபர்வதத்தில் சிகரம்போலிருக்கின்றது இவர்கள் மூக்கி லேஇருபதுயானைகள் புகுந்து வரும்போற் காணுகின்றது. இவர்களுடைய வாயைப்பார்த்தால் ஆகாயம்பூமியைப்போ லும்தோற்றுதுமீசைகளைப்பார்த்தால்மணலில் மூளைத்த கோ ரைப்புல்லைப்போற்றட்டுபடுதே அந்தமீசையில் ஒவ்வொருமயி ரிற்பத்துயானைகளைக்கட்டி தொங்கவிடலாம். அதுவுமன்றி கண்களைப்பார்த்தால் யமுனுநதிகரைபோலு மிருக்கின்றது கோரைபற்களைப்பார்த்தால் சந்திரனைப் பிளந்து இருபக்கத்

துக்கடைவாயிலும்வைத்ததுபோலுமிருக்கின்றது இவர்கள் கிரீடத்தைப்பார்த்தால் கைலாயபர்வதத்தின் உச்சியிலிருக்கு ம்சிகரம்போலுமிருக்கின்றது மார்பிலணிந்த பதக்கங்களைப் பார்த்தால் அறுபத்துநாலு சூரியனைப்பிடித்து மார்பிலணிந் ததுபோலும் விளங்குகின்றது இப்படிப்பட்டரூபம்படைத்த இராட்சதர்களை ஸ்ரீராமமூர்த்தியெப்படி செயம்பண்ணினரோ இவர்களைப்பார்க்கும்போதே கெற்பங்கலங்குகிறதே கையில் பி டித்திருக்கிறவில்லைப்பார்த்தால் அண்டத்தை வில்லாகப்பிடி த்ததுபோலுந் தோற்றுதே இவர்கள் சாமார்த்திய மென்ன கொஞ்சமாயிருக்குமோ இப்பேர்ப்பட்ட இராட்சதர்களுக் க ரசனுன இராவணேஸ்வரன் இலேசானவனுயிருப்பானே அ வனே ஆயிரத்தெட்டண்டம் இருநூற்றுஇருபத்து நான்கு புவனத்தையும் ஆண்டவனுச்சுதே அவனை இவரென்னமா ய்க்கொன்ருர் இவர்பரப்பிரம்மமானபடியினுலேதசரதமகாரா சாவின்வயற்றில் ஸ்ரீராமராகப்பிறந்து இராவண இராட்சதா ளையுங்கொன்ருர். நம்முடையவம்சம் இருபத்தொரு தலைமு றையிலும் இராட்சதாளை நாமறியமாட்டோம்ஸ்ரீராமமூர்த்தி யாலே இப்போதுகண்டோமென்று பலவாருகப் பேசிக்கொ ண்டு கீழ்கோபுரவாசற்படியாக நுழைந்து நாலுவீதிகளுங் க டந்து சபாமண்டபம்வருகிறபோது ஸ்ரீராமமூர்த்திகேட்டுபர தசத்துருக்கருடன் சேனைகளையுங்கூட்டி யனுப்பிவைத்தார் அவர்களெதிர்கொண்டு வரவே ஐம்பத்தாறுதேசத்துராசா க்களும் பரதர்சத்துருக்கரை நமஸ்காரம்பண்ண அவர்களு ம்மரியாதைசெய்து அழைத்துக்கொண்டு சபாமண்டபம் வந் தார்கள். அப்போது ஸ்ரீராமர்சிம்மாதனம் விட்டெழுந்து நி ன்ருர். அப்படி நின்ற ஸ்ரீராமர்பாதத்திலே ஐம்பத்தாறு தேச த்தரசர்களும் சேவித்தார்கள் அவர்களுக்கு ஆசீர்வதித்து உ ட்காரும்படியாய் செலவுகொடுக்க அவர்களுஞ் சந்தோஷமா யுட்கார்ந்திருந்தார்கள்.

அப்போது ஸ்ரீராமமூர்த்தியானவர் ஓய் இராசாக்களே கேளுங்கள் நான் இராவணராட்சதர்களைக்கொன்றபாவம் து லைய அஸ்வத்தின்பின்னுல் நீங்களுஞ்சென்று எதிர்த்த இரா சாக்களைச்சங்கரித்தகையினுல் அஸ்வமேதயாகம்பண்ணிவை க்கவேணுமென்ருர். அதுகேட்டு ஐம்பத்தாறுதேசத் தரசர்க ளும்சுவாமிதங்களுடைய கருணுகடாக்ஷம் அடியார்கள் பே ரிலிருக்கிறவரையில் உம்முடையயாகத்திற்கு குறைவு வருகிற

தில்லை அப்படியேகுதிரையின்பின்னாகச்சென்று பூமிப் பிரத ட்சணம்வந்து உமதுகையில் யாகம்பண்ணிவைக்கிறோமெ ன்றார்கள். அப்போது ஸ்ரீராமரும்மகாசந்தோஷமாய்வந்தமகா ராசாக்களையழைத்து அவரவர்கொண்டுவந்த காணிக்கை கப் பங்களையெல்லாம் இராட்சதர்களைவிட்டு உக்கிராணகளத்திற் கொண்டுபோய்ச்சேர்க்கச்சொன்னார். அப்படியே பத்தக்ரோ ணி இராட்சதாளையழைப்பித்துஎடுக்கமாளாமற்கொண்டுபோ ய்கஜானாவிற்சேர்த்தார்கள். அப்போதுகளஞ்சிய மண்டபமெ ப்படியிருந்ததென்றால் முத்துகளொருபக்கமும், நீலோற்பல மொருபக்கமும், மரகதமொருபக்கமும், கோமேதக மொரு ப க்கமும், இப்படி நவரத்தினங்கள் ராசிராசியாய் மலைபோற்கு வித்திருந்தது. அத்தருணத்தில் சூரியன்மேற்றிசையில்மறை ந்தான். பின்பு இராமர்சொற்படி பரதமகாராசன் தண்டுதள ங்களுக்கு வானரவீரர்களுக்கும் இராட்சத கூட்டங்களுக்கும் ஐம்பத்தாறுதேசத்தரசர்களுக்கும் இன்னம் வந்திருக்கப்பட் டவர்களுக்கும் பஞ்சகச்சாயங்களுடன் பரிமாரி சந்தனபுட்ப தாம்பூலங்களும் நடப்பித் தாடல்பாடல்விநோத வேடிக்கை களுடனே அன்றிரவைப்போக்கிவைத்தார்.

### ஸ்ரீராமர் அயோத்தியில் வந்திருந்து தண்டுதளங் களுக்கு வேண்டியவைகளைக் கொடுக்கும் படி பரதருக்கு ஆக்கியாபித்தல்.

---

மறுநாள் ஸ்ரீராமர் காலைக்கடனென்னும் நியமநிஷ்டை களைமுடித்து தம்பிமார்களுடன்ராட்சதவீரர்களும்சூழ, சேனா திபதிகள் படைத்தலைவர் தாழவும் கட்டியக்காரர் கட்டியம் கூறவும் கன்னியர் நடனமாடவுங் கவிவல்லோர் கவிபாடவு ங் கொலுமண்டபம்வந்து பரதரையழைத்து இன்றுமுதற் கொண்டு நம்முடையபட்டணத்தில் வந்திருக்கப்பட்ட தண் டுதளங்களுக்கு என்னென்னதேவையாயிருக்கின்றதோ அந் தவஸ்துக்களையெல்லாம் கொடுக்கும்படி நம்முடைய வர்த்த கருக்கு உத்திரவுசெய்து அவ்வர்த்தகர் முன்னடி பென்ன கேட்கிறாரோ அதைத்தடையில்லாமற்கொடுத்து வர்த்தகர் த ண்டுதளங்களிற் பயமில்லாமல் வரவும்போகவும் சரக்குசாமா ன்கள் கொடுக்கவும் ஸ்ரீராமபாணத்தினுடைய பெருமை இரா ட்சதர்களுக்கும் வானரங்களுக்குந்தெரியப்படுத்தி வர்த்தகரி டம் வாஞ்சையாய்ப்பேசவும் வியாபாரஞ்செய்யவும் அந்த

தண்டுகளின்சேனாதிபதிகளுக்கு அறிக்கைசெய்து ஒருவரோ டொருவர் கூக்குரல்போடாமலும் சண்டைசச்சரவுகள் செய் யாமலிருக்கவும் திட்டஞ்செய்யென்று சொல்லிப்பின்பு அனு மாரையழைத்துஓய் அனுமாரே நீரும்அடிக்கடி போய்ப்பார் த்துக்கொண்டுவாருமென்று ஆக்கியாபிக்க அப்படியே அனு மாருஞ்சென்று அவர்களுக்குஸ்ரீராமபிரானுடைய ஆக்கினை யைச்சொல்லி அறிக்கைப்படுத்தி வர்த்தகரையழைத்து ஒவ் வொருவருக்கு பதினாயிரம் விழுக்காடு பொன்னளித்து சரக்கு கள் சாமான்கொடுக்கும்படி பறைசாற்றிவைத்தார்.

## ஸ்ரீராமர் அயோத்தியை அலங்கிருதஞ் செய்யச் சொல்லுதல்.

அதன்பின்புஸ்ரீராமர் சுமந்திரரையழைத்து நம்முடைய பட்டணமுழுதும் அலங்கிருதஞ் செய்யும்படி பறைசாற்றி வையுமென்று ஆக்கியாபிக்க அவ்வாறேசுமந்திரரும் சாம்பு வந்தரையழைத்து வெள்ளையானையின்மீதேறிப்போய் நம்மு டையபட்டணமாதியந்தமும் அலங்காரஞ்செய்யும்படி பறை சாற்றிவாருமென, அப்படியேசாம்புவந்தர்பறைசாற்ற அத னை அயோத்தியாபுரிச்சனங்கள்கேள்விப்பட்டு இரவுமுப்பது நாழிகைக்கும் பந்தங்களேற்றிக்கொண்டு வீதிகளெல்லாம் ப ச்சைப்பந்தல்களிட்டு சாந்துசவ்வாதுகளினால் திண்ணைகள் மெழுகி சாந்தால்கோலங்களிட்டு வாழைகமுகுகள்நாட்டி பச் சைதோரணம் மாணிக்கத்தோரணங்கள்கட்டி வீதிதோறும் பன்னீர்கள்தெளித்து வீட்டிற்குவீடு பதுமைகள்கட்டி கற் பூரதீபங்களேத்தி வைகுந்தமாநகரம்போல பட்டணத்தை சிங்காரித்தார்கள்.

## ஸ்ரீராமமூர்த்தி கொலுவு.

இப்பால் ஸ்ரீராமரானவர் காலை சபதபங்களை முடித்துக் கொண்டு போசனமருந்தி கிரீடம்தரித்து ஆடையாபரணம் பூண்டுமுதுகில் அம்புறுப்பொதியுங்கட்டி கையிற்றனுசு பிடி த்து, கற்பூரதாம்பூலங்களணிந்து லக்ஷங்கன்னியர்கள்புடை சூழ மத்தளருத்திரவீணை மேளதாளசங்கீதங்கள் முழங்க மு ன்கட்டுவாசற்படியுந்தாண்டி ஆசாரவாசலில்வந்தார் அவ்வி டத்தில்முப்பத்திரண்டு விருதுகளும் பிடித்து நவரத்னக்கு டைகள்கவிய ஆலவட்டம்பரிமார மயிற்குச்செறிய சங்குகுறி

ந்தம் திருச்சின்னம்பரிமார கட்டியக்காரர் கட்டியங்கூற பொ ற்பிரம்புக்காரர் வெள்ளிப்பிரம்புக்காரர் ப்ராமரிபண்ண மின் ஞர்கள் நிர்த்தனம்புரிய சபாமண்டபம் வருகிறபோது சுக்ரீ வன் அனுமார் அங்கதன் சாம்புதேவர் இருபத்து நாலுப டைத்தலைவரும்வந்து சுவாமிக்கு தண்டஞ்சமர்ப்பிக்க அவ ர்களுக்கு ஆசிர்வதித்தார். அப்போது பரதலட்சுமணர் சத் துருக்கர் மூவரும் வந்து ஸ்ரீராமர் அடிபணிய அவர்களுக் கும்வாழிகூறியபின்பு ஐம்பத்தாறுதேசத்தரசர்களும் வந்து அடிபணிய அவர்களுக்கும் ஆசிர்வதித்துச் சபாமண்டபத்தி ல்வீற்றிருந்தார் தம்பிமார்களும் ஓர்படிதாழ வுட்கார்ந்தார்க ள் ராசமன்னர்களும் உட்கார்ந்தார்கள் விபீஷணுதியர்கள் மகாமாயன் சலவசந்தன் தேவசுந்திரன் குகன் படைத்தலைவ ர்களும் சேனுதிபதிகளும் வந்துவணங்கி ஸ்ரீராமபிரானுல் ஆ சிர்வாதம் பெற்று உட்கார்ந்தார்கள் இப்படி தேவேந்திரன் கொலுவிலும் பதின்மடங்கதிகமாக ஸ்ரீராமமூர்த்தியானவர் நிறைந்த கொலுவாயிருந்தார்.

## வதிஷ்டர் வருதல்.

### விருத்தம்.

கரத்திநிற்றண்டுகொண்டு காவிவேஷ்டியுந்தரித்து
திருத்தமாய்தற்பைபுல்லுஞ் செபமாலையொருகையேந்தி
அருத்தியாய்ரவிகுலத்திற் கண்ணலாம்ஸ்ரீராமர்முன்பு
வருத்தமில்வதிஷ்டர்தாமு மகிழ்வுடன்தோன்றினுரே.

இப்படியிருக்கிறபோது சித்ராபர்வம் வந்துவிட்டதென் று வதிஷ்டமகாமுனிவர் சிலரிஷிகூட்டங்களுடனெழுந்துஅ யோத்திக்கு வருகையில் அயோத்தியலங்கிருதமும் அயோத் தியைச்சுற்றி யானை குதிரை தண்டு தளங்கள் வானரக் கூட் டம் எள்ளுவிழுந்தால் எடுக்கவிடமில்லாமல் நிறைந்திருப்ப தைப்பார்த்து ஆச்சரியங்கொண்டு ஸ்ரீராமனுடைய பாக்கிய மேபாக்கியமென்று மனதில்வியப்புற்று அம்முனிவர் வரும் போது வானரக்கூட்டங்களும் இராட்சதவீரர்களும் இராட் சதக்கூட்டங்களும் பார்த்து ஸ்ரீராமமூர்த்தியினுடையகுருவா கியவதிஷ்டமகாமுனிவர்வருகிறரென்றுஎழுந்துகைகுவித்து நின்றூர்கள் அவர்களுக்கெல்லாம் ஆசிர்வதித்து சபாமண் டபம் வருகையில் ஸ்ரீராமமூர்த்தியானவர் கொலுவிருக்குஞ்ச ர்வத்திராளுடனும் எழுந்தெதிர்சென்று அழைத்து வந்து

அர்க்கியபாத்தியங்கொடுத்து ஆசனத்தில் அவரை வீற்றிருக்கச்செய்து யாவருக்கும் நமஸ்கரித்தார்கள் அவர்களுக்கு ஆசீர்வாதஞ்செய்து உட்காரச்செலவுகொடுத்து வசிஷ்டமகாமுனிகூறுகிறார்.

### யாகமண்டபம் நியமித்து அஸ்வத்தை விடுதல்.

விருத்தம்.

வள்ளலாமுனியரைந்த வாய்மையைக்கேட்டுராமர்
உள்ளதோர்குதிரையெல்லா முடனவர்வந்துபார்த்து
வெள்ளையாயிட்சணத்தில் வீரமுமுள்ளதாகத்
தெள்ளியயாகத்திற்குத் தேசியைக்கொண்டுவந்தார்.

வாரும் ஸ்ரீராமபத்திரா சித்திராபர்வம் நவமி வந்துவிட்டது இப்போதுமுகூர்த்தம் நன்ருகயிருக்கிறது யாகருண்டம்வெட்டுபவனும் யாகத்திற்கு வேண்டிய முஸ்தீபெல்லாம் அழைப்பிக்கவேண்டும் சலுதியாய் அஸ்வத்தையும் அழைப்பியுமென்ருர், அதுகேட்டு ஸ்ரீராமபத்திரரும் அனுமாரையழைத்து ஓய் அனுமாரே! நம்முடைய குருசுவாமி உத்திரவுசெய்தபிரகாரம் யாகமண்டபமுஞ் சிங்காரித்து யாகமுஸ்தீபும் அஸ்வமும் யாககுண்டமும்வெட்டி தயார்செய்யுமென்று உரைக்க அனுமார்பாக்கியமென்று நளனையழைத்து ஆக்யாபித்துஉடனே நீலனையழைத்து அஸ்வத்தைக் கொண்டுவாவென்றுரைக்க, அவ்வாறே அவர்கள் யாகமண்டபம் சோடித்து சமுத்துக்கள் முதலானதுங் கொண்டுவந்து நிறுத்தி அனுமாருக்குச்சொல்ல அனுமாரும் ராமரும் வசிஷ்டமுனிவருக்குப்பகர அந்தவசிஷ்டரானவர் சில இருடிக்கூட்டங்களுடன் எழுந்திருந்தார் அவருடன் ராமமூர்த்தி பரதலட்சுமணர் சத்துருக்கர் அனுமார் விபீஷணர்மாலியவான்மகாமாயன்சலவசந்தன்தேவசுந்தரன்காலசித்தன் வானுகோபன் நீலாட்சதன் சூதன்பஞ்சகண்டன் சுதாட்சன் சுக்ரீவன் அங்கதன் நீலன்குமுதன் சாம்பவன் தேசயாகன்மாதுவாலி அகம்பன் துய்யசாதகன் துன்முகன் சூரசேனன் என்று சொல்லப்பட்டசகலமானபேரும் யாகமண்டபம்போய் உட்கார்ந்தார்கள்.

அப்போது வசிஷ்டருத்தரப்படி அஸ்வமேதக்குதிரையை கங்காதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிவைத்து ராமரும் சீதையம்மனைப்போலத்தங்கத்தினுல் வார்ப்படஞ்செய்த சிலை

க்தும் திருமஞ்சனஞ்செய்வித்துபட்டாபரணமுடித்து அத்தி பலகையின்மீது வீற்றிருக்கச்செய்து வசிஷ்டரும் மந்திரஸ் தாபனஞ்செய்து யாககுண்டத்தில் அக்கினிதேவனை நிறுத்தி அந்த அக்கினிகுண்டலத்தில் சமுத்துகளையும் நெய்களையுஞ் சொரிந்து வசிஷ்டரும் ஸ்ரீராமரும் தங்கசிலைக்கு யாகதீட்சை கொடுத்து அதன்பிறகு அஸ்வத்திற்குநவரத்தினபரணங்கள் பூட்டி கந்தபுட்பதாம்பூலம் நைவேத்தியங்களினால் அஸ்வ த்திற்குபூசைபண்ணிமந்திரஸ்தாபனஞ்செய்து தன்னுடைய பிரதாபசவுரியத்தை ஒருதங்கப்பட்டத்திலெழுதியதைகுதிரை நெற்றியிற்கட்டி ஐம்பத்தாறுதேசத்துராசாக்கள் விருதுகளை அஸ்வத்தின் நான்குகால்களிலுங்கட்டி யாககுண்டத்தைமூ ன்றுதரம்பிரதட்சணம் பண்ணிவைத்து சகலதேவ மந்திரங் களும் ஆவாகனம்பண்ணி மேளவாத்தியங்களும் தாம்தாமெ ன்று முழங்கும்படியாய் அயோத்தியாபுரிபட்டணத்தை பிரத ட்சணம்பண்ணிவைத்து குதிரையைவிடுத்து அறுபதினயிர ம்பிராமணருக்கு ஆனை-ம குதிரை ம, சேவர் ம, ஸ்திரீகள் ரும, நபுரொன்றுக்கு ா, பாரம்தங்கம் இவ்விதமாக தானங் கொடுத்து பின்பு ஸ்ரீராமர் சொல்லுகின்றார்.

ஸ்ரீராமர் சத்துருக்கருக்கு விடைகோடுத்தல்.

---

விருத்தம்.

தம்பிசத்துருக்கா நீதான் சதுரங்கசேனையோடு
செம்மையாயயோத்தியோசை சிறந்திடச்சென்றேயிந்த
அப்புவிநாலுதிக்கும் அஸ்வத்தையறியப்பண்ணி
சம்பிரமதாகயிங்கு சலுதியில்வருகுவாயே.

தம்பிசத்துருக்கா! பிரசாட்சியமிகவுமாகவொட்டாமற்சீ க்கிரமாக திக்குவிஜயஞ்செய்து சலுதியில் வரவேணுமென்று சொல்ல, சத்துருக்கர் அண்ணவே! உம்முடையமனதின்படி சலுதியில்வருகிறேன் செலவுகொடுமென்றார், அப்போதுஸ்ரீ ராமமூர்த்தியானவர் ஓசலவசத்தனே! மகாமாயனே! நீங்க ளும்குதிரையின் பின்சென்று எதிர்த்தராசாக்களை வென்றுவ ரவேண்டுமென்றுவிடைகொடுத்து சேனைதிபதியான காலசித் தனையும் படைத்தலைவனான நீலாட்சதனையும் அழைத்துநம் முடையசேனைகளில் நல்லவீரராயிருக்கப்பட்ட ஐம்பது வெ ள்ளம் இராட்சதர்களுடன் நீங்களும்போய் வாருங்களென்

று அவர்களுக்குங்கட்டளையிட்டு அதன்பின்பு இருபதினாயிரம் அக்ரோணி சேனைகளுக்கும் அதிகாரகர்த்தனான சூரசேன மகாராசனைப் பார்த்து ஓய் சூரசேனனே! நமது தேசத்தில் வந்திருக்கப்பட்ட ஐம்பத்தாறு தேசத்துராசாக்களையும் அவர்கள் சேனாசைனியங்களுடன் கூட்டிக்கொண்டு அஸ்வத்தின்பின்போய் எதிர்த்த ராசாக்களை சங்கரித்து திக்குவிஜயம் பண்ணிவாருமென்றார்.

## சத்துருக்கர் சேனாசைனியங்களைக் கூட்டிக் கோண்டு குதிரையுடன் புறப்படுதல்.

---

### விருத்தம்.

தண்ணுறுமன்னரேயிச் சதிருள துரகந்தன்னை
வண்ணமாயலங்கரித்து வளர்ப்பட்டங்கட்டிவைத்தேன்
மண்ணுறுவீரசூர மன்னவரெவரானாலும்
திண்ணுறுமிதைபிடித்தார் செயம்பெறச்சண்டைசெய்வீர்.

இப்படியாக இராமபத்திரசுவாமியார அனுமதிபெற்று காலசித்தனானவன் யாககுண்டமண்டபம்விட்டு கோட்டைக்கு வெளியில்வந்து இராட்சத தண்டிற்புகுந்து நீலாட்சதனைக் கூட்டிக்கொண்டுதண்டைவெளிப்படுத்தினர். எப்படி யென்றால், கன்னமதம் கரடமதமென்று மதங்களைப் பொழிந்துகொண்டு மேகங்களானது கன்னங்கரே லென்றுவந்து சூழ்ந்தாலெப்படியோ அப்படியாக ஆனைகள்பேரில் அம்பாரி சவுடால்கள்வைத்து அதிவீரபராக்கிரமமுள்ள ராட்சதாள் புறப்பட்டார்கள் அதன்பின்னால் எட்டுக்குதிரை பதினாறுகுதிரை முப்பத்திரண்டு குதிரைபூட்டியும், இதுவுமல்லாமல் கோவேறுகழுதைகள் பூட்டியும், யானைகள்பூட்டியும், புலியாளி பூட்டியுமிருக்கப்பட்ட ரதத்தின்பேரில் ராசமன்னர்கள் அஸ்திர சஸ்திரங்களை ஏந்திக்கொண்டு புறப்பட்டார்கள். அதன்பின்பு சூரியன் இரதத்திற்கட்டிய புரவிகளுக்கு நிகரான புரவிகளின்மீதில் இராட்சதாள் பட்டாயுருவி கையிற் பிடித்துக்கொண்டுபுறப்பட்டார்கள் அதன்பின் கால்பலமான இராட்சதாளோவென்றால், பரட்டந்தலையும் சுருட்டமயிருள்ளவர்களாய்முகத்திலே அக்கினிகுடியாயிருக்கும், கண்களோ நெருப்புப்பொறிபறக்கும், மூக்கினிலே கோபமானது குதிகொள்ள, மீசைகளோ எந்நேரமும்படபடவென்றுதுடிக்க, பற்களோ பாமற் நறநறவென்றுகடிக்க, கைகளோ எந்நேரமும் காட்டைதுழாவிக் கொண்டிருக்கும், கால்களோ எதுவேளையும் நடந்துகொண் டிருக்கும், அவர்கள் குணமோ பசித்த

போது தாய்தந்தையானாலும் பாராமற்கொன்று வாயிற்போட்டுக்கொள்வார்கள். அவர்கள்கைகுத்துக்கோ இந்திரபர்வதம் எமபர்வதமானாலும் தும்புதூளாய் விபூதிபடலமாய்ப் போய்விடும் அவர்களுடையபலமோ ஆயிரத்தைந்நூறு சிங்கபலம்படைத்தவர்கள், அப்பேர்ப்பட்ட ராட்சதாள் நூற்றுக்கொன்றாய் பொறுக்கி இருபத்துநாலுவெள்ளம் ராட்சதாள் கத்திகேடயம் இருப்புலக்கை வளைதடி சக்கரம் குந்தம் வேல் கதை இப்படிசொல்லப்பட்ட ஆயுதங்களெடுத்துக்கொண்டு புறப்பட்டார்கள்.

இதல்லாமல் சூரசேனனும் உக்கிரசேனனும் சபாமண்டபத்தைவிட்டுப்புறப்படவே நாலாயிரம், அக்ரோணி யானைகளும் எண்ணாயிரம் அக்ரோணிரதங்களும், பதினாயிரம் அக்ரோணி குதிரைகளும், முப்பத்திராயிரம் அக்ரோணிகாலாள்களும்புறப்பட்டது அதுகண்டு குகனும்மட்சயந்தனுமானும் இரதமேறிப்புறப்பட்டார்கள் அப்போது அஸ்வமேதக்குதிரையானது தன்னிச்சையாய் வடக்குமுகம்நோக்கி போகிறபோது குதிரைபிட்டைகள் போடுமிடத்தில் ஓமசாந்தி பண்ணிவைத்து தான தருமங்கள்செய்து பின்னுங் குதிரையின் பின் சென்று அதுநடக்கும் வழியேதாங்களும்நடந்து அது படுக்குமிடத்தில் தண்டுவிட்டிறங்கி அவ்விடங்களிற் கோவிற்கட்டியும் குளங்கள்வெட்டியும் பிரதட்சணமாய் சத்துருக்க மகாராசர் குதிரையின்பின்னேவர அப்போதுகுதிரையானது அயோத்தியைவிட்டு, காடு செடி மலை குன்று ஆறு கழி குளம் கிராமம் நாடு சீமை இவைகளைக்கடந்துநடக்கிறபோது அதைக்கண்ட ராசாக்களெல்லாங் குதிரைக்கு கைகூப்பி தெண்டனிட்டுப்போக இந்தப்படியாய் மதனுபுரிபட்டணத்தின் சமீபம்போய் ஒருமரத்தின்கீழ் பச்சென்றிருக்கிற புல்லைக்கண்டு குதிரையானது மேய்ந்துக்கொண்டிருந்தது.

### வீரசேனமகாராசன் குதிரையைப்பிடித்தல்.

---

### விருத்தம்.

*சீதரன்விடுத்த சுவேதவாம்புரவி செறியுருண் வனமெலாங்கடந்து*
*பூதலமதிக்கு மட்சயந்தன் புத்திரன் வீரசேனன்கோ*
*வேதவிஞ்செலுத்தி மதனுபுரியென்னும் நகரத்தைச்சார்ந்து*
*போதவர்வாவிக் கறைமருங்குற்றே புற்களை மேய்ந்திருந்தனவே.*

அந்தப்பட்டணத்தை யாள்ப்பட்ட மட்சயந்தமகாராசாவின்குமாரன் வீரசேனனென்பவன் அரிபக்தன் சத்தியவாச

கன்மகாவீரபராக்கிரமன் அவன்கைவில்லுக்குஅரியரப்பிரமா
திகளும் நிகரல்ல, மகா வரப்பிரசாதி அவன் வித்தை புத்தி
ஸ்ரீமந்நாராயணரேயறியவேணும் அவன்கையிற் குதிரைபிடி
பட்டதேயானல் திரிமூர்த்திகளாலும் விடுவிக்கக்கூடா தென்
றுதேவர்கள்பேசிக்கொண்டு சத்துருக்கனுடைய யுத்தம்பார்
ப்போமென்று அந்தரத்தில் வந்துநின்றார்கள். அப்படியி
ருக்க வீரசேனமகாராசன் ஸ்ரீலோலகாமாந்தகாரனுக கன்னி
யாஸ்திரீகளுடனே கோட்டையைவிட்டு நந்தவனம் புகுந்து
ஜலக்கிரீடைசெய்து வருகிறபோது அஸ்வமேதக்குதிரையை
க்கண்டு சந்தோஷமாய் அருகில்வந்து நெற்றியிற் கட்டியிரு
க்கப்பட்ட விருதாவளியை வாசித்துப்பார்த்து, அதிலெழுதி
யிருக்கிறதென்னவென்றால், சூரிய வம்சத்து ராசாவாக சூரி
யனைப்போற்றலங்கா நின்ற பிரதாபசவுரியமுள்ளவர் ஆயிர
த்தெண்டமும் இருநூற்றிருபத்திஞலுபுவனமும் சத்த சாக
ரமும் ஈரேழுபதிஞலுலகத்தையும் ஏகசக்கிராதிபதியாய் ஆள
ப்பட்ட ராவணேஸ்வரனைஜெயித்த தசரத குமாரனுன ராமப
த்திரசுவாமிவிட்டகுதிரையின்பின்னே வருகிறவன் மேட்டா
ணமேட்டியான சத்துருபயங்கர தனுர்வேத சாஸ்திரரணரங்
கசூரன் சத்துருக்கன் வருகின்றான். அந்தச்சத்துருக்கனைசெ
யிக்கத்தக்க சாமார்த்தியமுள்ள பேரிருந்தால் இந்தக்குதிரை
யைப்பிடித்துக்கட்டியுத்தஞ்செய்து வெற்றிபெறலாம் அப்ப
டிசெய்ய சாமார்த்தியமில்லாதவர்கள் குதிரைக்குத்தெண்டனி
ட்டு காணிக்கைகப்பங்கொண்டுவந்து சத்துருக்கனை வணங்கி
பிழைக்கலாமென் றெழுதியிருந்தது.

அதை வீரசேனமகாராசன் பார்த்து குஞ்சிரிப்புகொண்
டுதலையையசைத்துச்சொல்லுகிறான். ஐயா ஸ்ரீராமன் புத்தியி
ல்லாமற்கர்வித்தானே கையாலாகாதசிலராட்சதாளைக்கொன்
றேமென்று தன்பெருமையைத்தானே புகழ்ந்துசுத்தவீராதி
வீர ரணரங்கசூரனுமான சத்துருக்கன் வருகிறுரென்று எழு
திவிட்டான், நம்மையெல்லாம் பெண்டுகளாக்கினன், அவ
னேமீசையுள்ளவன், ஸ்திரீசுகங்கண்டவன் அவனுடைய ச
வுரியத்திராணியைப்பார்ப்போமென்று பற்களை நறநறவென்
றுகடித்து சேவகரையழைத்து குதிரையைப்பிடித்து தன்பட்
டணங்கொண்டுபோகச்சொல்லி அங்கிருந்தபடி தன்சேனைக
ளுக்கெல்லாந் தளகர்த்தனுன சுவேதனனையழைத்து ரதகஜ
துரகபதாதிகளை தயார்பண்ணென்றுத்திரவுசெய்ய வந்தப்படி

யே சுவேதனனுந் தண்டைவெளிப்படுத்தினன். கன்னமதம் கபோலமதம் காடமதமென்னும் மும்மதங்களும் பொழியப் பட்ட ஐராவதத்திற்குச் சமமான யானைகள்பேரிலே ராசாக்க ளேறிக்கொண்டு கையில்வில்பிடித்து மாவுத்தனையெச்சரித்து ஐம்ப தக்ரோணியானைகள் நடத்தினர்கள் அதன்பின்னேமே கமண்டலத்தை யளாவிக்கொண்டிருக்கிற ரதங்கள்மீது சுத்த வீரரான ராசாக்கள் இருநூறு அக்ரோணி சேனைகள் அஸ் திராயுதங்களை மிதமில்லாம லேற்றிக்கொண்டு சாரதியை யெ ச்சரித்து ரதத்தைத் தூண்டினர்கள். அதன்பின் கால்பலமா னது நானூறு அக்ரோணிசேனைகள் ஆயுதஅஸ்திரங்களெ டுத்துக்கொண்டு புறப்பட்டார்கள். தளகர்த்தரான இருபத் தைந்து ராசமன்னரும் புறப்பட்டார்கள் இதுசங்கதியை ம ட்சயந்தமகாராசனுங்கேள்விப்பட்டு அதிக கோபமுண்டாகி யாளிக்கொடி பறக்கும்படி ரதமேறிப்புரப்பட்டான், அவன் புறப்படவே பன்னீராயிரம் மந்திரிகளும் ரதமேறி பிரயாண மானர்கள். ஒருபந்தியாய் போசனஞ் செய்யப்பட்ட பதினயி ரம் இராசமன்னருந் துணையாகவந்தார்கள். அந்தச் சமயத் தில் முப்பத்திரண்டு மேளவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கவும் கோட்டைக்கு வெளியிலே நல்ல வெட்டாரவெளி யைப்பார்த்து சேனைகளை அணியணியாக நிறுத்தி ரணபேரி கைகொண்டடித்தார்கள். அந்தரணபேரிகையின் முழக்கமா னது எப்படியிருந்ததென்றல் ரணம் பிணம் கணம் மணம் அணம் களம் சினம் என்றடிபட்டது அதுகேட்டு சகலருந் திடுக்கிட்டார்கள் அந்தசத்தம் வீரசேனமகாராசன் கேட்டு மனஞ்சஞ்சலப்படாமல் ஒருக்ஷணத்தில் இரணவரிசை பூண் டு வில்லைக்கையிலெடுத்து ரதமேறி தண்டுக்கு முன்னகவந்து வில்லைக் குணத்தொனி பண்ணிநின்றன்.

வீரசேனமகாராசன்
நீலாட்சதனை வெட்டுதல்.

---

அப்போது குதிரையின்பின்போன ராட்சதாள் குதிரை பிடிபட்டுப்போனசமாச்சாரத்தை நீலாட்சதனுக்குச் சொல் ல அதுகேட்டு நீலாட்சதன் கோபநிக்கிரோதனகி அதிவே கமாய் இரதத்தைநடத்தி வீரசேனனைப்பார்த்து ஓய் இராச னே கேளும் ஸ்ரீராமமூர்த்திவிட்ட அஸ்வமேதக் குதிரை யை ஏன்பிடித்தாய், என்னுடைய பாணத்துக்கு இரையாகா

மல் காணிக்கை கப்பங்கொண்டுவந்து சத்துருக்கமகாராசனை வணங்கினலாயிற்று இல்லாவிட்டால் ஒரேபாணத்தினலே உன்னையும் உன்சேனைகளையுங் கொன்று பட்டணத்தை கொள்ளையிடுவிப்பேன் அப்படி வரவொட்டாமல் நடந்து கொள்ளென்றன் நீலாட்சதன் அதைகேட்டவுடனே வீரசேனமகாராசனுக்கு கண்களிரண்டும்நெருப்புப்பொறிபறக்க, காதுகளிரண்டிலும் புகைகளெழும்ப, மீசைகள்துடிக்க, பற்கள் நெறநெறவென்று கடித்துத் சொல்லுகிறன் அடா ராட்சதப்பட்டிமகனே அச்சம்பயமில்லாமல்என்னவசனஞ்சொன்னய் சத்துருக்கனுக்கு வணங்காவிட்டால் என்னையும் என்சேனைகளையும் ஒரேபாணத்திற்கொண்டு என்பட்டணத்தையுங் கொள்ளையிட நீ வல்லவனே இதோ உன்னை என்னுடைய வாளாயுதத்தினல் ஒரே வீசாய்வெட்டியெறிந்து போடுகிறேன் பாரென்று வாளாயுதத்தையுருவி சிவ்வென்றுபாய்ந்து நீலாட்சதன் சிரசை யறவெட்டித்தள்ளினன் அப்போது நீலாட்சதன் எமலோகம்போய்ச் சேர்ந்தான்.

## முதல்னள் யுத்தம்.

அதுகண்டு பதினயிரம் இராட்சதர்கள் வீரசேனமகாராசனைவளைத்துக்கொண்டு யுத்தம்பண்ணினர்கள் அப்படி வந்துயுத்தம்பண்ணின ராட்சதர்களை யெல்லாம் ஒவ்வொருவருக்கு நான்குபாணம்விட்டு எமலோகமனுப்பிவிட்டான். அதிலொரு இராட்சதன் தப்பித்துக்கொண்டு ஓட்டமாக ஓடிவெகுதூரம்வருகின்ற தண்டுக்கு அதிபதியான காலசித்தனைக்கண்டு நமஸ்கரித்துச்சொல்லுகிறன். ஐயாகாலசித்தனே கேளும் மதனுபுரிபட்டணத்தையாளப்பட்ட மட்சயந்தமகாராசன் குமாரன் வீரசேனமகாராசன் நம்முடைய குதிரையைப்பிடித்துக்கட்டி சேனதிபதியான நீலாட்சதனையும் பதினயிரம் இராட்சதாளையுங் கொன்றுவிட்டான் நான்மாத்திரம் தப்பிப்பிழைத்தோடிவந்தேனென்றன். அதுகேட்டு காலசித்தனனவன் சத்துருக்கமகாராசாவினிடம் வந்து ராட்சதன் சொன்னவசனமெல்லாஞ் சொல்லக்கேட்டு சத்துருக்க மகாராசனனவன் வெகுகோபதீப்தனகி கண்கள்சிவந்து பல்லை நறநறவென்று கடித்து உக்கிரமாக ரதத்தை நடத்தவே யானை தேர் பரிசேனைகளும் அதிவேகமாய் நடந்துவருகிறபோது பூமியானது திடுதிடென்றதிர ஆதிசேஷனும் நடுங்க அஷ்டகுலபர்வதங்

களும் கலங்க அஷ்டதிக்குமதிர ஆர்ப்பறித்து மதனுபுரிபட்டணத்து மத்தியில் வெட்டாரவெளியிற் பாளையம் வந்திரங்கியது. அப்போது சூரசேனனனவன் சேனைகளை யூகங்கட்டினன் எப்படியென்றால் இராட்சுதாளுடைய யானை தேர் பரி சேனைகளை உள்வட்டமாக நிறுத்தி ராட்சதர்களையும் அதற்கருகில் வட்டமாக நிறுத்தி ராட்சதப் படைத்தலைவர்களையும் சேனாதிபதிகளையும் எட்டுதிக்கு பதினாறுகோணமாய் பிரித்து வைத்து சத்துருக்கமகாராசனை உள்ளணியிலேவைத்து உக்கிரசேனனையும் மட்சயந்த அனுமானையும் நடுவணியிலே வைத்துதான் முன்னணியில்நின்று சலவசந்தனையும் முன்னணியில்நிறுத்தினன் அப்போது ரணபேரிகை யறைந்தார்கள். அதெப்படியிருந்ததென்றால் ஜெயஜெயவென் றடிபட்டது அந்தஓசையைக்கேட்டு சேனைகளியாவருஞ் சந்தோஷமானார்கள்.

சூரசேனனும் வீரசேனனுக்கும் யுத்தம்.

---

கலிவிருத்தம்.

அந்தவண்ண னருட்சூரசேனனும்
வெந்தழற்கணை யேந்திவிரைவினில்
விந்தைசேர்வீர சேனனைமேவிய
முந்துபோரின் முனைகொண்டுநின்றனன்.

அப்போது சூரசேனனனவன்இரதத்தை நடத்திவீரசேனன் முன்னுக்குக்கொண்டுபோய் வீரசேனனைப் பார்த்து ஒரு வசனஞ்சொல்லுகிறான். அடாவீரசேனா! நீயோஎங்கள்முன் நிற்கிறவன் வீண்சண்டை பண்ணவேண்டாம் குதிரையைக் கொண்டுவந்துவிட்டு சத்துருக்கராசனை வணங்கிப் பிழைக்கிறதேநலமென்றான். அதுகேட்டுவீரசேனன் அதிக கோபமாகிசூரசேனனைப்பார்த்துச் சொல்லுகிறான், அடா சூரசேனா! போருக்கென்று நேராகவந்தால் வீரமுடையயாவருக்கும் அதிகவீரசூரகெம்பீரர் உங்களுக்குமிஞ்சின சுத்தவீரர் இந்த எண்புவியிலுங்கிடையாதோ இதோ ஒருக்ஷணநேரத்தில் உங்களுடைய நாமங்களைவெளிப்படுத்தி வைக்கிறேன் நில்லு நில்லுமென்று வில்லைக்குணத் தொனிசெய்து பாணங்களைப் பிரயோகம்பண்ணி வருகிறபோது சூரசேனனனவன் களையாமல் இளையாமல் ரோஷத்துவேஷனாய் வில்லைநாணி பிகிந்து சில அஷ்திரங்களைப்பிரயோகித்து வீரசேனன்விட்டபாணங்

களையெல்லாம் நடுவதுபாதியில் அறுத்தெரிந்து பத்துபா ணம்வட்டு வீரசேனனுடைய மார்பிலணிந்த கவசத்தையும் பொடியாக்கிவிட்டான் அந்தவில் குணத்தொனி சத்தங்கேட் டுஇருதிறசேனைகளுங் கலந்து யுத்தம்பண்ணிஞர்கள் அதுக ண்டுவீரசேனனுக்கு கடுங்கோபமுண்டாகி தன்னுடைய தே ரை அதிகவேகமாகக்கொண்டுவந்துமுன்பாகநிறுத்தி அடா சூரசேனு என்தலைகீழாய் விழுகிறய் பொறுபொறு பதருதே யென்றும் நீயென்முன்னேநின்று போராட மாட்டுவாயோ வென்று கெர்ச்சித்து தன்னுடைய வில்லிலே அதிகதீட்சண் ணயமானபாணங்களை எடுத்துசந்தித்து பிரயோகம் பண்ணி ஞன் அந்த பாணங்களினுல் சூரசேனன் அடிபட்டு மிகவும் நொந்து ஆயாசமுற்று தன்னுடைய வில்லிலே அதிக தீட் சண்ணியமாகயிருக்கப்பட்ட பாணத்தை தொடுத்துவிட்டான் அக்குரூரபாணங்கள் வீரசேனன்மார்பை பத்தலாய்ப் பிளந் துவிட்டது அதற்கவன் கடுஞ்சினங்கொண்டு வில்லை முகத்தி ற்குநேராகப்பிடித்து அதிக தீட்சண்ணியமா யிருக்கப்பட்ட பாணத்தைதொடுத்துவிட்டான், அந்தபாணங்களும் வில்லி ல்நின்றும் விடுபட்டு குபீலென்று நெருப்புப் பொறிகளைவாரி யிறைத்துக்கொண்டு எரிபுகைகளுடன் சடசடவென்றதொனி களுடன் அதிவேகமாய்வந்து சூரசேனனுடையவில்லை இர ண்டுதுண்டாக ஒடித்து அவன்மார்பிலிருந்த கவசங்களையும் பொடியாக்கி ரதசாரதிகளுடனே அதம்பண்ணிவிட்டது அ துகண்டுசூரசேனன் உக்கிராகாரத்துடனே வேறொருதேரிலே றிவில்லைவளைத்து நாணேறிட்டு மிகவும்கூர்மையாயிருக்கப்ப ட்ட பாணங்களை வில்லில்சந்தித்துவிட்டான் அந்தபாணங்க ள்வில்லிலிருந்து விடுபட்டுவீரசேனன்தேரைசுக்கல்சுக்கலாய் பேர்த்தெரிந்து சாரதிகுதிரைகளையுங் கொண்டு கையிற்பிடித் திருந்த வில்நாணியை திடீலென்று அறுத்துப்போயிற்று அ துகண்டுவீரசேனன் மறுதேரேறி வில்லைவளைத்து அக்கினி யாஸ்திரத்தைவிடுக்க அதுவில்லிலிருந்து விடுபட்டு வடவா மூகாக்கினிபோல தகத்தகாயமாய் எறிந்துகொண்டு வேகத்து டன்வருகிறதை சூரசேனன்கண்டு ஒருவருணஸ்திரத்தை சந் தித்துவிட்டான் அந்தவருணஸ்திரமானது வில்லைவிட்டுவெ ளிபட்டு சப்தமேகங்களும் ஒன்ருய்க்கூடி இடிமின்னல் குமு றலுடனே வரிஷித்தாலெவ்வாருே அவ்வாறு அக்கினியா ஸ்திரத்தின்பேரிற் பொழிந்து வேகத்தை யடக்கிவிட்டது.

அதுகண்டு வீரசேனன் பர்வதாஸ்திரத்தை எடுத்து வில்லிற் சந்தித்து மந்திராபூதியுடன் அபிமந்திரித்துப் பிரயோகம் பண்ணினன். அந்தபர்வதாஸ்திரமானது வில்லிலிருந்து விடுபட்டு அனேகபர்வதங்களுண்டாகி வருகிறதை சூரசேனன் கண்டு முன்னம் தனக்கு தேவேந்திரன் கொடுத்த வச்சிராயுதத்தை எடுத்து விட்டுவிட்டான். அந்தவச்சிராயுதமானது புறப்பட்டு அதிவேகமாய்வந்து மலைகளையெல்லா மறுத்துத்தள்ளிவிட்டுப்பழையபடி தேவேந்திரனிடம்போய்ச்சேர்ந்தது அதுகண்டு வீரசேனன் மிகவும்உக்கிராகாரனாகி சிவசுப்பிரமணியர்கையில்வரம்பெற்றவேலைஎடுத்து அபிமந்திரித்துவிட்டுவிட்டான் அந்தவேலானதுஅண்டபகிரண்டங்களும்நடுங்ககெர்ச்சித்துக்கொண்டு வருகிறபோது தேவர்கள்கண்டுதிகிற்கொண்டுஓடிப்போனார்கள் அப்படி திருதிருவென் றெரிந்துக்கொண்டு தன்பேரில்வருகிற வேலின்பேரில் சூரசேனனனவன் அனேகதிவ்வியாஸ்திரங்களை ஒன்றின்மேலொன்றுகவில்லிற் சந்தித்துப்பிரயோகப்படுத்தினன். அவைகளையெல்லாம் வேலானது அறுத்துத்தள்ளி சூரசேனனுடைய மார்பில் வந்து தாக்கிமுதுகிலுருகிப்போய்விட்டது. அப்போதுசூரசேனனனவன் அடியற்ற வாழைமரம்போல தேரின் பேரிற் சாய்ந்தான்.

வீரசேனனுக்கும் சூரசேனனுக்கும் யுத்தம்.

கலிவிருத்தம்.

வீரசேனன் விடுத்தவைவேலினற்
சூரசேனன் துடித்துபல்சோர்ந்தவன்
கோரவாளிகொண் டெங்கனும்பெய்யவன்
வாரங்கண்டுக்கிர சேனன்நடந்தனன்.

அதுகண்டுவீரசேனன் சந்தோஷமாய் தேரை நடத்திச் சேனைகள்பேரிற்பாணங்களைவிட்டுக்கொல்லுகிறபோது உக்கிரசேனனனவன் இரதத்தைவீரசேனன் முன்பாகக் கொண்டுவந்து நிறுத்தி வில்லைவளைத்துப்பாணங்களை அமோகமாய்ப் பெய்யக்கண்டு வீரசேனமகாராசன் காலாக்கினிக்குச் சமதையான மூன்றுதிவ்வியாஸ்திரங்களைச்சந்தித்துப் பிரயோகம் பண்ணினன், அந்த மூன்றுதிவ்வியாஸ்திரமும் வருவதை உக்கிரசேனன்கண்டு காலாக்கினிருத்திரனைப்போற்பாய்ந்து ஒன்பது நாராசபாணத்தைப்பிரயோகித்தான். அப்போது சேனை

களானது எப்படி விழுந்ததென்றால் கால்வேறு தலைவேறு கைவேறு முண்டம்வேறு துண்டம்வேறு இப்படியாக விழுவதைக்கண்ட சலவசந்தன் தேரைச்சேனைகளின்பேரிற் றுரத்திபாணங்களை விட்டுச்சின்னாபின்னமாய்க்கொல்லுகிறபோது சேனைகளானது சலவசந்தனைக்கண்டு முன்னின்று யுத்தம்பண்ணமாட்டாமல் பார்க்கபயங்கரமாய்த் தட்டுக்கெட்டுத் தடுமாறிச்சேனைகள் ஓடத்தலைப்பட்டது அப்போது சேனாதிபதியான சுவேதன் ஓடுகிறசேனைகளையெல்லாம் நிறுத்திசலவசந்தனைவளைத்துக்கொண்டு பாணங்களைபூட்டி யெய்கிறபோதுசலவசந்தனானவன் பத்துபாணம்விட்டு சுவேதன்விட்ட பாணங்களையெல்லாம் அறுத்துத்தள்ளி சுவேதனையும் சல்லடைக்கண்களாகத்துளைத்துவிட்டான், அத்தருணத்தில் மட்சயந்தமகாராசன் நாம் இனிசும்மாயிருக்கப்போகாதென்று சேனைகளின்பேரில் தென்பாரிசமாய் இரதத்தை நடத்தினார், இரதத்தை நடத்தவே யிருபத்தைந்துலட்சம் படைத் தலைவரும் சேனாதிபதிகளும் சேனைகளுக்குக் கீழ் பாரிசமாகத் தேரைநடத்தினார்கள் அவர்கள்புறப்படவே பதினாயிரம் மந்திரிகளும் மேற்பாரிசமாய் இரதத்தைநடத்திச்சக்கிர யூகமாயிருக்கப்பட்டசேனைகள்பேரிலே நாலுமூலை எட்டுதிக்கு பதினாறு கோணமாய்வளைத்து இருதிரவர்படைகளும் இராசாக்களுமுனைந்து யுத்தம்பண்ணிக் கொண்டிருக்கையில் வீரசேனனானவன் மிஞ்சி உக்கிரசேனனுடைய கைவில்லைக் கண்டித்தான் அதைப்பார்த்துஉக்கிரசேனன் ஒருதண்டாயுதத்தையெடுத்து கிறுகிறென்றுசுழட்டி இரதத்தைப்பார்த்து ஒரு தெப்பலானதுவிட்டான் அந்தத்தெப்பல்இரதத்தின்பேரிற்படவே ரதமானது அச்சுவேறு ஆணிவேறு கும்பகலசம்வேறு குத்துக்கால்வேறு கொடுங்கைவேறு சட்டம்வேறு பலகைவேறு குதிரைவேறு சாரதிவேறாகத் தூள் தூளாய்ப்போய்விட்டதுகள்.

அதனைப்பார்த்து வீரசேனன்லகுவாய் குதித்துத் தானும்ஒருதண்டாயுதமெடுத்துமுன்கந்துபின்கந்து முப்பத்திரண்டுகந்தும் பாய்ந்து உக்கிரசேனனுடைய தெண்டாயுதத்தைப் பார்த்துஒரு அடிவிட்டான். அதையவன்தட்டுவிட்டு இடசாரிவலசாரியாக கந்துபாய்ந்து வீரசேனனுடைய சிரசைப்பார்த்து அடித்தான். அதையவன் தட்டிவிட்டு தண்டாயுதத்தைச்சுழட்டி உக்கிரசேனன் உடம்பிற்றாக்கினான் அதற்கவன்

மிகவும்நொந்து ஆயாசப்பட்டு தெண்டாயுதத்தைச் சுழட்டி வீரசேனனுடைய புஜத்தைப்பார்த்து ஓரடியானது அடித்தான். அந்த அடியானது வானங்குமுறி நுனிவானங்கறுத்துபேரிடிவிழுந்தால் எவ்வண்ணமாக விருக்குமோ அவ்வண்ணமாக வீரசேனன் புஜத்தின்பேரில்விழுந்தது, அப்படிதெண்டாயுதத்தினுற் கண்டித்த உக்கிரசேனனைப் பார்த்து வீரசேனன் பல்லைநறநறவென்றுகடித்து கடுங்கோபமுண்டாகி தெண்டாயுதத்தைக்சுழட்டி மூச்சுவிடாமல் மகாராசன்பேரிற் சாடுகிறபோது உக்கிரசேனனுனவன் வீரசேன மகாராசனுக்குப்பின்வாங்காமல் தன்னுடையதெண்டாயுதத்தினுல் தட்டிவிட்டு வீரசேனமகாராசன் மார்பைப்பார்த்து சிவ்வென்று ஆகாயமார்க்கமாகக்கிளம்பிவந்து மார்பிலே ஒரு உதை விட்டான் அவ்வுதையை சட்டைபண்ணுமல் உக்கிரசேனமகாராசனைச் சேர்த்துக்கட்டிப்பிடித்து மார்போடு சாத்திக்கொண்டு தன்னுடைய பலத்தை யெல்லாம் முன்கையிலே வைத்து தெண்டாயுதத்தினுலே மார்பிற்ருக்கினுன். அதனுல் அவன் மார்பு பிளந்து உதிரவெள்ளம்பெருகிச் சீவனைவிட்டான் அப்போது வீரசேனன் அவன்விட்டு எழுந்து வேருெருரதத்திலேறி வெற்றிகையெடுத்துப் பம்பம்பென்றுஊதினுன். அதுகண்டு அவனுடையசேனைகளெல்லாஞ் சந்தோஷமானுர்கள். தண்டுகள் மிகவும்விசனமடைந்தார்கள் சூரியனும்மேற்றிசையில் மறைந்தான்.

## இரண்டாம்நாள் வீரசேனனுக்தும் சலவசந்தனுக்கும் யுத்தம்.

---

விருத்தம்.

சிங்கநேர்வீர சேனனுமுக்ர சேனனைமுருத்துப் பாசறைபட்
டங்கியேவன்று போதைப்போக்கி தடவரை பொன் னிரதமேறி
துங்கமாங்கணைகள் மாரிபோற்சொறியத் துரகதர்யாவரும் வெகுண்டு
மங்குலினேர்கள் சலவனைக்கூவ வந்தமர் செய்கின்ருன்.

மறுநாள் வீரசேனனுனவன்சத்துருக்கமகாராசருடைய தண்டுக்குள்ளே இரதத்தைநடத்தினுன். அக்காலையில் சலவசந்தன் மகா உக்கிராகாரனுய் அநேகபாணங்களைவிட்டுசுவேதனது சரீரத்தைச் சல்லடைக்கண்களாக துளைத்து ஒருநாராசம்விட்டு சேனுதிபதியான சுவேதனனுடைய சிரசையறுத்துத் தள்ளிப்போட்டு சேனைகள்பேரிற் கவிந்து இரதத்தைச்சக்கிரா காரமாய்த்திருப்பி பாணங்களை மிதமில்லாமல் விட்டு கொல்லுகிறபோது கால்பலமான சேனைகள் சின்னு பின்

னமாக ஓடியொளிக்கத் தலைப்படவே சலவசந்த மகாராஜன் இரதத்தை நடத்தி வீரசேனமகாராசனைச் சக்கிராயுதத்தினுள்ளேபோக வெட்டாமல் வளைத்துக்கொண்டுசரங்களை ஓய்வில்லாமலும் விட்டு வீரசேனனை அப்புறமிப்புரம் அசையவொட்டாமலும் வில்லையெடுத்துப் பாணங்களைப் பூட்டவொட்டாமலும் சாரதி இரதத்தை நடத்தவொட்டாமலும்பாணங்களால் அடிக்கிறபோது வீரசேனமகாராசன் மிகவும் நொந்துமெத்தவும் ஆயாசப்பட்டு சற்றுநேரம் இரதத்திற் சாய்ந்து ஆயாசந்தெளிந்து வில்லை யெடுத்து நிறுத்திப் புங்கானுபுங்கமாய்ச் சரமாரிபொழிவதுபோல் பாணசரங்களாலே சலவசந்தன் பாணத்தையறுத்து அவனுடைய ரதத்தை முன்னுக்குவர வொட்டாமலும் செய்தான். அப்போது சலவசந்தமகாராசன் இடியைப் போன்ற பத்துபாணங்களைப் பூட்டிவிட்டான். அப்பாணமானது புறப்பட்டு வீரசேன மகாராசன் விடப்பட்ட அஸ்திரங்களை யெல்லா மறுத்துப்போட்டு வீரசேனனுடைய ரதம் சாரதி குதிரைகளுடன் பொடிப்பொடியாய் தும்சம்செய்துவிட்டான்! அதனலே வீரசேனன்லகுவிலே குதித்து மறுதேறிலேறினன். அந்த தேரையும் சலவசந்தமகாராசன் மூன்றுபாணம்விட்டு வுடைத்தெறிந்துபோட்டான். இப்படி அறுபதுரதம் சலவசந்தமகாராசனலே உடைந்துபோய்விட்டது அதுகண்டு வீரசேனன் ஏதடா இராட்சதன் பொல்லாதவனயிருக்கிறன் இவனைநேரிலே யுத்தம்பண்ணி செயிக்கவேண்டுமென்று மறுதேரிலேறி வில்லையெடுத்து நிறுத்திக்குணத்தொனிபண்ணி யுகாந்தகாலத்தில் சப்தமேகங்களும் ஒன்றாய்க்கூடி இடிமின்னல் குமுறலுடனே மழைபொழிந்தா லெப்படியோ அப்படி சரவருஷங்களை ஓய்வில்லாமற் பொழிகிறபோது சலவசந்தமகாராசன் நூறு திவ்யாஸ்திரங்கள்விட்டு வீரசேனன் விடப்பட்ட அஸ்திரங்களை யெல்லாம் கண்டித்து அவனுடையமார்பில் கவசத்தையும் பொடியாக்கி வில்லினுடைய நாணியையறுத்து வீரசேனனை நோகச்செய்தான். அதுகண்டு வீரசேனன்ஒரு அக்கினியாஸ்திரத்தை யெடுத்துப்பிரயோகம்பண்ணினன் அது வில்லில்விடுபட்டு சடசடென்கிறதொனியுடனேநெருப்புகளை வாரியிறைத்துக்கொண்டு தகத்தகாயமாய் காடுசெடிகளெல்லாம்பத்திபெரிய வடவாமுகாக்கினியைப்போலும் வருகிறபோது சலவசந்தனனவன் ஒருவருணஸ்திரத்தையெடுத்து அபி

மந்திரித்துப் பிரயோகம் பண்ணிவிட்டான். அந்தபாணமும் வில்லிலிருந்து விடுபட்டுவருகிறபோது சப்த மேகங்களும்ஒன்ருய்க் கூடி சமுத்திரத்து நீரையெல்லாம் வாரிக்கொட்டினது போல் அக்கினியாஸ்திரத்தின்பேரில் விழுந்து யானைது திக்கைபோற் பொழியும்போது அக்கினியாஸ்திரமும் பலனுங்தன்றி அடிபட்டுவிழுந்துபோயின. அதுகண்டு வீரசேனன் உக்கிராகாரனுகிப் பிர்மாஸ்திரத்தையெடுத்து ஆகுதிமந்திரங்களுடன் பூசைசெய்து விட்டுவிட்டான்.

அந்தப் பிரமாஸ்திரமும் வில்லில்விடுபட்டு காலக்கோட்டிவிஷம் போலும் நெருப்புகளைவாரி யிறைத்துக் கொண்டு அதிவேகத்துடன் வருகிறபோது சலவசந்த மகா ராசனுனவன் தானும் ஒருபிர்மாஸ்திரத்தை யெடுத்து வில்லிற்ருெடுத்துமந்திராபூதி கொடுத்து ஆவாகனத்துடனே விட்டு விட்டான். அந்தப் பிர்மாஸ்திரமும் வில்லில் விடுபட்டு ஒன்ருேடொன்று ஊடுதாக்கி யுத்தம்பண்ணி இரண்டு பிரமாஸ்திரமும் மல்லுகட்டி அடித்தும் உதைத்தும் குத்தியும் வெட்டியும் கட்டியும் எரித்தும் இப்படியாகவெகுநேரம் போராடி கடைசியிலே இரண்டு அஸ்திரமு முறிந்து பூமியிலே விழுந்துவிட்டதுகள். அதுகண்டு வீரசேன மகாராசன் முன்னுலே ஸ்ரீமந்நாராயணனிடத்திலே தவசு செய்து வரம்பெற்ற நாராயணுஸ்திரத்தை யெடுத்து அபிமந்திரித்து வில்லிற் சந்தித்துப் பிரயோகம் பண்ணிவிட்டான் அந்த அஸ்திரம் ஆயிரத்தெட்டண்டமுங் நடுங்க நெருப்புகளை வாரி யிறைத்துக்கொண்டு ஆகாயம் பூமியும் ஒன்ருய் ஆவென்று வாயைத்திறந்துக்கொண்டு வருகிறபோது சலவசந்தன்கண்டு தன்னுடைய நாராயணுஸ்திரத்தை யெடுத்து வில்லிற் சந்தித்துப்பிரயோகம்பண்ணினுன் அதுவும் வடவாமுகாக்கினியைப் போல்நெருப்புகளைக் குபீல்குபீலென்று கக்கிக்கொண்டுவந்து ஒன்றுக்கொன்று யுத்தம்பண்ணி சலவசந்தன்விட்ட நாராயணுஸ்திரத்தை கமளீகரம் பண்ணிப்போட்டு சலவசந்தனையும் அவன் ரதஞ் சாரதிகளுடனேயும் பஸ்மீகரமா யெறித்துப் போட்டது. அப்போது யுத்தம்பண்ணிக்கொண்டிருந்தஇருதிறவர்படையும் நாராயணுஸ்திரத்தைக்கண்டு ஆயுத அஸ்திரங்களைகையிலெடாமலும்சிரசின்பேரிற்கைகுவித்து ஸ்ரீமந்நாராயணு நமோவென்று தோத்திரம்பண்ணுகையில் அந்தநாராயணுஸ்திரமானது சகலரையும்பார்த்துக் கொண்டு வ

ந்து சத்துருக்கமகாராசனுக்கு வலம்புரி இடம்புரியாகநமஸ்
காரஞ்செய்து அம்புருப்பொதியில் சேர்ந்தது.

### மகாமாயன் யுத்தம்.

விருத்தம்.

பட்டயம்பரிசுத்தி பரிவாயுசிலைகள்பாணம்
திட்டனவெடுத்துக்கொண்டு சீருடன்கவசம்பூண்டு
மட்டறச்சென்றவீர சேனனைக்கொல்வேனென்று
கிட்டியேமாயன்வந்து திரிகணைதொடுத்தானென்றே.

அதுகண்டு மகாமாயன் சிந்தாக்கிரந்தனாய் இரதத்தை
வேகமாக நடத்தி வீரசேனனைப்பார்த்து வில்லை யெடுத்து நி
றுத்திப் புங்கானுபுங்கமாய் அஸ்திரங்களை விட்டு வீரசேன
னுடைய ரதத்தை முன்னுக்குவரவொட்டாமல் பாணங்களா
லேஜாடுகிறபோது வீரசேனன்கண்டு ஏதடா அந்த ராட்சத
னிலும் இவனைப்பார்த்தால் மகா பலவானைப்போல் காண்கி
ன்றது இவன்ரூபத்தைப்பார்க்கச்சேதானே பயங்கரமாயிருக்
கின்றது. இவன்வில்லோ மகமேருபர்வதம்போலு மிருக்கின்
றது இவன்கோபத்திற்கு ஹரிஹராப் பிரமாதிகளும் நின்று நி
ர்வாகம்பண்ணமாட்டார்கள்போற் றோன்றுகிறது, இவனை ந
ம்முடையபாணங்களினாலே கொல்லக்கூடாமையாகத் தோற்
றுகின்றது ஆகையால் இவனுக்குத் தக்க தேவதாஸ்திரங்க
ளைவிட்டறுத்துக் கொல்லவேண்டுமென்று மனதைத் திடப்ப
டுத்திக்கொண்டு வில்லைவளைத்து தனக்குமுன்னாலே தேவேந்
திராதி தேவர்கள் கொடுத்த திவ்வியாஸ்திரங்களை யெடுத்து
வில்லிற்சந்தித்து மகாமாயன்விடப்பட்ட அஸ்திரங்களை யெ
ல்லாமறுக்கத் தலைப்பட்டது. அதுகண்டு மகாமாயன் மகா
கோபத்துடனே நூறுநாராசபாணத்தையெடுத்து வில்லிற் ச
ந்தித்துவிட்டான். விடவே அது நாகசற்பம்போல் ஒன்றின்
மேலொன்றாய் சீறிக்கொண்டுவருகிறபோது வீரசேனன்கண்
டு நூறுதிவ்வியாஸ்திரம் விட்டு அறுத்தெறிந்தான். அது
போகவே மகாமாயன் நூறு காளியாஸ்திரமெடுத்து வில்லி
ற்றொடுத்துப்பிரயோகம் பண்ணினான். அந்த நூறு காளியா
ஸ்திரமும் காலக்கோடி விஷம்போலச் சீறிக்கொண்டு அதி
வேகத்துடன்வருகையில் வீரசேனன் கண்டு நூறு காளியா
ஸ்திரத்திற்கும் நூறு அர்த்தசந்திர பாணம்விட்டு அறுத்து
த்தள்ளினான் அதுகண்டுமகாமாயன் பல்லைக்கடித்து முன்னா

லேதனக்கு ஆதிசேஷன் கொடுத்த நாராசபாணத்தை யெடுத்துவில்லில்தொடுத்து மந்திராபூதிகளுடனே பூசைகள் செய்துவிடுத்தான். அதைதேவர்கள்கண்டு வீரசேன னிறந்தான் இறந்தானென்று பார்த்துக்கொண் டிருக்கிறபோது அந்த நாராசபாணமும் வில்லில்விடுபட்டு விஷங்களேக்கக்கி அந்தவிஷங்களானது பூமியில்விழுந்து அதிலுள்ள புல்லு பூண்டு மரமட்டைகள் ரதங்கள் சேனைகளெல்லாம்பத்தி யெரிய அக்கினி அண்டபகிரண்டமும் சுவாலைகள்வீசி சடசடவென்கிற தொனிகளுடனேயும் விஷங்களைவாரிநாலுமூலையிலும்இறைத்துக்கொண்டு புறப்படவே அதைக்கண்டு சகலரும்யுத்தம்பண்ணுகிறதை விட்டு வேடிக்கைபார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்படியிருக்க வீரசேனனுனவன் முன்னால் தனக்குஇந்திரனளித்தகருடாஸ்திரத்தைஎடுத்துவிட்டான் அந்தஅஸ்திரமானதுபுறப்பட்டு மகம்மேருகிரிபர்வதம்போலரூபமுண்டாகி சிரகுகளை அடித்துக்கொண்டுமகாவேகமாய்வந்து அண்டபகிரண்டங்களுந்திடுக்கிடவாற்பரித்துகியாவென்று அட்டகாசம்பண்ணியது அந்தச்சப்தமானதுநாகபாசங்கேட்டுஇடியோசையைக்கேட்ட நாகம்போலப்பயந்து தன்னுடையபலங்குன்றித் தியங்கிமயங்கிற்று அந்தவேளையில் கருடாஸ்திரமானது லகுவுபாய்ந்து அந்தநாகபாசத்தைச் சிரகாலடித்துமூக்கினுற்குத்திப் பொசித்துபோய்விட்டது அதுகண்ட சகலரும் ஆச்சரியப்பட்டயுத்தம்பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

அப்படியிருக்கமகாமாயனுனவன் அதிகஉக்கிரத்துடனே கையிலே சூலம்பிடித்துக்கொண்டு புறப்பட்டான். அவனைக்கண்டு வீரசேனன் இதென்ன மாய்கையா யிருக்கின்றது சூத்திரர்களாவது நம்முடனே யுத்தஞ்செய்வ தேதென்று சற்றுநேரம் யோசனைசெய்து தன்னுடைய அம்புருப்பொதியில் கைவைத்து ஒருமகா உக்ரவீரசத்தியை யெடுத்து பூசை நைவேத்தியங்கள் கொடுத்து விட்டுவிட்டா னதுவும் வெகுவீரத்தோடு வந்து சூலத்தைக் கமளீகரம் பண்ணிவிட்டுப் போய்விட்டது, அப்போது மகாமாயன் ஏதடா ஒருமானிடவன் நம்மையெல்லாம் கொல்லவந்த எமனைப்போற் காண்கின்றது நாம்விடப்பட்ட அஸ்திரத்திற்குமுன்னே திரிமூர்த்திகளும் நில்லார்களே இவனைச்செயிக்காவிட்டால் தேவர்களும்நகைப்பார்களே நம்மோடொத்த இராட்சதர்களும் கைகொட்டிப் பரியாசம் பண்ணுவார்களே இவனை மாய்கையினுல் கொல்

னுவோமென் றெண்ணினாலும் ஒருமானிடவன் முன்னுக்கு யுத்தம்பண்ணமாட்டாமல் மாய்கையிற் சூதுபண்ணி கொன்றனென்று சகலரும் நம்மை மதியார்களே இதற்கென்னசெய்வோமென்றுயோசித்து முன்பு இவன்வில்லைக்கண்டித்துப் பின்புதண்டாயுதமெடுத்துக் கொல்லவேணுமென்று திடங்கொண்டு சாரதியை எச்சரித்து இரதத்தைச் சக்கிராகாரமாய் திருப்பி வில்லை நிறுத்தி ஒன்றுபத்து நூறு ஆயிரம்பதினாயிரம் லக்ஷம் கோடி சங்கம் மகாசங்கமென்று சொல்லப்பட்ட அளவிறந்த பாணங்களைச் சரமாரியாகப் பொழிந்தான். யுகாந்தகாலத்திலே சத்தமேகமும் ஒன்றாய்க்கூடி இடிமின்னல்கு முறலுடனே மழைபொழிந்தாலெப்படியோ அப்படிபோலச் சந்துகளில்லாமல் ஒருஜாமபரியந்தம் மூச்சுவிடாமல் ஒரேமூச்சாய் பாணமெடுப்பதும் வில்லிற்றொடுப்பதும் ஒருவருக்குந் தெரியாமல் வீரசேனனை வில்லெடுக்கவொட்டாமலுந் தேரை அப்புறமிப்புறமசையவொட்டாமலும் திக்கு முக்காடும்படியாய்ப் பாணங்களைவிட்டு அடிக்கிறபோது வீரசேனனானவன் அனேக திவ்யாஸ்திரங்களை விட்டு அறுத்துக் கொண்டிருந்தான்.

அப்போது மகாமாயனானவன் கோபதெண்டாயுத மெடுத்துக்கொண்டோடிவந்து கிறுகிறுவென்று சுழட்டி இரதத்தைப் போக்கடித்தான் அந்த அடிபடவே இரதமானது அச்சுவேறு ஆணிவேறு மச்சுவேறு கும்பகலசம்வேறு குத்துக்கால்வேறு துவஜம்வேறு டால்வேறு கொடைவேறாகத் தூள்தூளாயிற்று அதுகண்டு வீரசேனன் லகுவாய் தப்பித்துக் கொண்டு மறுதேறிலேறினான், அந்ததேரையு முடைத்தெறிந்தான். அப்படிநூற்றிருபத்தைந்து இரதத்தையு முடைத்துப்போட்டான். இப்படி இராட்சதராஜன் மிஞ்சியகாலாக்கினிருத்திரனைப்போற்சீறியெழும்பியசேனைகள்பேரில் விழுந்தயானைதேர் பரிசேனைகளெல்லாம் தெண்டாயுதங் கொண்டு ஜாடுகிறபோது யானைப்பிணமும் குதிரைப்பிணமும்ராசிராசியாய் ஒவ்வொருஅடிக்குப்பத்துலட்சம்இருபதுலட்சம் இந்தப்படியாகக் கொல்லத் தலைப்பட்டான்.

அப்போது சேனாதிபதிகளான இருபத்தைந்து லட்சம் இராசாக்கள் இரதத்தைத் திருப்பிக்கொண்டு ஓடுகிற சேனைகளையெல்லாம் ஓடவொட்டாமல் அடிக்கிறபோது மகாமாயனானவன்தெண்டாயுதத்தினாலே விலக்கிவிட்டு அத்தெண்டா

யுதத்தை கிறுகிறென்று சுழட்டி இருபத்தைந்துலக்ஷம்சேனு திபதிகளுடைய இரதத்தையும்பார்த்து விட்டுவிட்டான் அந்தக்கோபகெண்டாயுதம் ஒருகுழவியும் இரதங்களொரு மிளகாயும் பூமியொரு அம்மியுமாக அரைபட் டகர்ந்ததுபோல் அந்த இருபத்தைந்து லக்ஷம் சேனுதிபதிகளையும் மகாமாயனுனவன் அரைத்து எமலோகஞ் சேர்ப்பித்தான்.

அதுகண்டு வீரசேனன்சற்றிளைப்பாரி இரதத்திலேறிசாரதியை எச்சரித்து இரதத்தை மகாமாயன் முன்னுக்கு நடத்தி அனைவரும்ஒருமுகமாய்த்திரும்பிமகாமாயன்பேரில்சரமாரியாய்ப்பொழிந்தார்கள் அப்படி வீரசேனனுல்விடப்பட்டபாணங்களையெல்லாங்கையினுற்றட்டிவிட்டுமகாமாயன்வீரசேனனுடையரதத்தைப்பார்த்துக்கையைமுடக்கிஒருகுத்துவிட்டான் அந்தக்குத்தினுல் சுக்கற்சுக்கலாய் பொடிப்பொடியாய் விடவே வீரசேனன்மறுதேரிலேறி வில்லைக் குணத்தொனிபண்ணி தொடைதட்டிவுறிமி நின்ருன் நிற்கவே மகாமாயன் பார்த்து ஏதடா மானிடனே மகாபலவானுக விருக்கின்ருன் அனேகஞ்சண்டைகளிற் கைகண்டவன்போற்காண்கின்றது.

ஆனபடியால் நம்முடனே இரண்டுநாளாய் இரவும்பகலுமாய் போராடுகிருன், இவன் மகாசமர்த்தனென்று மெச்சி வீரசேனு இதோபார் உன்னுடையரதத்தையும்உன்னையும் ஒருகுத்தினுல் எமலோகங்குடியேற்றிவைக்கிறேன் பாரடாவீரசேனுவென்று மறுபடியுங் கையைமுடிக்கிக் கையில் தன்பலமெல்லாம்வைத்து ஓடிவருகிறபோது வீரசேனன்கண்டு சிந்தாக்கிரந்தனுய் விசனப்பட்டு மறுபடியும் தைரியப்படுத்திக்கொண்டு வில்லைவளைத்துப் பாணங்களை எய்திடவே மகாமாயன்கண்டு அந்தபாணத்தின்பேரிற் குத்தினுன் அந்த குத்து பாணங்களின்மீதிற்படவே வந்தவழி போனவழிதெரியாமல் பாணங்கள்நொருங்கிப்போய்விட்டது.

இப்பால்வீரசேனனுக்கு கண்கள்சிவந்து கடுங்கோபமாகி நாறுதிவ்யாஸ்திரம்விட்டு மகாமாயனுடைய சரீரமெல்லாஞ் சல்லடைக்கண்களாகத் துளைசெய்யவே மகாமாயன் சீறிகோபமீறி தேரேறி வில்லையெடுத்து நிறுத்தி அனேக அஸ்திரங்களைவிட்டுவீரசேனன் சரீரத்தை துளைசெய்து சாரதிகுதிரைகளைக்கொல்லவே வீரசேனன்பார்த்து சற்றுயோசித்து நல்லதென்றுகனைத்துக்கதும்பி அடாமகாமாயா ஆகட்டுமென்று வேறொருரதமேறி காளிகாதேவிகையில் வரம்பெற்றசத்

தியையெடுத்து வில்லிற்றெடுத்து பூசை நைவேதியங்கொடுத்து மகாமாயன்கண்டதுக்சூலக்ருபார்த்துவிட்டான் அந்தசத்தியானது அண்டரண்டங்குலுங்கஅக்கினியைவாரியிறைத்துக்கொண்டுவருகிற சத்தியின்பேரில் மிதமில்லாமல் அஸ்திரங்களைவிட்டு அடிக்கிறபோது மிகுதியான பாணஸ்திரங்களையெல்லா மறுத்துக்கொண்டு மகாமாயனிட நெஞ்சுக்குழியிற்பட்டுருகிப்போகவே அடியற்றுசாய்ந்தவனைப்போலத்தேரின்பேரில்விழுந்து ஸ்ரீராமாவென்றுகூவி மகாமாயன் ஆவியைவிட்டான் அந்தரவாசிகளாகிய தேவர்கள் மகாமாயனிறந்தானென்று விசனமுற யாவருங் கூடாரஞ்சென்றார்கள்.

## மூன்றாம்நாள் யுத்தம்.

மறுநாள்வீரசேனன் உயுத்தகோலம்பூண்டு சகல சேனை சைனியங்களுடன் புறப்பட்டு ரணபூமிக்குவந்து வெற்றிச் சங்கையெடுத்துப் பம் பம்மென்று ஊதினன் அந்தஓசையைக் கேட்டராக்ஷதர்களெல்லாம் திடுக்கிட்டு மெய்கலங்கினார்கள். அப்போது வீரசேனனனவன் இரதத்தை முடுக்கிக்கொண்டு சக்கரயூகத்திற்குள்ளே நுழைந்து பாணங்களைமிதமில்லாமற்சேனைகளின்மீதுவிட்டு கண்டதுண்டமாகக் கண்டிக்கிறபோது சத்துருக்கமகாராசன் வீரசேனனை கொல்கிறேனென்று புறப்பட்டார் அக்காலையில் காலசித்தனனவன் இரதத்தை நடத்திச் சத்துருக்கமகாராசனைச் சேவித்துச்சொல்லுகிறான் ஐயாதேவரீர் இந்தராசனை ஓர்பொருட்டாகயெண்ணியுத்தத்திற்குப்போகவேணுமோ, அடியேன்சென்று அந்த வீரசேனனை எமலோகத்திற்குக் குடியேற்றிவைக்கிறேன் பாருமென்றுகாலசித்தன்கூறவே சத்துருக்க மகாராசன் குஞ்சிரிப்புக்கொண்டு ஓய்காலசித்தனே கேளும் இப்பொழுது ஐந்து துரைகள் விழுந்துபோயிருக்கிறார்கள் ஆனபடியினலே வீரசேனன் மகாபலவான்போற்காண்கிறது ஜாக்கிரதையாயிருந்து போராடி அவனைக்கொல்ல வல்லமையுண்டோ சொல்லென்று சத்துருக்கமகாராசன் கேட்க காலசித்தன் சொல்லுகின்றான் ஐயா சத்துருக்கமகாராசரே! நீரிப்படிபரியாசமானவார்த்தைகளைச் சொல்லவேண்டாம் அடியேனுடைய சவுரியந் திரிமூர்த்திகளுக்குந் தெரிந்திருக்கும் சகல உயிர்களையுங் கொண்டுபோகிறகாலனனவன்என்கையில்எத்தனைதரமோ அகப்பட்டுஅடியும்பட்டு மிகவும்வணங்கினன் ஆனபடியால் என்பே

ரால் எமலோகத்திற்கொடியும்பரக்கின்றது நீர் சலவசந்தன் மகாமாயன்போலென்னை எண்ணவேண்டாம் இதோ ஒருக்ஷணநேரத்திற்குள்ளே அவனையுமவனுடைய சேனைகளையும் என்பாணத்திற்குயிரைகொடுத்து தேவரீர் பாதம்வந்துசேருகிறேன்பாருமென்று இடியோசையைப்போல காலசித்தனைவன் உதட்டியாய்ச்சொல்லவே, சத்துருக்கரானவர் ஓய் காலசித்தனே வருங்காலம் தேசகாலம் நிகழ்காலமறிந்து யுத்தம் பண்ணிஜெயிக்கவேண்டும் அதுபோல வருவது நான்சொன்னேன் நீயேன் கோபித்துக் கொள்ளுகிறாய் நீயே போய் யுத்தம்செய்துவாவென்று சமாதானமாகச் சத்துருக்கரானவர்பகரவே, காலசித்தனைவன் வீரசிங்கத்தைப்போலவுக்கிரமாகத்திரும்பி வில்லைவளைத்துப் பாணங்களை விபரீதமாக வீரசேனன்பேரில் எய்கிறபோது அவன்கண்டுவருகிற அஸ்திரங்களையெல்லாம் அறுத்துப்போட்டு காலசித்தன் முன்னுக்கு ரதத்தைநடத்தி அடாராட்சதா! நீயேன்தலைகீழாய்விழுகிறாய் உன்னிலும் பராக்கிரமசாலிகளெல்லாம் உனக்கு முன்னமே இறந்துபோனார்கள், அவர்கள் போனவழியை உனக்கும் க்ஷணநேரத்திற் காண்பிக்கிறேன் சற்றுநேரம் சாக்கிரதையாயிருந்துபோராடென்று வீரசேனன் சொன்னான்.

காலசித்தன் யுத்தம்.

---

விருத்தம்.

கோலமாமதகரிகளுந் துரகமுங்கொடிய
ஆலகாலம்போலார்த்தன வணிதிகழ்தேர்மேற்
காலசித்தனுமேறிவெங் கனலெழவிழித்துக்
காலமெங்கணுமொலிந்திட நாணொலிசெய்தான்.

அம்மொழியைக்கேட்டகாலசித்தனைவன்புண்ணில்வேலாயுதம்புகுந்தாற்போற்சீறி அடாவீரசேனா! கையிலாகாதசிலராட்சதரைக்கொன்றேமென்றுகர்வித்துசொற்களைமிஞ்சவிடாதேஇதோஒருநொடிக்குள்உன்னையும்,உன்சேனைகளையும்எமபுறத்திற் கேற்றிவிடுகிறேன் பாரடாவென்றுகையிற்பிடித்திராநின்றவில்லைமுகத்திற்குநேராய்ப்பிடித்துபாணங்களைப்பூட்டிப் பிரயோகம்பண்ணினான். அந்தப்பாணமானது புறப்பட்டு அதிவேகமாய் வீரசேனனிடமார்பில் வந்து சுருக்குசுருக்கென்றுதைத்து அதனால்வீரசேனன் மிகவும்நொந்துகாலசித்தனைப்பார்த்துவில்லையெடுத்துநிறுத்திநூறு திவ்வியாஸ்திரங்களைத்தொடுத்துக் காலசித்தன்விட்டபாணங்களையெல்லாம்

நடுவதுபாதியிற் கண்டித்துத்தள்ளி கடுங்கோபாக்கினியுடனே ஐம்பதுநாராசமெடுத்து றிவ்றிவ்வென்றுவிடுத்தான். அதை காலசித்தன்கண்டு இருபத்தைந்து நாராசம்விட்டறுத்தான். அந்தப்பாணங்கள்போகவேவீரசேனன்பின்னும்நாறுதிவ்வியாஸ்திரமெடுத்துப்பிரயோகம்பண்ணினுன். அதற்குக்காலசித்தன் எண்பது காளியாஸ்திரமெடுத்துப் பிரயோகித்து அவ்வஸ்திரங்களை யறுத்தெரிந்தான். உடனேவீரசேனன்மகா உக்கிரத்துடனே வில்லைமுகத்திற்குநேராய்பிடித்து சரவருஷம் போற்சொரிந்தான். அதற்குகாலசித்தனுனவன்வருகிற பாணங்களையெல்லாம் அறுத்துத் தும்சப்படுத்தி பத்துதிவ்யாஸ்திரங்களைஎய்து வீரசேனன்களைக்கஅடித்துவெற்றிச்சங்கையெடுத்து வாயில் வைத்தூதினுன். அதனையறிந்தசத்துருக்கமகாராசனும் இராட்சதக்கூட்டங்களும் சந்தோஷமானுர்கள். அந்தவேளையில் காலசித்தனுனவன் ஏமனைப்போலே உக்கிரங்கொண்டுசேனைகளின்பேரில் இரதத்தைநடத்தி அஸ்திரங்களினுல்அநேகஞ் சேனைகளைக்கொல்லுகிறபோது சேனைகளானதுகலாசித்தன் முன்னின்றுயுத்தம்பண்ணமாட்டாமற்கையெடுத்துகும்பிடுவாரும், காலில்விழுந்து காப்பாற்றுமென்றுவெதும்புவாரும்உனது புண்ணியத்தினுல்எங்கள் பெண்சாதிபிள்ளைகளுடனேசேர்ந்துபிழைக்கப்போகிறுேம்உயிர்பிச்சைதந்திடுமென்பாரும், இந்தச்சேவகத்தைவிட்டுவிடுகிறுேமென்பாரும்ஐயா உமது வில்லுக்கோர் சரணம்பாணத்துக்கொருசரணம்உமதுகைக்கொரு சரணமென்பாரும், இப்படி பலவிதமாய்ச்சொல்லிக்கொண்டுசேனைகள் ஓடுகிறபோதுகாலசித்தனுனவன்ஆயுதம்பிடித்தவர்களெல்லாம் கொன்று ஆயுதம்போட்டுவிட்டுசரணமடைந்த பேரையெல்லாம் துரத்திவிட்டுரதத்தைச்சக்கிராகாரமாய் திருப்பிக்கொண்டு வருகிறபோது வீரசேனனுனவன் ஆயாசந்தெளிந்து தன்னிரத்தைக் காலசித்தன்முன்னுக்குத்துரத்தி அடாகாலசித்தனே? ஏன் தலைகீழாய்விழுகிருய் இதோ உன்னை க்ஷணநேரத்தில் எமலோகங் குடியேற்றிவைக்கிறேன் ஜாக்கிரதையாயிருந்து போராடென்று சொல்லவே காலசித்தனுனவன் அம்மொழிகளைக் கேட்டுச்சொல்லுகிறுன்.

அடா வீரசேனு! காட்டிலிருக்கிற யானையானது ஆண்சிங்கத்தின்வீரந்தெரியாமல்மதோமஸ்தினுல் தும்பிக்கையை தூக்கிச் சிங்கங்கழுத்தில் மாட்டியிழுத்தால் சிங்கமானதுமேல்வி

மூந்தடித்திடாதோ அதுபோலஸ்ரீராமமூர்த்திவிட்டபுரவியை நீபிடித்துக்கட்டினபடியினாலே இப்போதுன்னையும் உச்சேனைகளையுங்கொன்று உன்பட்டிணத்தையுங் கொள்ளைகொண்டு போகவல்லவனானேன் ஆகையால் உன்னால்சாமார்த்தியமுண்டானால் என்னைச்செயித்து சக்ரயூகத்தணியில் நுழையென்று காலசித்தன்சொல்லஅதுகேட்டுவீரசேனமகாராசன்இனியில்லாதகொடுரேங்கொண்டு அடாராட்சதாவாயால்வரிசைகெடாதே இதோ என்பாணத்தினால் எமலோகமுன்னைச் சேர்க்கிறேன் சற்றேபொருத்திரென்றுவில்லில்பாணங்களைச்சந்தித்துவிட்டான் அந்தப்பாணங்களோ வில்லைவிட்டு வேகமாகவந்து கலாசித்தன் வில்லையுங்கண்டித்து மார்பிலணிந்த கவசத்தையும்பொடியாக்கிவிட்டது அதுகண்டு கலாசித்தன் பூமியில்குதித்தோடிவருகிறகாலையில் வீரசேனமகாராசன் பத்துதிவ்வியாஸ்திரம்விட்டு வாளாயுதத்தைத்தூளாக்கவே கலாசித்தனானவன் மூன்னுக்குவைத்தகாலை பின்னுக்குவாங்காமல் ஓடிவருங்காலத்தில் வீரசேனன்கண்டு ஒரு அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகம்பண்ணினான். அந்தப்பாணம்தகத்தகாயமாய் எறிந்துகொண்டு மகாவுக்கிரத்துடன் வருவதை கலாசித்தன் கண்டுவருகிற அக்கினியாஸ்திரத்தைப்பிடித்துமுறுக்கித் தண்ணீர்பிக்கிழிந்து வீரசேனன் மார்பைப்பார்த்து விட்டெறிந்தான் அதுகண்டு வீரசேனன் ஒருபாணத்தைவிட்டறுத்தெறிந்து ஒருசத்தியையெடுத்து மந்திராபூதிகள் செய்யும்போது காலசித்தன்பார்த்து சிவ்வென்றுபாய்ந்து வீரசேனன்கையிலிருக்கிற சத்தியைப்பிடுங்கி மளுக்கென்றொடித்தெறிந்துமார்பைப்பார்த்து ஓரறைகொடுத்தான்.

அந்த அறையை அவன்தப்பித்துக்கொண்டு ரதத்திலிருந்தபடியே கலாசித்தன் மார்பைப்பார்த்து ஒரு உதைவிட்டான் அவ்வுதையை அவன்சட்டைபண்ணாமல் தேரிலிருந்துவீரசேனனை எட்டிக் கையைப்பிடித்துக் கரகரவென்று சுழட்டி ஆகாயமார்க்கம் விட்டெறியவே வீரசேனன் மேகமண்டலந்தாண்டி சூரியமண்டலம்போய் சூரியனுடைய சுடரிற்காய்ந்து பூமியில்விழுந்து இரத்தங்களைக்கக்கிக்கொண்டு சாவுக்குச் சரியான மூர்ச்சையடைந்தான். அதுகளைப்பார்த்த காலசித்தனானவன் சந்தோஷமாகி வெற்றிச்சங்கெடுத்தூதவே இராட்சதாளும் இராசாக்களும் சத்துருக்கராசனும் வியப்படைந்தார்கள் சூரியனும் மேற்குத்திசையில் மறைந்தான்.

## நாலாம்நாள் யுத்தம்.

இப்பால் வீரசேனமகாராஜன் மூர்ச்சையாய்க்கிடப்பதை யவன் பதினாயிரங் குமாரர்களுங்கண்டு ரதத்தைநடத்திக் காலசித்தமகாராசனை வளைத்துக்கொண்டு பாணங்களைவிட்டடிக்கிறபோது காலசித்தனானவன் வச்சிரகோப தெண்டாயுதத்தையெடுத்து தன்மேல்வருகிற அஸ்திரங்களையெல்லாம் அடித்து நொரிக்கிக்கொண்டு சற்றுநேரம் அவர்களுடனேபோராடி வச்சிரகோப தெண்டாயுதத்தைச் சுழட்டி இரதத்தைப் பார்த்து ஓரடிவிட்டான் அவ்வடியினாலே அச்சுவேறு ஆணிவேறு கும்பகலசம்வேறு குத்துக்கால்வேறு கொடுங்கைவேறு சட்டம்வேறு பலகைவேறு துஜம்வேறு கொடைவேறு கொடிவேறு குதிரைவேறு சாரதிகளுடனே பதினாயிரங்குமாரர்களும்மடிந்தார்கள். உடனே உதிரவெள்ளம் ஆறுபோல் ஓடத்தலைப்பட்டது அக்காலையில் பன்னீராயிரம் மந்திரிமார்கள் இராசாக்களுடனே யுத்தம்பண்ணக்கண்டு பக்கமுஞ்சுற்றி வளைத்து நான்கு வாய்வாஸ்திரம் அக்கினியாஸ்திரம் வருணாஸ்திரம் மேகாஸ்திரம் காளியாஸ்திரம் அர்த்தசந்திராஸ்திரமென்றுசொல்லப்பட்ட அஸ்திரங்களை ஒவ்வொருவன்மீதிற் கணக்குமிதமில்லாமல் மாரிசொரிவதுபோலப் பிரயோகித்து காலசித்தமகாராசனைக் கைகாலாடவொட்டாமலும் ரதத்தை நடத்தவொட்டாமலும் அடிக்கிறபோது காலசித்த மகாராசனானவன் தலையையசைத்து குஞ்சிரிப்புகொண்டு வில்லையெடுத்துநிறுத்தி அனேக அஸ்திரங்களைவிடுத்து அவர்கள்பாணங்களை யறுத்துத்தள்ளி நபரொன்றுக்கு ஐந்துபாணத்தையெய்தான். அந்தபாணங்கள் இரதத்திற்கிரண்டும் குதிரைக்கொன்றும் மந்திரிக்கொன்றும் சாரதிக்கொன்றும் இப்படி பன்னீராயிரம் மந்திரிகளை யஸ்திரங்களைவிட்டு எமலோகத்திற்குப் போகும்படியான வழிகாட்டினான். பந்நீராயிரம் ரதத்திற்கட்டிய குதிரைகளுமிறந்து உதிரவெள்ளமானதுகாறுபோலோடவே காலசித்தமகாராசன் வெற்றிச்சங்கெடுத்து பம்பம்மென்றூதவே சத்துருக்கரும் இராட்சதக்கூட்டங்களும் மகா சாமார்த்திய வீரனென்று மெச்சிப் புகழ்ந்தார்கள்.

## வீரவிக்கிரம பாண்டியனுக்கும் மட்சயந்த மகாராசனுக்கும் யுத்தம்.

பின்னுங்காலசித்தமகாராசனானவன் பிணமயமாய்வீழ்ந்துகிடக்குஞ்சேனைகளின்மீது ரதத்தைவிட்டுக்கொண்டு யானைசேனைபரிவாரங்களிற்புகுந்துவாசாமகோசரமாகிபாணங்களைவிட்டுக்கொல்லயானை தேர்பரிசேனைகளும் முன்னிட்டவாக்கிலே நின்று யுத்தம்பண்ணுகிறபோது வீரசேனமகாராசன்மூர்ச்சைதெளிந்தெழுந்து சக்ரயூகத்தணியில் நுழைந்து இரண்டாமணியில்காலசித்தனாலே இறந்தானென்றும் மட்சயந்தமகாராசன்கேட்டுசிந்தாக்கிரந்தனாய் விசாரப்பட்டு சற்றுநேரம் பொறுத்து மனதை தைரியப்படுத்திக்கொண்டு வில்லைவளைத்துப்பாணங்களைவிட்டு இராசமன்னர்களையும் இராட்சதர்களையுங் கொல்லுகிறபோது வீரவிக்கிரமபாண்டியன்கண்டு காலாக்கினிருத்திரனைப்போல் எரிந்துவிழுந்து இரதத்தைநடத்தி உக்கிராகாரனாய்வில்லை நிறுத்திப்பாணங்களைவிட்டு மட்சயந்தமகாராசன் அஸ்திரசஸ்திரங்களையறுத்து நல்லகூர்மையோடுங்கூடியிரா நின்றபத்துநாராசமெடுத்து வில்லிற்றொடுத்துவிட்டான். அதுகண்டுமட்சயந்தமகாராசன் பதினைந்துநாராசபாணத்தையெய்யவே அந்தநாராசங்கள்வீரவிக்கிரமபாண்டியன்விட்டபத்துநாராசங்களைபிரயோகம்பண்ண மகூஷயந்தன் கண்டு ஐம்பதுதிவ்வியாஸ்திரங்களை எடுத்துவிட்டான் அப்பாணமானதுவருகிறதிவ்வியாஸ்திரங்களையெல்லாம்பொடியாக்கிவிட்டது. அதன்பின்புமட்சயந்தமகாராசன்வேலாயுதத்தையெடுத்துமந்திராபூதிகள்கொடுத்துவிட்டான் அந்தவேலாயுதமானது அண்டபிண்டசராசரங்களெல்லாம் நடுங்கத்தக்கதாக திருதிருவென் றெறிந்துக்கொண்டுவருகிறபோதுஉக்கிரசேனன் அனேகதிவ்யாஸ்திரங்களைவிடவும் அதுகளை எல்லாம்வேலாயுதமானதுதடுத்து கொண்டுவந்து வீரவிக்கிரமபாண்டியனுடைய மார்பிலேபட்டுமுதுகிலுருவிப்போய்விட்டது. அதினாலே வீரவிக்கிரமபாண்டியன் அடியற்றமரம்போலவிழுந்து உயிரைவிட்டான்.

வீரவிக்கிரமபாண்டியன்விழவே மட்சயந்தமகாராசன் பின்னும்வாடாமல் இரதத்தைநடத்தி வெற்றிசங்கூபுரிந்துவில்லைநிறுத்தி அனேகமான திவ்வியாஸ்திரங்களையெடுத்து சேனைகளின்பேரிற்பிரயோகம்பண்ணுகையில் அதுநாகசர்ப்பம்

போற்சிறிக்கொண்டு ராட்சதக்கூட்டங்களிலும்இராசமன்னர் கூட்டங்களிலும்பாய்ந்துவிழுந்து கொல்லும்போது ராட்சதர்களும் இராசர்களும் மலைவேறு சிலைவேறு அடிவேறுமுடிவேறு எலும்புகள் வேருய்விழுவதைக்கண்டு மனந்தாளாமல் மாளவதேசாதிபதிகளானயாவரும் ரதத்தைவிட்டுக்கொண்டு கிழக்கு தெற்கு மேற்கு வடக்கு இந்தநான்குபக்கமும் நால்வரும்நின்று கோடி மகாகோடி சங்கம் மகாசங்கம் அற்புதம்மகா அற்புதம் பத்மம்மகாபத்மம் கிருவம் மகாகிருவம்அக்ரோணிமகா அக்ரோணிசஞ்சலம்மகாசஞ்சலம்வெள்ளம் மகாவெள்ளம்சமுத்திரம்மகாசமுத்திரமென்றுசொல்லும்படியாய்மிதமில்லாதபாணங்களைவிடுகிறபோது மட்சயந்தமகாராசனவர்கண்டுநான்குதிக்கிலும் பாணுஸ்திரங்களைவிட்டு அதுகளைசங்கரித்துப்பின்பு பேருக்கிரண்டு பாணம்விட்டு நால்வர்மார்பிலணிந்தகவசங்களையறுத்துப்போட்டார். அப்போது அந்த நால்வருங் கடுங்கோபங்கொண்டு நூறுதிவ்வியாஸ்திரங்களை மட்சயந்தமகாராசன்மீதிலெய்யவே அவ்வரசன் அதிகசினங்கொண்டு மனங்கொதித்து எதிர்பாய்ந்து நூறுதிவ்யாஸ்திரமெடுத்துநான்கு திக்கிலிருந்துவரப்பட்ட அஸ்திரங்களையெல்லாம் அறுத்தெறிந்து இருபதுபாணங்களைவிட்டு ரதம்சாரதிகுதிரை துவசத்தையும் அறவெட்டினன். அதுகண்டுநான்குராசரும் இரதத்தைவிட்டு பூமியிற்குதித்துகத்தி கேடயம், கண்டாயுத மெடுத்துச் சுழட்டிக்கொண்டு ஓடிவருகிறபோது மட்சயந்தமகாராசன் அந்தநால்வருக்கும் நான்கு அர்த்தசந்திரபாணம்விட்டு சிரசைக்கண்டிக்கவே அவர்களும் இராமாவென்றுமுறையிட்டு தரையில்மாண்டார்கள். அப்போதுமட்சயந்தமகாராசன் வெற்றிச்சங்கையெடுத்துபம்பமென்றூதிச் சேனைகளுடன்பாசறைபோய்ச்சேர்ந்தான் அந்தப்படிசத்துருக்கமகாராசனும் தன்சேனைகளுடன் பாசறையையடைந்தார்.

## ஐந்தாம்நாள்யுத்தம்.

மறுநாள்சத்துருக்கமகாராசன் உயுத்தகோலங்கொண்டுரணபூமியையடுத்துப் பல்லைநெறநெறவென்றுகடித்து இரதத்தை நடத்தி வில்லைக்குணத்தொனிபண்ணினன். அந்த ஓசையைக்காலசித்தன் கேட்டு ஏதடாசங்கத்தொனிசத்தமும் விற்குணத்தொனிசத்தமுங் கேழ்க்கின்றதுசக்கிராயுதத்தொனிவந்துபோலுங்காணப்படுகின்றதுஇராசாக்கள்கோஷ்டமும்இராட்சதாள்கோஷ்டமுங்கேழ்க்கின்றது நாம்சலுதியாய்ப் போகவேணுமென்றுஇரதத்தைத்திருப்பிக்கொண்டுதென்மேற்குமூ

கமாய்நின்றுஉயுத்தம்பண்ணச்சித்தமாயிருக்குஞ்சத்துருக்கம காராசனைவணங்கி காலசித்தனுனவன் சொல்லுகிறுன்.

ஐயா சத்துருக்கமகாராசனேகேளும், நீரந்த ராஜனை ஒருபொருளாயெண்ணி யுத்தம்பண்ண முயலுகின்றீர் தேவரீர்யுத்தத்தை நிறுத்தி அடியேனுக்குச்செலவுகொடுத்தால் இத்தட்சணம் அந்தமட்சயந்தனை காலனூருக்கனுப்பி வைக்கிறேனென்று சபதங்கூறிநிற்கவே சத்துருக்கமகாராசனுனவர் சொல்லுகிறுர் வாரும்காலசித்தனே நீ மகாசாமர்த்தியனென்பதற்கு சந்தேகமில்லை இந்தராசனை ஒருபொருட்டாயெண்ணிஉம்மையழைத்து யுத்தத்துக்கனுப்புகிறதோ அதுநன்றல்ல வீணுக இருபத்தைந்துலட்சம் சேனுதிபதிகளும்படைத்தலைவனுக சுவேதனும் யானைசேனைகுதிரைகள் வெகுவாக மாண்டும் நீ ஒருவனிருக்கிருய் சகலரும்மடிந்தார்கள் நம்முடைய பாளையங்களில் மகாமாயன் சலவசந்தன் சூரசேனன் உக்கிரசேனன் நீலாட்சதன் வீரவிக்கிரமபாண்டியமகாராசன் கலிங்கராசனென்று சொல்லப்பட்ட துரைகளெல்லாமிறந்துபோனுர்கள் மற்றதண்டுதளம் சேனுசமுத்திரங்கூட மாண்டுபோயின மேலுமிந்த இராசனுனவன் நம்மையென்ன செய்தான் இப்பவும் நம்முடைய அஸ்வத்தைக் கொண்டுவந்துவிட்டு நம்மை சரணம் அடைந்தானேயானுல் நாமவனை ரட்சித்துக்கொள்ளலாம் ஆகையால் நீபோய் அந்தராசனைசமாதானப்படுத்தி அழைத்துக் கொண்டுவாவென்று சத்துருக்கமகாராசர் சொல்லக் காலசித்தனுஞ் சம்மதித்து மட்சயந்தனிடஞ்சென்று ஓ மகாராஜனேதசரத மகாராஜனுடையவயிற்றில் ஸ்ரீராமர் மூன்றுதம்பிமாருடன்கூடி அவதரித்துத் தாடகையைச் சங்கரித்து கோசிகர்யாகத்தைக்காத்து அகலிகையின் சாபந்தீர்த்து வளைக்கப்படாத வில்லையொடித்து சீதாலட்சுமியைப் பாணிக்கிறகணம் புரிந்து பரசுராமனைப் பங்கப்படுத்தி அயோத்தியில்வந்து தாயார்சொற்படி பதினுன்குவருஷம் வனவாசஞ்செய்து சீதையம்மனையு மிளையபெருமாளாகிய இலட்சுமணரையும் கூட்டிக்கொண்டு தண்டகாரணியம் வரும்போது ரிஷிகளும் கும்பகர்ணன் முதலானவர்கள் உபத்திரம்பொறுக்க முடியவில்லையென்று அபயமிட ராமபத்திரரும் ரிஷிகளெல்லாருக்கும் இராவணசம்மார முடிப்பிக்கிறோமென்று அபயஸ்தங்கொடுத்து அகமுகியைக் கொன்றுவிராதனுக்கு மோட்சங்கொடுத்து சடாயுவைக்கண்டு பஞ்சவடி தீ

ரத்தில்வந்து சூர்ப்பநகையைப்பங்கப்படுத்தி கரதூஷணுளை க்கொன்று சீதையம்மனையிழந்து மாரீசனைக்கொன்று சடாயு வுக்கு மோட்சங்கொடுத்து அனுமானைக்கண்டு சுக்ரீவனைச் சி நேகஞ்செய்து, மும்மூர்த்திகளாலுஞ் செயிக்கப்படாத சுத்த வீரனுகிய வாலியைக்கொன்று சுக்ரீவனுக்குப் பட்டங்கட்டி எழுபத்திரண்டு வெள்ளம் வானரரளைத் தண்டுகூட்டி சீதை யம்ம னிருக்குமிடந்தெரிந்துதடங்கடலடைத்து இலங்காபுரி பட்டணம்புகுந்து இராவணன் கும்பகர்ணன் இத்திரசித்து அதிகாயன்முதல் இரண்டாயிரம்வெள்ளம் ராட்சதாளையுங் கொன்றுவிபீஷணருக்குப் பட்டங்கட்டி சீதையம்மனைச்சிறை மீட்டு அயோத்திவந்து பட்டாபிஷேகமாய்பட்டம் ஆண்டுக் கொண்டிருக்கிற நாளையில் இராவணனுக்குஉபபலமாம்வந்த சதகண்டராவணனையுஞ் சகஸ்திரகண்டராவணனையும் பதின் மூவாயிரம்வெள்ளம் ராட்சதாளையுங் கொன்று மகாமாயன் சலவசந்தனென்கிற இருவருக்கும் பட்டங்கட்டி அயோத்தி யாபுரி பட்டணம்வந்து சேர்ந்து அஸ்வமேதயாகம் பண்ண வேண்டி குதிரையைவிட்டு அந்தக்குதிரையின்பின் ஐம்பது வெள்ளம் இராட்சதாளையும் அறுபதினுயிரம் அக்ரோணிசே னைகளையும் மகாமாயன் சலவசந்தன்முதல் ஐம்பத்தாறு தே சத்து ராசாக்களையுங் கூட்டி இவர்களுக்கெல்லா மதிபதியா கிய ஸ்ரீராமருடைய தம்பியாகிய சத்துருக்கமகாராஜனை ராஜா வாக வனுப்பி என்னையுஞ்சேனுசைனியங்களுக்கெல்லாஞ்சே னுதிபதியாக அனுப்பிவைத்தார்.

அவர்விட்டகுதிரையை உமதுகுமாரனுன வீரசேனமகா ராஜாவானவர்பிடித்துக்கட்டி குதிரையின்பின் காவலாகவந்த நீலாட்சதனையும் பதினுயிரம் இராட்சதாளையுங் கொன்று சகலரையும் பறிகொடுத்து தானுமிறந்தார், இப்போது ஒண் டியாய் நீர்யுத்தம்பண்ணுகிறீர். அதுதருமமல்லவென்று ச த்துருக்க மகாராஜர் என்னையழைத்து உமக்குப்பிரியவசனஞ் சொல்லி சமாதானப்படுத்தி அழைத்துக்கொண்டுவரச்சொன் னூர். நீர் மனஞ்சஞ்சலமில்லாமல் வருவீரேயாகில் இறந்தவ ர்களெல்லாரையு மெழுப்பித்தருவார் நீருஞ் சத்துருக்கமகா ராஜனை வணங்கிப் பிழைக்கிறதே காரியமென்ருன் காலசித்த னுனவன்.

---

## மட்சயந்தமகாராஜன் சமாதானப்பட்டு சத்துருக்கமகாராஜனிடம்வருதல்.

அதுகேட்டு மட்சயந்தமகாராஜன் சொல்லுகிறான்வாரு ங்காலசித்தனே இராஜர்களாய்ப் பூமியிற்பிறந்து யுத்தம் நே ர்ந்தபோது இரணக்களத்திற் பிள்ளையிறந்தானென்றும் விச னப்படலாமோ எத்தனைகால மாயுசை வைத்திருந்தபோதிலு ம் ஒரு நாளைக்கிறப்பதே நிச்சயம் உரலுக்குட்புகுந்துகொண் டு உலக்கைக்குப் பயந்தாற்றீருமோ முன்வைத்தகாலைப் பின் வைத்தால் இராஜ நீதியல்லவேஇகபரத்திலும் அபகீர்த்தியல் லவோ அப்படி ஒருவரைவணங்கிப் பிழைப்பதைப் பார்க்கி லும் யுத்தகளத்திலிறந்தால் கீர்த்தியுண்டாகுமென்று மட்ச யந்தமகாராசன்கூற காலசித்தனவன் பின்னுஞ் சொல்லு கிறான், ஓ மட்சயந்தமகாராசனே கேளும்சாகாமல் ஆர்தானி ருக்கிறார்கள் பராபரவஸ்து ஒருவர்தவிர மற்றவர்களெல்லா மிறந்து பிறப்பார்களல்லாமல் இந்தபூமியில் சாஸ்வித கால மாய்வாழப்போகிறவர்களார் அப்படிப்பட்ட சூரபத்மாசுரன் இரண்டாயிரஞ் சதுர்யுக மிராச்சியபரிபாலனம் பண்ணின பின் சிவசுப்ரமணியருடைய வேலாயுதத்தினாலே அவனுமிற ந்தான் சகலவரமும்பெற்ற இராவணேஸ்வரன்கும்பகர்ணன் முதலானவர்களும் ஸ்ரீராமபாணத்தாலிறந்தார்கள் நீரிப்போ ஸ்ரீராமமூர்த்தியின்தம்பியாகிய சத்துருக்கமகாராசனைச் சேர் ந்து வாழ்கிறதே நல்லகாரியமென்றான். அதற்கு மட்சயந்த மகாராசனுஞ் சம்மதித்து ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீராமனாகப் பிறந்து அஸ்வமேதயாகஞ் செய்யும்படி விட்ட குதிரையை உமதுகுமாரன் பிடித்துக்கட்டினதால் இவ்வளவு துன்பம் வ ந்ததுவுமின்றி யாவருமிறந்தார்கள் ஆகையால்நாம்சத்துரு க்கரைவணங்கிச் சமாதானப்பட்டோமேயாகில் சேனைகள்யா வரையு மெழுப்பிக்கொள்ளலாம். ஸ்ரீமந்நாராயணராய் விள ங்காநின்ற பரப்பிர்மமே ஸ்ரீராமனாகவந்தவதரித்தருளியசுவா மியையுங் கண்ணாற்கண்டு சேவித்து பாவத்தை யொழித்து மோட்சத்திற் கேதுவானவழிதேடி சாயுச்சியபதவியையடை யலாமென்று நினைத்து காலசித்தனைக்கூட்டிக்கொண்டு இரத த்தைவிட்டிழிந்து இருவருஞ் சத்துருக்கமகாராசனுக் கெதி ரில்வருகிறபோது சத்துருக்கமகாராசன்கண்டு சந்தோஷத் துடனே இரதத்தைவிட்டிறங்கித்தானுமெதிர்சென்றுஒருவர்

க்கொருவர் தழுவிவினவிக்கொண்டு சத்துருக்கமகாராஜன் சக்ரயூகத்தணிக்குள்ளே நின்றுக்கொண்டு மட்சயந்தமகாரா சனைப்பார்த்து சத்துருக்கர் விசனப்பட்டு வீணிற் சேனைகள் மடிந்துபோயிற்று இதற்கென்னசெய்வோமென்று விசனப்ப டுகையில் மட்சயந்தமகாராசன்சத்துருக்கரைப்பார்த்துச்சொ ல்லுகிறுன் கேளுஞ்சத்துருக்கமகாராசரே இப்போது என் குமாரனிறந்ததற்கும் சேனைகள்மடிந்ததற்கும் நான் விசனப் படவில்லை ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீராமமூர்த்தியாக அவதரித் திருக்க அவரைப்பணிந்துதாழ யென்னபாக்கியம்பெற்றுேம வரைப்பணிந்தமாத்திரத்திலே எங்கள் இருபத்தொருதலைமு றைமையும் முக்தியாகிய மோட்சம்பெறுவார்கள் உம்மா லெ ங்கள் சூரியவம்சமீடேறிற்று நாங்கள்செய்தவிரதமும் புண் ணியமுமின்று பலித்தது அப்படிப்பட்டமகாபுருஷன்விட்ட குதிரையென்று அடியேன்களுக்குத் தெரியாமல் குதிரையை ப்பிடித்துக்கட்டி யுத்தஞ்செய்தபிழையைப் பொருத்தருளவே ண்டு மென்று மக்ஷயந்த மகாராசா வேண்டிக் கொள்ள வே சத்துருக்கமகாராசன் சந்தோஷமுற்றுச் சொல் லுகிறுர் ஓ மட்சயந்த மகாராசரே அரசர்களாகப் பிறந்த வர்களுக்குஇராஜநீதிமுறைமை தவராமலும் யுத்தம்பண்ணு கிறபோதுபுறமுதுகுகாட்டிஓடாமலும் துஷ்டநிக்கிரக சிஷ் டபரிபாலனந்தவருமல் பண்ணவும் அபயமெனவந்து வண ங்கினவரைகார்க்கவு மிவைகளல்லவோ இராசநீதிமுறைமை இதைவிட நமக்கு வேறென்றுமில்லை அரியரப் பிரமாதிகள் வந்தெதிர்த்தாலும் போராடிக் கீர்த்திபெறவே ணுமேயல்லா மலிதனுல் குற்றமொன்றுமில்லை இறந்தசேனைகளெழுந்திருக் கவே ணுமே இதற்குயோசனை எப்படிசொல்லுமென்று கேட் கமக்ஷயந்தமகாராசன் சந்தோஷமாய்ச் சத்துருக்கமகாராச னைப்பார்த்துச் சொல்லுகிறுர். கேளுஞ் சத்துருக்கமகாராச னே! எங்களுக்குப்பிரசன்னமாயிருக்கப்பட்டாணபத்திரகாளி தேவிக்குபூசைசெய்துநம்முடைய யுத்தகளத்திலிறந்தவர்களை ழுப்பிக்கொண்டுவருகிறேன் நீர் சந்தேகப் படவேண்டா மென்றுசொல்லி விடைபெற்றுக்கொண்டு காளியம்மனுலயம் வந்துஸ்நானஞ்செய்து ஜெபதபங்களை முடித்துக்கொடுண் ந்சநிதியுட்புகுந்து தோத்திரஞ்செய்து அம்மனைபிரத்தியக்ஷ மாய் மக்ஷயந்தராசன் கண்டு ஆனந்தங்கொண்டு வணங்கி தாயே எங்களிருதிரப் படையிலும் யுத்தத்தில் மாண்டவர்

களை எழுப்பித் தரவேண்டுமென்று தோத்திரம்புரிய காளிகா தேவியானவள் ஓமட்சயந்தமகாராசனே பயப்படாதே உன் மனதின்படி இதோ நான்போய் எழுப்பி வருகிறேனென்று திருவாக்களித்து ரணக்களம்வந்து இருதிரப் படைகளிலு மிறந்தசேனைகள்பேரிற்பஞ்சாட்சரந் தூவிட அப்பஞ்சாட்சர ம்பட்டமாத்திரத்தில் ஆனைசேனைபரியாவு முயிர்பெற்றெழுந் தார்கள் வீரசேனமகாராசனும் நித்திரைசெய் தெழுந்தவன் போல் எழுந்தான். மகாமாயன் சலவசந்தன் சூரசேனன் உக் கிரசேனன் சுவேதன் நீலாட்சதன்முதல் யாவருமெழுந்தார் கள்.

அப்போது மக்ஷயந்தமகாராசனும் காளிகாதேவி சந்நி தியைவிட்டு ரணக்களம் வருகையில், தகப்பனைக்கண்டு வீர சேனனெழுந்து எதிர்சென்று நமஸ்கரிக்க, அப்படி நமஸ் கரித்த பிள்ளையையெடுத்துமார்போடணைத்துவாழ்த்திஅப்பா வீரசேனா! உன்னால் பராபரவஸ்துவாய் விளங்காநின்ற ஸ்ரீ ராமமூர்த்தியின் தம்பியாகிய சத்துருக்கமகாராசரது சேர்வை யைக்கண்டேன் நான்செய்த பாக்கியமும்பலித்தது சகலபாவ மும் விமோசனமாகிச் சாயுச்சியபதவியு முண்டாயிற்று அப் பாமகனேயென்றார் அதுகேட்டு புத்திரனாகிய வீரசேனனும் வியப்புற்று சத்துருக்கமகாராசனுடைய தண்டுதளங்களையும் வீரபராக்கிரம வேந்தர்களையு மிராட்சதக் கூட்டங்களையும்வா னரசேனைகளையு மதனுபுரிபட்டண மழைத்துக்கொண்டுபோ ய் அவர்களுக்குத் தக்கபடி விருந்துகள்முதலான வேடிக்கை கள்செய்துவைத்து ஐந்துநாள்வரைக்கும் பட்டணத்தில்வை த்திருந்து ஆறுநாள் சத்துருக்கமகாராசனுக்கு ஆடையா பரணமுங் குதிரைபதினாயிரம் ஸ்திரீகள் ஐந்தூறு ஆயிரம்பா ரந்தங்கம் இன்னும் யானை சேனை ரதங்களும் வெருமதியாகக் கொடுத்து அஸ்வமேதக்குதிரைக்கு பூசைகள்செய்து பட்ட ணத்தை மந்திரிவசம் ஒப்புவித்து மட்சயந்தமகாராசனுங்கு மாரனாகிய வீரசேனனும் தங்கள் தண்டுதளங்களுடனே சத் துருக்கருடைய தண்டில்வந்து சேர்ந்தார்கள்.

அப்போது சத்துருக்கமகாராஜன் சூரசேனன்உக்கிரசே னன்கபலசித்தன் சகலரும் ரதமேறி வாத்தியத்தொனிகள் மு ழங்க குதிரைவிட்டு அதன்பின்பு நீலாட்சதனையும் பதினையா யிரம் இராட்சதர்களையும் மற்றதுரைகளையும்தாங்கள் தங்களு டைய வாகனங்களின்மீதிலேறிக்கொண்டு கொடைகள்கொடி

கள்பிடிக்க ஆலவட்டம் தாலவட்டம்வீச, இராட்சதப்படை கள் வானரக்கூட்டங்களும்கெர்ச்சிக்க, சத்துருக்கமகாராசனு ம்மண்விண்ணதிரப்புறப்படுகையிலே அஸ்வமான துதன்னிச் சையாய் நடந்துபோகிறபோதுவாரணுபுரியென்ருெரு பட்ட ணமுண்டு அந்தப்பட்டணத்திற்கு சௌபுனுபுரமென்றுபேர் விளங்கும் அந்தப்பட்டணத்தையாளப்பட்ட சோமகாசமகா ராசனுடையகுமாரன் அரண்ணியமகாராசன் நூரக்குரோணி சேனையுடன் காட்டகத்தில் வேட்டைக்குப்போய் வேட்டைக ளுமாடி வாரணுபுரிபட்டணத்திற்கு வருகிறபோதுதன்பட்ட ணத்திற் கருகாமையில்வருகிற அஸ்வத்தைக்கண்டு சந்தோ ஷங்கொண்டு பத்துசேவகரைவிட்டு அஸ்வத்தைப்பிடித்துவ ரச்சொல்லி அனுப்ப அப்படியே அவர்களும்குதிரையைப்பி டித்துக் கொண்டுவந்து அரண்ணியமகாராசன் முன்னே வி ட்டார்கள் விடவே அந்த அஸ்வத்தினுடைய நெற்றியிலெழு திக்கட்டியிருக்கிறபட்டத்தைஅந்த இராசன்வாசித்துப்பார்த் துகுஞ்சிரிப்புக்கொண்டு தலையை யசைத்துச் சொல்லுகிருன் ஆ! ஆ! இந்த வையகத்தைப் போலுண்டோ; நான் சூர னென்று கர்வித்து இப்படி ஆண்மையைப்படைத்தவனையும் அவன்சேனைகளையும் அவன்சேனைகளின்சவுரியத்தையும்ஒரு சணநேரத்தில் வெளிப்படுத்துகிறேன் பாரென்று பல்லை நற நறவென்றுகடித்து நூறுசேவகரையழைத்துஇக்குதிரையின் நெற்றியிற்கட்டியிருக்கும்விருதாவொளியை என்தகப்பனுக்கு க்காட்டி தண்டைப் பயணப்படுத்தி யுத்தத்திற்கு வரச்சொல் லுங்கள் யென்ருன்.

அரண்யமகாராசன் அஸ்வத்தைப்பிடித்துக்கட்டல்.

---

விருத்தம்.

காமவாம்பரிமால்வரைத் தடங்கடந்து
சோமகாசன்வாழ் வாரணுபுரியதின்றேய
இராமனுனவன்மகஞ்செய நலமுடன்விடுத்த
நாமமறிந்தவன் புதல்வனும்நெருங்கிக்
குதிரையின்நெற்றி லுற்றதோர் பட்டத்தைக்குறித்து
மதியிலாதிவன் வீரனென்றனுப்பியவண்ணம்
விதியுமாலீசனுமேற்கினும் விடுவனோவென்றம்
பதியிற்புரவியைப்பதலமே செய்தனனரண்யன்.

அந்தப்படியே சேவகருங் குதிரையைப் பிடித்துக்கொ ண்டு பட்டணத்திற்குப்போகுங்காலையில் குதிரையின்பின்வரு

கிற ராட்சதாளுங் குதிரையைக்காணுமல் அரண்ணியமகாரா சனிடபாளையத்திற்புகுந்து தேடுகிறபோது அஸ்வத்தைப் பிடித்துக்கொண்டுபோகிற அரண்ணியமகாராசன் இராட்ச தர்களைக் கண்டு அடா இராட்சதப்பட்டிமக்களே ! எங்கேயிரு ந்து எவ்விடம் போகிறீர்கள். என் பாளையத்தினுள்ளேவந்த காரணமென்ன சொல்லுங்களென்றுகேட்க, இராட்சதாள் நகைத்து அயோத்தியாபுரி பட்டணத்தையாளப்பட்ட ஸ்ரீரா மமூர்த்திவிட்ட அஸ்வமேதக் குதிரையைக் காணுமல் தேடிக் கொண்டு வருகிறோம். இவ்விடம் வந்ததைக் காணீர்களோ வென, அரண்ணிய மகாராசன்கேட்டு, இராட்சதாளைப்பார் த்து அடா இராட்சதர்களே ! அந்த இராமன் அஸ்வமேத யாகம்பண்ணினுல் அவனைச்சார்ந்த ஊரை பிரதட்சணம் வர வேணுமேயல்லாமல் என்னுடையபட்டணத்திற்குள் அவன் குதிரை வரலாமோ அவன்தானே ரணசூரன் அவனைவிட பலவான்கள் எந்த பூமியிலுங் கிடையாதோ நான் பிடித்துக் கட்டின குதிரையை ஹரிஹரப்பிரம்மாதிகள் வந்தாலும் விடு விக்கக்கூடுமோ நீங்கள்போய் உங்களுக்கு இராசனுகிய சத்து ருக்கனுடன் வாரணுபுரி பட்டணத்தை யாளப்பட்ட சோம காச மகாராசாவின் மூத்தகுமாரன் அரண்ணியமகாராசன் நமது குதிரையைப்பிடித்துக் கட்டிப்போட்டு உன்னுல்சாமார் த்தியமுண்டானுல் தண்டுடன்வந்து யுத்தஞ்செய்து எங்கள ளைவரையுஞ்செயித்துக் குதிரையைவிடுவித்துக்கொள்ளச்சொ ல்லு சாமார்த்திய மில்லாவிட்டால் சத்துருக்களைவந்துவண ங்கச்சொல்லும், அப்படி வணங்காவிட்டால்தான் வந்தவழி யைப்பார்த்துக்கொண்டு தன் தண்டுடனேபோகச்சொல்லும், இந்தமூன்றுவிதத்தில் எதுநலமாயிருக்கிறதோ அப்படிசெய் யச்சொல்லுங்களென்றுன். அதுகேட்டு இராட்சதாள் மிகு ந்த கோபங்கொண்டு அரண்ணியமகாராசனைப் பார்த்துச் சொல்லுகிறுர்கள் ஓய், அரண்ணியமகாராசனே ! என்ன வசனஞ்சொன்னீர். அந்த சத்துருக்கமகாராசனைவந்துவண ங்கச்சொன்னீரே, அவரை ஆரென்று உமதுமனதில் நினைக் கிறீர். அவரையறியீரோ அறியமாட்டீரோ அண்டமாயிரத் தெட்டும் ஆளப்பட்ட தேவேந்திரனைப்பிடித்து விலங்கிட்டுச் சிறையில்வைத்து ஆயிரத்தெட்டண்டத்தையுமாண்ட இராவ ணேஸ்வரனையு மவன் சேனைகளையுங்கொன்று தேவேந்திரா திதேவர்கள் இக்கட்டை யொழித்து விபீஷணருக்குப் பட்

டங்கட்டி ராவணனுக்கு உதவியாய்வந்த சதகண்டராவணன் குமாரனாகிய சலவசந்தனுக்குப் பட்டங்கட்டி அயோத்தியா புரி பட்டணத்தில்வந்து அஸ்வமேதயாகம் இயற்றவேண்டி அஸ்வத்தை விட்டார்.

அவர் விடப்பட்ட குதிரையைத் திரிமூர்த்திகளும் பிடித்துக்கட்டார்கள். இந்தச் செய்தியை சத்துருக்காாசன் கேட்பாரேயானால், உம்மையும், உம்முடைய சேனையையும், உதவியாய் வரப்பட்ட இராசாக்களையும் வானுலகம்போய்ச் சேரப் பண்ணுவார். மேலும், இராட்சத சிரேஷ்டராகிய மகாமாயன், சலவசந்தன், சேனாதிபதியாகிய நீலாட்சதனும், இராட்சதாளும், இராசக்கூட்டங்களும், குதிரைப்பிடிபட்ட சேதி கேட்பார்களேயானால் உம்மையும், உமது சேனைகளையும், ஒருகைகுத்தினாற் குத்தி உதிரத்தைப் பானம்பண்ணுவார்கள்இந்தசமாச்சாரத்தை ஸ்ரீராமமூர்த்திகேட்பாரேயானால் அவ்விடத்தி லிருந்தபடியே இராமபாணத்தை யேவி எமலோகமனுப்புவார். நீரெங்கே ஒளித்தாலும், ராமபாணம் விடாது. இதெங்களுக்கு நன்றாய்த் தெரியவரும். அப்படிவராமல் அஸ்வத்தைவிட்டு சத்துருக்கமகாராசனை வணங்கிப் பிழைப்பதே நலமென்று சொன்னார்கள்.

அம்மொழியைக் கேட்ட அரண்ணியமகாராசன் நகைபுரிந்துஅடா இராட்சதர்களே! பனங்காட்டிலிருக்கின்றநரியானதுசலசலப்புக்கஞ்சுமோ? அஞ்சாதுபோல, அந்தஅயோத்தியாபுரிபட்டணத்தை யாளப்பட்ட தசரதமகாராசன் சாமார்த்தியங்கள் தாங்களறிந்திருப்போம். மேலும், அந்த தசரதன்பெற்ற பிள்ளைகளை நீங்களேமெச்சவேணும், அப்படிப்பட்டசாமார்த்தியமிருந்தால் என்னையும்; என் குமாரனையும், என் தகப்பனையுஞ் சேனைகளையுஞ்செயித்து, உங்களை அஸ்வத்தை விடுவித்துக்கொண்டுபோங்கள் பார்ப்போம் என்றான். அது கேட்டு இராட்சதர்கள் கெர்வங்கொண்டு கிட்டேநெருங்கி ஆயுத அஸ்திரங்களையெடுத்து வீசியெறியும்போது அரண்ணிய மகாராசன்கண்டு வில்லைவளைத்து அனேக திவ்வியாஸ்திரங்களைச் சந்தித்துவிட்டு ஆயுத அஸ்திரங்களை அறுத்துவிடவே இராட்சதர்கள் ஈட்டி எறியீட்டி சுரிகை பாங்கு வளைதடிசக்கரம் இருப்புலக்கை தெண்டாயுதமுதலாகிய ஆயுதங்களினால் ஐயாயிரம் இராட்சதாளும் ஒன்றாய்க்கூடி சரமாரியாய்விடுகிற

போது அரண்ணியராசனும் அனேக திவ்வியாஸ்திரங்களை விட்டு அறுத்தெரிந்து ஐயாயிரம் இராட்சதாளுக்கும் நபுரொன்றுக்கு நாலுபாணம்விட்டுக் கொல்லுகிறபோது அதில் ஒருவன்தப்பிப்பிழைத்தோடிப்போய் சேனாதிபதியான நீலாட்சதனைக் கண்டு நடந்த செய்தியைக் கூறவே அந்த நீலாட்சதன் மிகவும் வெகுண்டு பதினாயிரமிராட்சதாளைக் கூட்டிக்கொண்டு வருகிறபோது அரண்ணியமகாராசன் தன்னுடைய சேனைகளை யூகமிட்டு நிறுத்தித் தான்முன்னின்று வில்லைவளைத்து நாணிபிகிந்து மூன்று திவ்வியாஸ்திரத்தை எடுத்து வில்லிற்றொடுத்துவிட்டான். அதுகண்டு சேனைகளெல்லாம் பின்வாங்கி ஓடத்தலைப்பட்டார்கள். அப்போது அரண்ணியராசன் ஓடுகிறவர்களையெல்லாம் ஓடவொட்டாமல் நிறுத்தி ரதத்தை நடத்தி படைகளையெல்லாம் நெருங்கிவரவொட்டாமல்பாணங்களினாலே அடித்துக்கொல்லுகிறபோது இராட்சதாளும் பின்வாங்காமற் சேனைகள்பேரில் விழுந்து ஈட்டி குந்தம் பாசம் சூலம் கதை இருப்புலக்கை இதுகளால்குத்தியும் இடித்தும் அடித்தும்கடித்தும் அதம்பண்ணுகிறபோது சேனைகளெல்லாஞ் சின்னபின்னமாயிறந்துவிட்டது அதுகண்டு அரண்ணிய மகாராசன் கடுஞ்சினங்கொண்டு இராட்சதாள்பேரிலே முனைந்து திவ்வியாஸ்திரங்களை விட்டுக்கொல்லுகிறபோது நீலாட்சதன்கண்டு அதிககோபாக்கினியுடன் இரதத்தை நடத்தி வில்லைவளைத்து நூறுநாராச பாணங்களையெடுத்து விடவே அப்பாணங்களானது நாகசர்ப்பம்போற் சீறிக்கொண்டுவருகிறதை அரண்ணியமகாராசன்பார்த்து நூறு திவ்வியாஸ்திரமெடுத்து வில்லிற் சந்தித்துப் பிரயோகம் பண்ணினான். அந்த அஸ்திரங்களானது புறப்பட்டு நூறுநாராசபாணத்தையும் அறுத்துத்தள்ளவே நீலாட்சதனனவன் தட்சணம் ஒரு அக்கினியாஸ்திரமெடுத்து மந்திராபூதிகள் கொடுத்து அபிமந்திரித்துவிட்டான். அது அக்கினிப்பொறிகளை வாரியிறைத்துக்கொண்டுவடவாமுகாக்கினிபோல திகுதிகென்றெரிந்துக்கொண்டு புறப்பட்டது. அரண்ணியனும் ஒருவருணாஸ்திரத்தையெடுத்து மந்திரத்தையோதிவிடுத்தான். அந்த அஸ்திரம்சப்தமேகங்கள் கூடி இடி மின்னல் குமுறலுடனே குடங்கொண்டு சொரிவதுபோல் அக்கினியாஸ்திரத்தின் பேரிற்சொரிகிறபோது அக்கினியாஸ்திரத்தின் வலிகுலைந்துபூமியில்விழுந்து விட்டது.

அதனைப்பார்த்து நீலாட்சதன் கருவி மீசையை யுருவி ஆ! ஆ! இவனு என்னுடைய பாணத்தை யறுக்கிறவன் பார்ப்போமென்று ஐந்து சிங்கமுகபாணம் வில்லிற்சந்தித்துப் பிரயோகம்பண்ணினான் அந்த சிங்கமுகாஸ்திரமானது புறப்பட்டு அரண்ணிய மகாராசனுடைய கவசத்தை யறுத்து சரீரத்தையும் சல்லடைக் கண்களாக துளைத்து விட்டது. அதற்கு அரண்ணியமகாராசன்சற்றுமஞ்சாமல் அனேகதிவ்வியாஸ்திரங்களைவிட்டு நீலாட்சதன் சிரசைச் சல்லடைக்கண்களாகத்துளைத்து ஐந்துபாணம்விட்டு அவனேறிவந்த இரதங் குதிரைகளுடன் பொடிப்பொடியாகும்படிச் செய்தான். அதுகண்டு நீலாட்சதன் பற்களை நெறநெறவென்றுகடித்து பவுஞ்சியில்கையைவைத்துவாளையெடுத்து அரண்ணிய மகாராசனை வெட்டவேணுமென்று ஓடிவருகிறதைக்கண்டு அரண்ணியமகாராசன் ஒருஅர்த்தசந்திரபாணமெடுத்து வில்லினிடமாகச் சந்தித்துவிட்டுக்கையிற் பிடித்தவாளாயுதத்தைத்துண்டாக்கி விழச்செய்யவே நீலாட்சதனும் ஒருதெண்டாயுதத்தையெடுத்துச் சுழற்றி அரண்ணிய மகாராசன் ஏறிவந்த இரதத்தின்மேலடித்தான். அந்த அடியானதுபடவே இரதமானது சக்கைசக்கையாய்ப் பிளந்துவிட்டது. அதுபோகவே அரண்ணிய மகாராசனானவன் மறுதேரிலேறி வில்லையெடுக்கு முன்னமே நீலாட்சதன் அந்த தேரையும் உடைத்துவிட்டவனையும் கைகாலாட ஒட்டாமற்செய்தா னிப்படி பத்துரதங்கள் வரைக்கும் தூள்தூளாய்ப் போகவே நீலாட்சதனுக்கு வேறு ரதமில்லாதபடியினால் பாதசாரியாய்ப் புறப்பட்டான். அதுகண்டு அரண்ணிய மகாராசன் இதுதான் சமயம் இவனைக் கொல்லுகிறதற்கென்று பாணங்களைச் சரமாரிமாய் விடுகிறபோது நீலாட்சதன் அப்பாணங்களையெல்லாம் எட்டிப்பிடித்து ஒடித்தெறிந்து விட்டு இனியிருந்தால் உயிர்ச்சேதம் வருமென்றறிந்து உயிர் தப்பியிருந்த ராட்சதர்களைக் கூட்டிக்கொண்டு மாய்கையாய் ஆகாய மார்க்கத்திலெழும்பிச் சத்துருக்மகாராசனிடத்தில் வந்து புகுந்திருந்தான். அப்போது சூரியபகவானும் மேற்குத்திசையில் மறைந்தார். அதுகண்டு அரண்ணியமகாராசன் ஏதடா இராட்சதன்மோசம் பண்ணி ஓடிப்போய்விட்டான். இவ்வளவு நிர்வாகசாலியோ நம்மைச் செயிக்கப்போகிறவன் அன்றியும்

எதிர்நின்று யுத்தம்பண்ணமற் புறமுதுகுகொடுத்து ஓடிப் போகும்வீரர்களோ அஸ்வமேதயாகம் பண்ணப்போகிறவர் அதுவுமவலந்தான் மேலும் இருட்டுகாலமாயிற்று இனி யுத்தம் நடவாது நாளையத்தினம் பார்த்துக்கொள்ளலாமென்று ரதத்தை நடத்திக்கொண்டு வாரணபுரிக்குச் சேனைகளுடன் போகையில் சேவகருங் குதிரையைக்கொண்டுபோய் லாயத்திற்கட்டிவிட்டு சோமகாசமகாராசன் குமாரவர்க்கங்களுடனும் மந்திரிபிரதானி நால்வகைச்சேனையுடனும் ஆலோசனைசெய்துக்கொண்டிருக்கையில் அரண்ணியமகாராசன் கொலுமண்டபஞ்சென்று தன்தந்தையாகிய சோமகாசமகாராஜனுக்கு இத்தச்செய்திகளைச் சவிஸ்தாரமாகச் சொன்னன்.

சோமகாசமகாராசன் கோலுவிருந்து
மந்திராலோசனை செய்கிறது.

---

விருத்தம்.

துய்யவந்தனரமைச்சரு மமைச்சருஞ்சூழ
செய்யசோமனுந்திருந்தச் சிங்காதனத்திருந்து
வையமாய்திடராமனல் வருபெருஞ்சமர்க்குச்
செய்வதென்னென மந்திராலோசனைசெய்வான்.

இதுகளைக் கேட்ட சோமகாசமகாராஜன் சற்றுலோசித்துச் சொல்லுகிறன். ஓய் மந்திரிபிரதானிகளே! இராவண கும்பகர்ணுதிகள் அற்பசொற்பரல்ல அவர்களோ திரிலோகத்தையும் ஆண்டவர்கள் அவர்களைக்கொல்ல திரிமூர்த்திகளாலுமுடியாது அப்பேர்க்கொற்றவர்களைக் கொன்று ராட்சதாளை அடிமை படுத்திக்கொண்ட ஸ்ரீராமனுக்கு எவ்வளவுபலமிருக்கவேண்டும் அதையோசியாமல் அவர்விட்டகுதிரையைப் பிடித்துக்கட்டி யுத்தம் புரிந்து வெற்றியடைய நமக்குத்திரமுண்டோ? யுத்தத்திற்கு வருகிறவர்களோ நம்மைப்போன்ற ராசாக்களுமல்லாமல் ராட்சதக்கூட்டங்களும் மிச்சமாயிருக்கிறபடியால் நம்முடையசேனைகள் அவர்கள் முன்னின்றுயுத்தம்பண்ணமாட்டார்கள். அந்த ராட்சதர்களோ மாய்கையில் மிஞ்சினவர்கள் அந்த மாய்கையை யறிந்துசெயிக்கத்தக்கவர்கள் ஆரிருக்கிறர்கள். மேலும், அவர்களுடையபலத்திற்கு நம்முடையபல மணுவாக முடியுமாகையால் யுத்தம்பண்ணுகிற தொழிலைவிட்டுச் சமாதானமாவதொன்று அல்லது நம்

முடைய யானைதேர் பரிசேனைகளைக் கூட்டிக்கொண்டு கோட்டைக்கு வெளியிற்சென்று ஒருவர்க்கொருவர்போர்புரிந்து கீர்த்தியடைவதொன்று அதுவுமன்று நமதுபட்டணத்திற்குள்ளிருந்தபடியே கொஞ்சமாய்ச் சேனைகளைக்கூட்டிக்கொண்டு யுத்தம்பண்ணுவதொன்று இம்மூன்றில் எதுயுத்தமாக உங்களுக்குத்தோன்றுகிறதோ அதைச்சொல்லுங்களென்று கேட்கையில் தூதுவாசனென்னப்பட்ட மந்திரி கூறலுற்றான் ஐயா, சோமகாசமகாராசனே! கேளும் ஸ்ரீராமபிரான் விட்ட அஸ்வமேதக் குதிரையை உமதுமூத்தகுமாரனாகிய அரண்ணியமகரராசன் பிடித்துக்கட்டி ராட்சதாளுடன் யுத்தம்பண்ணி ராட்சதாளையுங்கொன்று குதிரையும் பிடித்துவந்தபின்பு சமாதானமென்றால்சண்டைசெய்யப்பயந்து சரணமடைந்தார்களென்று நம்மைப்போலிருக்கும் ராசாக்களும் கைகொட்டிகெக்கலிபுரிந்து நகைப்பார்கள்மேலும்புலிக்குப்பயந்த சிங்கம்போலும், எலிக்குப்பயந்தபூனைபோலும், யானைக்குப் பயந்த ஆண்சிங்கம்போலும், சேனைக்குப்பயந்த திறமற்றவனைப்போலும், நம்மையெல்லோரும் மதிப்பின்றி வசைசொல்லுவார்கள் அதுவாவீரம் அவ்வார்த்தையை விட்டுவிடும் அடியேன் பகருவதைக்கேளும் அண்ணலேதிரிமூர்த்திகளையுஞ்செயிக்கத்தகுந்த வீரதீரமும்சூரத்துவமுமுள்ள இளையகுமாரன் சுரதமகாராஜனிருக்கையிற் பயமென்ன செயமடைவோமேதவிர, அபஜெயமடையமாட்டோம்மேலும், இராட்சதாளைவெல்லவுங்கொல்லவும், எட்டுதிக்கிலும்நமதுபேர்சொல்லவும்தேவர்திறங்களுமுண்டு. இராவணாதிகளைக்கொன்றஇராமபிரானும்சுரதராசன்வில்லுக்குநிகராகார். அவர்களேவலியவந்துநம்மைவணங்குவார்கள். இதுவுமல்லாமல் முன்னால்உம்மைமிரட்டிக்கொண்டிருந்த பரசுராமன்சுரதராசனுடைய யுத்தத்திற்குமகிழ்ந்து அனேக திவ்வியாஸ்திரங்களுங் கொடுத்து ஆசீர்வதித்துப் போயிருக்கிறார் அப்படிக்கொத்த அஸ்திரங்களிருக்கையில், இப்போது பின்வாங்குவானேன் அதுவுமல்லாமல் உம்முடைய தவத்திற்கு மெய் மகிழ்ந்து சிவசுப்பிரமணியர் கொடுத்த வேலாயுத மிருக்கும்போது குறையென்ன அரண்ணிய மகாராசன் சுவேலமகாராச னிருவர்கள் பின்பல மிருக்கத் தாழ்வுண்டோ கையிலாகாத சில ராக்ஷதர்களைக் கொன்றோமென்று கெர்வத்தினாலே நம்மை யெல்லாம் பெண்களாக்கி அவனே ஆண்பிள்ளைசிங்கம் மற்றவர்களெல்லாம் வீரியமில்லாதவர்களென்று தன்பிரதாபசவுரி

யத்தையெழுதிக் குதிரைநெற்றியிற்கட்டி அதன்பின்சத்துருக் கனையும் இராட்சதாளையுங்கூட்டி அனுப்பினன். அப்படியனு ப்பின இராமனுடைய திரத்தையும் அந்தசத்துருக்கனுடைய திறத்தையும் பார்ப்போம். நாம்பட்டணத்தி லிருந்தபடியே கொஞ்சமாகச்சேனைகளையனுப்பி யுத்தஞ்செய்து செயிக்கவே ணுமேயல்லாமல் ஒருமிக்கக்கூட்டி போர்புரிந்தால் இராட்ச தாள் மிஞ்சிவரக்கண்டு நமதுசேனைகளுஞ் சின்னபின்னமா ய் நாலுமூலையும் ஓடுவார்கள். அப்போது நமக்குத் தொந்தர வாகும். ஆகையால் நாளையஉதயத்திற்கே யுத்தத்திற்குப் புறப் படவேணுமென்றான் தூறுவாசனென்னு மந்திரியானவன். அதுகேட்டு அச்சபையிலுள்ள சகலரு மனக்கலக்கந்தீர்ந்து சந்தோஷமானர்கள்.

அந்தவேளையில் சுவேலமகாராசன் தகப்பனுகிய சோம காசமகாராசனைப் பார்த்துச்சொல்லுகிறுன். கேளும்பிதாவே அடியேனுக்கு நாளையதினம் யுத்தஞ்செய்யச் செலவுகொடுத் திரேயானல் நான்சென்று சத்துருக்கனுடைய சேனைகளை மு றியஅடித்துச் சத்துருக்கனையும் செயம்பண்ணிவருகிறேனெ ன்று நமஸ்கரித்துகூறச் சோமகாசமகாராசன்கேட்டுஅப்பா சுவேலா நீசிறுபிள்ளையாயிற்றே, உன்னையெப்படி இராட்சதா ள்தண்டுக்குள்ளனுப்புகிறது. போகவேண்டாமென்றாலும் உ ன்மனதிற்குக்கோபமாயிருக்கும். அவர்களோ இராட்சதாள் மாயையில் மிகுந்தவர்கள் அவர்களைவெல்ல, உன்னால் வல்ல மையுண்டோ சொல்லென்றுகேட்க, பிதாவே என்னவசனஞ் சொன்னீர். க்ஷத்திரியராய்ப்பிறந்தவர்கள் இராசாக்கள் சண் டையென்றும், இராட்சதாள் சண்டையென்றும்,பார்ப்பார்க ளோ அதுகீர்த்தியா சிறுபிள்ளைகளே நாளை பெரியவர்கள் சிறுபிள்ளைகள் யுத்தத்திற்குப் பின்வாங்குகிறதும், பெரியோர் கள் முனைகிறதும், நாளையதினம் சத்துருக்கன் தண்டிலேதெ ரியவரும் எத்தனைகாலம் உயிரோடு பிழைத்திருந்தாலும் ஒரு நாளைக்கிறப்பதே நிச்சயம். இதற்கு சந்தேகப்படவேண்டாம் நாளைய உதயத்திலே யுத்தத்திற்குப் போகிறேனென்றான்.

அதுகேட்டு சோமகாசமகாராசனும் விசனந்தீர்ந்து சந் தோஷமடைந்து சேனாதிபதியான பவர்னனைப்பார்த்து ஓய், பவர்னா! நூறக்ரோணி சேனைகளும் இருநூறு லட்சமக்ரோ ணிரதங்களும் நூறுலட்சமக்ரோணி குதிரைகளும், இருநூ றுலட்சமக்ரோணி காலாள்களும், தயார்படுத்திப் பிரயாணஞ் செய்யென்றார். அப்படியே பவர்னனும் சென்று சேனைகளை வெளிப்படுத்தினன். அதெப்படியென்றால், கன்னமதங்கபோ லமதங் கரடமதமென்று சொல்லப்பட்ட மும்மதங்களும்பொ

ழியானின்ற யானைகள்மீதுங் குதிரைகள்மீதும் அம்பாரிகள் வைத்து இராசமன்னர்களும் வில்லம்புகள் ஏந்திக்கொண்டு மாவுத்தனை யெச்சரித்து ஆனைகள்மீதேறிப்புறப்பட்டார்கள். அப்போது முப்பத்திரண்டு மேளவாத்தியங்களும் தாம்தா மென்று முழங்கச் செய்தார்கள். அதுகேட்டு சோமகாசமகா ராசன் சகலருக்கும் விடைகொடுத்துத் தானும் குமாரவர்க்கங் களுடனே அரண்மனைக்குப்போயினான்.

இப்பால் நீலாட்சதனும் சிலராட்சதர்களும்இரணக்கள த்திற்பின்முதுகுகாட்டி ஓடி சேனாதிபதியான காலசித்தனுட னே நடந்த செய்திகளை சவிஸ்தாரமாகப் புகலக்கேட்டு காலசி த்தன் சத்துருக்கமகாராசன் அண்டையிற்போய் ஐயா சத்து ருக்கமகாராசனே ! நமது குதிரை வாரணாபுரி பட்டணத்தை யாளப்பட்ட சோமகாச மகாராசன்குமாரன் அரண்ணியமகா ராஜனானவன் பிடித்துக்கட்டி அதின்பின்போன இராட்சதா ளையுங்கொன்று நீலாட்சதனையும் பின்முதுகு காட்டியோட அடித்துத் துரத்திவிட்டானென்றும் கூறியதைக்கேட்ட சத் துருக்கமகாராஜன் சினந்து, மிகவுங் கடுகடுத்து, வாராய்கால சித்தனே ! என்கையூரல்தீர யுத்தம்பண்ணினபேரைக்காணே ன். விருதாவிலே நம்முடைய குதிரையைப்பிடித்துக்கட்டி மா ண்டுபோனார்கள் ஆனபடியால் நம்முடைய சேனைகளையெல் லாம் வாரணாபுரிபட்டணத்தின்பேரில் நடத்தென்றான்.

அதுகேட்டு காலசித்தனும், வாரணாபுரியின்தெற்குமேற் குமுகமாய் வொட்டாரவெளியில் பாளையமிறங்கி பவுஞ்சிட்டு நிறுத்தினான். அக்காலையில் சத்துருக்கரானவர் மட்சயந்தம காராசனைப்பார்த்து வாரும் மட்சயந்தமகாராசனே! நாம்வி ட்ட குதிரையை இந்தஇராஜகுமாரன் பிடித்துக்கட்டி சிறிது இராட்சதாளைக்கொன்றுபோட்டுபட்டணம்போனான் அவனை இப்போது வெளிப்படுத்திவைக்க என்னயோசனை சொல்லு மென்றுகேட்க, மட்சயந்தமகாராஜன் சொல்லுகிறான்.

வாருமையா, சத்துருக்கமகாராஜனே! இந்தப்பட்டணத் தையாளப்பட்ட சோமகாசமகாராஜனுக்கு அரண்ணியமகா ராஜனென்றும்,சுரதமகாராஜனென்றும்,சுவேலமகாராஜனெ ன்றுமூன்று குமாரர்க ளிருக்கிறார்கள் அவர்களிலொருவரைப் பார்க்கிலும் ஒருவர் சாமார்த்தியமுள்ள இராஜாக்கள் சத்திய வாசகர், அரிபக்த சிரேஷ்டர்கள், வரப்பிரசாதிகள், இவர்க ளிலே சுரதமகாராஜன் மகாபலவான் வரப்பிரசாதி சிவன்கை

வில்லைவாங்கி பரசுராமனேமெச்ச யுத்தஞ்செய்து கீர்த்திபெற்றவன் பராக்கிரமசாலியானவன் அவனுஞ் சண்டைக்கு வருவான். அவன்வில்லுக்கு நிகரானவில் இந்த தண்டிலில்லை, ஆகையால் அவர்களுடனே யுத்தம்பண்ணுமற் சமாதானமாய் குதிரையை விடுவித்துக்கொள்ளலாம், இல்லையென்றால் நமக்காக ஹரிஹரப்பிரமாதிகள் வந்தாலும் போர்புரிந்து செயிக்கமாட்டோமென்றான்.

அதுகேட்டு சத்துருக்கராஜன் கோபங்கொண்டு ஓ! மட்சயந்தமகாராஜனே ! இராசாக்களாய்ப் பிறந்தவர்கள் சாகப்பயந்து எல்லாருமிப்படிச் சொல்லலாமோ சிவன்கை வில்லானுலுமென்ன, விஷ்ணுவின் நாராயணாஸ்திரமானுலுமென்ன, என் கையில் ஸ்ரீராமபாணமிருக்க எந்த பாணங் கெலிக்கப் போகுதோ பார்ப்போமென்ற சத்துருக்கமகாராசனைப் பார்த்து காலசித்தன் சொல்லுகிறுன். கேளுமையா சத்துருக்கரே, இரணமுகத்தில் முதுகிட்டோடாம லிறந்தால் கீர்த்தியுண்டு. அதைவிட்டு இந்த ராஜனைஒருபொருளாகயெண்ணி சமாதானஞ்செய்து குதிரையை விடுவித்துக்கொள்ளுகிறதா நன்மை? நம்மை வணங்குமவரை நாமாவணங்குவது அப்படிச் செய்யாமல் யுத்தம்பண்ணிச் செயித்துக் குதிரையை விடுவித்துக் கொள்ளுகிறதா நன்மை? நம்மை வணங்குமவரை நாமா வணங்குவது அப்படிச் செய்யாமல் யுத்தம்பண்ணிச் செயித்துக் குதிரையை விடுவித்துக்கொள்ளுகிறதேகாரியமென்றான் அந்த சமயத்தில் வாரணாபுரி பட்டணத்திற் பயணபேரியறைவித்தார்கள்.

## இரண்டாம்நாள் யுத்தம்.

அந்தச் சத்தங் கேட்ட சத்துருக்க மகாராஜன் சேனாதிபதியான சூரசேனனையும், உக்கிரசேனனையும் பார்த்துச்சொல்லுகிறார். வாருஞ்சேனாதிபதிகளே வாரணாபுரி பட்டணத்தில் பயணபேரிசத்தமடிபடுது. நமதுசேனைகளையெல்லாம் பவுஞ்சிட்டுநிறுத்தி யுத்தத்திற்கு ஆரம்பஞ் செய்யுமென்று உத்திரவுசெய்தான். அப்படியே சேனாதிபதிகளும் ஆனைகளொரு பக்கம், இரதங்களொருபக்கம், குதிரைகளொருபக்கமாக நிறுத்தி, வீரசேனன்முதலான இராஜாக்கள் அந்தயிடங்களிலே முன்னாக நின்றுவில்லைவளைத்துநாணோசைபுரிந்தார்கள். அப்போது மகாமாயன், சலவசந்தன், படைத்தலைவர் சேனாதிபதி

களும் யுத்தசன்னுத்தராய் சேனைகளுக்கு முன்னின்று வில்லை யெடுத்து வளைத்து நாணிபிநிந்தார், சத்துருக்கமகாராசனும், மட்சயந்தமகாராசனும், நடுஅணியில் நின்றார்கள். அப்போது இரணபேரிகையைத் தாம்தாமென்று முழங்கிறார்கள். சூரியனும் உதயமாக ஐந்து நாழிகையிருக்கின்றது. அந்தச்சமயத்தில் தூதுவர்களோடி சுவேலைமகாராஜனைக் கண்டு சேவித்துச் சொல்லுகிறார்கள் ஐயா இராஜாதிராஜரே சுவேலைமகாராசனே கேளும், இராஜர்களுடையதண்டும், இராக்ஷதாளுடையதண்டும், நமது பட்டணத்துக்கருகாமையாய் வந்து இறங்கிவிட்டதென்றான். அதுகேட்டு சுவேலைமகாராசன் ஸ்நான செபதபங்களை முடித்துக்கொண்டு போஜனமருந்திகைகாலலம்பிக் கந்தகஸ்தூரி பரிமளாதிகளணிந்து கற்பூரதாம்பூலந்தரித்துத் தன்னுடைய தேவியினிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு கிரீடந்தரித்து கவசங்களுமணிந்து முதுகில் அம்புருப்பொதியுங்கட்டி கையிற் றனுசும் பிடித்துக்கொண்டு அரண்மனைவாசற்படியைவிட்டு ஆடல்பாடல்சங்கீதத்துடன் வருகிறபோது சாரதியானவன் இரதத்தைச் சிங்காரித்துக்கொண்டு வந்து நிறுத்தினான். அந்த இரதத்தின்பேரில் சுவேலை மகாராஜன் ஆயுதங்கள் முஸ்தீப்புகளாக படைகள்சூழ, ஆரோகணித்துக்கொண்டான் அப்போது பயணபேரியடித்தார்கள். அந்த ஓசையைக் கேட்டவுடனேதனக்கு நிகரான பலம் பெற்ற (சூரா) இராசகுமாரர்ரதாரூடராய் மந்திரிமார்களுடனும் புறப்பட்டார்கள். அப்போது சூரியனும் சுவேலைமகாராஜாவின் யுத்தம்பார்க்க வருபவரைப்போல உதயகிரி பர்வதத்தில் உதயமானார். தேவர்களும் ஆகாயவீதியில் வந்துநிறைந்தார்கள். அக்காலையில் யானைகள்முன்னும், இரதங்கள் பின்னுங் குதிரைகள் தன்பின்னும் அணியணியாகச்சேனைகளுடன் முப்பத்திரண்டுவாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கிப் பூமியதிர, அண்டத்திலுள்ள தேவர்கள் திடுக்கிட ஆரவாரத்துடன் கோட்டைவாசற்படி கடந்து சத்துருக்கமகாராசனுடைய தண்டுக்கெதிராய்ப் பாளையமிறங்கிப் பவுஞ்சிட்டு நிறுத்தி வில்லைவளைத்துப் பாணங்களைப் பூட்டி யெதிர்த்து யுத்தம்பண்ணுகையில், இரதங்களோடு ரதங்களுடுதாக்கவும்,குதிரைகளுடன் குதிரைகளைக்கவும், காலாள்களோடு காலாள்களெதிர்த்து கத்திகேடயம் ஈட்டி எறியீட்டி குந்தம்வளைதடிசக்கரம் வேலாயுதம் சூலம் கெதை வாள் முதலிய முப்பத்திரண்டு

ஆயுதங்களுமெடுத்துறிவ் றிவ்வென்றுஎறிந்துயுகாந்தகாலம் போல மூண்டுக்கொண்டது யுத்தமானது அப்போது இருதிறச்சேனைகளிலும் கால்வேறு கைவேறு உடல்வேறு முழங்கால்வேருகச் சேனைகள்மடிந்து விழுந்து உதிரவெள்ளமானது ஆறுபோல்ஓடத்தலைப்பட்டது. அதுகண்டு சுவேலமகாராசன் கோபதீப்தனய் எறிந்துவிழுந்து வில்லைவளைத்து குணத்தொனிபண்ணி பாணங்களை விட்டுக் கொல்லுகிறபோது சூரசேனன்கண்டு அதிக கோபத்துடனே இரதத்தை நடத்தி வில்லை வளைத்து பாணங்களைப்பூட்டி சுவேலமகாராஜன்பேரில் வந்தெதிர்த்தான். அதுகண்டு (சூடுா) இராசாக்களும் இரதங்களை நடத்திச் சேனைகள்பேரில் பாணங்களைவிட்டுக் கொல்லுகிறபோது உக்கிரசேனனுனவன் கண்டுரோஷத்துடன் இரதத்தை நடத்தி வில்லைவளைத்து ஆயிரத்தைந்நூறு இராசகுமாரர்களையும் வளைத்துக்கொண்டு யுத்தஞ்செய்தான். அதுகண்டு ஆயிரத்தைந்நூறு இராசகுமாரர்களும் இரதத்தைநடத்திச் சேனைகள்பேரில் கவிந்து பாணங்களைப் பூட்டிச் சேனைகளைக் கொல்லுகிறபோது வீரசேனன்கண்டு மனந்தாளமல் இரதத்தைநிறுத்தி ஆயிரமந்திரிகளையும் வளைத்துக்கொண்டு யுத்தஞ்செய்தான். அந்தச்சமயத்தில் சுவேலமகாராஜன் வில்லைவளைத்து பத்து நாராசபாணமெடுத்துவில்லிற் சந்தித்துசேனைகள்பேரிற்பிரயோகஞ்செய்தான். அந்தப் பத்துநாராசமும் நாகசற்பம்போற் சீறிக்கொண்டு வருகிறபோது சூரசேனனுனவன்கண்டு உக்கிராகாரனய்மகாகோபத்துடனே பதினைந்து நாராசமெடுத்து வில்லிற்சந்தித்துவிட்டு அறுத்தெரிந்தான். அதுகண்டுசுவேலராஜன் இருபது அர்த்தசந்திரபாணமெடுத்து வில்லிற் சந்தித்துவிட்டான். அந்த இருபது அர்த்தசந்திரபாணமும் வில்லில்விடுபட்டு தகத்தகாயமாய் நெருப்புப்பொறிபறக்க வருகிறபோது சூரசேனனும் இருபத்தைந்து அர்த்தசந்திரபாணம்விட்டு அறுத்தெறிந்து நான்குபாணம் விட்டுச் சாரதி குதிரைகளையுங் கொன்றுன்.

அதைப்பார்த்துச் சுவேலராஜனும் மறுதேரிலேறி வில்லையெடுத்து அதிகதீக்ஷணியமாயிருக்கப்பட்ட நான்குதிவ்வியாஸ்திரங்களை விட்டு வீரசேனனுடைய சாரதிகளை அதம்பண்ணிப்போட்டான். அதுபோகவே சூரசேனனுனவன் லகுவிலேகுதித்து தப்பித்துக்கொண்டுமறுதேரிலேறினன். அந்த இரதத்தையும் சாரதி குதிரைகளுடன் அதயபண்ணிவிட்

டான். அந்தரதம்போகவே சூரசேனனானவன் லகுகொண்டு பாய்ந்து மறுதேரிலேறினான். அதையுந் தவிடுபொடியாக்கி னான். இப்படி இருபத்தைந்துரதம்வரையில் தும்சம்பண்ண வே சூரசேனனுக்குக் கண்கள்சிவப்பேறி கடுங்கோபமீறிப் பத்து திவ்வியாஸ்திரமெடுத்துசுவேலைராஜன் மார்பிலணிந்த கவசத்தைப்பொடியாக்கினான். அந்தக்கவசம்போகவே சுவே லைராஜனானவன் சிங்கமுகாஸ்திரமேவி சூரசேனனுடையவில் லைக் கண்டித்து மார்பிற்றுக்கவே சூரசேனனானவன் ஆயாசத் தோடு ஸ்ரீராமாவென்று மூர்ச்சையானான். அதுகண்டு சுவே லைராஜன் வெற்றிச்சங்கையெடுத்தூதி வில்லைநாட்டி சேனைக ளின்மீது அஸ்திரங்களை விடுத்துக்கொல்லுகிறபோதுசேனை களானது சின்னபின்னமாய் விழுந்து உதிராறு ஓடத்தலைப் பட்டது. அதுகண்டு கொங்கணமகாராஜன் இரதத்தை நட த்தி வில்லைவளைத்து அபரிமிதமாய்பாணங்களைப்பூட்டி சுவே லராஜனைக் கைகாலாடவொட்டாமலும், பாணங்களைப் பூட்ட வொட்டாமலும், இரதத்தை நடத்தவொட்டாமலுஞ் சரங் களினால் அடிக்கிறபோது சுவேலைராஜன் சற்றுநேரம் ஆயா சமடைந்து உடனே வில்லையெடுத்து நிறுத்தி நூறுநாராசம் விட்டுக் கொங்கணமகாராஜனை வில்லைத் தொடவொட்டாம லும், அஸ்திரங்களை விடவொட்டாமலும் சாரதியை இரதத் தை நடத்தவொட்டாமலும், பிரமிக்கச்செய்து நாலுதிவ்வி யாஸ்திரம்விட்டு சாரதிகுதிரைகளை அதஞ்செய்து இரதத்தை யுஞ் சக்கைசக்கையாய்ப்பேர்த்தெரிந்தான். அதுகண்டுகொங் கணமகாராஜன் மறுதேரிலேறினான். அந்த இரதத்தையும் நாலுபாணம்விட்டுச் சாரதிகுதிரைகளையும் அதஞ்செய்யவே மீண்டும் வேறொருதேரிலேறினான். இப்படி பதினைந்து ரதம் உடைந்துபோகவே கொங்கணராஜன் பூமியில்நின்றபடியே சீக்கிரமாய்வில்லையெடுத்து நிறுத்தி ஐந்துதிவ்வியாஸ்திரமெ டுத்துச் சந்தித்துவிட்டுச் சுவேலைராஜனை நோகச்செய்தான். அதுகண்டு சுவேலைராஜனும் மறுதேரிலேறி முப்பதுநாரா சம்விட்டு தேகமெங்குஞ் சல்லடைக்கண்களாகத் துளைக்க, கொங்கணராஜன் வில்லை நழுவவிட்டு ஸ்ரீராமாவென்று இரத த்தின்பேரில் மூர்ச்சை யடைந்தான். சாரதியானவன் இரத த்தைவிட்டுக் குதித்தோடிப்போக குதிரைகள் இரதத்தை யிழு த்துக்கொண்டுபோய்விட்டதுகள்.

அதுகண்டு சுவேலைராசன் வெற்றிச்சங்கையெடுத்து பம் பம்மென்றூதிஇரதத்தைச்சேனைகள்பேரில்நடத்தி வில்லையெ

டுத்துவளைத்து பாணங்களைத் தொடுத்து, சேனைகளென்னுங் காட்டைவெட்டிகொல்லுகையில் மாளுவராஜர் மனந்தாளாமல்சுவேலராஜன்முன்னுக்கு இரதத்தைநடத்தி வில்லைவளைத்துப்புங்கானுபுங்கமாய்சரவருஷம்பொழியும்போது ,சுவேலராஜனும்பாணங்களைவிட்டு மாளுவராஜாவின் அஸ்திரங்களையெல்லாமறுத்து அவ்வரசன்மார்பைப்பார்த்து ஐந்துநாராசத்தைப்பிரயோகித்தான். அதைமாளுவராஜன்சட்டைபண்ணுமற்பதினைந்து நாராசம்விட்டு சுவேலராஜனை பிரமிக்கச்செய்தான் அதனால் வருத்தமடைந்து சுவேலராஜன் மிகவும் கரேமானபாணங்களினால் மாளுவன் சரீரத்தைச் சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டான். மாளுவராஜன் ஸ்ரீராமாராமாவென்றுமூர்ச்சையடைந்தான். அதுகண்டுஐம்பத்தாறுராஜர்களும் சுவேலராஜனுடனெதிர்த்து வெற்றியடையாமல்மூர்ச்சையானார்கள்.அதுகண்டுசத்துருக்கமகாராசன்மகாகோபமாய்சாரதியையெச்சரித்துச் சுவேலராசன்முன் இரதத்தை நிறுத்தி வில்லையெடுத்து அதில் அதிகதீக்ஷண்யமாயிருக்கப்பட்ட பத்துநாராசமெடுத்துப் பிரயோகஞ் செய்துவிட்டுவிட்டார். அந்தப் பத்துநாராசமு மாலகாலவிஷத்தைப்போல் சீறிக்கொண்டுவந்து சுவேலராஜன் கையிற் பிடித்திருந்த வில்லையுங்கண்டித்து, சாரதிகுதிரைகளையுங்கொன்று, இரதத்திற்கட்டியிருந்த கொடியையும், வெட்டித்தள்ளியது. அதுகண்டு சுவேலமகாராஜன் மற்றொரு இரதத்திலே ஏறிக்கொண்டு, அதிகதீக்ஷண்யமான இருபத்தைந்து திவ்வியாஸ்திரங்களெடுத்து மந்திராபூதிகள் கொடுத்துத் தொடுத்திடவே அந்த திவ்வியாஸ்திரமானது, காட்டுத்தீயைப்போ லெறிந்துக்கொண்டு சடசடவென்கிற தொனிகளுடன் வருகிறதை சத்துருக்கன்பார்த்து பத்துதிவ்வியாஸ்திரமெடுத்து ஆலகாலவிஷத்தைப்போற் சீறிக்கொண்டுபோய் சுவேலராஜன் விட்ட திவ்வியாஸ்திரத்தின்பேரில் தாக்கினதால் அவ்விருபத்தைந்து திவ்வியாஸ்திரமுறிந்து பூமியில் விழுந்துபோயிற்று அதுகண்டு சுவேலராஜன் கோபாவேசங்கொண்டு பற்களை நெறநெறவென்று கடித்து ஒருசுழற்பாணத்தை எடுத்து சத்துருக்கமகாராசன் இரதத்தைப் பார்த்துவிடவே அதற்குச்சத்துருக்கனவன் ஒருகண்டங்கத்திரிபாணத்தைவிட்டு அறுத்தெறிந்து ஐந்து திவ்வியாஸ்திரத்தையெடுத்து மந்திராபூதிகள்கொடுத்துவிட அதுசுவேலன்மார்பிற்பட்டு முதுகிலுருகிப்போகவே அடியற்ற

வாழைமரம்சாய்ந்தாலெப்படியோ அதுபோல ரதத்தின்மேற் சாய்ந்து மூர்ச்சையானான்.

அப்போது ஆயிரத்தைத் நூறு ராசகுமாரர்களும் வெகு கோபாக்கினியுடனேஉக்கிரசேனனை வளைத்துக்கொண்டுபாண ங்களைவருஷித்தார்கள், உக்கிரசேனனும் விடாமல்வில்லையெடு த்து மாரிசொரிவதுபோலச் சரமாரி பொழிந்து வருகிறபாண ங்களையெல்லாம் அறுத்து வெட்டவெளியாக்கினான். அதனு லிராசகுமாரர்கள் கோபங்கொண்டு உக்கிரசேனன்பேரில் மித மில்லாத அஸ்திரங்களைவிட்டு கைகாலாடவொட்டாமலும்சா ரதிரதத்தை நடத்தவொட்டாமலுமடக்கி உக்கிரசேனன் சே னைகளைக் களைக்கும்படியாய் பாணங்களாலடிக்கிறபோது அவ ன் நிர்வகிக்கமாட்டாமல் மெய்மறந்துபோகையிற்சுகனனவன் மனம்பொருமல்ரதத்தை நடத்தி வில்லைக் குணத்தொனிபண் ணி அனேக அஸ்திரங்களை விடுத்து எதிர்வரும் அஸ்திரங் களை யெல்லாமறுத்துவெட்ட வெளியாக்கினான். அப்போது மட்சயந்த அனுமான்வெகு கோபாக்கினியுடனே ஒரு ஆல விருட்சத்தின்பேரில் பாய்ந்து அந்த விருட்சத்தை சல்லி வேருட்பட அடியோடு பிடுங்கி அடியும் நுனியுந்தரித்து கை யிற் பிடித்துக்கொண்டு ராசகுமாரர்கள் கும்பிற் புகுந்து அவர் கள் விடப்பட்ட அஸ்திரங்களையெல்லாம் நொறுக்கி ரதங் களைப்பார்த்து ஓரடிக்குபத்து இருபது இந்தப்படியாயடித்து அச்சுவேறு ஆணிவேறு மச்சுவேறுகொடைவேறு கொடிச் சீலைவேறு சாரதிவேறு குதிரைவேறு ராசமன்னர்வேறு வே ருக்கத் தலைப்பட்டது. அதுகண்டு இராசகுமாரர்கள் இதேது காட்டிலிருக்கிற குரங்கானது ஒருமரத்தைப் பிடுங்கிக்கொண்டு அடித்துஇராசகுமாரர்களைக்கொன்று நம்முடனே யுத்தத்திற் குவருகிறதேயார்வளர்த்துவிட்டகுரங்கோ அதனுடையகுரங் குசேஷ்டையைக்காண்பித்தது பார்த்தீர்களோ நமதுபாணத் தின் சுருக்குத் தங்கும்படியாய் அஸ்திரத்தை விட்டுக் கொல்ல வேணுமென்று அஸ்திரங்களைவிடுத்துப் பிடித்திருக்கிறமரத் தை தும்புதும்புகளாகச் செய்து மட்சயந்த அனுமானை அஸ் திரத்தால் மூடிப்போட்டார்கள். அப்போது மட்சயந்த வனு மானும்வருகிற பாணங்களையெல்லாம் உதறிப்போட்டு ராச மன்னர் கூட்டத்திற் சிவ்வென்றுபாய்ந்து ஒரு ரதத்தைக்கை யிற்றூக்கிக்கொண்டு கிறுகிறுவெனச் சுழற்றி ராசாக்களேறி வந்த ரதத்தைப்பார்த்து விட்டெறிந்தான்.

அந்த ரதங்களும் ஒன்ருெடொன்று ஊடுதாக்கிரதங்களழியவும் அதிலிருந்த ராசமன்னர்கள் பார்த்து இது குரங்கல்ல நம்மையெல்லாங் கொண்டுபோற எமனிப்படி உருவமெடுத்து வந்தாஞே அல்லவென்று ராட்சதன்ரூபங்கொண்டு வந்தவனுகவேண்டும் இதைக் குரங்கென்று நம்பவேண்டாம் இவனை நமதுபாணங்களினுற் கொல்லவேணுமென்று ராசமன்னரெல்லோரும் ஒருமிக்கக்கூடி நாலுமூலையுங்கவிந்து மட்சயந்தவனுமானையும் உக்கிரசேனனையுங்குகனையும்வளைத்துக்கொண்டு பாணங்களை விட்டு கைகாலாடவொட்டாமல் அடிக்கிறபோது உக்கிரசேனனும் குகனும் மட்சயந்தவனுமானும் ராசகுமாரர்களைபங்குபோட்டு யுத்தம்பண்ணினுர்கள். அந்தச் சமயத்தில்மட்சயந்தவனுமான் கைகளை நீட்டி ரதஞ்சாரதி குதிரைகளுடனேவாரிவாரி ஆகாயத்தில் விட்டெறிந்து கொல்லத்தலைப் பட்டான் உக்கிரசேனனும் உக்கிரத்துடனனேக திவ்வியாஸ்திரங்களைவிட்டு சாரதிகுதிரை ராசமன்னர்களுடன் கொல்லத் தலைப்பட்டான்.

இப்படி இரண்டுசாமபரியந்தம்போராடிஆயிரத்தைந் நூறுராசமன்னர்களையுங் கொன்று எமலோகங் குடியேற்றினுர்கள். அப்போது ஆயிரம் மந்திரிப்பிரதானிகள் வீரசேனனைவிடாமல் வளைத்துக்கொண்டு பாணங்களைவிட்டு கைகாலாடஒட்டாமலும் ரதத்தை நடத்தவொட்டாமலும் அடிக்கிறபோது, வீரசேனனும் பயப்படாமல் ரோஷத்துவேஷங்களுடன் அனேக அஸ்திரங்களைப் பிரயோகித்து வருகிறபாணங்களையெல்லாமறுத்து நபுரொன்றுக்கு ஐந்து திவ்வியாஸ்திரங்களை விட்டு சாரதி குதிரை மந்திரிப் பிரதானிகளையெல்லாஞ் சங்காரஞ்செய்து சண்டனூருக்கனுப்பிச் சங்கையெடுத்து செயஞ்செயமென்று ஊதினுனதுகண்டு ராஜசேனைகளெல்லாம் மகாகோபத்துடன் ஏகோபித்துவந்து வீரசேனனையுமட்சயந்தவனுமானையும் வளைத்துக்கொண்டு யுத்தம்பண்ணுகையில் மட்சயந்தவனுமானுனவன் யானைக்கூட்டங்களில் புகுந்து யானைகளை வாரிவாரி யானைகளுடன்மோதியும் ஆகாயத்தில்விட்டெறிந்தும் குதிரைகளைவாரிக் குதிரைகளுடன்மோதியும் ரதத்துடன் ரதங்களை வாரியடித்தும் இந்தப்படியாய் நால்வகைச் சேனைகளையும் நாசஞ்செய்கிறது, எப்படியிருந்ததென்ருல்முன்னுல் இந்திரசித்து யுத்தத்தில் அனுமாரானவர் எப்படி போர்புரிந்தாரோ அவ்வாருய் தகப்பன்பேர்போகாமல்நாலு

பக்கமும் வளைத்துக்கொண்டு ராசக்கூட்டங்களை சாடுகிறபோது, அந்தரத்திலிருக்குந் தேவர்க ளாச்சரியப்பட்டார்க ளப்போதுவீரசேனன் உக்கிரசேனன் குகன்முதலாகிய வீரர்கள் நால்வகைச்சேனைகள்பேரில் அவ்ஸ்திரங்களைவிட்டு நாடவொட்டாமல் புறமுதுகுகொடுத்து வோடும்படியாய்மாய்க்கிறகாலத்தில், உதிரவெள்ளமான துவோட, அந்தவெள்ளத்திலேஅநேகமுண்டங்களெழுந்து கூத்தாடுகையில் டாகினி, ஜாகினி, மோகினி, பிசாசுகள் சாப்பிட்டு உதிரவெள்ளத்தை வாரிக்குடித்து வயிறெடுக்காமலேப்பமிட்டுக் களிகொண்டு காடுகாத்திருந்ததுகள், சூரியனுமேற்குத்திசையில் மறைந்தான். அப்போது சத்துருக்கமகாராசனும்மட்சயந்தமகாராசனும்படைத்தலைவர்களும்பாடி கூடாரம்போய்ச் சேர்ந்திருக்கையில் சத்துருக்கமகாராசன் உக்கிரசேனனை யழைத்து நம்முடையசேனைகளில் யார் விழுந்திருக்கிறார்கள், சொல்லென்றுகேட்க, ஐயாசத்துருக்கமகாராசனே கேளும், நம்முடைய சேனைகளுக்கெல்லாம் தளகர்த்தனான சூரசேனனும், ஐம்பத்தாறுதேசராசாக்களும், அறுநா றக்ரோணி கால்பலமும் ரணக்களத்தில் விழுந்தார்களென்றான். அதுகேட்டு சத்துருக்கமகாராசன் சகலதுரைகளுடனும் ராஜசிரேஷ்டர்களுடனும், நாளை நடக்கவேண்டிய ராஜதிட்டங்களைப் பேசிக்கொண்டிருந்து சகலரையும்பாடி கூடாரங்களுக்குப் போகச்சொல்லி, மட்சயந்த வனுமானுடனும் ராசாக்களுடனும் பந்திபோஜனஞ் செய்து அவ்விரவைப் போக்கினார்கள் அப்போது உக்கிரசேனன் தண்டைச் சுழற்றி காவலாகவிருந்தான்.

இவ்விடத்திலிப்படியிருக்க, தூதுவர்கள் தலைமீதுகையை வைத்துக் கோடுகோடென்று அழுதுக்கொண்டு வாரணபுரிபட்டணத்திராஜனாகிய சோமகாசமகாராசனிடஞ்சென்று வணங்கி, ஐயா இராஜபரமேஸ்வரா இவ்விடத்திலிருந்து யுத்தத்திற்குப்போன நால்வகைச்சேனைகளும் சுவேலைராசனும் யுத்தத்திலிறந்தார்களென்று கூறவேசோமகாசமகாராசன்சிம்மாதனத்திலிருந்தபடியே அடித்துக்கீழேவிழுந்துபுத்திரசோபம் பெரிதானபடியால் மூர்ச்சையடையவே அரண்ணியமகாராஜனும் தகப்பனுரையெடுத்துக்களையாற்றி உட்காரவைக்க, சோமகாசமகாராசனனவன் தூதுவர்களைப்பார்த்து அடா, தூதர்களே! என்னுடைய இளையகுமாரன் சுவேலன் யாருடன் யுத்தம்பண்ணி யிறந்தான் அதை யெனக்குத் தெரியச்சொல்ல

வேணுமென்றுகேட்க, தூதர்கள் சொல்லுகிறார்கள். ஐயா! தங்கள்குமாரன் அனேக இராட்சதாளைக்கொன்று கடைசியில் தண்டு தளத்துக்கு இராசாவாய்வந்த சத்துருக்க மகாராஜனுடனெதிர்த்து யுத்தஞ்செய்திறந்தார். அதுவுமன்றி ஆயிரத்தைந்நூறு இராசகுமாரர்களையும் ஆயிரம்மந்திரிப்பிரதானிகளையும், மூன்றுராசாக்களாய்க் கூடிக்கொன்றார்கள். மேலும் காட்டில்கிடக்கிற ஒருகுரங்கானது நால்வகைச்சேனைகளையுங் கொன்றுவிட்டுப் போச்சுதென்றுகூறவே, சோமகாசன்மந்திரியான தூறுவாசனைப்பார்த்து ஓ! மந்திரி,ஆயிரத்தைந்நூறு அக்ரோணி சேனைகளுடன் யானைபுறவி சேனைகளையும் ஒரு குரங்குகொன்றதென்றா லினியென்ன யிருக்கின்றது நாளைய தினம் நான்யுத்தத்திற்குப்போ யந்தக் குரங்கை முன்னேகொன்று அதன்பிறகு சத்துருக்கனையும் அவன் சேனைகளையுங் கொன்று என்பழியைத் தீர்த்துக்கொள்ளுகிறே னென்றான்.

அதற்கு அவன்குமாரன் அரண்ணியமகாராஜன் சொல்லுகிறான். ஓ! பிதாவே நானிருக்க உமக்கிவ்வளவு ஆயாசம் வரவேண்டியதென்ன, நாளையவுதயத்தில் என்தமையனைக் கொன்றவனை அவன் படையையுங் காற்றிற் பஞ்சுபோற்பறக்கடித்து வருகிறேன் பாருமென்றார். அத்தருணத்தில் சுரதராஜனெழுந்து, தந்தையே நானொருவன் யுத்தத்திற்குச் சென்று வெற்றியடையலாமென்றுவந்த சத்துருக்க னெதிர்நின்று அவனைக் கொன்றவன்படையாகிய கரும்பைமென்று வருகிறேனென்ற சுரதராஜனைப்பார்த்து அப்பாகுமாரா சுரதா, உன்னைவிடபலவான் இந்தராஜசபையில் யாரிருக்கிறார்கள். உன்வில்லுக்கு மும்மூர்த்திகளும் நின்று யுத்தம்பண்ணமாட்டார்கள். உன்னைப்போல வரப்பிரசாதமான அஸ்திரங்களும், பேரும் பெற்றவர்கள் யாரிருக்கிறார்கள். ஆகையாலுமவர்கள் தம்பியைக்கொன்ற சத்துருக்கனையுஞ் சேனைகளையும் அந்தக் குரங்கையுங் கொன்று செயம்பெற்றுவாவென்று விடைகொடுக்க, அளவில்லாத ஆயுத அஸ்திரங்களை இரதத்திலேற்றிக்கொண்டு சுரதமகாராஜன் தனக்குச் சரியான பலாஷ்டிகம் படைத்த மூவாயிரத்தைந்நூறு ராசகுமாரர்களும், ஆயிரத்தைந்நூறு மந்திரிப்பிரதானிகளும், முப்பத்தொரு லக்ஷம் படைத்தலைவர்களோடும் சிம்பக்கொடிபறக்க இரதமேறிப் புறப்பட்டான்.

புறப்படவே முப்பத்திரண்டு மேளவாத்தியங்களு முழங்க அண்டமதிர, அண்டத்திலுள்ள தேவர்கள்கண் டாச்சரியங்கொண்டு இன்று சுரதமகாராஜன் யுத்தமானபடியினல் நன்றாயிருக்கும். அரிபக்தியுள்ளவன், சத்தியவாசகன், மகாவரப்பிரசாதம் பெற்றவன், இவனுக்கெதிரியான சத்துருக்கனே ஸ்ரீராமர் சகோதரன் மகாபலவான்களாகையால் இருவர்களுடைய வெற்றியுந்தோர்ப்பும் இவர்களுடைய வீரத்தன்மையுங்காணக் கண்களாயிரம்பெற்ற இந்திரனும், அந்தரத்தில்வந்து பார்த்திருக்கையில் சத்துருக்கமகாராஜன் சூரியனுதயமாக ஐந்துநாழிகைக்குமுன் எழுந்திருந்து காலக்கடனே முடித்துக்கொண்டு போசனமருந்தித் தாம்பூலமென்று உக்கிரசேனனை யழைத்து இன்றைக்கு நல்ல யுத்தம்போற் காண்கின்றது. ஆகையால் சேனைகளைப்பவுஞ்சிட்டு சக்கிரயூகமாக நிறுத்திச் சாக்கிரதையாக யிருந்து போராடவேணுமென்று சொல்லக்கேட்ட உக்கிரசேனன் மகாபாக்கியமென்றெழுந்து இராட்சதாளின் ஆனை தேர் பரி சேனைகளையெல்லாம்நான்கு வட்டமாகநிறுத்தி எட்டுத்திக்குப்பதினறு கோணத்திற்கும், சக்கிரயூகத்திற்கும், திரணவாசிகளாக அறுபதினயிரத்தைந் நூறு அக்ரோணிசேனையை நிறுத்தி, நடுவணியில் சத்துருக்கமகாராஜனையும், வீரசேனனையும் நிறுத்தி, அதற்கு முன்னணியில் தான் யுத்தசன்னுத்தனுக நின்று பேரிகையறைவித்தான். அப்போது அருணனனவன் இன்றைக்குநல்லயுத்தம் நடக்கும், நாம்போய்ப்பார்ப்போமென்று வந்தவரைப்போலே உதயகிரிபர்வதத்தி லுதயமானர்.

## மூன்றுநாள் சுரதராஜன் யுத்தம்.

---

அந்தவேளையில் சுரதராஜன் சேனைகளானது தென்கோபுரவாசற்படியாக நுழைந்துவருகிறபோது பூமியானது கிடுகிடுவென்றதிர, ஆதிஷேசன் புசமாற்ற, அஷ்டதிக்கிலும் ஆற்பரித்துவரவே, உக்கிரசேனன்கண்டு, இரதத்தை நடத்தி வில்லைநிறுத்தி சரமாரியாய் அஸ்திரங்களை யெடுத்துப் பொழிந்து சேனைகளைக் கரும்புதுண்டுபோற் சூரையாடி வரும்போது சேனதிபதியான பவர்னன் சாரதியை யெச்சரித்து, இரதத்தை நடத்தி, வில்லைநிறுத்தி, அனேக பாணங்களை றிவ்றிவ்வென்று விடுகிறபோது உக்கிரசேனனனவன் சிங்கம்போற்கொதித்து அம்புறாப்பொதியிற்கையைவைத்துபத்து

நாராசமெடுத்து சுவர்னன்விடப்பட்ட அஸ்திரங்களையெல்லா மறுத்து அவன்மார்பிலணிந்த கவசங்களைப் பொடியாக்கி கையிற்பிடித்த வில்லையுந் துண்டித்து துவசத்தையுமறுத்துக் கிழேதள்ளி சாரதிகளையுங் கண்டித்தான். அப்போதுபவர்னன்வேறொருவில்லெடுத்து நாணிபிகிந்து, பாணங்களைப்பூட்டுமுன்னம்உக்கிரசேனனெனவன்ஒரு அர்த்தசந்திரபாணத்தை விடவே அதுநாகசற்பம்போல் சீறிக்கொண்டு அதிவேகமாய் வந்துபவர்னன்சிரசை கரகரவென் றறுத்துத்தள்ளிவிட்டது. பின்னும் உக்கிரசேனன்சேனைகளின்மீது இரதத்தைசெலுத்திக்கொல்லுகிறபோது சுரதமகாராஜன்கண்டு, ஐந்துநாராசமெடுத்துபிரயோகஞ்செய்தான். அந்தஐந்தும் காலக்கோட்டிவிஷம்போற் சீறிக்கொண்டுவந்து உக்கிரசேனன்ரதம் சாரதி குதிரைகளை அதஞ்செய்துமார்பிலேந்து நாராசபாணம்விட்டு முதுகி லுருகிப்போய் விடவே, உக்கிரசேனனெனவன் ஸ்ரீராமாராமாவென்று அடியற்றபனை சாய்ந்தாப்போற் சாய்ந்து உயிரைவிட்டான். உடனே சுரதமகாராஜன் இரதத்தை நடத்தி முன்னணியில்வரும்போது படைத்தலைவர்களும் சேனைகளும்மூனைந்து சுரதமகாராஜனைவிடாமல்வளைத்துக்கொண்டு சிங்கத்தின்பேரில் சிறியதுரும்பை யெறிவதுபோல் அஸ்திரங்களைச் சொரிவதைக்கண்ட சுரதராஜன் ஆண்புலி புகுந்ததுபோலும், அழகிய புருக்களருகில் ராசாளி புகுந்ததுபோலுமூரகக்கூட்டத்தில் கீரிப்பிள்ளைகளண்டியதுபோலும்புகுந்து, அஸ்திர சஸ்திரத்தையபரிமிதமாய்ப் பொழிந்து படைத்தலைவருடன் சேனைகளையும் வானுலகத்திற்குத் தானொருவனுகநின்றனுப்பிவிட்டு இன்னமுண்டோவென்று தண்டுகளைத் தேடிவருகையில் குகனெனவன் சுரதன்பேரிற்றேரை நடத்தி மாரிபோலச் சரமாரியாய் ஐந்துதிவ்வியாஸ்திரத்தைவிட்டுசுரதமகாராஜன் விடப்பட்ட அஸ்திரங்களைக்கண்டித்து வில்நாணியைப்படலென்றறுத்துவிடவே, தக்ஷணம் ஓசைபெற்று அந்தவில்லானது நிமிர்ந்த சத்தமானது அவர்காதிரண்டுஞ் செவிடுபட்டுப்போயிற்று. அப்போது சுரதமகாராஜன்மறுபடியும் வில்நாணியை இருகப்பூட்டிகுணத்தொனிசெய்து, பத்து திவ்வியாஸ்திரமெடுத்து வில்லிற்சந்தித்துப்பிரயோகப்படுத்தி குகனேறிவந்த இரதஞ்சாரதி குதிரைகளையுந்தும்சப்படுத்தி அக்குகனையும் "அடிமேலடியடித்தால் அம்மியும்நகரு"மென்

கிற பழமொழிபோற் கைகாலாடவொட்டாமல் சாடுகையில்குக ன்சிரம் அறுபட்டு ஸ்ரீராமா ராமாவென்றுதியானம்பண்ணிக் கொண்டு எமபுரம் புகக் கண்ட மட்சயந்த வனுமான்கோப தீப்தருய் ரதம்விட்டுக் கீழேகுதித்தான்.

அப்படிக் கீழேகுதித்து சுரதராஜன் சேனைகளிற் புகுந்து ஆனைகளைவாரி ஆகாயத்திலெறிந்து, இரதங்களைவாரி பூமி யோடறைந்து, குதிரைகளைவாரிக்குப்பல்குப்பலாய்மோதியும், சிலதைவாரி வாரணபுரி பட்டணத்தின்பேரில் விட்டெறிந் தும், ஆயிரத்தொருநூறு அக்ரோணி சேனைகளை ஒருசாம பரியந்தத்திற்குள் ஈயெறும்புகளைத் தேய்த்து விடுவதுபோல் வாய்வுராஜன் சேயன்வானுலகங் குடியேற்றி விடவே, மற்ற சேனைகளெல்லாம் புத்திபுத்தி இன்று தப்பிப் பிழைத்தோ மென்று வோடுகையில் சுரதராஜன்கண்டு இனியில்லாத கோ பங்கொண்டு இரதத்தை நடத்தி, ஓடுகிறவர்களைஓடவொட்டா மலும் நிறுத்திமட்சயந்த அனுமானைப்பார்த்து அடாவான ரமே! காட்டிற்கிடக்கிற காய்கிழங்குக்களைப்பொறுக்கித்தின்று சுனைத்தண்ணீரைக்குடித்து செடியிலுறங்கிக்கிடக்கிற உனக்கு மிந்த இராஜாக்கள் கூட்டங்களுக்குமென்னசொந்தமிருக்கிற து நீயார் உன்பெயரென்ன, உன்தகப்பன்பேர்யாது, என்சே னைகளுன்னையென்னசெய்தார்களென்று இப்படிக்கொன்ருய் உனக்கிவ்வளவு அதிகாரங்கொடுத்தவனைச் சொல்லென்றுகே ட்க, மட்சயந்தன்யுத்தஞ்செய்வதைவிட்டு ஓய்ராஜனே கேளு ம், இராஜாக்களானவர்கள் யுத்தமூண்டபோது இரணக்களத் திற்குப்பயந்து, இப்படிக் குலங்கோத்திரமும் கேட்கலாமோ வெற்றியடையத்தக்க, சாமார்த்திய முடையவர்கள் வம்சபரம் பரையைக்கேட்டுப் போர்புரிவார்களோ, ஆனலுமென்னசொ ல்லுகிறேன்கேளும். பல்லாயிரங்கோடி அண்டத்தையுங்கெற் பத்தில்வைத்து இரட்சிக்கப்படா நின்ற ஆதிகர்த்தாவாகிய ஸ்ரீமந்நாராயணரைமடி மீதில்வைத்துக்கொண்டிருக்கப்பட்ட ஆயிரம்பணமுடியைத்தரித்த ஆதிசேடனை முறியவடித்து கீர் த்தியடைந்த சகலப் பிரபஞ்ச சீவராசிகளிடத்திலும், பஞ்ச பூதங்களுக்கெல்லாம் இராசாவாய் விளங்கா நின்ற வாய்வுதே வன் அவர்குமாரன் அனுமான் அவர்குமாரன் நான் என்பேர் மட்சயந்த அனுமானென்று சொல்லுவார்கள். அந்தப்பரா பரவஸ்துவாய் விளங்கா நின்ற ஸ்ரீமந்நாராயணரே சீராமனு

மூன்றுதம்பிமாருடன் தசரதமகாராஜன் வயிற்றிலவதரித்துத் தாடகையைக்கொன்று ஜனகராஜனிடமிருந்த வில்லையொடித்து சீதையைமணந்து பரசுராமர்கைவில்லைப்பறித்துக்கொண்டு அவரைத் துரத்திவிட்டு தாய்சொல்லைத் தள்ளாமல் சீதா லட்சும்மண சமேதராய்ப் பதினான்கு வருஷம் வனவாசஞ்செய்யவேண்டிமரவுரிதரித்து சடாயுவைக்கண்டுபஞ்சவடியிலிறங்கி இராவணன்தங்கை சூர்ப்பநகையைப் பங்கம்பண்ணி கரதூஷண திரிசிரு ளென்னப்பட்ட பன்னீராயிரம் வெங்கலாதக்காரர்களையுங் கொன்று மானாகவந்த மாரீசன்பேரில்வேட்டையாடப்போனார். அப்போது இலங்காபுரியையாளப்பட்டஇராவணன் சீதாதேவியைப் பர்னசாலையுடனே பெயர்த்து இரதத்தில் வைத்துக்கொண்டு போய்விட்டான்.

அப்பால்மாரீசனைக்கொன்று சடாயுவுக்குமோட்சங்கொடுத்துவிராதனைவதைத்து அசுமுகிக்குமுத்தியளித்து கவந்தனை மாய்த்து சவரிக்குப்பதவிதந்து எனதுதந்தையாகிய அனுமாரைக்கண்டு, சுக்ரீவனைச்சிநேகம்பண்ணி, வாலியைக்கொன்று பட்டங்கட்டிகொடியசெய்கையுடைய இராவணன்,கும்பகர்ணன்இந்திரசித்து, அதிகாயன், அட்சயகுமரரன்கும்பனிகும்பன்முதலாக இரண்டாயிரம்வெள்ளம்ராட்சதாளையுங்கொன்று சீதையம்மனைசிறைமீட்டுக்கொண்டுவந்து அயோத்தியாப்புரிபாட்டபிஷேகராய் இருக்கிறநாளில் சதகண்டராவணன்ஐயாயிரம்ராட்சதாளைக் கூட்டிக்கொண்டுவந்து யுத்தம்பண்ணினான் அப்போது ஸ்ரீராமரும் என்தந்தையனுமானும் ஐயாயிர வெள்ளம் ராட்சதாளையும் சதகண்டராவணனையுங் கொன்று அவன்தம்பி மகாமாயனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்துவைத்து அயோத்தியில்வந்து பட்டாபிஷேகரா யிருக்கிறநாளில்திருப்பாற்கடலின் சமீபத்தில் அத்தினபுரமென்கிற பட்டணத்தையாளப்பட்ட சகஸ்திரகண்ட ராவணன் ஐயாயிரம் வெள்ளம் ராட்சதாளைக் கூட்டிக்கொண்டுவந்து யுத்தம்புரிந்து அந்தஐயாயிரவெள்ளமும் அவனுமாண்டுபோகவே அவன் குமாரனாகிய சலவசந்தனுக்குப் பட்டங்கட்டி அயோத்தியில் வந்து பட்டாபிஷேகராய் இராஜரீகம் பண்ணிக்கொண் டிருக்கிறபோது, குருவாகிய வசிஷ்டமுனியால் இராட்சதாளைக்கொன்றபாவந்தொலைய, அஸ்வமேதயாகம்பண்ணி அப்பாவத்

தைப் போக்கடித்துக் கொள்ளுமென்று திருவுளம்பற்ற அந்தப்படியே ஸ்ரீராமரும், அஸ்வமேதயாகம்பண்ண விபீஷணர் மகாமாயன், சலவசந்தன், சுக்ரீவன் முதலானபேரையும், அவர்களுடைய சேனைகளுடன் வந்து, அயோத்திமாநகரிலிறங்கினார்கள். அதன்பின்பு அஸ்வமேதகுதிரைக்கு வதிஷ்டர்சொன்ன மந்திராபூதிகளாற் பூசைசெய்து அந்தக் குதிரையைப் பூமிப்பிரதட்சணம் பண்ணவேண்டி, ஸ்ரீராமர் தம்பியாகியசத்துருக்கமகாராஜனுடன், சலவசந்தன், மகாமாயன், சூரசேனன் ஐம்பத்தாறுதேசத்து இராஜாக்களையும், ஐம்பது வெள்ளம் இராட்சதாளையும் அறுபத்தோருயிரமக்ரோணிசேனைகளையுங்கூட்டி குதிரையின்பின் னனுப்பிவைத்தார் அவர்களுங்குதிரையைவிட்டுக்கொண்டுவருகிறபோது மதனுபுரிபட்டணத்தையாளும் வீரசேனனுங் குதிரையைப் பிடித்துக்கட்டி யுத்தம்பண்ணி யானைசேனைகளையுந் தோற்று ஸ்ரீமந் நாராயணராய் விளங்கப்பட்ட ஸ்ரீராமருடைய பிரதாபத்தைக்கேட்டு சத்துருக்கமகாராஜனை வணங்கி இறந்துபோன சேனைகளையும் காளிகாதேவியினு லெழுப்பிக்கொண்டு குதிரையைக்காணிக்கைகப்பங்கள்வைத்து பூசைசெய்து அவரும் அவரதுகுமாரனும் அவர்களுடைய தண்டையழைத்துக்கொண்டு எங்கள் தளங்களுடன் வந்துசேர்ந்தார்கள் அப்பால் குதிரையை விட்டுக்கொண்டு பானையமானது பின்வரும்போது உன்தமையனுன அரண்ணியராஜன் குதிரையைப் பிடித்துக்கட்டிகுதிரையின் பின்வந்த இராட்சதாளையுங் கொன்றபடியால் இப்போ உன்பிறகேவந்த சேனைகளை மாய்த்து உன்பட்டணத்தையுங் கொள்ளைகொண்டுபோகவல்லவன் நான்போதாதோ.அப்படி வராதபடிக்கு குதிரையைக் கொண்டுவந்துவிட்டு சத்துருக்கராஜனைவணங்கி பிழைக்கிறதே காரியமென்றான்.

அதுகேட்டு சுரதமகாராஜனனவன் சற்றுநேர மாலோசனைசெய்து தலையை சசைத்து ஸ்ரீமந்நாராயணராய் விளங்கப்படாநின்ற பரப்பிர்மமே ஸ்ரீராமனுகவந்து அவதரித்து இராவணசம்மாரஞ்செய்து அஸ்வமேதயாகஞ் செய்விக்க விட்டகுதிரையை நம்முடைய தமையன் பிடித்துக்கட்டி இராட்சதாளைக் கொன்றபடியால் நமதுதம்பியும் வெகுசேனைகளு மாண்டுபோனுர்கள். இப்போது நாம் சமாதானத்திற்குப் போனேமேயானல் யுத்தஞ்செய்யப்பயந்து சத்துருக்கனை வணங்

கிப் பிழைத்தானென்று தேவர்களும் நகைப்பார்கள். நம்மோ டொத்த இராசாக்களும், இராட்சதாளும் பழிப்பார்கள். ஆகி லும் என்னமுழுகிப்போயிற்று. நமது கையிற் சிவன்கொடுத்த வில்லிருப்பதாற் பயமென்ன, இக்குரங்கையுஞ் சேனைகளையுஞ் சத்துருக்கனையுஞ் செயித்து இராட்சதாளையுங் கொன்றேமா ளுல் இந்தசமாச்சாரம் அயோத்தியாபுரிபட்டணத்தி லிருக்க ப்பட்ட ஸ்ரீராமபிரான்கேட்டு குதிரையைவிடுவித்துக்கொள்ள வருவார். அப்போது அவரைச்சேவித்து வணங்கினுல்நாம் செய்த பாவம் பரிகாரமாகிக்கடைத்தேறலாமென்று மனதிலெ ண்ணி மட்சயந்தஅனுமானைப்பார்த்துச் சிலவசனஞ்சொல் லுகிருன். அடா அனுமானே நீசொன்னவையெல்லா மெய் யாயிருந்தாலும் என்னுடன் யுத்தம்பண்ணப்பயந்து என்னை ச் சமாதானப்படச் சொல்லுகிருயே அப்படி யாகிறது இன் னம் பின்னுலிருக்கின்றது. இனியுன்னுலாகிற யுத்தங்களைச் செய்யென்று சொல்ல, அதுகேட்டு மட்சயந்தனுமான்அட டா நாம் இவ்வளவுதூரஞ் சொல்லியுங் கேளாமல் யுத்தம்ப ண்ணென்றுகூறினனல்லவா, நல்லதாகட்டு மென்று கோப மாகிச்சிவ்வென்றுரதத்தின்பேரிற்பாய்ந்து,சுரதராஜனுடைய மார்பைப்பார்த்து ஒருகுத்துவிட்டான். அந்தகுத்தைதப்புவி த்துக்கொண்டு சுரதராஜனனவன் வில்லைநிறுத்தி வாயுவேகம னேவேகமான அஸ்திரங்களை மேன்மேலாய் மட்சயந்தனு மான்பேரில்விட்டுச் சரபுஞ்சமா யடிக்கிறபோது அதுகளையெ ல்லாம் உதறிவிட்டு மட்சயந்தனுமான் சற்றுநேரம் சும்மாயி ருக்கச்சுரதராஜன்பேரில் அளவிறந்த பாணங்களை விட்டெறி ய, அதுகள் தன்பேரில்படவொட்டாமல் அஸ்திரங்களை வி ட்டறுக்கப் பின்னும் மட்சயந்தனுமான் குதிரைகளையும், ரத ங்களையும், வாரிவாரிச் சுரதன் ரதத்தின்பேரிலெறிய, அதுக ள்தன் முன்னுக்கு வரவொட்டாமல் தடுத்துக்கொண்டு யேத டா குரங்கு மகாபொல்லாததா யிருக்கின்றது.

நமதுசேனைகளைக்கொண்டு நம்மைத்தானே கொல்லவந் ததுபார்த்தாயோவென்று கோபித்துபத்து திவ்வியாஸ்திரங் களையெடுத்து மந்திராபூதிகளுடன் பூசைசெய்து விட்டுவிட் டான் அந்த திவ்வியாஸ்திரங்களோ நாகசற்பங்கள்போற் சீறிக்கொண்டு வருகையில் மட்சயந்தனுமான் பார்த்தண்ட மளாவியிரா நின்ற ஓராலவிருட்சத்தைப்பிடுங்கி நுனிக்கிளை

யனைத்துஞ்சேர்த்துப்பிடித்து அஸ்திரங்களின்பேரிற்சுழட்டி யடித்தான். அதனால் அஸ்திரங்களானது கூர்மடங்கிஒடிந்து பூமியில்விழவே சுரதமகாராஜன் கண்கள் பொறியெழும்பக் கோபங்கொண்டு ஒருகுரங்கின்பேரில் இவ்வளவுதூரம் யுத்தம்புரிந்தால் இன்னமிருக்குமற்றவர்களுடன் எப்போதுநாம் யுத்தஞ்செய்வதென்று மீசைகள் துடி துடிக்கப்பற்களை நறநற வென்று கடித்து மகாவுக்கிராகாரத்துடன் ஒருசத்தியையெடுத்து யுச்சரித்துவிடவே அதுசிவ்வென்றெழும்பி மட்சயந்த னுமான் மார்பிற்பட்டு முதுகிலுருகிப்போகவே ஸ்ரீராமாரா மாவென்று அடியற்றவிருட்சம்போல மண்மீதுவிழுந்துமட்சயந்தனுமான் உயிரைவிட்டான்.

## நான்காம்நாள் யுத்தம்.

மறுநாள் காலசித்தனென ராட்சதன்சீறி கோபமீறிச் சுரதராஜனை வந்துவளைத்துக்கொண்டு சொல்லுகிறான். ஓய்சுரதமகாராஜனே! ஸ்ரீராமபிரான்விட்ட அஸ்வமேதக் குதிரையை நீ பிடித்துக்கட்டி சேனைகளைக் கொன்றபடியினால் இப்போது உன்னையும் உன்தம்பியையும் உன்தகப்பனையுங்கொன்றுஉன்பட்டணத்தையுங் கொள்ளைகொள்ளாமற்போனேனேயானால் என்பேர்காலசித்தன பாரென்று கூறவே, சுரதராஜனுக்குச் சந்தோஷமாகிச் சொல்லுகிறான்! வாராய் காலசித்தனே! என்தமயனான அரண்ணியமகாராஜன் உங்கள் குதிரையைப்பிடித்துக்கட்டி அதன்பின்வந்த ராட்சதாளையுங்கொன்று பட்டணம் வந்துவிட்டார். நேற்றையதினம் என்தம்பியாகிய சுவேலராஜனையும் ஆயிரத்திருநூரக்ரோணி சேனைகளையுஞ் சத்துருக்கன் கொன்றபடியினாலே அப்பழிதீர சத்துருக்கனுக்கு சகாயமாகவந்த உன்னையும் உன்னுடன்சேர்ந்த சேனாசமுத்திரங்களையும் உங்களுக்கெல்லாம் ராஜாவான சத்துருக்கனையுங் கொன்று பராபரவஸ்துவாய் விளங்கா நின்ற அந்த ஸ்ரீராமமூர்த்தியை இவ்விடத்தில்வரவழைக்காமற்போனேனேயானால் நான்பிடித்தது வில்லுமல்ல, என்பேர் சுரதராஜனு மல்லவென்றான்.

அதுகேட்டு காலசித்தன் மகாகோபங்கொண்டு சுரதராஜனைப்பார்த்து சொல்லுகிறான். அடாசுரதா, என்னவார்த்தைசொன்னாய் என்னையும் என்சேனைகளையுஞ்சத்துருக்கமகா

ராஜனையுங்கொன்று ஸ்ரீராமரைவரவழைக்க உன்னாலாகுமோ அவர்பாணம்வந்தால் அதற்குத்தரவுசொல்ல உனக்குத்திடமுண்டோ சொல்லென்றான். அதுகேட்டு சுரதமகாராசன் அடா, காலசித்தனே! என்னைச் செயிக்கத்தக்கவல்லமையுள்ளவனுமாய் ஸ்ரீராமர்திருவடியை எந்நாளும்மறவாத சிந்தையுடையவனுமாயிருப்பது மெய்யானால் யுத்தம்பண்ணும்போது வஞ்சனைசூதுமாய்கையும் விட்டுச்சத்தியவானாகச் சண்டைபண்ணி என்னைஜெயிக்க உன்னால் திராணியுண்டோவென்று கேட்க, சுரதராஜனைப்பார்த்து காலசித்தன் நகைபுரிந்துசொல்லுகிறான். அடாசுரதா நான் ஸ்ரீராமரை வணங்கினநாள் முதல் மாய்கை வஞ்சனைசூதுமோசம் இத்தொழில்களையெல்லாம்விட்டு ஸ்ரீராமரைப்போல் சத்தியவசனமாரும லிருக்கிறேன் அதேயென்றால், ஸ்ரீராமருடையராச்சியத்தில் வஞ்சனைசூது மோசஞ்செய்தால் ஸ்ரீராமத்துரோகம்உடனேவந்து சித்திக்குமாகையாலுன்னுடன் உண்மையாக யுத்தம்பண்ணி உன்னைச்செயிக்கிறேன் பாரடாவென்றான். அதனைக்கேட்டு சுரதமகாராஜன் வில்லையெடுத்து நிறுத்தி அனேக அஸ்திரங்களை வில்லிற்சந்தித்து பிரயோகம்பண்ணினான். அதற்குகாலசித்தனுந் தனுசிற்சந்தித்துவைத்திருந்த அநேக அஸ்திரங்களைவிட்டு அறுத்தெரிந்து அதிகமாய்ப் பத்து நாராசம் விட்டுசுரதன்ஏறிவந்தரதஞ்சாரதி குதிரைகளையும் அதம்பண்ணிவிடவே சுரதராஜன் மறுதேரிலேறி அதிககோபங்கொண்டு உக்கிராகாரனாய் ரதத்தைநடத்தி அநேக திவ்வியாஸ்திரங்களைவிட்டுக் காலசித்தனேறிவந்த ரதத்தையதம்பண்ணி அவன்துமார்பிலணிந்த கவசத்தையும் பொடியாக்கினான்.

அதுகண்டுகாலசித்தன் வேறொருதேரின்மேலேறிக்கொண்டுஅதிகஉக்ராகாரத்துடன் வில்லையெடுத்து நாணிபிகிந்து சரமாரியாய்ப் பொழிந்து சுரதராஜனைக்கைகாலாடவொட்டாமலும் ரதத்தை நடத்தவொட்டாமலும் பாணங்களெடுக்கவொட்டாமலும் சாடுகிறபோது சுரதராஜன் கண்டு ஆச்சரியப்பட்டவனாய் வருகிற பாணங்களையெல்லா மறுத்தெறிந்து நூறுதிவ்வியாஸ்திரங்களையெடுத்து வில்லிற்றொடுத்துப் பிரயோகஞ்செய்தான். அதற்குத்தகுந்த நூறுதிவ்வியாஸ்திரத்தைவிடுத்து சுரதன்விட்ட திவ்வியாஸ்திரத்தையறுத்தெரிந்தான். அதனாற்கோபங்கொண்டு பதினைந்து நாராசத்தைவிட்டு

காலசித்தன்பிடித்தவில்லையுங் கண்டித்து ரதத்திற்கட்டிய துவசத்தையும் அறவெட்டி சாரதிதலையறுத்துக் குதிரைகளைக் கொன்று காலசித்தன் திரேகத்தில் நோகவெய்தான் அதனால் மகா ஆயாசத்துடனே ரதத்தின்மேற் சாய்ந்து மூர்ச்சையானான்.

அப்போது சுரதமகாராஜன் அதிக சந்தோஷத்துடனே சாரதியை யெச்சரித்து சக்ரயூகத் தணியின்பேரில் நடத்தென்றுகூறி தனதுவில்லை முகத்திற்குநேராய் பிடித்து அஸ்திரங்களைமேலுமேலுஞ் சேனைகள்பேரில்விட்டு கொன்றுக் கொண்டேசக்ரயூகத்தணியை ஐந்துதரஞ் சுற்றிக்கொண்டு வருகிறபோது ஐந்துசுற்றுக்கும் ஆயிரம் அக்ரோணிசேனைகள்மாண்டுபோயின அதுகண்டு மகாமாயன் கோபத்துடனே ரதத்தை நடத்தி சுரதராஜனை அப்புறமிப்புறம் போகவொட்டாமல் அஸ்திரங்களினாலடிக்கிறபோது மூவாயிரத்தைந்நூறு ராசகுமாரர் மகாகோபத்துடனேரதத்தைச்செலுத்தி மகாமாயனை வளைத்துக்கொண்டுபோர் புரிந்தார்களத்தருணத்தில்சலவசந்தனும் அதிகசினத்துடனே சுரதமகாராஜனை வளைத்துக்கொள்ளுகையில் ஆயிரத்தைந்நூறு மந்திரிமார்களும் வெகுதுரிதத்துட னிரதத்தை நடத்திச் சலவசந்தனை வளைத்துக்கொண்டு யுத்தம்பண்ணினார்களப்படி யுத்தம்புரிகையில் சுரதராஜன் இதுதான்சமயமென்று சேனைகள்பேரில் ரதத்தை நடத்திப் பாணங்களைவிடுத்துக் கொல்லுகிறபோது வீரசேனமகாராஜன் மகாகோபாந்தகாரனாகி சாரதியை யெச்சரித்து ரதத்தைநடத்தி அடாசுரதா நில்லு நில்லு என்கேள்விக் குத்தரவுசொல்லு என்தலைகீழாய்விழுகிறாய் நீகையிலாகாதசிலபேரைக்கொன்றோமென்று கெர்வித்துதுள்ளுகிறாய் துள்ளுகிற மாடு பொதிசுமக்காதென் றறியாயோ இதோ என்னுடைய பாணாக்கினியால் உன்னையும் பஸ்மீகரப்படுத்துகிறேன் பொறுபொறென்றுவில்லிலனேகமாயிரம் பாணங்களைத் தொடுத்துவிட்டான். அதுகண்டு சுரதமகாராஜன்நகைத்து, ஐம்பது திவ்வியாஸ்திரங்களையேவி, வீரசேனன் விட்ட பாணத்தை அறுத்துவிட்டு அவன்முன்னுக்கு இரதத்தைநடத்தி அடா, வீரசேனா! நீயா, என்முன்னின்று யுத்தம்பண்ணுபவன் எதோ நீசெய்கிற யுத்தத்தைப்பார்ப்போம் நில்லென்று அதட்டி வில்லைநிறுத்தி பத்து நாராசங்களைச் சந்தித்துப் பிரயோகஞ்செய்தான்.

அப்பத்துநாராசங்களும்நாகசற்பம்போற்சீறிக்கொண்டு வரவே, அதற்குப்பதில்வீரசேனன் பதினைந்துநாராசத்தை விட்டறுத்து இடிபோலொத்த இருபது திவ்வியாஸ்திரங்களைச் சுரதராஜன் இரதத்தைப்பார்த்து பிரயோகித்தான். அந்த திவ்வியாஸ்திரங்களுந் தகத்தகாயமாய் எறிந்துகொண்டு வருகிறபோது சுரதமகாராசன்கண்டு, தானும் இருபத்தைந்து திவ்வியாஸ்திரங்களை விட்டதை யறுத்தெறிந்துவிட்டானுடனே வீரசேனமகாராசன் கோபாக்ருஷத்துடன் ஒரு அக்கினியாஸ்திரத்தை எடுத்து மந்திராபூதிகள் செய்துவிட்டான். அதுவும்வெளிப்பட்டுஅக்கினிப்பொறிகளைவாரியிறைத்துக்கொண்டுவருகிறபோது சுரதமகாராசன் கண்டு ஒரு வருணாஸ்திரத்தையெடுத்து மந்திராபூதிகள் கொடுத்துவிடுத்தான் அந்தவருணாஸ்திரமானது இடிமின்னல்குமுறலுடனே குடங்கொண்டு சலம்பொழிந்தா லெப்படியோ அப்படிபோல, வீரசேனன்விட்ட அக்கினியாஸ்திரத்தின்பேரிற் சுரதமகாராசன் சரமாரியாகப்பொழியவே, அந்த அஸ்திரமானதுதணிந்து பூமியிலுருகிப்போய்விட, அதனால் வீரசேனன் ஒரு பர்வதாஸ்திரத்தை எடுத்துவிட்டான் அனேகபர்வதங்களுருக, புகையுண்டாகி வருகிறபோது சுரதராசன்கண்டு ஒருவச்சிராயுதத்தை எடுத்து அபிமந்திரித்து பிரயோகித்தான். அதுவுமனேகவச்சிராயுதங்களாய் ரூபங்கொண்டு வருகிற பர்வதங்களையெல்லாம் அறுத்துக்கீழேதள்ளிவிட்டது. அதுகண்டு, வீரசேனமகாராகன் ஒருசத்தியை எடுத்து ஆபூதிகள்கொடுத்தனுப்ப, சுரதமகாராசனும் பதினைந்து நாராசம்விட்டு வீரசேனன்விட்ட சத்தியை இரண்டுதுண்டாக்கி அவன்மார்பிலணிந்த கவசத்தையும்பொடியாக்கி மார்பிலுருகிப்போகச்செய்தான் அதனால் வீரசேனன் மகா ஆயாசமடைந்து மூர்ச்சையாய் இரதத்தின்பேரிற் சாய்ந்துவிட்டான்.

அப்போது சுரதமகாராசன் வெற்றிச்சங்கையெடுத்தூதினான். அந்தஒலியைக்கேட்டசேனைகளெல்லாம்பிதுர்கலங்கிச் சுரதமகாராசனைவளைத்துக்கொண்டு பாணங்களைமென்மேலாகப்பொழிகிறபோது அவைகளைசுரதராசனறுத்துவிட்டு ஐந்துதிவ்வியாஸ்திரம் பிரயோகித்துச்சாரதிகுதிரையுங்கொன்று நீலாட்சதன்மார்பைக்கலக்கிவிட்டான். அதனாலவனும் கைமெய்சோர்ந்துஆயாசத்துடன்இரதத்தின்பேரிற்சாய்ந்தான்.

உடனே சுரதராசனும் பின்னுமந்த உக்கிரம்விடாமல் இரதத்தைச்சேனைகள்பேரிற்றுரத்தி, அகோரமான பாணங்களைவிட்டுக் கொல்லும்போது சேனைகள் கண்டம்வேறு முண்டம்வேறு கைவேறு மெய்வேறு இடைவேறு தொடைவேறாகி இரத்தப்பிரவாகம் பூமியை அறுத்துகொண் டோடுவதைக் கண்டதேவர்கள்முதல் யாவர்களும் சுரதமகாராசன் சரவேகத்தையுங் கரவேகத்தையு மெச்சி, ஆச்சரியமடைந்தார்கள். அந்தச் சமயத்திற் காலசித்தனனவன் ஆயாசந்தெளிந்து கண்ணை விழித்துப் பார்த்துச் சுரதராசனைக்காணுமல் மறுதேரிலேறி வில்லையெடுத்துக்குணத்தொனிபண்ணிசாரதியையெச்சரித்து இரதத்தை நடத்தச்சொல்லிசுரதராசன் எங்கேயென்றுவரும் போது வெகுசேனைகள் சின்னுபின்னமாகத்தலைமாடு கால்மாடாய் கிடப்பதைக்கண்டு சக்ரயூகத்தணிக்குபோகிறபோதுகோஷ்டமெழும்பிற்று. அந்தச்சத்தங்கேட்டுகாலசித்தன் அதிவேகமாய்ரதத்தைநடத்திவரும்போது சுரதராசன் ஓய்ஒழிச்சலில்லாமற் பாணங்களை ஒரு சாம பரியந்தத்துக்குள்ளே முப்பத்தையாயிரம் அக்ரோணிசேனைகளைக்கொன்றுவிட்டான். அது கண்டு, காலசித்தன் கண்கள்சிவந்து கடுங்கோபங்கொண்டு ஓய், சுரதராசனே! நீ மகா பலசாலியென்றுமலைக்காதே, நாய் போற் குலைக்காதே, சிலரைக் கொன்றேமென்று வீரத்தைக் காட்டாதே, என் கைபாணத்திற்கு இன்றுன்னை இறையாக்கிக்கொள்ளுகிறேன் பாரென்று பத்து திவ்வியாஸ்திரங்களை விட்டு ரதஞ்சாரதி குதிரைகளுடன் பொடியாக்கவே சுரதமகாராசன் சிங்கக்குட்டிபோல் துள்ளியெழுந்து மறுதேரிலேறி வில்லைக் கையிலெடுத்து பல்லை நறநறவென்று கடித்து துல்லியமான அஸ்திரங்களைத்தொடுத்து ஓய், காலசித்தனே! உன் வீரத்தை நீயே மெச்சிக்கொண்டாய், தன்னைத்தானே புகழ்பவன் றுஞேர்பதர், என்பதறியாயோ சத்தசாகரஞ் சூழ்ந்த தரணிக்குள் சுரதராசனுக்கு நிகரில்லையென்ப தறியாயோ சபாசு உன் சவுரியத்தை இதோ காண்பிக்கிறேன் சற்றுநேரத்தில் பாரென்று அஸ்திரத்தால் மார்பைக்கலக்கிவிட்டான்.

அதற்குகாலசித்தன் களையாமல் இளையாமற் சொல்லுகிறுன் ஓய், சுரதனே! காலசித்தனென்றால் உன்னைப்போலொத்தவர்களைக்கடைசியிற் கட்டியிழுத்துக்கொண்டுபோகும்கருங்கடாவாகனனுகிய காலனுங்கலங்கி நிலைவிலக்கிபதுங்கியொது

ங்கிப் போவானென்பது நீ கண்டிலேயோ நல்லததனைக்காண்பிக்கிறேன். சற்றே யுனதுகண்குளிரப்பாரென்று கைகொட்டி தோள்தட்டி கனைத்து இந்த அஸ்திரத்தை விடலாமென்று நினைத்து இரதத்தை முன்னுக்கு வரவொட்டாமல் பாணங்களால் அவன்திரேகத்தைமூடி அதிகமாகப் பத்து நாராசத்தை விட்டு ரதத்தைப் பின்னுக்கு தள்ளிக்கொண்டுபோகும்படியாய்ச்செய்தான். அப்போது சுரதமகாராசனிடமார்புகலங்கி ஆயாசத்தோடுங்கையிற்பிடித்த வில்லை நழுகவிட்டுஇரதத்தின்பேரிற் சாய்ந்துமூர்ச்சையடைந்தான். அப்போது சாரதி குதிரைகளுடன் இரதத்தைப் பின்னிட்டபடியே பதினைந்து காதவழி தூரங் கொண்டுபோய்விட்டான்.

பின்பு காலசித்தன் மகாசந்தோஷமாய் இரதத்தைநடத்திக்கொண்டு மூவாயிரத்தைந் நூறு இராசகுமாரர்கள்பேரில் வந்தெதிர்த்தா னப்படி வந்தெதிர்த்த காலசித்தனையும் மகாமாயனையும்விடாமற் பாணங்களைப்பூட்டி அகோரமானயுத்தம் புரிந்தார்கள். அக்காலையில் மகாமாயனனவன்சிலையையூன்றி அஸ்திரங்களைமென்மேலாய்ப் பொழிந்துமூவாயிரத்தைந் நூறு இராசகுமாரர்கள் ஏறிவந்த ரதசாரதிகளுடன் தும்சஞ்செய்துவிட்டான். மறுபடியும் வேறுரதத்தில்மூவாயிரத்தைந்நூறுபேருமேறிவர, அதுகளையுங் காற்றிற்பஞ்சாகப் பறக்கடித்தான். இப்படி பதினாலாயிரம் இரதம்வரையிற் பொடிபொடியாய்ப்போகவே வேறே ரதமேறவுமுதவாமல் மூவாயிரத்தைந்நூறு இராசகுமாரர்கள் கத்திகேடயங்களை எடுத்துக்கொண்டு ஓடிவருகிறதைக்கண்டு மகாமாயனனவன் ஒன்றின்மேலொன்றாய்மூவாயிரத்தைந் நூறு பாணங்களைவிட்டுஇராசகுமாரர்கள் முடிகளையறுத்துக் கீழே தள்ளுகிறபோது தேவர்கள்கண்டு மகாமாயனுடைய கரவேக சரவேகத்திற்கு மிகவுமாச்சரியமடைந்தார்கள். அப்போது முப்பத்தொருலட்சத்துப் பதினாயிரம் படைத்தலைவர்களும் மகாமாயனைவளைத்துக்கொண்டுமாரிசொரிவதுபோலச்சரமாரிவிட்டுமகாமாயன்இரதத்தைமூடிப் போட்டார்கள். அதுகண்டுகாலசித்தன் மிகவுங்கோபங்கொண்டுசேனைகளைக்கவிந்துசாடுகிறபோதுசின்னாபின்னமாகவிழுந்திறந்தபேரும், உயிருடன் தப்பியோடுகிறபேரும், சேவகம் வேண்டாமென்ற பேரும், பிணங்களைவாரி மேல்போட்டுக்கொண்டு மறைந்தபேரும், காலசித்தன் உமதுகாலுக்கு ஆயி

ரஞ்சரணங்காருமென்பாரும், இரதத்தி லகப்பட்டுத்தேய்ந்த பேரும், சரத்தினால் தலைசாய்ந்தபேரு மாகவே, உதிரவெள் ளங்கள் ஆறுபோலோடத்தலைப்பட்டது. டாகினி, ஜாகினி, மோகினி பூதப்பிரேதங்கள், நாய், நரி, கழுகு, கூளிகள் பிண ங்களைப் பிடுங்கித்தின்று உதிரங்களைக்குடித்து, டமார பேரி கைகளை யெடுத்து கழுத்தில்மாட்டிக்கொண்டு முழக்க, ஓடுகிற ரத்தவெள்ளத்தில் அனேகந்தலையில்லாத முண்டங்க ளெழு ந்து கூத்தாடிற்று. அதுகண்டு காலசித்தன் இரதத்தைத்திரு ப்பிக்கொண்டு சலவசந்தன் யுத்தஞ் செய்கிற இடத்திற்கு வந்தான். அவ்விடத்தில் ஆயிரம் மந்திரிப்பிரதானிகளுஞ் சலவசந்தனை வளைத்துக்கொண்டு சரங்களை விட்டடிக்கிறபோ து சலவசந்தன் அவர்கள் விடப்பட்ட அஸ்திரங்களையெல்லா மறுத்து ஒவ்வொருவருக்கு நான்குதிவ்வியாஸ்திரங்களை விட் டு சாரதி குதிரை மந்திரிபிரதானி முதலியவர்களைக் கொன்று ஏமபதிக்கனுப்பினான். அப்போது மகாமாயனனவன் மகா வுக்கிரத்துடனே நபுரொன்றுக்கு நாலுபாணங்களை விட்டுமு ப்பத்தொருலட்சத்து பதினாயிரம் வெண்கல ரதக் காரரையும் நிமையோடு நிமைகொட்டு முன்னமே ஏமலோகத்திற் கனுப் பிவிட்டான். இவ்வாறு ஒருவரும் நிகரில்லாமல் இராட்சதசி ரேஷ்டர்கள் இரதத்தை நடத்திக்கொண்டு சத்துருக்கமகரா சனுடைய பாளையம்போய்ச் சேர்ந்தார்கள். அப்போது சூரிய னுதயமாகி இருபத்தைந்து நாழிகையாயிற்று.

## ஐந்தாம்நாள் யுத்தம்.

---

அதற்கு முன்னமே சோமகாசமகாராஜன் ஐந்நூரக்ரோ ணி யானைபரிசேனைகளைப் பயணப்படுத்தி ஐந்நூறு இராச குமாரர்களையும், ஐந்நூறு மந்திரிப்பிரதானிகளும், தன்புத்தி ரனாகிய சுரதமகாராஜனுக்குப் பின்பலமாய்க் கூட்டியனுப்பி னார். அனுப்பவே மகாமாயன் ரதத்தைச் சேனைகள்பேரில் நடத்தி வில்லைவளைத்து அம்புறாப் பொதியில் கையைவைத் து க-ம-ா-கூ-மகூ இந்தப்படியா யஸ்திரங்களைத் தொடுத்து ஒ ன்றின்பின்னொன்றாய் விட்டுக் கொல்லுகிறபோது சேனைகளா னது சின்னபின்னமாய்க் கால்மாடு தலைமாடாக விழவே, ஐந் நூறு ராஜகுமாரர்களும், மகாமாயனை வளைத்துக் கொண்டார் கள். அதுகண்டு சலவசந்தன் ரதத்தை இராசகுமாரர்கள்பே

ரில் நடத்தினுன். ஐந்நூறுமந்திரிகளும் சலவசந்தனை இரா சகுமாரர்களெதிரிற் போகவொட்டாமல் தடுத்து அஸ்திரங்க ளைப்பூட்டி வளைத்துக்கொண்டு யுத்தஞ்செய்தார்கள். அதுக ண்டு காலசித்தனுனவன் யிதுதான்சமயமென்று பாணங்களை ச் சரமாரியாகவிட்டுக் கொல்லுகிறபோது இராச குமாரர்கள் தங்கள் தங்கள் வில்லைவளைத்து அமோகமாகப் பாணங்களை வருஷிக்க, அஸ்திரங்களை யெல்லாம் அந்த காலசித்தன் அறுத்தெரிந்து பேருக்கிரண்டு பாணங்களை லக்காகத்தொடுத்து ஐந்நூறு இராசகுமாரர்களின் சாரதிகுதிரைகளையுங்கொல்லு கையில் இரதமும்நடவாமல் நின்றுவிடவேஇராசகுமாரர்கள் கத்தி கேடயம் தண்டாயுதங்களை எடுத்துக்கொண்டு இரதத் தைவிட்டுக் குதித்து ஓடிவருகிறதைக்கண்ட மகாமாயன் தன் னுடைய வச்சிரகோப தெண்டாயுதத்தை யெடுத்து சுழட்டி யடித்தான். அந்த அடிபடமாட்டாமல் ஓடி ஒளிப்பாரும், ரோஷத்துடன் வந்தெதிர்த்து வச்சிரகோப தெண்டாயுதத் தா லடிபட்டு மாள்வாரும், ஸ்ரீராமா ராமா உமது திருப்பாத மே கெதியென்று துதிபண்ணி உயிர்விட்டுச் சாய்வாருமாக மடியுங்காலத்தில் இறந்தசேனைகள் போக ஓடிஒளித்த சேனை களெல்லாம் ஒன்றுய்க்கூடி இன்றைக்கு இராட்சதாள் புண் ணியத்தால் உயிர்தப்பி வந்தோமென்று இருநூ ரக்ரோணி சேனைகளைப்பரிகொடுத்தும் பட்டணம்போய்ச் சேர்ந்தார்கள். அதில் இரண்டு தூதுவர்கள் தலைமேல் கையைவைத்து அழு துக்கொண்டு சோமகாச மகாராசனிடஞ் சென்று வணங்கி நின்றுச் சொல்லுகிறுர்கள்.

ஐயா, இராசாதிராசரே! இராசமார்த்தாண்ட ராசபரமே ஸ்வரா உமது குமாரனுகிய சுரதமகாராசனுடன் கூட இர ண்டாயிரத்தைந்நூறு அக்ரோணிசேனைகளு மாண்டு இராச மன்னர் படைத்தலைவர் சேனுதிபதிகள் மந்திரி பிரதானிகளு மாண்டு சுரதமகாராசனுக்குப் பின்பலமாக அனுப்பி வைத்த ஐந்நூரக்ரோணி சேனைகளும் ஐந்நூறு இராசகுமாரர்களும் மடிந்து முன்னூரக்ரோணிசேனைகள் சத்துருக்கர் சேனைகள் கையில் தப்பித்துக்கொண்டு ஓடிவந்தோமென்று கூற, சோம காச மகாராசன் திகிலடைந்து அடாதூதர்களே என்மகன் சுரதனு யிறப்பவன், நீங்களெங்கேயாவது நித்திரைசெய்து சொற்பனங்கண்டு வந்தீர்களோ சொல்லுங்களென்ன, தூதர்

கள் ஐயா, தங்கள் குமாரனாகிய சுரதராசனும் வெகுசேனைகளு மாண்டுபோயிற்று. மேலும், ஒருயிராட்சதனுடனே வெகுநேரம் போராடி அந்த ராட்சதனால் சுரத மகாராசன் கோபங் கொண்டிருக்கிறா ரென்றார்கள். அதனைக் கேட்ட சோமகாச மகாராசன் சிம்மாதனத்தி லிருந்தபடியே அடித்துமோதி பூமியில் விழுந்து அலறியெழுந்து வெகுவாக பிரலாபிக்கையில் அரண்ணியமகாராசன்மந்திரிபிரதானிகளும் சோமகாசமகாராசன் துயரத்தையாற்றுகையில், ஆயாசந்தெளிந்து கண்ணைவிழித்துப்பார்த்தான். அப்போது எவ்வளவு நாழிகையாயிற்றென்றால் அஸ்தமித்து பத்துநாழிகையாயிற்று. ஆகையாலினி என்னசண்டை நடக்கப்போகிறது. எல்லாம் நாளைக்குபார்க்கலாமென்று சாரதியையெச்சரித்து இரதத்தைநடத்தி பட்டணம்வருகிறபோது தமைய னிறந்தான், தகப்ப னிறந்தான், தம்பிசாய்ந்தான், பிள்ளைமாய்ந்தான் மாமன்மைத்துனன் செத்தானென்று வாரணாபுரி பட்டணமுழுதுங் கோவென்றசத்தமாக அழுதுக்கொண்டிருப்பதைச் சுரதமகாராசன் கேட்டு, அரண்மனைக்குப்போகிறபோது அவ்விடத்தில்பெண்டுபிள்ளை தாய்மார் சகலபேரு மழுதுக்கொண்டிருந்தார்கள். அந்த ஓசையையுங் கேட்டுக்கொண்டே அப்பால் கொலுக்கூடஞ்சென்றான். அவ்விடத்திலுங்கோவென்றசத்தங்களாயிருக்கவே சுரதமகாராசன் ரதத்தைவிட்டுக்கீழேயிறங்கி வில்லைக்கையிற்பிடித்துக் கொண்டு சபாமண்டபம்வருகையில்; நால்வகைச் சேனைத்திரள்களு மெழுந்து கைகுவித்து சேவிக்கும்படியாய் மந்திரிபிரதானி சகல இராசமன்னர்களுடனும் நிறைந்த கொலுவாயிருக்கிற தந்தையாகிய சோமகாச மகாராசனையும் தமையனை அரண்ணியமகாராசனையுஞ் சேவித்தான் அவர்களுஞ் சுரத மகாராசனை வாழ்த்தியபின் சோமகாச மகாராசனவர் குமாரனை நோக்கிக்கேட்கின்றார்.

அப்பா சுரதா, இன்று காலமே யுத்தத்திற்குப் போயிருந்தாயே என்ன சமாச்சாரம் எனக்கு விபரமாய்ச் சொல்லென்றுகேட்க, சுரதமகாராஜனுஞ் சொல்லுகிறான் ஓ ! பிதாவே, கேளும் இன்றுகாலமே நால்வகைச் சேனைகளுடனே யுத்தத்திற்குப்போய்ச் சேனைகளின் பேரிற்கவிழ்ந்து பலமானயுத்தம் பண்ணினேன் அப்போதுமட்சயந்த அனுமானென்னப்பட்ட ஒருகுரங்குவந்து யுத்தஞ்செய்தது அதுகாட்டி லிருக்கிற குரங்கென்றெண்ண வேண்டாம். அதனுடைய வாய்பிறப்பு கேட்கும்போது இராவண சம்மாரஞ்செய்த ஸ்ரீராமமூர்த்தியி

னுடைய தொண்டனுகிய அனுமார் புத்திரனென்று சொல்லினுன். அவனையும் வீரசேனனையுங் கொன்று சேனுதிபதியான காலசித்த னென்னப்பட்ட ராட்சத னுடன் போர் புரியும்போது மட்சயந்தனுமான் செப்பியவாறே கால சித்த னென்னப்பட்ட சேனுதிபதியுங் கூறினுன். அவனுடன் யுத்தஞ்செய்யும்போது அவனது அஸ்திரம் என்பேரிற்பட்டுச்சகிக்கமாட்டாமல் மூர்ச்சையடந்தேன். அதன்பின்பு மந்திரிபிரதானி இராசமன்னர்களையுஞ் சேனைகளைக் கொன்றதும், எனக்குத் தெரியவராது. இப்போது தான் மூர்ச்சை தெளிந்து இரதத்தை நடத்திக்கொண் டிவ்விடத்திற்கு வந்தேனென்ருன்.

அதனையுணர்ந்த சோமகாசமகாராசன் சொல்லுகிருன், ஓய், மந்திரிபிரதானிகளே ! பராபரவஸ்துவாகிய ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீராமராக அவதரித்திருக்க அந்தப் பரப்பிரம சொரூபத்தைச் சேவிக்க என்னபுண்ணிய மியற்றி ஞேமோ இன்று தேவர்களாலும் ரிஷியீஸ்வரர்களாலும் மகாத்துமாக்களாலுங் கற்பகோடிகாலத் தவங்கள் செய்தாலுங் காணப்படாத என்மூத்தகுமாரனை அரண்ணியமகாராசனுல் திருவடித்தாமரைகளை சேவிக்கும்படி யானகாலம் சமீபித்திருக்கின்றது ஆகையால் எளிதில் அவ்வாத்மாவைச் சேவிக்கும்படியான தக்க யோசனை சொல்லுங்களென்ருன்.

அப்படி கூறிய சோமகாசமகாராசனைப் பார்த்து மந்திரியாகிய துருவாசன் சொல்லுகிருன். ஐயா, சோமகாச மகாராசனே ! கேளும், அந்தப்பராபரவஸ்துவாய் விளங்காநின்ற ஸ்ரீமந்நாராயணரே ராமனுக நமது சூரியவம்சத்தில் அவதரித்திருக்க அவருடைய திருவடித்தாமரைகளை எப்படிகாண வேணுமென்ருல் நமது சுவேலராசனைக்கொன்றபழிக்காகச் சத்துருக்க மகாராசனையும் அவனுடன் வந்த சேனு சமுத்திரத்தையுங்கொன்று பழியைத் தீர்த்துக் கொண்டோமேயானுல் குதிரை விடுவிக்க சேனுசமுத்திரங்களைக் கூட்டிக்கொண்டு ஸ்ரீராமரேவருவார். அப்போது அவர் திருவடிகளை தரிசித்துக் கொள்ளலாம் இல்லாவிட்டால் இப்போது சத்துருக்கமகாராசனை வணங்கிச் சமாதானம் பண்ணிக்கொண்டோமேயானுல் அவர் அஸ்வத்தைவிட்டு பூமிப்பிரதட்சணம் பண்ணுகிற போது எந்தெந்தராசாக்கள் வந்தெதிர்த்து யுத்தம் பண்ணுவார்களோ அவர்களை செயித்து குதிரையை விடுவிக்க எத்தனை

காலம் எத்தனைநாள் செல்லுமோ அவர்பாதாரவிந்தங்காண ஆதலாலினி தங்கள் மனதிற்கு யுக்தமெப்படியோ அப்படி நடந்துக் கொள்ளலாமென்முன்.

இவ்வசனங்களைக் கேட்டு சோமகாசமகாராசன் சொல்லுகிறார் நமது சபையிலிருக்கப்பட்ட ராசாக்களே! கேளுங்கள், இந்தப்பூமியிற்பிறந் திறவாதபேர்யாரிருக்கிறார்கள். எத்தனை காலம் உயிருடன்பிழைத்தாலும் ஒருநாளைக்குயிறக்கவேண்டும் மேலுஞ்சூரபத்மா வென்னப்பட்டவன் இரண்டாயிரஞ்சதுர்யுகமிராச்சியபரிபாலனம்புரிந்து அக்கிரமஞ்செய்ததால்சுப்பிரமணியர்கைவேலாயுதத்தினுல் அவனுமிறந்தான் அதுகளுஞ் சாஸ்திரங்களினுற்சொல்லக்கேள்விப்பட்டிருப்பீர்கள் கார்த்திகைவீரியார்ச்சுனன்யென்னப்பட்ட காந்தருவராசன் அனேக நாட்பிழைத்திருந்து ரேணுகாதேவியினுற் பரசுராமன்கையால் ஆயிரம்சிரசுகளும் இரண்டாயிரம் அஸ்வங்களும் அறுப்புண்டு அவனுமிறந்தான் ஆகையால் யாரிறவாம லிருக்கப்போகிறவர்கள் பிரமலோகத்தையாளப்பட்ட பிர்மதேவரும் தேவேந்திராதிதேவர்களும் சொர்க்கமத்தியபாதாளமென்னு மிந்தமூன்றுலோகத்தி லிருக்கப்பட்ட ரிஷிகள் மகாத்துமாக்கள் சத்தசமுத்திரஞ்சூழ்ந்த லோகமுழுதும் மானிடராய்ப் பிறந்தவர்களும் எறும்புக்கடை எண்பத்து நான்குலட்சஞ் சீவாத்துமாக்களும் பிறந்துயிறந்து போவார்களேயல்லாமல் சாசுவதகாலம்வாழப்பட்டவர்கள் ஒருவருமில்லை ஆகையால் ஸ்ரீராமர்கைப்பாணம்பட்டிறந்தாலுஞ் சாயுச்சியமான மோட்சத்தையடையலாம். இதற்கு ஒன்றுஞ் சந்தேகப்படத்தேவையில்லை நாளைகாலமே யெல்லாரும் யுத்தத்திற்குப் பயணப்படுங்களென்ன, சபையிலுள்ளவர்கள் கலக்கந்தீர்ந்து சந்தோஷமடைந்தார்கள்.

இவ்விடத்தில் இப்படியிருக்க சத்துருக்கமகாராசன் பாளையத்தில் என்னசெய்தியென்முல், வீரசேனனுனவன் மூர்ச்சைதெளிந்தெழுந்து ரதத்தைநடத்திக்கொண்டு சத்துருக்கமகாராஜனுடையபாடிகூடாரத்தண்டையிற்போய் இரதத்தை விட்டிறங்கி யுட்கார்ந்திருக்கையில் சத்துருக்கமகாராஜர் சொல்லுகிறுர். ஓ! இராட்சத சிரேஷ்டர்களே! ராஜமன்னர்களே! யுத்தகளத்தில் நமதுசேனைகளில் எவ்வளவுபேர்மாண்டுபோனுர்கள். அதனைச்சவிஸ்தாரமாகச் சொல்லுங்களென்

றுகேட்கையில், சலவசந்தன் சொல்லுகிறுன். ஐயா சத்துருக்கமகாராஜனே! கேளும், இன்றையதினத்தில் முப்பத்தோராயிரம் அக்ரோணி சேனைகளும், சேனுபதியான உக்கிரசேனனும், நீலாட்சதனும், குகனும்மாண்டுபோனுர்கள். மற்ற சேனுசமுத்திரங்களும் படைத்தலைவர் சேனுதிபதிகளும்முள்ளுமுனைகூட முறியவில்லையென்ன அதனைக்கேட்ட சத்துருக்கமகாராஜன் வீரசேனனைப்பார்த்து சொல்லுகிறுர்.

வாரும்வீரசேனு, இன்றுயுத்தத்திற்குயாரார்வந்தார்கள். அவர்களைச் சொல்லென்றுர். ஐயா, சத்துருக்கமகாராஜனே! சோமகாசமகாராஜருடைய குமாரனுன சுரதமகாராஜனென்னப்பட்டவன் உ0அ0-அக்ரோணிசேனைகளும் உ0கூ0-இராசகுமாரர்களும் உரு-மந்திரிமார்களும் ௩கூச000 படைத்தலைவர்களும்வந்து யுத்தஞ்செய்தார்கள். அப்போதுசுரதமகாராஜன் பாணுக்கினியினுல் நான் மெய்மறந்து மூர்ச்சையடைந்தே னென்றுன். வீரசேனனுனவன் அதுகேட்டு சத்துருக்கமகாராஜன் காலசித்தனே சுரதராஜன்யுத்தஞ்செய்துக்கொண்டிருந்தானே அவனென்னமாய்ப்போனுன் எனக்குத்தெரியச் சொல்லவேண்டுமென்று கேட்டார், கேட்கையில், ஐயா, சத்துருக்கமகாராஜரே! கேளும், சுரதமகாராஜன் நம்முடைய சேனைகள்பேரில் முனைந்துபாணங்களால் வெகுசேனைகளைக் கொன்றுபோட்டான் அதுகண்டு நான் சுரதமகாராஜனை மடக்கிக்கொண்டு யுத்தஞ்செய்து மூர்ச்சையாக்கிவிட்டேன் இப்போதுதான் மூர்ச்சைதெளிந்து ரதத்தை நடத்திக்கொண்டு பட்டணம்போய்விட்டானென்று தூதர்கள்வந்து சொன்னுர்களென்றுன் காலசித்தனுனவன் அதுகேட்டு சத்துருக்கர் சொல்லுகிறுர். வாரும், காலசித்தனே! நாளை மகாயெச்சரிக்கையுடனே யுத்தத்திற்குவருவார்கள்போற் காண்கின்றது இனிமேலே நாமெல்லோரும் அதிக ஜாக்கிரதையுடனிருந்து நாளையதினத்தில் யுத்தத்தைசெயிக்கவேணுமென்று சத்துருக்கமகாராஜன்சொல்ல, காலசித்தன் சத்துருக்கமகாராஜனைப் பார்த்துச்சொல்லுகிறுனையா சத்துருக்கமகாராஜனேகேளும் சுரதராஜனே சிவன்கையில்லும் அஸ்திரங்களும்பெற்றவன் நாளையயுத்தத்திற்கு வந்தானேயாமாகில் மகாஉக்கிரத்துடன் வருவான் அவனை செயிக்கத்தக்கினபேர் நம்முடையபாளையத்தில் யாரிருக்கிறுர்கள், மகாமாயன், சலவசந்தன், நாம் ஐந்

துபேரும், ராட்சதசேனைகளுந்தான் இவர்களைக்கொண்டுயுத்தஞ்செய்து சுரதராஜனையும் அரண்ணியராசனையும் தந்தையாகிய சோமகாசமகாராஜனையும் சேனைகளையுங்கொன்று குதிரையை விடுவிக்கவேணுமேயல்லாமல் அசாரிசமா யுத்தம்பண்ணினேமேயானால் அவர்களை செயிக்கக்கூடாதென்றான். சேனாதிபதியாகிய அகம்பன் குமாரனாகிய காலசித்தனனவன் அவ்வார்த்தைக்குயாவரும் சம்மதித்தார்கள். சத்துருக்கருங் காலசித்தனைப்பார்த்துச் சொல்லுகிறார், ஓய், காலசித்தனே! நம்முடையசேனைகளையெல்லாம் பவுஞ்சிட்டுநிறுத்தி யுத்தத்திற்கு தயார்செய்யென்றுசொல்ல, அப்படியே தயார்படுத்திக்கொண்டிருந்தான். யாவரும்நாளையுதயத்திற்குவரும்படியாய் தங்கள் கூடாரம்போய்ச்சேர்ந்தார்கள்.

மறுநாள்சோமகாசமகாராஜனனவன் சூரியனுதயமாகச் சாமமிருக்கையிலெழுந்திருந்து காலைக்கடனைமுடித்து, ஸ்நானஞ்செய்து, நியமநிஷ்டைகள் புரிந்து குமாரர்களுடனும், (அசடுல) இராசகுமாரர்களுடனும், உட்கார்ந்து பந்திபோசனமாகச் சாப்பிட்டு கந்த கதம்ப கஸ்தூரி பரிமளாதிகளணிந்து ஆடையாபரணங்களை யுடுத்திக் கிரீடம் வாகுவலயந் தரித்து அம்புருப்பொதிமுதுகிற்கட்டி இரணவரிசைகள்பூண்டு, மகா சந்தோஷத்துடன் புறப்பட்டார்கள். இவர்கள் புறப்படு முன்னமே சேனாதிபதியான அஸ்வசேனன் (கூஎகூரு) அக்ரோணியானைகளும் (கூசஎல) அக்ரோணி ரதங்களும், (கூஅஅல) அக்ரோணிகால்பலமும், தயார்படுத்தி பேரிகை யறைவித்தார்கள். அதுகண்டு (ககூல) மந்திரிகளும், இரதமேறி சோமகாசமகாராசனும், சுரதராசனும், அரண்ணியமகாராசனும் வந்து சூழ்ந்தார்கள். சூழவே, (அசகூல) ரதாரூடராய் வந்தார்கள். இலட்சம் படைத்தலைவரும் யானையின்மீது சிங்கக்கொடிபரக்க வந்து சேர்ந்தார்கள். யாவரும் ஏகோபித்து யானைகள்முன்னுங் குதிரைகள் பின்னும், இரதங்கள் பின்னும், சேனைகள் தன்பின்னுமாக, அணியணியாக; சயபேரி, வெண்கலபேரிகை, ரணபேரிகை, வீரமுரசு, வெற்றிமுரசு முதலாகிய முப்பத்திரண்டு வாத்தியங்களு முழங்கத் தக்கதாகப்போர்க்களம்வந்து சேர்ந்தார்கள்.

## ஆறாம்நாள் யுத்தம்.

---

இப்பால் சத்துருக்கருடைய சேனாதிபதியான காலசித்தன், யானைகள் ஒருபக்கமும், தேர்கள் ஒருபக்கமும், குதிரைகள்

ஒருபக்கமும் நிறுத்தி' சேனைகளை நடு அணியில் நிறுத்தினன் மட்சயந்தனுமானும் சத்துருக்கரும் முன்னணியில் வந்து நின்றூர்கள். மகாமாயனும், சலவசந்தனும், அதற்கு முன்ன ணியாகநின்றூர்கள். வீரசேனனும் இராதாருடனுக சேனைக ளுக்கெல்லாம் முன்பாகநின்று வில்லையெடுத்து வளைத்து அ நேக திவ்வியாஸ்திரங்களைப்பூட்டி சோமகாசமகாராஜன் சே னைகளின்மீதுவிட்டுக்கொல்லுகிறபோது சோமகாசன் சேனை கள் முனைந்து, சத்துருக்கமகாராஜனிட பாளையங்களின் பே ரிற் பாணங்களை விட்டுச் சாடுகிறபோது இருதிறவர் சேனைக ளுங் கவிந்துக் கொள்ளவே மூண்டுக்கொண்டது யுத்தமான து, அதுகண்டு வீரசேனன் அதிக ரோஷத்துடன் பற்களை நறநறவென்று கடித்து அச்சேனைகளை முன்னுக்கு வரவொ ட்டாமல் யுகாந்தகாலத்திற் சத்தமேகங்களுங்கூடி, இடி இடி த்து, மின்னல்மின்னி, மாரிபொழிவதுபோல, சரமாரியாய்ச் சோமகாசமகாராசன் சேனைகளின் மீது பொழியும் போது அச்சேனைகள் தாளமாட்டாமல் ஓலமிட்டு வலசை வாங்கி யோடுவதைப்பார்த்த சேனுதிபதியான விஸ்வசேனன், அவ ர்களை ஓடவொட்டாமல் வீரசேனன் முன்பாக இரதத்தைநட த்தி வில்லைவளைத்து அஸ்திரங்களைப்பூட்டி வீரசேனன்விடப் பட்ட அஸ்திரங்களனைத்தும் அறுத்து எண்பது நாராசபா ணத்தை விட்டு வீரசேனன் ஏறிவந்தரதத்தையும் உடைத்து விட்டு சாரதிகுதிரைகளைக் கொன்றுவிட்டான். அதுகண்டுமறு தேரிலேறினன். அதையுந் தவிடுபொடியாக்கினன். அதனுல் வீரசேனன் கடுங்கோபங்கொண்டு தெண்டாயுதம் ஒன்றைக் கையிலெடுத்துக் கரகரவென்று சுழட்டி விஸ்வசேனன் இரத த்தைப்பார்த்து ஓரடிகொடுத்தான். அந்த அடி இரதத்தின் பேரிற் பட்டமாத்திரத்தில் இரதமானது அச்சுவேறு ஆணி வேருய்ச் சக்கைச்சக்கையாய்ப் பிளந்து பூமியில் விழுந்து விட்டது.

அதனுல் விஸ்வசேனன், அடா,வீரசேனு ! உன்னுடை ய சூரத்தனத்தை இன்றுபார்க்கிறேன். என் வஞ்சத்தைத்தீர் க்கிறேன். உன்னைக் காக்கும்படியான சத்துருக்கனும் ஆகா யவாசிகளும் பார்க்கும்படியாக எமலோகத்தில் உன்னைச்சேர் க்கிறேன் பாரென்று ஒரு கோபதெண்டாயுதத்தை யெடுத்து மலையைச் சுழட்டி யெறிவதுபோல் விசைகொண்டு சிரசைப் பார்த்து ஓங்கிவிட அதுவும் புறப்பட்டுமருகையில் வீரசேன

ன் சிறியகல்லைத் தட்டுவதுபோலத் தட்டிவிட்டுச் சொல்லுகின்றான்.

அடா, விஸ்வசேனு! பளாபளா, நன்றாய்ச் சொன்னாய் சத்தசாகரமும் வெற்றியடைந்த சத்துருக்க மகாராசரின் சேனாதிபதியென்று சற்றுமெண்ணாமல் என்னையும் அவரையும் வைதாயல்லவா, இதோ உன்சிரசைக் கொய்து விடுகிறேன் பாரடாவென்று தண்டாயுதத்தைச் சுழட்டி விஸ்வசேனன் மார்பிற் றாக்கினான். அந்த அடிபட்டவுடனே விஸ்வசேனன் மெய்மறந்து தெண்டாயுதத்தை நழுகவிட்டு அடியற்ற மரம் போலச் சாய்ந்து பூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தான்.

அதுகண்டு வீரசேனனும், சீக்கிரமாக ஒருரதத்தில் ஏறிக்கொண்டு வில்லையெடுத்து நிறுத்தி சங்கோபசங்கமாய் அஸ்திரங்களை விட்டுக் கொல்லுகிறபோது சேனைகளானது தத்தளித்துதடுமாறி ஓடத்தலைப்பட்டதைப் பார்த்து ஆரண்ணியமகாராசன் ஓடுகிறவர்களை ஓடவொட்டாமல் நிறுத்தி இரதத்தை வீரசேனன் முன்னுக்கு நடத்தி வீரசேனனைப் பார்த்து சொல்லுகிறான். அடாவீரசேனா நீயேன்தலைகீழாய் விழுகிறாய் துப்பற்ற சிலபேரைக்கொன்றோமென்று கர்வத்திருக்கிறாய் ஒருக்ஷணநேரத்துக்குள்ளே உன் மர்மங்களையெல்லாம் வெளிப்படுத்திவைக்கிறேன். பாரென்று பதினைந்து நாராசபாணத்தையெடுத்துப் பிரயோகஞ்செய்தான். அதுவும் காலகோடி விஷம்போற் சீறிக்கொண்டுவந்து வீரசேனன் விட்ட அஸ்திரங்களைகண்டித்து அவனையும் நோகச்செய்யவே வீரசேனன்பார்த்து சரீரம்வேர்த்து ஒருக்ஷணத்தில்வில்லில் அஸ்திரங்களைக்கோர்த்து ஒன்றின்மேலொன்றாய்விட்டு அரண்ணியமகாராசன் வில்லைக் கையிற் பிடிக்கவொட்டாமலும் சாரதிரதத்தைநடத்தவொட்டாமலும், செய்துமார்பின் கவசங்களையும் அறுத்துப்போட்டான் அத்தறியில்அரண்ணியமகாராசன் அதராமற் பதராமல் மகாகோபத்துடன் தன்வில்லை க-கO கOO-கOOO-கோடியென்று கணக்குமிதமில்லாமற் பாணங்களைவிட்டுச் சாரதி குதிரைகளைச் சாகவடித்து வீரசேனனையுங் கைகாலாடவொட்டாமற் களைத்து மெய்மறந்து தண்ணி தண்ணி என்று எண்ணி குண்ணும்படியாய் மூர்ச்சையடையச்செய்தான்.

அதுகண்டு காலசித்தன், சோமகாச மகாராஜன் சேனைகள்பேரில் இரதத்தை நடத்திப் பாணங்களைவிட்டுக் கண்ட

துண்டமாய்க் கால்மாடு தலைமாடாய் விழத்தக்கதாகக்கொன்று பின்பு கோபதெண்டாயுதமெடுத்து பூமியிற் குதித்துச் சுழட்டி அடிக்கிறபோது ஒவ்வோரடிக்கு யானை (ருOO) தேர் குதிரை (கக) காலாள் இலட்சம் இந்தப்படியாய் ஒரு ஜாம நேரத்துக் குள்ளே (கூருOO) அக்ரோணி சேனைகள் மாண்டு இரத்தாறு ஓடத்தலைப்பட்டது. அதனாற் சேனைகளானது காலசித்தன் முன்னுக்கு நிர்வாகஞ் செய்யமாட்டாமல் வலசை வாங்கிக் கொள்ளவே சுரதமகாராஜன் பார்த்து, சாரதியை யெச்சரித்து மகாவுக்கிரத்துடனே இரதத்தை நடத்திக்கொண்டுவந்து காலசித்தனை வளைத்துக்கொண்டு அடா காலசித்தனே! பனங் காட்டுநரி சலசலப்புக்கஞ்சுமோ அதுபோல என்னிடத்தில் வந்து பூச்சிகாட்டுகிறாய் பயப்படோம் இனியுன்னைவிடோம். கர்வங்கொள்ளாதே யென்றுவில்லைக்காட்டி அஸ்திரங்களைப் பூட்டி சரமாரியாய்ப்பொழிகிறபோது அந்த அஸ்திரங்களை யெல்லாந் தெண்டாயுதத்தினாலடித்துப் பொடியாக்கி மறுபடியுந் தெண்டாயுதத்தைச் சுழட்டி ஒரு அடிவிட்டான். அந்த அடியினாற் சுரதராஜன் இரதமானது தூளாகிவிட்டது. அப்போது சுரதராசன் லகுவில் தப்பித்துக்கொண்டு மறுதேரிலேறி அஸ்திரவருஷங்களை கணக்கு மிதமில்லாமற் பொழிகிறபோது அதுகளையெல்லாந் தடாய்த்துக்கொண்டு காலசித்தன் சொல்லுகிறான்.

அடா சுரதா, நீயோ என்னுடனெதிர்த்துப் போராடுகிறவன் கருடன்முன் கொசுபறக்குமா கனத்தவீரரைக் கையிலாகாதவன் கொல்வானோ நீ நேற்றையதினம் அடிபட்டு முறிந்தோடின யுனக்கு இன்றையதினம் அதிக பலம் வந்துவிட்டதோ ஆனாலும் பார்ப்போம். நில்லும் ஓடிப்போகாதே யென்று வச்சிரகோப தெண்டாயுதத்தைச் சுழட்டி இரதத்தைப்பார்த்து ஓரடிகொடுத்தான் அந்த அடியால் குதிரைகளும் நசித்துப்போகவே சுரதராஜன் இரதத்தைவிட்டுக் கீழே குதித்தோடிப்போயினான்.

பின்பு காலசித்தன் தெண்டாயுதத்தை எடுத்துச் சேனைகள்பேரிற் சுழட்டிவிட்டான். விடவே சேனைகள் அடிபட்டு சிரமற்றவரும், கரமற்றவரும், உரம்போனவரும், கரம்போனவரும், துண்டமானவருமாகி, காலசித்தனொருவனாற் கலங்கியோடுகின்றபோது சோமகாசமகாராஜன்கண்டு, கண்கள்பொறிபறக்க காதிரண்டிலும் புகைகளெழும்ப, மீசைகள் துடிக்க

பற்களைக்கடித்துச் சாரதியை இரதத்தைக் காலசித்தன் முன்பு நடத்தச் சொல்லி, வில்லையெடுத்து நிறுத்தி அக்கினியாஸ்திரத்தைக் கொடுத்து மந்திராபூதிகள் தொடுத்துவிடவே, அந்த அஸ்திரம் திருதிகென்றெரிந்துக் கொண்டு வருகையில் காலசித்தன் அதன்மீது ஒரு வருணாஸ்திரத்தை விட்டு அவித்துப்போட்டான். பின்னும் சோமகாச மகாராசன் ஒருபர்வதாஸ்திரத்தை யெடுத்துவிட்டான்.

அதை காலசித்தன் ஒரு வச்சிராயுதத்தால் அறுத்துவிட்டான். அதுபோகவேசோமகாசமகாராசன் பிர்மாஸ்திரத்தை யெடுத்து அபிமந்திரித்துப் பிரயோகஞ்செய்தான். காலசித்தனுந் தன்னுடைய பிர்மாஸ்திரத்தை எடுத்துவிடவே இதுவு மதுவும் ஒன்றோடொன்று முட்டியும், மோதியும், பொடிப் பொடியாய்ப் பூமியில் விழுந்ததுகள். அப்போது சோமகாசமகாராஜன் இராட்சதரைக் கொல்லவேணுமென்று நாராயணாஸ்திரம் எடுக்கவே தேவர்களெல்லாம் பயந்து மேலண்டத்திற்கு ஓடிப்போய் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அந்தவேளையிற்சோமகாசமகாராசன் காலசித்தமகாராஜனைப்பார்த்துஅடா, இராட்சதர்களே! இதோ என்கையிலிருக்கிற நாராயணாஸ்திரத்தைப்பார்த்தாயோ இந்தஅஸ்திரத்திற்குத்திரிமூர்த்திகளும்நிகரில்ல, ஆகையால் நீயும் உன்னுடைய சேனைகளும்உனக்குத்தலைவனான சத்துருக்கனும்,நாராயணாஸ்திரம் விடுமுன்னே சரணமடைந்தீர்களேயானால் உயிர்தப்பிப் பிழைத்தீர்கள். இல்லாவிட்டால் மரணமடைவீர்கள் இதோவிடுகிறேன் பாரென்றான். அதற்கு காலசித்தன் நகைத்துச்சொல்லுகின்றான்.

ஐயா, சோமகாசமகாராசனே! கேளும், அந்த ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீராமனாகவந் தவதரித்து எங்கள்மனதி லிடைவிடாமற் குடியிருக்கிறார். நீர் விட்ட நாராயணாஸ்திரம் எங்களை ஒன்றுஞ் செய்யமாட்டாது, ஸ்ரீராமரைவணங்காதபேரை நாங்களா வணங்குகிறது ஒருகாலத்திலும் இல்லை நீர்பிழைக்க வேணுமென்றால் எங்களை வணங்கிச் சுகித்திருமென்றான். அதற்கு சோமகாசன் கோபங்கொண்டு நாராயணாஸ்திரத்தைப் பூசைசெய்துவிடவே, அது அக்கினிகளைவாரி யிறைத்துக் கொண்டு அண்டபகிரண்டமும் ஆயிரத்தெட்டு அண்டங்களுங்குலுங்க, ஆர்ப்பரித்து வருகிறபோது காலசித்தன்வில்லை

த் தேரின்பேரில்வைத்து இரண்டுகரத்தையுஞ் சிரத்தின்மீது கூப்பி தோத்திரஞ்செய்தான்.

அப்போது நாராயணஸ்திரமானது குரூரத்தை யடக்கிக்கொண்டு காலசித்தனைக் கண்டு அவனை விடுத்து ஆயுதம்பிடித்தபேரை பஸ்மீகரம் பண்ணி நிராயுதராய் நின்றபேரைக் கடாட்சித்துக்கொண்டு வந்து சத்துருக்க மகாராஜனைக் கண்டு இவர் ஸ்ரீமந் நாராயணரே யென்று மனதிலெண்ணி வலசாரி யிடசாரியாக வலம்வந்து சத்துருக்க மகாராசனுடைய அம்புருப்பொதியில் நுழைந்தது. அதுகண்டு சகலரும் ஆச்சரியமடைந்தார்கள். பின்னுஞ் சோமகாசமகாராஜன் அதிககோபங் கொண்டு பாசுபதாஸ்திரத்தை யெடுத்து மந்திராபூதிகள் செய்து வில்லிற் சந்தித்துவிட்டான். அந்தப் பாசுபதாஸ்திரம் ஆவென்று வாயைத்திறந்து அண்டமுகடு பிளக்கும்படியாய் இறைச்சலிட்டுக் கொண்டுவருகிறதைக் காலசித்தன் கண்டு, சிவன்கையில் தான்பெற்றபாசுபதாஸ்திரத்தை யெடுத்து மந்திராபூதிகள்செய்து பிரயோகப் படுத்தினான்.

அந்தப்பாசுபதாஸ்திரத்துக்கு அஷ்டதிக்குப் பாலகர்களுங்காவலாகப் புறப்பட்டு சப்தமேகங்களும் சாகரமும் ஓசைப் படுவதுபோல, இறைச்சலிட்டுக்கொண்டு இரண்டு பாசுபதாஸ்திரமும்நெருங்கி யுத்தம்பண்ணுகிறபோது தேவர்கள்கண்டு திடுக்கிட்டு தேவேந்திரனுடன் பரமசிவனிடத்திற் போய்முறையிடவே பரமசிவனும் ரிஷபவாகனரூடராய், இரண்டு பாசுபதாஸ்திரத்துக்கும் மத்தியில்வந்துநின்றார். அப்போது அந்த பாசுபதாஸ்திரங்களும் யுத்தம்பண்ணுவதை விட்டு வலம்புரிந்து நிற்க, அப்போது சிவனானவர் இரண்டையும்பார்த்து யுத்தம்பண்ணவேண்டாம் அவரவர்கள் அம்புருப்பொதியிற் சேருங்களென்று உத்திரவுசெய்து மறைந்துபோயினார்.

அவ்வாறே அஸ்திரங்க ளவரவர்களிட அம்புருப் பொதியில்வந்தடையவே காலசித்தன் ஒரு வாய்வாஸ்திரத்தை விட, அது சோமகாசமகாராஜனுடைய இரதத்தை மேற்கு முகமாய்ப்பின்னிட்ட வண்ணம் ௩௫0-காதவழி தள்ளிக்கொண்டு போய்விட்டது அதனைக்கண்ட யாவரும் ஆகாயவாசிகளும், இதுயென்ன புதுமையென்று மிகவுஞ் சந்தோஷமடைந்தார்கள். அப்பாற் காலசித்தன், மகாமாயன் யுத்தஞ் செய்யுமிடம்வந்துசேர்ந்தான். அக்காலையில் சூரதராஜன் அதிககுரூரமா

ன கோபத்துடன்சொல்லிக் கொள்ளுகிறான். ஏதடா, இந்த ராட்சதன் ஆறுநாளிரவு பகலாய் போராடியும் அவன் களைக் கிறவனாகக் காணவில்லையே, இவனுக்குப்பின்பலமும்வந்திருக்கிறது. ஆனாலுமென்ன, வெந்நீரில் வீடுவெந்துவிடுமா நல்லது இவனுடனே போராடி இவனைசெயித்து இவனுக்குப் பின்பலமாக வந்திருப்பவர்களையுங் கொன்றுவிடுகிறே னென்று அநேக திவ்யாஸ்திரங்களை விட்டு மகாமாயனைக் கைகாலாடவொட்டாமல் அடிக்கிறபோது மகாமாயனும் வருகிறபாணங்களைத்தனையும் அறுத்தெரிந்துபோட்டுசுரதராசன்பேரில் முனைந்து, மிகவுங் கூர்மையோடுங் கூடியிராநின்ற திவ்வியாஸ்திரங்களைவிட்டுச் சுரதராஜன் சரீரத்தை சல்லடைக் கண்களாகத் துளைத்து அவன்மார்பிலணிந்த கவசத்தையும் அறுத்துவிட்டான். அதனாற் சுரதராசன் ஆயாசப்படாமல் ௰0-திவ்வியாஸ்திரங்களை விற்லிற் சந்தித்து ஒன்றின்மேலொன்றாய்விட்டு மகாமாயனையுங் கை மெய் சலிக்கும்படியாய் ஒருவர்க்கொருவர் பின்வாங்காமல் இடசாரி வலசாரியாய் இரதத்தைத் திருப்பிக்கொண்டு ஸ்ரீராமபிரானும் இராவணனுஞ் செய்த யுத்தத்தைப்போற் புறமுதுகு கொடாமல் நின்று யுத்தஞ் செய்கிறபோது சுரதராஜன் மிஞ்சி உ௰-திவ்வியாஸ்திரங்களை விட்டு மகாமாயனேறிவந்த இரதத்தையுமுடைத்து சாரதி குதிரைகளையுங் கொன்று மகாமாயன் பிடித்திருந்த வில்லையுமுறித்து நிராயுதனாக்கிவிட்டான். மறுபடியும் மகாமாயன் மற்றொரு தேறிலேறினான்.

அதையும் நாலு திவ்வியாஸ்திரங்களைவிட்டுச்சக்கைச்சக்கையாய்ப்பேர்த்தெறிந்துமகாமாயனுக்குத் தேர்வரவொட்டாமல்பாணங்களைவிட்டு அடித்துக்கொண்டிருக்கையில் மகாமாயனுக்குகண்கள்சிவப்பேறி,கடுங்கோபமீறி, கையில்வச்சிராயுதத்தையெடுத்துக்கிறுகிறென்றுசுழட்டிஓடிவரும்போதுசுரதராஜன்கண்டு இவன் ஏதோ மிஞ்சி ஓடிவருகிறானென் றஞ்சாமல்பஞ்சுபோற் பறக்கடித்துத் தஞ்சந் தஞ்சமெனக் கெஞ்சத்தக்கதாக ஒரு சத்தியெடுத்து தூபதீபங்களுங் கொடுத்து விட்டான் அந்தச்சத்தியானது மகாமாயன் எங்கேயெங்கேயென்று அகாரவுகாரத்துடன் உருவேற்றி ஆலகாலவிஷம்போற் சீறிக்கொண்டுவந்து மகாமாயன்மார்பிற் சடாலென்று பாய்ந்து முதுகிலுருகிப் போய்விட்டது அதனாலடியற்ற பனைபோல் சாய்ந்து ஐயனே! ராமாவென்று மகாமாயன் மரணமடைந்தான்.

## காலசித்தனுக்கும் சுரதராஜனுக்கும் ஏழாம்நாள்யுத்தம்.

மறுநாட்காலசித்தன்வந்து அடா, சுரதனே! நீயொரு வீரனே அடிக்கடிவந்து யுத்தம்புரிந்து ஓடிப்போகிறதொரு வீரமோ உன்னைக்கொல்லுவது எனக்கொருபாரமோ முகத்தில் மீசையுள்ளவனானால் இப்போதாவது ஓடாமல் நின்று யுத்தம்பண்ணடாவென்றான். அதுகேட்ட சுரதமகாராஜனானவன்சொல்லுகிறான். அடா, காலசித்தனே! உன்னிலுமிஞ்சின இராட்சதசிரேஷ்டன், விழுந்ததை நீயறியாயோ "அடிமேலடியடித்தால் அம்மியும் நகருமென்ற" பழமொழியை நீயறியாயோ என்னுடைய கைவில்லுக்கு நீயோசிறுபுல்லு ஆகையால்குதிக்காதேயென்றான். அஃதுணர்ந்தகாலசித்தன்கூறுகிறான். அடாசுரதா! நல்லவசனஞ் சொன்னாய் செல்வஞ் சொல்லுக்கஞ்சுமா கல்விசபைக்கஞ்சுமா அஞ்சாதுபோற் கைகண்டவீரனான நான் யுத்தத்திற்கஞ்சுவேனா உன்னைப்பெற்ற தகப்பன்சென்றவழி நீகண்டிலையோபாரடாவென்று, அநேகதிவ்யாஸ்திரங்களைச் சொரிந்தான். அதற்குச் சுரதராஜன் அக்கினியாஸ்திரமொன்றெடுத்து அபிமந்திரித்துவிட்டு அதுகளைக் கொய்தான். கொய்யவே காலசித்தன் கடினமான ஒருவருணாஸ்திரத்தை யெடுத்து தனுசிற்றொடுத்து அபிமந்திரித்துவிட்டான். அதுமேககற்சனைபோலிறைச்சலிட்டு யானைத்துதிக்கைநீரைப் பானம்பண்ணுவதுபோற் சேனைகளை ஆவாகனஞ்செய்தது சுரதராஜன் சுருக்கினில் ஓர் பாணத்தையெடுத்து மந்திராபூதிகள் கொடுத்துவிடுமுன்னமே காலசித்தன் கடு-திவ்வியாஸ்திரங்களை விட்டு அந்த நாகபாணத்தைப்பார்த்து விட்டுவிட்டான். அந்தசுழற்பாணம் வருகிறதற்குமுன்னமே சுரதராஜன் லகுகொண்டு மறுதேரிலேறினான் அதைக்கண்டு காலசித்தன் கைகொட்டி சிரித்து, அதிககோபமானான் அந்தசுழற்பாணமானது ரதத்தை ஆகாயமாகக் கிளப்பிக்கொண்டுபோய் மேகமண்டலந்தாண்டி வாயுமண்டலத்துச் சுழலிலகப்பட்டு ரதமானது தலைகீழாய்ச்சாரதி குதிரைகளுடன் பூமியில்விழுந்து நசித்துப்போனார்கள்.

அத்தருணத்தில் சுரதராஜன் உக்கிராகாரனாக வில்லைநிறுத்திச் சங்கோபசங்கமாய்ச் சரமாறிப்பொழிந்துக்கொண்டு

பருவதமேறியிழிந்து ஓடிவருபவன்போற் பாணங்களை விட்டுக்கொண்டு இரதத்தை நடத்திவருகையில் காலசித்தன்பார்த்து ஏதடா, சுரதமகாராஜன் உக்கிரத்துடன் முனைந்து யுத்தம் பண்ணுகிறான். இனிநாம் அசாக்கிரதையா யிருக்கலாகாதென்று சுரதமகாராஜன் விடப்பட்ட அஸ்திரங்களையெல்லாந் தும்சப்படுத்தி இருவருமுனைந்து போர்புரியுங் காலத்திற் சோமகாச மகாராசனானவன் பாணவேகமடங்கி ரணக்களத்தைவந்து பார்க்கும்போது வெகுதூரத்தில் யுத்தம்பண்ணுகிறதைக்கண்டு இரதத்தை விட்டுக்கொண்டுவந்து வேடிக்கைபார்த்துக்கொணடிருந்தான். அக்காலையில் ராட்சதப்படைத்தலைவர்க ளெல்லோரும் ஒன்றாய்க்கூடி சேனைகளைமடக்கியடித்துப் போராடினார்கள். அப்போது சுரதமகாராஜனானவன் ஏதடா, காலசித்தன் பொல்லாதவனாயிருக்கிறான். அன்னாகாரம் ஊணுறக்கமில்லாமல் ஏழுநாளாக இரவும் பகலும் நம்மைவிடாமற் போர்புரிகிறான். ஆகையாலிவன் தேரைப் பொடியாக்கவேண்டுமென்று மனதிற்கருதி பத்து திவ்வியாஸ்திரங்களைவிட்டு ரதத்தை யொடித்து மார்பின் கவசத்தையும் பொடியாகச்செய்து கையிற்பிடித்திருந்த வில்லையு மொடித்து மறுதேரிலேறவொட்டாமல் சரக்கூடங்கட்டிப்போனான். அதுகண்டுகாலசித்தனானவன் சொல்லுகிறான். அடாசுரதா, என்னுடன் திரிமூர்த்திகளானாலும் போராடமாட்டார்கள். ஆனபடியால் ஏழுநாளாக இரவும்பகலும் என்னுடன் சண்டைசெய்தாயாகையால் உன்னை மெச்சினேன் இதோ உன்னைச் சண்டனூருக்குக் கொண்டுபோகச் செய்கிறேனென்று வச்சிரகோபதெண்டாயுதத்தையெடுத்து கிறுகிறென்று சுழற்றிவிடுமுன்னஞ் சுரதராஜன் கண்டு, அடா காலசித்தா குலைக்கிறநாய் வேட்டையாடா தென்றுகண்டிலாயோ மனக்கர்வத்தை விட்டிலாயோ வென்றுதனக்குச் சிவசுப்பிரமணியர் கொடுத்தருளியவேலாயுதத்தையெடுத்துமந்திராபூதிகள்செய்துவிடவேஅந்தவேலாயுதமானது வெளிப்பட்டுஅண்டங்குலுங்க அம்புவிகலங்க, தேவர்களு மூவர்களுந் தியங்க, யாவருமயங்க, அக்கினிப்பொறிகளைவாரிவாரியிறைத்துக்கொண்டு ஆர்ப்பரித்துகாலசித்தனை தேடிக்கொண்டுவேலானதுவருகையில், வுச்சிரகோப தெண்டாயுதத்தைச் சுழற்றிவிட்டானந்ததெண்டாயுதமானதுவேலின்மேல் போய்த்தாங்கி வேலாயுதத்தை பூமியிற்றள்ளிவிட்டு சுரதராஜனைப்பார்த்துச் சுழன்றுவருகிற

போதுசுரதராஜன் அநேகதிவ்வியாஸ்திரங்களைவிட தடாய்த்துக்கொண்டு சுரதமகாராஜன் இரதத்தின் மீதுதபாலென்று விழுந்து இரதமுறிந்துசாரதிகுதிரைகளுடன் சாகவே, சுரதராஜன்தப்பித்துக்கொண்டுமறுதேரிலேறினான். அந்தச்சமயத்தில் வேலானது உயிருண்டாகிறபோது காலசித்தனானவன் கத்திகேடயமெடுத்து வேலாயுதத்தை நறுக்கினான். அதுசற்றுமசையாமற் காலசித்தனானவன்மார்பிற்பாய்ந்து முதுகிலுருகிப்போயிற்று. அதனால் காலசித்தன் ஸ்ரீராமா ராமாவென்று வாய்விட்டலறிப் பனைபோற் சாய்ந்து மரணமூர்ச்சையடைந்தான். அதுகண்டு தேவர்கள் துயரமானார்கள்.

அப்பால்சுரதராஜன் சந்தோஷமாய் இரதத்தைவிட்டுக்கொண்டுவருகிறபோது சேனைகள் சுரதமகாராஜனை விடாமல் வளைத்துக்கொண்டு ஆயுதஅஸ்திரங்களைவிட்டுயுத்தம்பண்ணிக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கையில்எண்பத்திநான்கு இராசகுமாரர்கள் சத்துருக்கமகாராசனை விடாமல் வளைத்துக்கொண்டுயுத்தஞ்செய்யுங்காலத்தில்சத்துருக்கமகாராசனானவர் இராஜகுமாரர்களேறிவந்த இரதங்களையுடைத்து,இராசகுமாரர்கள் பேரில் ஒன்றுக்கு நான்குபாணம்விட்டு சிரங்களைக் கண்டித்துப்போடவே உதிரவெள்ளமானது ஆறுபோலோடியது. அதுகண்டு சத்துருக்கமகாராஜன் சுரதராஜன்பேரில் இரதத்தை நடத்திச் சுரதமகாராஜன் இராக்ஷதாள்விடப்பட்ட அஸ்திரங்களையெல்லா மறுத்துத்தள்ளி சுரதராஜனையுங் கைகாலாடவொட்டாமல் பாணங்களைவிட் டடிக்கிறபோது சுரதராஜன் கண்ணுக்கு சத்துருக்கரைப்பார்க்க பயங்கரமாகி இவன்றானே ஸ்ரீராமபிரானிட தம்பியான சத்துருக்கமகாராஜனென்பவ னிவ்வளவுபராக்கிரமம்பொருந்தியவனுகையாற்றானே அஸ்வத்தின்பின்னாலனுப்பிவைத்தார். ஆனாலுமென்ன, நமக்குச்சிவன்கொடுத்தவில்லும் அஸ்திரமுமிருக்கஆர் தானென்ன செய்யக்கூடு மச்சமென்ன வென்றுமனதைத் திடப்படுத்திக்கொண்டு வில்லையெடுத்து நிறுத்தி அதிக தீக்ஷண்ணியமாயிருக்கப்பட்ட பத்து திவ்வியாஸ் திரங்களையெடுத்துப்பிரயோகம்பண்ணினான்.

அதுகள் அக்கினிச்சுவாலையாய் நாகசற்பம்போற் சீறிக்கொண்டுவேகமாகவருகிறபோதுசத்துருக்கமகாராசனானவன்

கண்டு ஒருராமபாணமெடுத்து மந்திராபூதிகள்செய்துவில்லிற் சந்தித்துப் பிரயோகம் பண்ணினான், அது வெப்படியாயிற் றென்றால், எடுக்கும்போது நூறு புறப்படும்போது ஆயிரம் இவ்வாறாக இராமபாணமானது ஒன்றின்மேலொன்றாய்ப்புறப் பட்டு காலக்கோட்டி விஷம்போற் சீறிக்கொண்டு சுரதராஜன் விடப்பட்ட பாணங்களையெல்லாம் நாசஞ்செய்து அவன் சரீ ரத்தைச் சல்லடைக்கண்களாகத் துளைத்து இரதத்தைமுறித் துசாரதி குதிரைகளையும் அதம்பண்ணிவிட்டு அப்பாணமான து அம்புறுப்பொதியில் வந்தடைந்தது அதுகண்டு சுரதனாச் சரியப்பட்டு ஆ! ஆ! இதென்னபாண மின்றையவரைக்கும் நாம்கண்டதில்லையென்று மறுதேரிலேறிவில்லையெடுத்து அம் புறுப்பொதியில்கையைவைத்து இதுபத்து இதுநூறு இது ஆயிரம் இதுபதினாயிரம் இதுலட்சம் இதுகோடியென்று கணக்குமிதமில்லாமலும் ஓய் ஒழிச்சலில்லாமலும், அஸ்திர ங்களைச் சோனைமாரிபோற் சொரியுங்காலையில் சத்துருக்கமகா ராசனும் ஒரு நாராயணாஸ்திரமெடுத்து அபிமந்திரித்துப்பிர யோகம்பண்ணினார். அந்தநாராயணாஸ்திரமானது வில்லை வி ட்டு வெளிப்பட்டு ய-ா-சூ-யசூ-நூறாயிரம்லட்சம்கோடியென்று சொல்ல மிதமில்லாதபாணத்தை அவயங்காத்துக்கொண்டிரு ந்த நாகசற்பத்தைக் கோலாற்றட்டினால் அதெப்படிசீறிக்கொ ண்டுவருமோ அதுபோலச் சுரதராசன்விட்ட பாணங்களையெ ல்லாம் அறுத்துப்போட்டு அவன் சரீரத்தை இரத்தமயமாக் கிவிட்டு நாராயணாஸ்திரமானது அம்புறுப்பொதியில் வந்த டைய, அப்போது சுரதமகாராசனும் வில்லைத் தேரின்பேரில் நழுகவிட்டு ஆயாசமடைந்தான். அதுகண்டு சத்துருக்கமகா ராசன் இரதத்தைவிட்டுக் குதித்து, சுரதமகாராஜனிட இரதத் திலேறி, அவனை ஆயாசந் தெளியும்படியாய்தன்னுடையகச் சியுரையிலிருந்து சஞ்சீவிவரிசை அவிழ்தங்களைச்சுரத்ராசன் பேரிற்றடவ, அவன் சரீரம் எப்போதும்போலாகிச் சுரதராச ன்கண்ணைதிறந்து பார்க்குமுன்னமே இரதத்தைவிட்டுகுதித் துச் சத்துருக்கர் தமது இரதத்தில்வந்தேறினார்.

அவராரென்றால் பல்லாயிரங்கோடி அண்டத்தையுங்கெ ற்பத்தில்வைத்து இரட்சிக்கப்படாநின்றகர்த்தாவாகியஸ்ரீரா மரிடசகோதரனான சத்துருக்கமகாராசனைக்கொண்டாடினார்க ள் அந்தச்சமயத்தில் சுரதராஜன்கண்ணைவிழித்துப் பார்த்து

மறுதேரிலேறி தன்வரப்பிரசாத அக்கினியாஸ்திரத்தை எடுத்துஅபி மந்திரித்து வில்லிற் ரொடுத்து பிரயோகம் பண்ணிவிட்டான். அந்தபாணம்வெளிப்பட்டு வடவாமுகாக்கினியை வாரி யிறைத்துக்கொண்டு திருதிகென்றுபத்திரியெரிய, அக்கினியைக்குபீல்குபீலென்றுகக்கிக்கொண்டு வருகிறதை சத்துருக்கமகாராஜன் கண்டு இராமபாணமாகிய அக்கினியாஸ்திரத்தையெடுத்துமந்திராபூதிகள் கொடுத்துப் பிரயோகஞ்செய்தார். அந்த அக்கினியாஸ்திரமானது புறப்பட்டு வடவாமுகாக்கினிக்குச்சமதையாய் நெருப்புகளை கக்கிக்கொண்டு சுரதராஜன்விட்ட அக்கினியாஸ்திரத்தின் பேரிற் சடாலென்றுபாய்ந்து ஒன்றோடொன் றூடுதாக்கிச் சுரதராஜனிட அஸ்திரத்தைக் கமளீகரம் பண்ணிப்போட்டு அம்புறுப்பொதியில்வந்தடைந்தது. அதனுற்சுரதராஜன்கோபமீறிபிர்மாஸ்திரத்தை யெடுத்து சத்துருக்கமகாராஜனைப் பார்த்து ஓ! சத்துருக்கமகாராஜனே கேளும், இதோ என்கையிலிருக்கும் பிர்மாஸ்திரத்தைப் பார்த்தையா, இந்தப்பிர்மாஸ்திரம் விருதாவிற்போகாது இதனுல் உன்னையும் உனக்குத்துணைவந்த ராட்சதாளையுங் கொன்று உன்தமையன் ஸ்ரீராமரையு மழைப்பிப்பே னப்படி வராதபடிக்கு என்தகப்பனை வணங்கிக் குதிரையை விடுவித்துக்கொண்டுபோய் உன்தமையன் கையினுல் யாகஞ்செய்துவைப்பாய் இல்லாவிட்டால் நீயாகம்பண் ணுகிறது ஸ்ரீமந்நாராயணருக்கே தெரியுமென்ருன். அதுகேட்டு சத்துருக்கராசன் குலுங்கநகைத்துச் சொல்லுகிருர்.

ஓ! இராஜகுமாரனே! கேளும், நல்ல வசனம் புகன்ருய், நீயோ என்னைக் கண்ணெடுத்துப் பார்க்கிறவன் நீபடப்போகிற பாடு இன்னதென்று தெரியாமல் என்னை மிரட்டுகிருய், உன் பிர்மாஸ்திரம் என்னசெய்யக்கூடும். நீ முகத்திலே மீசைபடைத்தவனேயாலுல் என்னையும் என் சேனைகளையுஞ் செயித்து என் தமையனை யிவ்விடமழையும், பார்ப்போமென்ருர். அதுகேட்டு சுரதராஜன் சினமிகுந்து பிர்மாஸ்திரத்தை விட்டுவிட்டான். அந்த பிர்மாஸ்திரம் வெளிப்பட்டு சப்தசாகர நீரையுஞ் சுவறத்தக்கதான வடவா முகாக்கினியைப்போலத் தகத்தகாயமாய் எறிந்துக்கொண்டு வருகிறபோது சத்துருக்கமகாராஜனுந் தம்முடைய இராமபாணமாகிய பிர்மாஸ்திரத்தையெடுத்து பூசைநைவேத்தியங் கொடுத்து வில்லிற்சந்தித்துவிட்டுவிட்டார். அந்தப்பிர்மாஸ்திரமும் வெளிப்பட்

டு ஆலகாலவிஷம்போற் சீறிக்கொண்டு சுரதராஜன்விட்ட பிர்
மாஸ்திரத்தைக் கமளீகரஞ்செய்துப்போயிற்று. அதைப்பார்
த்து சுரதராஜன் நாராயணாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்
தான். அந்த நாராயணாஸ்திரமும் வில்லிலிருந்து விடுபட்டு
ஆயிரத்தெட்டண்டமுங் குலுங்க, ஆவென்று வாயைத்திற
ந்து வருகிறபோது சத்துருக்கர் பார்த்து தம்முடைய இரா
மபாணமாகிய நாராயணாஸ்திரத்தையெடுத்து அதற்கு பூசை
நைவேத்தியங்கள் புரிந்துவிட்டார் அந்த நாராயணாஸ்திர
மானது புறப்பட்டு ஆயிரத்தெட் டண்டமும் (௨௨௪) புவன
மும் சப்தசாகரமுங் குலுங்கும்படி தேவர்களும் பயந்தோட
அதிவேகமாய் சுரதன்விட்ட நாராயணாஸ்திரத்தின்மீது திடீ
லென்றுவந்துபாய்ந்து அதைக்கமளீகரம் பண்ணி விட்டுப்
போயிற்று. அதனைக் கண்டு சுரதராஜன் அதிகசினங்கொண்டு
அநேக பாணங்களை வில்லிற் சந்தித்து சோன மாரியைப்போ
ல சரமாரிபொழிந்து உடனே ஒருசத்தியை யெடுத்துப் பூசை
கள் செய்துவிடுத்தான். அந்த சத்தியானது விடுபட்டுமண்வி
ண்ணதிர, அக்கினிக்கொழுந்துகளோட, அதிவேகமாக வரு
வதைச் சத்துருக்கமகாராஜனறியாமற் பாணங்களை யறுத்துக்
கொண்டிருந்தார் இந்தவேளையிற் சத்தியானதுசத்துருக்மகா
ராஜனுடைய மார்பிற் குபீலென்றுவந்து பாய்ந்து முதுகிலு
ருகமாட்டாமல் திகைத்துவிட்டது. அப்போது சத்துருக்க
மகாராசன் அந்த அதிர்ச்சியினாலே ஸ்ரீராமா ராமாவென்று
கைவில்லை நழுகவிட்டு இரதத்தின்பேரிற் சாய்ந்து விட்டார்
அதை தேவர்கண்டு மகா துயரமானார்கள்.

அந்தச் சமயத்தில் இராட்சதாள் சுரதராசனை வளைத்து
க்கொண்டு யுத்தம்பண்ணினார்கள். இதிலிரண்டு இராட்சதாள்
தலையின்மீது கையைவைத்து அழுதுக்கொண்டு அயோத்தி
யாபுரி பட்டணஞ்சென்று இராமபத்திரசுவாமியைக்கண்டு சா
ஷ்டாங்கமாக தெண்டஞ் சமர்ப்பித்துச் சொல்லு கிறார்கள்.
ஐயா ரகுநந்தனா, கேளும் வாரணாபுரிபட்டணத்தை யாளப்ப
ட்ட சோமகாசமகாராசன் குமாரன் அரண்ணியராச னென்
னப்பட்டவன் நாம்விட்ட குதிரையைப் பிடித்துக்கட்டி யுத்த
த்திற்குவந்தார். அப்போ அரண்ணியமகாராசன் தம்பியாகிய
சுரதராசனும் அவர்கள்தகப்பன் சோமகாசமகாராசனும் சே
னைகளைக் கூட்டிக்கொண்டு யுத்தஞ் செய்கிறபோது சுரதராச

ன்மிஞ்சி வெகுசேனைகளையும் இராட்சத சிரேஷ்டர்களையுங் கொன்று தண்டுக்கு இராசாவாகிய சத்துருக்கமகாராசனையும் மூர்ச்சையடையச் செய்து இராட்சதாள் தண்டிற் புகுந்து சண்டைசெய்துக்கொண் டிருக்கிறார்களென்று கூறினார்கள். அதனைக்கேட்டு ஸ்ரீராமபத்திர சுவாமியானவர் தம்பியாகிய சத்துருக்கர் மூர்ச்சித்திருக்கிறாரென்று கேழ்க்கவே, மெத்த துயரப்பட்டு பிரலாபிக்கையில் பரதலட்சுமணர் வந்து நமஸ்கரித்து சுவாமியினுடைய துயரத்தையாற்றிச் சொல்லுகிறார்கள். அண்ணுவே, அடியேன்களுக்கு செலவுகொடுத் தனுப்புவீரே யானால் அந்த சோமகாசமகாராசனையும், அவனுடைய புத்திர மித்திரசேனாதிபதிகளையுங்கொன்று, அவன் பட்டணத்தையுங்கொள்ளைகொண்டு தம்பி சத்துருக்கனையுஞ் சேனைகளையுமெழுப்பி குதிரையின்பின் னனுப்பிவிட்டுசலுதியில்வருகிறோமென் றுரைத்ததம்பிமார்களுக்கு ஸ்ரீராமர் சொல்லுகிறார். கேளும், தம்பிமார்களே! அந்தராசனோ மிகவும் பகவான்போற் றட்டுபடுகின்றது. நம்முடைய குதிரையைப்பிடிக்க, திரிமூர்த்திகளாலும் வல்லமையிராது. ஆகையால்நாமேபோய் குதிரையைவிடுவித்துக்கொள்ளவேண்டுமென்று சொல்ல, அம்மொழியைக்கேட்ட பரதலட்சுமணர்முதலாகிய அச்சபையிலுள்ள சகலரும், விசனமடைந்தார்கள். அதேனென்றால், ஆயிரத்தெட்டண்டமும் (உ௨௪) புவனமுஞ் சத்தசாகரமும் ஈரேழுபதினுலுலகத்தையும் ஏகசக்ரமாய் ஆண்டஇராவணேஸ்வரன் தம்பி கும்பகர்னன், பிள்ளைபேரன்மார் ஆயிரம் வெள்ளம் மூலபலம் முதலான இப்படிக்கொத்தசூரரையெல்லாம் இராம பாணத்துக்கு இறைகொடுத்தது போதாமல் அவனுக்குச் சகாயமாகவந்த சதகண்டராவணனும், சகஸ்திரகண்டராவணனும், அவர்களுடைய அண்ணன் தம்பிமார்மைத்துனன் பிள்ளை பேரன்மார் பதினுயிரவெள்ளம் இராட்சதாள் அனைவரையும் இராமபாணத்திற் கிறைகொடுத்திருக்கையில், இந்த ராசனையும் அவன்குமாரரையும் ஒருபெரிதாயெண்ணி, இத்தனை பிரமுகாளையுந் தள்ளிவிட்டுத் தானேபோகவேண்டுமென்று சொல்லுகிறாரென்று விசனப்பட்டு ஒன்றுஞ் சொல்லாமல் மௌனமாயிருந்தார்கள்.

அப்படிமௌனமாயிருந்த,தம்பியாரையும்பிரமுகாளையும் பார்த்துச் சொல்லுகிறார். தம்பிமார்களே இன்னமிச் சபைபி

லிருக்கப்பட்டவர்களே கேளும், அந்த வாரணபுரியாளப்பட்டசோமகாசமகாராசனே, அற்பசொற்பரென்றெண்ணவேண்டாம் முன்னால் நாரதர் சொல்ல, நான் கேழ்விப்பட்டிருந்தேன். ஆனபடியால் நம்முடைய குதிரையைப் பிடித்துக் கட்டினான். நான்போகாவிட்டால் அரியரப் பிரம்மாதிகள்போய் நமக்காகப்போர் புரிந்தாலும் குதிரையை விடுவிக்கமாட்டார்கள். அவர்களுடையமனோலயத்தில் ஸ்ரீமந்நாராயணர்இடைவிடாமல் எந்நேரமும் குடியிருக்கிறார். ஆகையால் அவர்களை செயிக்கப்பரமசிவனாலுமாகாதென்றார். அதைகேட்டுதம்பிமார் முதலியவர்கள் மனக்கலக்கம் நீங்கி மகிழ்வுற்றார்கள் அப்பால் ஸ்ரீராமமூர்த்தியானவர் சேனாதிபதியான வானுகோபனையும், பஞ்சகண்டனையுமழைத்து நம்முடைய தண்டு தளத்தையெல்லாம் பயணப்படுத் தென்றுத்தரவுசெய்து தாமும் தம்பிமார்களுடன் கூடவெழுந்து அரண்மனைக்குச்சென்றார். அப்போது நீலாட்சதனும், வானுகோபனும், பஞ்சகண்டனுஞ் சென்று, தண்டை வெளிப்படுத்தினார்கள். அதெப்படியென்றால் (கஅ) வெள்ளையானைகளும், (கூ0) வெள்ளங் குதிரைகளும், (அக) வெள்ளம் ரதமும், (நசஉ) வெள்ளஞ் சேனைகளும், தயார்செய்தார்கள். அக்காலையில் இராமர் லட்சுமண பரதருடன் கோதண்டத்தைக் கையிற் பிடித்துரதாருடரானார்கள். இவர்கள் ரதமேறவே (ரு0) இராசகுமாரர்களும் இரதமேறி வந்தார்கள். (கஉக) மந்திரிமார்களுடன் சுமந்திரரும் இரதமேறி ஸ்ரீராமரிடம் வந்து சூழ்ந்தார்கள். அனுமான், அங்கதன், நீலன், (உச) படைத்தலைவருடன் சுக்ரீவமகாராசனும், இரதத்திலேறி வந்தார்கள். (ருசரு000) கோடிபடைத்தலைவர் சேனாதிபதிகளுடன் வானுகோபனும், பஞ்சகண்டனும், இரதமேறிவந்தார்கள். தேவசுந்தரனும், மாலியவானும், இரதமேறிக் கருடக்கொடி பிடித்து நானாவிதவாத்தியகோஷ்டமுழக்கத்துடன் யாவரும் வாரணபுரிக்கு புறப்படுகையில் வையமளந்த ஐயனாகிய மகாவிஷ்ணுவே, ஸ்ரீராமனாகவருகிறாரென்று ஆகாயத்துறைபவர்கள் துதிசெய்து மலர் சொரியவும்; திருப்பாற்கடலிலாலிலைமேற் சயனிக்கும் வைகுந்தவாசகராகிய ஸ்ரீமந் நாராயணரே ஸ்ரீராமபிரானாகவருகிறாரென்று அம்புவியோர்கண்டு அடிவணங்கி அல்லலொழிக்கும் ஆண்டவரேயென்றுதவுத்தியம் புரியவும், நாடுகள் தழைக்கவும், யானை சேனை இரதம்புரவிகள் அணியணியாய்ச் சூழவும் வருகை

யில், அப்போது சலவசந்தன் அரண்ணியராசனை மடக்கிக் கொண்டு யுத்தம் புரிந்து, அவ்வரசனை மூர்ச்சையாக்கி விட்டுச் சுரதராசனுடனெதிர்த்து அவன் பாணங்களினாற் சலவசந்தன் மூர்ச்சையானான். பின்பு மட்சயந்தனுமானும் வீரசேனனும் மூர்ச்சையானார்கள். அதன்பின்பு சோமகாச மகாராஜன் இராட்சத சேனைகளிற்மேற் கவிந்து யுத்தஞ்செய்து ஐம்பது வெள்ளம் ராட்சதாளைக் கொன்று இரத்தாறுண்டாக்கிவிட்டு யானைதேர் பரிசேனைகளையும் பறிகொடுத்து சுரதராசருடன் கூடித் தன் பட்டணஞ் சென்று கொலு மண்டபத்தி லுட்கார்ந்தார்கள். அந்தப்பட்டணத்திலுள்ள பெரியமனிதர்களும் வந்து சோமகாசமகாராசனைக்கண்டு யுத்தச்செய்திகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

நாரதர்வாரணபுரி சோமகாசமகாராஜனிடம் வருதல்.

---

விருத்தம்.

விண்டுவா திவிண்ணவர்தொழுங்கைலையைவிட்டொளிர்
மண்டலத்துரும்வாரணபுரியைநோக்கி
அண்டகோளகையமர்ந்திட நாரதர்வரவைக்கண்ட
வேந்தனுஞ்சென்றெதிர்கரங்குவித்தழைத்தான்.

இப்பால் திரிலோகசஞ்சாரியாகிய நாரதமகாமுனிவர் இந்தக்காரியங்களைக் கேழ்விப்பட்டு குடிகெட்டுப் போயிற்றென்று செபதாவடங்கள் குலுங்க, வேகமாக வாரணபுரிபட்டணம் வருவதைக் கேள்விபட்ட சோமகாசமகாராசனுஞ் சுரதனுமெதிர் கொண்டுபோய் அர்க்கியபாத்தியங் கொடுத்து அழைத்துவந்து அடிபணிந்து, ஆசனமளித்து, உட்கார வைத்த சோமகாசமகாராஜனைப்பார்த்து நாரதர் கூறுகின்றார். வாரும், மகாராஜனே! நீங்களிப்போது யாருடன்போர் புரிந்தீர்கள், அதையெனக்குச்சொல்லுமென்று கேட்கையில் சோமகாசமகாராஜன் சொல்லுகிறான். ஐயா, முனிநாதரே! அயோத்தியாபுரி பட்டணத்தை யாளப்பட்ட தசரத மகாராஜாவின் குமாரன் ஸ்ரீராமபிரான் அஸ்வமேதயாகஞ் செய்ய வேண்டுமென்று குதிரையை விட்டார். அந்தக் குதிரையை நமது பட்டணத்தில் பிடித்துக்கட்டி அதன்பின்புவந்தசேவகரையுமடித்துத் துரத்திவிட்டான். அந்தச்சேவகர் ஓடிப் போய் தண்டிற்சொன்னார்கள். அவர்களும் நம்முடைய பட்டணத்தின்பேரில் யுத்தத்திற்குவந்தார்கள். நானுமென்குமா

ரர்களுடன் சேனைகளை கூட்டிக்கொண்டு யுத்தத்திற்குப்போய் அவர்கள் சேனைகளையுங்கொன்று இராஜாவாகவந்த சத்துருக்கமகாராசனையும் மந்திரி பிரதானிகளையுங் கொன்று என்னுடைய சேனைகளையும் பிள்ளைகளையும் பறிகொடுத்து நானும் என்னுடைய குமாரனுந்தங்களுடைய அனுக்கிரகத்தினாலே பிழைத்துவந்தோமென்றான். அதுகேட்டு நாரதர் சொல்லுகிறார். ஓய், இராஜனே! கேளும், பராபரவஸ்துவாய் விளங்கப்பட்ட ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீராமபிரானாக மூன்று தம்பிமாருடன் அவதரித்து இராவண இராட்சதாளையெல்லாஞ் சங்கரித்து அயோத்தியாபுரியில்வந்து பட்டாபிஷேகராயிருக்கிறநாளில் சதகண்டராவணன்தசகண்டராவணனென்றுஞ் சொல்லப்பட்ட இருவரும், மகாரோஷத்துடன் யுத்தம்பண்ணி சேனைகளுடன் ஸ்ரீராமபாணத்திற் கிறையாய்ப்போனார்கள். அப்பேர்க்கொத்த கீர்த்தியும் புகழையும் பெற்ற ஸ்ரீராமபத்திரசுவாமி அஸ்வமேதயாகஞ் செய்யும்படிவிட்ட குதிரையை நீங்கள் பிடித்துக்கட்டி அதன்பின்னாகவந்த யானைதேர் பரிசேனைகளையு மாய்த்துச் சத்துருக்க மகாராசனையுங் கொன்று போட்டீர்கள், இந்த செய்தியை ஸ்ரீராமபத்திரசுவாமி கேட்டு தம்முடைய இரதகஜதுரகபதாதிகளுடனும் புறப்பட்டு வருகிறார்கள். அவருடனெதிர்த்து யுத்தம்பண்ணத்தக்கவர்களெந்தப்பூமியிலாவது யாரிருக்கிறார்கள் ஒருவருமில்லை நீங்கள் என்னபழியைத் தேடிக்கொண்டீர்கள் நீங்களெவ்விடம் போனபோதிலும் உங்களை ராமபாணம் விடாது. இனியென்னசொல்வேனென்றார் நாரதராணவர்.

அதுகேட்டு சோமகாச மகாராஜனுந் திடுக்கிட்டுஐயா! முனிநாதரே! பராபரவஸ்துவாய் விளங்கப்பட்ட ஸ்ரீமந்நாராயணரே ராமபிரானாக அவதரித்திருக்கிறாரென்று அறிந்து அவர்விடப்பட்ட குதிரையையும் வீஷ்மத்துடனே பிடித்துக்கட்டி யுத்தஞ்செய்தவர்களல்ல, நாங்களெல்லாம் அவர் பாதசேர்வையைக் காணும்பொருட்டு அவர் விடப்பட்ட அஸ்வத்தைப்பிடித்துக்கட்டி யுத்தஞ்செய்தால் குதிரையை விடுவிக்க ஸ்ரீராமபிரானேவருவார் அவருடைய பாததரிசனங்கண்டு சாயுச்சியபதத்தையடையலாமென்ற கருத்தினால் அவர் விடப்பட்ட குதிரையைப் பிடித்துக்கட்டி யுத்தம்பண்ணினோமென்றார்கள். அவ்வார்த்தையைக்கேட்ட நாரதர் நகைபுரிந்து பிர்ம்மா தேவேந்திரன் தேவர்கள் மகாத்துமாக்கள் யக்ஷக்

கின்னரர் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்பன்னகர்ஏகாத சருத்திரர்கள் துவாதசாதித்தர்கள் முதலானோருங் காணுதற் கரிதாகிய பாதாரவிந்தத்தைவரவழைக்க உங்களால் வலிமை யுண்டோவென்ன, சோமகாச மகாராசனும் சுரதமகாராசனு மெழுந்து நாரதரை சேவித்து கைகட்டி வாய்பொத்தி ஐயா! நாரதமகா முனிவரே, அடியார்கள் செய்த அபசாரத்தை ப்பொருத்து ரட்சித்துக் கொள்ளுமென்று மிகவும் பணி வாகச் சொல்ல, நாரத முனிவர் ஓய், சோமகாசமகாரா சனே! கேளுங்கள் நீங்கள் அறிந்து மறியாமலுஞ் செ ய்த பிழையைப் பொருத்தருளினேன் உங்களிருதிறவர் சேனை களையு மெழுப்பிவிடுகிறேன். ஆகையால், நீங்களும் உங்கள் சேனைகளுடன் மந்திரிபிரதானிகளும் அஸ்வமேதக் குதிரை யையும் அழைத்துக்கொண்டுபோய் சத்துருக்கமகாராசனை வ ணங்கிச் சமாதானப்படுத்திக் கொண்டீர்களானல் ஸ்ரீராமர் தி ருவடித்தாமரைகளைக் கண்டு சேவிப்பீர்களென்றார். அதற்கவ் வரசன் அப்படியே, தங்கள் திருவாக்குக் கெதிர்வாக்கில்லாம ல் செய்கிறோ மென்றார்கள்.

அதுகேட்டு நாரதர் பீடத்தை விட்டெழுந்திருந்து சோ மகாச மகாராஜனையும் சுரதராஜனையு மழைத்துக்கொண்டுரண க்களம் வந்து தமது கமண்டலத்திலிருக்குஞ் சலத்தைச்சண் டமாருதம் வீசினாற்போல் நான்கு மூலையுஞ்சுழன்று அமிர்த த்தை வீசும்பொழுது அந்த அமிர்தசஞ்சீவி காற்றானதுபட வே கைகால் சிரசு எலும்பு இறைச்சி தோல் யாவும்பொருந் தி நித்திரையிலிருந்து எழுபவர்போ லெழுந்தார்கள். யானை தேர் பரிவாரமும் எழுந்து நின்றதுகள், அரண்யராசன் சு வேலராசன் மந்திரி பிரதானிகளுஞ் சோமகாச மகாராசனை வணங்கி, ஆசிர்வாதம் பெற்றார்கள். அப்போது சத்துருக்க மகாராசன், சூரசேனன், வீரசேனன், உக்கிரசேனன், மட்ச யந்தமகாராசன், மகாமாயன், சலவசந்தன், காலசித்தன், நீலாட்சதன், படைத்தலைவர் சேனாதிபதி ராசமன்னர் மட்ச யந்தனுமான் குகன் முதல் சகலரும் வந்துகண்டு அடிபணி ந்து யுத்தத்திற்குச் செலவுகொடுமென்று கேட்டார்கள். அத ற்குச்சத்துருக்கர் யோசனைசெய்து யுத்தத்திற்குச் செலவுகொ டுத்தார். அந்தவேளையில் பேரிகைகளுடன் வாத்திய முழங்க ச் செய்தார்கள். அதுகண்டு, இராட்சதர்களும் ராசமன்னர்க ளும் அட்டகாசம் பண்ணினார்கள், அந்தச்சமயத்தில் சோம

காச மகாராசனும் அரண்யனும் சுரதனும் சுவேலைராசனும் மந்திரிபிரதானிகளும் புடைசூழ, அஸ்வமேதக் குதிரையுடனும் காணிக்கை கப்பணங்களெடுத்துக்கொண்டு வாத்தியமுழங்கச் சத்துருக்கருடைய பாளையத்தினுள் வருகின்றபோது சத்துருக்கமகாராசரும் மட்சயந்தராசனும் வீரசேனனும்சலவசந்த மகாமாயனும் சூரசேனனும் வீரசேனனும் யாவரும் எதிர்கொண்டுவர சோமகாசமகாராசன் சுவேலைராசன்சுரதராசன் மூவரும் சத்துருக்கமகாராசனுக்கு அஸ்வமேதக்குதிரையுங்காணிக்கை கப்பணங்களையுங் கொடுத்து வணங்கினார்கள். சத்துருக்க மகாராசரும் மற்ற அனைவரையுஞ் சங்கீதமேளத்துடனே சமாதானமா யழைத்துக்கொண்டு வாரணபுரிக் கருகில் தண்டுதளங்களை நிறுத்திப்போட்டு சத்துருக்க மகாராசருடன் மட்சயந்த மகாராசருடன் உக்கிரசேனன் சலவசந்தன் மகாமாயன் சூரசேனன் வீரசேனன் காலசித்தன் ஐம்பத்தாறு தேசத்துராசாக்களுடனும் கொலுமண்டபம்போய் ஆசனமளித் துட்கார்ந்து சற்றுநேரம் வார்த்தையாடிக் கொண்டிருந்து யாவருமெழுந்து ஸ்நானஞ்செய்து நியமநிஷ்டைகள் முடித்துக்கொண்டு உண்டு கந்த கதம்ப கஸ்தூரிபரிமளாதிகளணிந்து அடைக்காமுது மென்று சோமகாசமகாராசனோடு கொலுமுகம்வந்து ஆடல்பாடலைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அந்தவேளையில் ஸ்ரீராமமூர்த்தியினுடைய தண்டானது வாரணபுரிபட்டணத்தை நோக்கி மகா உக்கிரமாய் சோமகாசமகாராசனையும் அவன் பிள்ளைகள் அரண்யராசனையும் சுரதராசனையும் சேனைகளையுங் கொன்று பட்டணத்தை கொள்ளை கொள்ளுவோமென்று ஆர்பரித்துக் கருந்தூள் செந்தூளெழும்ப வெகுவேகமாய் வருவதை தூதுவர்கள் கண்டுபயந்து, நடுநடுங்கி, ஓட்டமாயோடிவந்து, சோமகாசமகாராசனுக்குச் சொல்லவே அவர் அதிவிரைவாய் பிள்ளைகளுடன் மந்திரிபிரதானிகளோடுந் திட்டென் றெழுந்திருக்கவே சத்துருக்கமகாராசனுந் தன்னுடன்வந்த ராட்சதவீரரும் ராசாதிராசரும் சேனாதிபதிகளும் எழுந்திருந்து இருதிறவீரரும்ஏகோபித்து எதிர்கொண்டுவருவதைக் கேழ்விப்பட்ட ஸ்ரீராம பத்திரரும், இரதத்தைவிட்டிறங்கிப் பாதசாரியாய் வரவே யாவருங்கண்டு அடிவணங்கி, அனேகவந்தனங்கள் புரிந்து, அழைத்துவந்து தன்சிங்காதனத்தில் வீற்றிருக்கச்செய்து மிகவும் பயபக்தி

விநயத்துடன் சொல்லுகிறான். ஸ்ரீ அகிலாண்டகோடி பிர
மாண்ட நாயகா ஆபத்பாந்தவா அநாதரக்ஷகா ஆதிமத்தியா
ந்தரகிதா இராவணசம்மாரா அடியேன் செய்த பிழையைப்
பொருத்து இரட்சிக்க வேண்டுமென்று அனேகவிதமாகத்
தோத்திரம்புரிந்து பின்னையுஞ் சொல்லுகிறான். கேளும் ரகு
நந்தனா, தேவரீருடைய தம்பியாகிய சத்துருக்க மகாராசரை
யும் இராசமன்னர்களையும் இராட்சத சிரேஷ்டர்களையுங்கண்
டேன் இப்போது தங்கள்பாததரிசனமுங் கண்டுகொண்டேன்
அதனால் நானும்என்பிள்ளைகளும்இனியில்லாத பாக்கியத்தை
யடைந்தோம் மேலும், அடியார்கள் செய்தகுற்றத்தைப்பொ
றுத்து இரட்சிக்கவேண்டுமென்று பலவாறாகத் துதிபுரிந்து
பணிந்து நின்றான். அப்போது சத்துருக்கரும் நடந்தசெ
ய்திகளை ஸ்ரீராமரிடத்தில் சவிஸ்தாரமாகச் சொல்லிவணங்கி
னார் அப்படி வணங்கிய சத்துருக்கரையெடுத்து மார்போடு த
ழுவி ஆசீர்வதித்து பிறகு ஸ்ரீராமரானவர் சோமகாசமகாராச
ன் சுரதமகாரார்ஜன் சத்துருக்கமகாராசர் பரதலட்சுமண சுக்
ரீவன், அங்கதன், விபீஷணன், மாலியவான், சுமந்திரன்,இ
ன்னுமற்றுமுள்ள இராசர்களுடன் கேள்விலாசமாய் வாரணா
புரிபட்டணத்தில் மூன்று நாளிருந்து நாலாநாள் காலையில்
அயோத்திக்குப் போகவேண்டுமென்று நினைத்து தனது தம்
பியாகிய சத்துருக்கமகாராசரை அழைத்து அப்பா சத்துரு
க்கா, நான் அயோத்திக்குப்போகட்டோ அல்லவென்று உன்
னுடன் கூடவரட்டோவென்று கேட்க, அப்போது சத்துரு
க்கர் சொல்லுகிறார். அண்ணாரகுநந்தனா, தாங்கள் வரவேண்
டியதில்லை, அயோத்திக்குப்போய்ச்சேருங்கள். நானும் சோ
மகாசராசரும அரண்ணியமகாராஜனும் சுரதராஜனும் அவ
ர்களுடைய மந்திரிபிரதானி முதலியசேனைகளும் பிரயாணப்
பட்டு பூமிப்பிரதட்சணஞ்செய்துக்கொண்டு அதிசீக்கிரத்தில்
அயோத்திக்குவந்து சேருகிறோமென்று சத்துருக்கர் சொல்
ல, அப்படியே ஸ்ரீராமரும் சம்மதித்து தமது இரதத்தைக்
கொண்டுவரச்சொல்ல, அப்படியே சாரதியும் இரதத்தைக்கொ
ண்டுவந்து நிறுத்த, ஸ்ரீராமரும், சோமகாசமகாராஜனிடத்தி
லும், மற்று மின்னு முள்ளவர்களிடத்திலும், விடைபெற்று
க்கொண்டு, இரதத்தின்பேரிலேறினார். அப்போது ஆலவட்
டம் சாமரைவீச, முத்துக்குடை பிடிக்க, திருச்சின்னம் வெங்
கலப்பேரிகை ஜயபேரிகையடிபட நாட்டியபெண்கள் நடனம்

புரிய, கட்டியர்கள் கட்டியங்கூற, பாட்டர்கள்புகழ, விருதுக் கொடிபறக்க, இப்படி வைபவத்துடனும் சோமகாச மகாரா ஜனும் சத்துருக்கமகாராஜன் முதல் சகலமான இராஜகூட்ட ங்களும் வாரணுபுரியைவிட்டு மூன்றுநாழிகைதூரம்போய் ஸ்ரீராமருக்கு வழிவிட, ஸ்ரீராமரும் சேனைகளுடன் அயோத் தியாபுரிபட்டணம்போய்ச் சேர்ந்தார்.

இப்பால் சத்துருக்கமகாராஜன் காலசித்தனைப்பார்த்துச் சொல்லுகிறார். ஓய், காலசித்தனே! நம்முடைய யானை தேர் பரிசேனைகளைத் தயார்படுத்தென் றுக்கியாபிக்க, அவ்வாறே காலசித்தனுங் கோட்டைக்கு வெளியில்வந்து சகலரையுந் தயார்செய்து அஸ்வமேதக்குதிரைக்கும்பூசைசெய்து அதன் பின் கருoc-இராட்சதாளையுஞ் சேனாதிபதியான நீலாட்சதனை யுங் கூட்டியனுப்பி ஒருயானையின்பேரில்கருடக்கொடிபிடித்து, அடிவானங் குமுறுவதுபோல பயணபேரியானது அடிபட, சத்துருக்கமகாராஜனும், சூரசேனனும், உக்கிர சேனனும், குகனும், மட்சயபந்தனுமானும், ஐம்பத்தாறு தேசத்து இரா ஜாக்களும், படைத்தலைவர் சேனாதிபதிகளும், சகலரும் இரத மேறிப் புறப்பட்டார்கள் அவர்கள் புறப்படவே, சோமகாச மகாராசனும், அரண்ணியராஜனும், சுரதராஜனும், சுவேலை ர்ஜனும், அவர்களைச்சார்ந்த இராசமன்னரும், இரதமேறி சத்துருக்க மகாராசரிடம் வந்தார்கள். அந்தச்சமயந்தில் கர் ணுபுரி, மத்தளம், கைத்தாளம், பட்டயம், வீரமுரசு, வெண்க லமுரசு, ராயமுரசு, ரணமுரசு, ராயபேரி, வெண்கலபேரி, டமாரபேரிகை, தவண்டை, மல்லரி, குடமுழா, பஞ்சநாதக் கீத மேளங்களென்று சொல்லப்பட்ட முப்பத்திரண்டு மேள வாத்தியங்களும், கடலொலிபோல முழங்க புறப்பட்டு போகி றபோது யானைகள் நடக்கிற உதட்டியும், தேர்கள் நடக்கிற வேகமும், கால்பலங்களின் அதிர்ச்சியும், கால்பலமான இரா ஜாக்களின் வில்நாணோசையினாலும் பூமியானது நடுங்க, ஆதி சேஷன் ஒடுங்க அஷ்டகுல பர்வதங்களுங் கலங்க, செந்தூள் கருந்தூள் ஆகாயத்தையளாவிட, இந்தப்படி ஆரவாரத்து டன் வாரணுபுரிபட்டணத்தை விட்டு நேர்வடக்காகப் போய், வடக்கேயிருந்து வடமேற்காகத்திரும்பி, அஸ்வமேதக் குதி ரையின் பின்வருகிறபோது குதிரையின்பின்போகிற இராட்ச தாளும் குதிரை மலசலம் விட்ட இடங்களில் ஓமசாந்திகள் செய்து கோவிலுங்கட்டி, குளமெடுத்து, அவ்விடத்திற்றண்

டுவிட்டிறங்கி, தானதருமங்கள் செய்துக்கொண்டு போகிற போது அஸ்வமேதக்குதிரையானது வடமேற்கிலிருந்துவட க்கிழக்காகத் திரும்பிவருகிறபோது அஸ்வமேதக் குதிரையை க்கண்ட இராசாக்களெல்லோருங் கையெடுத்துக் கும்பிடுவா ரும், காணிக்கை கப்பங்களைக் கொண்டுவந்து கொடுத்து சத் துருக்கமகாராஜனை வணங்குவாரும், தண்டுவருகிற சமாச்சா ரங்கேட்டு வலசைவாங்கி யோடிப்போவாரும், இத்தப்படியா ய் ஒருவரும் நிகரில்லாமல் காடுசெடி மலைகுன்று ஆறுமடுக் கள் ஊர் நாடுகிராமம் சீமை பூமி யாவும் கடந்து பத்மாவதி பட்டணத்திற் கருகில்வருகிறபோது அப்பட்டணத்தையாள ப்பட்ட சந்தனமகாராஜனனவர் வைகரை யெழுந்திருந்து கோட்டைக்கு வெளியில் ஸ்நானத்திற்கு வந்தார் அந்தவே ளையில் அஸ்வமேதக் குதிரையானது அந்தக்கோட்டையோர மாகப் பச்சென்ற புல்லைக்கண்டுமேய்ந்துக்கொண் டிருந்தது. அந்தக்குதிரையை சந்தனமகாராஜன்கண்டு இதேது அஸ் வம் மகா அழகாயிருக்கின்றது இது தேவர்கள் விட்டப்பட்ட அஸ்வமோயார்விட்ட அஸ்வமோ இந்தஅஸ்வம்இவ்விடம் வரவேண்டிய காரணமென்னவென்று அருகில்வந்து அஸ்வ த்தினுடைய நெற்றியில் எழுதி கட்டியிருக்கிற விருதாவொளி ப்பட்டத்தை வாசித்துப்பார்க்கும்போது அதில் எப்படியெழு தியிருக்கிற தென்றால் சூரியவம்சத்து இராஜர்களனைவருக்கும் சக்கிரவர்த்தியாய் ஆதித்தனைப்போற் பிரகாசிக்கின்றவர் பிர தாப வீரதீர உதாரசௌரிய முள்ளவர்ஆயிரத்தெட்டு அண்ட மும், உஉச-புவனமும், சத்தசாகரஞ்சூழ்ந்த ஈரேழுபதினலு லகத்தையும் ஏகசக்கிரமாயாளப்பட்ட இராவணேஸ்வரனை வென்ற வீராதிவீரனன ஸ்ரீராமபிரான் விட்டகுதிரை இதன் பின்னாற் சத்துருக்கமகாராசன் வருகிறான் இந்த சத்துருக்க மகாராசனை செயிக்கத்தக்க வல்லமை புருடர்கள் இக்குதிரை யைப் பிடித்துக்கட்டியுத்தஞ்செய்து வெற்றியடையலாம் அப் படிச்செய்ய மனமில்லாத பக்திமான்கள் இந்தக் குதிரையைக் கண்டவுடன் பூசைசெய்து காணிக்கை கப்பங்கொண்டுவந்து வைத்து சத்துருக்கமகாராசனை வணங்கி வாழலாமென்று அந்தப் பட்டயத்தில் எழுதியிருந்ததை சந்தனமகாராசன் பார்த்து குஞ்சிரிப்புக்கொண்டுதலையை யசைத்துச் சொல்லு கிறான்.

## சந்தனமகாராஜன் குதிரையைப் பிடித்துக் கட்டல்.

ஆ! ஆ! இந்தவிபவ மெங்காகிலுமுண்டோ தானே சூரனென்று கர்வித்து தானென்ற ஆண்மைப்படைத்தவ னுயிரைப்போக்கிக் கணநேரத்தி லென்சமர்த்தைக் காண்பிக்கிறேனென்று பற்களைக்கடித்து, அருகிலிருந்த சேவகர்வசங் குதிரையை ஒப்பித்து ஸ்நானத்திற்குச்சென்று ஸ்நானம்பண்ணி நியமநிஷ்டை முடித்துக்கொண்டு அஸ்வமேதக் குதிரையுடனே கொலுமண்டபம் வந்து மந்திரிகளுடனும், இராசாக்களுடனும், இந்தச்சங்கதியைச் சொல்லிக்கொண்டிருக்கையில் சந்தன மகாராசனுடையபேரப் பிள்ளைகளான சவுபாலன் சவுந்திரன் என்னப்பட்ட இருவரும், குதிரையினுடைய நெற்றியிற்கட்டிய பட்டயத்தை, வாசித்துப் பார்த்து, ஐயையோ, ஸ்ரீராமன் தனக்குள்தானே ரணசூரனென்று கர்வித்து நம்மையெல்லாம் பெண்களாக்கினன். பார்த்தையாவென்று கர்ஜ்ஜித்துக் கொதித்தெழுந்து ஆ! ஆ! இவனுடைய ஆண்பிள்ளைத்திராணியையும் சேனைகளுக்கெல்லாம் இராசனாக வரும் சத்துருக்க மகாராசனுடைய சவுரியத்தையும் இன்றைய தினம் காணபோமென்று கடுங்கோபமுண்டாகி, அஸ்வமேதக் குதிரையைப் பிடித்துக்கட்டிப் பத்திரப்படுத்துங்களென்று சேவகருக்கு ஆக்கியாபித்துத் தாங்களுங்கொலுமண்டபம் வந்து உட்கார்ந்தார்கள். அப்போது சந்தனமகாராசன் சேனாதிபதியான கெதாயுதனைப் பார்த்துச் சொல்லுகிறான். வாராய், சேனாதிபதியானகெதாயுதனே? நம்முடைய தண்டுதளங்களைச் சீக்கிரந்தயார்செய்யு மென்றாக்கியாபித்துகொலு விலிருந்தவர்களுக்கும் விடைகொடுத்தனுப்பிவிட்டு தாமும்தம்முடைய பேரன்மாருடனெழுந்து அரண்மனைக்குச்சென்று போசனமருந்தி, கநதகதம்பங்களணிந்து, கிரீடந்தரித்து,புஜக்கிருதிபூண்டு, ஆடையாபரணலங்கிருதஞ்கி, அம்புருப்பொதி முதுகிற்கட்டி கற்பூரதாம்பூல மென்று தங்கள் தங்கள் ஸ்திரீகளுடன் வசனித்துக்கொண் டிருந்தார்கள்.

அப்போது சேனாதிபதியான கெதாயுதன், தண்டைவெளிப் படுத்தினான். எப்படியென்றால், ரணரங்கசூரரான இராசமன்னர்கள் முப்பத்திரண்டாயுதங்களு மெடுத்துக்கொண்டியானைகள் மீதேறி இருநூரக்ரோணி புறப்பட்டன. அதன்பிறகு

நொடியிற்படையை வெல்லுங் கொடிமுடி மன்னர்கள் வில்லம்பெடுத்து இரதத்தின்மீதுட்கார்ந்து நூரக்ரோணி புறப்பட்டன. அதன்பின் எத்திசையிலும் வெற்றிபெற்றசுத்தவீரர்கள் கத்திகளை அஸ்வத்திலேந்திக்கொண்டு மனோவேகத்திலும் அதிகப்பட்ட குதிரைகளின்பேரிலேறி எண்ணூறு அக்ரோணிகள் புறப்பட்டது. அதன்பிறகு செப்புதற்கரிய ஒப்பற்ற முப்பத்திரண்டு ஆயுதங்களும் இடுப்பிற் கட்டிக்கொண்டு ஆயிரத்தைந்நூறு அக்ரோணிசேனைகள் புறப்பட்டது. அப்போது ஒருயானையின்மீது புலிக்கொடி பிடித்துக்கொண்டுபேரிகை யறைவித்தார்கள்.

அந்த ஓசையைச் சந்தனமகாராசன்கேட்டு தானும் தன் குமாரர் சல்லியராசனும் சாத்மீகராசனும அவர்களுடைய குமாரன் சவுபலவுந்திரனும் இரதமேறி வந்தார்கள். அவர்களுடன் இரண்டாயிரம் இராசகுமாரர்களும் துருபதனும் ஆயிரத்தைந்நூறு மந்திரிகளும் முன்னூற்றைம் பதுபடைத்தலைவரும் சேனாதிபதியான கதாயுதனும் இரதமேறிப்புறப்படவே பயணம் பயணமென்று இராயபேரி வெங்கலபேரியடிக்க, நானாவிதவாத்தியங்கள் முழங்கத்தக்கதாக யானைகள் முன்னும், அதன்பின் இரதங்களும், அதன்பின் குதிரைகளும், அதன்பின் சேனைகளுமாகக் கோட்டையை விட்டு வெளியில்வந்து பவுஞ்சிட்டு நிறுத்தியுத்தபேரி முழங்கினார்கள்.

இவ்விடத்தி லிப்படியிருக்க, அவ்விடத்தில் அஸ்வத்தின்பின்வந்த இராட்சதாள் அஸ்வமேதக் குதிரையைக் காணாமல் குதிரையைத்தேடிக்கொண்டு பத்மாபுரிபட்டணம் வருகிறபோது தண்டுகளானது பாளையமிறங்கி யிருப்பதைப்பார்த்து தண்டினுட்புகுந்து தேடிக்கொண்டு வருங்காலத்தில் சல்லியராஜன் இராட்சதாளைப்பார்த்து கோபமாகி பதினாயிரஞ் சேவகரையனுப்பி இராட்சதாளைப் பிடித்துவரச் சொன்னார். அவர்கள் சென்று இராட்சதாளைப்பார்த்துச் சொல்லுகிறார். ஓய், இராட்சதர்களே! கேளுங்கள், எங்களிராஜ குமாரனாகிய சல்லியராசன் உங்களையழைத்துவரச் சொன்னார்வாருங்களென்றழைத்தார்கள். அதற்கவர்கள் மறுவுத்தரவு சொல்லாமல் சேவகரோடுகூடவந்து சல்லியனைக் கண்டார்கள். சல்லியனவர்களை யுற்றுநோக்கி அடா, இராட்சதர்களே! நீங்களெவ்விடமிருந்து எங்குபோகிறீர்கள் தண்டில் நீங்கள் வந்தகாரியத்தைத் தெரியச்சொல்லுங்க ளென்றான். அதற்கு இராட்ச

தர்கள் ஓய், இராஜனே! கேளும், அயோத்தியாபுரி பட்டண த்தையாளாநின்ற தசரதமகாராசன் குமாரனுகிய ஸ்ரீராமபிரா ன் இராவண கும்பகர்ணுதிகளைச் சம்மாரஞ்செய்து அவர்களு க்கு சகாயமாகவந்த தசகண்டராவணனையும், சகஸ்திரகண்ட ராவணனையுங்கொன்று, விபீஷணன் மகாமாயன், சலவசந் தன், இம்மூவர்களுக்கும் பட்டங்கட்டி தாம் அயோத்தியாபு ரியில்வந்து பட்டாபிஷேகராகி இராச்சிய பரிபாலனம் பண் ணிக்கொண்டிருக்கையில் அச்சபைக்கு வதிஷ்டமகாமுனிவந் து ஸ்ரீராமரை அஸ்வமேதயாகஞ் செய்யச்சொல்லிக் கிருபை புரிந்தார்.

ஸ்ரீராமரும், வதிஷ்டமகா முனிவர் திருவாக்கின்படி அஸ்வமேதயாகம் பண்ணவேண்டி எங்களுக்கு இராசாவாகி ய விபீஷணரையும், இராட்சத சிரேஷ்டரையும், இராட்சதர் களையு மழைப்பித்து குதிரையைவிட்டு அதன்பின் ஐம்பது வெள்ளம் இராட்சதரைளயு மதற்குண்டான சேனுதிபதிகளையு மனுப்பி யதற்குபின் பலனுகவந்த நானூராயிரம் அக்ரோணி சேனைகளையும் ஐம்பத்தாறு தேசத்து இராசாக்களையுங் கூட் டியனுப்பி வைத்தார்.

நாங்களும் புறப்பட்டு குதிரையைவிட்டு அதன்பின்றொ டர்ந்து வரும்போது மதனுபுரிபட்டணத்தை யாளப்பட்டவீ ரசேனனும் வாரணுபுரியை பரிபாலனஞ் செய்யப்பட்ட சோ ழமகாராசனும் குதிரையைப் பிடித்துக்கட்டி யுத்தம் பண்ணி அவர்களால்சாயாமல் சத்துருக்கமகாராஜனை வணங்கி சமா தானஞ்செய்துக்கொண்டு அவர்களுஞ் சேனைகளுடன் சத்து ருக்கமகாராசன் தண்டிற் சேர்ந்துக் குதிரையைவிட்டு அதன் பின் காவலாக பதினுயிரம் இராட்சதரைளயும் அனுப்பி வைத் தார்கள். அந்தக்குதிரையிவ்விடம் வந்தது நீங்கள் காணீர் களோவென்று வினவிய இராட்சதர்களைச் சல்லியன்பார்த்து அடா! இராட்சதர்களே, ஆயிரத்தெட்டு அண்டம் இருநூற் றிருபத்திநாலு புவனமுஞ் சத்தசாகரமுஞ்சூழ்ந்த ஈரேழுபதி னுலுலகத்தையும் ஏகசக்கிரமாயாளப்பட்ட இராவண ராட்ச தர்களை செயம்பண்ண சூரவீரனுனுலுமென்ன, தன்னைச்சார் ந்த இராசாக்களுடைய சீமை பூமிநாடுகிராமத்தில் தன்னு டைய பிரதாபசௌரியத்தை பட்டயத்தி லெழுதி குதிரையி னுடைய நெற்றியிற்கட்டிப் பிரதட்சணம் வரவேணுமே யல் லாமல் தானே சூரனென்று கர்வித்து வீரபட்டய மெழுதிக்கு திரையை விட்டபடியினுல் என்பட்டணத்தில் வந்து எங்கள்

கையிலகப்பட்ட குதிரையை விடுவிக்க மும்மூர்த்திகளுக்கும் வல்லமையிராது ஆகையால் நீங்கள்போய் உங்களுக்குத்தலைவனாகிய சத்துருக்கமகாராஜனைக் குதிரை விடுவிக்க வரச்சொல்லுங்கள் விடுவிக்க சாமார்த்தியமில்லாவிட்டால்தண்டுடனேடிப்பிழையுங்கள் இல்லாவிட்டால் நம்மைவணங்கி நடக்கச் சொல்லுங்கள் மூன்றில் எதுயுத்தமாயிருக்கிறதோ அப்படிச் செய்யச் சொல்லுங்களென்று சொன்னான்.

## முதல்நாள் யுத்தம்.

அதுகேட்டு இராட்சதாள் பல்லை நெறநெறவென்றுகடித்து சல்லியனைப்பார்த்து சொல்லுகிறார்கள். அடா!இராஜகுமாரனே மோசம்போகாதே வேஷமாகாதே நீயாஎங்களிராசனாகியசத்துருக்கமகாராசனை செயிக்கிறவன்உன்னையும்உன்னுடையதண்டு தளத்தையும்பெரிதாகயெண்ணி வணங்கவா,இப்பவுமெங்கள் குதிரையைவிட்டுச் சரண மடைந்தாயேயானால்தரணியில் வாழ்வாயில்லாவிடில் மரணமாமென்றார்கள். அதுகேட்டுவல்லமைசாலியாகிய சல்லியராசன் கொல்லுஞ்சிங்கம்போல்ஆக்கிரவியாக்கிர நிக்குரோதனாய் வில்லைவளைத்துதுல்லியமானபாணங்களைத்தொடுத்துப்பிரயோகஞ்செய்யவேஇராட்சதாள்தீட்சண்ணியமான முப்பத்திரண் டாயுதங்களையும் றிவ்றிவ்வென்று சொரியும்போது சல்லியராஜன்சேனைகளு முனைந்து,யுத்தம்பண்ணும்போது இராட்சதாள்மிஞ்சி சல்லியன் சேனைகள்பேரில்விழுந்து புலிஆட்டைக்கவ்வுதல்போற்குறவளையைக்கடித்து உதிரத்தைக்குடித்து அவர்களை வாரிவாரி ஆகாயத்திலெறியும்போது கால்பலமான சேனைகளெல்லாம் சின்னாபின்னமாய் இராட்சதாள் முன்னின்று யுத்தம்பண்ண மாட்டாமல் ஓடத்தலைப்பட்டார்கள். அதுகண்டு சல்லியன் கோபங்கொண்டு அளவற்ற பாணங்களைவிட்டு இராட்சதாளைக் கொல்லுகிறபோது குதிரையின்பின்வந்த இராட்சதாளுக்குச் சேனாதிபதியான நீலாட்சதன் கண்டு அதிசீக்கிரமாக இரதத்தை நடத்தி இராட்சதாளைப்பின்னுக்குத் தள்ளிக்கொண்டு தான் முன்னின்று வரப்பட்ட அஸ்வங்களையெல்லாஞ் சித்திரவதைசெய்து பத்துதிவ்வியாஸ்திரங்களெடுத்துப் பிரயோகம்பண்ணினான்.

அதற்குச் சல்லியராஜன் பதினைந்து திவ்வியாஸ்திரங்களெடுத்துப் பிரயோகம்பண்ணினான். அதுவும் நாகசற்பம்

போலச்சீறிக்கொண்டுவந்து நீலாட்சதன் விட்ட பத்து திவ்வியாஸ்திரங்களையு மறுத்துவிட்டு அவன்பிடித்திருந்தவில்லையிருதுண்டாக்கிவிட்டது. அப்போது நீலாட்சதன் சல்லியராஜனைப்பார்த்து, இந்தமானிடன்மகாபலவானுயிருக்கிருன். இவனை சீக்கிரத்திற் கொல்லவேணுமென்றெண்ணி இரதத்தைவிட்டு சிவ்வென்று பாய்ந்துசல்லியன் கையிற்பிடித்திருந்த வில்லைப்பிடுங்கி ஒடித்தெரிந்தான். அதுகண்டுசல்லியன் கோபங்கொண்டு, தன்வாளாயுதத்தை யுருவி, நீலாட்சதனுடைய சிரசையறவெட்டினுன். அதனுலவன் இரதத்தைவிட்டுப் பூமியில்விழுந்து எமலோகஞ்சேர்ந்தான்.

அப்போது ஒரு இராட்சதன் குய்யோமுறையோவென்றுபுலம்பிக்கொண்டு சத்துருக்கமகாராசன் தண்டுக்கு சேனுதிபதியான காலசித்தனிடஞ்சென்று சொல்லுகிருன். ஓ! ஐயா காலசித்தனே கேளும், பத்மாவதிபட்டணத்தை பரிபாலனம் பண்ணப்பட்ட சந்தனமகாராஜன் நம்முடைய குதிரையைப் பிடித்துக்கட்டி அவனுடைய குமாரவர்க்கம் பிள்ளை பேரன்மார் யானைதேர் பரிசேனையையுங் கொண்டுவந்துகோட்டைக்குவெளியிலே தண்டுவிட்டிறங்கினுன்.

அதுகண்டு, நாங்கள் குதிரையைத்தேடிக்கொண்டு, அவ்விடம்போய்பார்த்தோம், காணுமையால் திரும்புஞ்சமையத்தில்சந்தனமகாராசன் குமாரன் சல்லியனென்னப்பட்டவன் சேவகரைவிட்டுஎங்களையழைப்பித்து, தூஷணைகளாகப்பேசி எங்களுடன் யுத்தம்புரிந்து நீலாட்சதனையும் பதினையாயிரம் இராட்சதாளையுங் கொன்றுவிட்டான். நான்மாத்திரம் தப்பித்துக்கொண்டோடிவந்தேனென்ருன். அதுகேட்டு காலசித்தன், அந்தத்தூதுவனை சத்துருக்கமகாராசனிட மழைத்துபோய்விட, அவன் நடந்த செய்திகளைச்சொன்னுன், சத்துருக்கனும் பத்மாவதிபட்டணத்துக்குத் தூதுவனை வழிகாட்டச்சொல்லி, அவனைமுன்னனுப்பி அவன்பின் தண்டுகளானது சண்டையெங்கேயென்று அண்டங்குலுங்க, மண்டலங்கலங்கவந்து சேர்ந்தார்கள்.

அதுகண்டு சேனுதிபதியான கெதாயுதன் தன்னுடைய சேனைகளையெல்லாம் சத்துருக்கமகாராசன் பாளையங்களின் மேலேவித் தானும்ரதத்தை நடத்தி வில்லையெடுத்து நாணிபிகிந்து சங்கோபசங்கமாய்ப் பாணங்களை சரமாரிபொழிந்துவிட்டான். அந்தப் பாணங்களும் வில்லில்விடுபட்டு காலக்

கோடி விஷப்போற் சீறிக்கொண்டுவந்து விழுகிறபோது சேனைகளானது கால்மாடுதலைமாடாய் கண்டதுண்டமாய் விழத்தலைப்பட்டது. அக்காலையில் சத்துருக்கமகாராஜன்சோமகாசமகாராசனைப்பார்த்து சொல்லுகிறார்.

ஓய், சோமகாசமகாராசனே? நாமின்னந் தண்டு தளங்களைவிட்டிறங்கவுமில்லை இதற்குமுன்பாக நம்முடைய சேனைகளை இப்படிவந்துகொல்லுகிறவனார் இந்தப்பட்டணத்தைப் பரிபாலனம்பண்ணப்பட்டராஜனை நீரறிந்திருப்பீர் அவன் பலாபலங்களும் உமக்குத்தெரிந்திருக்கும் அதையெனக்குவிபரமாகத்தெரியச் சொல்லவேண்டுமெனவே, சோமகாசமகாராஜன் கூறுகிறார் ஐயா? சத்துருக்கமகாராசனே! இந்தபத்மாவதிபட்டணத்தையாளப்பட்ட சந்தனமகாராசனே, மெத்தவும், அரிபக்தியிற் சிரேஷ்டன், சாந்தகுணம் படைத்தவன், தருமதயாளன், கர்வித்தராசர்களுக்கு சிங்கத்தைப்போலொத்தவன், அவருடையகுமாரரோ, சல்லியன் சாத்மீகனென்று இரண்டு குமாருண்டு அவர்களோ, ஸ்ரீமந்நாராயணரையிடைவிடாமல் தியானம்பண்ணப்பட்டவர்கள், அவர்கள்சாமார்த்தியத்திற்கு இந்தத்திரிலோகங்களும் இணையல்ல, இவர்களுக் கிரண்டு பிள்ளைகளுண்டு அவர்களோ தந்தை பாட்டனை விட, மிகவும் விஷ்ணு பக்தியுடையவர்கள், நீதிமுறைமை யறிந்தவர்கள், வீரதத்துவ மிகுந்தவர்கள் அவர்கள் முன்னிற் காலகண்ட திருநேத்திரதரன் வந்தாலும், நல்லபூசை பண்ணுவார்கள், வரப்பிரசாதம் பெற்றவர்களென்றார், அதுகேட்டு சத்துருக்கமகாராசன் சோமகாசனைப்பார்த்து சொல்லுகின்றார். அப்படி அரிபக்தி சிரேஷ்டர்களாய்ச் சத்தியசந்தனராய் தருமகுண தயாளர்களாக யிருப்பார்களானால் நாம்விட்ட குதிரையைப்பிடித்துக் கட்டியும் நம்முடைய சேனையையும் அவர்கள் கொல்லுவார்களா வென்றார்.

அதற்குச் சோமகாசமகாராஜன் கூறுகின்றார். நாம் விட்ட அஸ்வமானது அவர்பட்டணம்போனபடியினால் அஸ்வத்தைப்பிடித்துக்கட்டி யுத்தத்திற்கு வந்திருக்கிறார்கள். அவர் பட்டணம் போகாமல் நமது பட்டணத்திலிருந்ததேயானால் ஒருவரும்பிடிக்க மாட்டார்கள். எவ்வளவு சாத்மீககுணராசனானாலும், தன்னைத்தேடிவந்த சண்டையைவிடுவார்களோ அப்படி விட்டுவிட்டால் ஆனையைப் பூனையடித்து விட்டதோ, ராஜாக்களாய்ப் பிறந்தவர்களுக்கு துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபா

லனம் பண்ணுவது இயல்பல்லவோ வென்றான். அதற்குச் சத்துருக்கர் மெய்தானென்று உள்ளத்திற் கருதிசொல்லுகிறார். ஆனால் சமாதானமாய் அவரையழைப்பித்து குதிரையை விடுவித்துக் கொள்ளலாமா அல்லது யுத்தம் புரியலாமா இவ்விரண்டு விதத்திலும் ஏதுநலமாயிருக்கிறது சொல்லுமென்றார். அதற்குச் சோமகாச மகாராசன் யோசனைசெய்துசொல்வதற்குள்ளாக காலசித்தன் செப்பலுற்றான்.

ஐயா! சத்துருக்கமகாராசரே? நீர் நல்லவசனஞ்சொன்னீர் நம்மைத்தேடி வணங்குபவரை நாம் வணங்கினால் தேவர்களும், முனிவர்களும், ராசர்களும், ராட்சதசிரேஷ்டர்களும், நகையார்களா, பகைவந்தபோது நகைபுரியலாமோ அதுபோல் எவ்வளவு சாந்தகுணத்தைப் படைத்தவர்களானாலும். சத்தியவாசகரானாலும் நாம்விட்ட குதிரையை அவர் பிடித்துக்கட்டி நமதுசேனையையுங் கொன்றதுமல்லாமல் நாம் தண்டு விட்டிறங்குமுன்னம் நம்முடைய சேனைகளின்பேரிற் கவிந்து அஸ்திரங்களைவிட்டுக் கொல்லுகிறதைப் பார்த்திருந்தும் நாம் சமாதானமாகலாகாது அது சரியல்ல, அடியேனுக்குச் செலவுகொடுத்தால் நான்போய் யுத்தஞ்செய்து சகலரையுஞ்செயித்து சந்தனமகாராசனையும் நன்றாய்ப் பூசைபண்ணி நம்மையவர் வணங்கும்படியாய்செய்து வருகிறேனென்றான். அதுகேட்டு சத்துருக்கமகாராசன்முதற் சகலருங் கலக்கந்தீர்ந்து காலசித்தனுக்குச் சத்துருக்கர் கூறுகிறார். வாராய், காலசித்தனே! ஆக்கப்பொறுத்தவர் ஆறப்பொறுக்கவேணுமே அதுபோல வருங்காலம், சொல்காலம், நிகழ்காலமென்று மூன்று காலங்களுமறிந்து, எதிரினுடையபலாபலங்களும் வர்த்தமானங்களுந் தெரிந்து யுத்தஞ்செய்ய வேண்டும், அப்படி யுக்தாயுக்தங்களறிந்து, யாதொரு காரியங்களும்நடத்திக் கொள்ளவேண்டும், மேலும், நம்மிலும் பெரியோர்களாயிருக்கப்பட்டவர்க ளிடத்திலும், ஆலோசனைசெய்தால் அதனாலொரு தப்பிதமுமில்லை இப்பவும், நீர்போய்ச் சந்தனமகாராஜன் நம்மைவணங்கும்படியாய்ச் செய்துக்கொண்டுவாரும், அதுவுமன்றி யுத்தமாவதுபுரிந்து வெற்றியாவது பெற்றுவாருமென்று விடைகொடுக்க, காலசித்தனவன் ரதத்தைச்சேனைகளின்பேரில் நடத்தி வில்லைவளைத்து நாணேறிட்டுக்கொண்டு அவன்விடப்பட்ட அஸ்திரங்களையெல்லாங் கண்டித்து அவன் சாரதிகளையுந் துண்டித்து, ரத்தமயமாக்கித் தேரிற்கட்டிய

துவசத்தையும் வெட்டித்தள்ளினனதனற் சேனதிபதியான கெதாயுதன்கோபங்கொண்டு வேறு ரதத்திலேறிவில்லையெடுக் குமுன்னமே நான்குபாணங்களைவிட்டு அந்த ரதத்தையும் பொடிசெய்தா னதனற்கெதாயுதன் சின்னப்பட்டுகோபதெண் டையெடுத்துக்கிறுகிறெென்று சுழட்டிக்கொண்டோடிவந்து, ரதத்தைப்பார்த்து ஓரடிகொடுத்தான். அந்தடி ரதத்தின்பேரி ற்படவே ரதமானது உடையாமற்பின்னுக்கு தள்ளிக்கொண்டு போயிற்று. அதனற் கெதாயுதன்மறுபடியும்பின்னுக்குவாங்கி சாரதியைப்பார்த்து விசைகொண்டடித்தான். அடிக்கவே சா ரதிதலையுடைந்து பூமியில் விழுந்திறந்தான். இறக்கவே கால சித்தன் வில்லை ரதத்தின்பேரில் வைத்துவிட்டு வச்சிரகோப தெண்டாயுதத்தை யெடுத்து நிலத்திற்குதித்து சுழற்றிக்கெதா யுதன் சிரசைப்பார்த்தோங்கி யடித்தான். அந்த அடியை தெ ண்டாயுதத்தினல் தட்டிவிட்டு காலசித்தன் புஜத்தைப் பார்த் து இரண்டடிவிட்டா னதனலவன் கையசைந்துகாலோய்ந் து, மூச்சைபந்தித்து, சுவாசத்தைக்கட்டி தன்னுடைய ஆங் காரபலன்கொண்டு வச்சிரகோப தெண்டாயுதத்தை சுழற்றி, கெதாயுதன் மார்பிற்ருக்கினன். அதையுமவன் தடாய்த்துக் கொண்டு தன்னுடைய தெண்டாயுதத்தினற் காலசித்தனைப் பார்த்து மூன்றடி கொடுத்தான்.

அந்த அடியினற் சிரசிலிருந்து உதிரவெள்ளம் பெருகி யது அதுகண்டுகாலசித்தன் ஏதடாமானிடன்மகாபலவானயி ருக்கிருன், நம்மைகளைக்கஎண்ணி, அடிக்கிருன், நமதுபலமெ ன்ன, நாம்பெற்றவரமென்ன, நம்முடைய பிரதாபசவுரியமெ ன்ன, நம்மையொருமானிடன் யிவ்வளவு கஸ்திப் படுத்தின னல்லவா, காட்டில்வாழும்புலியை நாட்டில்வாழும் ஆடெதி ர்த்ததுபோலும், தாஷ்டீக வீரனைச்சாரமற்ற மூப்பனெதிர்த்த துபோலுமாயிற்றல்லவா, நாமிதுவரையில் ஒருவருக்கும் புற முதுகு காட்டினதில்லை. இன்றிவனல் நமக்கு அபஜெயம்வரு ம்போலிருக்கின்றது நாம் சொல்லிவந்த சபதங்களெல்லாம் வீணவதுபோற்ருேணுது, இவனுடைய பலாபலமென்ன, இவனென்ன, அணுவுக்குச்குச் சமதையானவன், ஒட்டைசா ணில்லை, ஆகையாலிவனுடைய தெண்டாயுதத்தை முன்னே பிளக்கவேணுமென்று மனதிலெண்ணி, வச்சிரகோப தெண் டாயுதத்தைச் சுழற்றி கெதாயுதனைப்பார்த்து விட்டுவிட்டான் அது கெதாயுதன் பிடித்திருந்த கோப தெண்டாயுதத்தைப்

பொடியாக்கி கேதாயுதனையும் யமலோகம் அனுப்பி விட்டது அதனைச் சல்லியமகாராஜன் குமாரனுன சவுபாலன் கேழ்விப் பட்டு காலசித்தன் முன்னுக்கு இரதத்தை நடத்தி அடாகால சித்தா, சிலமின்றி வாலுந்தலையுந்தின்று காலம்போக்குங்குரு டனுகிய மூறடா, எங்கள் பட்டணத்திற்கு குதிரையை விட்டு மீட்டுக்கொள்ளலாமென்று மனப்பாற் குடிக்கிருயல்லவா,உங் களுக்கு மிஞ்சினவர்களு மில்லையென்று பழிக்கிரு யல்லவா, வச்சிரகோபதெண்டாயுத மொன்றுண்டென்று நடிக்கிருயல் லவா, என்கையிலுலிறந்தால் ஸ்ரீராமனெழுப்பிக் கொள்வா ரென்று மனப்பாற் குடிக்கிருயல்லவா, எங்களுக்கு மிஞ்சின வர்களில்லையென்று பழிக்கிருயல்லவா, இராட்சதாள் மூன் இராஜாக்களிணையல்ல வென்று குலைக்கிருய் இதெல்லாம் நிலை யல்ல, இதோ நீதிக்குமுக்காடி செக்கினிற்பட்ட எள்ளுபோ லாகி நீவாடியோடி போகும்படியான வழிதேடிக் கொள்ளெ ன்று வில்லை நிறுத்தி, ஒரு அக்கினி யாஸ்திரமெடுத்து அபிம ந்திரித்துப் பிரயோகஞ்செய்தான்.

அந்த பாணமானது திகுதிகென்றெறிந்துக்கொண்டு வ ருகையில், காலசித்தனுனவன் கண்டு, ஒரு வருணுஸ்திரத்தை யெடுத்து விடுத்து, அக்கினியாஸ்திரத்தை அணைத்துப் போ ட்டான் அதுபோகவே, பின்னுஞ் சவுபலனுனவன் காலசித் தன் முகத்திற்கு நேராகவில்லைப்பிடித்து அனேகதிவ்வியாஸ் திரங்களைப்பூட்டிச் சரம்பொழிகிறபோதுகாலசித்தனும்,அள வற்ற அஸ்திரங்களை விட்டறுத்துவிட்டு நாலு அர்த்தசந்தி ராஸ்திரம் விட்டானதுகள் புறப்பட்டு சவுபலனேறிவந்த இ ரதத்தை யுடைத்து சாரதி குதிரைகளைக்கொன்று கையிற்பிடி த்திருந்த வில்லையுமொடித்தெறிந்து சவுபலன் மார்பிற்பட்டு முதுகிலுருகிப்போய் விட்டது. அதனுற் சவுபலன் மரணமூ ர்ச்சையானுன்.

## இரண்டாநாள் யுத்தம்.

அதுகண்டு சவுந்தரராசன் தமையனிறந்தானென்று கே ள்வியுற்று, மகாகோபமாகி, மறுநாள் இரதத்தை காலசித்த ன்முன்னுக்குச் செலுத்தி, வில்லிலனேக பாணங்களைச் சந்தி த்து பிரயோகம் பண்ணினனது நாகசற்பம்போற் சீறிக்கொ ண்டு வருவதைக் காலசித்தன்கண்டு, திவ்வியாஸ்திரங்கள்பல

விட்டாறுத்துப் பின்னுங் காலசித்தனுனவன், இருபது நாரா சபாணங்களெடுத்து பிரயோகம்பண்ணவே அந்த நாராசபா ணங்கள் காலக்கோட்டி விஷம்போற் சீறிக்கொண்டு சவுந்தர ராசன் சரீரத்தைச்சல்லடைக் கண்களாகத்துளைத்துவிட்டது அதனுலவன் மெத்தவும் பயமற்று மறுபடியும் மனதைத் திட ப்படுத்திக்கொண்டு நூறுதிவ்வியாஸ்திரங்களெடுத்து ஒன்றி ன்மேலொன்று யெய்கிறபோது, காலசித்தன் கண்டு, கடுஞ்சி னங்கொண்டு, தானும் நூறுதிவ்வியாஸ்திரங்களை விட்டாறுத் துச் சடுதியிலதிகமாக நாராசபாணங்களை சவுந்தரராஜன் மா ர்பைப்பார்த்து விடுத்தான். அதுவந்து மார்பிற்றுக்கி மார்பி ற்றுளைப்பட்டு ஸ்ரீமந்நாராயணு, நாராயணுவென்று இரதத்தி ன்பேரிற்சாய்ந்து மூர்ச்சையடைந்தான்.

அக்காலையில் சல்லியமகாராசனும், சாத்மீகராஜனும், பி ள்ளைகளிருவரும் இறந்ததுகண்டு மகாகோபாக்கினியுடன் இ ரதத்தை காலசித்தன் முன்னுக்குதுரத்தி, வில்லையெடுத்துநி றுத்தி, அனேக திவ்யாஸ்திரங்களை எடுத்து அவாரியாக சர மாரிபொழிந்து, காலசித்தன்இரதத்தை நேரில்வரவொட்டா மலுடைத்துச்சாரதி குதிரைகளை கஷ்டப்படுத்தி பின்பு அன் பது திவ்வியாஸ்திரங்களைவிட்டு நோகச்செய்தான். அப்போ து காலசித்தனுனவன் கடுங்கோபங்கொண்டு வில்லில் ஒரு இ டியாஸ்திரத்தைத் தொடுத்து அவ்விருவருடைய இரதத்தை யுடைத்தான். அப்போதுசல்லியன் சாத்மீகனிருவரும், லகு விற்றப்பித்துக்கொண்டு மறுதேரிலேறி கோபமீறிச் சொல்லு கிறுர்கள். அடா! காலசித்தனே ? நூலின் பயனையுந் தனுர் வேத சாஸ்திரப்பயனையும் மனுவிக்கியானமுந்தெரிந்த எங்க ள் இராஜனுகிய சந்தன மகாராஜன் கையி லகப்பட்ட குதிரையை விடுவோமா எதிரி யென்று வந்தால் பயப்படு வோமா எங்களை வணக்கத்துடன் சரணமென் றடைந்தால் புறவியைத்தருவோம் தூரினுல்சரமாரியாய்ச்சொரிவோமென் றுகாலசித்தன்பேரில் மிதமில்லாத அஸ்திரங்களைவிட்டு சாடு கையில் காலசித்தனுனவன்கண்டு ஆக்ருஷங்கொண்டு இரதத் தைநடத்தி வில்லை நிறுத்தி சரவருஷங்களைப்பொழிகையில் சூரசேனன், உக்கிரசேனன், அஸ்வசேனன், இம்மூவரும் வேகமாகத் தேரைச்செலுத்த வில்லைக்துணத்தொனி செய் வதைக்கேட்டு ஆயிரம் இராசகுமாரர்கள்வந்து மடக்கிக்கொ

ண்டார்கள். அதுகண்டு மட்சயந்தனுமான், குகன் இவ்விருவரும் இரதத்தை நடத்தி இரண்டாயிரம் இராஜகுமாரர்களை வளைத்துக்கொண்டு யுத்தஞ்செய்தார்கள்.

அப்போது சந்தனமகாராஜன்கோபமாகி, மட்சயந்தனுமானையும், குகனையும், இராஜகுமாரர்கள்பேரிற்போகவொட்டாமல்மடக்கிக்கொண்டு யுத்தம் பண்ணினுன். அதுகண்டுமட்சயந்தமகாராஜன் சந்தனமகாராஜனை குகன்பேரில்செல்லவொட்டாமல் மடக்கிக்கொண்டு சண்டைசெய்தான். அவ்வேளையில் சல்லியன் சாத்மீகனென்னு மிருவருங் காலசித்தனைவளைத்துக்கொண்டுவில்லை நிறுத்தி, அஸ்திரங்களை அமோகமாகச் சரமாரியாய்பொழியும்போது காலசித்தன் கண்டு ஏதடா! இந்த மானிடவர்கள் மகாசாமர்த்தியர்களாக விருக்கிருர்கள். ஆனுலுமென்ன மாயிற்று, இவர்களுடைய சாமார்த்தியம் யெவ்வளவு இவர்கள் நமக்கொரு பொருளோவென்று மகாகோபமாய் வில்லையெடுத்து நிறுத்தி, அனேக திவ்வியாஸ்திரங்களை விட்டு இருவரும் விடப்பட்ட அஸ்திரங்களையெல்லா மறுத்துத்தள்ளவே, சல்லியன்சாத்மீகனிருவருங்கண்டு, அதிககோபங்கொண்டு, அளவற்றதிவ்வியாஸ்திரங்களை காலசித்தன்பேரில்விடுக்க, அதுவுஞ்சீறிக்கொண்டு வருகையில், காலசித்தன், அடுக்கடுக்காய் நூறுதிவ்வியாஸ்திரங்களை யெடுத்து முடுக்குடன் விடுக்க, அவ்வஸ்திரங்களையெல்லா மடுக்கென்றுடித்துவிட்டு கைவில்லையுங் கண்டித்துமார்பின் கவசத்தையுந் துண்டித்துச் சொல்லுகிருன்.

ஓய்! இராஜகுமாரர்களே? நீங்கள் சண்டைக்குதவாதவர்கள் வெற்றியடைய மாட்டீர்கள், அதுவுங்கள் சித்தத்திற்கே தெரியவரும் சண்டைவிட்டு எங்களண்டையில்வந்து தொண்டரெனக்குதிரையுடன் கப்பமுங்கட்டி சத்துருக்கரை சரணமடைந்தால் தரணியிலுங்கட்குமரணமில்லை, இல்லாவிட்டாலுங்களிருவரையுந் திரணமாகவாரித் தேய்த்து அத்தூதிப்போட்டு உங்களுடைய சேனைகளாகிய ஆட்டுமந்தைக்குள்காட்டுப்புலி புகுவதுபோல் புகுந்து ஊட்டியைக்கடித்து உதிரத்தைக்குடித்து அல்லோல கல்லோலப் படுத்தாமுன்னம் யோசனை செய்யுங்களென்றுன். அதுகேட்டுசெல்லியனும், சாத்மீகனும், மீலபோற்குதித்து கெக்கலிகொட்டி கற்சித்து கலகலவென்று

சிரித்து, ஆர்ப்பரித்து அடாராட்சதனே "ஆடுநனையுதென்று கோனுய் குந்தியழுதது" போலுங் கூறவந்தாயல்லவா, நல்ல தென்று அதிககோபத்துடன் பிரமாஸ்திரத்தையெடுத்து பூசைகள்புரிந்து பிரயோகஞ்செய்தார்கள் காலசித்தனும் அதற்குப்பதில் பிரமாஸ்திரத்தைவிட்டுக்கொய்துபோட்டான். அது போகவே இருவரும்மிரண்டு நாராயணுஸ்திரத்தைபிரயோகம் பண்ணினுர்கள். அதுகள் வில்லிலிருந்து வெளிப்படவேகால சித்தன்பார்த்து கடுங்கோபங்கொண்டு பதில் பிரம்மாஸ் திரத்தைவிட்டு அறுத்தெறிந்து சாரதிகுதிரைகளையுங் கொன்று இருவருக்கும் யிரண்டிரண்டு நாராசம் விட்டு கையில்பிடித்திருந்த வில்லையுங்கண்டித்து மார்பையும் பத்தலாகக்கிழிக்கவே சல்லியனும்சாத்மீகனும் ஸ்ரீராமாராமாவென்று வாய்விட்டலறி தேரின்பேரில் மூர்ச்சையடைந்தார்கள்.

அதுகண்டு காலசித்தன் களிப்புற்று ரதத்தை சேனைகள் பேரில் நடத்தி அனேகபாணங்களைப்பூட்டி சேனைகளுயிரை வாட்டிசாட்டியில்லா பம்பரம்போலாட்டி வைக்குங்காலத்தில் சேனைகளானதுதத்தளித்துக்கொண்டுகாலசித்தனே உமக்கோர் சரணம் இத்தருணத்தில் எங்கள்மீது கருணைகூர்ந்து ஆளவேண்டுமென்று காலில் விழுந்தோடுவாரும் சத்துருக்கமகாராசனுடைய வெற்றியைப் பார்ப்பவருமாக ஓடுவதைக்கண்டு மூன்றுலட்சத் தறுபத்தோராயிரம் படைத்தலைவருஞ்சேனுதிபதிகளும் இரதத்தைத்துரத்தி ஓடிவருகிற சேனைகளை ஓடவொட்டாமல் நிறுத்திக்காலசித்தனை வளைத்துக்கொண்டுயுத்தம்பண்ணினுர்கள். அப்போது ஆயிரத்தைந்நூறு மந்திரிப் பிரதானிகளையும் சூரசேனன் உக்கிரசேஙன் விஸ்வசேனன் இம்மூவரையும் வரவழைத்துக்கொண்டு வில்லைவளைத்து அனேகபாணங்களை விட்டுத் தடாய்த்துக்கொண்டு மந்திரிப் பிரதானிகள் விடப்பட்ட அஸ்திரங்களின்மீது வந்து விழுகிறதைக்கண்டு மூன்று சேனுதிபதிகளும் வெகுகோபமாகி அதிதீட்சண்யமாயிருக்கின்ற அனேக திவ்வியாஸ்திரங்களையெடுத்துப் பிரயோகம் பண்ணினுர்கள் அந்த திவ்வியாஸ்திரங்களும் விஷநாகம்போற் சீறிக்கொண்டுவர அதை மந்திரிமார்கண்டு கடுங்கோபங்கொண்டு வில்லிற் காலக்கோட்டி விஷம்போ லிருக்கப்பட்ட பாணங்களை -க-ω-ா-கூ-ωகூ-கOகூ-மென்று விடுக்கிறபோது மூன்று சேனுதிபதிகளும் விட

ப்பட்ட அஸ்திரங்களைத் தடாய்த்துக்கொண்டு நமதுபேரிலும் வந்துவிழுகின்றதே இதற்கென்ன செய்வோமென்று ஆலோசனை செய்து மூவரும் மூன்று சத்தியை யெடுத்துப்பூசை செய்துவிட்டார்கள். அந்த சத்தியானது அண்டபகிரண்டங்குலுங்க, ஆர்பரித்துவருகிற அஸ்திரங்களையெல்லாந் தடாய்த்துக்கொண்டு வருகையில் மந்திரியான துருபதண்டனும் ஆயிரத்தைந்நூறு மந்திரிபிரதானிகளும் சத்தி வேல் குந்தம் சக்கரமென்று சொல்லப்பட்ட முப்பத்திரண்டாயுதங்களையும் பிரயோகித்தார்கள். அதுகளும் அக்கினியைக் கக்கிக்கொண்டு சடசடவென்கிற தொனிகளுடன் அதிவேகமாய்வந்து மூன்று சத்திகளையும் அறுத்துப்போட்டு மூன்று சேனாதிபதிகளையும் சின்னாபின்னமாய் கண்டதுண்டமாகச் சரீரங்களையறுத்து உயிர்களை பறித்துக்கொண்டுபோய்விட்டது.

அப்போது ஆயிரத்தைந்நூறு மந்திரிமார்களுஞ் சந்தோஷமாய் இரதத்தை நடத்திக்கொண்டு சேனைகளின் பேரிற் பாணவருஷங்களைப் பொழிகிறபோது சேனைகள் கண்டு ஆயிரத்தைந்நூறு மந்திரிப்பிரதானிகளையும் மடக்கிக்கொண்டு யுத்தம்பண்ணுகையில் சுரதனானவன் வந்தெதிர்த்து விறுவிறென சரவருஷங்களை விடுத்து ஆயிரத்தைந்நூறு மந்திரி பிரதானிகளும் விடப்பட்ட பாணங்களை யறுத்துத்தள்ளி இரதஞ்சாரதி குதிரைகளையுந் தும்சம் பண்ணிப்போட்டான். அதுகண்டு மந்திரி பிரதானிகளும் கோபமாகி கத்தி கேடயமெடுத்துக்கொண்டு சுரதராஜனைவெட்டிக் கெலிக்கவேணுமென்கிற ஆசையினால் ஓடிவருகிறபோது சுரதராஜன்கண்டு ஆயிரத்தைந்நூறு மந்திரி பிரதானிகளுடைய சிரசையுங் கண்டித்துவிட்டான். அந்தவேளையிலிரண்டாயிரம் இராஜ குமாரர்கள் வந்து குகனையும் மட்சயந்த அனுமானையும் வளைத்துக்கொண்டு போர்புரிந்தார்கள். அந்தச்சமயத்தில் மட்சயந்தனுமானானவன் இரதத்தை விட்டுக்கீழேகுதித்து அண்டத்தைமெட்டத்தக்க ஒரு ஆலவிருட்சத்தை மடமடவென்று பிடுங்கி ஒரு கையிலெடுத்துக் கொண்டுவந்து இராஜகுமாரர்களேறிவந்த இரதத்தைப்பார்த்து சாடினான் சாடும்போது அந்த ரதங்கள் அச்சுவேறு ஆணிவேறு குதிரை சாரதிவேறு இராஜமன்னர் வேறு வேறாய் ஓரடிக்கு பத்து இருபது இப்படியாய் மட்சயந்தனுமானாலே இராஜகுமாரர் சின்னாபின்னமாய் முறிப்பட்

டோடிப் போனபேரும், கையிற்பிடித்திருந்த ஆலவிருட்சத்தையொடித்தெரிந்தபேரும், இப்படியா யடிக்கிறபோது மட்சயந்தனுமான் பேரிற்பட்ட அஸ்திரங்கள் யாவையுமுதறிவிட்டு இராஜகுமாரர்களிருக்கும் இரதத்தின்பேரில் பாய்ந்து இரதத்தை வாரிவாரி ஆகாயத்தில் விட்டெறிய அதுகளுங்கிறுகிறென்று சுழன்று வருகையில், ஒன்றோடொன்று தாக்கிமாய்வாரும், சாரதிகளுடன் சாரதிகளிடிபட்டு சாய்வாரும், தனக்குத்தானே கிலிபிடித்து இரதத்திலடிபட்டுச்சாய்வாரும், சந்ததிவாழ்வை யெண்ணி மனங்குன்றி ஆதித்தனொளியாற்காய்ந்து நிஞ்சிப்போவாரும், குதிரைகள் சிக்குபட்டு சீவனைவிடுவதும் தேருருண்டு லகானறுந்துச் சிரந்தொங்கிச் சித்திரவதையாகி பூமியில்விழுந்து இரண்டாயிரம் இராஜமன்னர்கள் சீவனைவிட்டார்கள்.

பின்னுஞ் சிலரை மட்சயந்தனுமான் கைப்பிடியாகப்பிடித்து காலசித்தனிடம் ஒப்பிவைக்கலாமென் றெண்ணிபற்களை நறநறவென்று கடித்துப்பிடித்து தனுசை யொடித்துப் போட்டு தவடையிலடித்து தரையிற்போட்டுருட்டி கடகடவென்று புரட்டி சாணியுருண்டைப்போலுருட்டி தட்டுவோமெனஎட்டிப்பிடிக்கப் போகையிற் சந்தனமகாராஜன் சேனைகள் கண்டு சொல்லிக்கொண்டோடுகிறார்கள். அதென்னவென்றால் ஐயா முன்னால் இராவணனுத்தத்தில் இவனைப்போ லொருவன் வந்து இலங்கையிற் றீயிட்டு அசோகவனத்தையுமழித்து அந்த இராட்சதர்களைக் கொன்றானென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆகிலும், அவன் வானரூபமாய் வந்தான். அவன் வாலோ இலங்கைக்கோட்டை முழுமையு மிழுக்கத்தக்க நீளமுடையதா யிருந்து இராவண சிம்மாதனத்துக்குமேலாகமடித்துப்போட்டு உட்கார்ந்து அந்தராவணனுடன் வார்த்தையாடினான். அவனிவனிலுங் கெண்டன், ஸ்ரீராமருக்குத்தொண்டன் அதுவோ முழுகுரங்கென்பார் இவனோ அரைகுரங்காயிருக்கிறான் போதும், போதும், இவன்கையிற்படுகிற பாதையைவிட நமன்கையிற்படலா மென்றோடுவாரும், அல்ல, அல்ல, குரங்கானால் கல்லுகட்டைகளை எடுக்கும் விடுக்கும் கடிக்கும் பல்லைக்காட்டும் பயமூட்டும் கதும்பும் பின்பு ஓடிப்போய்விடும் இதுகுரங்கல்ல, எப்போது அண்ட மளாவிய ஆலவிருட்சத்தைக் கொண்டு வந்தானோ அப்போதே யிவன் ராட்சதமாய்கை யுடையவன் ஆகையாலிவன் கையிற் சிக்கித்

கொள்ளலாகா தென்றும் பக்கம்பார்த்து குதித்து மூக்காடிட்டு வெட்கியோடுவாரும், அண்ணே, அண்ணே, நான்சொல்வதைக்கேளும், இவன்பேர் மட்சயந்தனுமானும், அந்த அனுமாருக்கிவன் புத்திரனும், ஆகையாலிச் சின்னகுரங்கே யிவ்வளவுபாடுபடுத்தின லந்தப்பெரிய குரங்கும் வரும்போற் காணுகிறது.

அதுவுமிதுவுஞ் சேர்ந்தால் சக்கிமுக்கித்தட்டினாற்போலாம் நம்முடைய சந்தனமகாராசன் பட்டணமாகிய பத்மாபுரிக்கு என்னபாடோயாதுகேடோ "பந்திக்கு முந்திக்கொள் படைக்குப் பிந்திக்கொள்" என்ற பழமொழியுண்டு ஆளைப்பார் முகத்தைப்பார் நாளை சம்பாதித்துக்கொள்ளலா மிப்பேர்ப்பட்ட உத்யோகம் உயிர்போனால் வருமோ நம்மாற் சக்தியில்லை இவனாலடிப்பட்டுச் சாகிறதைப்பார்க்கிலும் ஓடிப்போனால் சுகம் என்சொல்லைத்தள்ளவேண்டாம் வந்துவிடுங்கள் பந்து வர்க்கங்களோடு சந்துஷ்டியாய் நிறைந்து வாழலாமென் றோடிப்போய் விட்டார்கள். அதுகண்டு மட்சயந்தனுமானும் குகனும் சந்தோஷமானார்கள். அந்தவேளையில்சந்தனமகாராசன் கோபமாகி மட்சயந்தமகாராசனை வளைத்துக்கொண்டு யுத்தஞ் செய்கையில் சந்தனமகாராசன் வில்லைவளைத்து அனேக அஸ்திரங்களைப் பிரயோகித்து மட்சயந்தமகாராசனை கைகாலாடவொட்டாமலும் வில்லைக்கையில் தொடவொட்டாமலும், சாரதியை இரதமோட்டவொட்டாமலும், குதிரைகளை சிக்குபடுத்தினான். அதற்கு மட்சயந்தமகாராசன் சற்றும் மெலியாமல் சாரதியை யெச்சரித்துக் குதிரைகளின் சிக்கைவாங்கி இரதத்தை நடத்தச்சொல்லி அமோகமான அஸ்திரங்களைச் சரசரவென்று விடும்போது சந்தனமகாராசன் பதிலஸ்திரங்களைவிட்டு அதுகளை தட்டுகெட்டோடும்படியறுத்துச் சொல்லுகிறான். ஓய்! மட்சயந்தராசனே? நீர் இவ்வளவு நிர்வாகசாலியானபடியாலல்லவோ சத்துருக்கர் விட்ட குதிரையைப் பிடித்துக்கட்டி யுத்தஞ்செய்து வெற்றியடையாமல் உமதுபுத்திரர் புத்திகெட்டு பக்திவினயத்துடன் அளவற்றகாணிக்கைகப்பமுங்கொடுத்து வணங்கி, அவர்களுக்குச் சகாயமாகி வெட்கங்கெட்டாலென்ன தொப்பையிட்டாற்போதுமென்பதுபோலே இப்போதெங்களுடன் வந்தெதிர்த்தீரல்லவா சபாசு இதுவோ அரசர்களுக்கு வீரப்பிரதாபம்

இதுமெத்தநன்ருயிருக்கிறதென்றுசொல்லி அதிககோபத்து டன் சத்தியையெடுத்து பூசைசெய்து துவேஷத்துடன் விடு த்தான். அது அண்டரண்டங்குலுங்க ஆர்ப்பரித்து ஆவென் றுவாயைத் திறந்துக்கொண்டு வருகையில் மட்சயந்தராசன் அனேக அஸ்திரங்களையெடுத்துப் பிரயோகம் பண்ணினுன்.

அந்த அஸ்திரங்களைச் சத்தியானது தடாய்த்துக்கொ ண்டுவருகிறபோது மட்சயந்தமகாராசன் தன்னுடைய சத்தி யையெடுத்து பூசைசெய்தேவினுன், அந்த சத்தியும் அதிவே கத்துடன் புறப்பட்டு வருகிற சத்தியின்பேரில் தடாலென்று பாய்ந்து ஒன்ருெடொன்று ஊடுதாக்கி இரண்டும் வெகுநேர மாய்ப்போராடிபொடிப்பொடியாய்பூமியில்விழுந்தது அதை க்கண்டு சந்தனமகாராசன் மனதிலினியில்லாகோபஞ்செய்து கண்களி லனல்பொறி பூர்த்து மட்சயந்தன்ருேல்வியடைவா னென்றிருதயத்திலெண்ணி கண்ணியமடைந்து வண்ணமு டைய தேவர்கள் சித்தத்திற் றியக்கமாகி மேலண்டத்திற்கோ டிப்போனுர்கள். அப்போது சந்தனமகாராசன் வேலாயுதத் தை எடுத்துப் பூசைசெய்துவிட்டானந்த வேலானது திகுதி கென் றெறிந்துக்கொண்டு அதலவிதல நிதலசுதல தராதல மகாதல பாதாளமுழுதும் நடுங்கத்தக்கதாக ஆவென்று வாயைத்திறந்துக்கொண்டு வருகிற வேலாயுதத்தின்பேரில் மட்சயந்தராசன் மிதமில்லாத அஸ்திரங்களைப் பிரயோகிக்க அதுகள் வேலினுல் முறியுண்டு தறிபட்டுப் போயிற்று. பின் னுமந்தராசன் அதிகசினங்கொண்டு நூறுநாராசமெடுத்து வேலின்பேரிற் பிரயோகஞ்செய்தா னதுகளேயும் வேலாயுத மானது கண்டதுண்டமாய்க் கண்டித்து அதிகவேகமாக வந்து மட்சயந்தராசன் மார்பிற்பாய்ந்து முதுகிலுருகிப்போ யிற்று. அதனுல் மட்சயந்தராசன் ராமா ராமாவென்ற வாக் குடன் ரதத்தின்பேரிற் சாய்ந்து பிராணனைவிட்டான் சூரிய னும் அப்போது மேற்றிசைக் கடலில் மறைந்தார்.

மூன்றும்நாள்யுத்தம்.

---

மறுநாள் வீரசேனராசன் மடிந்துபோனதை நினைந்து அதிககோபதீப்தனுகி இனிநாம் சும்மாயிருக்கலாகாதென்று திடங்கொண்டு ரதத்தை சந்தனமகாராசன் முன்னடத்திதனு சையெடுத்துநாட்டி அபரிமிதமானசரங்களைப்பூட்டிறிவ்றிவ் வென்றுபிரயோகம்பண்ணுகையில் அப்பாணங்கள் கோடை

காலத்துமழைபோல சாடவருவதை சந்தனமகாராசன்கண்டு சவுதியில் பதில்பாணங்களைவிட்டுதலைகாட்டவொட்டாமற்று ரத்தியடித்துவீரசேனன்மேற்பதினைந்துநாராசத்தைவிடவே அதுகள்நகரத்தோர்கண்டுநடுங்கும்படியாக நாகம்போற்சீறிக் கொண்டுவருகையில் வீரசேனன்பார்த்து இருபத்தைந்து நாராசங்களைப்பிரயோகஞ்செய்தானதுகள்வெளிப்பட்டு ஒன்றோடொன்றுடுதாக்கி நெருப்புப் பொறிகள் பறக்கச் சிடசிட சட சட வென்கிற தொனியுடனும் மற்கட்டி யுத்தம்பண்ணிநிலத்தில் விழுந்து போகவே சந்தனமகாராசன் கண்டு தட்சணம் நூறு திவ்யாஸ்திரங்களை எடுத்து ஒன்றின்மேலொன்று யடுக்கடுக்காய் விடுக்கும்போது அதுகள் கடலொளியிலும் யெண்மடங்கதிகமா யிறைந்துக்கொண்டு புறப்பட வீரசேனன் உக்கிரமாகநோக்கி வில்லை தாங்கிக் கொல்லற்கரிய மிதமற்ற அஸ்திரங்களை எல்லாம் விடுத்து கொன்று தின்றுவிடச்செய்து அதனிடமாகப் பதினைந்தஸ்திரமேவி சந்தனமகாராசன் ரதஞ்சாரதி குதிரைகளை யதம்பண்ணி அவனது பாணுஸ்திரங்களைக் கண்டித்து கவசத்தையு மறுத்துத் தள்ளவே லகுவே தப்பித்துக்கொண்டு மறுதேரி லேறுகையில் வீரசேன ன் சந்தனமகாராசனுக்குச் சொல்லுகிறான்.

ஓய்! ராசனே? கேளும், நீரென்ன யுத்தம் பண்ணுகிறீர் யுத்தத்தை நிறுத்திவிட்டு நான்சொல்லப்பட்ட விசேஷத்தைக் கேளும், என்னவென்றால் ஆயிரத்தெட் டண்டமும் ௱உ௪-புவனமும் சத்தசாகரம் ஈரேழுபதினாலுலகத்தையு மாளப்பட்ட தேவேந்திரனோ டெதிர்த்து யுத்தஞ்செய்து அவ்விந்திரனைப் பிடித்துச் சிறையிலிட்டு ஏகசக்கிரமா யாண்டுக் கொண்டிருந்த இராவணனுடைய உபத்திரவந் தேவர்கள் பொறுக்கமாட்டாமல் பராபரவஸ்துவாய் விளங்கப்பட்ட ஸ்ரீமந்நாராயணரை வணங்கித் துதிசெய்ய அம்முறைகளைக்கேட்டு ஸ்ரீமந்நாராயணன் ஓ! தேவர்களே? நான்பூலோகத்தில் மானிட ஜெனனமாக அவதரித்து ராவணாதிகளைச் சம்மாரம் பண்ணி உங்களுபத்திரவத்தை தீர்க்கிறோம் நீங்க ளியாவர்களும் வானரர்களாய் முன்னுதாகப்போய் அவதரிக்கக் கடவீர்களென் றருளினார்.

அவ்வாறே தேவர்கள் பூலோகத்தில் வானரர்களாயவதரித்தபின் ஸ்ரீமந்நாராயணரே தசரதமகாராசன்புத்திரர்களாய்

ஸ்ரீராமலட்சுமணர் பரதசத்துருக்கரா யவதரித்து தேவர்கள் ரிஷிகளுக்கு வணங்காத் தாடகையைக்கொன்று சனகராசன் வைத்திருந்த வில்லையொடித்து சீதையம்மனை மணம்புரிந்து மூவேழிருபத்தொரு தலைமுறைமையும் ராசவம்சத்தைக் கருவறுத்துக்கொண்டிருந்த பரசுராமனையும் பங்கப்படுத்தி வில்லைப் பிடுங்கிக்கொண்டு துரத்திவிட்டு அன்னைவார்த்தை தள்ளாமற் பதினான்குவருஷம் வனவாசமாகச் சீதாலட்சுமியும் லக்ஷ்மணரும் பின்வர நடந்து, மரவுரிதரித்து, கங்கைக்கரையைக்கடந்து, குகனைச் சிநேகம்புரிந்து, நந்திக்கிராமம்வந்து, பரதருக்குத்திருவடிகொடுத்து, விராதனென்னு மிராட்சனைக் கொன்றுசடாயுவைச் சினேகித்து, பஞ்சவடி தீர்த்தத்திலிறங்கிச்சம்புகுமாரனை மாய்த்து, ராவணன் தங்கையாகிய சூர்ப்பநகையை மூன்ருக்கினைசெய்து, கரதூஷணர்களை வதைத்து, மானாகவந்த மாரீசனைச் சிதைத்து, சீதையம்மனை ராவணன் கையிற்பறிகொடுத்து, சடாயுவுக்குமோட்சமளித்து, கவந்தனை மாய்த்து, தண்டகாவனத்துரிஷிகளுக்கு அபயஸ்தங்கொடுத்து, அசுமுகியென்னப்பட்ட ராட்சசியைக்கொன்று, சவுரிக்குமோட்சம்நல்கி, அனுமாரைக்கண்டுசினேகங்கொண்டு,வாலியை வதைத்து, சுக்ரீவனுக்குப் பட்டந்தந்து, எழுபத்திரண்டு வெள்ளம் வானரானரயுஞ் சுக்ரீவனுல் வரவழைத்து தண்டுவிட்டிறங்கி ராவணன் தம்பியான விபீஷணருக் கழிவில்லாத சிரஞ்சீவியுங்கொடுத்து, நளனுற் சேதுபந்தனங்கட்டி, இலங்கைக்குப்போய் ராவண கும்பகர்னன் முதலானராட்சதானரயுங் கொன்று, விபீஷணருக்குப் பட்டங்கட்டி அயோத்தியில் வந்து பட்டாபிஷேகராய் இராச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கிற நாளில், ராவண கும்பகர்ணுளுக்குச் சகாயமாகச் சதகண்டராவணன் பதினாயிரம் வெள்ளம் ராட்சதாளுடன் வந்து, ஸ்ரீராமலட்சுமணர் பரதசத்துருக்கருட னெதிர்க்க, அவர்களை மடித்தும் பின்னிட்டு வந்த பதினாறுவெள்ளம் ராட்சதரும் சதகண்டராவணன் சகஸ்திரகண்டராவணனு மண்ணிலுருண்டு மாண்டார்கள். அதன்பின்பு சதகண்டராவணன் தம்பியாகிய மகாமாயனுக்குப் பட்டங்கட்டிவைத்து அயோத்தியில்வந்து ராச்சியபாரம்பண்ணிக்கொண்டிருக்கிறநாளில் ஸ்ரீமந்நாராயணராய் விளங்கப்பட்ட ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம் செய்யவேண்டி ராட்சத சிரேஷ்டர்

களையும் இராஜ சமூகங்களையும் அழைப்பித்து, அஸ்வமேதக் குதிரையைப் பூசைசெய்து, பூமிப்பிரதட்சணம் செய்யவேண்டிய குதிரையை முன்னேவிட்டு அதன்பின் ஐம்பது வெள்ளம் இராட்சதாளையும் அறுபத்தாறுயிரம் அக்ரோணி சேனைகளைக்கூட்டி யதற்குண்டான படைத்தலைவர் சேனாதிபதிகளையும் இராட்சத சிரேஷ்டரான மகாமாயன், சலவசந்தன் சேனாதிபதியான காலசித்தனையுங்கூட்டி அவர்களுக்கெல்லாம் இராசாவாக ஸ்ரீராமர் சகோதரன் சத்துருக்க மகாராசனையும் அனுப்ப, விடைபெற்றுக் காடு மலை செடி பட்டணங் கடந்து, மதனுபுரிபட்டணம் வந்துவிட்டது. அதுகண்டு நானும், என்தமயனுகிய மட்சயந்தமகாராஜனும், தண்டுவிட்டிறங்கி சத்துருக்கமகாராஜனுடைய சேனைகள்பேரிற்கவிந்து யுத்தம் புரிந்தோம் அப்போது சேனாதிபதியான காலசித்தனென்பவன் ஸ்ரீராமருடைய பிரதாபத்தைச் சொல்லிக்கொண்டாடினூர். அந்தவிசேஷம் நாங்கள்கேட்டு, சத்துருக்கமகாராசனை வணங்கிக் குதிரையைவிட்டுத் தண்டுடன் சேர்ந்து வரும் போது குதிரையானது வாரணுபுரி பட்டணம் போயிற்று. அப்பட்டணத்தை பரிபாலிக்கப்பட்ட சோமகாச மகாராஜனும், அவருடைய குமாரன் அரண்ணியராஜனென்றும், சுவேலராஜனென்று, மூன்றுபிள்ளைகளுடன் யானைதேர்பரி சேனைகளுடன் சத்துருக்கமகாராஜன் தண்டினில்வந்து யுத்தஞ்செய்து ஜெயம்பண்ணிபின்பு சத்துருக்கமகாராஜன் முதலானவர்களும் இறந்த சங்கதியை அயோத்தியி லிருக்கப்பட்ட ஸ்ரீராமலட்சுமண பரதரறிந்து, யானைதேர் பரிசேனைகளுடனும், அநேகவெள்ளம் இராட்சதாளுடனும், மண் விண்ணதிர, தேர்கள்குலுங்க, வாரணுபுரி பட்டணத்தைநோக்கிவந்துவிட்டார்கள். அப்படிப்பட்ட ஸ்ரீராமபத்திரசுவாமியாருடைய பாதாரவிந்தமெப்படிப்பட்டதென்றல், பிரமதேவராலும், தேவேந்திராதி தேவர்களாலும், ரிஷிகள் முனீஸ்வரர்களாலும், யட்சகின்னரர் கிம்புருட கருடகாந்தருவர்களாலும், காணுதற்கரிதாகிய பாதாரவிந்தத்தைச் சோமகாச மகாராஜனுடைய சத்தியவசனத்தினுலுஞ் சுரதராஜன் புஜபலபராக்கிரமத்தினுலும் நாங்களனைவரும்செய்த தவம், ஓமம், விரதங்களாலும், ஸ்ரீராமருடைய பாதாரவிந்தங்கண்டு, சாஷ்டாங்கமாகச் சேவித்து, தோத்திரம்புரிந்து, நாங்கள் செய்த

கர்மவினைகளனைத்துந் தொலைத்து சாயுச்சியபதவியடைந்து கீர்த்திபெற்ருேம்.

அப்படிப்பட்ட கீர்த்தி பெறவேணுமேயல்லாமல் வீணிற்பிள்ளை பேரன்மார் யானை தேர் பரிசேனைகளையும் பறிகொடுத்து நீர் தனிமையாய் நின்று யுத்தம்பண்ணுகிறீர் நீர்செய்யப்பட்ட யுத்தத்தைப்பார்த்தால் சற்றுநேரத்தில் முழுகிப் போகிறதுபோற் காண்கின்றது, அப்படிவராமல் இனியாகிலுஞ் சத்துருக்க மகாராஜனை வணங்கிஞல் உம்முடைய பிள்ளை பேரன்மார் யானைதேர் பரிசேனைகளையுமெழுப்பித் தருவார் அவரை வணங்கிக்கொள்ளுமென்ருன் வீரசேனமகாராஜன் அவ்வார்த்தைகளைக் காதுற்றுக்கேட்ட சந்தனமகாராஜன் சற்ருலோசித்து வீரசேனனைப் பார்த்துச் சொல்லுகிருன். வாரும்மகாராஜனே! நல்லவசனங்கூறினீர் ஸ்ரீமந் நாராயணரென்ன, தசரதமகராஜன் வயிற்றில் ஸ்ரீராமாவதாரமெடுக்கிறதென்ன, பளாபளா, நன்ருய்ச் சொன்னீர், இராஜாவாகப் பிறந்த பேர்களுக்கு யுத்தஞ் செய்ய புஜபலபராக்கிரம மில்லாவிட்டால் இப்படிப்பட்ட பெரும்புளுகு புளுகுவாருண்டோ ஆஞலும் யுத்தந்துடங்கின மூன்றுநாள் வரையிற் பிள்ளைகள் பேரன்மார் பந்துவர்க்கங்கள் சிநேகிதர் யானை பரிசேனைகளிறந்து நாஞெருவன் மாத்திரம் இருக்கிறேனென்றதாய் சமாதானமாக வணங்கிப் பிழைக்கச்சொன்னீரே போம்போமென்ருன் அதனைக்கேட்ட வீரசேனன் கடுஞ்சினங்கொண்டு ஓய்! சந்தன மகாராஜனே? நல்ல வசனஞ்சொன்னீர் இப்போது நான் சொன்னவிசேஷமெல்லாம் ஒரு க்ஷணநேரத்தில் தெரியவரும், நன்ருு யோசித்துப்பாரும், "வருவது சொன்னேன் படுவது தொலையவேணுமென்று" முன்ஞேர்கள்சொன்ன வாய்மை மெய்யாயிருக்கின்றது, ஆகையால் என்ஞல் அறிந்தமாத்திரம் யோசனை சொன்னேன் அதன்மேலுமக்கு யுக்தா யுக்தமென்னமா யிருக்கின்றதோ தெரியவராதென்ருன்.

அதற்கு சந்தனமகாராஜன் தன்மனதிற்ருனே எண்ணிக் கொள்ளுகிருன். என்னவென்ருல் ஐயோ இந்த அஸ்வம் நமது பட்டணமேன்வந்தது வந்தபடியிஞலல்லவோ நாம் பிடித்துக் கட்டவேண்டியதாயிற்று. அதஞல் நம்மைச்சூழ்ந்திருந்த பிள்ளைபேரன்மார் பந்துவர்க்கங்கள் சிநேகிதாள் காலாட்கள் யானைகள் சேனைகளுமாண்டுபோயிற்று. அப்படி

மாண்டுபோனார்களென்று நமது பிராணனைப் பெரிதா யெண்ணி சமாதான மடைவோமாகில் நம்மோடொத்த இராஜாக்கள் நகைப்பார்கள் தேவர்களு மேசுவார்களே இதற்கென்ன செய்வோமென்று சற்றுநேர மாலோசனைசெய்து பின்பு யுத்தஞ்செய்து இறந்துபோகிறதே யுக்தமென்று ஏகமனதாய் திடப்படுத்திக்கொண்டு வீரசேனனைப்பார்த்து வில்லையெடுத்து நிறுத்தி தேவதாஸ்திரங்களைத் தொடுத்தான்.

அதுகளெப்படிப்பட்ட அஸ்திரங்களென்றால், இந்திரன் கைவச்சிராயுதமும் யமன்கைதண்டும் ஈசானியன் சூலாயுதத்திற் குஞ்சமதையான அந்தபாணங்களை வில்லிற் சந்தித்துப் பிரயோகம்பண்ணினான். அந்த தேவதாஸ்திரங்களும் புறப்பட்டு அண்டங் கிடுகிடென்று குலுங்க, அண்டத்திலுள்ள தேவர்கள் நடுங்க, அக்கினிச்சுவாலைகள் வீசிக் காடு செடிகளெல்லாம் பத்தியெரிய, எங்குந் தணலெழும்ப, வடவாமுகாக்கினிக்கு நிகராய் வருகிறபோது வீரசேனனானவன் கண்டு மனதிற் பயங்கொண்டு ஏதடா நாம்சொன்ன வார்த்தைகளனைத்துந் தடுத்துவிட்டு நமதுபேரிற்றானே அஸ்திரங்களை விடுத்தான். ஆகிலுமென்னமாயிற்றென்றுவில்லையெடுத்து நாட்டி, அநேக திவ்வியாஸ்திரங்களைப் பூட்டி, பிரயோகஞ்செய்யவே அத்திவ்வியாஸ்திரங்களும் கபகபவென்று தீப்பொரிகளுடனெறிந்துக்கொண்டுவந்து சந்தனமகாராசன்விட்ட அஸ்திரங்களினு லடிபட்டு முறிந்து பூமியில் விழுந்துபோய்விட்டது. அதனால் வீரசேனன் மகாவுக்கிராகாரனாய், அநேகபாணங்களைப் பிரயோகம்பண்ணியும் அதுகளையெல்லாம் தேவாஸ்திரமானது கமளீகரம்பண்ணிக்கொண்டு வந்து வீரசேனமகாராஜன் தேர்சாரதி குதிரைகளுடன் பஸ்மீகரப்படுத்திப் போய்விட்டது. அந்த ரதம்போகவே வீரசேனன்வேறொருரதத்திலேறிவில்லையெடுத்து நிறுத்திகுணத்தொனிபண்ணி அநேகபாணங்களைவிட்டுநோகச்செய்தான் அதற்கு சந்தனமகாராசன் எவ்வளவுஞ் சஞ்சலப்படாமல் மகாகோபதீப்தனாய் ஆக்கிரமித்து தன்னுடையவில்லிலே கோடையிடிக்குச் சமானமான அநேகபாணங்களைப்பிரயோகித்து வீரசேனனுடைய சரீரமுழுதும் ரத்தமயமாக்கி சாரதியையுங் குதிரைகளையும் நோகப்பண்ணி அவன்கைவில்லையுங் கண்டித்து கியாவென்று சிங்கநாதஞ்செய்தான்.

அதற்கு வீரசேனன்பின்வாங்காமல்வேறொரு இரதத்தி லேறிவில்லையெடுத்து நிறுத்தி குணத்தொனிபண்ணி, அதிக கோபத்துடன் விஷங்களைக் கக்குகின்ற அதி தீட்சண்யமான நாராசபாணங்களை கணக்குமிதமில்லாமல் தொடுத்து சந்தன மகாராஜனுடைய தேரை சக்கைசக்கையாய்ப்பேர்த்தெறிந்து சாரதிகுதிரைகளையுங்கொன்று ஆக்கிரவியாக்ரமநிக்ரோதனாய் காலாக்கினிருத்திரனைப்போல் அட்டகாசஞ்செய்து சங்க நா தம்பண்ணினன். அதனால் சந்தனமகாராசன் மனம்நொந்து சஞ்சலப்படாமல் வேறேயொரு தேரிலேறி இரண்டு கண்களி லும் நெருப்புப்பொறிகள் பறக்கத்தக்கதாகத் தனதுவில்லில் ஒரு வாய்வாஸ்திரத்தையெடுத்துத் தொடுத்துப் பிரயோகம் பண்ணினன். அதுவும்வில்லிலிருந்து விடுபட்டு அதிவேகமா கவந்து வீரசேனமகாராசனுடைய இரதத்தை குபீலென ஆ காயத்தில் கிளப்பிவிட்டது. அப்போதந்த இரதமானதுகுலா லன் சக்கரம்போல்சுழன்று, பூமியில்விழுந்து, சாரதி குதிரை களுடன் பொடியாகிவிட்டது, வீரசேனனும், பூமியில்விழு ந்து மரணத்திற்குச் சரியான மூர்ச்சையடைந்தான். சூரியனு ம், மேற்குத் திசையில் மறைந்தான்.

---

## நான்காம்நாள் யுத்தம்.

---

அதுகேட்டு மறுநாள் சத்துருக்கர் சித்தம்நொந்து கண் களில் தீப்பொறிபறக்க காசினியெங்குங் கீர்த்தியானதுசிறக்க, சாரதியை யெச்சரித்து தேரை சந்தனமகாராசன்மீதிற் றூரத் திதனுசையெடுத்து நிறுத்தித் தலையை யசைத்து நறநறவெ ன்றுபற்களைக்கடித்து, ஆக்கிரவியாக்கிரம்போற் சீறிக்கோப மீறி ஸ்ரீராமபாணமொன்றை யெடுத்து தனுசிற்றொடுத்து கடு கடுத்துவிடுத்தான். அப்பாணமோ எடுக்கையிலொன்று தொடு க்கையில்பத்து. விடுக்கையில் நூறு, புறப்படுகையில்கணக்குமித மில்லாமல் அப்பாணமானது அதிகரித்து விடுபட்டு அக்கினி ப்பொறிகளைக் குபீல்குபீலென்று வாரியிறைத்து காலகோடி விஷம்போற் சீறிக்கொண்டுவருகிறதை சந்தனமகாராஜன் கண்டு, திடம்விண்டு, திப்பிரமைக் கொண்டு மனோவேகத்திலு மதிவேகமா யிருக்கப்பட்டகோடாகோடி அஸ்திரங்களை சோ ணமாரிபோல் வாரிச்சொரிந்தான். அத்திவ் வியாஸ்திரமான

து புறப்பட்டு ஒன்றோடொன்றாடுதாக்கி சிடசிட படபடவெ ன்று வடவாமுகாக்கினிபோற் சொலித்துக்கொண்டு தடாலெ ன்றுவந்துவீழ, அதை ஸ்ரீராமபாணமானது கமளீகரம்பண் ணிக்கொண்டு சந்தனமகாராசனெங்கேயெங்கேயென்று தேடி வாடி யோடிவருகையில் சந்தனமகாராசன்பார்த்து, மனங்கு ண்ணி, என்னசெய்வோமென்றெண்ணி, கடவுளைத்துதிபண் ணி, காலகதி யெவ்வாறோமோவென்றெண்ணி நூறு நாராச பாணங்களெடுத்துத் தொடுத்துவிட்டான்.

அந்த நூறுநாராசபாணங்களையும் ஸ்ரீராமபாணமானது தவிடுபொடியாக்கிவிட்டு சாரதிமார்பிற்பாய்ந்துமுதுகிலுருகிக் குதிரைகளெட்டையுஞ் சிரசையறுத்து சந்தனமகாராசனேறி வந்த இரதத்தைசக்கைசக்கையாய்ப்பேர்தெரியவே, சந்தனம காராசன்ஸ்ரீராமபாணத்தினுடையசுருக்கறிந்து, ஏதடாஸ்ரீரா மபாணமானதுமகாமகிமையோடுகூடிவருகிறதுஇந்தஸ்ரீராம பாணத்தின் முன்பு நம்முடைய அஸ்திரம்வேல்கத்திமுதல் நிற்கமாட்டாதுபோற்காணுகின்றது. இப்படிப்பட்ட இராம பாணங்க ளெத்தனையிருக்கின்றதோ ஒருபாணத்திற் குத்தரவு சொல்லமாட்டாமல் அத்தனை இராமபாணத்திற்கு உத்தரவு சொல்லநம்மாற்றிரமுண்டோ, இப்படிவருவதறியாமல்வீணி ல்புத்திரன் பேரன்மார் பந்துவர்க்கமதிரதர் அர்த்தரதர்மகா ரதர் சமரதர் என்றுசொல்லப்பட்ட நால்வகைச் சேனைகளை யும் பறிகொடுத்துவிட்டோம், இராஜகுமாரன் சொன்ன வார் த்தையுந் தள்ளிவிட்டோம், இனியென்ன செய்வோமென்று சிந்தாக்கிரந்தனுய், விசனப்பட்டுக்கொண்டிருக்கையில், சத்து ருக்கமகாராஜன் சாரதியை எச்சரித்து இரதத்தைச் சந்தன மகாராசன் முன்புகொண்டு வந்து நிறுத்திச்சொல்லுகிருன்.

ஓ! சந்தனமகாராசனே? நான் சொல்வதைக் கவனமா கக் கேளும், ஏன், சும்மாயிருக்கிறீர், வில்லம்பு இரதமில்லாவி ட்டால் நான் தருகிறேன், அதை வாங்கிக்கொண்டுவந்து உ ன்பிள்ளை பேரன்மார்கள் போனவழி நீரும் போகவேண்டியி ருந்தால் போர்செய்யும், இல்லாவிடில் அஸ்வமேதக்குதிரை யுடன்வந்து நம்மைவணங்கிப் பிராணனைக் காப்பாற்றிக்கொ ள்ளுமென்முர் சத்துருக்கானவர். அந்த வார்த்தையைக் கேட்டு சந்தனமகாராசன் சற்றுயோசனைசெய்து நாம் சும் மாயிருந்தால் காரியமல்ல, சமாதானப்படுகிறதே காரியமென் று மனதிலெண்ணிப் பாதசாரியாக மந்திரிப்பிரதானிக ளொ

ருவருமில்லாமலும், ஆயுத அஸ்திரங்களெடாமலும், நிரா யுதனாக வருகிறபோது சத்துருக்கமகாராசனும்தேரைவிட்டுக் குதித்து நின்றார். அதுகண்டு இராசகூட்டங்களும், இராட்சத சிரேஷ்டர்களும், இரதம்விட்டிழிந்து சத்துருக்கரிடம் வந்து சேர்ந்தார்கள்.

அச்சமயத்தில் சந்தனமகாராசன் சரேலென்று வந்து தன்னுடைய கிரீடஞ் சத்துருக்கமகாராசன் பாதத்திற் படும்படியாய் சாஷ்டாங்கதெண்டஞ் சமர்ப்பித்துத் தோத்திரம்பண்ணினான். அப்படி நமஸ்கரித்த சந்தனமகாராசனை சத்துருக்கமகாராசரும் இராட்சதசிரேஷ்டரும், வாரியெடுத்து மார்போடணைத்து, ஆசீர்வாதஞ் செய்தார்கள். அப்போது சந்தன மகாராசனானவன் சகலரையும் பறிகொடுத்த வருத்தத்தினால் சந்தோஷமில்லாமல் சிந்தை வருத்தப்பட்டுக் கொண்டிருக்கக் கண்டு, சோமகாசமகாராசன் சத்துருக்கருடன் சொல்லுகிறான்.

ஐயா, சத்துருக்கமகாராசரே? கேளும், சந்தனமகாராசனுடைய சதுரங்க சேனைகளுடன் பிள்ளை பேரன்மார்களுமாண்டு போனார்கள். ஆனபடியினால் தாங்கள் சந்தனமகாராசன்பேரிற் கிருபைகூர்ந்து, நால்வகைச் சேனைகளையுமெழுப்பிச் சந்தனமகாராசன் மனதை சந்தோஷப்படுத்திவையுமென்று பிரியவசனமாய்க் கூறுகையிற் சத்துருக்கரும், ஐயா! சோமகாசமகாராசனே? உமது கருத்தின் வண்ணஞ் செய்து வைக்கிறேனென்றுரைத்து சற்றுநேரமாலோசித்து வதிஷ்டரை நினைத்து தோத்திரஞ் செய்தார். அதனை வதிஷ்டரானவர் கியானதிருஷ்யா லறிந்து ஆசிரமம்விட்டு சத்துருக்க மகாராசனிடம் வரும்போது சத்துருக்க மகாராசர் கண்டு, எதிர் சென்றழைத்து ஆசனமளித்து, வீற்றிருக்கச்செய்து வலம்புரி யிடம்புரியாய்வந்து நமஸ்கரித்தார் அப்படி நமஸ்கரித்த சத்துருக்கருக்குப் பல ஆசிகள்கூறி, வதிஷ்டர் கூறுகிறார். வாருந்தம்பி சத்துருக்கா, நம்மை நினைத்தகாரியத்தை சொல்லுமென்று கேட்க, சத்துருக்கமகாராசர் கூறுகின்றார்.

ஐயா! முனிநாதரே? நாங்கள் விட்ட குதிரையை இந்த சந்தனமகாராசன் பிடித்துக்கட்டி நால்வகை சேனைகளுடன் வந்தெதிர்த்து, யுத்தம்புரிந்து சேனைகளையும் புத்திரன் பேரன்மார்களையுந்தோற்று, கடைசியில் நம்மிடம் சமாதானத்திற்கு வந்தார். ஆகையால் இருதிறவர் படையிலுமிறந்த

சேனைகளை யெழுப்பித் தரவேண்டுமென்று கேட்டார். அதற்கு வதிஷ்டர் சந்தோஷமாகி, வாருந்தம்பி சத்துருக்கா, அப்படியே யெழுப்பித் தருகிறேன் இன்றுமுதல் ரணக்களத்தில் நம்மை யழைப்பிக்க வேண்டாமென் றுதிருவாய் மலர்ந்து வதிஷ்டரானவர் வாய்வு மூலையாகத்திரும்பி, இருதிறவர்படையிலு மிறந்தவர்களெல்லா மெழுந்திருக்கக் கடவதென்று தம்முடைய கமண்டல அமிர்தத்தை வாரி யிறைத்தார். இந்த அமிர்தத்தினுடைய காற்றுனது இறந்த சேனைகள்பேரிற் பட்டமாத்திரத்தில் இறந்த சேனைகளெல்லாங் கைபொருந்தி கால்பொருந்தி உயிருண்டாகி தூங்கி விழித்தவர் போல் எழுந்தார்கள். அந்தச் சமயத்தில் சகலரும் வதிஷ்டரைச் சேவிக்க, வசிஷ்டரும் அவர்களுக்கு வாழிகூறி தமதாசிரமமெழுந்தருளினர்.

அப்போது சல்லியன் சாத்மீகன் சவுபாலன் சேனுதிபதியான கெதாயுதன் இருநூறு இராசகுமாரர்களும் ௱00-மந்திரிபிரதானிகளும் ஒன்ருய்க்கூடி சந்தனமகாராசன் சத்துருக்கமகாராசனையும் மட்சயந்த மகாராசனையும் வந்துசேவித்தார்கள். அவர்களுமவர்களுக்கு ஆசீர்வாதஞ் செய்தார்கள், அந்தச் சமயத்தில் மகாமாயன், சலவசந்தன், காலசித்தன், நீலாட்சதன், சூரசேனன், வீரசேனன், உக்கிரசேனன், மட்சயந்தனுமான். குகன், திவேதன், பவர்ணன், அரண்ணியன், சுவேதன் என்று சொல்லப்பட்ட பிரமுகாள் படைத்தலைவர்கள் சேனுதிபதிகள் இராசமன்னர்கள் மந்திரி பிரதானிகள் மற்றுமுள்ள ஐம்பத்தாறு தேசத்து இராசாக்களும் ஒன்ருய்க் கூடி சத்துருக்க மகாராசனையும் சந்தனமகாராசனையும் மட்சயந்தமகாராசனையுந் தழுவச்சல்லியன் சாத்மீகன் சவுபாலன் சவுந்தரன் இவர்களும்போய் ஒருவர்க்கொருவர் தழுவிச் சமாதானமாகிச் சந்தோஷமானுர்களப்போது, இருதிறவர் படையிலும் ராயபேரி வெண்கலபேரி ராசமுரசு கர்னுபுரி கைத்தாளம் மத்தளம் ருத்திரவீணை சங்கீத மேளவாத்தியங்கள் முழங்கத்தக்கதாகப்பத்மாபுரி பட்டணம்வந்து சந்தனமகாராசன் கொலுமண்டபத்தில் சத்துருக்கமகாராசன் சோமகாசமகாராசன் முதற் சகலமான இராசாக்களும் அவரவர்களுக்குத் தகுந்த விடுதிகளமைத்து பிறகு சத்துருக்கமகாராசர் முதல்சகல இராஜாக்களுடன் தானும் பஞ்சகச்சாய பரமான்னத்துடன் விருந்து புசித்து சபாமண்டபம்வந்து அவரவர்களுக்குத்தகுந்த ஆசனமளித்து கற்பூர

தாம்பூலங்களை கொடுத்து சத்துருக்க மகாராசருக்கு வெகு மதியாக காணிக்கைக் கப்பங்களும் அஸ்வமேதக் குதிரையுங் கொண்டுவந்து கொடுத்து வணங்கிக்கொண்டு பின்பு வரிசை வரிசையாக சோமகாசமகாராசன் முதல் யாவத்திராளுக்கும் தகுந்தமரியாதைகளைச் செய்து சந்தனமகாராசன் தானும் சத்துருக்கமகாராசர் வலப்பக்கமாக ஒரு ஆசனத்தின்பேரில் உட்கார்ந்திருந்தான்.

அப்போது அதிக உல்லாசமாய் நாலுநாள் வரைக்கும் கேளிக்கை விநோதங்களையும் ஆடல்களையும்பார்த்து அகங் களித்து ஐந்தாநாள்காலையில் தன்னருகிலிருக்கும் சந்தன மகாராசனையும் சல்லியமகாராசனையும் பார்த்து சத்துருக்க மகாராசர் சொல்லுகிறார். ஐயா, சந்தனமகாராசனே? கேளும், நானயோத்தியை விட்டுப் புறப்பட்டு ஆறுமாதமா யிற்று யாகநாளும் சமீபித்திருக்கிறது ஆகையால் நாம் ஐலு தியிற்போகவேண்டும் நீரும் உமது சேனைகளுடன் வரவே ண்டுமென்று கேட்டுக் கொள்ளுகையிற் சந்தனமகாராஜன் கூறுகிறார். ஓ! சத்துருக்கமகாராஜரே? கேளும், இந்த நாடு நகரமும் நாங்களுந் தங்களுடைய ஆதீனமல்லவோ வெ ன்று பிரியவசனமாகக்கூறி யானை-௫00 தேர்-௬ காலாள்கள் உ௫௬-பாரந்தங்கம் இதுகளெல்லாம் காணிக்கையாக அயோ த்திக் கனுப்பிவிட்டு சத்துருக்க மகாராஜனுக்கும் சகல இராஜ கூட்டங்களுக்கும் இராக்ஷத சிரேஷ்டர்களுக்கும் வெகுமதி செய்து மந்திரியான துர்மதனையழைத்துப் பட்டணத்தை யவன் வசத்திலொப்பிவித்து போட்டு சேனாதிபதியான கெதா யுதனையழைத்து உஎ00-அக்ரோணி சேனையுடன் சத்துருக் கருடைய தண்டிற்குப் போய்ச்சேரென் றுத்திரவுசெய்து அரண்மனைக்குச்சென்றார்.

அதன் பின்பு சத்துருக்கரானவர் சேனாதிபதியான கால சித்தனையுஞ் சூரசேனனையும் உக்கிரசேனனையும் பார்த்துச் சொல்லுகிறார். வாருஞ் சேனாதிபதிகளே நம்முடைய தண்டு தளங்களையெல்லாம் தயார்படுத்துங்களென்று கூறுகையில், அவர்கள் சென்றுதயார் செய்தார்கள். எப்படி யென்றால் நாலுவெள்ளத் தேழாயிரம் அக்ரோணியானைகளும் ஏழு வெள்ளத்து பதினாலாயிரத் திருபத்தெண்ணாயிரம் அக்ரோ ணி இரதங்களும் பதினாறுவெள்ளம் கால்பலமும் தயார் செய்து யானையின்பேரில் கருடக்கொடிபிடித்துப் பயணபேரி யறைந்தார்கள். அந்த முழக்கத்தைக்கேட்டுச் சத்துருக்கர், சோமகாசமகாராசன், மட்சயந்த மகாராசன், ஆரண்ணிய

மகாராசன், சுரதராசன், சுவேலாராஜன், வீரசேனன், அஸ்வசேனன், குகன், மகூஷயந்த அநுமான், சுவேதனும் இன்னும், ஐம்பத்தாறுதேசத்து ராசாக்களும் இராஜகுமாரர்களும் மந்திரிபிரதானிகளும் இரதமேறிப் புறப்பட்டார்கள். அப்போது சந்தனமகாராசனும், சல்லியராசனும், சாத்மீகராசனும், இரதமேறிப் புறப்படவே சவுபலராசனும் சவுந்தர இராசனும் ஆடையாபரண லங்கிர்தராகத் தேரேறி அஸ்வமேதக் குதிரையையு மழைத்துக்கொண்டு உ000-இராசகுமாரர்களுடன் யாவருமொன்ருய்ச் சேர்ந்து புறப்பட்டு அஸ்வமேதக் குதிரையைப் பூசைசெய்து பதிஞயிரம் இராட்சதாளையும் நீலாட்சதனையுங் காவலாகக்கூட்டி முன்னுதாயனுப்பினார்கள் அப்பால் சேனுதிபதியான நீலாட்சதன் பதினையாயிரம் இராட்சதாளுடன் அஸ்வத்தை முன்னடத்தித் தாங்கள் பின்னடக்கையில் ராயபேரி ரணபேரி வெண்கலபேரி முதலாகியதும் ஒலிக்க, சங்கீதவாத்தியங்கள் முழங்கதோற்கருவி துளைக்கருவி கஞ்சக்கருவி குடமுழாப்பஞ்சநாதமென்று சொல்லப்பட்ட முப்பத்திரண்டு வாத்தியங்களுந் தாம்தாமென்றடிபட, அண்டமதிர, புவிநடுங்க, யானைகளானது முன்னும் தேவர்களானது அதன் பின்னும் குதிரைகளதன் பின்னுமாகப் பத்மாபுரி பட்டணத்தைவிட்டு நடக்கையில் அந்த அஸ்வம் நின்றவிடங்களிலும், மலசலம் விட்ட விடங்களிலும், ஓமசாந்திகள் தானதருமங்கள் நடத்தி, பின்பு அஸ்வம் வேசாரிப்படுத்துக் கொள்ளுமிடங்களிற் கோவில் குளங்களியற்றி, தண்டு விட்டிறங்கியிருந்து அஸ்வமெழுந்து தன்னிச்சையாய் நடக்குமாகில் அவர்களும் பின்ருெடர்ந்து நடந்தும் இந்தப்படியாக நடந்துகொண்டிருந்தார்கள்.

வால்மீகரது சிங்காரவனச் சிறப்பு

கலி விருத்தம்.

வேலைசூழிவ்வுலகில் வியப்பநாளுங்
கோலமாநகார் சப்திடங்கூறினேம்
மால்நிகர்த்தவால் மீகர்வசித்திடுஞ்
சீலமிகுவனச் சிறப்பைச்செப்புவாம்.

இப்பால் வால்மீகரிஷியின் சிங்காரவனத்தில் சீதையம்மனும் இரண்டு பிள்ளைகளுஞ் சுகமாயிருந்து நினைத்தபோது

காமதேனுவால் தேவாமிர்தமுண்டு, சீதையம்மனுனவள் இர
ண்டுபிள்ளைகளுடன் விளையாடிக்கொண்டு தன்விசனமெல்லாந்
தீர்ந்துசுகத்துட னிருக்கும்போது அவ்வனம்யெப்படியிருக்
குமென்றால், மாதமும்மாரிபெய்யவும், காடுசெழிக்கவும், கனி
வர்க்கங்கள்கமழவும், வகைக்கொரு மலர்ப்பூக்கவும், அந்தக்
காட்டில் வாசம்பண்ணப்பட்ட ரிஷிகள் தபோதனர்கள் தங்கள்
தங்கள் தவமீடேறவும், அவ்வனத்திலுள்ள பட்சிசாதிகள்
ஆனந்தக்கூத்தாடவும் கோட்டான் ஆந்தைகள் சப்திக்க,
அன்னங்கள் நடக்கும் ஒய்யாரங்களுமெப்படியிருந்ததென்று
ல், அயோத்தியில் இருக்கப்பட்ட உத்தியானவனத்தில் வசிக்
கும், மயில்கள் குயில்கள் அன்னங்கள் முதலான பலவிதப்பற
வைகளின் ஆடல் பாடல்களைக் கண்டுகளித்து ஆனந்தமடை
ந்துக்கொண்டிருந்த இராசலட்சுமியான சீதையம்மனுக்கு
வால்மீகர்வனத்தில் வசிக்கும்பறவைகளானது !ஓ அம்மணீ?
எங்களாடல் பாடல்களை சற்றுகிருபா நோக்கஞ்செய்யு மென்
றதுபோல குயில்கள் பாட்டகாரகவும், ஆந்தை கோட்டான்
சப்தமோ நட்டுவர்கள் தாளமாகவும் அன்னங்கள் இராஜஸ்
திரீகளாகவும், புலி கரடி சிங்கங்கள் சேவகராகவும், நடித்து
காண்பித்ததுகள் இன்னமும் புலியும், எலியும், ஓரிடத்தில் வி
ளையாடவும், கீரிப்பிள்ளையும் பாம்புங் கொரோமில்லாமல்சினே
கஞ்செய்யவும், இராஜாளியும் புறாவும் ஒருமித்திருக்கவும் சிங்
கமும் யானையுஞ்சேர்ந்து வாழவும், மேலும், அவ்வனத்தில்
யெங்கேபார்த்தாலும் ரிஷியீஸ்வரர்களிட வாசிர்மங்களும்,
இவர்களைச்சுற்றித் தென்னஞ்சோலைகளும், தடாகங்களும்,
கேணிகளும், நந்தவனங்களில் குயில்கள்பாடவும், மயில்களா
னது தங்களுடைய ரெக்கையைவிரித்து நடனம்புரியவும்,
வண்டுகள் புஷ்பங்களினதுதேனையுண்டு, ரீங்காரங்களைப்பாட
வும், இத்யாதிவினோதங்களைப் பொருந்திய அந்த வால்மீகர்
வனத்தினது வியப்பை சீதையம்மனும் பிள்ளைகளும் பார்
த்து, ஸ்ரீராமரைத் துதிசெய்துக்கொண் டிருக்கையில் வால்
மீகர் செபத்தைவிட்டு கண்ணைவிழித்து செபதபங்களை முடித்
துக்கொண்டு சீதையம்மனிருக்கும் பர்னசாலைக்குவந்து அம்
மன் தரிசனங்கண்டு மனதில் தோத்திரஞ்செய்தார். அச்சம
யத்தில் சீதையம்மனும் பிள்ளைகளும் வால்மீகருக்கு நமஸ்
காரம் புரிந்து அவராசீர் வசனம்பெற்று, புலித்தோலாச

ணம் பரப்பி அவரை வீற்றிருக்கச் செய்தார்கள். அவ்வால்மீகர் சற்றுநேரந் தன்மனதில் யோசனைசெய்தார் அஃதென்னவென்றால், சீதாலட்சுமி நம்முடைய ஆசிரமத்திற்கு வந்தநாளும் பிள்ளைபிறந்தவயதுங் கணக்கு பார்க்கும்போது, ௧௦-வயதும் ௪-மாதமாகின்றது சிங்கக்குட்டிகள்போல மகா வீரபராக்கிரமசாலிகளாயிருக்கிறார்கள். இவர்கள் முன்னிலையில் அரியரப்பிரம்மாதிகளும் நின்று யுத்தம் பண்ணமாட்டார்கள், இந்த மண்டலத்திலுள்ள இராஜாக்கள் வந்தெதிர்த்தாலும் குசலனுடைய பாணங்களினால் பஸ்மீகரப்படலமாய்ப் போவார்கள்போற் காணுகின்றது இவர்களுடைய புஜபலபராக்கிரமந் தானென்ன இவர்களுக்கு எதிரிகள்தானுண்டோவென்று சந்தோஷித்துத் தம்முடைய தியான திருஷ்டியினாற் பார்த்தார் இன்னம் ஒருசாம பரியந்தத்திற்குள்ளே நடக்கப்போகிற யுத்தமுங் குசலவர்களால் மாளப்போகிற இராஜாக்களும், இராக்ஷதரும், தம்முடைய தீர்த்தப்பிரதாபம் வெளியாகவும், சீதையம்மனும் பிள்ளைகளும் அயோத்தியா புரியிற்சேர்ந்து அஸ்வமேதயாகம் நடக்கப்போகிற விந்தையும், தேவர்களுக்கு அவிற்பாகங் கொடுக்கப்போகிறதுங்கண்டு சந்துஷ்டியாகி நாமிவ்விடத்தி லிருக்கப்போகாது இவர்களா லின்பதுன்பம் நடக்கப் போகிறதென்று மனதி லெண்ணினவராய்ச் சீதையம்மனைப் பார்த்துச் சொல்லுகிறார். வாருமம்மா சீதா, நான் பாதாளலோகத்திற்குப் போய்வர, ஐந்துநாட் செல்லும்போற் காணுகின்றது. ஆகிலுஞ் சல்தியில் வருகிறேன் போய்வரச்செலவு கொடுமம்மா வென்றார். அதுகேட்டு குசலவர்கள் சந்தோஷமானார்கள். சீதையம்மன் திடுக்கிட்டு வால்மீகரைப்பார்த்துச் சொல்லுகிறாள். ஐயா! வால்மீகரே? எனக்கிதுவரையிலிருந்த சந்தோஷம் இன்றையதினம் நீங்கிவிட்டது அதேனென்றால், நீர் பாதாளலோகத்திற்குப்போய் வருகிறேனென்று செலவு கேட்கவே, எனக்கு வலது புஜமும், வலதுதுடையும் துடிக்கின்றது, எனக்குச் சமாதானப்படவில்லை மனது கலக்கமாயிருக்கிறதென்றாள். அதுகேட்டு வால்மீகர்சொல்லுகிறார். கேளாயம்மா, சீதாதேவியே? திரிலோகத்தையுஞ் செயிக்கத்தக்க புஜபலபராக்கிரமமுள்ள பிள்ளைகளிருக்க, உனக்கென்னபயம், சந்தேகந்தோன்றின மாத்திரத்தில் என்னை நினைத்தால் நான் வந்துவிடுகிறேன். நீயாதொன்றுக்கும் பயப்படவேண்டாம்.

ஆகிலும், உனக்கு இன்பதுன்பந்தானேது, இந்த துன்பங்களைவிட்டு சந்தோஷவார்த்தையாய் செலவுதந்தால் நான் போய் நம்மைக்கோரிசெய்யப்பட்ட யாகத்தை முடிப்பித்து அதிகவிரைவாய் வந்துவிடுகிறேன் செலவு தாருமம்மாவென்றுபிரியவசனமாய்ச்சொன்னார். அதனைக்கேட்டு சீதையம்மன் சொல்லுகிறாள். வாருமையா, முனிநாதரே? தாங்கள்பாதாளலோகத்திற்குப்போய் அதிக விரைவாய் வந்துவிடுமென்ன, வால்மீகர் குசலவர்களுக்குப் புத்திமதிகளைச்சொல்லி அவர்களிடத்திலுஞ் செலவுபெற்றுச் சில ரிஷிக்கூட்டங்களுடன் பாதாளலோகம்போயினார்.

## குசலவர்கள் வேட்டையாடச் சீதையம்மன் விடைகொடுத்தனுப்புதல்.

ஆசிரியவிருத்தம்.

சீரோங்குதசரதன்றனையனுக்கினியளாந்திருவிலுயர்சீதைதந்த
செல்வராங்குசலவரென்னுஞ்சிறுவரிருவரதுதிங்களணிகாவதனநோக்கி
ஏரோங்குமகவாகயெந்தனுக்குற்றவிருபுதல்வர்காணீவிரின்று
இந்தவொடுகெதிர்நிலவெறிக்காமனம்புகுந்தொழிலரிதிரண்மீதினும்
காரோங்குமானைத்திரண்மீதினும்போய்கரடிவெம்புலிமீதினுங்
கலைமான்கண்மீதுவேட்டமாடத்துணிவுகளைகள்கொண்டவெண்ணம்
பாரோங்குகீர்த்திபெறுமுனிவரருள் பத்தாவினருளினாலும்
பதனமாய்ச்சென்றேகணங்களைச்சேதித்துபரிவுடன்வருகுவீரே.

அதன்பின்பு குசலவர்கள்தாயாராகிய சீதையம்மனைச்சேவித்துச்சொல்லுகிறார்கள். கேளுந்தாயே, நாங்கள்காட்டுக்குப் போய் வேட்டையாடி வரவேண்டும், எங்களுக்குச் செலவுதந்தருளுமென்று கேட்க, சீதையம்மன் சொல்லுகிறாள். அடா தம்பி, குசலவர்களே? நல்லயோசனை செய்தீர்கள் ஐயர் வால்மீகர் எப்போது பாதாளலோகத்திற்குப் போவாரோவென்று காத்துக்கொண்டிருந்தீர்களோ, அவரில்லாதகாலத்திலென்னைத்தனியேவிட்டுப்போகலாமோ, அவ்விடத்தில்கரடிபுலிசிங்கங்கள் அநேகமாயிருக்குமே, உங்களையரில்லாதவேளையிலெப்படி நானனுப்புவே னென்றாள். அதற்குக் குசலவர்கள் சொல்லுகிறார்கள். ஓ! அம்மா? நல்லவசனம் பகர்ந்தீர், நாங்களுன் வயிற்றிற் பிறந்து எங்களுக்குச் சவுரிய வீரபராக்கிரமமில்லாமற் போயிற்றோ, இப்பூமண்டலத்திலுள்ள கரடி புலி காட்டானை சிங்கம் இதுகளெல்லாமே கோபித்து, எங்

கள்பேரி லெதிர்த்து வந்தாலும் எங்கள் கரத்திலிருக்குஞ் சாத்திஞல் கண்டதுண்டங்களாக்கி, காகம், கழுகு, கூளிகளுக்கு யிரையாக்கி விடுவோம், மேலும், திருநேத்திரதாரியாகிய சிவன் வந்தெதிர்த்தாலும் எங்களஸ்திரங்களால் நாங்கள் தன்ருய்ப் பூசைபண்ணி யனுப்புவோம். அதுவுமன்றி வைகுந்த வாசியாகிய ஸ்ரீமந்நாராயணர் வந்தெதிர்த்தாலும் அவரையு மெங்கள் கையிலிருக்கும் துய்ய அஸ்திரத்திஞல் மெய்யைக்கஸ்திப்படுத்தி வைகுந்தஞ்சேருமையாவென் றனுப்பத்தக்க வால்மீகருடைய ஆசீர்வாதமும், அருளும், திரிலோக ரக்ஷகராகிய உன்னுடைய கிருபாகடாட்சமும் அடியேன்களுக்குயிருக்க, இராக்ஷதர் இராசாக்கள் எங்களுக்கு நிகரென்று சொல்லவேண்டுமோ வென்ருர்கள். அம்மொழியைக்கேட்ட அம்மனவள் மனதில் மகிழ்வுற்று, பிள்ளைகளுடைய புஜபல பராக்கிரமத்திற்குமெச்சி, இச்சையோடுரைப்பாள். அப்பா குசலவர்களே? உங்கள் வல்லமைக்கும், வில் திறமைக்கும் யார் யெதிரென்பேன் அதல, விதல, சுதல, நிதல, மகாதல, பாதாளம் வரையில் எதிரி யொருவருமில்லை. ஆதலால் நீங்கள் கானகஞ்சென்று வேட்டையாடி சீக்கிரம் ஆசிரமம் வந்து சேருங்களென் ருசீர்வாதம் புரிந்தாள்.

உடனே குசலவர்கள் சீதையம்மனைச்சேவித்து பூச்சல்லடந் தொடுத்துதட்டி, வரிந்துகட்டி, உருமாடு செகதாடு பூண்டு, முதுகிலம்புருப்பொதி மாட்டி இடுப்பில் முப்பத்திரண் டாயுதங்களும் வைத்துக்கொண்டு கையிற் றனுசெடுத்துப் புறப்பட்டார்கள். அது எத்தன்மை யிருந்ததென்ருல், முந்தி ஸ்ரீராம லட்சுமணர்கள் வனவாசஞ் செய்யவேண்டிப் புறப்பட்ட தன்மைபோற் சாயலும் வடிவும் முகக்களையும் நடையும் அவ்விருவர்போல இரண்டு சிங்கக்குட்டிகள் புறப்படுகையில் வால்மீகருடையவனத்தி லிருக்கப்பட்ட பஞ்சபூதமமைந்த ஜீவராசிகளான பட்சி மிருகஜாதிகளும் குசலவர்கள்முன் னணுகாமல் மறுவனஞ்சேர்ந்ததுக ளக்காலையில் குசலவாள் யானை புலி கரடி சிங்கங்கள் மேலேறி வெகுதூரத்தில் சென்று அவ்விடத்தில் நுழையயிடமில்லாக் காட்டையெல்லாந் தங்களுடைய அஸ்திரங்களைவிட்டு வேட்டையாடி படு சூரணப்படுத்தி தேட்டையான நல்ல பாட்டையாக்கிக் கொண்டு வருகையில், கவரிமானுங் கஸ்தூரிமான்களுங் காணப்பட்டது. அந்தக்கவரிமான் கஸ்தூரி மிருகங்களையும்

அஸ்திரத்திஞலெய்து, சித்திரவதைசெய்து, வனத்துப்பிள்ளைகள்கையிற்கொடுத்து சீதையம்மனிடத்தி லனுப்பிவிட்டு சிலபிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு வேட்டையாடி வெகுதூரம் வந்துவிட்டார்கள்.

அக்காலையில் குசலவன் லவனைப்பார்த்துச் சொல்லுகிருன். அடா தம்பி, லவனே? ஆசிர்மம்விட்டு இவ்விடம் வந்து வெகுநேரமாயிற்று நமதன்னை ஒண்டியாயிருக்கிருள் நானிந்தக் காட்டைச்சுற்றி வேட்டையாடிவருகிறேன் நீவனப்பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு சல்தியில் ஆசிர்மம்போய்ச் சேரென்று சொல்லிகாட்டிற்குள் நுழைந்தான். அதுகேட்டு லவனுணவன் நல்லதென்றுவனத்துப்பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு காட்டிலுள்ள பழவர்க்கங்களைப் பறித்துச் சாப்பிட்டுபசியாறி ஆசிர்மம்வரத் திரும்பினுன்.

லவணனவன்

குதிரையைப் பிடித்துக் கட்டுதல்.

---

விருத்தம்.

இருண்டவனமடர்ந்தசெல்வரிருவருஞ்சிலையைத்தொட்டு
பொருவிலாவுக்கிரங்கொண்டு புலிகரிமான்கள்மீதும்
வருமரிக்கணங்கள்மீதும்வாளியைவிடுத்துமாய்த்துச்
சருவியேமீளுங்காலிற்றனிமிகப்பரிகைக்கொண்டான்.

அப்போது சத்துருக்கமகாராசாவிடுத்த அஸ்வமேதக் குதிரையானது கீழ்சமுத்திரக்கரையோரமாகவந்தது. அவ்விடத்திலிருந்து தென்சமுத்திரமாய்த் திரும்பி யொருவர்கையிலும் பிடிபடாமல்தெற்கு பாரிசத்திலிருந்து தென்மேற்கு முகமாய்த் திரும்பி அயோத்திக்கு நேர் மேற்காகவிருக்கும் வால்மீகர் வனத்திற்குவந்து பச்சென்றபுல்லை மேய்த்துக்கொண்டிருக்கையில் வனத்துப்பிள்ளைகளுடன் வருகிறலவணனவன், அஸ்வமேதக்குதிரையைக்கண்டு ஆனந்தங்கொண்டு, சீக்கிரமாகவந்து ஆச்சரியத்துடன் நெற்றியிலிருக்கின்ற பட்டயத்தை வாசித்துப்பார்க்கையில், அதிலெழுதியிருக்கின்றதாவது சூரியவம்சத்து இராஜாக்களுக்கெல்லாம் இராஜாவான சூரியனைபோற் றுலங்கானின்றவர்பிரதாபசவுரியமுள்ளவர் ஆயிரத்தெட்டண்டமும் இருநூற் றிருபத்திஞலுபுவனமுஞ் சத்தசாகரமும் ஈரேழுபதிஞலு லோகமும் ஏக சக்ரேஸ்வரஞக

ஆண்டுக்கொண்டிருந்த மகா இராஜாதிராஜனுகிய இராவணேஸ்வரனைச் செயித்த வீராதிவீரராகிய இராமபிரான் விட்டகுதிரை இந்தக் குதிரையின்பின் சத்துருபயங்கரன் தனுர்வேதசாஸ்திர ரணரங்கசூரனுன சத்துருக்கன் வருகிருன்.

அந்தச் சத்துருக்கனைச் செயிக்கத்தகுந்த சாமார்த்தியமிருந்தாற் குதிரையைப் பிடித்துக்கட்டி யுத்தத்திற்கு வரலாம். சாமார்த்தியமில்லாதபேர் குதிரையைக் கண்டவுடன் பூசைகள்செய்து காணிக்கை கப்பங்களுடன் கொண்டுவந்து சத்துருக்கரை வணங்கிப் பிழைக்கிறதென்று பட்டயத்திலெழுதி யிருந்ததைக்கண்டு, தலையையசைத்து சொல்லுகிருன். ஆ! ஆ! இராமன் தனக்குத்தானே சூரனென்று கெர்வித்து பட்டயத்திலெழுதிக் குதிரையை விட்டான். அந்தக் குதிரையின்பின் வருகிறவனே சத்துருபயங்கரமான சத்துருக்கன் வருகிருனென்றெழுதி யிருக்கின்றது அந்த சத்துருக்கனுடைய சாமார்த்தியத்தையும் என்னுடைய சவுரியத்தையும் தேவர்களே மெச்சவேண்டும், என்தமயனு மிவ்விடமில்லை. ஆனுலு மென்னமாயிற்றென, கோபமாகிப் பல்லைநெறநெறவென்றுகடித்து அஸ்வத்தைப்பிடித்துக் காட்டுவாழை மரத்திற்கட்டிவிட்டு மகாகோபாக்கினியுடன் வில்லையெடுத்து நிறுத்தி, நாணிபிகிந்து, தோளில் மாட்டிக்கொண்டு வனத்துப்பிள்ளைகளை யப்புறமனுப்பிவிட்டுச் செடிமறைவில் மண்ணைக் குவித்துத் தலைக்குயரமாக வைத்துச் சயனித்திருந்தான்.

அந்தச் சமயத்தில் சேனுதிபதியான நீலாட்சதனும் பதினையாயிரம் இராட்சதாளுங் குதிரையைக்காணுமல் காடு மலை செடி பர்வதங்கள் ஆறுகுன்று கழிமடுக்கள் கிராமம் சீமைபட்டணமுழுதும் தேடிக்கொண்டு சரஸ்வதியாற்றின் கரையோரமாகவந்து பார்த்துக் குதிரையைக் காணுமல் அப்பால் வால்மீகரது வனத்திற்சென்று செடிக் கொருவராய் நுழைந்து தேடிப் பார்க்கும்போது அஸ்வத்தைக் கண்டு, இராட்சதாள் சைகையாய் எல்லோரும் ஒன்ருய்க்கூடிக் குதிரையினிடம் வந்து பார்த்தார்கள். அந்தக் குதிரையானது காட்டு வாழைமரத்திற் கட்டுண்டிருக்கக் கண்டவுடன் நீலாட்சதனனவன், இராட்சதாளைப் பார்த்துச் சொல்லுகிருன். அடடா, இராட்சதாளே? இந்த ஈ நுழையாத காட்டில் நமது அஸ்வமேதக் குதிரையைப் பிடித்துவந்து மரத்திற் கட்டிவைத்து நம்மைக் காணவே மறைந்து போய்விட்டான்

போற்காணுகின்றது அவனெவ்விடம்போனாலும் விடாதீர்கள் இந்தவனத்திற்றான் ஒளித்துக்கொண்டிருப்பான். அவனைத் தேடிப்பிடித்து என்னிடமழைத்துக்கொண்டு வாருங்களென்றான். அதுகேட்டு இராட்சதாள் ஆங்காரங்கொண்டு செடிக்கொருவராய் நுழைந்து தேடிப் பார்க்கும்போது லவனுனவன் இராட்சதாள் கூச்சலைக்கேட்டு எழுந்திராமல் இராட்சதாள் எவ்விடந் தப்பிப் போகிறார்களோவென்று மனதுள் வியப்புற்று மௌனமாகப் படுத்துக்கொண்டிருந்தான்.

அப்படியிருந்த லவனைப் பார்த்து அவர்கள் கண்களுக்கு அந்த லவனெப்படி விளங்கினனென்றால், அந்த ஸ்ரீ ராமமூர்த்தியே இராவண சம்மாரத்திற்காக கோதண்டத்தைக் கையிற்பிடித்துக்கொண்டு பள்ளிகொண்டிருந்த பாவனைபோற் காணப்பட்டான். சந்தேகித்து மறுபடியும் இராட்சதாள் லவனை நன்றாகவுற்றுப் பார்த்தார்கள் பார்க்கையில் அயோத்தியாபுரி பட்டணத்தில் வாசம்பண்ணப்பட்ட ஸ்ரீராமபத்திர சுவாமியைப்போல் முகாரவிந்தங்களும் பச்சைநிற மேனியும், பவளம்போ லுதடும், அகண்டமார்பும் நீண்ட கைகளும், மணிமத்தளம்போற் புயங்களும், ஆலிலைப்போல் வயிறும், வாழைத் தண்டுபோற்றொடையும், அமர்ந்த ஸ்ரீ பாதமும் அலங்கார புஜபலபராக்கிரமமும், அண்டினபேரை ஆதரிக்கப்பட்ட பார்வையும் பொருந்தியிருந்தான்.

அப்போது சில ராட்சதாள் நீலாட்சதனிடத்தி லோடிப்போய் கூறுகிறார்கள், ஐயா! ராட்சத சிரேஷ்டரே? கேளும், நம்முடைய குதிரையைப் பிடித்துக் கட்டினவர்களைத் தேடிப்பார்த்துங் காணாமல் செடியாலொன்றாக ஆராய்கிறபோது ஒருசிறுவனுனவன் ஸ்ரீராமரைப்போற் பள்ளிகொண்டிருக்கிறான் அவனைப் பார்த்தால் சாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியாகிய நம்பெருமானாகிய ஸ்ரீராமரைப் பார்க்கவேண்டியதில்லை அவனைப்பார்க்கையிற் பயமாயிருக்கிறது நீரும்வந்து பாருமையாவென் றழைத்தார்கள். அதுகேட்டு நீலாட்சதன் ஆச்சரியமடைந்து புறப்பட்டு இராட்சதாளுடன்வந்து லவனைப்பார்க்கையில் ஸ்ரீராமரைப் படத்திற்பதித்து வைத்ததுபோலிருக்கக்கண்டு நீலாட்சதன் இராட்சதாளைப்பார்த்து சொல்லுகிறான். அடாராட்சதாளே இந்தச்சிறுபிள்ளையைத் தொந்தரவுபண்ணாமல் இராசாவாகிய சத்துருக்க இராசனிடத்திற் கழைத்துக்கொண்டு வாருங்கள் வராவிட்டாற் கைப்பி

டியாகப் பிடித்துக்கொண்டு வாருங்களென்றான். அதுகேட்டு லவனனவன் கிட்டநெருங்கி வரட்டுமென்று பார்த்துக்கொண்டிருந்தான். அத்தருணத்தில் இராட்சதர்கள் சற்றிடைந்துநின்று லவனைப்பார்த்துச் சொல்லுகிறார்கள். அடா, தம்பி இராசகுமாரகா நீயார் உமதுபெயரென்ன உன்தாய் தந்தையர்கள் பெயரென்ன உங்களுக் கிருப்பிடமெங்கே சொல்லடா வென்றார்கள். அம்மொழியைக்கேட்டு கோபத்தை மனதி லடக்கிக்கொண்டு ஒன்றுஞ் சொல்லாம லிருந்தான். பின்னுமிராட்சதாள் கோபங்கொண்டு அடா! இராசகுமாரா நாங்கள் சொல்லப்பட்ட விசேஷம் உன்காதிற் கேட்கவில்லையோ எங்களுக்குப் பதிலுத்தரவு சொன்னலாயிற்று இல்லாவிட்டால் எங்களுடைய கையைப்பார்த்தையோ இதோ ஒரு அறையினலே அறைந்து யமலோக மனுப்பிவிடுகிறோம் பாரடா சீக்கிரங்கூறடாவென்றார்கள். அதுகேட்டு லவனனவன் கோபங்கொண்டு விரைவிலெழுந்திருந்து வில்லிற்பத்துநாராசபாணத்தையெடுத்துசந்தித்து அடா காட்டுமிருகங்களுக்குச் சமதையாகிய இராட்சதர்களே என்னசொன்னீர் என்பேரும் தாய் தகப்பன்பேருஞ் சொல்லச்சொன்னீர்களல்லவா சொல்லாவிட்டால் உங்களுடைய அகண்ட கைகளினலென்னை அறைந்துக் கொல்லுகிறோமென்றீர்களே நான் என் பெயரும் என் தாய்தந்தை பெயரும் சொல்லுகிறதுமில்லை உங்களாலான சாமார்த்தியத்தைப்பாருங்களென்றான் லவனனவன். அப்போது இராட்சதாள் கோபங்கொண்டு லவனைப் பார்த்து அடா! சிறுபிள்ளாய் காட்டுமிருகமா நாங்கள் மிருகங்க ளிப்படிதானுவிருக்கும் நீசிறுவனுயிருக்கிறாய் உன்வாய் விசேஷத்தைப்பார்த்தால் பெரிதாயிருக்கிறது ஆகிலும் பெரிதல்ல, உன் தாய்தந்தைபேரும் உன்பேருஞ்சொன்னல் நாங்கள்போகிறோம் இல்லாவிட்டாற்போகிறதில்லையென்று இராட்சதாள் வெகு கோபத்துடனே கூறுகையில் லவனனவன், ஓ! இராட்சதர்களே? நீங்களார் இவ்விடம் வரவேண்டிய காரியமென்ன எங்கள் வனத்திற்கு உங்களையனுப்பிவைத்தவனர் சீக்கிரஞ்சொன்னலாயிற்று இல்லாவிட்டால் இந்தபாணத்தினல் உங்களை யமலோகங் குடியேற்றி வைக்கிறேன் பாருங்களென்னவே இராட்சதாள் நகைத்து அடா, ஏதடா சிறுபிள்ளை யென்றல்லவோ இவ்வளவு நேரம் வெறும்மனே சும்மா கைகட்டிக்கொண் டிருந்தோம் சிறுவனென் றிருந்

ததற்கு சிறுபிள்ளை குணம் இப்பதான் தெரியவந்தது நம்மு
டைய சொல்லைக்கொண்டே நம்மை முடிக்கிறான் பார்த்தீர்க
ளோவென்று இராட்சதரெல்லாங் கலந்து பேசிக்கொண்டு
நாலுமூலையும் நெருங்கிப் பிடிக்கவந்தார்கள் லவனானவன்
இராட்சதரைத் தன்கிட்டே நெருங்கவொட்டாமல் பத்துநா
ராசபாணத்தை வில்லிற்பூட்டி தூபதீப நைவேத்தியங்கொடு
த்துவிட்டுவிட்டான். அந்தப்பாணங்களும் வில்லைவிட்டு வெ
ளிப்பட்டு நாகசர்ப்பம்போல் சீறிக்கொண்டு முன்வந்து நின்
றுபேசிய இராட்சதவீரர் நெஞ்சிக்குழியிற்பட்டு பிடரியி லு
ருகிப்போய்விடவே இராட்சதர்கள் அடியற்றமரம்போல் சா
ய்ந்து பூமியில்விழுந்துவிட்டார்கள். பின்னும் சிலராட்சதா
ள்கண்டு வெகுண்டு ஓகோ! மோசம்வந்தது பார்த்தீர்களாவி
ரலத்தனையுள்ள சிறுவன் சொல்வதைக்கண்டீர்களா, பரியாச
மாகச் சரியாகவைத்துப் பேசினதினாலல்லவோ, அறியாதவ
ன் குணத்தைக்காட்டி வில்லைநாட்டி யதிற்சரம்பூட்டி நம்மை
வாட்டினான்.

ஆகையால் வில்லை எடுங்கள் அஸ்திரங்களைத் தொடுங்க
ள் விசைகொண்டுவிடுங்கள் என்று யாவருமொன்றாய்கூடிமா
ரிபோற்சரத்தை வாரிவாரிச் சொரிந்தார்கள். அப்படியாகச்
சொரியும்போது லவனானவன் வருகிற அஸ்திரங்களையெல்
லாம் ஒன்றாவது தன்பேரிற் படவொட்டாமல் பாணங்களை
அறுத்துத்தள்ளிவிட்டு வில்லிலனேக அஸ்திரங்களைச் சந்தி
த்துச் சோனைமாரிபோல் இராட்சதசேனைகள்பேரிற் பொழி
யவே அந்த அஸ்திரங்களினால் கால்வேறு, கைவேறு, உடல்
வேறு, எலும்புவேறு, முண்டம்வேறு, இடைவேறு, இறை
ச்சிவேறாகமடிந்துவிடவே நீலாட்சதன்கண்டு கருத்திற் கோ
பங்கொண்டு கண்சிவந்து தேரைநடத்தி அடா! சிறுபிள்ளா
ய் உனக்கு யுத்தமென்னத்திற்கு என் வீணிலென் சேனையைக்
கொன்றுபோட்டாய் ஆகிலும் பெரிதல்ல உன்வரலாறு மாத்
திரஞ்சொன்னால் அதுவே யெனக்குப்போதும் தம்பியென்று
அதிகபிரிய வசனத்துடன்சொன்ன நீலாட்சதனைப்பார்த்து
லவனானவன் சொல்லத்தொடங்கினான். எனது தாய் தந்தை
யர் பேரைச்சொல்லென்று நீர்கேட்கிறீரல்லவோ கவனமாய்
க்கேளும் சொல்லுகிறேன். என்தாயார்பேர் ஜானகியம்மாள்,
எங்களையர்பேர் வால்மீகர், என்பேர் லவன், என்தமயன்பேர்
குசலன், எங்கள் குலங்கோத்திரமெனக்குத் தெரியவராது நா

ங்கள் வால்மீகருடைய சிஷப்பிள்ளைகளென்றான். அதனை நீ லாட்சதன்கேட்டு, யோசனைசெய்து இவன் சீதையம்மன் பி ள்ளைதானென்று கருத்திலறிந்து சொல்லுகிறான். இவனைப் பார்த்தால் ஸ்ரீராமனைப்போலு மிருக்கின்றது. அவருடைய பிள்ளையென்பதற்கு யாதொரு சம்சயமில்லை இவனை யெந்த விதத்திலும் சத்துருக்கமகாராஜனிடத்தில் அழைத்துக்கொ ண்டுபோவோமென்று லிவன் வருகிறவனாகக் காணவில்லை யு த்தஞ்செய்து பிடித்துக் கட்டிக்கொண்டு போவோமென்றால் இராட்சதாளைக்கொன்று போடுகிறான். சீதையம்மனுடையபு த்திரரென்று அசாரிசமாய் விட்டுப்போனோமேயானால் சத்து ருக்கர் நம்மையேசுவா ரிதற்கெப்படியென்று சிந்தித்து லவ னைப்பார்த்துச் சொல்லுகிறான்.

அடா! தம்பி லவனே? நாங்கள்விட்ட குதிரையை யார் பிடித்து மரத்தில் கட்டினது எனக்குத்தெரியச் சொல்லுமெ ன்றுகேட்க, அதுகேட்டு லவனானவன் சொல்லுகிறான். ஓ! இராட்சதரே? கேளும், நீங்கள்விட்ட குதிரை எங்கள் வனத் திற்குவந்தபடியால் நான் பிடித்துக்கட்டினேன். உங்கள்வீட் டிலிருந்த குதிரையை நான் பிடித்துவந்து கட்டவில்லை யெ ன்றான். அதுகேட்டு நீலாட்சதன் சொல்லுகிறான். வாருந்த ம்பி! நீ சிறுபிள்ளையானபடியினால் தெரியாமற் குதிரையைப் பிடித்துக்கட்டிவிட்டாய் எங்களிராஜாவாகிய சத்துருக்கமகா ராஜர் கேள்விப்படுவாரேயானால் உனக்குயிர்ச்சேதம்வரும், அ ப்படி வராமுன்னங் குதிரையைவிட்டு உயிரை தப்பித்துக்கொ ண்டு உன்தாயிடம்போய்ச் சேருவதே நலமென்றான். அம் மொழியைக்கேட்ட லவனானவன் ஓகோ! இராட்சதரே? நல் லவார்த்தை மொழிந்தீர் நானுகுதிரையைவிடுவிக்க அரியரப் பிரமாதிகள் வந்தாலு முடியாது அதிருக்கட்டும் நீ, ஆண்பி ள்ளையானால் என்னைச்செயித்து குதிரையை விடுவித்துக்கொ ள், இல்லாவிட்டா லுன்னுயிரை தப்பித்துக்கொண்டு ஓடிப்பி ழையுமெனவே, நீலாட்சதன் கோபமாகி, அடா! லவனே? நீ சிறுபிள்ளையென்று உனக்குப் பிரியவசனஞ் சொல்லிக் குதி ரையை விடென்று கேட்டால் என்னைச்சற்று மதியாமல் இப் படிப்பட்ட தகாதமொழியைப் பகரலாமோ, உன்சிறுபிள்ளை தனத்தைக் காண்பித்தாய், "மூத்தோர்சொல் வார்த்தையமிர் தம்" என்ற பழமொழியையுந் தடுத்துவிட்டாய், இனியாவ துகுதிரையைவிட்டு வணங்கிப்பிழைத்தாலாயிற்று. இல்லையெ ன்றால், என்கைவாளாயுதத்திற்கு உன்மெய்யை இரையாகக்

கொடுத்து யமனுலகமனுப்பி விடுகிறேன் பாரடாவென்றான். அதுகேட்டு லவனானவன், இரண்டுகண்களுஞ் செவ்வானம் போற் சிவக்க, அதிககோபாக்கினியுடனே கண்களையுருட்டி நீலாட்சதனைப்பார்த்துச் சொல்லுகிறான்.

லவனுக்கும் நீலாட்சதனுக்கும் யுத்தம்.

விருத்தம்.

குதிரையைப்பதனஞ்செய்த கொற்றவன்மீதிலெய்ய
துதிபெறு நீலன்றானுந் தூமணிரதத்தைத்தாண்டி
மதிமுகநோக்கிப்பிள்ளாய் மாவதைநல்காயாகில்
சதிருருஞ்சமர்விளைக்கத் தனயனேயெனவெதிர்த்தான்.

அடா! இராட்சதப்பட்டி மகனே? உன்னைப்பெரியவனென்று மனதிலெண்ணி, மகாவணக்கத்துடன் உயிர்தப்பிப்பிழையென்று சொன்னால் என்னைவாளுக்கு இரைகொடுப்பேனென்றுகூறினையல்லவோ, "மூர்க்கரோடிணங்கேல்" என்றபழமொழிக்கிணங்கின யல்லவா, உன் ஆண்பிள்ளைத்திறமை இதிற்றெரியவந்தது என்னிடத்தில் கட்டுண்ட குதிரையை உன்னைப்போலொத்த இராட்சதாள் லட்சம்பேர் வந்தாலும் விடுவிக்க மாட்டுவார்களோ, அப்போதல்லவோ, என்சிறுபிள்ளை வீரத்தைக்காண்பிப்பேன். இப்போ தின்னுயிரைத் தப்பித்துக்கொண்டு உன்னினத்தைக் கண்டு என்பேர் பிரதாபத்தைப் சொல்லிப்பிழை, அல்லவென்றாலுன் ஆண்பிள்ளைத் திறமையைக் காட்டடா இராட்சதப்பயலே யென்றான்.

அதுகேட்டு நீலாட்சதன்மீறி, கோபமென்னுங் குன்றேறினதிரே வில்லையெடுத்து நாட்டி, நாணிபூட்டி, கூர்மையோடுங் கூடியிருக்கப்பட்ட பத்து திவ்வியாஸ்திரங்களெடுத்து சந்தித்துப் பிரயோகம் பண்ணிவிட்டான். அந்த திவ்வியாஸ்திரங்களும் விடுபட்டு அக்கினிசுவாலைகளை வீசிக்கொண்டுமகாவேகத்துடன்வருகிறதைக்கண்டு, லவனானவன், அதிசீக்கிரத்தில் கரு-திவ்வியாஸ்திரங்களை விடுத்து நீலாக்ஷதன் விட்ட பத்து திவ்வியாஸ்திரங்களைக்கண்டித்து, அவன் கைவில்லையுந்துண்டித்து அவ்விராட்சதனேறிவந்த இரதம் சாரதி குதிரைகளுடன் தும்சப்படுத்தி விட்டான். அந்தட்சணமே நீலாட்சதன் மறுதேரிலேறிவில்லை யெடுத்துதுணத்தொனிசெய்து அனேக

அஸ்திரங்களைச் சந்தித்து ஐப்பசி, கார்த்திகைமாதத்தில் இடி மின்னல் குமுறலுடனே மழைபெய்தாலெப்படியோ அப்படியாக, சரமாரியாய் ஓய்வில்லாமல் பாணங்களை லவன்பேரில் விடுகிறபோது லவனானவன் கண்டு, விழிகள் துடிதுடித்து புஜம் நடிநடித்து, அதிகவிரைவி லனேக சரங்களை பிரயோகப்படுத்தி நீலாட்சதன்விடுத்த அஸ்திரங்களையறுத்துத்தள்ளி அவன் மார்பிலணிந்த கவசத்தையும் பொடியாக்கி விடவே, மீளாவீராவேசங் கொண்டுவாளாயுதத்தையுருவி ஒரேவீச்சாக வீசிப்போடுகிறே னென்று அதிகவேகத்துடன் சிவ்வென்று பாய்ந்துவருமுன்னே லவனானவன், இரண்டு சிங்கமுகாஸ்திரம் விடுத்து வாளாயுதம்பிடித்தகையையற வெட்டி சிரசையுங் கண்டித்து விட்டான்.

அதுகண்டு இராட்சதாளேதடா இவன்சிறுபிள்ளையென்றுபார்த்ததற்கு நம்முயிருக்கே உலைவைத்திருக்கிறான், இனியிருந்தால் இராக்ஷதாளாகிய அரிசியைவாரி உலையிற்கொட்டி வடித்துப்போடுவான்போற் காண்கின்றதென்றுதலைமேல் கையைவைத்து அழுதுக்கொண்டு ஆகாயமார்க்க மெழும்பிப்பார்க்கும்போது சத்துருக்கமகாராஜனுடைய தண்டானது கண்ணுக்கெட்டின தூலவில் வருவதைக்கண்ட இராட்சதர்களெல்லாம் மனதுகலங்கியோடிப்போவாரும், காணிக்கை கப்பங்கொண்டு சத்துருக்கமகாராஜனை யிணங்கி வணங்குவாரும், இந்தப்படியாய்ப் பூமியானது நடுநடுங்க வருகிற சேனைதண்டுக்குள் இராட்சதாள்புகுந்து காலசித்தனைக்கண்டு நமஸ்கரித்துச்சொல்லுகிறார்கள்.

ஐயா! இராட்சதசிரேஷ்டர்களே? கேளும், நம்முடைய குதிரையானது வால்மீகர்வனத்தில் ஒரு சிறுபிள்ளையானலவன்கையில் பிடிபட்டுப்போயிற்று. அந்த சிறுபிள்ளையினால் சூ-இராட்சதாளும் சேனாதிபதியான நீலாட்சதனும்மாண்டுபோனார்கள் நாங்கள் மாத்திரம் உயிர்தப்பி யோடிவந்தோமென்றார்கள். அதுகேட்டு அந்த இராட்சதாளை சத்துருக்க மகாராஜரண்டையிலழைத்துக்கொண்டுபோய் சொல்லுகிறான். ஐயா! சத்துருக்கமகாராசரே? நமது அஸ்வமேதக் குதிரையானது வால்மீகர்வனத்திற்போனதாயும், அவ்வனத்திலொரு சிறுபிள்ளை லவனென்பவன் அஸ்வத்தைப் பிடித்துக்கட்டி பின்போன இராட்சதாளையும் சேனாதிபதியான நீலாட்சதனையுங் கொன்றுபோட்டான். இவர்கள் மாத்திரந் தப்பிப்பிழைத்து ஓடிவந்து விட்டனரென்றான்.

அதுகேட்டு சத்துருக்கமகாராஜன் கோபமாகிச்சொல்லு கிறூர். ஒருசிறுபிள்ளையானது நம்முடைய குதிரையைப் பிடித்துக்கட்டி இராக்ஷதாளைக் கொல்வதாவது இதென்னவாச்சரியம், இனிநம்முடைய சௌரியமென்னமிருக்கின்றது. ஆனலும் அவனுக்கு எமலோகம்வழிகாட்ட என்கையிலஸ்திரமிருக்கிறது நீங்கள்பயப்படாமலும்பத்திரப்படுத்துங்களென்றூர். அதற்கு இராட்சதாள் சொல்லுகிறூர்கள் ஐயா! சத்துருக்க மகாராஜரே? அந்தசிறுபிள்ளையான லவனைப் பார்த்தால் பரப்பிரமமாய் விளங்காநின்ற ஸ்ரீராம மூர்த்தியைப்போல்வடிவும், அழகும், வளமூம், வார்ப்படச்சிலேபோலுமிருக்கிறுன். அவன் தாய்தந்தைபேரைக்கேட்டால் தாயின்பேர் ஜானகியம்மாளும், ஐயர்பேர் வால்மீகரும், தமயன்பேர் குசலனும், தன்பேர்லவனும் தாங்கள் வால்மீகருடைய சிஷியர்களென்று சொன்னுன். ஆனபடியால் எங்களாலானமட்டும் குதிரையை விடச்சொல்லி பிரியவசனமாகக்கேட்டுப் பார்த்தோம். எங்கள் வார்த்தையுங் கேளாமல் சகலரையும் அஸ்திரம் விட்டுக்கொன்ருன், அவன்கையில் நாங்கள் பட்டபாடு என்னசொல்லுவோ மென்ருர்கள்.

அதுகேட்டு சத்துருக்க மகாராஜன் ஸ்ரீராமரைப்போலவே லவனுமிருக்கிறுனென்று சொல்லவே, கோபந்தணிந்து, தன்பக்கத்திலிருந்த சோமகாச மகாராஜனைப் பார்த்துச் சொல்லுகிறுன். ஐயா மகாராஜனே? கேளுங்கள், அந்தச் சிறுபிள்ளை லவனுனவன், ஆரென்றிருக்கிறீர்கள், என் தமையன் பிள்ளைகளாகவேண்டும், இல்லாவிட்டால் தாயார் சீதையம்மனென்று சொன்னதே, என் தமயனுடைய தேவியான சீதாலட்சுமிபேரில் குற்றஞ்சுமத்தி கர்ப்பவதியென்றும் பாராமல் வனத்திற் கனுப்பி விட்டபடியால் அந்தலவன், சீதாதேவிபுத்திர னென்பதற்குத் தப்பிதமில்லை, இப்போது நாம் தண்டைக் கூட்டிக்கொண்டு ஏகமாய்ப் போனேமேயானல் சிறுவனுனபடியால் பயப்படுவான் ஆனபடியினுலே நமது தண்டை யிவ்விடத்திற்றுனே நிறுத்திவைத்துவிட்டு சிலதூதரையும் சிலசேனைகளையுங் கூட்டி யனுப்பிவைத்து அந்தச் சிறுபிள்ளையான லவனை கைப்பிடியாகப் பிடித்துவந்தால் எல்லாச் சமாச்சாரமுங் கண்டறியலா மென்ருன். அதுகேட்டு சோமகாச மகாராஜன் சொல்லுகிறுன், ஐயா! சத்துருக்க மகாராசரே? கேளும், உமக்கு அப்படி சமுசயமாயிருந்தாற் கொஞ்சந் தண்டுதளத்தைக்கூட்டி அந்தச் சிறு

பிள்ளை லவனை கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வரும்படி யாகச்சொல்லி யனுப்புமென்றார். அம்மொழியைக் கேட்டு சத்துருக்க மகாராசன் நல்லதென்று மகாமாயனைப்பார்த்துச் சொல்லுகிறார். ஓ! மகாமாயனே? கேளும் நீ இருபதுவெள்ளம் இராட்சதாளைக் கூட்டிக் கொண்டுபோய், அந்தலவனுக்கு உயிர்ச்சேதம் வரவொட்டாமற் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வரவேண்டுமென் றனுப்ப, அப்படியே மகாமாயனும், விடைபெற்று நல்லவீரராய்ப் பொறுக்கி, யானை தேர் பரிசேனைகளைக் கூட்டிக்கொண்டு டமாரபேரிகை முழங்க, லவனிருக்குமிடந் தேடிப் போகையில், லவனானவன் இராட்சதாளைக் கொன்றின்னம் சேனைகள் வருகிறதோ வில்லையோவென்று ஒரு ஆலவிருட்சத்தின் பேரிலேறி, உச்சிக்கிளையில்நின்று பார்த்தான் பார்க்கையில், யானைதேர் பரிசேனைகள் வருவதைக்கண்டு, சந்தோஷமாகி, மரத்தைவிட்டுக் கீழிறங்கி, வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்து சரஸ்வதி யாற்றங்கரை யோரமாக வந்துநின்றுக்கொண்டு சேனைகள் பேரிற் பார்வையா யிருக்கையில், பர்வதங்கள்போல இரதமேறித் தண்டானது வந்து லவனைச்சுற்றி வளைத்துக்கொள்ள, மகாமாயன் பதறுகிறான். அடா! இராட்சதர்களே? சிறுபிள்ளைலவன் ஓடிப்போகப்போகிறான். அவனைக் கைப்பிடியாகப் பிடியுங்களென்றான்.

அவ்வார்த்தையைக் கேட்ட லவனானவன் கலகலவென்று நகைத்துச் சொல்லுகிறான். அடா! இராட்சதர்களே? கேளுங்கள் நீங்கள் உயிரோடுதப்பிப் பிள்ளைமுகம் பார்க்கிற பேரானால் ஓடிப்பிழையுங்கள், இல்லையென்று என்கிட்ட நெருங்கு வீர்களேயானால் ஒரே பாணத்தினால் உங்களனைவரையும் யெமலோகஞ் சேர்த்திடுவேன், சிறுபிள்ளை யென்றெண்ணுதீர்கள், புலியை நாய்வந்து எற்றியதுபோல் என்னை வந்து சுற்றிக்கொண்டீர்கள், ஓடிப் போங்களென்றுகூற, ராட்சதாள் சொல்லுகிறார்கள். அடா! லவனே? நாங்களோடிப் போகிறோம் சற்றுநேரம் நீயோடாமல் நில்லென்று கிட்ட நெருங்கினார்கள். அக்காலையில் லவனானவன், ஏதடா, இராட்சதாள் மிதமிஞ்சி கிட்டநெருங்கி வருகிறார்களென்று ஆக்கிரக நிக்குரோதனாக வில்லைவளைத்து, பாணங்களைப் பூட்டி, நான்குழலையுந் திரும்பித்திரும்பி ஓய்வில்லாமல் உகாந்த காலத்தில் சப்தமேகமும் ஒன்றாய்க்கூடி இடிமின்னல் குமுறலுடனே மழைவருஷித்தால் எவ்வாறோ, அவ்வாறு சர

வருஷங்களை மிதமில்லாமற் சக்கராகாரமாய்த் திரும்பித்திரு ம்பிச் சுழன்று, சுழன்று, மூச்சுவிடாமற் சாடும்போது இராட் சதாள் எப்படிவிழுகிருர்க ளென்ருல், யானைக்குப் பாணம் (௩) சவுடாலுக்குப்பாணம் (௪) குதிரைக்குப்பாணம் (அ) ராவுத்தனுக்குப்பாணம் (௨) காலால்களுக்குப் பாணம் (௨) இந்தப்படியா யஸ்திரங்களைவிட்டு யானைதேர் பரிசேனைகள் தன்முன்னுக்கு நாடவொட்டாமல் ஜாடுகிறபோது, நெருங்கி வந்த இராட்சதாளெல்லாம் மாண்டுபோஞர்கள்.

அதனைக்கண்ட மகாமாயன், ஏதடா, சிறுபிள்ளையென்று பார்த்தால் நம்முடைய இராட்சத வமிசத்திற்கெல்லாம் எம னைப்போற் காண்கின்றது இவனுக்கு இரதமில்லை, சேனைகளு மில்லை, யானைகளுமில்லை, இவனுடையவீரத்தை என்னசொ ல்வோம், இருபதுவெள்ளம் இராட்சதாளும் மாண்டுபோவ துபோற் காணுகிறது இனிநாம் சும்மாயிருக்கப்போகாதெ ன்று மனதிலெண்ணி, இறந்தவர்போக மீதியிருந்த பதினை ந்துவெள்ளம் இராட்சதாளைப்பார்த்து மகாமாயன் சொல் லுகிருன். அடா! இராட்சதர்களே? இனிச்சிறுபிள்ளையெ ன்றுபாராதிர்கள், உங்களுக்கு ரோஷமில்லையோ, முகத்திலி ருக்கிறதுமீசையோ, நீங்கள் கையிற்பிடித்ததுவில்லோ, உங் கள்சவுரியசாமார்த்தியங்கள் எங்கேபோயிற்று உங்களைக்கொ ண்டுபோகிற இயமன்வந்தாலும் அவனையும்வெல்லத்தக்கின சாமார்த்தியங்களுமுண்டே அந்தச் சாமார்த்தியங்களையெல் லாம் சிறுபிள்ளையாகிய லவனுக்குமுன் பாழாக்கி பெண்களா கிப்போனீர்களோ, உங்களுக்குச்சற்ருகிலும் ஈனமில்லையோ, உங்கள் சவுரியத்தைச் சிறுபிள்ளையான லவன்முன்னுக்குக் காண்பிக்கலாகாதோ, உங்களை சத்துருக்கர் கிடாவைப்போல் வளர்த்துப் பிடாரியான லவன்பாணத்திற்கு காவுகொடுக்க கொண்டுவந்தாஞே, அடா! இராட்சதர்களே? இந்தலவ ஞலே நீங்கள் இறந்தால் சத்துருக்கமகாராஜ னெழுப்பிவிடு வார் நீங்கள் பின்னுக்கிடையவேண்டாம் முனைந்து லவனைக் கைப்பிடியுங்கள், ஜாலஞ்செய்யாதிர்களென்ருன். அதுகேட்டு லவனனவன் கூறுகிருன். அடா! இராட்சதாளே? உங்க ளுக்கு சாமார்த்திய முண்டாஞல் எதோ கிட்டவாருங்கள், பார்ப்போமென்ருன் அதுகேட்டு மகாமாயன்சொல்லுகிருன் அடா! இராட்சதாளே? லவனுக்கென்ன புத்தி சொன்ன போதிலும் லவன்கேட்கிறவனுக காணவில்லை அவன் பேசப்

பட்ட விசேஷங்களைப்பார்த்தால் நமக்கு அவமரியாதைவரு கிறதுபோற் காண்கின்றது. அப்படிவராதபடிக்கு நடந்து கொள்ளவேண்டும், இப்போதிந்த லவனைக் கைப்பிடியாகப் பிடியுங்க ளிவனைக்கொஞ்சத்தில் விடப்போகாது பிடியுங்கள் பிடியுங்களென்றான் மகாமாயனனவன். அதுகேட்டு லவன் சொல்லுகிறான். அடா! இராட்சதர்களே? சூரனென்று உங் கள்மனதிலெண்ணித் துள்ளாதீர்கள், என்கை பாணத்திற் கிறையாகவந்தீர்கள், சொன்னேன் சொன்னேன் கிட்டநெ ருங்கிவராதீர்கள். துலைவிற்றானே நின்று பேசுங்களடா, இராட்சதாளே யென்றான்.

அதுகேட்டு இராட்சதாள் நடுக்கங்கொண்டு வில்லிற் பாணங்களைப்பூட்டி, லவனைபொறுபொறென்று கிட்டேநெ ருங்கிவிட்டார்கள். அதனால் லவனனவன், கோபங்கொண்டு வில்லையெடுத்து நிறுத்தி அநேகபாணங்களைவில்லிற் சந்தித் துப் பிரயோகம்பண்ணிவிட்டான். அந்த அஸ்திரங்கள் நாக சற்பம்போற் சீறிக்கொண்டு இராட்சதாளுடைய சிரங்களையு ம் வில்லைப்பிடித்தகரங்களையும், கவசமணிந்தஉரங்களையும், அறுத்துத்தள்ளவே, இராட்சதா ளெல்லோரும் பயந்து ஆறி லுஞ்சாவு நூறிலுஞ்சாவென்று மனந்துணிந்து, அந்தப்ப தினைந்துவெள்ளம் இராட்சதர்களும் அஸ்திரங்களை லவன் பேரில்விட்டார்கள். அதற்குலவனனவன், சற்றுமிடையாம ல் விசைகொண்டு அநேகபாணங்களை வில்லிற் சந்தித்துப் ப தினைந்துவெள்ளம் இராட்சதாள் விடப்பட்டஅஸ்திரங்களை க்கண்டித்தான். அதனால் இராட்சதாள் கோபங்கொண்டு யா னைதேர் பரிசேனைகளோடுமுனைந்து, வில்லையெடுத்து நிறுத் தி, நல்லகூர்மையோடுங்கூடியிரானின்ற அஸ்திரங்களை வில் லிற்சந்தித்துச் சொல்லுகிறார்கள். அடா! லவனே? உன்னை ப்பார்த்தால் ஸ்ரீராமரைப்போ லிருக்கின்றதென்று உன்பேரி ற் பாணங்களை விடாமற் சும்மாயிருந்தோம், நீசெய்த பிழை யெல்லாம் மனம்பொறுத்தோம், எங்கள்முன்னுக்கு அரி அர ப்பிரமாதிகளும் எதிர்நிற்கமாட்டார்கள் நீயும் உன்வில்லும் உன்னுடையபாணமும் எங்களுக்கொரு துரும்பாகும் உன்னை ப்பாராவிட்டாலும எங்களுக்கு இராசாவாகிய ஸ்ரீராமபிரமத் தைப்பார்க்கவேண்டாமோ ஆகையால் எங்கள் சொல்லைக்கட வாமல் எங்கள் இராஜாவாகிய சத்துருக்கமகாராஜரிடத்தில்வ ந்தாலுஞ்சரி அல்லது எங்கள்குதிரையை எங்கள்பின்னனுப்

பினுலுஞ்சரி அப்படிக்கு வராமலும் குதிரையைவிடாமலு மி ருப்பையேயாகில் உன்னைக்கொல்லாமல் நாங்கள் போகிறதில் லையென்றார்க ளது கேட்டு லவனானவன் கூறுகிறான். அடா! இராட்சதர்களே? நல்லவசனஞ் சொன்னீர்கள், நீங்கள்தா னே எமனுக்கு நமனாக யிருக்கப்பட்டவர்கள், உங்கள் முன் னுக்கு அரி அரப்பிரமாதிகளும் நிற்கமாட்டார்களோ இரா மன் சொத்தை நன்றாய்ச் சாப்பிட்டு நீங்கள் இராமனுக்குப் பகையாளிகைள் வந்தால் அவர்களுக்குப் பிரியவசனஞ்சொ ல்லிப் பிழைப்பாருமுண்டோ உண்டவன்வீட்டுக்கு இரண்ட கஞ்செய்யப்பட்டபேர்கள் நீங்கள்தானே அடா! இராட்ச தர்களே? யுத்தம்வந்துநேர்ந்தபோது தகப்பனென்றும்ரண க்களத்தில் உறவுகொண்டாடுபவரு முண்டோ இராமன் உப் பைத்தின்று அவருக்கே ரண்டகஞ் செய்யலாமோ வென்று பிணமலைகள்போ லிருபக்கத்திலுங் குவிக்கத்தலைப்பட்டான். அதுகண்டு இராட்சதாள் இனிலவனை விடப்போகாதென்று கோபங்கொண்டு, யானைக்காரர் இரதக்காரரும்லவன்பேரிற்பா ணப்பிரயோகம் பண்ணினார்கள். அந்தப்பாணங்களும்நாகசர் ப்பம்போற் சீறிக்கொண்டு வருகிறபோதுலவனானவன்கண்டு அனேக அஸ்திரங்களை விடுத்து நடுவதுபாதியில்அறுத்துப் போட்டு சல்தியில் அஸ்திரங்களை அவர்கள்மீது விடுத்துக் கொல்லுகிறபோது இராட்சதாள் முன்னுக்கு வைத்தகாலைப் பின்னுக்நவாங்கி யிடைந்து நான்கு மூலையுஞ் சிதறியோடத் தலைப்பட்டார்கள்.

அதுகண்டு மகாமாயன் கோபமாகி, இராட்சதாளைப்பார் த்துக் கடுகடுத்துச் சொல்லுகிறான். அடா! இராட்சதாளே? என்னமுழுகிப் போயிற்றென்று ஓடுகிறீர்கள், நீங்கள் சேவக ரோ ஓடினால் இராமத் துரோகமல்லவோ, ஓடாதீர்கள், உங் களாலே தேவர்கள் நகைக்க வுடம்படுத்தேன், இந்தச்சிறு பிள்ளை லவனைப்பிடிக்க உங்களாலாகாதோ வென்றான். அது கேட்டு இராட்சதா ளெல்லவரும் ஏகமாகக்கூடி வில்லுகளை வளைத்து அனேகபாணங்களை வில்லிற்சந்தித்து லவன்பேரிற் பிரயோகம் பண்ணினார்கள் அதுகண்டு லவனானவன், இரா ட்சதாளைப்பார்த்து நகைத்து அடா! ராட்சதர்களே? நீங் கள் தானே அரி அரப்பிரமாதிகளைச் செயித்தவர்கள், அந் தச் சாமர்த்தியமெல்லாம் என்முன் காட்டலாகாதோ, உங்க

ளுடைய சாமர்த்தியங்களை நீங்கள்தானே மெச்சவேணுமெ ன்று சரங்களை அபரிமிதமாக வாரி வாரிச் சொரிந்துக்கொ ண்டு பின்னுஞ் சொல்லுகிறான். என்னைக் கைப்பிடியாகப்பிடி க்கத் திருமூர்த்திகளுக்கும் வல்லமை யில்லாதிருக்க உங்களா லாகாதென்று இராட்சதாள் ஓடி யொளிக்கும்படியாய்ச் சா டிக் கொண்டிருந்தான்.

## லவனுக்கும் மகாமாயனுக்கும் யுத்தம்.

---

### கலிவிருத்தம்.

நீலனங்கு நிலமிசைச்சாய்ந்தபின்
கோலமாமகா மாயன்குறுக்கிடச்
சீலமுள்ள லவன்மிகச்சீறிவெங்
காலரைப்போ லெதிர்த்தனர்காண்மினே.

அப்போது மகாமாயன் அதிககோபமாகி, தன்னுடைய கோரைப்பற்கள் சொலிக்க, மீசை படபடவென்று துடிக்க, பற்களை நெறநெறவென்று கடித்து, இரண்டு கண்களுஞ் செவ்வானம்போற் சிவக்க, வுருட்டி விழித்து இனியிவர்க ளாற் சாரமில்லை நாமேநேரிற்சென்று போர்செய்ய வெண்டு மென்று சாரதியை யெச்சரித்து தேரை செலுத்தச்சொல்லி பாரெல்லாம் நடுங்கத்தக்கதாய் தன்வில்லை வளைத்து ஐம்பது நாராசங்களையெடுத்து தனுசிற்றொடுத்து, பிரயோகம் பண் ணவே அதை லவனனவன்கண்டு சினங்கொண்டு கொதித்து புலிபோற்குதித்து, ௫0-நாராசபாணங்களை யெடுத்து வில் லிற்றொடுத்து விடுத்து, மகாமாயன்விட்ட ௫0-நாராசபாணங் களையுமறுத்து அவனுடைய மார்பிலும்பட்டு முதுகிலுருகிப் போகச் செய்தான். அதனால் மகாமாயன், யுகாந்த காலத் திடிபோற் கனைத்து, அநேக அஸ்திரங்களைச் சந்தித்து, மாரிபொழிவதுபோற் சரமாரியாகப் பொழியும்போது, லவ னுமிவனுக்குச் சளையாமற் களையாமற் சுருக்கில் நொறுக்கத் தக்க சுருக்கான வெகுபாணத்தைப் பொறுக்கி யெடுத்து விடு த்து மகாமாயன் பாணங்களையு மிராட்சதாள் விடப்பட்ட அஸ்திரங்களையு மறுத்துத்தள்ளி அதிகமாக சிலபாணங்க ளைவிட்டு அவர்கள்முடியுங் கொடைச்சீலையு மறுத்துத்தள்ளி னன். அதைப் பார்த்து மகாமாயன் ஏதடா நாம்விட்ட அஸ்திரங்களையு மறுத்து இராட்சதாளையும் நாடவொட்டா

மற் கருவறுத்து வருகிறுன். இவனுடைய சாமர்த்தியத்தா னென்ன! இவன் கரவேகத்தானென்ன இவனுக்கோரத மில்லை நமக்கோ இரதமிருக்கிறது மேலும்யானை சேனை குதிரைகளில்லாமல் யுத்தம் பண்ணுகிறுன். இரணக்களத் தை யெல்லாம் வெருங்களமாகத் துடைத்துவிடுகிறுன், நா மெப்படி சத்துருக்கரிடஞ்சென்று அவர் முகத்தில் முழிக்கப் போகிறேம் நாம் வருகிறபோது யானைதேர் பரிசேனைகளெ ன்ன, டமாரபேரிகை வாத்தியங்களென்ன சேனுதிபதிகளெ ன்ன யாவற்றையுமிந்த லவனுக்கு ஒப்புவித்து நாமிப்போது ஒண்டியானேம், சமுத்திரமெல்லாம் தாண்டி ஒருசிறிய கால் வாயில் வந்தகப்பட்டுக் கொண்டோம், இந்த லவனே, நமது கையில் அகப்படுகிறவனுகக் காணப்படவில்லை இதற்கென்ன செய்வோமென் றுலோசனை செய்துக்கொண் டிருக்கையில், லவனுனவன் சொல்லுகிறுன். ஓ! இராட்சதனே? நீ ஏன் வீணுலோசனை செய்கிறுய், உன்னைப்போலொத்த இராட்ச தாள் கோடிபேர் வந்தாலும் என்னை இந்தவிடம்விட்டு வெ ளிப்படுத்த தீரமுண்டோ வீணுயோசனை பண்ணுமல் உன்னி ருப்பிடம் போய்ச்சேரும், இல்லையென்றுல் என்னுடன் போ ர்புரிந்து செயித்து என்னை யுன்னிஷ்டமான விடத்திற்கொ ண்டு போவெனகூற, மகாமாயன் சொல்லுகிறுன். அடா லவனே? நீ கையிலாகாத சிலரைக்கொன்றேமென்று கெர் வித்திருக்கிறுய், விசேஷங்களை மிஞ்சிவரவொட்டாதே யானை வாயின் கரும்புபோல் எங்கள் சேனையின் வாய்க்கு நீயோ சி றிய துரும்பு, ஆகிலும் ஸ்ரீராமரைப்போல வடிவுந் தேஜசும் அலங்காரமும் பொருந்தி யிருக்கிறபடியால் உன்னுடன் யுத் தம்பண்ணுகிறதற்கு மனதுவரவில்லை உன் தாய்தந்தை பே ரையும் உன்குலங்கோத்திரத்தையுஞ் சொன்னுல்அப்பாலுன் னுடன் யுத்தம்பண்ணுகிறேன் சொல்லென்றுன். அதுகேட் டு லவன்சொல்லுகிறுன். என் தாய்தகப்பன்பேரைக்கூறினுல் யுத்தம்புரிவேனென்று மெத்த தைரியமாய் சித்தங் களித்து ரைத்ததினுல் சொல்லுகிறேன்கேள். என்தாய்பேர் ஜானகிய ம்மாள், எங்களையர்பேர் வால்மீகர், என்பேர் லவன், என்தம யன்பேர் குசலன், எங்கள் குலமெனக்குத் தெரியவராது, நா ங்கள் வால்மீகரது சீஷரென்றுன்.

அதுகேட்டு மகாமாயன் யோசனைசெய்து கூறுகிறுன். அடாதம்பி லவனே? கேளும், நீ ஜானகியம்மனுடைய பிள்

ளையென்றல்லவோசொல்லுகிருய், ஆனபடியினுல் வுனக்குச் சொல்லுகிறேன் என்னவென்ருல் பிடித்துக்கட்டின குதிரையை என்கையிலொப்பித்து தாயுடன் பிள்ளையாகப்போய்ச்சேர், எங்களுடன் உனக்கென்ன போராட்ட மிருக்கின்றது, எங்களை நீயறியாயோ உன்னை நாங்களறிவோம், உனக்குமெங்களுக்கும் த்வேஷமும், ஆயாசமும், ஏன் வரவேணும், அப்படிவராதபடிக்கு நடந்துக்கொள்ளென்று செப்ப, அதை லவனுனவன்கேட்டு, புன்னகைபுரிந்து புகலுகிருன். ஓ! இராட்சதனே ? உங்கள்குதிரையை உங்களூரில்வந்து துராக்கிரமாய் பிடிக்கவில்லை. எங்கள் வனத்திற்கு உங்கள் குதிரை வந்தபடியினுல் நான் பிடித்துக்கட்டினேன் என் கையிலகப்பட்ட குதிரையை விடுவிக்க அண்டரண்ட நவகண்ட சராசரங்களிலுள்ள அரசர்களானுலும், உன்போலொத்த சவுரியபராக்கிரம மகாசாமர்த்தியரான இராட்சதர்களாலும், திருமூர்த்திகளாலும், விடுவிக்கக்கூடாது இந்தக் குதிரைபின்ரணரங்கசூரன் சத்துருக்கன் வருகிருன். அந்த சத்துருக்கனுடைய சாமார்த்தியமும், அரைக்ஷணநேரத்தி லறிகிறேன் நீவேணுமென்ருல் உன்னுயிரைத் தப்பித்துக்கொண்டோடிப் பிழை, இனி யென்கையிலகப்பட்ட குதிரையை சொர்ப்பனத்திலும் விடுவே னென்றெண்ணுதே, உனக்கு சாமார்த்தியமுண்டானுல் என்னை வென்று குதிரையை விடுவித்துக் கொண்டுபோ, இல்லையென்ருல் வந்தவழி பார்த்துக்கொண்டு போவென்ருன். அதுகேட்டு மகாமாயன், இதென்ன, விபரீதகாலமாயிருக்கின்றது. ஒரு சிறு பிள்ளையானவன் இருபது வெள்ளஞ் சேனைகளையுங் கொன்று, நமக்கும் அடங்கி உத்தரவு கொடாமல் சத்துருக்கருடைய சாமார்த்தியத்தையும், அவருக்குண்டாகிய படையினது சவுரியத்தையும், அறிகிறேனென்ருன். இது மகாபெரிய சங்கடத்திற் கிடந்தருவதுபோல் தோற்றுகின்றது. இதெப்படி முடியுமோ தெரியவராது. நாம் தப்பிப் பிழைப்போமென்ருலும் இராமத்துரோகம் வந்தணுகும், இதற்கு என்னசெய்வோமென்று, மழையில்லாப் பயிர்போலும் வாடி, வழியைத்தேடி மயங்கி, மகாமாயன் மறுபடியும் மனதைத் திடப்படுத்தி லவனைப்பார்த்துச் சொல்லுகிருன்.

அப்பா லவனே ? நானுனக்கு எத்தனைவித புத்திசொன்னுலும் ஆற்றிற்கரைத்த புளிபோல் அவலமாக்கிவிடுகிருய், ஆகையால் உன்னைக்கொன்ருலும் தோஷமில்லை, இதோ

என்னுடைய அஸ்திரங்களினல் உன்னைக் கண்டதுண்டம் பண்ணுகிறேன் பாரடாவென்று, வில்லையெடுத்து நிறுத்தி, அதி தீட்சண்யமாக யிருக்கப்பட்ட பத்து திவ்வியாஸ்திரங்களை யெடுத்து, மந்திராபூதி கொடுத்து, லவனுடைய மார்புக்குந் தோளுக்கும் சிரசுக்கும் அவன் பிடித்த வில்லிற்கும் லக்குபார்த்து விட்டான். அப்பத்து திவ்வியாஸ்திரங்களும் ஒன்ருேடு ஒன்றுராய்ந்து, அக்கினிப்பொறிகள் சிதறும்படியாய் வருங்காலத்தில் லவனுனவன் பார்த்து, தானும்பத்து திவ்வியாஸ்திரங்களெடுத்து, பூசைபுரிந்து, ஓசைப்பொருந்திய வில்லிற் சந்தித்து விட்டான். அப்போதந்த பத்து திவ்வியாஸ்திரங்களையும் கஸ்திப்படுத்தி, அவன் மார்பிலணிந்த கவசங்களையும் பொடியாக்கி விட்டுப்போயிற்று. அதனுலந்த மகாமாயன் அதிககோபமாகி ரு°-அர்த்த சந்திராஸ்திரங்களை தனுசிற் ருெடுத்துவிட்டான். அதைக்கண்டலவனும் ருO-அர்த்த சந்திரபாணங்களைத் தொடுத்து மகாமாயன்விட்ட அஸ்திரங்களை யறுத்துத்தள்ளி ரதம்சாரதி குதிரைகளை யதமாக்கிவிட்டது. அதுகண்டு மகாமாயன் சிந்தைதளர்ந்து மறுதேரின்மேலேறிவில்லையெடுத்து நிறுத்தி நாணிபிகிந்து ஓரக்கினியாஸ்திரத்தை எடுத்து பூசைநைவேத்தியம் புரிந்து இதனுல் வெற்றி யடையலாமென்ற ஆசையோடெய்தான். அதுவும் வடவாமுகாக்கினியை வாரி யிறைத்துக்கொண்டு சடசடவென்கிற தொனிகளுடன் ஆலகாலவிஷம்போற் சீறிக்கொண்டு அதிவேகத்துடன் வருவதை லவனுனவன் உற்றுநோக்கி, சற்றும் பயமில்லாமல் அதிசீக்கிரமாகத் தன்வில்லில் ஒருவருணுஸ்திரத்தைசந்தித்துபூசைகள் செய்துவிட்டான். அந்தவருணுஸ்திரம் வில்லில்விடுபட்டு சப்தமேகங்களும் ஒன்ருய்க்கூடி இடிமின்னல் குமுறலுடனே குடங்கொண்டு சொரிந்தாற்போல் ஓய்வில்லாமல் அக்கினியாஸ்திரத்தின்பேரில் மூச்சுவிடாமற் சொரிகிறபோது அக்கினியாஸ்திரமானது நீராயுருகிப்போயிற்று. அதுகண்டு மகாமாயன்கோபாவேசமாகி ஒருபர்வதாஸ்திரத்தையெடுத்து தனுசிற்ருெடுத்து தூபங்கொடுத்து விடவே அப்பர்வதாஸ்திரமானது அநேகபர்வதங்களாக உருவுகொண்டு மகாதுரிதமாகவருகிறதை லவனுனவன் கண்டு கோபங்கொண்டு, இவனுடன் யிவ்வளவுநேரம் போராட்டமாவென் றுசிந்தித்து, வச்சிராயுதமொ

ன்றெடுத்து, பூசைநைவேத்தியங்கொடுத்து தன்பேரில்வரு கிற பர்வதாஸ்திரங்களின்பேரில்விடவே, அந்தவச்சிராயுத மானது அநேகவச்சிராயுதங்களாய் ரூபமுண்டாகிவருகிற பர்வதாஸ்திரங்களையெல்லா மறுத்துத்தள்ளி வச்சிராயுதமா னது தடாலென்று மகாமாயன்மார்பைபத்தலாகக்கிழித்தெறி ந்துவிட்டுப்போயிற்று அதனால் மகாமாயன் ஸ்ரீராமாராமா வென்றுவாய்விட்டலறி தேர்மேற்சாய்ந்து சீவனைவிட்டான்.

அதுகண்டுலவன் சந்தோஷமுற்று வில்நாணியைத்தள ர்த்தி, கரத்திற்பிடித்துக்கொண்டு செடிமறைவில் சற்றுநேர மிளைப்பாறி, தடாகத்தில் ஸ்நானஞ்செய்து பூசைகள் முடித் துக்கொண்டு, கரையில்வந்து காமதேனுவை நினைக்க, காம தேனுனது லவனிருக்குமிடத்தில்வந்து லவனுடையபசியை யாற்றி, தெய்வலோகம்போய்ச் சேர்ந்தது. பின்பு லவனுன வன், தாம்பூலந்தரித்து, செடிமறைவில்வந் துட்கார்ந்து இன்னஞ்சேனைகளுண்டோ வில்லையோ எல்லாஞ் சற்றுநேர மிங்கிருந்துபார்ப்போமென்று மனதிற்கருதி, மண்ணைக்குவி த்து, தலையணையாகவைத்து, ஸ்ரீமந்நாராயணரைப்போல்பள் ளிக்கொண்டிருந்தான். அப்படியிருக்க, அந்தரணக்களத்தில் உதிரவெள்ளமானது ஒருபனைமரமுயரம்ஓடத்தலைப்பட்டது. அதில் இரண்டு இராட்சதாளுயிரைத் தப்பித்துக்கொண்டுசிர மேற் கரங்குவித்து குய்யோமுறையோவென்று கூவி யழுதுக் கொண்டு ஆகாயமார்க்கமாயெழும்பி, சத்துருக்கமகாராசனி டம்வந்து சாஷ்டாங்கமாக வணங்கிச் சொல்லுகிறார்கள்.

ஐயா! சத்துருக்கமகாராசனே? கேளும், சிறுபிள்ளை லவனென்றல்லவோ சொன்னீர்கள், அந்த சிறுபிள்ளைக்கு யார்தானீடென்று சொல்லுவோம், மகாமாயனையும், இருப துவெள்ளம் இராட்சதாளையும், எமலோகத்திற்கு வழிகாட்டி விட்டு இன்னஞ்சேனைகளுண்டோவென்று, வழிபார்த்துக் கொண் டிருக்கிறான் இருக்கப்பட்ட சேனைகளெல்லாம் ஒரு மிக்கசென்றாலும் ஒரேபாணத்திற் கொன்றுபோடுவான். தே வர்கூட நிகரல்லவென்றுகூறினார்கள். அதனையுற்றுக்கேட் டசத்துருக்கமகாராசன் மெத்தவுந் துக்கசாகரத்திலாழ்ந்து சொல்லுகிறார். ஐயோ சிறுபிள்ளையாவதென்ன, இருபது வெள்ள மிராட்சதாளையும், இராட்சதசிரேஷ்டாகளையும், மகாமாயனையுங் கொன்றுவிடுவதென்ன, நீங்கள் நித்திரையி

லிருந்து சொற்பனங்கண்டு திடுக்கிட்டோடிவந்தவர்களாக வேண்டும், இராட்சதாளென்ன அற்பசொற்பர்களா, இராட்சத சிரேஷ்டர்கள்தானென்ன தீரமற்றவர்களோ அப்படிப் பட்ட சூரர்கள் மகாவரப்பிரசாதிகள் புஜபலபராக்கிரமமுள்ள வர்கள் இந்தசிறுவனுல் இறந்தார்களென்றுல், இனி என்ன யிருக்கின்றது. நமது தண்டிற் சிறுபிள்ளை லவனைப் பிடிக்கத் தக்கவர்கள் ஒருவருமில்லையோவென்றுர். அதற்கு இராஜாக் களும் இராட்சதர்களும் ஒன்றுஞ்சொல்லாமல் மௌனமா யிருந்தார்கள்.

அந்தச்சமயத்தில் சுரதமகாராசன் சுருக்கி லெழுந்திரு ந்து சத்துருக்கமகாராசனைப்பார்த்துச் சொல்லுகிருன். ஐ யா! சத்துருக்கமகாராசனே? கேளும், சிவனுக்குமடங்காதல வனைக் கைப்பிடியாகப் பிடித்துவர இப்போது அடியேனுக்கு செலவுதருவீரேயாளுல் அவனுக்கு உதவியாய்வரப்பட்ட கா லகண்ட திருநேத்திராளுலும் கண்டதுண்டஞ்செய்து லவ ன் எவ்விடம்போளுலும் விடாமல் அரைக்ஷணநேரத்தில் பி டித்து வருகிறேனென்றுன். அதுகேட்டு சத்துருக்கமகாராச ருஞ் சம்மதித்து சுரதராசனைப்பார்த்துச் சொல்லுகிருர். வா ருஞ்சுரதராசனே? லவனுக்கு உயிர்ச்சேதம் வராமற் கைப்பி டியாகப்பிடித்தால் லவன் வாய்பிறப்பு விசேஷங்களையுங்கேட் கலாமென்று தம்மோடொத்த ஐம்பத்தாறுதேசத் தரசர்களை யும் ஐம்பதினுயிரம்அக்ரோணிசேனைகளையும்தயார்செய்துபே ரிகைவாத்தியங்கள்முழங்க, பூமியானது நடுங்க, ஆர்ப்பரித்து லவன்எங்கேஎங்கேயென் றுரணக்களம்வந்தார்கள். அப்போ தந்தரணக்களமெப்படியிருந்ததென்றுல் செக்கச்செவேலென் றுசெம்மணற்கரைத்தஆறுபோல்ஒருபனையுயரம்பிரவாகமோ டுகிறது அந்த வுதிரவெள்ளத்தில் தலையில்லாத முண்டங்க ளெழுந்துகூத்தாட, அந்தமுண்டங்கள்பேரிற்கழுக்கள்யேறி நடக்க,பூதபிசாசுகளும் ஜாகினி டாகினி நாய்நரிகளும்பிணங் களைப்பிடிங்கித்தின்று உதிரங்களைக்குடித்துடமாரபேரிகைகழு த்தில்மாட்டி யடித்துக்கொண்டுஓடுகிற உதிரவெள்ளத்தோடு கூட இவைகளையும் அடித்துக்கொண்டுபோகின்றது. அது கண்டு சுரதராஜன் நல்லயுத்தங்கள் நடந்ததுபோற் காண்கிற தென்றுமனதிலெண்ணி லவனைத்தேடிபார்க்கையில் லவனுன வன், டமாரபேரிகையினுடைய சத்தங்கேட்டு நிலத்தைவிட் டெழுந்திருந்து கைபிற்றனுசைப் பிடித்து வெளிப்புறப்பட்

டான். புறப்படவே, சேனைகளானது கண்டு, லவனைவளைத்து உள்ளே போட்டுக்கொண்டு ஐம்பத்தாறுதேசத்து ராசர்களும் நாலுபக்கமும் இரதங்களை விட்டுக்கொண்டுலவன்பேரிற் சேனைகளை ஏவினார்கள். அதுகண்டுலவன் சொல்லுகிறான். அடா சேவக்ரே உங்களிலும்தாஷ்டீகம்படைத்த இராட்சதாள் என் கையம்பினால் இறந்ததுகண்டிருந்தும் நீங்களேன் வீணிற்சாகிறீர்க ளப்படி மாளாமுன்னம் நான்நவிலும்விசேஷத்தைத் தள்ளாமல் உங்கள் பெண்டுபிள்ளைகளை வேண்டாதவர்கள்என்னுடன் சண்டைக்கு வாருங்களென்றான்.

அதுகேட்டு சேனைகள்சொல்லுகிறார்கள் அடா!லவனே? நாங்களிறந்தால் எங்களுயிரை மீட்டுத்தர, சத்துருக்கமகாராஜனிருக்கின்றார். ஆனபடியா லுனக்கும் உன்னுடைய அஸ்திரத்திற்கும் நாங்கள் பயந்தோமென் றெண்ணாதே உன்னாலான சாமார்த்தியத்தை வஞ்சனை செய்யாமல்பாரென்றார்கள். அது கேட்டு லவனானவன், கோபங்கொண்டு மண்டிப்போட்டு உட்கார்ந்து வில்லைப்பூமியிலூன்றி அநேகபாணங்களை யெடுத்து க-க0-க00-ரூ-ரூ-கோடி-சங்கம்-மகாசங்கமென்று கணக்கு மிதமில்லாதபாணங்களை மழைபொழிவதுபோல் நாலுமூலையுங் காகரவென்றுசுழன்று விட்டுக்கொண்டிருந்தான். அப்படி லவனானவன் அஸ்திரங்களை மிதமில்லாமல் விடுகிறபோது சேனைகளானது திக்குமுக்காடிச் சின்னாபின்னமாக கால்வேறு சிரம்வேறு இடைவேறு துடைவேறாக அறுந்து விழுந்தது கள். படைக்குட்சென்று ஐம்பதினாயிரம் அக்ரோணி சேனைகளுமாண்ட உதிரவெள்ளமானது உலகமுடிவிற் சத்தசாகரமும் பெருகிவந்ததுபோல் பனைமரமளவாக ரத்தாறு பெருகியோடத் தலைப்பட்டது அதுகண்டு ஐம்பத்தாறு தேசத்து ராஜர்களும் அதிககோபமூண்டு இரதத்தைமுன்னுக்கு நடத்திச் சொல்லுகிறார்கள்.

அடாதம்பி! லவனே? கேள் துள்ளியமாடு பொதிசுமக்குமா, "மூத்தோர்சொல் வார்த்தையமிர்தம்" யென்பதை கைக்கொண்டு எங்களோடுனக்கு போராட்டமென்ன, நாங்கள்சொன்னபடியேகேள். அதென்னவென்றால் குதிரையை எங்கள் வசமொப்பிவித்து எங்களுடன்கூட சத்துருக்க மகாராஜனிடத்திற்கு வந்துகண்டுபேசி உன்னிருப்பிடத்திற்குவந்து விடுவா

ய், வாராய் தம்பி என்றார்கள். அதுகேட்டு லவன் புன்னகை புரிந்து நமது கையில்லுக்கு நல்லவிருந்துவந் தகப்பட்டதென்று நினைத்து ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் பார்த்துச்சொல்லுகிறான் ஓ! இராஜாக்களே? நல்லவிசேஷஞ் சொன்னீர்கள், என்கையிற்பிடிபட்ட குதிரையைவிடுவித்துக்கொள்ள சத்துருக்கனைப்போலும், அவன் தமயன் ஸ்ரீராமனைப்போலும், ௧00-பேர்வந்தாலும் குதிரையை விடுவேனென்றெண்ணுகிறீர்கள், நான் உங்களோடு கூடவருகிறவனல்ல, உங்களுக்கு சாமார்த்தியமுண்டானால் என்னைச்செயித்து குதிரையைவிடுவித்துக்கொண்டுபோங்கள் இல்லையென்றால் என்னுடன்சொல்லாமல் ஓடிப்பிழையுங்கள், வீணிலேன்மடிகிறீர்கள்உங்களாலென்னை என்னசெய்யக்கூடும், உங்களை உற்பத்தி செய்தபிர்மதேவன்வந்தாலும்சளையேன், உங்கள்பின்வாறேன், சறேலென்றோடி பிழையுங்களென்றான். அதுகேட்டு ஐம்பத்தாறுதேசத்திராஜர்களுங் கோபமாக அநேகபாணங்களைத் தனுசிற்சந்தித்து யுகாந்தகாலத்து சப்பமேகங்களும் ஒன்றாய்க்கூடி இடிமின்னல்குமுறலுடனே மழைபொழிந்தாலெத்தன்மையாய்ப் பொழியுமோ அத்தன்மையாய் சரமாரியாக லவன்பேரிற் பொழிந்தார்கள்.

அதற்கு லவனானவன்கடிந்து வில்லிலநேகபாணங்களைச் சந்தித்துசோனைமாரிபோற் சேனைகளின்பேரிற்சரமாரியாய்ப் பொழிந்து இராஜாக்கள்விடுத்த அஸ்திரங்களனைத்தையுமறுத்துத்தள்ளி அவர்களேறிவந்த இரதம்சாரதி குதிரைகளையும் தும்சம்பண்ணிவிட்டான். அதுகண்டு இராஜாக்களெல்லோரும் கத்திகேடயமெடுத்துக்கொண்டுவர, லவனானவன் பார்த்து, பெருக்கிரண்டுபாணம்விட்டு கத்திகேடயங்களை பொடியாக்கி ஐம்பத்தாறு சேதத்தரசர்களையும் பார்த்துச் சொல்லுகின்றான்.

ஓகோ இராஜர்களே? நீங்கள் வரும்போது யானைசேனை பரிவாரத்துடன் ஏகசமூகத்தோடும் வந்தீர்களே, அதுகளெல்லாமெங்கேபோய் விட்டது. ஆனபடியினால் நீங்களும் அவ்வாறாய்விடுவீர்கள். குறியாயோடிப்பிழையுங்கள், அத்துமீறினவர் சித்திரவதை படுவாரென்பதறியீர்களோ, சண்டைக்கும் உங்களுக்கும் வெகுதூரம் ஜலுதியிலகன்றுபோங்களென்று கூறிய லவனைப்பார்த்து இராஜாக்களெல்லோரும்

மனது பொங்கி ஈட்டி, எறியீட்டி, சுரிகை வாங்கு, வளைதடி, வல்லயம், சக்கரம், குந்தம், வேல் இப்படி சொல்லப்பட்ட முப்பத்திரண்டாயுதங்களையும் லவன்பேரில் றிவ்வுறிவ்வென் றெடுத்தெறிந்துக்கொண்டிருக்கையில் லவனனவன், ஏதடா, நாம் தர்மமாய் பார்த்தபோது, நம்மைவிட்டுப் போகாமல் நமதுபேரிற்றானே ஆயுத அஸ்திரங்களை எடுத்து விடுகிறார் கள். இனி நாம் சும்மாயிருந்தால் காரியமல்லவென்று வில் லில் ௱-நாராசபாணங்களைச் சந்தித்துப் பிரயோகம்பண்ணி னன். அந்த நூறுநாராச பாணங்களும் வில்லில்விடுபட்டு அவயங் கார்த்துக்கொண்டிருந்த சர்ப்பம்சீறிப் புறப்பட்டா லெவ்வண்ணமோ, அவ்வண்ணமாய்ப் புறப்பட்டு, இராசாக் களுடைய ஆயுதங்களையு மறுத்து ஐம்பத்தாறுதேசத்து ரா ஜாக்களின் மார்பிற்றைத்து முதுகிலுருகிப்போக அதனாலவர் கள் மெத்தவுங் கஸ்தியடைந்து ஸ்ரீராமாவென்ற சத்தத்துட ன் அடியற்றமரம்போற்சாய்ந்து பூமியில் வீழ்ந்தார்கள்.

லவனுக்கும் சுரதராஜனுக்கும் யுத்தம்.

---

கலிவிருத்தம்.

பாலன்கைக்கணை யாலவன்பட்டபின்
தாலமேல்வருஞ் சண்டனேவென்றயர்ந்
தோலமிட்டுழலும் படைத்துணை
வேலெடுத்துச் சுரதனுமேவினன்.

இவைகளனைத்தையுங் கண்ணினாற்கண்ட சுரதமகாராஜ னனவன் ஆக்கிரநிக்குரோதனாக பல்லைநறநறவென்றுகடி த்து, மீசைபடபடவென்றுதுடிக்க, அக்கினிப்பொறிகளான துமுகத்திற்சொலிக்க, இவனை கெலிக்க நமக்குசாமார்த்தியமி ல்லையோவென்று கெக்கலிகொட்டி புயத்தைதட்டி சாரதியை யதட்டி இரதத்தை நடத்தச்சொல்லி லவனைப்பார்த்துச்சொ ல்லுகிறான். அடாதம்பி லவனே? நாங்கள்விட்ட குதிரையை யும்பிடித்துக்கட்டி எங்களுடையசேனைகளையுஞ் சின்னாபின்ன மாய்க் கால்மாடுதலைமாடாக கொல்லலாமோ சொல்லென்றா ன். அதுகேட்டு லவனனவன் கூறுகிறான்.

கேளுமையா அரசனே நீங்கள்விட்ட குதிரையானது எ ங்கள் வனத்திற்கு வந்தமையால் நான்பிடித்துக்கட்டி யுத்தத்

திற்குவந்தேன் உன்னால் சாமார்த்திய முண்டானால் என்னை செயித்து குதிரையை விடுவித்துக்கொண்டுபோம் இல்லாவிட்டாற் கூட்பிடாமற் செடிமறைவிற் படுத்துக்கொள்ளென்றான். அம்மொழியைக்கேட்ட சுரதராஜன் புன்னகைகொண்டு லவனைநோக்கிச் சொல்லுகின்றான். அடா! லவனே? நீகையிலாகாத சிலரைக் கொன்றோமென்ற கெர்வத்தைமனதிலெண்ணியல்லவோ என்னைசெடிமறைவிற் படுத்துக்கொள்ளச்சொன்னாய், உன்னைசிறுபிள்ளையென்று சும்மாவிட்டுவிட்டேனில்லாவிட்டால் இந்நேரம் பதறிச்சொன்ன நாவையறுத்துவைப்பேனடா நீதான் சூரனென்றெண்ணாதே, வீண்சவுரியம் பண்ணாதே, தானென்ற கெர்வம் யார்க்குந் தகாதென்பதையறியாயோ ஆகையால் சிறியோர் கட்டிய சிற்றாடைபோற் புரியாதே வில்லாண்மைக்கு வீரனென்று செருக்குற்று திரியாதேயென்று முன்னிலும்எண்மணங்கதிகமாக தனுசையெடுத்து நிறுத்தி நாணிபிகிந்து நாணோசைகொண்டு எட்டுதிசையுமதிர அட்டகாசஞ்செய்து, பதினைந்து திவ்வியாஸ்திரங்களையெடுத்து வில்லிற்றொடுத்து மந்திராபூதி கொடுத்து விட்டான். அதுகண்டுலவனும் பதினைந்து திவ்வியாஸ்திரங்களெடுத்து வில்லிற் சந்தித்துவிட்டு சுரதன்விட்ட திவ்வியாஸ்திரங்களையறுத்துத்தள்ளி சுரதனுடைய கவசங்களையும் பொடியாகச்செய்தான்.

அதனால் சுரதன் மிகவுங்கோபமாகி, ஐம்பது நாராசபாணங்களெடுத்து பிரயோகஞ்செய்தா னதுவும் காலகோடி விஷம்போற் சீறிக்கொண்டுவருவதை லவன்பார்த்து தானும் ஐம்பது நாராசபாணங்களை யெடுத்து விட்டான். அதுகள் சுரதனுடைய பாணங்களையறுத்துத்தள்ளி வில் நாணியையுமறுத்துவிட்டது. அப்போதுசுரதன் ஏதடா, சிறுபிள்ளையென்றுபார்த்தால்இவன் நாம்விட்டபாணங்களனைத்தையும் அறுத்துத்தள்ளினான். இவனாலநேக அரசர்களும் மாண்டுவிட்டார்கள். இவனோ மகாசாமார்த்தியவானா யிருக்கிறான். இவனால் நமக்கபஜெயம் வரும்போலக் காண்கின்றது. இவனைக் கைப்பிடியாகப் பிடித்துவரச்சொன்னார்களே, இதற்கெப்படி யோசனையென்று சற்றுநேரஞ் சும்மாயிருந்தான். அதுகண்டு லவன் புன்னகைபுரிந்து சுரதனைப் பார்த்துச் சொல்லுகிறான் ஓ! இராசனே? உங்கள்சூரத்துவத்தை நீங்கள் மெச்சி நீங்களேசூரனென்றுகுதிரையைவிட்டீர்களே, அந்த வீரத்

துவத்தை சற்றென்முன் காட்டலாகாதோ, சிறுபிள்ளை யென்று சும்மா யிருக்கிறீர்களே, அப்படி நீங்களிருந்தாலும் நானிருக்கமாட்டேன். இதோ பாணந்தொடுக்கிறேன், இந்தபாணத்தை விலக்கிக் கொள்ளும் பார்ப்போமென்று வில்லில் ஏழுசுழற்பாணங்களைச் சந்தித்து சுரதனேறி வந்த இரதத்தைப்பார்த்துவிட்டான். அச்சுழல்பாணங்களேழும் இரதத்தில் வந்து புகுந்து ஆகாயமார்க்கமாய் இரதத்தைக்கிளப்பிக்குலாலன் சக்கரம்போலச் சுழன்றுக்கொண்டு மேகமண்டலம் வருணமண்டலம் வாயுமண்டலம்வரையிற் போகிறபோதுசுரதன் மிகவும் பயந்து வில்லை யொருகையிலும் இரதத்தின் குத்துக்காலை யொருகையிலும் பிடித்துக்கொண்டு பாணவேக மடங்கியமாத்திரத்தில் சுரதன் பூமியிற் குதித்துவிட்டான் அவன் குதித்தவுடனே ரதமானது பூமியில்விழுந்து சாரதி குதிரைகளுடன் அப்பளம்போலானார்கள் அதுகண்டு சுரதன் வேறொரு இரதத்திலேறினா னந்த இரதத்தையுமிரண்டு யிடிபாணம்விட்டு உடைத்தெறிந்துவிட்டா னிந்தப்படி ௰-இரதம் வரையில் பொடி பொடியாய்ப் போயிற்று. அதுகண்டு சுரதன் கடுங் கோபங்கொண்டு அதிசீக்கிரத்தில் வேறொரு தேரிலேறி வில்லையெடுத்து வளைத்து, நாணிபிகிந்து, ஒரு நாகாஸ்திரத்தை யெடுத்து வில்லிற் றொடுத்து விட்டுவிட்டான் அதுவும் வில்லிலிருந்து விடுபட்டு மகாவேகத்துடன் வருவதை லவனனவன்கண்டுதன்னுடையவில்லில் ஒருகருடாஸ்திரத்தை தொடுத்து விட்டுவிட்டான். அவ்வஸ்திரமானது வந்து சுரதன்விட்ட நாகாஸ்திரத்தை கமளீகரம் பண்ணிவிட்டு லவனுடைய அம்புறுத்தூணியில் வந்தடைந்தது. அதுகண்டுசுரதன் கண்களில் நெருப்புப் பொறிபறக்க, புருவம் நெளிக்க, மீசைகள் படபடவென்று துடிக்க, காதுகளில் புகையெழும்ப, பற்களை நெறநெறவென்று கடித்து லவனைப்பார்த்துச் சொல்லுகிறான். அடா தம்பி! லவனே? நீ சிறுபிள்ளையென்று நானசாரிச மாயிருந்து உனக்கு புத்திமதிகளை வெகுவாகச் சொல்லியும் கேளாமல் சண்டை செய்கிறாயல்லவா, நல்லதாகட்டும் இதோ அஸ்திரம் விடுகிறேன் அதை நீ தப்புவித்துக்கொள்ளடா பார்ப்போமென்று தனது அம்புறுப்பொதியில் கையைவைத்து ஒரு அர்த்தசந்திரத்தை எடுத்து, தூபதீப நைவேத்தியத்துடன் மந்திர வுச்சாடனஞ்செய்து வில்லிற்சந்தித்து லவனுடைய கைவில்லுக்குச் சரியாய் லக்குவைத்துப் பிரயோகஞ்செய்தான் அந்த அஸ்தி

மானது வில்லினின்றும் விடுபட்டு ஆலகால விஷத்தைப் போல அதிக குரூரமாகிய அக்கினிகளை வாரியிறைத்துக்கொண்டு வருகிறபோது லவனனவன் கண்டு, இந்த அஸ்திரம் மகாமகிமையுடன் வருகிறதென்று தனது வில்லில் ஒரு ருத்திராஸ்திரத்தை யெடுத்துத் தொடுத்துவிட்டான். அதுவும் விரைவாகவந்து சுரதன் விட்ட அஸ்திரத்தை தும்சப்படுத்திவிட்டு அவன் இரதத்தையும் சக்கை சக்கையாய் உடைத்து விட்டது. அப்படி அந்தரதமும் போகவே சுரதன் மறுபடியும் ரதமில்லாமற் பூமியில் நின்று வில்லெடுத்து நிறுத்தி நாணேறிட்டுப் புங்கானுபுங்கமாக அஸ்திரங்களை மழைமாரி போல் சரமாரியாக லவன்பேரில் விடுகிறபோது லவனும் அநேகபாணங்களைவிட் டறுத்துப்போட்டு பின்னும் அதி வேகமாய்ச் சிலபாணங்களைவிட்டு சுரதனுடைய சரீரங்களை சல்லடைக் கண்களாகத் துளைத்துவிட்டா னதனல் சுரதன் மனம் நொந்து ஒருவேலாயுதத்தை யெடுத்துகையிற் பிடித்துக்கொண்டு லவனைப்பார்த்துச் சொல்லுகிருன்.

அடா தம்பி லவனே? நீபிடித்த குதிரையைவிட்டுச் சத்துருக்க மகாராசனிடம் வந்தாலாயிற்று. வராவிட்டாலிந்த வேலாயுதத்தினல் உன்னை எமலோக மனுப்பிவிடுகிறேன் பாரடாவென்று சொல்லி சுரதன் மகாகோபமாகி வேலாயுதத்தையெடுத்து பூசைசெய்து விட்டுவிட்டான். அந்த வேலானது சுரதனைவிட்டு விடுபட்டு அண்டபகிரண்டங் குலுங்க, அண்டத்திலுள்ள தேவர்களுநங் கலங்க, அதிக வுக்கிரத்துடன் வருகிறபோது லவன்பார்த்து ஒருசத்தியை யெடுத்து பூசைசெய்து விட்டான். அந்த சத்தியும் வெளிப்பட்டு அண்டசராசரமுதல் யாவும்நடுங்க, அதில்வாழும் சீவராசிகளெல்லாமொடுங்க, ஆவென்று வாயைத்திறந்து சுரதனுடைய வேலாயுதத்தை கமளீகரஞ்செய்து விட்டுப்போயிற்று. அதனல் சுரதன் கோபமாகி, நாராயணுஸ்திரத்தை யெடுத்து கையிற் பிடித்து லவனைப் பார்த்துச் சொல்லுகிருன். அடா! லவனே? யிதுவரையி லுன்னை சிறுபிள்ளை யென்றுவிட்டு விட்டே னிதோ பார்த்தையா நாராயணுஸ்திரம், நீ எவ்விடம்போனலும் உன் சிரசை விடாது கண்டிக்கு மாகையாலினி என்சொல்லைக் கடவாமற் சத்துருக்க மகாராசனைச் சரணமடைந்தாயானல் பிழைப்பாய், இல்லாவிடி லிக்கணமே யமலோகத்திற்குப் புகுவாய் யாரென்ருன். அதுகேட்டு லவன்

புன்னகை புரிந்து சுரதனைப் பார்த்துச் சொல்லுகிறான். ஓ! இராஜனே? உன்னால் சாமார்த்திய முண்டானால என்னைச் செயித்து குதிரையைக்கொண்டுபோவென்றுமுன்னமேநான் சொல்லியிருக்கிறேனதையே மீண்டுகூறுகிறாய், இனியென க்குப் பிரியவசனஞ் சொல்லவேண்டாம். உன்கையிலிருக் கிற நாராயணாஸ்திரத்தை எதோவிடு பார்ப்போமென்றான்.

அதுகேட்டுசுரதன் எவ்விதத்திலுமிவன் ஒவ்வுகிறதாகக் காணவில்லையே யென்று மகாகோபமாகி, நாராயணாஸ்திரத் தைபூசைசெய்து வில்லிற் சந்தித்துவிட்டான் அந்த நாராய ணாஸ்திரமானது அக்கினிப்பொறிகள்சிதற, ஆவென்று வா யைத்திறந்துக்கொண்டு வெகுமகிமையுடன் வருகிறபோது ல வனானவன், தன்னுடைய நாராயணாஸ்திரத்தையெடுத் தபிம ந்திரித்து விட, அதுவுமதிவேகமாய்ச் சுரதன்விட்ட நாராய ணாஸ்திரத்தின்பேரில் விழுந்து, ஒன்றோடொன் றாடுதாக்கி, ஆகாயமார்க்கத்திலெழும்பி மற்கட்டியுத்தம்புரிந்து சுரதனு டைய நாராயணாஸ்திரத்தைக் கமளீகரம்பண்ணிவிட்டுப்போ யிற்று அதனால் சுரதராஜன் மிகவும்விசனப்பட்டு மறுபடியுந் தைரியம்விடாமல் வில்லிலநேக பாணங்களைப்பிரயோகம்பண் ணினதற்கு லவனானவன், மிகவும் கவனமாக பாணங்களை விட்டு அப்பாணங்களைக்கொய்து அதனமாகப் பத்து நாராச பாணமெடுத்துச் சுரதன் புஜத்திற்கும், மார்பிற்கும், லக்குபார் த்துவிடவே, அதனால் சுரதன் நிர்வாகம்பண்ணவொட்டா மல் ரணக்களத்திலே பின்முதுகிட்டோடத் தலைப்பட்டான், அதுகண்டு லவன் கைகொட்டி நகைத்து அடா! இராஜ னே? ஓடாதே, சற்று நில்லு நில்லென்று, துரத்திக்கொண் டோடினான் லவனானவன். அக்காலையில்தேவர்கள் லவனு டைய சாமார்த்தியத்தை மெச்சிக்கொண்டோடினார்கள். சுர தன் சின்னப்பட்டு மறுபடியும் லவன்முன்வந்து யுத்தம்பண் ணிக்கொண்டிருந்தான் லவனானவன் கண்டு ஓ! இராஜனே? நீயொரு சேவகனா முகத்திலிருப்பதுமீசையா, இராஜாக்க ளாய்ப் பிறந்தவர்கள் ரணக்களத்திற் புறமுதுகுகாட்டி யோ டலாமா, அரசநீதியா, தருமமா, உனக்கு புஜபலபராக்கிரமந் தானில்லையோ, உன்கையிலிருக்கிற வில்லானது புல்லோ, நீ ஒரு இராசனென்றுபோர்புரிய நேர்வந்துநின்றாயே, உன்னா லென்னை என்னசெய்யக்கூடும், உயரப்பறந்தாலும் ஊர்க்கு ருவி கருடனாகுமோ, எடு பாணத்தையென்றான். அதைக்கே

ட்ட சுரதன், மனதுருண்ணி, லவனைப்பார்த்து, அடா ! லவனே ? உனக்கிந்த வீண்பெருமையேதவிர, மற்றப் பெருமையொன்றையுங் காணேன்.

அதேனென்ருல் இராசாக்களாய் சன்மித்தவர்கள் வில்லெடுத்து யுத்தம்பண்ணுவார்கள், வில் வேல் கத்தி கேடயம் கெதாயுத முதலாகியதைக்கொண்டுயுத்தஞ்செய்வார்கள் அதுகள் இராஜநீதிமுறைமை நீ ரிஷிபிள்ளையானபடியினுல் உனக்கு வில்வித்தைதவிர, மற்றவித்தை தெரியாதுபோற்காண்கிறதென்ருன் அதற்கு லவன் மிகவும் விசனத்துடன் சொல்லுகிருன் ஓ! இராசனே? கேளும், இரண்டுவீரர்கள்கையிலும் விலிருக்கிறபடியினுல் வில்வளைத்துவிட்டுமற்ருேராயுதங்களையெடுத்து யுத்தஞ்செய்ய ஞாயமுண்டோ, உன்னுல் சாமார்த்தியமுண்டானு லிதோ நான்பிடித்திருக்கிற வில்லை கண்டித்தாயேயானுல் அதன்பின் ஆயுதமெடுத்து யுத்தம்பண்ணலாமென்னக்கேட்டு, சுரதராசன் இவனை நம்மால் வெல்லமாட்டோமென்று மனதிலெண்ணி சற்றுநேரம் வாதாடிக்கொண்டிருந்தான். அப்போது லவனுனவன், சுரதராசனைப் பார்த்துச் சொல்லுகிருன்.

ஓய் ! இராசனே ? உன்சாமார்த்தியமெல்லா மிவ்வளவிலடங்கிநின்ருயோ, குதிரையை விடுவிக்க வல்லமையில்லாமல் வீணுக வில்லைக் கையிற்பிடித்துக்கொண்டு என்முன் னிற்கலாமோ வில்பிடித்து யுத்தஞ்செய்ய சாமார்த்தியமில்லாவிட்டால் வில்லைச்சுழற்றியெறிந்துவிட்டு செடிமறைவில் படுத்துக்கொள்ளென்று முன்னமே நான் சொல்லியிருந்தே னப்படி செய்யாமல் என்னையுஞ் செயித்து குதிரையையும் விடுவிக்காமலிப்படி சும்மாயிருந்தால் உன்னை இராஜனென்றும் வில்லாளியென்றும் எப்படி சொல்லுகிறது நீ சூரியவம்சத்து இராஜனுனுல் ரோஷமில்லாமல் யானை தேர் பரி சேனைகளையும் பறிகொடுத்து இப்படி தனிமையாய் என்முன்னிற்கலாலாமோ, அடா ? உனக்கு வீரதீரமில்லையோ வென்ருன்.

அதுகேட்டு சுரதராஜன் மனது நொந்து வில்லையெடுத்து நிறுத்தி மெத்தக் கூர்மையோடுங் கூடியிருக்கப்பட்ட நூறு நாராசபாணங்களை எடுத்து வில்லிற் பிரயோகஞ்செய்து லவன் மார்புக்கும், புஜத்திற்கும், கைவில்லுக்கும் லக்குபார்த்து விட்டான். அந்த நூறு நாராசபாணங்களும் லவன்வில்லிற் பாணஞ் சந்திக்குமுன்னமே, நாகசற்பங்களைப்

போற் சிறிக்கொண்டுவந்து லவனுடையவில்லை பத்துபிளவா கக்கிழித்து லவனுடைய மார்பிலும் புஜத்திலும்பட்டு நோ கச்செய்ய அதற்குலவன் சற்றுமிளையாமல் வில்லையெறிந்து விட்டு சிவ்வென்று வாளையுருவிக் கையில்பிடித்து சுரதராஜன் பாணந் தொடுக்குமுன்னமே, அம்பிலு மதிகவேகமாகப் பா ய்ந்து வில்லையுங்கண்டித்து சுரதராசனையும் இரண்டு துண் டாகவெட்டிக் கீழேதள்ளிவிட்டு லவனனவன் தன்பேரிற் பட்டபாணத்தைப் பிடுங்கி அப்புறம்போட்டு உரையிலிருந்த அமிர்தசஞ்சீவியை யெடுத்து பாணம்பட்ட காயத்தின்மேற் றடவி, லவனனவன் சந்தோஷமாகி, ஒரு தர்ப்பையைப் பிடு ங்கி, வால்மீகர் தனக்குபதேசித்த மந்திரத்தையுச்சரித்து ஒரு வில்லை சிருஷ்டித்து கையிற்பிடித்து இன்னம் வருவாருண் டோ, யுத்தம் புரிவாருண்டோ, அதனை சற்றுநேரம் பார்த்து அப்பாற் போவோமென்று செடிகளின் நிழலிற்போய் சய னித்துக் கொண்டிருந்தான்.

அப்போது தூதுவர்கள் ரணக்களம்விட்டு வெளிப்பட்டு அப்பா கூவினல் மோசம் லவனருகில் மேவினல் நாசம், கே வலம், லவன்சண்டை தேங்காய்ப் போலுருளுது, தலைமண் டை அண்டை நெருங்கினல் இன்னம்யாது மோசம்செய்யு மோவென்று, ஒதுங்கிக்கொண்டு லவன்செய்யும் வேதையா கிய வாதைக்குக் குய்யோ முறையோ வென்று கூவிக்கொண்டு சேனைகளிருக்குமிடந் தாவிக்கொண்டு, ஓட்டமாயோடி சத்து ருக்க மகாராஜனைச் சேவித்து, ஐயா! சத்துருக்க மகாராசரே? இனிசத்துருவில்லை யென்று சித்தத்திலெண்ணியிருந்தோம், சத்துருவாகியும், பார்ப்பவருக்குச் சிறுவனாகியும் விளங்கும் லவனனவன், சுரதமகாராசனையும் ஐம்பத்தாறு தேசத்தரசர் களையும், ஐம்பதினாயிரம் அக்ரோணி சேனைகளையும், அண்ட வொட்டாமற் கண்டதுண்டம் பண்ணி எமனூருக்குப் போ மென்றனுப்பி விட்டின்னமும் வருவார்களோவென்று வழி பார்த்துக்கொண் டிருக்கிறனென்றுகூற, சத்துருக்கராசன், இராசாக்களையும் இராட்சதசிரேஷ்டர்களையும் பார்த்துச் சொல்லுகிறர்.

ஆஹா! பார்த்தீர்களோ? ஒரு சிறுவனன லவன், சுத்த வீரனன நம்முடைய சுரதராசனையும், ஐம்பத்தாறுதேசத்து ராசாக்களையும், ஐம்பதினாயிரம் அக்ரோணி சேனைகளையுங் கொன்றுனல்லவா, இதுமெத்த ஆச்சரியமாயிருக்கின்றதுஒரு சுண்டுவிரலத்தனையிலாத சிறுவனைக் கைப்பிடியாகப் பிடித்து

வரமாட்டாமல்தோற்று, ஓட்டம் பிடித்தார்களென்று சமாச்சாரமேயல்லாமல் வென்றசமாச்சாரம் ஒன்று மின்றுகாணேன், இன்னம் நம்முடைய தண்டில் அப்படிப்பட்ட சூத்தவீரர்கள் யாரிருக்கிறுர்கள். ஒருவரையுங் காணேமென்று கூறிய சத்துருக்கர் வார்த்தையைக்கேட்டுசகலரும் ஆலோசனைசெய்துக்கொண்டிருக்கையில் சுரதமகாராசன் தமயனுன அரண்ணிய மகாராசனும் சேனதிபதியான காலசித்தனுங்கேட்டெழுந்து ஐயா! சத்துருக்கமகாராசனே? எங்களுக்கு செலவு தந்தால் லவனுனவன் எமலோகம்போயொளித்தாலும் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டிப்போதே வருகிறோ மென்றுர்கள். அது கேட்டு சத்துருக்கமகாராசன் சொல்லுகிறுன். வாரும், அரண்ணிய மகாராசனே? காலசித்தனே? மெத்தசந்தோஷம், நீங்கள் பத்துவெள்ளம் இராட்சதர்களைக் கூட்டிக்கொண்டு போய், சிறுபிள்ளையாகிய லவனை கைப்பிடியாகப்பிடித்து அவனுக்கு உயிர்ச்சேதம் வராமல் கொண்டுவரவேணுமென்று செலவு கொடுத்தனுப்ப, அரண்ணிய மகாராசனும்விடைபெற்று பத்துவெள்ளம் யானைதேர் பரிசேனைகளைக் கூட்டிக்கொண்டு மேளவாத்தியங்களுடன் ரணக்களம் வந்துசேர்ந்தான்.

அதுகண்டு லவனுனவனெழுந்து, தன்னுடைய வில்லை யெடுத்து, தோளில் மாட்டிக்கொண்டு தண்டுபாளையத்தை வேடிக்கைபார்க்க, வந்தவன்போல் வருகிறபோது, இராட்சதாள் கண்டுயானைகள், கிழக்கும், இரதங்கள் தெற்கும், குதிரைகள் மேற்கும், சேனைகள் வடக்குமுகமாக நான்கு மூலைகளிலும் நிறுத்தி, லவனைவளைத்து, உட்போட்டுக்கொண்டு சொல்லுகிறுர். அடாதம்பி? சிறுபிள்ளாய், குதிரையைப் பிடித்துக் கட்டினதுமன்றி சேனைகளையுங்கொன்றவன் நீதானே, சொல்லடா வென்று கேட்டார்கள். அதற்கு லவன் சொல்லுகிறுன். அடா! இராட்சதர்களே? அவர்கள்தான் புத்தியில்லாமல் மாண்டார்கள். உங்களுக் கென்னவிவேகமில்லையா, உங்கள் குதிரை எங்கள் வனத்தில் வந்தபடியினுல் நான் பிடித்துக்கட்டினேன். வராவிட்டால் பிடித்துக்கட்டுவனே, இது தெரியாமல் ஏன் மாண்டுபோகிறீர்கள் குதிரையையும்விடப்போகிறதில்லை இரதகஜ துரகபதாதிகள் உங்களுக்குமிச்சமா யிருக்குதென்று அச்சமில்லாமல் வந்து மடியவேண்டாம். இந்திராதி தேவர்கள் வந்தாலும் இருதுண்டமாகச்செய்வேன், மலைக்காதீர்கள் நீங்கள் என்கைவில்லால் மாய்ந்து பூமியில் விழுந்து ஆயுள்

முடிந்துபோவீர்கள் அதனாலுங்களிராசனாகியசத்துருக்கருங் கடிந்துகொள்ளுவார் தெரியாமற்சிறியோனென்று பரியாச மாகச் சரியாக வார்த்தையாடி வருகிறீர்க ளதுவேண்டாம், உற்றது சொன்னாலற்றதுபகை என்பார். அதுபோல என்னை விட்டு அப்புறம்போய் விடுங்க ளென்றான்.

அதுகேட்டு இராட்சதப்படைத்தலைவர்கள் யாவருஞ்சின ங்கொண்டு சொல்லுகிறார்கள் இவனைப்பார்த்தால் சிறுவனாக யிருக்கிறான். மேலும், யானைதேர் பரிசேனைகள் யாதுமில்லை இவன் சாமார்த்தியந்தான் என்னமோ, இராட்சத கூட்டத் திற்கு எமனாகவந்திருக்கிறான். காமன், சோமன், யாவரும் இவன் வாமத்திற்கீடல்ல, இவனுடைய சவுரியத்தை நா மூங் கண்டறிவோமென்று, ஆயுதங்களைக் கையிலெடுத்து நாலுமூலையும் நெருங்கிவருவதை லவனனவன் கண்டு, வில்லையெடுத்து நிறுத்தி, நாணிபிகியவே, இராட்சதாள் பார்த்து, அகம் நாணி, முகங்கோணி, எச்சரிக்கை எச் சரிக்கை யென்று அவனருகில் நெருங்கினார்கள். அது கண்டு லவனனவன், வில்லிலனேக பாணங்களைப் பூட்டி, நாலு மூலையுஞ் சுழன்று மாரிசொரிவதுபோலச் சரமாரியாய் ச்சேனைகள்பேரில் சரசரவென்று விடுகையிற் கரமற்றமரும், சிரமற்றவரும், தேர்விட்டவரும், நாள்கெட்டவருமாகச் சின் னாபின்னமாகி வீழ்ந்தவர்கள்போக மற்றவர்கள் ஓடத்தலைப் பட்டார்கள். அப்போது காலசித்தன் கடுங்கோபமாகி, இந்த சிறுவனுக்குபயந்து இப்படி ஓடுவார்களோ, ஓடவேண்டாம் ஓடவேண்டாம் நில்லுங்கள் நில்லுங்களென்று அவர்களை யழைத்துத் தன் பின்னால் நிறுத்திக்கொண்டு தான் மூன்னி ன்று லவனைப்பார்த்துத் தனக்குத்தானே சொல்லிக் கொள் ளுகிறார்கள்.

ஆஹா! இவனைப்பார்த்தால் இராஜவடிவாகவும் ஸ்ரீ ரா மரைப்போலுமிருக்கிறான். நாம் பதறிப்பாணம் விடுவோமே யானால் பாலனிறந்து போய்விடுவான். இவனைக்கைபிடியாக ப்பிடித்துக்கொண்டு போகாமல் வெருமனே போவோமென் றால் அது இராமத்துரோகமல்லவோ, இராமனிராச்சியத்தி ல், வஞ்சகம், சூது, மோசம், மாய்கை, துரோகஞ்செய்தால் அவர்களை எவ்விடம் போனாலும்விடாது. ஆகையால் நாம் சொர்ப்பனத்திலும் துரோக நினைவை நினைக்கப்போகாதே,

இதற்கெப்படியென்று தேனில்விழுந்த ஈயைப்போலத் தியங்கி, ஒன்றும் தோன்ருமற் சற்றுநேரம் யோசனைசெய்துக்கொண்டிருந்தான்.

லவனுக்கும் அரண்ணிய ராஜனுக்கும் யுத்தம்.

விருத்தம்.

அன்னவனிலமேற்சாய வரண்யனுங்கண்டுவெம்பி
தன்னகரில்லாவித்தத் தனையனுமந்தோவீணே
மன்னியதளங்களெல்லா மடித்தனன்கணையாலென்று
துன்னியரதத்தைத் தூண்டி சொரிந்தனன்சரத்தையெங்கும்.

அப்போது அரண்ணியராஜன் லவனைப்பார்த்துச் சொல்லுகிருன். அடா! லவனே? எங்கள் குதிரையைப்பிடித்துக் கட்டினது மல்லாமல் எங்கள் சேனைகளையும் வீரர்களையுங் கொன்ருயல்லவா, உன்னைகொஞ்சத்தில் விடுவேனென்றெண்ணுதே, இன்னமுஞ் சொல்லுகிறேன், குதிரையை விட்டு விட்டுச் சத்துருக்க மகாராசனை சரணமடைந்தாயாகில் பிழைப்பாய், இல்லாவிட்டால் என்னுடைய பாணத்திஞல் உன்னைக்கொன்று எமலோகத்திற்கு வழி காட்டுகிறேன் பாரடா வென்று சொன்ஞன். அதுகேட்டு லவன் கோபித்து, அரண்ணிய ராசனைப்பாரத்து பற்களை நறநறவென்று கடித்து, ஒருவிசேஷம் சொல்லுகிருன் ஆரடா! இராஜனே? நீ வாயால் வண்மைகெடாதே, நீங்கள்விட்ட குதிரை உங்கள் பட்டணத்திற் பிரதட்சணம்பண்ணி வைக்கவேணுமேயல்லது எங்கள் வனம் வந்தபடியினுல் நான்பிடித்துக் கட்டினேன். உங்கள் பட்டணத்திலிருந்த குதிரையை நான் வந்துபிடித்துக் கட்டவில்லை உனக்குசாமார்த்திய முண்டாஞல் என்னைசெயித்து குதிரை விடுவித்துக் கொண்டுபோம், சாமர்த்திய மில்லாவிட்டால் ஓடிப்பிழையுங்க ளென்ருன். அதுகேட் டரண்யராஜன் கோபமாகி, லவன்பேரில் தேரைச் செலுத்தித் தான்முன்னின்று தனுசையெடுத்து நிறுத்திஞனதுகண்டு லவஞனவன் ஆக்கிற வியாக்கிற நிக்ரோதஞகி, பல்லை நறநறவென்று கடித்து, வில்லிலனேக பாணங்களைச் சந்தித்து யுகாந்த காலத்திற் சப்தமேகங்களு மொன்ருய்க்கூடி இடிமின்னற் குமுரலுடனே குமுகுமென்ற சத்தத்துடனே சலவருஷம் பொழிந்தா லெப்படியோ அப்படியாக பாணங்

களைப் பொழிந்துக் கொண்டிருந்தான். அப்படி இராட்ச தாள் வந்துவிடவே ௧0-வெள்ளம் இராட்சதாள் மாண்டு அரண்யனுடைய சரீரமெங்குஞ் சல்லடைக் கண்களாகத் துளைப்பட்டு உதிரவெள்ளம் ஓடத்தலைப்பட்டது. அதுகண்டு காலசித்தன் லவனுடைய கரவேக சரவேகந்தானியாதோ, அவனென்ன இராட்சதாளுக்கு எமனாகவந்து பிறந்தானோ, பார்த்தால் சிறுபிள்ளையா யிருக்கிறான். பாய்ந்தாற் பெரும் புலிப்போற் பாய்கிறான். இவனுடைய கரவேக சரவேகத் தின் முன்னின்று யார்தா னிர்வாகஞ் செய்வார்கள் இவன் கைவில்லுக்கு நாமுமெதிரியல்லபோற் காண்கின்றது. குதி ரையை விடுவிக்கலா மென்றாலுமிவன் விடுகிறவனாகத் தோ ற்றவில்லை. அதுவுமன்றி சீதாலட்சுமி யில்லாமல் ஸ்ரீராம ருடைய யாகத்திற்கு பின்னம்வந்து நேர்ந்தது லவனைப்பார் த்தால் தீரஉக்ராகாரனாக திருமூர்த்தியைப்போல சேனைகளு மில்லை, இரதமுமில்லை, பக்கத்துணையுங்காணோ மிவனுடைய தைரியந்தா னென்னமோ, லவனென்று சொல்லா முன்ன மே சிரசுபோய் விடுகிறது. அந்த விசேஷங்களைப் பார்த்தா ல் ஸ்ரீராமரென்றுஞ் சொல்லலாம் இவனைப்பெற்றவளே லோ கமாதாவென்று கூறலாம் இவனாலதிக துன்பமுண்டாகும் போற் காண்கிறதென்று அரண்யராசன் யோசனைசெய்து அ திககோபமாகி வில்லிலனேக பாணங்களை சந்தித்து லவன்மீ தெய்கிறபோது லவனனவன்வருகிற அஸ்திரங்களையெல்லா மறுத்து ௧०-திவ்வியாஸ்திரங்களைவிட்டு அரண்யனேறிவந்தர தஞ்சாரதிகுதிரைகளுடன் தும்சஞ்செய்து அரண்யன்மார்பி ற்கும் புயத்திற்கும் வில்லிற்கும் பட்டு சிரசுமுடைந்து புயங்கி ழிந்து மார்புதிறந்துவில்முறிந்து நாராயணாவென்று மரண மூர்ச்சையடைந்தான்.

அதுகண்டு காலசித்தன் நமக்கு மிதுதான்வழியென்று மனதிலெண்ணினவனாக இரதத்தை லவன்முன்னுக்கு நடத் திச் சொல்லுகிறான் அடா! லவனே? என்னையறிந்திருப் பா யோ அறியாயோ ஆகிலுஞ் சொல்லுகிறேன்கேள் உன்னைக் கொண்டுபோகிற காலன் என்னைக்கண்டால் கைகூப்பி கும்பி டுவான் என்பேர்சொன்னால் நடுங்குவான் திருமூர்த்திகளும் தேவர்களும் பயப்படுவார்கள் என்பேர்காலசித்தனென்று யா வருக்குந் தெரியவரும் உன்னுடைய சாமார்த்தியமெல்லா

மென்முன்செல்லா தெங்கள்குதிரையைவிட்டு நீதாயுடன்பிள்ளையாய்ப் போய்ச்சேர் இல்லையென்றால் குதிரையைக்கொண்டு வந்துவிட்டு சத்துருக்கராஜனை சரணமடைந்து சமாதானமாய்ப் போவென்றான். அந்த வார்த்தையை லவன்கேட்டு நகைபுரிந்துசொல்லுகிறான். அடா! காலசித்தனே? நீ எமனுக்கு நமனுயிருந்தாலும் உன்னை தேவர்கள்வணங்கப் பேர்பெற்றாலும் என் பாணக்கினிமுன் உன் சாமார்த்தியம் சூரியனைக்கண்ட பனிபோலாய்விடும் என்னுலுன்னை இப்போது கொண்டு போகவரும் எமனை புதியயமனு பழையயமனுவென்றுகேட்டனுப்புவேன் அதுயிருக்கட்டும் பலவார்த்தை என்ன வாய்வேட்டையைவிட கைவேட்டை யதிகமென்றுபழமொழியுண்டாகையால் எடும் அஸ்திரம் பார்ப்போமென்றான். அம்மொழியைக் கேட்ட காலசித்தன் அடடா நாம்யிதுவரையிலநேக யுத்தங்களிற் கைகண்டிருக்கிறோமிச்சிறுவனால் நமக்கும் மோசம்வரும்போற்றட்டுப்படுகின்றதுசிறியபாம்பாகிலும் பெரிய கோலினாலடிக்க வேணுமென்று பெரியோர்சொல்லுவார்கள். மேலும் ஆயிரத்தெட்டண்டமும் உ௨ச-புவனமும் சத்தசாகரஞ் சூழ்ந்த ஈரேழுபதினாலுலோகத்தையு மேகசக்ரமாயாண்ட இராவணேஸ்வரன் ஸ்ரீராமர்பகையைத்தேடிக்கொண்டு இராமபாணத்தால்கும்பகர்ணன் இந்திரசித்து அதிகாயனட்சய குமாரன் கும்ப னிகும்பனென்று சொல்லப்பட்ட இராட்சத சிரேஷ்டரும்பிரமுகாளு மிரண்டாயிரம்வெள்ளம் இராட்சதாளும் மாண்டார்கள் இராவணனுக்குச் சகாயமாகவந்த சதகண்ட இராவணனுஞ் சகஸ்திரகண்ட இராவணனும்பதினுயிரவெள்ளம் இராட்சதாளுமாண்டார்கள். அந்த ராமபாணத்தினுடைய சேதி யின்னமுனக்குத் தெரியவராது நீ யிந்தக் குதிரையைப்பிடித்துக்கட்டினசேதி இராமலட்சுமணர் கேட்டாரேயானால் அங்கிருந்தபடியே இராமபாணம் வந்துவிடும நீ எமலோகம்போ யொளித்தாலும் உன்னைவிடாது ஏன் வீணில் மாண்டுபோகிறாய் என்வார்த்தையைக் கேட்டுத் திருகொன்றுஞ் சொல்லாமல் குதிரையைவிட்டு சமாதானமாகிவிடும் இல்லையென்றால் வில்லையெடுத்துப் பாணத்தைப் பூட்டு பார்ப்போமென்றான்.

---

## லவனுக்கும் காலசித்தனுக்கும் யுத்தம்.

—

### விருத்தம்.

அங்குளபாலன்கையா ளரண்ணியன்மாண்டபின்னர்
மங்குல்போலடர்ந்தசேனை வாரிதிமாண்டசெய்தி
தங்கியதூதரோடி சத்துருக்குரைத்தகாலிற்
சிங்கமதனையகால சித்தனுஞ்சமர்க்கெழுந்தான்.

இப்படிகாலசித்தன் கூறியதைக்கேட்டலவனுனவன் அதிகேகோபங்கொண்டு, அடா! காலசித்தனே? ஆயிரத்தெட்டண்டம் ௨௨௪-புவனம் சத்தசாகரம் ஈரேழுபதினுலுலகத்தையுமேகசக்கரமாயாண்ட ராவணனைசெயித்தாலுமென்ன அவனுடைய சூரத்துவம் அவன்மட்டிற்குமல்லாமல் என்வனத்திற்கவனதிகாரஞ் செல்லமாட்டாது. அப்படி ஏகசக்கிராதிபதியாயிருந்த இராவ்ணனை இராமன் ஜெயமடைந்தால் மகா வீரனென்று நீபுகழுகிருயந்தஇராமன் என்கையிற்படப்போகிறபாடு இன்னதென்றுனக்குத் தெரியாமலேன் மலேக்குருய், அந்த ஸ்ரீராமபாணம் என்முன்னில்லாது அதிருக்கட்டும் நீயோ நமனைவென்றவன், அந்தபாணத்தை சற்றெடுத்து என்னைசெயித்தாயேயானுல் நீஎமனைவென்றது மெய்தா னில்லாவிடி லதுபொய்தானதெப்படியென்ருல், இராஜனிடத்திலிருக்கப்பட்ட சேவகனுக்கு சேவக வீரமெத்தவுண்டானுல் இராஜனுமதிகபலவானென்றுசகலரும் நடுங்குவார்கள் சேவகனிடத்தில் வீரமட்டானுல் இராஜன்பராக்ரமசாலியாயிருந்தாலும் வணங்கார்களதுபோல்உன்சேவகமுங்களிராஜனுகிய சத்துருக்கனுடையசேவகமும் ஒருக்ஷணத்திலறிகிறேன்பாரடாவென்றுவில்லேவளைத்து ௧0-திவ்வியாஸ்திரங்களேவில்லிற் சந்தித்துபிரயோகம் பண்ணினுன். அதைக்கண்டுகாலசித்தன்மூந்திபாலன் பாணமிஞ்சினுனென்று ௨0-திவ்வியாஸ் திரங்கள்வில்லிற் சந்தித்துவிட்டதுகளையறுத்துப் போட்டா னத்திவ்வியாஸ்திரங்க ளறுபட்டுப் போகவே லவனதிக கோபமாகிஆக்ர நிக்குரோதனுய் பல்லே நறநறவென்றுகடித்து வில்லில்௧0 - திவ்வியாஸ்திரங்களைப் பிரயோகஞ்செய்து விட்டான். அத்திவ்வியாஸ்திரங்களானது வில்லிற்விடுபட்டு தகத்தகாயமாய் நெருப்புப்புகையுடனுஞ் சடசடவென்கிற தொனிகளு

டனும் வருகிறகாலையில் காலசித்தன்பார்த்து அதிசீக்கிரம் உ0-திவ்வியாஸ்திரங்களெடுத்துவிட்டு லவனுடைய க0-திவ்வியாஸ்திரங்களையு மறுத்தெரிந்தான்.

அதனால் லவனனவன் சினந்து முனைந்து சடிதியிற்கருத்தில் நினைந்து திருத்தமான க00-நாராசபாணங்களை சந்தித்துவிட்டான். அந்த க00-நாராசபாணங்களும் வில்லைவிட்டு விடுபட்டு நாகசற்பம்போற் சீறிக்கொண்டுவருகிறபோதுகாலசித்தனுங்கண்டு வெகுண்டு தானும் க௦௦ - நாராசபாணங்களை எய்து லவன்விட்டபாணங்களை யறுத்துத்தள்ளவே தட்சணம் பட்சணம் பண்ணுவேனென்று கடிந்து கொடிதாகிய ரு-சிங்கமுகாஸ்திரத்தை வில்லிற்சந்தித்துபிரயோகம்பண்ணினன். அந்த ரு - சிங்கமுகாஸ்திரமும் ஆலகாலவிஷம்போற் சீறி அக்கினிக்கொழுந்துகளோடு அதிவிரைவாய் புறப்பட்டு காலசித்தன்பிடித்த வில்லையுங்கண்டித்து இரதத்தையும் பொடிசெய்து சாரதி குதிரைகளையுங்கொன்று காலசித்தனுடைய மார்பிலணிந்த கவசங்களையு முடைத்தெறிந்துவிட்டுபோயிற்று. அதுபோகவே, காலசித்தனனவன் மறுதேரிலேறினனதையு மிரண்டிடிபாணம்விட்டு லவனுடைத் தெறிந்துப் போட்டானதுகண்டு காலசித்தனதிசீக்கிரமாய் மறுதேரிலேறி வில்லெடுத்து அநேகதிவ்வியாஸ்திரங்களை வில்லிற்சந்தித்து சரமாரியாய்ப் பொழிகிறபோது லவனனவன்கண்டு, இந்த யுத்தத்தில் வந்தவர்களைவிட யிவன் மகாசாமார்த்தியவானென்று புகழ்ந்து, அநேகபாணங்களைப் பந்திபந்தியாய்சந்தித்துஎய்து, காலசித்தன் விடப்பட்ட அஸ்திரங்களையெல்லாம் அறுத்து அதிகமாக நாலுதிவ்வியாஸ்திரங்களைவிட்டு இரதஞ்சாரதி குதிரைகளுடனும் தும்சமாக்கிப்போட்டான். அதுகண்டு காலசித்தன் மகாகோபமாகி மறுதேரிலேறி வில்லையெடுத்து நிறுத்தி அபுரூபமான அஸ்திரங்களை தனுசிற்றொடுத்து ஐப்பிசி கார்த்திகைமாதத்தில் மேகமானது மழைக்காலிறங்கி இடிமின்னல் குமுறலுடன் பொழிந்தா லெவ்வண்ணமோ அவ்வண்ணஞ் சரவருஷமாய் பொழிந்துக்கொண்டிருக்கும்போது லவன்பார்த்து தானுமநேகபாணங்களை ஒன்றின்மேலொன்றாய் சரசரவென்று விட்டு காலசித்தன் விடப்பட்ட அஸ்திரங்களையெல்லா மறுத்துவிட்டு அதுபோகபின்னுஞ் சரபுஞ்சமான திவ்வியாஸ்திரங்களைவிட்டு வில்லையொடித்தெறிந்தான். இதனால் காலசித்தன் கோபங்கொண்டுவேறொரு வில்லெடுத்து நாணிபிகிந்து அக்கினியாஸ்திரமொன்

றை அவ்வில்லிற் சந்தித்து தூபதீப நைவேத்தியங்களுடன் விட்டுவிட்டா னந்தஅக்கினி யாஸ்திரமானது வில்லில்விடு பட்டு திகுதிகென்று எரிபுகைகளுடன் நெருப்புகளை வாரி யிறைத்துக்கொண்டு வருகிறபோது லவன் ஒருவருணாஸ்திர த்தை யெடுத்து வில்லிற்றொடுத்து மந்திராபூதிகள் கொடுத் துப் பிரயோகம்பண்ணினான்.

அந்த வருணாஸ்திரமும் வில்லைவிட்டு வெளிப்பட்டு சப் தமேகங்களு மொன்றாய்க்கூடி மழைகாலிறங்கி யானை தும் பிக்கைபோற் குடங்கொண்டு அக்கினி யாஸ்திரத்தின்பேரிற் பொழியும்போது அக்கினியாஸ்திரமானது நீராளமாயுருகி பூமியில் விழுந்துபோயிற்று. அதுகண்டு காலசித்தன் ஒரு பர்வதாஸ்திரத்தை யெடுத்து வில்லிற்றொடுத்து மந்திராபூதி கள் கொடுத்துவிட்டான் அந்த பர்வதாஸ்திரமானது வெளி ப்பட்டு அநேக பர்வதங்களாக வுருவங்கொண்டு லவன்பே ரில் வருகிறபோது, லவனானவன் கண்டு, ஒருவச்சிராயுதத் தை யெடுத்து தனுசிற்றொடுத்து மந்திராபூதிகள் கொடுத் துப் பிரயோகஞ்செய்தான். அந்த வச்சிராயுதமானது விடு பட்டு வருகிற பர்வதாஸ்திரங்க ளனைத்தையும் நொறுக்கித் தள்ளிப்போயிற்று. அதனாற் காலசித்தன் மெத்தவும் ஆக் ருஷங்கொண்டு, பிர்மாஸ்திரத்தை யெடுத்து மந்திராபூதிகொ டுக்கும்போது லவனொரு திவ்வியாஸ்திரத்தை விடுத்து கால சித்தன்பிடித்த பிர்மாஸ்திரத்தை யறுத்துத் தள்ளிவிட்டா னதைப்பார்த்து காலசித்தன் கடுங்கோபங்கொண்டு நாராய ணாஸ்திரமொன்றை விடுத்தான். அதுகண்டு லவன் அவ் வஸ்திரத்திற்கு இரண்டு திவ்வியாஸ்திரம் விட்டு இரதத்திற் கொரு திவ்வியாஸ்திரமு மெடுத்துவிட்டான்.

அந்த அஸ்திரங்களும் அதிவேகமாக வந்து காலசித் தன்விடுத்த நாராயணாஸ்திரத்தையும் அறுத்து இரதத்தில் வாய்வாஸ்திரம் புகுந்து யுகாந்தகாலத்திற் சண்டமாருதம் வீசினதுபோல காலசித்தன் இரதத்தை வெகு தூலைவிற் கொ ண்டுபோய்விட்டது அப்போது லவன் வெகு சந்தோஷமா கி, தன்திரேகத்திற்பட்ட அம்பு காயங்களையெல்லாம் ஆற் றிக்கொண்டு செடி மறைவிற் போய்ச் சயனித்துக்கொண்டி ருந்தான்.

இப்பால் இரண்டு இராட்சதாள் பேசிக்கொள்ளுவ தி யாதெனில், இவன் கையிலிருக்குஞ் சிலையோ நமது படைக

ளின் தலையையறுத்து உலையில்வந்த வாரினலையோவென்று நிலைகலங்கியழுதுக் கொண்டோடி, சத்துருக்கமகாராஜரே? கேளும், அரண்ய மகாராஜனும் பத்துவெள்ள மிராட்சதசேனைகளும்லவன்கைசிலையின் பாணங்களால்மாண்டுபோனார்கள் காலசித்தன்மாத்திரம் யுத்தஞ்செய்துக்கொண்டிருந்தான். அவனையும் அவன் ரதத்தையும் வாய்வாஸ்திரத்தைவிட் டடித்தான். அதனால் இரதமும் காலசித்தனும் எந்த திக்கிற் போய் விட்டானோ தெரியவராதென்றார்கள். அதுகேட்டு சத்துருக்க மகாராஜன் மிகவும், கோபாக்கினியுடனே பற்களை நறநறெனக் கடித்துச் சொல்லுகிறார். ஓ! இராஜமன்னர்களே? இராட்சதவீரர்களே? மந்திரிப் பிரதானிகளே? ஒரு சிறுபிள்ளையின்முன் யுத்தத்திற்குப்போனவீரர் யாவரையும் அணிப்பிள்ளை கிளிப்பிள்ளையாய் அவமதித்து முப்பதுவெள்ளம் இராட்சதர்களையும், ஐம்பதினாயிரம் சேனைகளையும், அதம்பண்ணி விட்டானல்லவா, ஆகையால் இனி நம்முடைய சௌரியமென்ன விருக்கிறது, தேவர்கள் கேட்டால் நகைப்புரிந்து பரியாசமாகப் பேசார்களா? நம்மோடொத்த இராஜாக்களின்னம் லவனைப்பிடித்துவர நம்முடைய தண்டிற் சாமர்த்தியர்களும், வில்லில் வல்லவர்களில்லையோ வென்று சொல்லிய சத்துருக்கமகாராஜனைப் பார்த்து சலவசந்தனெழுந்து சொல்லுகிறான். ஐயா! சத்துருக்கராஜரே? கேளும், நானிருக்கும்போது தங்களுடைய மனதிற்கு ஆயாசம் வருவானேன், இப்போதெனக்கு செலவு தருவீரேயானால், லவன் திரிமூர்த்திகளை சாதிக்கப்பட்டவனாயிருந்தாலும், என்னுடைய சாமார்த்தியத்தினால் லவனை கைப்பிடியாகப் பிடித்துவருகிறேன். அப்படி பிடித்துவர சாமார்த்தியமில்லாவிட்டால் என்னுடைய பாணத்திற்கு லவனைஇறையாக்கி குதிரையை விடுத்து வருகிறேன், ளவ்விரண்டி லொன்றுவது செய்து வராமற்போனால் என்னை சகஸ்திரகண்ட ராவணனுடைய குமாரனென்று சொல்லவேண்டாமென்றான்.

அதுகேட்டு சத்துருக்கமகாராஜர் சலவசந்தனைப் பார்த்து சொல்லுகிறார். வாராய், சலவசந்தனே? இப்படி சொல்லலாமோ மகாமாயனென்ன புஜபலபராக்கிரம மில்லாதவனோ, சேனாதிபதியான காலசித்தனென்ன கைதேர்ந்தவனல்லவா, அரண்யராஜனும், சுரதராஜனும், ஐம்பத்தாறுதேசத்து இராஜாக்களும் சாமார்த்தியமில்லாதவர்களோ, லவன்

சிறு பிள்ளையானபடியினால் ஸ்ரீராமரைப்போல் வடிவும், தேஜசுமுள்ளவனானபடியினால் மேற்சொன்னவர்களெல்லாம் லவனைக்கொல்ல மனமில்லாதவர்களாகி யவன் பாணத்தால் மடிந்தார்கள், மேலும் அந்த லவனைப்பிடித்து வந்தால் சீதாலட்சுமி யம்மனிருக்கிற சமாச்சாரம் லவனாலறியலாமென் றல்லவோ, சேனைகளைக் கூட்டி யனுப்பிவைத்தது லவன் சிறு பிள்ளை புத்தியானதினால் பாணங்களைவிட்டுக் கொன்றுபோடுகிறான். அவனுடைய சாமார்த்தியமென்னவென்று சொல்லலாமென்றார். அவ்வார்த்தையைக்கேட்டு, சலவசந்தன் மறுவார்த்தை கூற இடமில்லாமல் மனம்நொந்து அப்பாலிடைந்துபோயினான். அத்தருணத்தில் தூதுவர்கள் சொல்லுகிறார்கள். ஐயா! சத்துருக்கமகாராஜரே? கேளும், இவ்வளவு புஜபலபராக்கிரமமுள்ள சலவசந்தனைப்போல நூறு சலவசந்தரும் நூறு வெள்ளம் இராட்சதாளும் ஆயுதாஸ்திரபாணிகளாய் லவன்முன் சென்று நின்றெதிர்த்தாலும் லவன் தன்னுடைய அஸ்திரத்தினாலே ஒருநாழிகையிற் கொன்றுபோடுவான் லவனைப் பிடிக்கப்போன பிரமுகாளில் அஸ்திரங்களில்லாமலும் யுத்தஞ் செய்யாமலுமிறந்து போகவில்லை. எல்லோருமந்த லவனிடம் போர்புரிந்தே மடிந்தார்கள். ஆதலால் அந்த லவனை திரிமூர்த்திகளாலும் செயிக்கப்போமோ வென்றார்கள்.

அப்போது சத்துருக்கமகாராசர் சோமகாசமகாராஜனையும் மட்சயந்த மகாராசனையும் பார்த்துச் சொல்லுகிறார். ஓ! இராஜாதிராசர்களே? கேளுங்கள், நம்முடைய தண்டையெல்லாம் ஒருமிக்கக் கூட்டிக்கொண்டுபோய் நானே முன்னின்று அந்த சிறு பிள்ளையான லவனைப்பிடித்துக் கட்டுகிறேன். அப்படி லவனைப் பிடித்துக் கட்டாமற் போனேனேயானால் நான் பிடித்தது கோதண்டமல்ல, என்னை ஸ்ரீராமருடைய சகோதரனென்று சொல்லவேண்டாம், லவனுடைய புஜபலபராக்கிரமத்தை அரைக்கண நேரத்தில் வெளிப்படுத்துகிறேன் பாருங்களென்று சொல்லி மகா உக்கிரத்துடனே இரதமேறிச் சாரதியை யெச்சரித்து இரதத்தை நடத்தினார். அதுகண்டு சகல இராசமன்னரும் இராட்சத சிரேஷ்டரும், கால்பலமான இராட்சதாளும், மனதிடங்கொண்டு இரதமேறி கூட நடந்தார்கள். சேனைகளும் பின்னடந்து வருவதைக்கண்ட லவனனவன் திடுக்கிட்டெழுந்து, வில்லையெடுத்து

தோளில் மாட்டிக்கொண்டு ரணக்களத்தில் வந்து நின்று இன்னமெவ்வளவு சேனைதான் இராசனுக்கிருக்கின்றதோ சமுத்திரம் புரண்டு வருவதுபோல வெகுசேனைகள் வருகின்றதே, நம்முடைய தமயனு மில்லிடத்திலில்லையே, இப்போ வருகிறவன் சத்துருக்கனைப்போலுங் காண்கின்றதே, வந்தாலுமென்னமுழுகிப்போயிற்றென்று மனதை தைரியப்படுத்திக்கொண்டு மண்டிபோட்டு உட்கார்ந்து நல்ல கூர்மையோடுங் கூடியிருக்கப்பட்ட திவ்வியாஸ்திரங்களையெடுத்து வில்லிற்றொடுத்திருந்தான்.

அந்தச்சமயத்தில் சத்துருக்கமகாராசன் இரதத்தைவிட்டுக்கொண்டு லவனுனவன், எங்கே எங்கேயென்று தேடிக்கொண்டுரணக்களம் வந்துசேர்ந்தார். அப்போதந்த ரணக்களமானது எப்படியிருந்ததென்றால், செக்கச்செவேலென்று சிவந்த நிறத்தோடுங்கூடிய உதிரவெள்ளம் பரவியோட அந்தவெள்ளத்தில் யானை தேர் பரிசேனைகளை யடித்துக்கொண்டு ஒண்ணரைப்பனையுயரம் போவதைக்கண்டு சத்துருக்கமகாராசன் மாகாகோபதிப்தனாய், உக்ராகாரத்துடன் சாரதியை யெச்சரித்து இரதத்தைவிட்டுக்கொண்டுலவன்முன் வந்து நின்று பார்த்தார். அந்தலவன் சத்துருக்கமகாராசனுடைய பார்வைக்கெத்தன்மையாயிருக்கிறுனென்றால், பச்சை நிறமும், பவளச்செவ்வாயும், மலர்ந்த செந்தாமரைப்போல வதனமும், அகண்டமார்பும், நீண்டகரங்களும், மணிமத்தளம்போற் புஜங்களும், ஆலிலைபோல்வயிறும், அமர்ந்த பாதமும், ஸ்ரீ லட்சுமிவிலாசமான பார்வையுமுடைய தன் தமயனை ஸ்ரீராமரைப்போல்தோற்றவே, இவன்சீதையம்மன்பிள்ளையென்பதற்குச் சந்தேகமில்லை அம்மனும் இந்த வனத்திற்றனிருக்கவேண்டும், யாவுங் கண்டறிவோமென்று உள்ளிற்களிப்பும் வெளிக்கி கோபமாகிச் சொல்லுகிறுர் வாரயப்பா சிறு பிள்ளாய், நீயார் உன்பேரென்ன குலமென்ன தாய்தந்தைபேரென்ன, எனக்குத் தெரியச்சொல்லென்றுர், அவ்வார்த்தைக்கேட்டலவன் சொல்லுகிறுன் போம்போம், இராசாக்களாய்ப்பிறந்து யுத்தம் வந்தபோது சண்டைக்குப் பயந்து குலங்கோத்திரங்களையுந் தாய் தந்தைபேருங் கேட்டு யுத்தத்திற்குத் தப்பித்துக் கொள்ளலாமா, படுகளத்தி லொப்பாரியுமுண்டோ, நின்று யுத்தம்பண்ணுமென்றுன். அப்படி கூறிய லவனுடைய வார்த்தையைக் கேட்டு சத்துருக்க மகாராசர் சொல்லுகிறுர். வாராயப்பா, நான் யுத்தத்திற்கு பயந்து உன் தாய்

தந்தை பேரைக்கேட்கவில்லை உன்னைப்பார்த்தால் சிறுபிள்ளை யாயிருக்கின்றாய், உன்னுடன் யுத்தம்பண்ண எனக்கு மனஞ் சம்மதப்படவில்லை உன்தாய் தந்தையின் நாமதேயத்தையும் உன் குலத்தையுங் கூறுவாயாகி லதன்பின்பு யுத்தம் பண்ண லாமென்றார்.

அதுகேட்டு லவனானவன், இவன்தான் குதிரைக்கும் த ண்டு தளத்திற்கும் இராசாவான சத்துருக்கன்போற் றோன் றுகின்றது இவனைப்பார்த்தால் பயங்கரமாக யிருக்கின்றது. இவனுடைய புஜபலபராக்கிரம மென்னமாயிருக்குமோ நம் முடையதமயனும் அருகிலில்லை, இவனால் நமக்கு இடர்வரு ம்போற் காண்கின்றது. நம்முடைய தாயார் ஜானகியம்மாள் நம்மைக்காணோமென் றேக்கமாயிருப்பாள். முன்னமேபோய் விடாமற்போனோம், ஆனாலுமென்ன முழுகிப்போயிற்று, தா யாருடைய கிருபை நமக்கிருக்கிற வரையில் யாதொரு குறை வும் வந்தணுகாது. நம்முடைய தமயன் இச்சங்கதியைக் கேழ்விப்படுவாரேயானால் சத்துருக்கனும், தண்டுபாளயமும், எவ்விடம்போ யொளித்தாலும் விடார் இந்தராசனே, தாய் தந்தை பேரைச் சொல்லென்று கேழ்க்கிறான். சொல்லலா மென்று மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு சத்துருக்கமகா ராசனைப் பார்த்துச் சொல்லுகின்றான்.

ஓ! இராஜனே ? கேளும், என் தாய்பேர் ஜானகியம்மா ள் எங்களையர்பேர் வால்மீகரிஷி, என் தமயன்பேர் குசலன், என்பேர் லவன், எங்கள் குலமெனக்குத் தெரிவராதென்றான். அதைக்கேட்ட சத்துருக்கர் உள்ளங்களித்து, ஜானகியம்ம னிந்தவனத்திற்ரு னிருக்கவேண்டு மிவன் ரிஷிபிள்ளை யென் று கூறுகிறான். ஸ்ரீராமரைப்போல வடிவுகொண் டிருக்கிறா ன். மேலும், தமயனொருவனிருக்கிறா ரென்கிறான். இதுவோ சம்சயமாயிருக்கின்றது. ஆனாலு மென்னமாயிற்று நமது குதிரை விட்டுவிட்டானேயானால் சேனைகளை யெழுப்பிக்கொ ண்டு போகலாம். லவனைக் கைப்பிடியாகப் பிடித்து ஸ்ரீராம ரிடத்திற்குக் கொண்டுபோகலா மென்றெண்ணினவராய் லவ னைப் பார்த்துச் சொல்லுகிறார்.

அடா! தம்பி லவனே ? நாம் விட்ட குதிரையைப்பிடித் துக்கட்டி என்னுடைய சேனைகளை பாணங்களாலடித்து கண் டதுண்டம் பண்ணலாமோவென்று கேட்க, அதற்கு லவன்

சொல்லுகிறுன். ஐயா ! சத்துருக்க மகாராசரேகேளும், நீங்கள்விட்ட குதிரை எங்கள் வனத்திற்கு வந்தபடியினுல் பிடித்துக் கட்டினேன். என் கையிலகப்பட்ட குதிரையை நீவிடுவிந்து உன் தமயன் கையினுல் யாகஞ்செய்துவைப்பது ஸ்ரீமந்நாராயணயருக்கே அறிக்கையாகும் உன்னைப்போல நூறு சத்துருக்கர் வந்தாலும்நான் குதிரையைவிடேனென்று உமது கருத்தி லெண்ணக்கடவீரென்று கூரியலவனைப்பார்த்து சத்துருக்கர் சொல்லுகிறுர். வாராய் தம்பிலவனே? நான்விட்டகுதிரை உன் வனத்திற்குவந்து உன்னைஎன்ன பண்ணிற்று வனத்தையழித்ததோ, அல்லவென்றுன்பேரில் யுத்தம்பண்ணிற்றே. என்னகுற்றஞ் செய்ததென்று என் குதிரையைப் பிடித்துக் கட்டி என்சேனையை யிப்படிசின்னுபின்னப் படுத்திக்கொன்றுய் சொல்லென்றுகேட்க, லவன் கூறுகிறுனையா, சத்துருக்க மகாராஜரே கேளும், உன்குதிரை என்வனத்திற்கு வந்து ஒன்றுஞ்செய்யவில்லை அந்தகுதிரையினுடைய நெற்றியில் கட்டிய வீரபட்டத்திலென்ன யெழுதியிருக்கிறுய், சத்துருபயங்கரன், தனுர்வேதசாஸ்திரன் ரணரங்கசூரன், சத்துருக்கன் வருகிறுன் அச்சத்துருக்கனை ஜெயிக்கத்தக்க சாமார்த்திய முள்ளபேர்கள் குதிரையைப் பிடித்துக் கட்டி யுத்தத்திற்கு வருகலாமென்றெழுதிக்கட்டி யிருந்தபடியினுலல்லவோ நான் குதிரையைப் பிடித்துக்கட்டி பின்வந்த சேனைகளையுங் கொன்றேனென்றுன்.

அதுகேட்டு சத்துருக்கர்சொல்லுகிறுர். வாருந்தம்பிலவனே? என்னேடொத்த ராஜகுமாரன் நீயானுலும் உனக்கு யானைதேர் பரிசேனைகளுமில்லை உன்னுடனெதிர்த்து எப்படியுத்தம் பண்ணுகிறது நீ இராஜகுமாரனல்லவென்றுஞ் சொல்லுகிறுய், ரிஷிபுத்திரனுனபடியால் நீபாதசாரியாய் நின்றேயுத்தம் பண்ணுகிறவனுன படியினுலும் உன்னுடன் போர் புரிவது இராச தருமமல்ல, எங்களுடனுனக்கு வைராக்கியமென்னத்திற்கு குதிரையை எங்கள்கையி லொப்பித்துவிட்டுத் தாயுடன் பிள்ளையாய்ப் போய்ச்சேரென்றுன். அதுகேட்டுலவனுனவன் சற்றுலோசனைசெய்து சத்துருக்கரைப் பார்த்துச் சொல்லுகிறுன். ஐயா ! சத்துருக்கராசனே ? நல்லவார்த்தை சொன்னீர் யுத்தம் வந்த வேளையில் இராஜகுமாரனென்றுல் யுத்தம் பண்ணுகிறது இராஜகுமாரனில்லாவிடில் யுத்தம் புரியவேண்டியதில்லையென்று இராஜ நீதியில்சொல்லுகிறதோ, அந்த ராஜநீதி சாஸ்திரத்தை நீர்தானே அறிவீர், யானைதேர் பரிசேனைகளில்லாமல் பாதசாரியாய் நின்றுசண்டைபண்ணுகிற

வனோடு யுத்தஞ் செய்ய வேண்டாமென்று எந்த சாஸ்திரத்தில் சொல்லுகின்றது குதிரையை விடுவிக்கசாமார்த்தியமுண்டானால் என்னை ஜெயித்து குதிரையை விடுவித்துக்கொண்டு போம், சாமார்த்தியமில்லாவிட்டால் உன்சேனைகளுடன்தமயனிடம்போய்ச் சேரும், உன் தமயன் யாகம் பண்ணப்போகிறது உனக்கே தெரியவருமென்று னம்மொழியைக்கேட்டுசத்துருக்கரிதென்ன சிறுபிள்ளையானது யுகமுழுகத்தக்க வார்த்தைகளைப்பேசுகிறானிவன்பேசும்வார்த்தைகளைப்பார்த்தால்இரும்பையொத்த மனதைப்படைத்தவனானாலும் கலங்கி கழிச்சலெடுத்தோடிப் போவான்போற் காண்கின்றதென்று மனதிலெண்ணினவராய்ச் சொல்லுகிறார்.

வாருந்தம்பி! லவனே? உன்னைப்பார்த்தால் சிறுபிள்ளையாயிருக்கிறாய் இளங்கன்று பயமறியாதென்பது உன்னளவிற் கண்டேன் அதெப்படியென்றால் பெரியவர்களா யிருக்கப்பட்டபேர்கள் அந்த காரியஞ்செய்தால் நன்மை இந்த காரியஞ் செய்தாற்றுன்மை அந்தகாரியமாகும் இந்தகாரியமாகாதென்றுஞ் சொல்வதை "மூத்தோர்சொல் வார்த்தையமிர்த" மெனவெண்ணி சிறியோர்களா யிருக்கப்பட்டவர்கள் நடக்கவேண்டும் தன்னிலும் பெரியவர்கள் தன்னிடத்தில் வந்து புத்தி யோசனைகள் சொன்னால் சிறியவர்கள் கேட்கவேண்டும். அப்படி கேளாதவர்களுக் கிடுக்கண்வந்தெய்துமென்று சான்றோர்கள் சொல்லுவார்களாகையா லெங்கள்பகை யுனக்குவேண்டாம் "ஊருடன்பகைக்கின் வேருடன்கெடு" மென்பது ஒருவனுக் கொருவன் பகையானாலவன் குடும்பமுழுதும் நாசமடைவார்கள். அதெப்படி யென்றால் ஆயிரத்தெட் டண்டம் ௨௨௪-புவனம் சத்த சாகரஞ்சூழ்ந்த ஈரேழுபதினா லுலகத்தையும் இராவணன் ஏகசக்கிராதிபதியா யாண்டுக்கொண் டிருந்தான். அப்படிப்பட்ட ராவணனை ஜெயித்தவர்கள் வானரங்களாயவதரிக்கவும் ஸ்ரீமந்நாராயணரே இராமனாக மூன்றுதம்பிமாருட னவதரித்து இராவண சம்மாரஞ்செய்து அவனுக்கு சகாயமாகவந்தவரையெல்லாம் ஸ்ரீராமபாணத்திற்கு இரைகொடுத்து தேவபோகத்தை யந்த தேவேந்திரனுக்குக் கொடுத்து இலங்கையை விபீஷணருக்களித்து சக்ரபுரியை மாயனுக்குத்தந்து இரத்தினபுரத்தை சலவசந்தனுக்கு நல்கி முடியுஞ்சூட்டி யாகம் பண்

ணவேணுமென்று குதிரையைவிட்டு பின்னுல் ராட்சதாளும் ராசாக்களும் வந்திருக்கிறுர்கள் அவர்கள் குதிரைபிடிபட்ட சமாச்சாரங் கேட்பார்களேயானுல் அவர்கள் வந்துவிடுவார் கள் எவ்விடஞ் சென்றுலும் உன்னைவிடார்கள் ஆகையால் எங்கள்பகையைத் தேடிக்கொள்ள வேண்டாமென்றுர்.

அப்படிச் சொன்ன சத்துருக்கனுடைய வசனங்களை யெல்லாம் லவன்கேட்டு குலுங்கநகைத்து, ஓ! சத்துருக்க மகாராசனே? என்னுடன் நீர் யுத்தம்பண்ண நடுங்கிக்கொ ண்டு யிப்படி பெரும் பொய்கையைப்புகன்றுல் லவன்பயந்து ஓடிப்போவானென்று நினைத்தீரோ, அப்படி யோடத்தக்கவ னல்ல, ஆதிபராபர வஸ்துவாயிருக்கப்பட்ட நாராயணரே என்னுடன் வந்தெதிர்த்தாலும், நன்றுய் பூசைசெய்து எம லோக மனுப்பிவிடுவேன், அதிருக்கட்டுமிப்போது உனக்கு சாமார்த்தியமுண்டானுல் என்னைஜெயித்து குதிரையை விடு வித்துக்கொண்டுபோ, சாமார்த்திய மில்லாவிட்டால் ஓடிப் போவென, அப்படி சொன்னவனுடைய வார்த்தையை சகல இராஜாக்களும் இராட்சத சிரேஷ்டர்களுங்கேட்டு மனதடங் கா கோபங் கொண்டவர்களாகி, சத்துருக்கருடைய முகத் தைப் பார்த்தார்கள்.

அதுகண்டு சத்துருக்கர் இன்னம்லவன் என்னதான் சொல்வானே, பார்ப்போமென்று கோபத்தை மனதுள் ளட க்கிக்கொண்டு யாதொன்றுஞ் சொல்லாமல் மௌனமாயிருந் துவிட்டார். அப்போது லவனுனவன், சத்துருக்கரைப்பார் த்துச் சொல்லுகிறுன். ஓ! சத்துருக்கராசனே? நீயோஇரா சனென்று முகத்தில் மீசைவைத்துக்கொண்டு கையிற் றனுசு பிடித்திருக்கிறுய், நீதானே குதிரையைவிடுவித்து உன்தமய னை ராமன்கையால் யாகம்பண்ணிவைக்கப்போகிறீர் உன் னேடொத்த இராஜாக்கள் எல்லோரும் உன்முகத்தை ஏறப் பார்க்கிறுர்கள். உனக்குரோஷந்தானில்லையோ உன்னைத்தா னே ரணரங்கசூரனென்று பின்னனுப்பிவைத்தார்கள். அவர் களுடைய திறமையும், உன்னுடைய சௌரியமும், சேனைக ளின் புஜபலபராக்ரமும், உன்னளவிற் சற்றுநேரத்திற் காண் பேனென்றுன்.

## சத்துருக்கமகாராஜனுக்கும் லவனுக்கும் யுத்தம்.

### விருத்தம்.

காலனென்றெதிர்த்தோன்றன்னைக் காலனூர்வசமேசெய்யப்
பாலனும்லவன்றன்வீரம் படையுளோன்றறையக்கேட்ட
நீலமேனியனூர்தம்பி நிகரில்சத்துருக்கன்றானும்
ஆலகாலம்போற்சீறி வமர்செய்யத்தொடங்கினனே.

அப்படிகூறிய லவனுடைய வார்த்தையை சத்துருக்க மகாராசன்கேட்டு கண்களிரண்டும் செவ்வானம்போற்சிவக்க, காதுகளிரண்டும் புகையெழும்ப, கைகளிரண்டும் பதைக்க, சரீரமெங்குந் துடிக்க, மீசைகள் படபடவென்று துடிக்க, முகங்களி லக்கினிப்பொறிகளெழும்ப வந்த கோபத்தை தேவர்கள்கண்டு லவனிறந்துபோவானென்றுமனதிலெண்ணிப் பார்த்துக்கொண் டிருந்தார்களப்படி சத்துருக்கருக்குகோபம் உண்டாகி மறுபடியும் பிள்ளையென்ற பாசமானது வந்தடைந்து கோபத்தைத் தணித்து லவனைப்பார்த்து சத்துருக்கர் சொல்லுகிறார். அடாலவனே? சிறுபிள்ளை பயமறியாதென்பதுபோல் நயமானவார்த்தையினால் நீபயனடைவாயென்று செயம்பொருந்திய இராசாக்களும் இராட்சதசிரேஷ்டர்களும்வந்து கூறியதைத் தூறிவிட்டாய், தனக்குத்தானே மீறிவிட்டாய், இப்போது என்னையுந் தூஷித்தாய், யார்க்குங்காலம்நில்லாது. அம்புவிக்கது செல்லாது, அனித்தியத்திற்கதுபொல்லாது, அப்போதது வெல்லாது, அதனை நீக்கி நானரைவதை நீகேள் விசேஷத்தை மிஞ்சாதே, சிறுபிள்ளையென்று உன்னைசும்மாவிட்டுவிட்டேன் நீசொன்னவிசேஷமற்றொருவர்சொன்னால் இந்நேரம் எமலோகமனுப்புவேன். வீணிலிறந்துபோகவேண்டாங்குதிரையை என்னிடத்திலொப்பிவித்து தாயுடன் பிள்ளையாகச்சேரென்றார். அதுகேட்டு லவனனவன் பல்லை நறநறவென்று கடித்து, கடுகடுத்து, ஓ! சத்துருக்கனே? உனக்கு எத்தனைவிதத்திற் சொன்னாலும் வெகு நீதிமார்க்கங்களை பேசுகிறாய், நீதானே பெரியவனென்று கைவீசுகிறாய், அதுவேண்டாம் உன்னுடைய புஜபல பராக்கிரமத்தையும் உனக்குப்பின்பலமாய்வந்த இராசாக்கள் இராட்சதாளுடைய சாமார்த்தியத்தையும் இதோ ஒருக்ஷணத்திற்குள்யானறிவிக்கிறேன் பாரென்றுதன்கைவில்லை நாட்டி

சரத்தைபூட்டி சாம்பிராணி தூபங்காட்டி சத்துருக்கமகாரா சன்பேரில் விட்டுவிட்டானந்த பாணமும் வில்லைவிட்டு விடு பட்டு அதிகவேகமாய் பெருந்தொனியோடு வருவதை சத்து ருக்கர்கண்டு பாலன்மிஞ்சினுனென்று வெருண்டுதானும் வில் லையெடுத்து திவ்வியாஸ்திரத்தைதொடுத்து மந்திராபூதிகொ டுத்து லவன் விடப்பட்ட பாணத்தை யறுத்து மறுபடியும் அப்பாணம் லவன்பேரிற்போகவொட்டாமல் திவ்வியாஸ்தி ரத்தை தம்மிடத்திலழைத்துக்கொண்டார் இனிவிடப்போகிற அஸ்திரங்களும் இந்தப்படியா மென்றுணர்ந்துக் கொள் ளுங்கள்.

அதுகண்டு லவன் கோபமாகி முதற்கோணல் முற்றுங் கோணலென்பதை கண்டவனுய் விண்டல மண்டல மன்பர் கள் கண்டுபயங்கொண்டு வாடவுந் தண்டு கமண்டலங்கொண் டவர்கள் பார்த்து முகம்வேர்த்து பயம்பூந்து இடம்வேர்த்து ஓடவுமக்கணம் ஒருசுழற் பாணத்தை எடுத்து வில்லிற்றொ டுத்து சத்துருக்க மகாராசருடைய இரதத்தைப் பார்த்து விடுத்தானந்த சுழல் பாணம் கரகரவென்று சுழன்றுக் கொண்டு சண்டமாருதம்போல் உயரக் காற்றுக ளெழு ம்பி அதிக விரைவோடும் வருகையில் சத்துருக்கமகா ராஜனும் ஒரு சூராவளி அஸ்திரத்தை எடுத்து விட்டார். அதனுல் திக்குகள் நடுங்க, தேவர்கள் ஒடுங்க, ஏழுகடலும் வ ரளயட்சயகின்னரர் மனமானதுபுரள, ஆகமவேதங்கள்பாட, அன்பர்கள்மனதடங்க புறப்பட்டுவந்து லவனுடைய சுழற் பாணத்தை யறுத்தெறிந்துப் போயிற்று. அதனுலவனுணவ ன்சீறிகோபமீறி, நூறுதிவ்வியாஸ்திரங்களைவாரி இந்திரன் முதலானேர் சிந்திக்கும்படியாய் வந்தனை வழிபாடுசெய்து, ம ந்திராபூதிகள் கொடுத்து விடுவிக்கவே, ஒன்ருேடொன் றுரா ய்ந்துக் கொண்டு அக்கினிப்பொறிகள் சிதரவருகிறபோது, சத்துருக்கமகாராஜருந் தம்முடைய ராமபாணமாகிய ஐம்பது திவ்வியாஸ்திரங்களைவில்லிற்றொடுத்து, தூபதீபங் கொடுத்து விடுத்தார். அந்த திவ்வியாஸ்திரங்கள் வில்லை விட்டு விடுபட் டு தகத்தகாயமாக கட்டுகளுடன் பின்பட்சியிறகுபூண்ட அஸ் திரங்களானதால் ஆலகாலவிஷம்போற் சீறிக்கொண்டுபோய் லவன்விட்ட நூறு திவ்வியாஸ்திரங்களையுமறுத்து பூமியிற்ற ள்ளிவிட்டு சத்துருக்க மகாராஜனும் புருப்பொதியல் வந்த டைந்தது. அதுவும் போகவே, லவன் நூறு நாராசபாணங்

களை எடுத்து விடுத்தான் அந்த நூறு நாராசபாணங்களும் நாகசர்ப்பம்போ லிரைச்சலிட்டுக் கொண்டு வருவதைச் சத்துருக்கர் கண்டு தம்முடைய இராமபாணமாகிய இருபத்தைந்து நாராசபாணங்களை எடுத்து விடுத்தார் அதுகள் பூமியாகாய மெல்லாம் புகையெழும்ப புறப்பட்டு லவன்விட்ட நூறு நாராசபாணங்களையு மறுத்துபூமியிற்றள்ளி சத்துருக்க மகாராசனிடம் வந்து விட்டதுகள். உடனே லவனுனவன், ஒரு அக்கினியாஸ்திரத்தை எடுத்து மந்திராபூதிகள் கொடுத்து விடுவிக்கவே, அதுவும் வடவாமுகாக்கினியைப்போல் பொரி புகைகளுடன் சடசட வென்கிற தொனிகளுடன் மகா துரிதமாய் வருகிற போது சத்துருக்கர் தம்முடைய இராமபாணமாகிய அக்கினியாஸ்திரத்தை எடுத்து மந்திராபூதிகள் கொடுத்து விடுவிக்கவே, அதுவும் ஆவென்று வாயைத் திறந்து கொண் டக்கினிப்பொறிகளை அமோகமாகக் குபீல் குபீலென்றுகக்கிக்கொண்டு புறப்பட்டு லவன்விட்ட அக்கினியாஸ்திரத்தைக் கமளீகரம் பண்ணிப்போட்டு வந்து விட்டது.

இப்படியாக லவன்விட்ட பாணங்களையெல்லாஞ் சத்துருக்கரானவர் கண்டித்து லவனுக்குக் காயம்படாமற் செய்து வருகையில், லவனுனவன் கண்டு மனபயங்கொண்டு கண்களிரண்டுங்கருத்து மருண்டு ஒகோ! மலைபோல வந்த இராட்சச வீரர்களைவைது, சிலைகளையுந் தலைகளையுங் கொய்து, நிலைகலங்கச் செய்தது மன்றி, இராஜர்களான மன்னர்களையும் சின்னமடையச்செய்வித்த நாம், இம்மன்னன் கையிலகப்பட்டு முன்னும் பின்னும்முழிக்கலாயிற்று, என்செய்வேன் ஐயோ! அம்மணி, நானிவ்வளவு பாணங்களை விட்டும் எதுவும் பயன்படாமற் கெட்டுப்போயிற்றல்லவா, நல்லது, இன்னமும் பார்ப்போமென்று ஒரு பர்வதாஸ்திரத்தை எடுத்து மந்திராபூதிகள் செய்து எய்தான்.

அப்பர்வதாஸ்திரமானது வெளிபட்டு அனேக பர்வதங்களாய் உருவங்கொண்டு சத்துருக்கமகராஜன்பேரில் வருகிறபோது அவரும் ஒருவச்சிராயுதத்தை எடுத்து மந்திரா பூதிகள்செய்து பர்வதாஸ்திரத்தை யறுத்துப்போடவே, லவன் கண்டு, மனதிடங்கொண்டு மறுபடியுஞ் சலுதியில் வில்லையெடுத்து முகத்திற்குநேராய்ப் பிடித்தான். அதனைக்கண்டு சத்துருக்கர் நகைபுரிந்துயவன்றிரந் தெரிந்து மனதிற்களிப்புகொண்டவராய் வாருந்தம்பி! லவனே, ஏன் வீணில் மாண்டு

போகிருய் வேண்டாம் வேண்டாங் குதிரையைவிட்டு தாயுடன் பிள்ளையாகப்போய்ச் சேர்ந்து சுகித்திருக்கக்கடவாய், நானும் மன்னனுடைய சேனைகளையெழுப்பிக் கொண்டு குதிரையுடன் அயோத்திபோய்ச் சேருகிறேன் நீ, சிறுபிள்ளையானபடியால் முன்பின் யோசனை செய்யாமல் என் சேனைகளை மாய்த்தாய், பெரிதல்ல, போருக்கு நேராகமாட்டாயென்று கூறியதை லவன்கேட்டு, ஓ! சத்துருக்கனே? கேளும், நீ என்ன பிரியவசனம் புகன்ருலு முன்னைவிடேன், பயப்படேன், என்றிருவரும் வாதாடிக் கொண்டிருக்கையில் காலசித்தனுனவன் பாணவேகமடங்கின வுடனே அதிவேகமாய் இரதத்தை நடத்திக்கொண்டு ரணக்களம் வந்து சத்துருக்கருடன் கலந்து விசேஷமென்ன நடக்கிறதோ வென்று அதிகசாக்கிரதையுடன் பக்கத்தி லிருக்கையிற் சத்துருக்கர் லவனைப்பார்த்துச் சொல்லுகிருர்.

வாராய் தம்பி! லவனே? நான் யுத்தத்திற்கு உனக்கு பிரியவசனம் சொல்லவரவில்லை சிறுபிள்ளை யானபடியால் உனக்கு பிரியவசனம் புகன்றேன், அதனுற் குற்றமொன்றுமில்லை என்றுசொல்ல, லவனதிககோபமாகி, ஓ! சத்துருக்கனே? நானென்ன சொன்னபோதிலு முனக்கு ரோஷத்துவேஷமில்லை ஆனபடியினுற் சிறுபிள்ளையினுடைய சாமார்த்தியத்தை இதோ காண்பிக்கிறேன் பாரென்று முகத்துக்கு நேராய்பிடித்த வில்லிலனேக அஸ்திரங்களைச் சந்தித்து க-கO-கOO-கூ-யிகூ-கோடி சங்கம் மகாசங்கமென்று சமுத்திரஜலத்தை யெடுத்து குப்புரக்கவிழ்த்தா லெப்படி யிருக்குமோ, அப்படியாக ஓய் ஒழிச்சலில்லாமலும் மூச்சுவிடாமலுஞ்சரசர வென்று சரங்களைபொழிகிறபோது, சத்துருக்கமகாராஜனும் மிதமில்லாத பாணங்களை வாரிவாரி விறுவிறென்று பொழிந்து லவன்விட்ட அஸ்திரங்க ளனைத்தும் ஒன்ருவது சேனைகள்பேரில் போகவொட்டாமல் அறுக்க, அவ்வம்பு சரீசத்திலும் வந்து பாயவுஞ் சேனைகள் பேரிலும் போய்விழுந்து சேனைகளுமாளத்தலைப் பட்டார்கள்.

பின்னும் லவன் மண்டிபோட்ட வண்ணம் பாணங்களெடுக்கிறதும் வில்லிற்ருெடுக்கிறதும் தேவர்களுக்குத் தெரியவில்லையாம், இவனுடைய கரவேக சரவேகந்தானென்னமோ வென்று கண்ட ராஜாக்கள் யாவரும் நடுங்க, இராட்சதாளுமொடுங்க, சேனைகள் சிதறி, சிந்தைபதறி, இந்தசேலகம் நமக்குவேண்டாம் வேண்டாமென்று உயிருண்டானல் உப்பு

மாறி பிழைக்கலாமென்று நினைவு கொண்டிருக்கையில் கால் பலமான இராஜாக்கள் மனபயங்கொண்டு இந்த சண்டையில் மண்டை போமோ, தொண்டை போமோ, அண்டை நெருங் கினுற் கண்டம் போமோ, கண்டிலோம், லவனே ! உன் வில் லுக்கும் கோதண்ட பாணத்திற்கிருகோடி தண்டம் உன்பாத த்திற்கு முக்கோடி தண்டமென்று கண்டகண்ட விடமாய் இனி அண்டோ மென்றோடும்படியாய் சாடுகிறபோது சத்து ருக்கமகாராஜனுக்கும் லவனுக்கும் யுத்தமானது மெய்மறந்து போகிறது அந்த யுத்தமெத்தன்மை யொத்ததென்றால் இல ட்சுமணரும் இந்திரசித்தும் புரிந்த யுத்தத்தைப்போலவும் ஸ்ரீராமரும் அதிகாயனும் போர்செய்தமை போலுமிருந்தது அப்படியாக லவன் பாணங்களை விடுகிறபோது சத்துருக்க மகாராஜர் எத்தனைபாணம் விடுப்பார், எத்தனைபாணங் கூறிப் பார், இங்குபாணங் கண்டிப்பார், இங்குபாணமங்கு பாணம் எங்கும் பாணமாய் கிழக்கு தெற்குஞ் சரமேற்குஞ் சரம்வடக் குஞ்சரமாக நான்குதிக்கும் லவனுடைய பாணவேகமானது மூடிக்கொள்ளவே, அதனுற் சத்துருக்கருடையகையுமெய்யு ஞ்சலித்து மண்டிப்போட்டு காலும்வலித்துக்கொள்ள, அது வுமன்றி பாணங்களுடைய அக்கினி வேகத்தால் முகமுமக முந்தீய்ந்து போகிறது அதனை அந்தரவாசிகளாகிய இந்தி ரனும்தேவர்களும் பார்த்து இந்த யுத்தம் ஸ்ரீராமராவண யுத் தமென்று சொல்லலாமோ, அல்லது சுப்பிரமணியருஞ் சூர பத்மனுஞ்செய்த யுத்தமென்றுசொல்லலாமோ, இந்த யுத்தத் திற்கெதுவுமிணை சொல்லப்போகாதென்று பார்த்துக்கொண் டிருக்கையில் லவனுனவன் பாணங்களை மட்டிட்டு சொல்வத ற்குகட்டுப்படாத கட்டு கட்டாயுருவிவிட்டு ஒருவர்க்கொருவர் தெரியாமல் விடும் அஸ்திரங்களினுல் மூடி அந்த அஸ்திரம் போகிறவேகத்தோடு கூட அதிவேகமாக ஓடிவந்து சத்துரு க்கருக்குந் தெரியாமல் அவருடைய கைவில்லையுங் கண்டித் துத் தள்ளி அவருடைய மார்பைப்பார்த்து நாற்பது நாராச பாணங்கள் விட்டானதுகண்டு சத்துருக்கமகாராஜர் அதிசீக் கிரமாக வில்லையும் நாணியையுமிருக்கப்பார்த்து ஒரு திவ்வி யாஸ்திரத்தை எடுத்து வில்லிற் சந்தித்துவிட்டு லவன்விட்ட பாணங்களையெல்லாம் பகலவன்பனிபோல நீக்கி வெட்ட வெளியாக்கி அட்டகாசஞ்செய்து அதிசீக்கிரமாக பின்னுஞ் சிலசரங்களையெய்து நாற்பது நாராசபாணங்களையும் ஒரு

இராமபாணத்தையும் விட்டு லவன்பிடித்திருந்தவில்லையுங் கண்டித்துப் போட்டார்.

உடனே லவனுனவன், வில்லையெறிந்துவிட்டு உடை வாளையுருவிக்கொண்டு முன்கந்து, பின்கந்து, முப்பத்திரண்டு கந்துகொண்டு, சத்துருக்கனை அரவெட்டவேணுமென்று சேற்கண்டையானது சிவ்வென்று பாய்வதுபோற் பாய்ந்து வருகிறபோது சத்துருக்கமகாராஜன் ஒரு இராமபாணம் விட்டு உடைவாளைப் பொடியாக்கிப் போட்டா ரதுகண்டு லவன் சினங்கொண்டு சொல்லிக்கொள்ளுகிருன். அந்தோ இந்தராஜன் கைவில்லையுங் கண்டித்தான். இவன் வல்லமை க்குநிகர் இவ்வெல்லையிலொருவரு மில்லையென்று சொல்லு கிறதற்கு ஐயமுண்டோ, நல்லது இன்னம் பார்ப்போமென்று இடுப்பிற்கட்டிய முப்பத்திரண்டாயுதங்களையும் றிவ்றிவ்வெ ன்று சத்துருக்கமகாராஜன்பேரில் விட்டெறிந்தான். அது கண்டு சத்துருக்க மகாராஜனும் ஒருபாணம் விட்டு வருகிற ஆயுதங்களையெல்லாம் நடுவது பாதியில் துண்டு துண்டாய் கண்டனம் பண்ணிவிட்டு லவனைப்பார்த்துச் சொல்லுகிருர்.

லவன் சத்துருக்கனிடத்தில் கட்டுப்படுதல்.

---

கலிவிருத்தம்.

உம்பர்வாழுலகமெங்கு மிருதிறவர்களாற்பெய்த
அம்புவணெருங்கிச்சீவ ராவியைக்கவருங்காலில்
தம்பிசத்துருக்கன்தொட்ட சரமதால்மண்மேற்சாய்ந்தான்
சம்புளாம்லவனைத்தாவி திறமுடன்கட்டினுனே.

அடா தம்பி! லவனே இனியாகிலும் எங்கள் குதிரையை விட்டு நீசுகமாய்நடந்து விடென்றுகூறவே, லவனதிககோ பமாகி, ஓ! சத்துருக்கனே? தானேசூரனென்று இரதத்திலே றிநின்று வில்லை கையிற் பிடித்தபடியாக வல்லமைபேசின உ ன்னை இதோ என் கைகுத்திறுற்குத்தி வில்லையுமொடித்து உ ன்னையுமடித்து எமலோகத்திற் கனுப்பிவிடுகிறேன் பாரென்று கையைமூடிக்கொண்டு ஓடிவருகிறபோது சத்துருக்கமகாரா ஜர் கண்டு இது தான்லவனைப்பிடிக்க சமயமென்று இரதத் தைவிட்டுக் குதித்து இடசாரி வலசாரியாகவந்து லவனுடை ய இடுப்பிற்கையைக் கொடுத்து பிடிக்கபோகுஞ் சமயத்தில் லவன்கண்டு சிவ்வென்றுபாய்ந்து இப்பால் வந்துவிட்டான்

பின்னுஞ் சத்துருக்கமகாராஜன் கோபங்கொண்டு மறுபடியும் லவனைசேர்த்துப் பிடிக்கச் செல்லுகையில் லவனுமதற்குத்தப்பித்துக்கொண்டான். அதனால் கண்களிரண்டுஞ் செவ்வானம்போற்சிவக்க, விழியையுருட்டிப்பார்த்துலவனை பாணத்தினாற்கட்டவேணுமேயல்லாமல் மற்றவிதத்தில் பிடிபடமாட்டானென்று எண்ணி லவனோடு இனிபோராட்டமென்னத்திற்கென்று இரதத்திலேறிசீக்கிரமாகவில்லையெடுத்து ஒருகட்டுபாணத்தைப் பிடுங்கி வில்லிற்சந்தித்து விட்டு லவனைக்கட்டி மூர்ச்சையாக்கி தேரின்பேரிற் கொண்டுவந்து குத்துக்காலுடன் கட்டிப்போட்டார். அதுகண்டு தேவர்கள் சத்துருக்கனை மெச்சிக் கொண்டாடினார்கள். அப்போது இராஜாக்களும் இராட்சதசிரேஷ்டர்களும் கால்பலமும் லவன் பிடிபட்டான் இனி நாம் பிழைத்தோமென்றுஜெயபேரி, ராயபேரி, வெங்கலபேரி, கர்னபூரி, தம்பட்டம் இப்படி சொல்லப்பட்ட முப்பத்திரண்டு மேளவாத்தியங்களுந் தாம் தாமென்று முழங்கச் செய்து அஸ்வமேதக் குதிரையைக் கூட்டிக்கொண்டு சரஸ்வதி ஆற்றங்கரையில்வந்து கூடாரமடித்து தண்டுபாளையமிறங்கி இறந்தசேனைகளை எழுப்பிக்கொண்டிருந்தார்கள்.

## வனத்துப்பெண்கள் லவன்பிடிப்பதை சீதையம்மனுக்குச் சொல்லல்.

---

### கலிவிருத்தம்.

வண்மைசேர்லவனுக்குற்ற வண்மையைக்கண்டமாதர்
திண்ணென நிலத்திற்சாய்ந்து சேர்ந்துபின் தெளிந்தெழுந்து
கண்புன லுதிர்தல்செய்து காரிழைக்குரைப்போமென்று
மண்புகழ்சீதாதேவி மலரடி தொழுதுசொல்வார்.

இந்தப்படி லவன் சத்துருக்கனிடத்தில் பிடிபட்டுப்போகஇதுகளெல்லாம் அவ்வனத்துப் பெண்கள் தூரத்தில் நின்றுசெடிமறைவில் பார்த்துக்கொண்டிருந்து ஐயையோ லவகுமாராவென்று அடித்துமோதி, பூமியில் விழுந்து, அலறியெழுந்து வால்மீகருடைய வனத்தைநோக்கி அழுதுகொண்டு வருகிறார்கள் எப்படியென்றால் அடா தம்பி! லவனே? சீதாலட்சுமியானவள் எங்களை லவகுமாரனெங்கேயென்று கேட்டால் நாங்களென்னசொல்லுவோம், உன் தமயன் குசலனுக்கு யாது தேறுதலைபுகல்வோம், தம்பி இதற்கோ நாங்கள்

கூடவந்தோம், எப்படிசொல்வோம் இருவரிலொருவராவது வருவீர்களேயானால் பிரியமாகப்பெற்ற உரிய அன்னைக்கு பரிவுண்டாகும், அறியாதவர்களோடு தெரியாமல்வந்தோமே, உங்கள்சொல்லும் கல்வியும் சவுரியமுஞ் சீதையம்மன்காண்பாள், கருத்திலாசைபூண்பாள், அதுவுமன்றி உங்களையராகிய வால்மீகர் காலையுமாலையு முங்கள் கனிவாய்மொழியைக் கண்டு கமண்டலம் யோகதண்டம் இவைகளைவிட்டு கையிலெடுத்து கனிவாயுடன் முத்தங்கொடுத்து கருத்துற்று கவலையற்றுகாத்துக்கொண்டு வளர்த்துவந்த செல்வர்களே, அவரென்ன செய்வாரோ அப்பா லவகுமாராவென்று தாரைதாரையாக கண்களில் நீர்பெருகியழுது, ஆண்டவனைத் தொழுது, அப்பாகுசலா, வேட்டையிற்றனித்தாயே, நீயாவது உன்தாயிடம்வந்துசேர்ந்தாயோ, அரி! அரி! அச்சுதா, பரந்தாமா ஆபத்பாந்தவாவென்று அழுது புலம்பி, காடு வனங்களைத் தாண்டி, சீதையம்மனிருக்கும் பர்ணகசாலைக்கு வந்தார்கள். அப்போது சீதையம்மன் எப்படியிருக்கிறுளென்றால் மைந்தர்களை வேட்டைக்கனுப்பினேமே அஸ்தமித்து ரு-நாழிகையாயிற்றே காலை அ-நாழிகை சுமாருக்குப் போனபிள்ளைகளை இதுவரையிற் காணேமேயென்று மனங்கலங்கி குசலவாள் வருகிறவழியைப் பார்த்துக்கொண்டு சீதையம்மன் பர்ணகசாலையிலிருந்தாள்.

அப்பால் தாதிப்பெண்களானவர்கள் அழுதுக்கொண்டு சீதையம்மனிடஞ் சென்று அடிவணங்கி நின்று சொல்லுகிறுர்கள் அம்மா உன்குமாரர்களிருவரும் உன்னிடத்திற்செலவுபெற்றுக்கொண்டு வனத்திற் சென்று வேட்டையாடி திரும்புங்காலையில் குசலவன்மேல் நோக்கி மறுவனம் வேட்டைக்குப் போயினுன். லவகுமாரனும் நாங்களும் பர்ணகசாலைக்கு வருகையில் ஒரு அஸ்வமேதக் குதிரையானது யார் விட்ட குதிரையோ தெரியவராது. அக்குதிரையின் பின் வந்தசேனைகளையுங் கொன்றுவிட்டான். அதன்பின்பு யானை குதிரை சேனைகளும் வந்துகூடி லவனுடன்போராடி லவனை கைப்பிடியாகப் பிடித்துக்கட்டி இரதத்திலேற்றிக் கொண்டு போய் சரஸ்வதியாற்றிலெல்லோருங்கூடாரம்போட்டு தண்டிறங்கி யிருக்கிறுர்கள். இந்நேரந் தம்பி லவனை யென்ன செய்தார்களோ, ஏதாயிற்றே, தெரியவராதென்றுர்கள். அதுகேட்டு சீதையம்மன் அடித்துமோதி, அலறிவிழுந்து,

கடகடவென்று புரண்டழுது களையாகவே தாதியார் அம்ம ணையெடுத்துக் களையாற்றினார்கள்.

அப்போது சீதாலட்சுமியானவள் களையாறி யெழுந்தி ருந்து எப்படியழுது புலம்புகிறாளென்றால் ஐயையோ லவ குமாரா உங்களையர் வால்மீகரில்லாத வேளையில் என்னையிப் படி தனிமையாய்விட்டு வஞ்சனைசெய்துப் போகலாமோ உ ன்தமையன் குசலனில்லாத வேளையில் குதிரையைப் பிடித் துக் கட்டியுத்தஞ்செய்யலாமோ யுத்தம்பண்ணினாலும் எதிரி கள் கையிலகப்பட்டு மாண்டுபோவாயென்று இதுவரையி லிதற்குத்தானோ வளர்த்தேன். அடா மகனே! லவகுமாரகா, எதிரிகள் கையிலகப்பட்ட யுன்னை என்னசெய்தார்களோ, யா தொன்று மறியேன், நான் என்பிராணநாதரை விட்டுப்பிரி ந்த விசனத்தை உங்களால் மறந்தேனவராசையைத் துறந் தேன். அயோத்தியின் வாழ்வையும் நீக்கினேன், அப்பா லவகுமாரகா, உன்னை கைப்பிடியாகப் பிடிக்கையில் நீஎவ்வா றுய்க் கதறியழுதாயோ உன்கையில் வில்லம்பு யில்லாமற் போய்விட்டதோ ஐயையோ லவகுமாரா அயோத்தியை யர சாள்வாயே யென்று அதிகஆவலோடு உங்களையரும் நா னும் நம்பியிருந்த எங்களை வெம்பவைத்து நமனுக் கிறை யானாயோ உன் தமையன் வந்து தம்பி லவனெங்கேயென்று கேட்டால் என்ன சொல்வேன் வால்மீகருக் கேதுரைப்பே னென்று சீதையம்மனவள் புலம்புகிற ஓசையை அந்த வனத்திற்குள் வருகிற குசலன்கேட்டு திடுக்கிட்டு நாம்வர வில்லையென்று நமது தாயார் அழுகிறாப்போல காண்கின் றது அதனை சல்தியிற்சென்று கண்டறிய வேணுமென்று பர்ணகசாலைக்குவந்து அம்மா நானிதோவந்தேன் நீ அழ வேண்டாமென்று பாதத்திற்பணிந்தான். அப்படி வணங் கிய குசலனையெடுத்து வாழ்த்தி உட்காரவைத்து சீதையம் மன் சொல்லுகிறாள். அடா! குசலனே? உன்தம்பி லவனை எங்கேவிட்டாய் உங்களையர் வால்மீகரில்லாதவேளையில் லவ னும் நீயும் வேட்டையாடச் சென்றீர்களே அவ்விடத்தி லெங்கே கைசோர விட்டாயென்றாள்.

அதுகேட்டு குசலன்சித்தம் நொந்து மெத்தவருத்தம் தந்து தம்பியை தனித்தனுப்பினோம் எங்குநின்றானோ எவ் விடஞ்சென்றானோ என்னசெய்வோம் தெய்வமே எவ்வா றினி வாழ்வோமென்றெண்ணி இருதயங்குண்ணி கடவுளை நண்ணி துதிபண்ணி இது காலகெதியோ காரணவிதியோ

யார்செய்த சதியோ தம்பியின்மதியோ தாயின்வாய் மொழியைத்தடுத்து சென்றேமே அதனுலோ "தாய்சொற்றுரந்தால் வாசகமில்லை" என்பதை மறந்தோமென்று வெதும்பிய கும்பியைமாற்றி பின்புபோய் தேடலாமென்று தயிரியங்கொண்டு சொல்லுகிறுன். தாயே! நாங்களிருவரும் வேட்டைகளாடி ஆசிரமந் திரும்புங்காலையில் தம்பிலவனை முன்னுதாகவனுப்பிவிட்டு நான் மறுவனந்தேடி வேட்டைக்குப்போயிருந்தேன் நான் பொய்சொல்லவில்லை இந்த வனத்துப்பெண்களைக் கேட்டால் சொல்லுவார்களென்றுன். அதுகேட்டு சீதையம்மன் சொல்லுகிருள். அடாமகனே? குமாரரத்தினமே உன்தம்பி ஆசிரமம்வரும்போது வனத்தில் ஒரு அஸ்வமேதக் குதிரை மேய்ந்துக்கொண்டிருந்துதாம் அதை லவன் பிடித்துக்கட்டி குதிரையின் பின் தேர் பரிசேனைகளோடு முனைந்து யுத்தம் பண்ணுகையில் தம்பிலவனுக்கு வில்லம்பில்லாதபடியினுல் எதிரிகள் லவனைக் கைபிடியாகப் பிடித்துக் கொண்டார்களாம். அவர்கள் சரஸ்வதியாற்றங்கரையோரந் தண்டுவிட்டு பாளையமிறங்கி யிருக்கிருர்களாம். அவர்களுக்கோ ரதகஜதுரகபதாதிக ளிருக்கிறதாம் உங்களுக்கு யாதுமில்லையே நமதுஐயர் வால்மீக ரிவ்விடமிருந்தால் ரதகஜதுரக பதாதிகளும் உண்டுபண்ணிக் கொள்ளலாம் அவரில்லாத வேளையில் நான் வனவேட்டைக்குப் போகவேண்டுமென்று கூற என்வார்த்தையைத் தடுத்துப்போன உங்களுக்கு அபஜெயம்வந்துதே இனிநானென்ன செய்வேன் மகனேயென்று புலம்புகையில் குசலன் சொல்லுகிறுன். அம்மணி ஒருநாள் நானும் ஐயர் வால்மீகருந் தனித்திருக்கையில் ஒருசுலோகஞ் சொல்லி என்னை யதற்கு பொருளென்னவென்று கேட்டார். அப்பொருள் தெரியாமல் சற்றுநேரஞ் சும்மாயிருந்து விட்டேன். அதற்கவர் என்மீதிற்கோபங்கொண்டு அந்தச்சுலோகத்திற்கு அர்த்தஞ் சொன்னுரதெப்படியென்றுல் கைலாசவாசகராகிய பரமசிவ னிடப்பாகத்திலமர்ந்த, உமாதேவியும் வைகுந்தவாசகராகிய ஸ்ரீமந்நாராயணருடையமார்பிலுறைகின்ற மகாலட்சுமியும், சத்தியலோகவாசியாகியபிர்மதேவருடைய மனையாளாகும் சரஸ்வதிதேவியும், இம்மூன்றுரூபமும்ஒருரூபமாயிருக்கப்பட்ட உன்தாயார் சீதாலட்சுமியென்று தெரிந்துக்கொள்வாய் குசலனேயென்று இன்னுஞ் சிலரகசியப்பொருள்சொல்லி மனதில்வைத்துக் கொள்ளென்றுசொன்னுர்.

அப்படியெல்லாம் எங்களையர் வால்மீக ரருளிச்செய்திரு க்க எங்களுக்கு யானைதேர்பரிசேனைகளில்லையென்றும் லவனை ப்பிடித்துக் கட்டிக்கொண்டுபோய்விட்டார்களென்றும் நீசொ ல்லலாமோ இந்தயீரேழுபதினாலுலகத்தையுங் கவிழ்த்துவிட வேணுமென்றாலுங்கவிழ்ப்பாய் நிறுத்தவேணுமென்றாலும் நிறுத்திரட்சிப்பாய் எங்களுக்கு ரதகஜதுரகபதாதிக ளில்லா விட்டாலும் லோகமாதாவான நீர் ஆசீர்வாதஞ்செய்து ஒரு வில்லம்புகொடுப்பதுனக் கரிதாகுமோவென்று ஸ்தோத்திரம் செய்யவே, சீதாலட்சுமிக்கு பூர்வக்கியான முதித்து இனிகுச லவனால் நடக்கப்போகிற காரியங்களுந் தெரிந்து சந்தோஷ மாகி குசலனைப்பார்த்து கிருபைகூர்ந்து சொல்லுகிறாள்.

அப்பா ! குசலனே? எதிரிகள்விடப்பட்ட அஸ்திரத்திற் கு இந்தபிரமாஸ்திரத்தைவிட் டறுத்துப்போடு நாராயணாஸ் திரங்களெய்தால் நீயிந்த நாராயணாஸ்திரத்தை யெய்து அ றுத்துவிடு சிவன்கைசூலமும் பாசுபதாஸ்திரமும் பிரமதெ ண்டும் எதிரிகள் விடுத்தால் ஸ்ரீமந் நாராயணர்கையி லிருக்கப் பட்ட நாராயணாஸ்திரத்தை யுனக்குக் கொடுத்தேன் இந்த நாராயணாஸ்திரங் கொண்டுகொய்துப்போடு திரிகள்சக்கரம் விட்டால் இதோ ஸ்ரீமந்நாராயணர்கையி லிருக்கப்பட்ட சக் கர முனக்களித்தேன் இச்சக்கரத்தினால் அந்தச்சக்கரத்தையு மறுத்து ரதகஜதுரகபதாதிகளெல்லாம்வந்தெரித்தாலும் சம் மாரஞ்செய்துப்போட்டு இதோஉனக்குமாளாத அட்சயத்தூ ணியுங் கொடுத்தேன் வில்லையுமழைப்பித்துத் தருகிறேனென் று வருணதேவனை நினைத்து கையைநீட்டினாள் அந்தவரு ணன் அம்மன் நினைத்த காரியத்தையறிந்து பிரசண்ட கோ தண்டமென்ற வில்லையெடுத்து அம்மனுக்கு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்துகொடுத்தா னப்போது சீதாபிராட்டியும் அந்த வில்லைவாங்கி குசலன்கையிற் கொடுத்துக் கூறுகின் றாள்.

அப்பா ! குசலனே ? இந்தவில் ஸ்ரீமந் நாராயணருடை ய வில் இதற்குமுன் ஈஸ்வரன் பிர்மா இந்திரன் அக்கினி இயமன் வருணனுடைய வில்லும் நிகரல்ல, இந்தயுக முழு கிப் போகுங்காலத்தினும் இவ்வில்லை எடுக்கிறதில்லை அப் பேர்ப்பட்ட பிரசண்ட கோதண்டத்தை உனக்குத்தந்தேன் இதோ உமையவள்கரத்தி லிருக்கப்பட்ட பிரசண்ட கோதண் டத்தை யுனக்குத் தந்தேன் வாங்கிக்கொள், தேவர்களாவது

இராஜாக்களாவது வந்தெதிர்த்தாலுங் கொன்றுவிடும், மும்மூர்த்திகளுடைய பலமும் உனக்குத்தந்தேன் நீபோய் அவர்களை சம்மாரஞ்செய்து ஜெயமடைந்து வாரும் குமாரகாவென்று வாழ்த்தின மாத்திரத்தில் சீதையம்மனுக்கு பூர்வக்கியான்மாறி கனவுகண்டதைப் போலாயிற்று சீதையம்மனனவள் காமதேனுவை நினைக்க அக்காமதேனுவானது தெய்வலோகம்விட்டு வால்மீகருடைய ஆசிரமம்வந்தன. அதுகண்டு அம்மனவள், வாராய் காமதேனுவே, குசலவாள் யுத்தத்திற்குப் போகிறபடியால் அவர்கள் நினைத்த யிடத்தில் நீ சென்று பசியாற்றிப்போடென்று உத்தரவுகூற அவ்வாறே செய்கிறேனென்று சீதையம்மனிடத்தில் விடைபெற்று தெய்வலோகம் போய்விட்டது. உடனே குசலனவ னெழுந்திருந்து அடிவணங்கி அம்மா, நான்போய் வருகிறேனென்று அம்புருப்பொதி முதுகிற்கட்டி வில்லை கையிலெடுத்துக்கொண்டு அன்னையை வணங்கி நின்றான். அப்படி வணங்கினவனைப் பார்த்து அடாமகனே? உன்னை அரியரப்பிரமாதிகள் வந்தெதிர்த்தாலுஞ் செயமடைந்து வருவாயென்று விடைகொடுத் தனுப்பினள்.

## குசலராஜன் சத்துருக்கமகாராஜன் தண்டைத்தேடிப் போகுதல்.

### விருத்தம்.

பொய்ம்மதாகியவரக்கர்புல்லர் முதலானவர்க்குப்போதநல்கி
பொய்ம்மதத்தைநாட்டவந்த விராமனிளமலுமிருடிவெழிற்காணுற்றத்
தெய்வீகக்குசலராஜேந்திரனன்னை சொற்படிசிலையம்பேந்தி
துய்யவன்தனைத்தேடிப்போரிடவே நாடுமிதைசொல்லுவோமே.

### வேறு விருத்தம்.

வனிதையிந்த வகையுரைக்கக்குசலராஜன் வணங்கிவிடைகொண்டு வில்லும்ம்புமேந்தி, முனிசிலைவேந்தரைமாப்த்துத் தம்பிதன்னைக் குடதிசையிற்றினகரனொளிக்குமுன்னம், இனிமைபெறக்கொண்டுன்பால் மீள்வேனென்று இருவிழியிற்கனல்பொரிப் படையைத்தேடி, தனிகரில்லாதசிங்கம் போன்ற பாலன் றுவினனடவிதனின் மேவினனே.

இப்பால் குசலராஜனும் வனத்துப்பெண்களில் ஒருஸ்திரீயை வழிகாட்டச்சொல்லி புறப்பட்டு காடு, செடி, வனங்கடந்து சரஸ்வதி யாற்றங்கரையில் வருகிறபோது ரணக்களமானது எப்படியிருந்ததென்றால் பர்வதங்கள்போல யானைகளு

ம், தேர்களும், குதிரைகளும், கால்பலமான ராட்சதாளும் வி ழுந்து, ரத்தவெள்ளத்திலுருட்டிக்கொண்டு மூன்றுபனை பிர மாணம் உதிரவெள்ளமோடே அந்தரத்தாற்றிற் காகங்கள் க த்த, கழுகுகள் பிடுங்க, நரிகள் ஊளையிட்டுப்புசிக்க, பூதப்பிரே தங்கள் பூரித்துண்டு மேளதாள பேரிசங்கங்களையெடுத்து குச லராஜன் வருகிறுன் இன்னங் கொற்றவர்விருந்து மெத்தத் தருவானென்று மேளத்தைக்கொட்டுகிறதும், ஆடுகிறதும், பாடுகிறதுமாக விருந்ததைக்கண்ட குசலனுனவன் மகாசந் தோஷமாகலவன்கையினுல் வெகுசேனைகள் மடிந்ததென்றெ ண்ணி வருகிறகாலத்தில்சத்துருக்கனுடையதண்டானது சர ஸ்வதியாற்றங்கரையி லிருக்கக்கண்டு அத்தண்டில்மெதுவாக நுழைந்தான். அத்தண்டி லிருக்கப்பட்ட இராஜாக்களும், இராட்சதாளும், சேனைகளுய், குசலனைப்பார்த்து இவனுர் அச்சம் பயமில்லாமல் நமது தண்டில் வருகின்றுன். இவ னைப்பார்த்தால் ஒட்டைசாணில்லை இவனுடைய வில்லைப் பார்த்தால் இவனுக்கு மிரண்டு கொண்டதா யிருக்கின்றதே இந்தவில்லில் மணிகளும் கட்டியிருக்கின்றது இவனைக்கா ணும்போதே கெற்பங் கலங்குகின்றது. இவன் வில்லிற்கு நிகரானவில் சத்துருக்க மகாராஜனுடைய வில்தவிர மற்ற பேர் வில் புல்லுதான் என்றெண்ணினவர்களாய் இராம னுண்டால் நமக்கென்ன நயம், லவன் தமயனுண்டால் நம க்கென்ன நஷ்டம், உனக்கென்ன எனக்கென்ன வென்று சும்மாயிருந்து விட்டார்கள்.

அதுகண்டு குசலராஜனுங் குஞ்சிரிப்புகொண்டு பாரா சவுக்கைதாண்டி இரண்டாமணியில் வருகிறபோது இராட்ச தாள் குசலராஜனைப்பார்த்து இவனுர் லவனுக்கு மூத்தவனைப் போற்காண்கின்றது இவனைப்பார்த்தால் லவனிலும் பராக் கிரமசாலியா யிருக்கின்றுன், இவனுக்கு நாம் பயப்படுவோ மாகில் இராமத்துரோகம் வந்து நாடும். அசாரிசமா யிருக் கப்போகாதென்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டு வில்லை யெடுத்து நிறுத்தி பாணங்களைப்பூட்டி குசலராஜன்பேரி லெ ய்கிறபோது அவ்விராஜனும் வருகிற அஸ்திரங்களை யெல் லாங் கோதண்டத்தினுல் தட்டி விட்டு தன்னுடைய பிர சண்ட கோதண்டத்தை பூமியில் நிறுத்தி நாணிபிகிந்த மாத் திரத்தி லண்டகடாகமும் படீலென்று வெடிக்க, பூமியானது தாழ, ஆதிசேடன் ரத்தங்களைக் கக்கிக்கொள்ள, அஷ்டகெ

ஜங்களும் வீறிட, அஷ்டகுல பர்வதங்களும் நடுங்க, அஷ்ட திக்குப் பாலகர் பயங்கொள்ள, அஷ்டவயிரவர்களுந் திடுக்கிட்டு பதுங்க, தேவர்கள் நடுங்கி மேலண்டத்திற்கு ஓடிப்போக, சத்தசமுத்திரமுங் கொதிப்பெடுத்து ஒருசுற்று நீர் வற்றிப்போக சந்திரசேகர சடாமண்டலதாரியா யிருக்கப்பட்ட பரமேஸ்வரனும் பார்வதியுங்கேட்டு குசலன் செய்யும் யுத்தத்தைப் பார்ப்போமென்று ரிஷபவாகனமேறவே தண்டிகேஸ்வரர் பிரிங்கி மார்க்கண்டேயர் குண்டோதரர் முதல் பூதப்படைகளும் புடைசூழ புறப்பட்டார். அப்படி பரமசிவன் புறப்படவே, விநாயகர் வீரபத்திரர் சுப்ரமணியர் பிரமதேவர் தேவேந்திரன் அவரவர்கள் வாகனங்களில் ஏறிக்கொண்டு தேவர்கள் புடைசூழ, தேவதுந்துமி முழங்க, தெய்வரம்பையர்கள் நடனம்புரிய, கைலாயம் பிரமலோகம் தெய்வலோகம் விட்டு ஆகாயத்தில்வந்து நிறைந்தார்கள். அந்தவில் குணத்தொனியுடைய சத்தமானது இராட்சதர்களும் கேட்டு திடுக்கிட்டுச் சொல்லுகிறார்கள். இவனுடைய வில்லின் திறத்தைப்பார்த்தால் நம்மையெல்லாம் இந்த வில்லுக்கிரை கொடுப்பான்போற் காண்கின்றது. இந்த வில்லின்முன் திரிமூர்த்திகளுடைய வில்லும் நிகரல்ல வென்பாரும், மேலும் இந்தவில் அனேக ரணங்கண்ட வில்போற் காண்கின்ற தென்பாரும், அப்பா இந்த வில்லோ ஸ்ரீராமர் கைபிரசண்ட கோதண்டம் போலிருக்கிறதென்பாரும், இது வில்லல்ல இராட்சதாளைக் கொல்லவந்த வல்லமைபொருந்திய நமன்போலிருக்கின்ற தென்பாரும், இவனைப்பார்த்தால் சிறுபிள்ளையா யிருக்கின்றான். இவன் பிடித்திருக்கப்பட்ட வில்லைப்பார்த்தால் அவனிலுமிரண்டு கொண்டதாயிருக்கிற தென்பாரும், இவனுடனெதிர்த்து யார்தான் போராடுவார்களென்பாரும், இந்தப்படியாய் நாணிபிகிந்த சப்தத்தில் சகலரும் மனங்கலங்க அந்தவேளையிற் குசலராஜனனவன் அனேக பாணங்களை வில்லிற்றொடுத்து சேனைகள்பேரில் விடுகிறபோது சேனைகளோவென்றால் சின்னபின்னமாய் கால்மாடு தலைமாடாக விழத்தலைப்பட்டார்கள்.

---

## குசலராசனுக்கும் சுவேலராஜனுக்கும் யுத்தம்.

---

### விருத்தம்.

யானனம்போற்கென்றதிருக் குசலவேந்த னங்குள்ளசுவேலனேயு மவன் றன்னைச் சூழ்ந்த, யானைபரிதளங்களைசொற்கரிக்கூட்டம்போற் ருவியொரு கணப்போதி லொழிப்பேனென்று, வானவருமண்ணவரு நடுக்கஞணில் வல முழக்கைகாட்டியிடி முழக்கம்போலச், சோணமழை பெய்வதுபோற் சிலகூட்டத்தைச் சொரிகதிட்டாரிருவரும்போர் புரிந்திட்டாரே.

அதனால் சுவேலராஜன் கோபமாகி, இரதத்தை குசலராஜன் முன்பாக நடத்திச் சொல்லுகிருன். அப்பா சிறுபிள்ளாய், எங்கள் சேனை உன்னையென்ன செய்தது நீயார், உன் தாய் தந்தை பேர்யாது, சொல்லடாவென்று கேட்டான். அதுகேட்டு குசல ராசன் சொல்லுகிருன். அடா! இராஜனே? நீயோ? என் தாய் தந்தை நாமதேயங் கேட்கிறவன், படுகளத்திலொப்பாரியாடவந்தாயோ, அடா நில்லு நில்லு, சில்லு சில்லாய் கொய்கிறேனென்று, வில்லிலிரண்டு திவ்வியாஸ்திரங்களை தொடுத்து விடுத்தான். அந்த திவ்வியாஸ்திரங்களும்விடுபட்டு தங்கக்கட்டுகளுடன் பிண்டபட்சி யிறகு பூண்ட காலகோட்டி விஷம்போல ஒன்றுபதினுயிரம் லட்சங் கோடியாய் அவதரித்து சீறிக்கொண்டு வருகிறபோது, சுவேலராஜனுங்கண்டு அதிசீக்கிரமாய் ஒன்றின்மேலொன்ருய் அனேக திவ்வியாஸ்திரங்களை வில்லிற்சந்தித்து வருகிறதிவ்வியாஸ்திரத்தின் பேரில் விட்டு விட்டான். அந்த திவ்வியாஸ்திரங்களும் விடுபட்டு நாகசற்பம்போல் ஒன்ருடொன்றுராய்ந்துக்கொண்டு அதிவேகத்துடன் குசலராசன் விடுத்த அஸ்திரங்களின்பேரிற் சடாலென்று மோதி குசலராசன் விட்ட திவ்வியாஸ்திரம் அறுபடாமல் சுவேலராஜன்விட்ட திவ்வியாஸ்திரமெல்லாம் அறுபட்டு பூமியில் விழுந்துப்போயிற்று. அப்போது குசலனுடைய திவ்வியாஸ்திரமானது திரும்பவும் அம்புருவில் வந்தடைந்தது அதனால் சுவேலராசன் கோபமாகி பற்களை நெறநெறவென்று கடித்து ௧௦-நாராசபாணங்களை வில்லிற் ருெடுத்துக்கொண்டு குசலனைப் பார்த்துச் சொல்லுகின்ருன்.

அடா! குசலனே? கேளாய், என்தமயன் அரண்யமகாராஜனையும் சுரதமகாராஜனையும் உன் தம்பி லவன் கொன்றபடியால் அப்பழிக்கு உன்னைக்கொன்றுபழிதீர்த்துக்கொள்ளு

கிறேன் என்றதைக்கேட்ட குசலன் சுவேலராஜனைப் பார்த்துச் சொல்லுகிறான். கேளும், இராஜனே? என்தம்பி உன் தமயன்மாரைக்கொன்றபழியை என்னைக் கொன்றல்லவோ பழிதீர்க்கிறேனென்று புகன்றாய், ஆனபடியால் என் தம்பி பங்குக்கு உன் தமயன்மா ரிருவரைக்கொன்றான். அந்த வரிசை தப்பாமல் என்பங்குக்கு உன்னைக்கொல்லாமல் போவேனேயாகில் நான் பிடித்ததுகோதண்டமுமல்ல, என் பேர் குசலனுமல்லவென்று சொல்லவே, சுவேல ராசனுக்குக் கோபமூண்டு கண்களிரண்டும் புகைகளெழும்ப, மீசைகள் படபடவென்று துடிக்க குசலராஜனுடைய வில்லை உருட்டிப் பார்த்து ௧0-நாராசங்களை வில்லிற்றொடுத்து விட்டான். அந்த நாராசங்களும் வில்லிலிருந்து நாகசர்ப்பம்போற் சீறிக் கொண்டுவந்து குசலனுடைய வில்லின்பேரிற் பட்டு கூர்மடங்கி பூமியில் விழுந்துவிட்டது. அதுகண்டு குசலனனவன் நகைத்துச் சொல்லுகிறான்.

அடா! சுவேலராஜனே? சொற்பபலத்தின் கருவங்கொண்டோ என்னை ஜெயிக்கப்போகிறாப் போபோ, உன்னைப்போலொத்த ள-சுவேலன்வந்தாலும் ஒரேபாணத்தினால் எமலோகங் குடியேற்றிவைப்பேன். உன்னால் என்னை ஜெயிக்கவல்லமையிருந்ததேயானால் எடுபாணங்களைப் பார்ப்போமென்றான். அப்போதுசுவேலராஜன் கோபமாகி கண்ணிமை கொட்டுமுன்னமே மாரிபோல சரமாரியாய் அநேக பாணங்களைவாரி குசலன்பேரில் சொரிந்ததைப்பார்த்து குசலனும் அநேக பாணங்களை வில்லிற்றொடுத்து சுவேலராஜன்விட்ட பாணங்களையெல்லாமறுத்துப்போட்டு மறுபடியும் ௱-திவ்வியாஸ்திரங்களை வில்லிற்சந்தித்து இராட்சதாள் பேரில் விட்டான். அந்தப் பாணங்க ளானது க-டு-௱-௲-அநேக கோடி பாணங்களாய் இராட்சதாளையும் இராஜாக்களையுங் கொல்லும்போது, சேனைகளானது எப்படி விழுகிறதென்றால் யானைக்கிரண்டு பாணம் மாவுத்தனுக் கொருபாணம் இராஜனுக் கிரண்டு பாணம் தேருக்கொருபாணம் குதிரைக்குநான்குபாணம் காலாள் ஒன்றுக் கொருபாணம் இந்தப்படியாய் காலறுந்தும் கையறுந்தும் தலையறுந்தும் மார்புபிளந்து அச்சுமுறிந்தும் ஆணிகழன்றும் குத்துக்காலொடிந்தும் குடைகளறுந்தும் யானை சேனை பரிவாரங்கள் வெகுவாகமாண்டு உதிரவெள்ளமானது ஓடத்தலைப்பட்டது. அதுகண்டு இராட்சதாளுடைய

தண்டிற் கோவென்றசத்தமுண்டாயிற்று அச்சத்தம் சத்துருக்கமகாராஜர்கேட்டு அருகாமையிலிருந்த சோமகாச மகாராஜனைப் பார்த்துச் சொல்லுகிறார். கேளும், சோமகாசமகாராஜனே? இதென்ன இப்படி விற்குணிசத்தமும் இராட்சதாளுடைய இரைச்சலும் கேழ்க்கின்றது இப்போது நம்முடையதண்டில்வந்து யுத்தம்பண்ணுகிறவன்யாவன் சொல்லென்றார். அதற்கு சோமகாசமகாராசன் யோசனை செய்துக்கொண்டிருக்கையில் இரண்டு தூதுவர்கள்வந்து சத்துருக்கனைவணங்கி ஐயா! சத்துருக்கமகாராசரே? கேளும், நம்முடையதண்டில் யாரோ ஒரு சிறுபிள்ளைவந்து யுத்தஞ்செய்கிறான், அவனைப்பார்த்தால் லவனுக்குமூத்தவனைப்போற்காண்கின்றது இவனைப்பாத்தா லவனையும்பார்க்கவேண்டியதில்லை அவன்கையிற்பற்றிய வில்லைப்பார்த்தால் கெற்பங்கலங்குகின்றது அப்படிக்கொற்றபலமானவில் நமதுதண்டிலில்லையென்றார்கள். அதுகேட்டுச் சத்துருக்கமகாராஜன் காலசித்தனையழைத்துச் சொல்லுகிறார்.

வாராய், காலசித்தனே? நம்முடைய தண்டுபாளையங்களைப் பவுஞ்சிட்டு நிறுத்திவையுமென்றார். அந்தட்சணங்காலசித்தன் இராசாக்களுடைற கால்பலங்களை முன்னணியில் நிறுத்தி யதற்குப்பின்னணியில் இராட்சதாளை நிறுத்தி சத்துருக்கமகாராஜனையும் நடுவணியில் நிறுத்தி சந்தனமகாராசன் சவுந்தரராசனையும் அதற்கு முன்னணில் நிறுத்தி பவர்னன் கதாயுதன் மட்சயந் தனுமானையும் அதற்கு முன்னணியில் நிறுத்தி சலவசந்தனும் தானுமாக படைகளுக்கு முன்னின்றுபேரிகையறைவித்தார்கள் அப்போதுசுவேலராசனும் சில இராட்சதாளும் குசலராசன்பேரில்முனைந்து அஸ்திரங்களை மிதமில்லாமற் வில்லிற் சந்தித்துப் பிரயோகம் பண்ணிவிட்டார்கள், அந்த அஸ்திரங்களும் நாகசற்பம்போற் சீறிக்கொண்டு வருகிறபோது குசலராசனும் பாணங்களைவிட்டுவருகிற அஸ்திரங்களையெல்லா மறுத்துத்தள்ளிவிட்டான். அதனுல் சுவேலராசன் மகாகோபதீப்தனுய் எறிந்துவிழுந்து நார்ராச பாணங்களெடுத்து வில்லிற் சந்தித்துப் பிரயோகம் பண்ணிவிட்டான். அந்தநாராசபாணங்களும் வில்லைவிட்டு விடுபட்டு நாகசற்பம்போற்சீறிக்கொண்டு வருகிறதைக்கண்டு குசலராசனும் தட்சணம் ௧-நாராசபாணங்களைப்பிடுங்கி வில்லிற்சப்தித்துவிட்டு அந்த நூறுநாராச பாணங்களையுமறுத்து அதன

மாக உ-திவ்வியாஸ்திரங்களை விட்டு இரதஞ்சாரதி குதிரைக ளுடன் தும்சம்பண்ணிப்போட்டான்.

அதுகண்டு சுவேலராசன் லகுவிற் றப்பித்துக்கொண்டு மறுதேரிலேறி வில்லை எடுக்குமுன்னே குசலராசன் பின்னு மிரண்டு திவ்வியாஸ்திரம்விட்டு அந்தரதத்தையு முடைத்தெ றிந்துபோட்டான். இந்தப்படியாய் கரு-ரதம் உடைந்துபோ கவே, சுவேலராசன் அதிசீக்கிரத்தில் வேறொரு ரதமேறி வில்லை எடுத்துநாணிபிகிந்து ஒரு அக்கினியாஸ்திரத்தைத் தொடுத்து மந்திராபூதிகொடுத்துவிடுத்தான். அந்த அக்கினி யாஸ்திரமானது வில்லில்விடுபட்டு கொழுந்துவிட்டெறிந்து நெருப்புப்பொறிகளைவாரியிறைத்துக்கொண்டு ஆலகாலவிஷ ம்போற்சீறி வருகிறதை குசலராஜன்கண்டு அதிசீக்கிரத்தில் ஒரு அக்கினியாஸ்திரமெடுத்து மந்திராபூதிகொடுத்து வில் லிற்றொடுத்து கடுகடுத்துவிட்டான். அந்த அக்கினி யாஸ்திர மும் வெளிப்பட்டு சண்டமாருதம் வீசினதுபோல வடவாமு காக்கினியை வாரியிறைத்துக் கொண்டு சடசடவென்கிறதொ னியுடனும் அதிவேகத்துடனும் வந்து அந்த அக்கினியா ஸ்திரத்தை அடித்து கமளீகரஞ் செய்துப் போய்விட்டது.

தன்னுடைய அக்கினியாஸ்திரம் விருதாவிற் போன தைக்கண்ட சுவேலமகாராசன் கோபாவேசனாகி பற்களை நெ றநெறவென்றுகடித்து ஒருசத்தியை யெடுத்து பூசை நை வேத்தியத்துடன் வில்லிற்சந்தித்து விட்டானந்த சத்தியா னது அண்டபகிரண்டங் குலுங்க குசலனெங்கே எங்கே யென்று ஆரவாரஞ்செய்து சேரவரும்போது குசலராசன் கண்டு தானுமொருசத்தியை எடுத்து மந்திராபூதிகொடுத்து மில்லிற் றொடுத்துவிட்டான்.

அந்த சத்தியானது விடுபட்டு கபகபவென்றெரிந்து பர் வதங்களும் படீரென்று வெடிக்க ஆதிசேஷன் புயமடிக்கச் சத்ராதிகள் கிலிபிடிக்க குசலன்வெற்றியை சகலரும்படிக்க ஆவென்று வாயைத் திறந்துக்கொண்டு அதிவேகத்துடன் வந்து சுவேலராசன் விட்டசத்தியை கமளீகரம்பண்ணிப் போட்டு அம்புறாவில் வந்தடைந்தது அதுகண்டு சுவேல ராசன் ஆக்ரம நிக்ரோதனாகி பல்லை படபடவென்று கடி த்து ஒரு நாராயணாஸ்திரத்தை யெடுத்து பூசைசெய்து சோ டச வுபசாரத்துடன் வில்லிற் சந்தித்து விட்டான். அந்த நாராயணாஸ்திரமானது வெளிப்பட்டு சகல புவனங்களும்

நடுங்கும்படி வடவா முகாக்கினியை வாரி யிறைத்துக்கொண்டு உலகமுழுகிப் போகிறதுபோல வருகிறதைக்கண்ட குசலராசன் அதிசீக்கிரமாய் தன்னுடைய நாராயணாஸ்திரத்தையெடுத்து பூசைசெய்துவிட்டான். அந்த நாராயணாஸ்திரமானது வெளிப்பட்டு எப்படி வருகுதென்றால் முன்னம் லவனாலிறந்தவர்களை சத்துருக்கமகாராஜ ரெழுப்பினா ரென்று கேள்விப்பட்டு மறுபடியுமவர்களையுங் கொல்லுகிறேனென்று சத்த சாகரங்கள்வாட, அதிகுரூரமாகிய வடவாமுகாக்கினியை வாரி யிறைத்துக்கொண்டு வந்து சுவேலராசன் விட்ட நாராயணாஸ்திரத்துடனே நாடிபோராடி வாதாடி கமளீகரம் பண்ணிவிட்டு அம்புராவில் வந்தடைந்தது. அதனாற்சுவேலராசன் பின்னும் ௧௦-நாராசபாணங்களை எடுத்து குசலராசனுடைய வில்லைப் பார்த்து விட்டான். அந்த ௧௦-நாராசங்களும் நாகசற்பம்போற் சீறிக்கொண்டுவந்து குசலராசன் வில்லின்பேரிற் சடாலென்று வந்துபாய்ந்து ௧௦-நாராசபாணங்களும் கூர்மடங்கி பூமியில்வீழ்ந்தது. அதை சுவேலராசன் கண்டு கோபங்கொண்டு வில்லை முகத்துக்கு நேராய்ப் பிடித்து கண்ணிமையோடு கண்ணிமைதட்டுமுன்னமே அநேகபாணங்களை வில்லிற் றொடுத்துவிட்டான். அதுகண்டு குசலராஜன் சில பாணங்களை விடுத்துத் தன்மீது வருகிற பாணங்களை யறுத்துத் தள்ளியபின்னும் அதனமாக ௬-பாணங்களை விட்டு சுவேலமகாராஜனேரிவந்த சாரதிகளைக்கொன்று ஒரு அர்த்தசந்திரபாணம் விட்டு சுவேலராஜனும் ஸ்ரீமந்நாராயணா ஸ்ரீமந்நாராயணாவென்ற சத்தத்துடன் பொன்னுலகம்போய்ச் சேரச் செய்தான். அந்தப்படியே சுவேலராஜனுமடைந்தான்.

அப்போது குசலராஜன் சந்தோஷமாகி வில்லை நிறுத்தி வில்லிலநேகபாணங்களைச் சந்தித்து கால்பலமான இராக்ஷதாள் பேரி லெய்கிறபோது இராக்ஷதாளும் இராஜக்களுமுனைந்து அஸ்திரங்களைவிடவே அவைகளெல்லாங் குசலராஜன்பாணத்தின்மீதுபோய்த்தாக்கி குசலராஜன் பாணத்தாலறுபட்டுப்போயிற்று. அந்தமட்டில்குசலராசன்பாணத்தின்வேகமடங்காமல்மறுபடியும்இராட்சதாள்பேரில் ஓங்கி உயர்ந்துஉயிரை வாங்குகிறேனென்று வந்துவிழுகிறபோதுஇராட்சதாள் தலைசாய்ந்த வரும், சிரமற்றவருங் கரமற்றவரும், உறமுறிபட்டவரும், கால் போனவரும், கண்டதுண்டமானவரும்,

சலிப்பாரும், ஒளிப்பாரும், முழிப்பாரும் வழி பார்ப்பவருமாகி, கூச்சலிட்டு ஓடுகையிற் சலவசந்தன் இரதத்தை நடத்திஓடுகிற இராட்சதாளை ஓடவேண்டாமென்று மடக்குங்காலையில் இராட்சதாள் சலவசந்தனுக்குச் சொல்லுகிருர்கள் ஓ! ஓ! சலவசந்தனே? கேளும், நாங்கள் பட்ட அவதி எங்களுக்குத் தெரியும். இராமன் அஸ்வமேதயாகம் செய்தால் யாருக்குநயம், இந்தகுசலன் அந்தயாகத்தையழித்தால் யாருக்கு நஷ்டம், இப்படிப்பட்டசேவகம் எங்களுக்கு வேண்டாம் குசலன்பேரை நினைக்கும்போதேகுண்டியுங் குடலும் நடுங்குகின்றது நாங்கள்பட்ட அவஸ்தை நீ நின்றுபட்டால் தெரியும், சுவேலராசனும் மாண்டான். ஆகையால் சும்மாயிருப்பதுவே சுகமென்ன அவர்களை சலவசந்தன் பார்த்துச்சொல்லுகிருன். அடா! இராட்சதாளே இந்த மானிடனைப்போல் நீங்களுஞ் சொல்லுகிறது நல்லதோ நாம் கையில் வைத்துக் கசக்கி நசுக்கி பொசுக்கிற சிறுபையனுக்கா குய்யோ முறையோ வென்று கூவி என்கையிலிருக்கும் வில்லையும் பாராமல் என் சவுரியமுங் கண்டுருமல் நமக்கையனுகிய வையகமளந்த ஸ்ரீராமன் உப்பைத்தின்று இப்போது எதிரிகள்கையில் இராமனைக் காட்டிக்கொடுத்து நாம் கடக்கப்போய் னின்ருல் இராமத்துரோகம் வந்து சிந்திக்காதோ சாவுக்குப்பயந்தால் தீருமா, சாகாவரம் பெற்ற யார்தானிருக்கிருர்கள். ஒருவரையுங் காணேம் நாமிறந்தால் ஸ்ரீராமர் நம்மைஎழுப்பிவிடுவார் நமக்கென்னபயம் வாருங்களென்றவர்களை திருப்பிக்கொண்டு குசலன் முன்னுக்கு இரதத்தை நடத்தி வில்லையெடுத்து குணத்தொனிசெய்து ௧௦-திவ்வியாஸ்திரங்களை வில்லிற் ருெடுத்து சொல்லுகிருன்.

குசலராஜனுக்கும் சலவசந்தனுக்கும் யுத்தம்.

---

விருத்தம்.

*திண்ணமுறுஞ் சுவேலந்தனைத் தென்றிசையிற் சேர்த்தசெய்தி சலவசந்தனுக்கு செப்பக்கேட்டு, அண்ணலனு மிராமச்சந்திரன் செய்வேழ்விக் கந்தகராய்வந்திடு மிச்சிறுவரரோ, எண்ணியவன்றனை கேட்போமென்றேயுன்னிரதந்தூண்டிக்குசலனைக்கண் டடாதம்பி நண்ணிமுடி மன்னர்களைக் கொன்றநீங்க ளெவ்வுலகமாந்தரதை யிசையென்ருனே.*

அடா! தம்பி உன்னைப்பார்த்தால் சிறுபிள்ளையாயிருக்கிறது உன்னுடன் சண்டைசெய்ய மனமான திசையவில்லை

ஆனபடியினால் உன் தாய்தகப்பன்பேரும் உன்பேருஞ் சொல்லென்றான். அதுகேட்டு குசலராசன் அடா போபோ காட்டுமிருகமான உங்களுக்கெல்லாம் நான் தாய்தந்தைபேர் சொல்லுகிறதோ நீ என்ன பூதமோ பிசாசோ அல்லவென்று அரசனே காட்டுமிருகங்களுக்கு மனிதபாஷை தெரியுமோ சொல்லடாவென்று மண்டிபோட்டு வில்லில் ௧0-திவ்வியாஸ்திரங்களை யெடுத்து சந்தித்ததைக்கண்டு சலவசந்தன் சொல்லுகிறான்.

அடாசிறுபிள்ளாய் நல்லவசனம் பகர்ந்தாய்என்னைபார்த்தால் உன்கண்ணிற்கு காட்டுமிருகம்போலும் பூதபிசாசுபோலுங் காண்கின்றதோ அப்படியல்ல நான் இராட்சதர்களுக்கெல்லாம் இராசாவாயிருக்கப்பட்டவன் என்பேர் சலவசந்தனென்று சொல்லுவார்கள் நீ முன்பின் எண்ணாமல் இப்படி என்னை காட்டுமிருகமென்று சொல்லலாமோ இன்னம் அநேகவெள்ளம் இராட்சதாள் அயோத்தியில் வாசமாயிருக்கின்றார் நாங்கள்மாத்திரந்தானென் றெண்ணவேண்டாமென்றான். அதுகேட்டு குசலராசன் கூறுகிறான். அடா! சலவசந்தனே? நான்காட்டுமிருகமல்ல, இராட்சதருக்கெல்லாம் இராஜனென்றுபகர்ந்தாயே, உன்னுடையதேசமெங்கே, நீயேன்எங்கள் வனத்திற்குவந்து என்தம்பியுடன் போர்புரிந்து என் தம்பியைபிடித்து கட்டிக்கொண்டுபோகவந்த காரியமியாதுசொல்லென்று கேட்க சலவசந்தன் கூறுகின்றான்.

அடா! தம்பி சிறுபிள்ளாய் கேளும், ஆயிரத்தெட்டண்டமும் ௨௨௪-புவனமுஞ் சத்தசாகரஞ்சூழ்ந்த ஈரேழுபதினாலு உலகத்தையும் ஏகசக்ரமாயாண்டுக் கொண்டிருந்த எங்கள் பெரியதகப்பனாராகிய ராவணன் கும்பகர்ணன் விபீஷணனென் றவர்கள் குமாரர் இந்திரசித்து, அதிகாயன், அக்ஷயகுமாரன், கும்பநிகும்பன், பவர்ணன் என்று சொல்லப்பட்ட லட்சங் குமாரர்களுடனும் துரைத்தனம் பண்ணிக்கொண்டிருக்கையில் எங்கள் பங்காளியாகிய சதகண்டராவணனுக்கு சக்கரபுரியென்றொரு பட்டணமுண்டுபண்ணி ஐயாயிர வெள்ள மிராட்சதாள் அவரைப் பணியும்படியாய் முடியுஞ் சூட்டிவைத்து என்தகப்பன் சகஸ்திரகண்ட ராவணனுக்கு ரத்னபுரமென்றொரு பட்டணமுண்டுபண்ணி ஐயாயிர வெள்ளமிராட்சதாள் என்தகப்பனை வணங்கி இணங்க மகுடஞ்சூட்டி தேவர்களேவல்செய்ய, ரிஷிகள் மச்சங்கள் பிடித்து

வந்துதருக, வருணன் சாணந்தெளிக்க, வாய்வு முத்தம் பெருக்க, சூரியன் லங்கைபுரத்தில் ரதம்ஓட, சந்திரன் பூமியி லிறங்கி பிள்ளைகளுடன் விளையாட, பிரமன் பஞ்சாங்கஞ் சொல்ல, விஷ்ணுமனைவரி செலவுநடத்த, ஈஸ்வரர் வரங் கொடுக்க, இயமன் இராட்சதாளைக்கண்டால் கையெடுத்துக் கும்பிட, தெய்வலோகத்தை யாளப்பட்ட தேவராசனாகிய தே வேந்திரனைப்பிடித்து எத்தனைதரமோ விலங்கிட்டு தெய்வ லோகம் பிரமலோகம் வைகுந்தம் கைலாசத்திலும் இராவண னுடைய வீணைக்கொடிபறக்க இந்தப்படி சகல சராசரமும் இராவணேஸ்வரனுடைய அதிகாரமுந் துரைத்தனமுமா யிருக்கும் இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாய்வு, குபேரன், ஈசானியன் இப்படி சொல்லப்பட்ட அஷ் டதிக்குப்பாலகரும் தினந்தோறும் ஏவல் கேழ்க்க, அஷ்ட கெஜங்களும் வந்துவணங்க, ஆதிசேஷன் பாரந்தாங்க, இப் படி ஒருவரும் நிகரில்லாமல் துரைத்தனம் பண்ணிவருகிற நாளில் அயோத்தியை யாளப்பட்ட தசரதமகாராஜனுக்கு புத்திரனில்லாமல் புத்திரகாமேஷ்டியாகம் பண்ணும்போது அந்தயாகத்தில் ஒருதிவ்யபுருடன் பாய சங்கையிலேந்திக் கொண்டுவந்து கொடுக்க, அந்தபாயசத்தை தசரதர் மூன்று தேவிகளுக்கும் விருந்துகொடுக்கக் கோசலைவயிற்றில் ஸ்ரீராம ரும், கைகேசியின் வயிற்றில் பரதரும் சுமித்திரை வயிற்றில் இலட்சுமணருஞ் சத்துருக்கரும் பிறந்தார்கள். இந்நால் வரும் யாவரென்றால், ஸ்ரீமந்நாராயணர் ஸ்ரீராமனாகவும், அவர்சக்கரமே பரதாழ்வார், அவர்சங்கே சத்துருக்கர், ஆதி சேஷனே இலட்சுமணப் பெருமாளென்று கண்டுகொள்க.

இப்படியாக தசரதமகாராசன் வயிற்றில்வந் தவதரித்து விஸ்வாமித்திரர் யாகத்தையழித்த தாடகையைச் சம்மாரஞ் செய்து அகலிகைக்கு மோட்சமளித்து ஜனகராசன் வைத்தி ருந்த வில்லைவளைத்து ஜானகியம்மனை மணம்புரிந்து பரசு ராமனை பங்கப்படுத்தி அயோத்திக்குவந்து தாய்மொழி தவ ராமல் பதினான்குவருஷம் வனவாசஞ்செய்யவேண்டி சீதா லட்சுமண சமேதராய் ஸ்ரீராமர் பஞ்சவடி தீர்த்தத்தில் வந் திறங்கி யிறக்கும்போது இராவணன் சீதையம்மனைப் பர்ணக சாலையோடு ஸ்ரீராமர் இலட்சுமணர் இல்லாதவேளையில் பேர் த்து இரதத்தில் வைத்துக்கொண்டு இலங்கைக்குச் சென்று அசோகவனத்திற் சீதையம்மனைவைத்து சில இராட்சதப்

பெண்களையுங் காவலாக நியமித்தான் அதின் பிற்பாடு இராம லட்சுமணர் சீதையம்மனைத் தேடிக்கொண்டு வரும்போது அநுமாரைக்கண்டு சினேகஞ்செய்து வாலியைக்கொன்று சுக்ரீவனுக்குப் பட்டங்கட்டி தேவாம்சமாக அவதரித்த எ௨-வெள்ளம் வானரரானை படைத்துணையாகக் கூட்டி அலைகடலடைத்து லங்கையை யடுத்து இராவணன், கும்பகர்ணன், இந்திரசித்தன், அதிகாயன், அட்சயகுமாரன், கும்பனிகும்பன் முதலான இரண்டாயிரம் வெள்ளம் இராட்சதாளைமாய்த்து சீதையம்மனை சிறைமீட்டு விபீஷணருக்குப் பட்டங்கட்டி அயோத்தியில்வந்து பட்டாபிஷேகராய் ஆண்டுக்கொண்டிருக்கிற நாளையில் எங்கள் பெரியதகப்பனுர் இறந்தசேதி நாங்களும் எங்கள் பங்காளி சதகண்ட ராவணனுங்கேட்டு எங்கள் சேனைகளுடன்வந்து ஸ்ரீராமர் பேரில் எதிர்த்து யுத்தஞ்செய்து இராமபாணத்திஞல் மாண்டுபோனுர்கள். அதன் பிற்பாடு சதகண்டராவணன் தம்பியாகிய மகாமாயனுக்கும், சரபுரியை பட்டங்கட்டி இரத்னபுரத்தை எனக்குப்பட்டங்கட்டி தங்கள் இராச்சியஞ்சென்று யிருக்கிறநாளில் இராட்சதாளைக்கொன்ற பாவந்தொலைய அஸ்வமேதயாகம் பண்ணும்படியாய் எங்களுடைய இரதகஜ துரகபதாதிகளையும் எங்களையும் அழைப்பிக்க, நாங்களும் அயோத்தியில்வந்து அஸ்வமேதக் குதிரையையும் ௫0-வெள்ளம் இராட்சதாளையும் ௲௪ - அக்ரோணி சேனைகளையுங் கூட்டி ௫௬-தேசத்து இராசாக்களையும் பின்பலமாகச்சேர்த்து மகாமாயனையும் என்னையும் தளகர்த்தராக நேமித்து எங்களுக்குஞ் சேனைகளுக்கும் இராசாவாக சத்துருக்க மகாராசனைக்கூட்டி யனுப்பி வைத்தார்.

அவ்வாறே பிரதட்சணம் வரும்போது மூன்று இராசாக்கள் வந்தெதிர்த்து யுத்தஞ்செய்து அவர்களாற் செயிக்கமுடியாமல் சத்துருக்கமகாராசனைவணங்க அவர்களுடைய சேனைகளோடுந் தண்டிற்கூட்டிக்கொண்டு குதிரையுடன் வருகிற குதிரையானது ஒருவர் கையிலகப்படாமல் இந்தவனமே வந்து விட்டது நாங்கள் விட்டகுதிரையை ஆரோ ஒருசிறுபிள்ளைலவனென்னப்பட்டவன் பிடித்துக்கட்டி எங்கள்சேனைகளை யெல்லாம்அதம்பண்ணிப்போட்டான். இந்தசெய்தியை சத்துருக்க மகாராசனறிந்து லவனுடன் யுத்தம்புரிந்து அவனைக்கைப்பிடியாகப் பிடித்துக்கட்டி அஸ்வமேதக் குதிரையை

யும் விடுவித்துக்கொண்டு அயோத்திக்குப் போகவேணுமெ ன்று பயணமாயிருக்கையில் நீயாரோ சிறுபிள்ளை இவ்விடத் தில்வந்து யுத்தம்பண்ணுகிறாய் உன்னையுங் கட்டுகட்டென்று தாடையிற்றட்டி நெட்டிக்கொண்டு போகா முன்னம் உன்னு டைய தாய் தந்தைபேரையும் உன்பேரையுஞ் சொல்லவேணு மென்று கேட்டான். அப்படிசொன்ன சலவசந்தனுடைய வார்த்தைக்கு குசலன் சற்றுகவனித்து தன்மனதிலெண்ணிக் கொள்ளுகிறான். இந்தராட்சதன் நம்முடைய தாயார் பேரை யுஞ்சொல்லி மற்றசங்கதிகளையுஞ் சொன்னான். அப்படியிருந் தால் இந்த விஸ்தாரத்தை அன்னை நமக்குச் சொல்லியி ராளோ, நல்லது நம்முடைய ஐயர் வால்மீகராகிலுஞ் சொல் லாரோ, அன்றியும் நமது தாயார் ரிஷிபத்தினியாயிற்றே நம் முடைய தாயார் பேரைப்போல் உலகிலெத்தனைப்பேரோ, நம்மைப்போல்ரூபம்படைத்தபேர் எத்தனைப்பேரோ, நாமிது வெல்லாங் கேழ்க்கவேண்டிய காரியமென்ன நாம் தாயார் சொற்றவராமல் வந்தெதிர்த்தவரில் யாவரையுஞ் சம்மாரஞ் செய்து தம்பியாகிய லவனை விடுவிக்கவேணுமே யல்லாம லிந்த கட்டுக்கதையான வார்த்தையை நாம் கேழ்க்கவேண் டியதில்லை என்றுமனதிலெண்ணினான். அதேனென்றால் வால்மீகர்சொல்லிய ஸ்ரீராமர் என்கிற கீர்வாண சுலோகத் திற்கு அர்த்தந்தெரியாதவனானபடியினாலும் சிறுபிள்ளையான தினாலும் சலவசந்தன் சொல்லிய வசனத்தை கவனித்துப் பாராமல் சலவசந்தனைப்பார்த்துச் சொல்லுகிறான்.

அடா! சலவசந்தனே? புளுகினாலும் பெரும் புளுகைப் புளுகுகிறாய் ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீராமனாக தசரதர் வயிற் றிற்பிறக்கிறதென்ன. ஆதிசேஷன் இலட்சுமணராகவும் சங்கு சக்கரமாவது பரதர் சத்துருக்கராகவும், தசரதர் வயிற்றிற்பிற க்கிறதென்ன, இதுகளெல்லாம் உயிர்க்குப்பயந்தல்லவோ கட் டுக்கதைசொல்லி தப்பித்துக்கொள்ள நினைத்தாய் நீ உயிரு டன் தப்பிப்போக வெண்ணினாலும் விடுவேனென்று பாரா தே, நின்றுயுத்தம்பண்ணடா பார்ப்போ மென்றான். அது கேட்டு சலவசந்தன் கோபமாகி அடா? சிறுபிள்ளாய் நான் உயிருக்குப்பயந்து உனக்குப்பிரியவசனஞ் சொல்லவந்தே னென்று பாராதே, நீசிறுபிள்ளையானபடியினாலும் நான் தருமநீதியாகச் சொன்னேன் நீகேளாவிட்டால் எனக்கு இராமத்துரோகமில்லை இனி உன் தாய் தந்தை பேரைச்

சொன்னாலுஞ் சரி என்மேற் குற்றமில்லை இனி உன்னாலான
யுத்தத்தைச் செய்யென்றான்.

அப்படி சொன்ன சலவசந்தனுடைய வார்த்தையை
குசலராசன் கேட்டு யோசனை பண்ணி தாயார்சொல் தவரா
மல் செய்கிறதே காரியமென்று மனதிலெண்ணினவனாக வில்
லில் ௧0-திவ்வியாஸ்திரங்களெடுத்து சந்தித்து சலவசந்தன்
பேரிற் பிரயோகம்பண்ணினான். அந்த ௧0-திவ்வியாஸ்திரங்
களும் வில்லில் விடுபட்டுத் தகத்தகாயமாக தங்கக்கட்டுகளு
டன் பிண்டபட்சி பிறகு பூண்ட பாணமானது ஒன்றோடொ
ன்றுராய்ந்து நெருப்புப்பொறிகள் பறக்க அதிவேகமாக வரு
கிறபோது, சலவசந்தன் கண்டு பாலன் பாணமிஞ்சினானெ
ன்று ௫0-திவ்வியாஸ்திரங்களெடுத்து வில்லிற் சந்தித்து பிர
யோகப்படுத்தி குசலன்விட்ட ௧0-திவ்வியாஸ்திரங்களையு
மறுக்க திவ்வியாஸ்திரம் அறுபடாமற் குசலனுடைய திவ்வி
யாஸ்திரத்தினாற் சலவசந்தனது திவ்வியாஸ்திரமறுபட்டு
பூமியில் விழுந்துபோயிற்று. அதுகண்டு சலவசந்தன்கோப
மாகி நூறு நாராசபாணம் எடுத்து வில்லிற் சந்தித்துப் பிர
யோகம் பண்ணினான். அந்த நாராசபாணங்களும் வில்லில்
விடுபட்டு நாகசற்பம்போற் சீறிக்கொண்டு அதிவேகமாய் வரு
கிறபோது குசலராஜன் கண்டு அந்த நூறுநாராச பாணங்
களையுமறுத்துத் தள்ளினான்.

அதுகண்டு சலவசந்தன் மகாகோபமாகி மீசைகள் பட
படவென்று துடிக்க, அதிக கோபாக்கினியுடன் வில்லில
னேக பாணங்களைச் சந்தித்து மாரிபொழிவதுபோற் சர
மாரியாய் இடிமின்னல் குமுறலுடன் ஓய்வில்லாமல் பா
ணங்களை குசலராஜன்பேரிற் பொழிகிறபோது குசலராஜன்
கண்டு அதிசுருக்கான பாணங்களை வில்லிற் சந்தித்துவிட்டு
சலவசந்தன் விட்ட கொடியபாணங்களை எல்லாம் அறுத்
துத்தள்ளி சலவசந்தனை சல்லடைக்கண்களாகத் துளைத்து
மிதமில்லாத அஸ்திரங்களை இராட்சதாள் பேரில் விடுகிற
போது இராட்சதாள் எப்படி விழுகிறார்களென்றால் கால்வே
று, கைவேறு, தலைவேறு, உடல்வேறு,எலும்புவேறு, இரை
ச்சிவேறு, வேறாகவீழ்ந்து மண்டைகளுடைந்து தும்பிக்கை
யறுந்தும் துடைமுறிந்தும் வாலறுந்தும் யானைகள் விழத்
தலைப்பட்டது இரதங்களோவென்றால் அச்சுமுறிந்து ஆணி
கழன்று மச்சு ஒடிந்து காடியறுந்து கொடைகள் முறிந்து

துவஜம்கிழிந்து பூமியில் விழத்தலைப்பட்டது குதிரைகளோ வென்றால் தலையறுந்தும் காலொடிந்தும்உடல்றுந்தும் தலைகள் பிளந்தும் உருளத்தலைப்பட்டது. இப்படி யானை தேர் பரிசேனைகளும் குசலராஜன் பாணங்களினால் மாண்டு உதிர வெள்ளம் பெருகியோடின அப்படி குசலராஜன் இராட்சதாள்பேரில் மூனைந்திருக்க இராட்சதாள் விடுகிற பாணமோ சுல்பமென் றெண்ணவேண்டாம் குசலனே எல்லாந்தேவ தாஸ்திரங்களே எடுத்துவிடுகிறான்.

இந்தப்படியாய் குசலராஜனுடைய அஸ்திரத்தினற் சலவசந்தனு மெத்த நொந்து இராட்சதாளுஞ் சின்னபின்னமாய் தலைவிரிகோலமாய் கெட்டு முறிந்தோடுகிறபோது காலசித்தன்கண்டு ஏதடா இராக்ஷதசிரேஷ்டரும் இராட்சதாளு முறிந்தோடுகிறார் தேவர்கள்கண்டால் நகைப்பார்களே, இது மெத்த ஏச்சல்லவோ, ஆயுசுள்ளவரைக்கும் பேச்சல்லவோ, இராஜாவோடினல் இராட்சதாள் ஓடுகிறது மகாபெரிதோவென்று தன்னுடைய சாரதியை யெச்சரித்து இரதத்தை நடத்தி ராட்சதாளைப்பார்த்துச் சொல்லுகிறான். அடா! இராட்சதர்களே? ஓடவேண்டாம் நில்லுங்கள் நில்லுங்கள், என்ன மூழுகிப்போச்சென் றோடுகிறீர்கள் உங்களுக்கு ரோஷபாஷந்தா னில்லையோ, ஒரு சிறுபிள்ளை குசலனுக்கு பயந்து இப்படி சின்னபின்னமாய் விழுந்து கெட்டு ஓடுகிறவர்களுமுண்டோ, ஓடினல் இராமத்துரோகம் விடுமோ, ஸ்ரீராமருடைய வுப்பை நன்றாய்ச் சாப்பிட்டு எதிரிகள் வந்தெதிர்த்துக்கொண்ட வேளையில் இந்த சரீரத்தை எதிரிகள் கையில் ஒப்புவியாமல் இப்படி புரமுதுகு காட்டி ஓடிவரலாமோ, அடா! இராட்சதர்களே? ஓடாதீர்கள் ஓடாதீர்கள் அந்தச் சிறுபிள்ளை குசலனை செயித்தாலுஞ்சரி, அல்லது குசலன்கையினல் நீங்கள் மாண்டாலுஞ்சரி, உங்களை எழுப்பிக்கொள்ளுவோம் இல்லையென்று ஓடிப்போவீர்களே யானல் என் வாளாயுதத்திற்கு உங்களை இரையாகப்போடுவே னென்றான். அப்படிசொன்ன காலசித்தன் வார்த்தைக்கு மறுவார்த்தை சொல்லாமல் மகாரோஷத்து வேஷங்களுடன் குசலன் பேரிற்றிரும்பி ஈட்டி எறியீட்டி சுரிகை வாங்கு வளைதடி சக்கரம் இருப்புலக்கை கண்டகோடாலி கத்தி தெண்டு சூலம் இப்படிசொல்லப்பட்ட ௰௨-ஆயுதங்களையு மெடுத்து குசலராஜன்பேரில் றிவ்றிவ்வென்று பிரயோகஞ் செய்துவிட்டார்கள். அதுகள் வேகத்து

டன் வருவதை குசலராஜன் பார்த்து அனேக பாணங்களை விட்டு ராக்கதர்கள் விடுகிற ஆயுதங்களை யெல்லாங்கண்டித்து அவர்களுடைய சிரங்களையு மறுத்துப் போட்டான். அது கண்டு சலவசந்தன் அதிக உக்ராகாரத்துடன் குசலன் முன்னுக்கு இரதத்தை திருப்பிக்கொண்டு அனேக பாணங்களை வாரி ஓய்வில்லாமல் ஐப்பசி கார்த்திகை மாதத்தில் பெய்யும் மூடுபனிபோற் பொழிந்து விட்டான்.

அதுகண்டு குசலராஜனும் அநேக பாணங்களை வில்லிற் சந்தித்து வருகிற பாணங்களையெல்லா மறுத்துப் மலைபோலிருபக்கமுங்கொண்டு சீக்கிரமாக கரு-சிங்கமுகாஸ்திர மெடுத்துவில்லிற்சந்தித்து குசலராஜன்மீதில்விட்டான் அதுகண்டு குசலன் க0-அர்த்தசந்திராஸ்திரம்விட் டறுத்துபோட்டான் அதுகண்டு சலவசந்தன் குசலராஜனைக்கட்டிசுழலில்விடவேண்டுமென்று சுழற்பாணத்தை எடுத்து வில்லிற்சந்தித்துவிடுத்தானதுபார்த்து குசலராஜன் ஒருசூருவளி எடுத்துபிரயோகம் பண்ணிவருகிற சுழற்பாணத்தைக் கண்டித்துவிட்டான். அதுபோகவே சலவசந்தன் உக்ராகாரனாக குசலன் முன்னுக்கு இரதத்தை நடத்திச் சொல்லுகிறான். அடா! சிறுபிள்ளாய் ஏன் தலைகீழாய் விழுகிறாய், உன் தாய்தந்தை பேரைச்சொன்னால் அதன் பின் தேவதாஸ்திரங்களை எடுத்து விட்டு யுத்தம் பண்ணுவோம் சொல்லென்று கேட்டான். அதற்கு குசலராஜன் சலவசந்தனுக்குச் சொல்லுகிறான். என் தாயார்பேர் ஜானகியம்மாள் எங்களையர்பேர் வால்மீகர் என்பேர் குசலராஜன் என் தம்பிபேர் லவன் இனியாவதெதோ எடுபார்ப்போந் தேவதாஸ்திரங்களை விடுயென்றான் அதுகேட்டு சலவசந்தன் யோசனைசெய்து இவன் ரிஷிபிள்ளை யென்று சொல்லுகிறான் இவனைப்பார்த்தால் ஸ்ரீராமரைப்போலு மிருக்கின்றது இவனது வில்லுக்குமுன் நம்முடைய வில் நில்லாதுபோற் றட்டுப்படுகின்றது இவனால் நமக்கு இடுக்கண்வரும்போலு மிருக்கின்றது சூரிய னஸ்தமயமானான் இனி என்னயுத்தம் நடக்கப்போகிறது எல்லாம் நாளையுதயத்திற் பார்த்துக்கொள்வோமென்று குசலராஜனைப்பார்த்து அடா! தம்பி குசலனே? கேளாய், உன்னைப்பார்த்தால் ஸ்ரீ ராமரைப்போ லிருக்கின்றது ஆனபடியால் எனக்குன்பேரில் யுத்தஞ்செய்யமனதிசையவில்லை நீ என்பேரிற் சண்டைசெய்ய வேணுமென்றாலும் பொழுதுபோய்விட்டது இனி என்னயுத்தஞ் செய்யப்போகிறாய் சுருக்கில் உன்தாயிடம்போய்ச் சேரென்று சொன்ன சலவசந்

தனைப்பார்த்து குசலன் சொல்லுகிறான். அடா! சலவசந்த னே? என்னவார்த்தை புகன்றாய் என்னைப்பார்த்தால் ஸ்ரீராம ரைப்போ லிருக்குதென்றும் பொழுது போயிற்றென்றும் இ னி என்ன யுத்தமாகப்போகுதென்றும் சொல்லவந்தாய் உல கில் மனிதரைப்போல் ரூபம்படைத்தவர்கள் அநேகருண்டு இனி பொழுதுபோனாலும் பொழுதுவிடிந்தாலும் இரவு பக லானாலும் பகலிரவானாலும் உங்களனைவரையும் பொழுது விடிகிறதற்குள் சம்மாரம்பண்ணி தம்பி லவனை மீட்டுக்கொ ண்டு போகாமல் போவேனேயானால் நான் பிடித்தது பிரசண் டகோதண்டமல்ல என்பேர் குசலனுமல்லவென்று சொல்ல அவ்வார்த்தையைக்கேட்ட சலவசந்தன் பகர்கின்றான்.

அடா! குசலனே? இந்த இராக்காலத்தில் இராக்ஷதா ளுடன் யுத்தம்பண்ணி நிர்வாகம் பண்ணமாட்டுவையோ மா ய்கையில் வல்லமையுள்ள இராக்ஷதாளாயிற்றே இந்த இரா க்ஷதாளை நீ செயிக்கமாட்டாய் உந்நூட்டியைக் கடித்து உதி ரத்தைக்குடித்து ஜீவனையுங்கொண்டுபோய்விடுவார்கள். அப் படி வாராதபடி உன்னுயிரைக் காப்பாற்றி தாயிடம்போய்ச் சேர்ந்து நாளையுதயத்திற்கு வாவென்றான். அதனையுணர்ந்த குசலராஜன் மொழிகின்றான். அடா! சலவசந்தனே? "மீன் குஞ்சுக்கு நீய்ந்து விளையாடவும் வேங்கைகுட்டிக்குப் பாய்ச் சலும்" உலகிற்காண்பித்துக்கொடுத்தவருண்டோ, அதுபோ ற்பனங்காட்டில் வாசம்பண்ணும் நரியானது சலசலப்புக்கஞ் சுமென்றாற்போல் இராட்சதர்கள் மாய்கையில் மிகுந்தவர்க ளென்று பயங்காட்ட வந்தாயோ அப்படி பயங்காட்டவேண் டாம் உங்களாலான சாமார்த்தியத்தை நன்றாய்க் காண்பிக்க லாம் உங்கள் பிராணனுக்கு மிஞ்சின வஞ்சனையான யுத்தஞ் செய்து சாகவேண்டாம் உங்கள் மாய்கையும் பாணமும் எடுங் களேதோ பார்ப்போமென்றான். அதனைக்கேட்ட சலவசந் தன் நகைபுரிந்து நாம் மாய்கையா யுத்தம் புரிவோமாகில் வஞ்சனைமோசம் இராமத்துரோகம் வந்துவிடுமே இது நல மாய்காணவில்லை எதிர்க்கெதிரியாய் நின்று யுத்தம்பண்ணி வெல்லுங்களென்று வில்லிலனேகமாயிரம் பாணங்களைச் சந் தித்து குசலராஜன்பேரில் மழை பொழிவதுபோல இராக்ஷ தாளும் சலவசந்தனுஞ் சாமாரியாகப் பொழிகிறபோது அந் தபாணங்கள் ஒன்றோடொன்றுரெய்ந்துநெருப்புப்பொறிகள் பறக்கிறபோது இரவு பகலாய் வெளிச்சமுண்டாக மிதமில்

லாத அஸ்திரங்கள் வருகிற காலேயிற் குசலராஜன் கண்டு தை ரியங்கொண்டு அநேகாஸ்திரங்களே விட்டறுத்துப் போட் டான். அதனுற் சலவசந்தன் கோபமாகி ஒரு அக்கினியாஸ் திரமெடுத்து பூசைகள்செய்து விடுத்தான். அதுவும் வில்லி ல்விடுபட்டு காலகோடி விஷம்போற் சிறிக்கொண்டு அண்ட முக டெட்டும்படி வாயைத்திறந்து சலவசந்தன்விட்ட அக்கி னியாஸ்திரத்தின்பேரில் தடாலென்றுவந்து விழுந்து அ தைக் கமளீகரம் பண்ணிப்போட்டு அம்புருவில் வந்தடைந் தது. அதுபோகவே சலவசந்தன் ஒரு பர்வதாஸ்திரத்தை எடுத்து வில்லிற்ருெடுத்து மந்திராபூதிகள் கொடுத்து கடுகடு த்து விடுத்தான், அந்தப் பர்வதாஸ்திரமானது விடுபட்டு அநேகபர்வதங்களாய் உருக்கொண்டு குசலராஜன் எங்கேயெ ன்று வருகிறபோது அக்குசலராஜனுனவன் ஒரு வச்சிராயுத மெடுத்து பூசைநைவேத்தியங்கொடுத்து விடுத்துவருகிற பர் வதங்களே யெல்லாம் அறுத்து வெட்டவெளியாக்கினு னது கண்டு சலவசந்தன் கோபமாகி ஒரு சத்தியை யெடுத்து தனு சிற்ருெடுத்து பக்திவிநயத்துடன் பூசை நைவேத்தியம்புரிந் து குசலன் மார்புக்கு லக்குவைத்து விட்டான்.

அந்த சத்தியானது வில்லே விட்டு விடுபட்டு அண்டாண் டபுவனமதிர ஆவென்று வாயைத்திறந்து குசலனேத்தேடி வருகிறதை குசலன்கண்டு சுருக்கினில் நருக்கி யுருக்கிவிடும் பெருக்கமான ஒரு சத்தியை எடுத்து பூசைநைவேத்தியம் புரி ந்து வந்தனே வழிபாடுசெய்து விடுத்தானந்த சத்தியும் விடு பட்டு ஈரேழுபதினு லுலகத்திலுள்ள யாவருந் திடுக்கிட்டேங்க கடலில் எழுசுற்று நீர் சுவரிப்போக மகாவேகத்துடன்வந்து சலவசந்தன்விட்ட சத்தியை படீலென் றிடித்தடித்து முடித் து அம்புராவில் வந்தடைந்தது அதுகண்டு சலவசந்தன் கடுங்கோபங்கொண்டு மகாசீக்கிரத்தில் நாராயணுஸ்திரத்தை யெடுத்து வில்லிற்ருெடுத்து மந்திராபூதிகள்செய்தான் அந்த நாராயணுஸ்திரமும் வில்லில் விடுபட்டு அநேகங்கோடி சூரி யனேப்போற் பிரகாசித்து கபகபவென் றெரிந்துகொண்டு குச லனெங்கே அவனே யெங்குந் தங்காமல் பங்கப்படுத்துகிறே னென் ருங்கார றீங்கார ஓங்காரத்துடன் வருவதைக்கண்டு அகண்ட மண்டலாதிபனுகிய ஸ்ரீராமபிரான் புத்திரசிகாமணி யாக விளங்காநின்ற குசலனுனவன் தட்சணம் அதனே பட்ச ணஞ் செய்யும்படியான லட்சணம் பொருந்திய தாயார்கொடு

த்த நாராயணாஸ்திரத்தை யெடுத்து பாராயணம் செய்து விடு த்தானதுவும் அதல விதல சுதல தராதலமகாதல பாதாள முற்றும் நடுங்க தேவர்கள் கண்டொடுங்க ஆவென்று வாயை த்திறந்து கொண்டுவந்து சலவசந்தன் விட்ட நாராயணாஸ் திரத்தை கபளீகரம் பண்ணிப்போய்விட்டது.

அதுகண்டு சலவசந்தன் கோபமாகி வில்லை முகத்திற்கு நேராய்ப்பிடித்து சங்கோபசங்கமாய் அனேக அஸ்திரங்களை வில்லிற்சந்தித்து மாரிசொரிவதுபோல் சரமாரியாய் பொழி கையிற் குசலராசன் கண்டு அநேக பாணங்களை வில்லிற் சந் தித்துவிட் டதையறுத்து அநனமாக ௪-திவ்வியாஸ்திரங் கள் விட்டு ரதம் சாரதி குதிரைகளுடன் தும்சப்படுத்தி விட் டான் மறுபடியும் ஒரு இரதத்திலேறினந்த இரதத்தை யும் சாரதி குதிரைகளுடன் அஸ்திரங்களாற் கஸ்திப்படுத்தி னன். இந்தப்படியாய் சலவசந்தனை இரதமேற வொட்டா மல் ௨0-இரதம் வரையிற் குசலராஜன் அதம்பண்ணினன். அதுகண்டு சலவசந்தன் அதிசீக்கிரமாய் வேறொரதமேறி சாரதியை யெச்சரித்து இரதத்தை குசலராஜன் முன்னுக்கு நடத்தி வில்லையெடுத்து நாணிபிகிந்து அநேக திவ்வியாஸ் திரங்களை வில்லிற்சந்தித்துப் பிரயோகப்பண்ணவே குசல ராஜனும் ௩-திவ்வியாஸ்திரங்களெடுத்து வில்லிற்சந்தித்து விட்டறுத்துப்போட் டதனமாய் ௫-சிங்கமுகாஸ்திரம் விட்டு சலவசந்தன் இரதத்திற்கட்டிய துஜத்தையு மறுத்து கை வில்லையுமொடித்து ரதஞ்சாரதிகளுடன் தும்சம்பண்ணிவிட் டு சலவசந்தனுடைய சிரசையும் கறகறவென் றறுக்கவே சல வசந்தன் ஸ்ரீராமாராமாவென்று வைகுந்தஞ் சேர்ந்தான்.

அதுகண்டு குசலராஜன் சந்தோஷமாகி வில்லிலனேக பாணங்களைச் சந்தித்து இராட்சதாள்பேரில் ௧-௧0-௧00-௲-௰௲-கோடி சங்கம்-மகாசங்கம்-அற்புத-நிற்புதமென்று கண க்குமிதமில்லாமற் சொரிகிறபோது இராட்சத சேனைகளா னது காலறுந்தும் தலையறுந்தும் குடல் சரிந்தும் தொந்தி கிழிந்துங் கையறுந்துஞ் சின்னபின்னமாய் மாண்டு உதிர வெள்ளம் ஓடத்தலைப்பட்டது. அப்போது இராட்சதாள் யானைதேர் பரிசேனைகளுடன் முனைந்து போர்புரியும்போது சேனாதிபதியான காலசித்தன் கண்டு சாரதியை யெச்சரித்து குசலராஜன்பேரில் இரதத்தைநடத்தி குசலராஜனைப் பார்த்

தான். அப்போது இராக்காலமாகையால் சந்திரனுடைய ஒளியினாலும் வில்லின் பிரகாசத்தினாலும் குசலனுரு வகப்பட டாமையால் தேடிக் கண்டுபிடித்து குசலனைநோக்கிச் சொல் லுகிறான். வாரும் தம்பி சிறுபிள்ளாய் நீயார் உன் தாய் தந் தை பேரியாதுஉன்னுடைய பேரென்ன உன்னிருப்பிடமெங் கே யெங்களுடன் யுத்தம் பண்ணவேண்டிய காரியமென்ன சொல்லென்று கேட்டான். அதனாற் குசலராஜன் நகைத்து காலசித்தனைப்பார்த்து இவன் யார் பிரம்மராட்சதனைப்போ லிருக்கிறான் ஒருவனைப்பார்க்கிலு மொருவன் சூரனாக நம்மு முடைய தாய்தந்தை பேரையும் நம்முடைய பேரையும் முன் வந்து கேழ்க்கிறான் நாம் வந்தபேருக்கெல்லாஞ் சொல்லிக் கொண் டிருக்கின்றதோ வென்று கடிந்து அடா! இராட்ச தனே? நீயோ யென் தாய் தந்தைபேரை கேட்கிறவன் யுத்த முனையில் உறவாட வந்தாயோ உன்னுடைய சாமார்த்தியம் இதனால் தெரியவந்தது என்னுடனொன்றும் பேசாமல் யுத் தம்பண்ணடா பார்ப்போமென்றான்.

அப்படிகூறிய குசலராஜனை காலசித்தன் பார்த்து அடா சிறுபிள்ளாய் நான்போர்செய்ய பயந்து உன் தாய் தந்தை பேரைக் கேழ்க்கவரவில்லை உன்னைப்பார்த்தால் சிறுபிள்ளையா யிருக்கின்றது என்னையறியாயோ அறியமாட்டாயோ சகல உயிர் பிராணிகளையுங் கொண்டுபோகின்ற யமனுண்டே அந்த எமன் என்னைக்கண்டால் கையெடுத்துக் கும்பிடுவான் அப் படிப்பட்ட காலனை ஜெயங்கொண்டபடியால் என்பேர் கால சித்தனென்று ஞாலத்திற் சொல்வார்கள் அதிருக்கட்டும் உன் தாய்தந்தைபேரை முன்னஞ்சொன்ன பிற்பாடு என்முன் யுத்தம் பண்ணென்றான். அப்படி சொல்லிய காலசித்தனைப் பார்த்து குசலராஜன் சொல்லுகிறான். அடா! காலசித்த னே? என்தாயார்பேர் ஜானகியம்மாள் எங்களையர்பேர் வால் மீகர் என்பேர் குசலன் என்தம்பி பேர் லவன் இனியாகிலும் யுத்தம் பண்ணென்றான்.

அதைக்கேட்ட காலசித்தன் யோசனைசெய்து இவன் ரிஷிபிள்ளையென்று சொல்லுகிறான். நாமுந்திப் பதறிப் பா ணம் விடப்போகாதென்று மனதிலெண்ணினவனாக குசல ராஜனைப்பார்த்து அடா! குசலனே? நீயோ சிறுவன் இந்த இராட்சதாளுடன் உனக்கு யுத்த மென்னத்திற்கு உன்னை என்ன செய்தார்களென்று என்னுடைய சேனையை இப்படிக்

கொன்ருய் சொல்லென்ருன். அதற்கு குசலராஜன் காலசித்தனைப் பார்த்துச் சொல்லுகிருன். அடா! காலசித்தனே? என் தம்பிலவன் உங்களை என்னபண்ணினனென்று பிடித்துக் கட்டிக்கொண்டு போனீர்கள் சொல்லென்ருன்.

அடா! தம்பி குசலனே? கேள் அயோத்தியாபுரி பட்டணத்தை பரிபாலனம் பண்ணப்பட்ட ஸ்ரீராமமூர்த்தி அஸ்வமேதயாகம் பண்ணும்படியாய் குதிரையைவிட்டார். அக்குதிரையைஉன் தம்பி பிடித்துக்கட்டினன் அதைக்காணமற்றேடிக்கொண்டு இந்தக்காட்டில் வரும்போது குதிரையைக்கண்டு பிடித்தோரையும் தேடிவந்தவர்களையுங் கொன்றபடியினல்எங்கள் தண்டுக்கு ராசாவாகவந்த ஸ்ரீராருடைய சகோதரனுகிய சத்துருக்க மகா ராசன் கேள்விப்பட்டு லவனுக்கு எத்தனையோ விதமாய்ப் பிரிய வசனஞ் சொன்னபோதிலும் கேளாமல் சத்துருக்கமகாராஜருடனே யெதிர்த்து யுத்தஞ் செய்தபடியால் சத்துருக்கமகாராசன் கோபமாய், உன் தம்பி லவனைப்பிடித்துக் கட்டி குதிரையும் விடுவித்துக்கொண்டு அயோத்திக்குப்போக பயணமாயிருக்கையில், நீவந்து இப்படி எங்கள் சேனையை கொல்லலாமோ வென்ருன். அதுகேட்டு குசலராசன்சொல்லுகிருன். அடா! காலசித்தனே? அயோத்தியாபுரி யாளப்பட்ட ஸ்ரீராமபிரான் விட்ட குதிரைதங்கள் பட்டணமட்டும் பிரதட்சணம் வரவேணுமே யல்லாமல் எங்கள் வனத்திற்கவர்விட்ட குதிரைவர ஞாயமுண்டோ குதிரை எங்கள் வனத்திற்கு வந்தபடியினல் என் தம்பி லவன் பிடித்துக் கட்டினன் அவனுடன் யுத்தம்பண்ணி அவனைப்பிடித்துக்கட்டி குதிரையை விடுவித்துக் கொண்டுபோக உங்களுக்கென்ன ஞாயமிருக்கின்றது சொல்லென்று கேட்டான். அதனைக்கேட்ட காலசித்தன் சொல்லுகிருன். அடா! தம்பி குசலனே? என்ன வசனம்புகன்ருய், அயோத்தியாபுரி பட்டணத்தைப் பரிபாலனம்பண்ணப்பட்ட ஸ்ரீராமபிரான் விட்டகுதிரை அவனுடைய பட்டணத்தை பிரதட்சணம் வரவேணுமே யல்லாமல்என்னுடைய வனத்திற்கு வந்தபடியால் என்தம்பிலவன்பிடித்துக்கட்டினனென்றல்லவோ ஞாயஞ்சொல்லவந்தாய், ஆனல் கேளுந்தம்பி சொல்லுகிறேன் சூஅ-அண்டம் உஉச-புவனம் சத்தசாகரஞ் சூழ்ந்த ஈரேழுபதினுலுலகத்தையு மாளப்பட்ட தேவேந்திரன் அந்ததேவேந்திரனை துரத்திவிட்டு சூஅ-அண்டம் உஉச-புவனமும் சத்தசாகரஞ்சூழ்ந்த ஈரேழுபதினுலுலகத்தையும் இராவணேஸ்வரன் இராச்சிய பரிபாலனம்

பண்ணுகையில், ரிஷிகள் தேவர்கள் மச்சங்கள் பிடித்துக் கொண்டுவந்து தருகவும், வருணன் சாணத்தெளிக்கவும், வாயுதேவன் முத்தம் பெருக்கவும், சூரியன் இலங்கைக்குள் வாராமற் புறத்தில் நடக்கவும், சந்திரன் மாத்திரந்தன்பட்டணத்தில் வந்து தன் பிள்ளைகளுடன் விளையாடவும், பிரமதேவன் பஞ்சாங்கம் சொல்லவும், விஷ்ணுவானவர் மனைவரிச் சிலவுபார்க்கவும், ஈஸ்வரர்வந்து ஞாயவசனங்கூறவும், இந்தப்படியாய் சகல தேவர்களும் ரிஷிகளும் ஊழியஞ் செய்து பிழைக்கவும், யமன் லங்கைக்குள் இராட்சதாளைக்கண்டால் நடுக்கங்கொண்டோடவும், அக்கினிதேவன் சுயம்பாகியாயிருக்கவுமிப்படி யொருவரும் நிகரில்லாமல் துரைத்தனம்பண்ணிக்கொண்டிருக்கையில் அந்த ராவணனைச் செயித்து ஈரேழுபதினாலுலோகத்தையும் தேவேந்திரனுக்குக் கொடுத்து தேவேந்திரன் பட்டணத்தை நிலைநிறுத்தி ரிஷியீஸ்வரர்களுடைய சபதத்தையு மீடேற்றினர். அப்படிச் சர்வலோகங்களையும் நிலைநிறுத்திய ஸ்ரீராமபிரானுக்கு இந்தவனத்தில் குதிரைவிட அதிகாரஞ்செல்லாதோ நீ சிறுபிள்ளை புத்தியானபடியினாலெங்கள் வனத்திற்கு வந்த குதிரையைப் பிடித்துக்கட்டி யுத்தம்பண்ணினே னென்று சொன்னாய் அப்படி சொல்லாதே இப்பொழுது என்தம்பி லவன் செய்ததெல்லாந் தப்பென்று சத்துருக்க மகாராசனை சரணமடையென்றான்.

## குசலராஜனுக்கும் காலசித்தனுக்கும் யுத்தம்.

---

சந்தவிருத்தம்.

வெஞ்சிலைதொட்டவசந்தனெனப்புகல்வெய்யோனுந்
துஞ்சுதற்கண்டு சுடர்கணையேந்திச்சொல்லுஞ்சித்தன்
செஞ்சிலைமாரனெனத்திகழுங்குசலன்றன்னை
மஞ்சதுபோலவடர்ந்துகனற்கொடுமாய்ந்தானே.

இவ்வாறு சொன்ன காலசித்தனைப்பார்த்து குசலராசன் கண்களிரண்டும் நெருப்புப் பொறிபறக்க, காதுகளிரண்டிலும் புகைகிளெழும்ப, சரீரம் படபடவென்று துடிக்க,சேனாதிபதியான காலசித்தனைப்பார்த்து அடா! காலசித்தனே? தேவேந்திராதிதேவர்களையும் வணங்காத ராவண கும்பகர்ணாதிகளை செயித்த வீராதிவீரரான ஸ்ரீராமபிரானுடைய சாமார்த்தியம் என்முன்வந்தாலல்லவோ தெரியும், அதிருக்கட்டும் இப்போது உன்னுடைய சாமார்த்தியத்தையும் உனக்கு ராசா

வாகவந்தசத்துருக்கமகா ராஜனுடையசாமார்த்தியத்தையும் வந்தபடையினுடைய சௌரியத்தையுமிதோ க்ஷணப்போதிலறிகிறேன் பாரடாவென்று ௧0-திவ்வியாஸ்திரங்களெடுத்து வில்லிற் சந்தித்துகாலசித்தன்பேரிற்பிரயோகம்பண்ணினான்.

அந்த திவ்வியாஸ்திரங்களானது வில்லில் விடுபட்டு அக்கினிச் சுவாலையாய் நெருப்புகளை கக்கிக்கொண்டு அதிக வேகத்துடன் வருகிறபோது காலசித்தன்கண்டு குசலன் பாணத்தை மிஞ்சினானென்று திவ்வியாஸ்திரங்களெடுத்து வில்லிற் சந்தித்துவிடுத்து குசலராசன்விட்ட ௧0-திவ்வியாஸ்திரங்களை யறுத்துத்தள்ளி குசலராசனைப்பார்த்துச் சொல்லுகிறான். அடா! குசலனே? கையிலாகாத சில ராட்சதாளை ஜெயித்தோமென்கிற கெர்வத்தினாலே என் வார்த்தையைத்தள்ளிவிட்டு பாணந்தொடுத்தாயல்லவா, நீயும் உன்னுடைய பாணமும் போகிறவழி உனக்குத்தெரியாமலேன் துள்ளுகிறாய், என்னுடைய சேதி உனக்குத் தெரியாமல் பாணந்தொடுத்தாய் நீ சிறுவனானதினாலே மனம்பொறுத்தேன் இப்போதாகிலும் என்பேச்சை தள்ளாமல் சத்துருக்க மகாராசாவை வணங்கிப்பிழைத்தால் உன் தம்பி லவனை மீட்டுக்கொள்வாய் அப்படி சமாதானமாகிறதில்லை என்றால் இதோ யென்னுடைய அஸ்திரத்தினாலே பஸ்மீகரப்படலமாய் உன்னை யெறித்துப் போடுவேனென்றான். அப்படி கடூரமான வார்த்தை சொன்ன காலசித்தனைப் பார்த்து கண்கள் சிவப்பேறி கோபமீறி அடா காலசித்தனே? நல்லவசன முறைத்தாய், உங்களிராசாவாகிய சத்துருக்க மகாராசனை வணங்கி என் தம்பி லவனை விடுவித்துக்கொள்ளாவிட்டால் உன்னுடைய அஸ்திரத்தினாலென்னை பஸ்மீகரப்படலம் பண்ண உன்னால் வல்லமையுண்டோ, அப்படி வல்லமையுண்டானால் பாணஸ்திரத்தை எதோ எடுபார்ப்போமென்று இந்திராஸ்திரம், எமனாஸ்திரம், அக்கினியாஸ்திரம், இப்படிச்சொல்லப்பட்ட அஷ்டதிக்குப் பாலகருடைய அஸ்திரங்களை வில்லிற் சந்தித்து காலசித்தன்மீது மாரிபொழிவதுபோல் சரமாரிபொழிய அவைகள் அக்கினிகளை குபீல் குபீலென்று கக்க அக்கினிப்பொறிகளாகாய மெழும்பி பூமியில் விழுகிறபோது இரவும்பகலாய் பாணங்கள் மகாமகிமையுடன் வருகிறதை காலசித்தன் கண்டு தான் அஷ்டதிக்குப் பாலகரிடத்தில் வரம்பெற்ற அஸ்திரங்களை யெடுத்து பூசை செய்துவிட்டான். அந்த அஸ்திரங்க

ளும் ஆலகால விஷம்போல் அக்கினி சுடர்களுடனே அதி வேகமாக வந்து குசலராசனுடைய பாணங்களை காலசித்தன் பேரில் போகவொட்டாமல் மறித்து ஒன்றோடொன்று யுத்தஞ்செய்து பொடிப்பொடியாய் பூமியில் விழுந்ததுகள் அதனுற் குசலராசன் ௧00-நாராசபாணங்களெடுத்து வில்லிற் சந்தித்து காலசித்தன் பேரிற் பிரயோகம் பண்ணினுன் அந்த ௧00-நாராசபாணங்களும்வில்லைவிட்டு அவயத்திலிருக்கும் நாகசற்பத்தை கோலாற்றட்டினுல் எப்படிச் சீறிக்கொண்டு வருமோ, அப்படிபோல நாராச பாணங்களான ஒன்றோடொன்றுருய்ந்துக்கொண்டு அக்கினிப் பொறிகள் சிதறும்படியாய் வருகிறபோது சேனுதிபதியான காலசித்தன் பார்த்து அதிக பலம்பொருந்தி யிருக்கப்பட்ட நாராசபாணத்தை க-ம-௧00-கூ-மகூ-கோடியென்று கணக்கு மிதமில்லாத நாராசபாணத்தை வில்லிற்சந்தித்து குசலராசன்விட்ட கூ-நாராசபாணங்களையு மறுத்து பூமியிற்றள்ளினுன். அதைப்பார்த்து குலசராசன் ஏதடா இராட்சதன் அதிகபலவானுயிருக்கிருன் இவனுடன் இப்படி யுத்தம்புரிந்தால் முடியாது என்றுன்னித் தனதுவில்லை முகத்திற்கு நேராகப்பிடித்து அநேகம் பாணங்களை வில்லிற்சந்தித்து நிமையுடன் நிமை தட்டுமுன்னம் சங்கம் அற்புதம் நிற்புதமென்று கணக்கு மிதமில்லாத பாணங்களைக் கட்டுகட்டாய் கோர்வை கோர்வையாய் வாசாமகோசரமாய் விட்டு இரதம்சாரதி குதிரைகளையும் தும்சப்படுத்தி காலசித்தனுடைய சரீரத்தையுஞ் சதைசதையாய்ப் பேர்த்தெரிந்துவிட்டான். அதைக்கண்ட காலசித்தன் சரீரமிகவுநொந்து அனேக பாணங்களைவாரி குசலராசன்பேரில் விட்டுவிட்டான். அதுகள் கடலொலிபோ லிரைச்சலிட்டுக்கொண்டு வருகையிற் குசலராசன் கண்டு அதிசீக்கிரமாய் ரு0-திவ்வியாஸ்திரங்களெடுத்து பிரயோகஞ்செய்து காலசித்தனுடைய பாணங்களை யெல்லாமறுத்துப்போட்டு ஐந்து யிடியாஸ்திரங்களை யெடுத்து வில்விற் சந்தித்துப் பிரயோகப்படுத்தினுன். அந்த திவ்வியாஸ்திரங்களைந்தும் அதிவேகத்தோடுவந்து காலசித்தனேறிவந்த இரதஞ்சாரதி குதிரைகளுடன் அதஞ்செய்துபோயிற்றந்த ரதம்போகவே, காலசித்தன் மறுதேறிலேறுமுன்னமே குசலராசன் பின்னுமைந்து இடியாஸ்திரம் விட்டு இரதத்தையு முடைத்தெரிந்துப்போட்டான் இந்தப்படி உரு-இரதம் வரையில் குசலராஜன் உடைத்தெறிந்துவிடவே சே

னுதிபதியான காலசித்தன் ஏதடா லவனிலுங்குசலன் பலவா
னுயிருக்கிறுன் நம்மை இரதமேற வொட்டாமலும், வில்லை
கையிற்பிடிக்க வொட்டாமலும், பாணங்களைப்பூட்ட வொட்
டாமலும், அஸ்திரங்களை விட்டிருக்கிறுன். நாமோ, அனே
கயுத்தங்களிற் கைகண்டிருக்கிறோம் அனேக தேவர்களுட
னும் இராசாக்களுடனும் யுத்தம் பண்ணியிருக்கிறோ மப்
போது நமக்கித்தனை ஆயாசமிளைப்பு வந்ததில்லை இப்போ
திந்த குசலனுலே ஆயாசம் இளைப்புண்டா யிருக்கின்றது
எல்லாம் ஸ்ரீராமருடைய கிருபையென்று மனதை தைரியப்
படுத்தி ஸ்ரீராமா ராமாவென்று ஸ்தோத்திரம் பண்ணவே கா
லசித்தனுடைய இளைப்பு ஆயாசம் நீங்கி அமிர்தஞ்சாப்பிட்
டவனைப்போல அதிக தைரியத்துடனே மறுதேரிலேறி சார
தியை யெச்சரித்து இரதத்தை குசலராசன் முன்னுக்கு நட
த்தி வில்லைவளைத்து நாணிபிகிந்து அநேக பாணங்களை வில்
லிற்சந்தித்து விடுத்து குசலராசன் கைகாலாட வொட்டாம
லும், வில்லைக் கையிற் பிடிக்கவொட்டாலும், குசலராசனு
டைய சரீரத்தை ரத்தமயமாக்கிவிட்டான். அதனுற் குசலராச
னுக்கு கைசோர்ந்து மெய்சோர்ந்து போகையிற் சொல்லு
கிறுன். இவனுடைய கரவேக சரவேகந்தானென்ன யுத்தம்
புரிந்த பிரமுகாளில் இவன் பலவானுயிருக்கிறுன் நாம் விடப்
பட்ட அஸ்திரங்களையெல்லா மறுத்துப்போடுகிறுன் இவ
னுல் நமக்கு ஆயாசம் இளைப்பு மதிகமாக வருகிறதென்று
சற்றுநேரம் சும்மாயிருந்தோமேயானுல் இராட்சதன்கையி
லகப்பட்டுப்போவோம் என்செய்வோமென்று தாயேதாயே
யென்று சீதையம்மனை மனதிலெண்ணின மாத்திரத்தில் சீ
தையம்மனுடைய கிருபையால் குசலராசனுக்கு ஆயாசமிளை
ப்பும் நீங்கி அமிர்தபானம் பண்ணினவனைப்போலாகி அதிக
தைரியத்துடன் அநேகாஸ்திரங்களை வில்லிற் பூட்டிவருகிற
அஸ்திரங்களையெல்லாம் தன்பேரில் வரவொட்டாமல் வா
ட்டி சனுதியிலோர் வாய்வாஸ்திரத்தை யெடுத்துப் பக்தி
விநயத்துடன் பூசைசெய்து காலசித்தன் இரதத்தைப் பார்
த்து விட்டுவிட்டான் அந்த வாய்வாஸ்திரமோ யுகாந்தகால
த்தில் சண்டமாருதம் வீசினதுபோல காலசித்தனுடைய பா
ணத்திற்கு பிடிபடாமல் அதிவேகத்துடன் இரதத்தில் வந்து
பாய்ந்து தெற்கே நூறுயோசனை தூரத்தில் இரதத்தை பின்
னுக்குத் தள்ளிக்கொண்டு போய்விட்டது.

அதுகண்டு குசலராஜன் சந்தோஷமாகி அநேகபாணங்களைச் சந்தித்து யானைதேர் பரிசேனைகளின்பேரிற் பிரயோகம்பண்ணினன். அப்படி குசலராசன் மிதமில்லாத பாணங்களை சேனைகள்பேரில் விடுகிறபோது யானைக்குப் பாணம்-௧௦ சவுடாலுக்குப் யாணம்-௫ சேனைகளொன்றுக்கு ஒவ்வொரு பாணம் இந்தப்படியாய் கணக்காக எடுத்து அஸ்திரங்களை விட்டுக் கொல்லுகிறபோது யானைதேர் பரிசேனைகள் எப்படி விழுகுதென்றால் யானைகள் காலறுந்தும் வாலறுந்து மத்தகம் பிளந்தும் தும்பிக்கை யறுந்தும் துடையறுந்தும் கொம்புகள் முறிந்தும் சவுடால்கள் தரிந்தும் அம்பாரிகள் ஒடிந்தும் மாவுத்தன் தலையறுந்தும் இராசாயிறந்து விழவும் இரதங்களானது அச்சுமுறிந்தும் ஆணிகழன்றும் குத்துக்காலொடிந்தும் கொடுங்கையறுந்தும் கொடை வெட்டுண்டும் துஜந்தரிபட்டும் குதிரைகள் குடல்சரிந்தும் சாரதிதலைவிழுந்தும் இராஜாக்கள் மார்பிளந்துசாகவும் குதிரைகளோவென்றால் மூன்காலிரண்டு முறிபட்டதும் பின்காலிரண்டு முறிபட்டதும் சிரமறுபட்டதுமாய் விழவும் சேனைகளோவென்றால் கால்வேறு கைவேறு உடல்வேறு எலும்புவேறு இறைச்சி வேறாகவிழுந்து ரத்தாரோடத் தலைப்பட்டது அதனாற் குசலராஜன் சந்தோஷமாகி பாணங்களை விட்டுக்கொண்டு முதல் அணிகடந்து இரண்டாமணியில் வருகிறபோது அவ்விரண்டாமணியி லிருக்கப்பட்டசேனைகள்கண்டு குசலராஜனைமடக்கிக்கொண்டு பாணங்களைவிட்டு யுத்தம்பண்ணும்பொழுது குசலனும் வில்லிலநேகபாணங்களைச் சந்தித்துவிட்டுகால்பலமான சேனைகள்விட்ட பாணங்களையெல்லா மறுத்துப்போட்டுக்கொல்லுகிறபோது சேனைகளானது சின்னபின்னப்பட்டுத் தலைவிரி கோலமாய் அயோத்தியைநோக்கி யோடலுற்றார்கள்.

கேதாயுதனுக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

---

விருத்தம்.

தேர்மிசையுற்றகெதாயுதனென்றசெழுஞ்சூரன்
காரிருள்போற்பெருஞ்சேனைகளோடுகலந்தேகி
பாரிதிதின்றுபுரந்தரனெனவோர்பண்போனே
போர்புரியாவகையோதுகளென்றுபுகல்வானே.

அதனைப்பார்த்த கெதாயுதன் ஓட்டமாயோடுகிற சேனைகளையோட வொட்டாமல் திருப்பிக்கொண்டுவந்து இரண்டா

மணியில் நிறுத்தி ரத்தத்தை குசலராஜன் முன்னுக்குத் துர த்தி வில்லையெடுத்துநாட்டி சரங்களைப் பூட்டிவிடுகையில், கு சலராஜன் கண்டு ௰-அர்த்த சந்திராஸ்திரங்களைவிட் டறுத் துத்தள்ளி அதனமாய் ௰-நாராசங்கள்விட்டு கெதாயுதன் மார் பிலணிந்த நவகவசங்களையு மறுத்துத்தள்ளிவிடவே கெதா யுதன்பார்த்து கோபமாகி ௰-திவ்யாஸ்திரங்களை எடுத்து வில் லிற்சந்தித்து பிரயோகஞ்செய்தான் அந்த திவ்வியாஸ்திரங் கள் விடுபட்டு அக்கினிச் சுவாலையுடன் திகுதிகென்றெரிந் துக்கொண்டு வருகிறபோது குசலராசன்கண்டு அந்த நூறு திவ்வியாஸ்திரங்களையுங் கொய்து அதனமாக இரண்டு திவ் வியாஸ்திரம்விட்டு சேனாதிபதியான கெதாயுதனேறி வந்த ரதத்தை யுடைத்துவிட்டான் மீண்டு மறுதேரிலேறினான் அ தையு முடைத்தெறிந்தான் இந்தப்படி ௨௰-தேர்வரையி லத மாகவே கெதாயுதன் அதிசீக்கிரமாக மறுதேரிலேறி வில்லை யெடுத்து நாணிபிகிந்து சரங்களைவாரிச் சொரிகையில் அது களையுஞ் சில அஸ்திரங்கள்விட்டு தடுமாடச்செய்துவிட்டு அ தனமாய் ஒருதிவ்வியாஸ்திரம்விட்டு கெதாயுதன்பிடித்திருந் த வில்லை இரு துண்டமாகச் செய்தான் அதுபோகவே கெ தாயுதன்கோபமாகி ஏதடா சிறுபிள்ளையென்றுபார்த்தால் இ வன் நம்மை வில்லைக்கையிற்பிடிக்கவொட்டாமலும் அஸ்தி திரங்களைப் பூட்ட ஒட்டாமலும், சின்னபின்னப்படுத்துகிறு ன் பார்த்தாயோவென்று தன்னுடையதண்டாயுதத்தையெடு த்துச் சுழட்டி குசலராஜன்பேரில் விட்டெறிந்தான் அதுக ண்டு குசலராஜனதையும் ஒரு பாணத்தினல் சுக்கல்சுக்கலாகச் செய்தான் அதுபோகவே கெதாயுதன் கத்திகேடயமெடுத்து க்கொண்டு ரதத்துடன் வரும்போது குசலராஜன் பார்த்து ச லுதியில் ஒரு அர்த்தசந்திராஸ்திரத்தை எடுத்து வில்லிற்றொ டுத்து கடுகடுத்து கெதாயுதன்சிரசை யறுத்துத்தள்ளினன்.

மட்சயந்தனுக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

கலிவிருத்தம்.

மட்சயந்தவனுமானும்வண்மைசேர்
இஷ்டனுகுங்கதாயுதனேமனர்
பட்சமானதுகண்டுபதறியத்
துஷ்டனைமுடிப்பேனெனத்தூண்டினன்.

அதனைக்கண்ட சேனதிபதியானவன் கோபங்கொண்டு ரதத்தை குசலராஜன்முன் நடத்தி வில்லை எடுத்து நிறுத்தி

நாணிபிகிந்து அநேகபாணங்களை வில்லிற் சந்தித்து குசல ராஜன்பேரிலெய்து யுத்தஞ்செய்துக்கொண் டிருக்கும்போது மட்சயந்தவனுமான்கண்டு மனதில் அதிக கோபங்கொண்டு மேற்கு முகமாய்ப்பாய்ந்துரு0-யோசனை நீளமும் எண்பது யோசனையுயரமுமுள்ள பிர்ம்மாண்டமான ஓர் பர்வதத்தைக் கெல்லித் தோளின்மீதுவைத்துக்கொண்டுகோபச்சிறிப்புசிறி த்து குசலராசன் முன்னுக்குக் கொண்டுவந்து அவனைப் பார் த்துச் சொல்லுகிறுன் அடா! குசலனே? கேளும் நீ கையிலா காத சில ராக்ஷதாளைக்கொன்றுமென்று கெர்வித்தாயே அதையிப்போதே அறிவிக்கிறேன் என்கையிலிருக்கின்றபர்வ தத்தைப்பார்த்தாயோ இந்தப் பர்வதம்போடுமுன்னமே எங் கள் ராசாவாகிய சத்துருக்கமகாராஜனைவணங்கிஞல் நீபிழை ப்பாய் இல்லாவிடிற்சாவாயென்றுன் அப்படி கூறிய மட்ச யந்த அநுமானைப்பார்த்து அடா இது ஏதடா காட்டிற்றிரி கின்ற குரங்கானது மலையைத் தூக்கிக்கொண்டுவந்து சத்துரு க்கனுடைய பேரைச்சொல்லி நம்மைமிரட்டுகிறது இதையார் வளர்த்து வார்த்தை கற்றுக்கொடுத்த குரங்கோ, ஆனுலும் இவனுணுவத்தை அறிவோமென்று அருகில் நெருங்கி அடா குரங்கே ஏதுமொழிந்தாய் நான் சத்துருக்கனைவணங் கிஞல் பிழைப்பேன் இல்லாவிடில் உன் கையிலிருக்குங்குன்று லின்று என்னைக் கொன்று விடுவேனென்று என்முன்னிற் புக ன்றுயல்லவா நல்லது அந்த சத்துருக்கனிடத்தில் பலமிருந் தால் என்னைவெற்றியடைகிறுன் இல்லாவிடில் என்கையில் சாமார்த்தியமிருந்தால் நான்வெற்றியடைகிறேன் நாட்டில் வாழாத காட்டில் வாழும் குரங்கு நீயார் உனக்குமவனுக்கும் என்ன சம்பந்தமுண்டென்று தலைமேல்மலைவைத்துக்கொண் டுவந்தாய் ராட்சதமாய்கையால் இப்படி குரங்கு ரூபமெடுத்து வந்தாயோ நீயார்சொல்லாவிடில் உன்னையும் உன்தோளிலிரு க்கும் பர்வதத்தையும் நிர்த்தூளி படலமாக்குவேனென்றுன்.

அவ்வார்த்தையைக் கேட்ட மட்சயந்தனுமான் குசலரா ஜனைப்பார்த்து குலுங்க நகைத்து சொல்லுகிறுன் அடா குச லனேகேள் பராபரவஸ்துவாய் விளங்குகின்ற ஸ்ரீமந் நாரா யணரே ஸ்ரீராமமூர்த்தியாய் அவதரித்து ராவணசம்மாரஞ் செய்யுங்காலையில் வாய்வுபுத்திரன் அநுமாராகியஎன் தந்தை யைக்கண்டு சிநேகங்கொண்டு, வாலியைக்கொன்றுசுக்கிரீவனு க்குப்பட்டங்கட்டி, எழுபத்திரண்டு வெள்ளம் என்னைப்போ

ன்ற வானராளை தண்டுகூட்டிப் படையெடுத்து லங்கைக்குள் நுழைந்துஇராவணசம்மாரமுடிப்பித்துகீர்த்திப்பெற்ற அனுமார் குமாரன் நான் என்பெயர் மட்சயந்தனுமானென்றுசொல்வார்கள் அப்படியிருக்கக்காட்டில் வாழுகின்ற குரங்கானுல் பேசத்தெரியுமோ இப்பேர்க்கொற்ற பர்வதத்தைத் தூக்கிக் கொண்டுவர பலன்தானுண்டோ என்னைப்போல் பலம்படைத்த எழுபத்திரண்டு வெள்ளம் வானரான் அயோத்தியிலிருக்கின்றுர்கள் அதுவுமன்றிஐந்நூறுவெள்ளம் இராக்ஷதாளும் அதற்குப் படைத்தலைவர் சேனுதிபதிகளும் இராட்சதசிரேஷ்டர்களும் வந்திருக்கிருர்கள் நீயோ சிறிபிள்ளை ஏன் வீணில் மீளாதவகையைத் தேடிக்கொள்ளுகிருய் "ஊருடன்பகைக்கின் வேருடன்கெடு" மென்ற பழமொழியுணர்ந்திலாயோ ஆர் பகையானுலும் ஸ்ரீராமர்பகை யாருக்குமாகாது ஸ்ரீராம பாணங்கொஞ்சத்தில்விடாது ஆகையால் என்சொல்லைத் தள்ளாமல் வேறென்றுங் கருத்தில்கொள்ளாமற்சத்துருக்கமகாராஜனை இணங்கி வணங்கி பிழைப்பதேகாரியமென்முன்.

அப்படி சொல்லிய மட்சயந்தனுமானைப் பார்த்து குசலராஜன் சொல்லுகிருன். அடா! மட்சயந்தவனுமானே? அந்த ஸ்ரீராமனைப்போல் லட்சம் ஸ்ரீராமன் வந்தாலும் அவன் தம்பி சத்துருக்கனைப்போல் இரண்டுலட்சம் சத்துருக்கன்வந்தெதிர்த்தாலும் உன்னைப்போல் பலம்படைத்த வானரவெள்ளமான இராட்சதசேனையானது கோடிவெள்ளம்வந்தாலும் அயோத்தியை நாடிதேடி யோடிப்போகும்படியாய் என்னுடைய நாராயணுஸ்திரத்தினுல் ஒரு க்ஷணப்பொழுதில் சம்மாரஞ்செய்து போடுவேன் அந்த ஸ்ரீராமனும் அவனுடைய சேனைகளும் உனக்கே பெரிதாயிருக்கும் அதுகளெல்லாம் எனக்கோ துரும்பென்று நினைத்திருக்கிறேன் நீபோடப்பட்ட மலையை எதோ போடு பார்ப்போமென்முன்.

அப்போது மட்சயந்த அனுமான் அதிக கோபங்கொண்டு இவனைக்கொன்றுலும் தோஷமில்லையென்று சுழட்டி குசலராஜன்பேரில் விட்டான். அந்த பர்வதமானது மூங்கிற் காடுபத்தி எறிய கரடி புலி சிங்கம் காட்டானைகள் திடுக்கிட அதிக வேகமாக வருகிறபோது குசலராஜன்கண்டு சீதையம்மாள் கொடுத்த இந்திரனுடைய வஜ்ராயுதத்தை எடுத்து வருகிற பர்வதத்தின் பேரிலே விரைந்துவிட்டான், அந்த வச்சி

ராயுதமானது பர்வதத்தின்பேரிலே படவே, பர்வதமானது விபூதி தூளிதம்போற் பூமியில்விழுந்துவிட்டது. அதுகண்டு மட்சயந்த அனுமான் கோபமாகி மேற்குமுகமாக நோக்கி மற்றோர் பர்வதத்தை கொண்டுவரப் பாயுமுன்னமே குசலராஜன் வில்லில் அனேகபாணங்களைச் சந்தித்து மட்சயந்த அனுமான்பேரிற் பிரயோகம் பண்ணிவிட்டான். பாணங்கள் வில்லில் விடுபட்டு நாகசர்ப்பம்போற் சீறிக்கொண்டு மட்சயந்த அனுமானுடைய சரீரங்களில் சுருக்கு சுருக்கென்று வந்து தைக்கவே மட்சயந்தவனுமான் கையினாலும் வாயினாலும் பாணங்களை பிடுங்கி யுதறினான் அப்போது பாணங்களெல்லாம் முறிந்துபோய் விட்டது. அதற்கு குசலராசன் ௰-நாராசபாணங்களெடுத்து வில்லிற் சந்தித்து மட்சயந்தனுமான் பேரிற் பிரயோகஞ்செய்தான். அந்தப்பத்து நாராசபாணங்களும் விடுபட்டு காலக்கோட்டி விஷம்போற்சீறி சிடசிட படபடவென்ற சத்தத்துடனெறிந்துக் கொண்டுவருகிற ௰-நாராசங்களும் மட்சயந்தவனுமான் கையை நீட்டி பிடித்து கசக்கி நசுக்கி சத்துவித நீவந்தவழி போவென்று காட்டிக்கூட்டியோட்டிவிட்டான். அதனால் குசலராசன் கண்களிற் பொறி பறக்க மகாகோபத்துடன் நூறு நாராசபாணங்களை எடுத்து வில்லில் ஒவ்வொன்றாகச் சந்தித்து விட்டான்.

அந்த நாராசபாணங்களானது ஆலகாலவிஷம்போற் புகைகளுடன் சீறிவரும்போது மட்சயந்த அனுமான் ரணக்களத்திலுருண்டு கிடக்கும் இரும்பு தெண்டாயுதத்தை கையிலெடுத்துவருகிற பாணாஸ்திரங்களை பறக்கடிக்கிறபோது பாணங்களானது வந்தவழி போனவழி தெரியாமற் போய்விட்டது குசலராசன் பின்னுமதிக சினங்கொண்டு திவ்வியாஸ்திரங்களெடுத்து தனுசிற்றொடுத்து விடுத்து மட்சயந்த அனுமான் கையிற்பிடித்திருந்த இரும்பு தெண்டாயுதத்தை யறுத்தெரிந்தான். அதுபோகவே மட்சயந்தனுமான் ரணக்களத்தில் விழுந்திருந்த ஆனைகளை வாரிவாரி குசலராசன்பேரில் விட்டெறிந்தான். அதுகண்டு குசலராசன் இரண்டு அர்த்தசந்திரபாணங்களை விட்டு அதைசிதைத்தான் பின்பு மட்சயந்தனுமான் இரதங்களைவாரி குசலராஜன்மீது விடுத்தான். அதற்குமிரண்டு திவ்யாஸ்திரங்களை விட்டுவருகிற இரதத்தை உடைத்தெறிந்தான் அதனால் மட்சயந்தனுமான் மயங்கித் தியங்கி இவனை எவ்வாறாய் செயிப்போமென்று மனதில்யோ

சனைசெய்துக் கொண்டிருக்கையிற் குசலராஜன் சொல்லு கிறுன்.

அடா! மட்சயந்தனுமானே? ஏன் யுத்தம் பண்ணுகிறுய் உனக்கு ஆயுதங்கள் அஸ்திரங்களும் கல்லும் மரம் யானைதேர்களோ இப்படி யுத்தஞ்செய்தோ ராவண இராட்சதாளை செயித்தீர்கள் உங்களை சேவகத்திற்கு வைத்துக்கொண்டஸ்ரீராமனும் உங்களைப்போற்றுனே யுத்தம்பண்ணுவான் உங்களுடைய வம்மிசசேஷ்டைகளையே காட்டினீர்கள் நீங்களொரு சேவகவீரரென்று என்முன் யுத்தம் பண்ணவந்தீர்கள் உன்னைப்போல் எஉ-வெள்ளம் வானராளும் இப்படிதான் யுத்தம் பண்ணுவார்களோவென்றுன். அதுகேட்டு மட்சயந்தனுமான் கோபத்துடன் குசலராசனைப் பார்த்துச் சொல்லுகிறுன். அடா! குசலனே? நீ விசேஷத்தை மிஞ்சாதே, நீதானே சூரனென்று துள்ளாதே, உன்கையில் வில்லிருக்கிறதென்று கெர்வியாதே, உன்னுடைய அஸ்திரங்கொண்டா என்னை செயிக்கப்போகிறுய் உன்னுல் வல்லமையுண்டாஞல் வில்லம்பை பூமியில்வைத்து என்னுடன் யுத்தம் பண்ணிப்பார் உன்னுடைய சாமார்த்தியமும் என்னுடைய சௌரியமும் அப்போதல்லவோ தெரியவரும் அப்படி யுத்தம் பண்ணுகிறதை விட்டுவிட்டு ஆயுத அஸ்திரங்கள் மிச்சமாயிருக்குதென்று நிராயுதராய் நின்றபேரை என்வீணில்கொல்லுகிறுய் நீ இராசகுமாரஞனல் என்னுடன் மல்லுத்தஞ்செய்துபார் அதில்தான் வீரனென்பதும் நீ சூரனென்பதுந்தெரியவரும் நீரிஷிபிள்ளையானபடியினுலே உனக்கு இந்தவில்வித்தைவிட வேறேயுத்தஞ் செய்யமாட்டாய் எதிரியுடன் வில்லம்பில்லாது கத்திகேடயமெடுத்து யுத்தஞ்செய்யவேண்டும் எதிரி நிராயுதனுக போர்புரியவேண்டும் இதல்லவோ இராஜநீதி முறமை, உனக்கு தனுர்வேதசாஸ்திர யுத்தம் ஒன்றுதான் தெரியுமோ நாலாவித யுத்தமும் தெரியவாராதோவென்றுன். அப்படி சொன்னமட்சயந்தனுமானைப்பார்த்து குலுங்கநகைத்து அடா! மட்சயந்தனுமானே? நல்லவசனம்சொன்னுய் காட்டில் வாசம்பண்ணப்பட்ட மிருகங்களுக்குசமதையான குரங்கு புத்தியை இனிநான் கேட்டல்லவோ, எந்தயுத்தமாகிலும் செய்ய விரும்புவேன், வில்லம்பிருக்கிறமட்டும் நான் வில்லம்புகொண்டே யுத்தம்பண்ணுவேன் உன்னுல் சாமர்த்தியமுண்டானுல் என்னுடைய வில்லையொடித்தெரி

ந்து போட்டாயேயானுல் அதன்பிற்பாடு எந்த யுத்தமாகிலும் பண்ணுவோமென்று அநேக திவ்வியாஸ்திரங்களை வில்லிற் சந்தித்து சரமாரியாக மட்சயந்தனுமான்பேரில் பாதாதிகேசம் வரையில் பொழிந்து விட்டான். அதனுல் மட்சயந்தனுமானுடைய சரீரங்களெல்லாம் ஜல்லடைக்கண்களாகத் துளைத்து உதிரவெள்ளம் சொரிய மகா ஆயாசத்தோடு ஸ்ரீராமராமாவென் றடியற்ற பனைசாய்ந்ததுபோல் மட்சயந்தனுமான் பூமியில் மரணமூர்ச்சை யடைந்தான். அதனைக்கண்ட பவர்னன் மகாகோபாக்கினியுடன் அநேக அஸ்திரங்களைத் தனுசிற் றெடுத்துவிட்டான். அந்த அஸ்திரங்களும் காலகோடி விஷம்போற் சீறிக்கொண்டு வருகையிற் குசலராசன் கண்டு பதினைந்து அர்த்த சந்திராஸ்திரமெடுத்து விடுத்து வருகிற பாணங்களையெடுத்து அதனமாக ஐந்துதிவ்வியாஸ்திரம் விடுத்து இரதம் சாரதி குதிரைகளையு மதஞ்செய்து பவர்னனுடைய மண்டையைப் பிளந்து விடவே, பவர்னனும் மிக ஆயாசத்தோடு வில்லை அடிதட்டிற் போட்டுவிட்டு மூர்ச்சையடைந்தான்.

அப்போது குசலராஜன் சந்தோஷமாகிப் பின்னுமநேக அஸ்திரங்களைச் சந்தித்து இரதகஜ துரகபதாதிகளின் மீதெய்து கொல்லுகிறபோது சேனைகள் நின்று நிர்வாகம் பண்ணமாட்டாம லோடத்தலைப்பட்டது, அதுகண்டு சேனுதிபதியான சூரசேனன் இரதத்தை நடத்தி ஓடுகிறசேனைகளை ஓடவொட்டாமல் திருப்பிக்கொண்டு வரும்போது குசலராசனுனவன் இரண்டாமணிவிட்டு மூன்றுமணியிற் புகுந்தான்.

## குசலரர்ஜனுக்கும்
## உக்கிரசேனனுக்கும் யுத்தம்.

---

### சந்த விருத்தம்.

வஞ்சமிகுமட்சயந்த வனுமான்பாய வயவீரன் குசலன்மூன்று மணியைச்சார்ந்தான், பஞ்சதுபோற் பரந்தபடை யுக்கிரசேனன் பாற்சென்று குறையுறைக்கவன்னேனும், தஞ்சமென வடுத்தவர்க்குத் தணிவுசொலலி தடந்தேர் மேலேறிசெஞ் சிலையைத்தாங்கி, செஞ்சுடரோன் முன்னமரும் மஞ்சுபோலச் சேனையொடுமேவிசிலசெப்புவானே.

இந்தப்படி மூன்றுமணியையடைந்த குசலராசனைக் கண்ட உக்கிரசேனன் மகாகோபாக்கினியுடன் இரதத்தை குச

லராசன் முன்னடத்திச் சொல்லுகிருன். அடா! குசலனே? நில்லு நில்லெங்கே வருகிருய் நீகையிலாகாத சிலபேரைக் கொன்றேமென்று கர்வித்திருக்கிருய். அந்த கர்வத்தை அரைட்சண நேரத்தில் அடக்கி வைக்கிறேன் பாரடாவென்று வில்லையெடுத்து நிறுத்தி அதிக தீட்சண்யமாக யிருக்கப் பட்ட ௧௦-திவ்வியாஸ்திரங்களை வில்லிற்றொடுத்து பிரயோகஞ் செய்தான். அதுகண்டு குசலராசன் கோபாக்கினியுடன் ஐந்து நாராசமெடுத்து அபிமந்திரித்து மிட்டான். அதுவும் விடுபட்டு நாகசற்பம்போற் சீறிக்கொண்டுவந்து உக்கிரசேனன் விட்ட பத்து திவ்வியாஸ்திரத்தையும் அவன் ஏறி வந்த இரதம் சாரதிகுதிரைகளையும் தும்சம்பண்ணிப் போட்டது. அதுகண்டு உக்கிரசேனன் லகுவில் தப்பித்துக்கொண்டு மறுதேரிலேறினுன். அதையும் இரண்டு திவ்வியாஸ்திரங்களைவிட் டுடைத்தெரிந்தான். இப்படி முப்பது இரதம்வரையிற் குசலராஜன் பாணங்களினுற் பொடியாகச் செய்ததால் உக்கிரசேனன் திக்குமுக்காடி அக்கணமறுதேரிலேறி சாரதியை எச்சரித்து இரதத்தை நடத்தி வில்லை யெடுத்து நிறுத்தி நாணிபிகிந்து அநேக திவ்வியாஸ்திரங்களை வில்லிற் சந்தித்து விட்டுவிட்டான். அந்தபாணுஸ்திரங்கள் அக்கினிசுவாலையுடன் வருகிறபோது குசலராஜன்கண்டு சீக்கிரத்தில் நூறு திவ்வியாஸ்திரம்விடுத்து உக்கிரசேனன் கைவில்லைக்கொய்து அவன் திரேகத்தைச் சதைசதையாகப் பேர்த்தெரிந்து சாரதி தலையறுத்து குதிரைகளையுந் துண்டுதுண்டாகத் தறித்துப் போட்டான். அதனுல் உக்கிரசேனன் தைரியம்விடாமல் கத்தி கேடயம் எடுத்து இரதத்தைவிட்டுக் குதித்து மண்டியிட்டு சிவ்வென்று பாய்ந்து வருவதை குசலராஜன் கண்டு ஒருதிவ்வியாஸ்திரமெடுத்து சீக்கிரம் விடுத்து கத்திபிடித்த கையை அறவெட்டித் தள்ளினுன். அந்தக்கத்தியுடன் கைபோகவே அதிக கோபமாகி வேகமுடன் இடதுகையிற் றண்டாயுதமெடுத்து சுழட்டி விட்டெறிந்தான். அதுவுங் குசலன்பேரில் ஓடிவருகிறபோது குசலராஜன்கண்டு ஒரு அர்த்தசந்திரமெடுத்துவிட்டு தெண்டாயுதத்தை அறுத்துத்தள்ளி அதிசீக்கிரமாக ஒருகண்டங் கத்திரி பாணமெடுத்து விடுத்து உக்கிரசேனன் சிரசை யறுத்துத்தள்ளினுன்.

---

## குசலராஜனுக்கும் அசுவசேனனுக்கும் யுத்தம்.

கலி விருத்தம்.

வெஞ்சமர்செய்து உக்கிரசேனனைத்
துஞ்சவெங்கணை தொட்டகுசலன்மேல்
பஞ்சபாதகனு மஸ்வசேனனும்
வஞ்சமோடுசமற்கு வளைத்தனன்.

அப்போது அஸ்வசேனன் மகாவுக்கிரத்துடன் இந்த குசலனுடைய வில்லையும் இவனுக்கு உறுதியானசொல்லையும் அந்தயெல்லையிலுள்ளவர்கள் யாவருமென்னை மெச்சத்தக்க தாய் கண்டிக்கிறேன் இவனையுமிருபிளவாகத் துண்டிக்கிறே னென்று கண்டிப்பாகச்சொல்லி அநேக அஸ்திரங்களை வில் லிற்சந்தித்து குசலராஜன்பேரில் சரமாரியாய்ப் பொழிந்து கொண்டிருந்தா னதுகண்டு குசலராஜன் வில்லிலநேக பாண ங்களைச் சந்தித்து விடுத்து அஸ்வசேனன் சரீரத்தைச் சல்ல டைக்கண்களா துளைபடச்செய்தான். அதனால் அசுவசேனன் மிகவும்நொந்து, ஒருசத்தியை எடுத்து பூசைசெய்துவிட்டா ன். அந்த சத்தியானது அண்டரண்டபுவனங்களும் நடுங்க ஆர்ப்பரித்துக்கொண்டுவருகிறதைக் குசலராஜன்பார்த்து, தா னுமோர் சத்தியை எடுத்து வந்தனைவழிபாடுசெய்து உச்சரித் து விட்டுவிட்டா னதுவும் விடுபட்டு அண்டர்விலங்கமற்றவர் கலங்கச் சண்டப்பிரசண்ட உத்தண்டத்துடன் ஆவென்று வாயைத் திறந்துக்கொண்டு அசுவசேனன் விட்ட சத்தியைக் கமளீகரம்பண்ணிப்போட்டது, அதனால் அசுவசேனன்மகா கோபாக்கினியுடன் வில்லிலநேக பாணங்களைச் சந்தித்து யுத் தம் பண்ணிக்கொண்டுவந்தான்.

அந்தசமயத்தில் சேனாதிபதியாகிய காலசித்தனெனவன் பாணவேகமடங்கியதால் இரதத்தை அதிகவேகத்துடன் நட த்திரணக்களம்வந்து குசலராஜனைக் கண்டு சொல்லுகிறான். அடா! குசலனே? நீயொருசேவகனென்று வில்லைகையிற்பிடி த்தாய், எதிர்நின்று யுத்தம்பண்ணப்பட்ட என்னை இப்படி யஸ்திரம்விட்டு சமயத்தில் ரதத்தை தூரத்திலோடச் செய்த படியினாலே இதுவரையில் நீர்பிழைத்திருந்தாய், இல்லாவிடி லென்னுடைய அஸ்திரத்தினா லெரித்துப்போடுவேன் இப் போது மன்னஎதோ எடுபார்ப்போமென்றான் அப்படிசொ

ன்ன காலசித்தனுடைய வார்த்தையை குசலராஜன் கேட்டு சொல்லுகிறான் அடா காலசித்தனே? விசேஷத்தைமிஞ்சாதே, என்னவார்த்தை புகன்றாய் நீயொருசேவகனென்று வில்லைகையிலே பிடித்தாயென்று சமயத்தில்வாய்வாஸ்திரம்விட்டு ரதத்தை பின்னுக்குத் தள்ளிவிட்டாயென்றும் இல்லாவிடில் உன்னையும் என்னுடைய அஸ்திரத்தினாலே பஸ்மீகரப்படலமா யெரியப்போடுவேனென் றல்லவோசொன்னாய், அந்தப்படியானால் என்னையும் என்னுடைய அஸ்திரத்தையும் எரிக்கப்பட்ட அஸ்திரமுண்டானால் எதோ எடுபார்ப்போமென்று வில்லிலநேகபாணங்களைச் சந்தித்து வருஷகாலத்தில் ஈசானியமூலையில் மேகமானதுவிடுபட்டு யிடிமின்னல்குமுறலுடனே ஓய்ஒழிச்சலில்லாமல் மாரிபொழிவதுபோலே ஒன்றரை நாழிகைபரியந்தம் மூச்சுவிடாமல் சரமாரியாய்ப் பொழிகிறபோது காலசித்தன்கண் டநேகபாணங்களைவில்லிற்சந்தித்து ஐப்பசிகார்த்திகைமாதத்தில் பெய்யு மழையைப்போலே இரண்டுநாழிகைபரியந்தம் பொழிந்துக்கொண்டிருக்கையில்இதில் குசலராஜன்விட்ட பாணங்க ளதிவேகமாய்வந்து காலசித்தன் விடப்பட்ட அஸ்திரங்களையறுத்து, காலசித்தனுடைய சரீரத்தையுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்து சாரதிகுதிரைகளையும் அதஞ்செய்து சேனைகள்பேரிலும் அஸ்திரங்கள்பாய்ந்ததினால் அதிக கூச்சலெழும்பத்தலைப்பட்டது.

அப்படிகுசலராஜனுடைய அஸ்திரங்களினாற் காலசித்தன்மிகவுங் கஷ்டமடைந்துகுசலராஜனைப்பார்த்து பல்லைக்கடித்து ஓரக்கினியாஸ்திரமெடுத்து வில்லிற்றொடுத்து மந்திராபூதிகள்கொடுத்து விடுத்தான் அந்த அக்கினியாஸ்திரமெடுத்துவில்லில்விடுபட்டு அக்கினிப்பொறிகளை வாரியிறைத்து சிடசிட படபடவென்கிற தொனியோடு திருதிகென் றெறிந்துக்கொண்டு அதிவேகமாய் வருகிறபோது குசலராஜன்கண்டு ஒரு அக்கினியாஸ்திரமெடுத்து தனுசிற்றொடுத்துமந்திராபூதிகளுடன் விட்டுவிட்டான் அந்த அக்கினியாஸ்திரமானது எரிபுகைகளுடன் யாவரும்மயங்க, மூவருந்தியங்க, தேவர்களும் அண்டம்விட்டண்டமொதுங்க, சத்திராதிகள்மனமொடுங்க, சிவ்வென்று வாயைத்திறந்துக்கொண்டுவந்து காலசித்தனுடைய அக்கினியாஸ்திரத்தை யறுத்து பூமியிற்றள்ளிப்போட்டு அம்புறாவில் வந்தடைந்தது.

அதனால் காலசித்தன் கடுஞ்சினமாகி ஒருசத்தியைக்கையி லெடுத்து மந்திராபூதிகள் செய்துவிட்டான் அந்தசத்தியா னது புறப்பட்டு அண்டரண்டபகிரண்டங்களும் ஆயிரத்தெ ட்டண்டங்களும்குலுங்க அக்கினிச்சுவாலையாய் அதிவேகத் துடன் சத்தியானது குரூரமாய் ஆகாயமெழும்பிச் சொல்லு தற்கரிய ஓசையுடன் குசலராஜன் எங்கேஎங்கேயென்று தேடி வருகிறபோது தேவர்கள் கண்டுபயந்து ஒரு அண்டம் உயர மோடிப்போனார்கள். அப்போது குசலராஜன்கண்டு இந்தச த்தி மகாமகிமையுடனேயும் வருகிறதென்று தன்னுடைய உ க்கிரவீரசத்தியைத் தன் கையிலெடுத்து மந்திராபூதிகள் செ ய்துவிட்டான். அந்த உக்கிரவீர சத்தியானது ஆவென்று வாயைத்திறந்து அக்கினியை குபீல்குபீலென்று கக்கிக்கொ ண்டு அதிவேகமாய்வந்து காலசிததன் விட்டசத்தியை குச லனண்டைக்குப் போகவொட்டாமல் மடக்கிக்கொண்டு யுத் தஞ்செய்து காலசித்தனுடைய சத்தியை கமளீகரம்பண்ணிப் போட்டு குசலராஜன் அம்புறாவில் வந்தடைந்தது.

அப்படி காலசித்தன் விட்ட சத்திபோகவே காலசித்தன் நாராயணாஸ்திரத்தைக் கையிலெடுத்தான். அதுகண்டு தேவர் களெல்லாம் பயந்து மேலண்டத்திற் கோடிப்போனார்கள். அப்படி தேவர்கள் நடுங்கும்படியாய் நாராயணாஸ்திரத்தை பூசைசெய்து வில்லிற்சந்தித்து விட்டுவிட்டான் அந்த நாரா யணாஸ்திரமானது ஆலகாலவிஷத்தைப்போல அக்கினியை வாரியிரைத்துக்கொண்டு அதிவேகத்துடன் வருகிறபோது, குசலராஜன்கண்டு இந்த நாராயணாஸ்திரமானதுமகாமகிமை யுடன் வருகிறதென்று தன்தாயார் கொடுத்த நாராயணாஸ்திர த்தை எடுத்து பூசைநைவேத்தியஞ்செய்து பிரயோகஞ்செய் தான். அந்த அஸ்திரமானது அண்டங்குலுங்க ஆர்ப்பரித் துக்கொண்டு காலசித்தன் விட்ட நாராயணாஸ்திரத்தின்மீது தடாலென்று மோதி ஒன்றோடொன்று தாக்கி சிலநேரம் யுத் தம்புரிந்து காலசித்தனுடைய நாராயணாஸ்திரத்தை கமளீக ரித்து அம்புறாவில் வந்தடைந்தது. அதுகண்டு காலசித்தன் மகாகோபாக்கினியுடனே எறிந்து விழுந்து குசலராஜனைக் கொல்லவேணுமென்று பிரமாஸ்திரத்தையுங் காலனிடவச் சிரகோபதெண்டாயுதத்தையுஞ் சிவன்கொடுத்த சூலமுமெடு த்து பூசைகள்புரிந்து குசலராஜனைப் பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறான். அடா! குசலனே? கேளும் இதுவரையில்

உன்னைச் சிறுபிள்ளை என்றும் ஸ்ரீராமரைப்போ லிருக்கிரு யென்றுஞ் சீதாலட்சுமியுடைய பிள்ளை என்றும் மனம் பொறுத்தேன் அப்படி மனம்பொறுத்ததோஷம் என்னுடைய சரீரமெல்லாந் துளைபட்டு மிகவுங் கஷ்தியடைந்தேன், ஆனபடியினு லிப்பொழுது பிர்மாஸ்திரமும் காலன்கொடுத்ததெண்டும் சிவன்தந்த சூலமும்விடுகிறேன் இனியுன்னைக் கொஞ்சத்தில் விடுவேனென்று யோசிக்காதே இதோ விட்டுவிட்டேன். இதை விலக்கடா பார்ப்போமென்று ஒன்றின்மேலொன்ருய்விட்டான் அம்மூன்ருயுதமும் வெளிப்பட்டு அண்டபகிரண்டமுதல் ஆயிரத்தெட்டண்டங்களும் நடுங்க, அக்கினிப் பொறிகளெழும்ப, அட்டகாசங்கள்செய்து, குசலராஜன் எங்கேஎங்கே என்று வருகிறபோது, அதை குசலராஜன் பார்த்து அதிகவிரைவில் தாயார்கொடுத்த நாராயணுஸ்திரத்தை எடுத்துபூசைசெய்து வில்லிற்சந்தித்துப் பிரயோகப்படுத்தினன் அந்த நாராயணுஸ்திரமும் விடுபட்டு மண்விண்ணதிர கீழுதடு கீழுலகமு வே லுதடு மேலுலக முருவுகொண்டு வடவாமுகாக்கினிப் பொறிகள் சிந்தி பூமியில்விழுந்து ரணக்களத்தி லிருக்கும் யானைதேர் பரிசேனைகளும் எரிந்து பொரிந்து சுடுநாற்றங்களெழும்ப ஆங்கார வீரபராக்ரமத்துடன் விட்ட பிர்மாஸ்திரம் தண்டாயுதம் சூலாயுதத்தின் பேரிலும் வந்து சடாலென்று மோதி ஆகாயம் பூமியுமொன்ருய் ரூபங்கொண்டெதிர்த்துப் போராடி யுத்தம் புரிந்து அம்மூன்ருயுதத்தையும் முன்னுக்குவர வொட்டாமல் அடித்துத் துரத்துகிறபோது, தேவர்கள்கண்டு, இந்த நாராயணுஸ்திரமானது நமதுபேரில் எங்கே வருகிறதோவென்று தியங்கி மயங்கும்படியாய் அம்மூன்றஸ்திரங்களுஞ் சின்னப்பட்டு வெட்கி அது இருப்பிடம்போய்ச் சேரவே, காலசித்தன் கண்டு பயங்கொண்டு, எல்லாம் ஸ்ரீராமருடைய கிருபையென்று மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு பாசுபதாஸ்திரமெடுத்து வில்லிற்சந்தித்து மந்திரபூர்வத்துடனே பூசைகள்செய்து குசலராஜனை செயமடைந்து வாவென்று ஆகர்னபரியந்த மிழுத்துவிட்டான்.

அந்தப்பாசுபதாஸ்திரம் விடுபட்டு அதற்கு காவலாய் அஷ்டவயிரவர்களும் பாணத்தின் மூலையில் சூலத்தைப்பிடித்துக்கொண்டிருக்க, அஷ்டதிக்குப்பாலகரு மவரவர்களாயுதங்களும் பாணத்தின்மத்தியில் நிற்க, ஏகாதசருத்திராள் துவாதசாதித்தர்கள் சூலங்களை கையிற் பிடித்துக்கொண்டு பாணத்

தினுடைய வலப்புரமாக கார்க்கப்புறப்பட்டது. அந்த பாசு பாஸ்திரத்தைக்கண்டுதேவர்கள் சொல்லிக்கொள்ளுகிருர்கள் பிர்மாஸ்திரத்தையும் சூலத்தையும் தெண்டாயுதத்தையும் நாராயணுஸ்திரஞ்செயித்தது இந்தபாசுபதாஸ்திரத்திற்குளந்த அஸ்திரம்விடுவாஞே பார்ப்போமென்றிருக்கையில் குசலராஜன் கண்டு இந்த அஸ்திரமு மகாமகிமையுடன் வருகிறதென்று நினைத்து கனைத்துதன் தாயார்கொடுத்த நாராயணுஸ்திரத்தை எடுத்து தூபதீபநைவேத்தியங்களுஞ்செய்து, மந்திராபூதியுடனே வில்லிற் சந்தித்து தன் தாயைதுதிசெய்து காலசித்தன் விட்டபாசுபதாஸ்திரத்தைசெயித்துவாவென்று விடவே, அந்த நாராயணுஸ்திரமானது அண்டரண்ட பிர்மாண்டம் ஆயிரத்தெட்டண்டங்களும் நடுங்க அட்டகாசஞ் செய்து ஆவென்று வாயைத்திறந்து வடவாமுகாக்கினியை வாரி குபீல் குபீலென்று பூமியிற்கக்குகிறபோது அந்த அக்கினிப்பொறியானது பூமியில்விழுந்து புல்லுபூண்டுமரமட்டை செடிகளும் பத்தி எறிய, அந்த அக்கினிச்சுடரில் யானைதேர் பரிசேனைகளும் சுடுநாற்றங்களெழும்ப, அண்டரண்ட புவனங்களும் நடுங்க, அஷ்டதிக்குமதிர, ஆலகால விஷத்தைப் போற் சீறிக்கொண்டு அதிகவேகத்துடன் வந்து காலசித்தன் விட்ட பாசுபதாஸ்திரத்தை சடாலென்று மோதியடிக்கவே பாசுபதாஸ்திரத்தை காத்துக்கொண்டுவந்த அஷ்டவயிரவர்களுடைய சூலமுமொடிந்து அஷ்டதிக்குப் பாலகரிட ஆயுதங்களுமொடிந்து ஏகாதசருத்திராள் சூலமுந்த விடுபொடியாகி அஷ்டவயிரவர்களும் அஷ்டதிக்குப் பாலகரும் ஏகாதசருத்திராளும் நாராயணுஸ்திரத்திஞல் அடிபட்டு முறிந்தோடியும் பாசுபதாஸ்திரமானது உக்கிரம்விடாமல் நாராயணுஸ்திரத்தின்பேரி லெதிர்த்து யுத்தஞ்செய்கிறபோது, நாராயணுஸ்திரம் அதிக உக்கிரத்துடன் பாசுபதாஸ்திரத்தை முறிய அடித்து பூமியிற்றள்ளிவிட்டு அம்புறுவில் வந்தடைந்தது. பாசுபதாஸ்திரமானது பின்னப்பட்டு உருவாகி சிவபிரானிடம்போய்ச் சேர்ந்தது தேவர்களும் நாராயணுஸ்திரத்தினுடைய மகிமையை ஒருவராலுஞ் சொல்லமுடியாதென்று கொண்டாடிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது காலசித்தன் மிகவும் விசனப்பட்டு ராட்சதாளைப்பார்த்துச் சொல்லுகிருன். அடா ராட்சதர்களே குசலன் சிறுபிள்ளையென்று பார்த்தீர்கள் நம்முடைய ராட்சத குலத்திற்கு நமனுகவந்திருக்கிருன் இவனைக் கொஞ்சத்தில்

விடப்போகாது நாலுமூலையும் வளைத்துக்கொண்டு யுத்தஞ் செய்து செயிக்கவேண்டுமென்று சொல்லி மூன்றுமணியிலிரு ந்த ரதகஜதுரக பதாதிகளையுங்கூட்டி யானைகளொரு பக்க மும் ரதங்களொரு பக்கமுமாய் நிறுத்தி குசலனை நடுவில் மட க்கிக்கொண்டு தானு மஸ்வசேனனும் சேனைகளை ஏவிவிட்டு வில்லையெடுத்து நிறுத்தி அநேகபாணங்களை வில்லிற் சந் தித்து இடைவிடாமல் சரவருஷங்களைப் பொழியும்போது குசலராஜன் கண்டு நகைத்து அபரிமிதமான அஸ்திரங்களை வாரி ஈசானிய மூலையிலிருந்து மேகமானது விடுபட்டு இடி மின்னல் குமுறலுடனே மழைசொரிவதுபோல ஓயாமல் நா லுமூலையும் குயவன் றிகிரிபோற்றிரும்பி எய்து ராட்சதாளு டைய அஸ்திரங்களை யறுக்கமாளாமல் பாணங்களானது வ ந்துவிழும்படியாய் அப்படி ராட்சதாளும் காலசித்தனும் அ ஸ்வசேனனும் ரோஷத்து வேஷங்களுடன் மிதமில்லாத பாணங்களை குசலராஜன்பேரி லெய்கிறபோது குசலராஜன் எத்தனை பாணமென்றறுப்பான் எவ்வளவுதடுப்பான் என்ன மாய் தானும் அஸ்திரம் விடுப்பான் ராட்சதாளோ கட்டுகட் டாய் பாணங்களை மட்டுமிதமின்றி உருவிவிடுகிறார்கள் அத னாற் குசலராஜனும் நல்லதென்று வில்லைநாட்டி அஸ்திரங் களைப்பூட்டி க-ம-கOO-கூ-மகூ-ாகூ-என்று ஒருமுகூர்த்தம் மூன் றேமுகூர்த்தம் நாழிகை சரவருஷமாக பொழிகிறகாலைப் யில் அந்த அஸ்திரங்களானது காலசித்தனும் ராட்சதா ளும் விடப்பட்ட பாணங்களை யெல்லாமறுத்து ரதகஜ துரகபதாதிகளின்பேரில் மூனைந்து எப்படிவிழுகிறதென்றால் யானை யொன்றுக்கு மூன்றுபாணம், சவுடாலுக்கு ஒருபாண ம், இராசாவுக்கிரண்டுபாணம், மாவுத்தனுக்கொரு பாணம், இந்தப்படி கணக்காகவிட்டு கொல்லுகிறபோது அதில் யானை களானது காலறுந்தும், வாலறுந்தும், தும்பிக்கையறுந்தும், மத்தகம் பிளந்தும், கொம்பு முறிந்தும், குடல்சரிந்தும், வி ழுந்தது பின்னும் இரதத்திற் கைந்துபாணம் இராசாவுக்கிர ண்டு பாணம் சாரதிக்கொருபாணம் குதிரைக்கிரண்டுபாணம் இவ்வண்ணமாக விடுகையில் அந்த இரதங்கள் அச்சுவேறு, ஆணிவேறு, குத்துக்கால் வேறு, கொடுங்கைவேறு, சட்டம் வேறு, துவசம்வேறு, கொடிவேறு, சாரதிவேறு, கால்வே று, உடல்வேறு, தலைவேறு, குதிரை வேறாகவிழத் தலைப்பட் டது. அப்பால்குதிரைகளுக்கோ வென்றால் மூன்றுபாணம்,

ராவுத்தனுக் கிரண்டுபாணம், சாரதிக்கொருபாணம், இந்தப் படி கணக்காய் பாணங்கள் போய்விழுகிறபோது காலறுந்தும், வாலறுந்தும், தலையறுந்தும், குடலறுந்து மாயவும் ராக்ஷத சேனைகளுக்கோவென்றால் நபுரொன்றுக்கிரண்டு பாணங்கள் கணக்காக விடுத்துக் கொல்லுகையில், சேனைகளெப்படி விழுகிறதென்றால் தலைவேறு, கைவேறு, உடல்வேறு, சதைவேறு எலும்புவேறு, குசலராஜனுடைய பாணங்களினால் ரதகஜதுரக பதாதிகளுமாண்டுகாலசித்தன் சரீர முழுதுந் துளைபட்டு ஆயாசத்தோடு ஸ்ரீராமா ராமாவென்று கைவில்லை நழுகவிட்டு தேரின்பேரிற் சாய்ந்துமூர்ச்சையடைந்தான். அப்போது பாசறையிலுள்ள ஜனங்கள் மாண்டுபிணக்குவியலாய்க் குவிந்து உதிர வெள்ளமானது ஓடத்தலைப் பட்டது.

## வீரசேனனும் சூரசேனனும் குசலராஜன்பேரில் யுத்தம் பண்ணுதல்.

---

### எழுசீரடியாசிரிய விருத்தம்.

அண்டமெண்டிசையுஞ்சரங்களான் மறைந்தவஸ்வசேனன்முடிசிந்தக்
கண்டிடுவீரசேனனுஞ்சூரசேனனுங் கருவியேயெழுந்து
சண்டமாருதம்போற்றனுவிட்டடர்ந்து தனியனுங்குசலனைவளைத்து
எண்டிசையோருங்கிலிகொளக்கணைகள் மாரிபோல்வாரியேயிறைத்தார்.

அப்பால் குசலராஜன் மூன்றுமணிகடந்து நான்காமணியில் வருகிறபோது மூன்றுமணியிற் காலசித்தன் செய்திருந்த யுத்தத்தைப் பார்த்துக்கொண்டிருந்த ஸ்ரீராமருடையதண்டுதளங்களுக்குசேனாதிபதியான சூரசேனனும், மட்சயந்தமகாராஜனுடையகுமாரனாகியவீரசேனமகாராசனும், இவ்விருவருங் குசலராஜனை நாலாமணியில் போகவொட்டாமலும், மூன்றுமணியில் நிறுத்தி குசலவன் முன்னுக்கு இரதத்தை நடத்திச் சொல்லுகிறான். அடா! குசலனே! எங்களைக்கண்டு பயந்து நீயோடினால் நாங்கள் விடுவோமோ போகாதே நில்லடாவென்றுவில்லைவளைத்து நாணிபிகிந்துபாணங்களை எடுத்துமாரிபொழிவதுபோல சரமாரியாய்ப் பொழிகையில் குசலராஜன்கண்டு, கோபங்கொண்டு வில்லிலனேக அஸ்திரங்களைத்தொடுத்து அவர்கள்விட்ட அஸ்திரங்களையறுத்து அதனமாகச-இடியாஸ்திரங்களைவிடுத்து வீரசேனன் சூரசேனனேறிவந்த இரதத்

தையும் உடைத்தெரிந்துப்போட்டான். இரதமுடைந்துபோகவே, வீரசேனனும் சூரசேனனும் பூமியிற்குதித்து மறுதேரிலேறி இருதிறவரும் வில்லைவளைத்து நாணிபிகியாமுன்னமே குசலராஜன் அதிசீக்கிரமாக ச-இடியாஸ்திரமெடுத்துவில்லிற் சந்தித்துவிட்டு இருதிறவருமேறிய இரதத்தை மறுபடியு முடைத்துவிட்டா னந்தஇரதம்போகவே, வீரசேனனுஞ் சூரசேனனும் வேறுரதமேறி வில்லையெடுத்து வளைத்து பாணந்தொடுக்குமுன்னமே குசலராஜன் உ-வாய்வாஸ்திரத்தைவிடுத்து சண்டமாருதம் வீசுவதுபோல் இரண்டு பாணங்களும் அதிக வேகத்துடன் இருவருடைய இரதத்தில் வந்து புகுந்து இரதத்தைபின்னிட்டவண்ணம் கறுo-யோசனை தூரத்தில்கொண்டுபோய் விட்டது.

சவுபாலரர்ஜனுக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

---

கலி விருத்தம்.

வலிமிகுத்தவிருவரும்வாளியான்
மெலிவுகொண்டவர்மேவியசெய்தியை
நலிவுளோர்சொல்கேட்டசவுபாலன்
ஒலிசெயும்ரதத்தூர்ந்தவன்னுடிஞன்.

அதுகண்டுகுசலராஜன் வில்லையெடுத்துக்கொண்டுமூன்றுமணியைவிட்டு நான்காமணிக்குவருகிறபோது, சந்தனமகாராஜனுடையபேரன் சல்லியமகாராஜனுடை குமாரன்சவுபாலராஜன்கண்டு, இரதத்தை குசலராஜன்முன் செலுத்திசொல்லுகிறான் அடா சிறுபிள்ளாய், எங்கேவருகிருய் நில்லு நில்லடாவென்று வில்லைவளைத்து அநேகபாணங்களை வில்லிற் சந்தித்துப்பிரயோகம் பண்ணினன். அந்தபாணங்களும்வில்லில் விடுபட்டு அதிவேகமாக வருகிறபோது குசலராஜன் கண்டு ம-அர்த்தசந்திராஸ்திரமெடுத்து வில்லிற்றொடுத்து விடுத்துவருகிற அஸ்திரங்களை அதம்பண்ணிவிட்டான். அதுகண்டு சவுபாலராஜன்கோபமாகி-கoo நாராசபாணங்களெடுத்துகுசல்ராஜ வில்லைப் பார்த்து விட்டுவிட்டான், அந்த நாராசபாணங்களும் விடுபட்டு நாகசற்பம்போற் சீறிக்கொண்டு அதிவேகத்துடன் வருகிறபோது குசலராஜன்கண்டு, அதிசீக்கிரமாய் கO-நாராசபாணங்களெடுத்து வில்லிற்சந்தித்துவிட்டு கOO-நாராசபாணங்களையு மறுத்தெறிந்து அதனமாகஉ-நாராசபாணங்கள்விட்டு சவுபாலன்பிடித்திருந்த வில்லை கO-பிளவாகப் பிள

ந்துந்போட்டா னதுபோகவே, தட்சணம் சவுபாலன் ஒருவில்லை யெடுத்து நாணிபிகிந்து ருO-அர்த்தசந்தி ரா ஸ்திரமெடுத்து வில்லிற்சந்தித்துப்பிரயோகம் பண்ணினன். அந்த அர்த்த சந்திராஸ்திரங்களானது வில்லில் விடுபட்டு அக்கினிச்சுவாலைகளுடன் அதிவேகமாய் வருகிறபோது குச லராசன் க°-அர்த்தசந்திராஸ்திர மெடுத்து ரு°-அர்த்தசந்தி ராஸ்திரத்தையு மறுத்து அதனமாக ஒரு இடியாஸ்திரம்விடு த்து சவுபாலனேறிவந்த இரதத்தை சுக்கல்சுக்கலாக உடைத் துவிட்டான்.

அதனல் சவுபாலன் கோபங்கொண்டு மறுதேரிலேறின னந்ததேரையும் ஒருஇடியாஸ்திரம்விட்டுஉடைத்தெரிந்தான் இந்தப்படியாக உOO-இரதமுடைந்துபோகவே, சவுபாலன் அதிசீக்கிரமாய் வேறொருதேரிலேறி சாரதியை எச்சரித்து குசலராஜன்முன்பு இரதத்தைநடத்தி வில்லைஎடுத்து நிறுத்தி அநேகபாணங்களை வில்லிற்சந்தித்து சோனைமாரிபோல சர மர்ரியாய் குசலராஜன்பேரிற் பொழிந்துவிட்டான். அதனை குசலராசன்பார்த்து கO-திவ்வியாஸ்திரங்கள்விட்டு சவுபால ன்விட்ட அஸ்திரங்களை எல்லாம் கண்டனஞ்செய்து சவுபா லன் மார்பிலணிந்தநவகவசங்களையும் பொடியாக்கிவிட்டான் அதுபோகவே, சவுபாலன்சீறிகோபமீறிஒருசத்தியைஎடுத்து மந்திராபூதிகள்செய்து விடுத்தானந்த சத்தியானதுவிடுபட்டு அண்டரண்டபுவனங்களும் நடுங்க, ஆர்பரித்து குசலன்பே ரில்வருகிறபோது குசலராஜனும் வெற்றியுடையசத்தியொன் றை அந்தட்சணமெடுத்து பூசாவிதிகள்கொடுத்துவிடுத்தான். அதுவும்விடுபட்டு சவுபாலன்விட்ட சத்தியை சித்திரவதை செய்துவிட்டு அவ்வரசனேறிவந்த இரதத்திற்கட்டிய நான் கு குதிரைகளையு மாய்த்து சாரதிதலையைதேய்த்து பின்பு சவு பாலனுடைய மகரகுண்டலகேயூர மதாணிப்பதக்கங் கிரீடங் களுடனிருக்கப்பட்ட சிரசையறுத்துத்தள்ளி அம்புருவில் வ ந்தடைந்தது.

சவுந்தரராசனுக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

---

கலிவிருத்தம்.

வெற்றிடுசவுபாலன் மாய்ந்தபின்மேனகை
பெற்றிடுங்குசலன் பிணக்காடுபோ
லுற்றசேனைமதுவுள்ளம திருட்டவே
சற்றிரக்கமுற்சவுந்தரன் தோன்றினன்.

அதனைக்கண்ட சவுந்தரராஜன் தமையனிறந்தா னென் று சாரதியை யெச்சரித்து இரதத்தைநடத்தி வில்லையெடுத்து

நிறுத்தி அநேக அஸ்திரங்களை வில்லிற் சந்தித்து குசலரா ஜன்பேரிற் பிரயோகம்பண்ணினான். அதுகண்டு குசலராஜன் பதினைந்து திவ்வியாஸ்திரங்களையெடுத்து தனுசிற்றொடுத்து பிரயோகப்படுத்தி சவுந்தரராஜன்விட்ட அஸ்திரங்களையறு த்து வெட்டவெளியாக்கினான். அதனால் சவுந்தரராஜன் கோ பங்கொண்டு அடா இராஜகுமாரா, நீயிப்போது என்னுடை ய தமையனை கொன்றாயல்லவா, அப்பழிக்குப்பதில் உன் னைக் கொன்றுப் பழியைத் தீர்த்துக் கொள்ளாவிட்டால் என் பேர் சவுந்தரராஜனா பாரென்று சபதஞ்செய்யவே குசலரா சன் அடா! சவுந்தரராசனே? என்னவசனம்புகன்றாய் என் னைக் கொல்லாவிட்டால் நீபிடித்தது வில்லுமல்ல, உன்பேர் சவுந்தரராசனுமல்ல, அஸ்திரத்தினா லுன்னையும் உன் இர தம் சாரதிகுதிரைகளையும் பஸ்மீகரப் படலம் பண்ணாமல் போவேனேயானால் நான்பிடித்தது பிரசண்ட கோதண்டமு மல்ல என்பேர் குசலனுமல்லவென்று சபதங்கூறி, ஒரு அக் கினியாஸ்திரத்தை யெடுத்து தனுசிற்றொடுத்து பூசை நை வேத்தியங்கள் கொடுத்து கடுகடுத்து விடுத்தான் அந்த அக் கினியாஸ்திரமானது திக்குகள் நடுங்க, தேவர்கள்வொடுங்க, சக்கரம்போற் சக்கிராகாரமாய் அக்கினிப்பொறிகளைக் கக்கிக் கொண்டு வரும்போது சவுந்தரராசன்கண்டு பத்து வருணாஸ திரங்களை யெடுத்து தூபதீப நைவேத்தியங்கொடுத்து விடுத் தான். அதுவும் யுகாந்தகால யிடிபோலிடித்துக் கொண்டு குசலன் விட்ட அக்கினி யாஸ்திரத்தின்பேரில் வருணாஸதிர மானது சற்றுமசையாமல் எரிகிற கூர்மையின்பேரில் வரு ணாஸதிரமானது சற்றுமசையாமல் எரிகிற கூர்மையின்பே ரில் எண்ணெயைக்குப் புறக்கவிழ்த்ததுபோல் வருணாஸதிரத் தை கமளீகரம் பண்ணிக்கொண்டு அதிக அக்கினிச்சுவாலையு டன் திகுதிகென்றெரிந்துக்கொண்டு வருகையில் சவுந்தரரா சன் பின்னும் அநேகபாணங்களை விடுகிறபோது அவைகளை யும் தும்சம்செய்து சலுதியாகவந்து இரதம்சாரதி குதிரை களையும் சவுந்தரராசனையும் பஸ்மீகரப்படலம்பண்ணி விட்டு அதிகவேகமாக அம்புறாவில் வந்தடைந்தது.

## சல்லியராசனுக்கும் குசலராசனுக்கும் யுத்தம்.

---

### கலிவிருத்தம்.

அந்தகன்பாற் சவுந்தரனணபின்
சிந்தைநொந்து படைகள்சிதறிட
வெந்தியர்கொடு சல்லியராசனும்
வந்துதேர்மேல் வளைத்தனன்வில்லையே.

அப்படிசபதங்கூறிய சவுந்தரராசனிறந்து போனதைச் சல்லியராசன்கண்டு பிள்ளைகளிறந்து போனார்களென்று அதிககோபாக்கினியுடன் யானையின்மீதேறி குசலராஜன் முன்பு நடத்தி அடா! குசலனே? நீஎங்களுடை சேனைகளை யும் என்னுடைய குமாரர்க ளிருவரையும் என்ன நிமித்த மாய்க் கொன்றாய் சொல்லடாவென்றான். அப்படி சொல்லிய சல்லியராசனைப் பார்த்துச் சொல்லுகிறான் ஓ! மகாராசனே? என்னவசனம்புகன்றாய் என் தம்பிலவனை உங்களிராசாவா கிய சத்துருக்கர் பிடித்துக் கட்டினபடியால் என்னை ஜெயித்து என்தம்பியைக்கொண்டுபோ யில்லாவிட்டால் நீவந்தவழி யைப்பார்த்துக்கொண்டுநடவென்றான். அவ்வார்த்தையைக் கேட்ட சல்லியராசன் குசலனைப்பார்த்துச்சொல்லுகிறான். அடா! குசலனே? என்னவார்த்தையுரைத்தாய் சத்துருக்க மகாராஜன் விட்ட குதிரையை உன் தம்பிலவன் பிடித்துக்க ட்டி யுத்தஞ்செய்து எங்கள்சேனையைக் கொன்றபடியினாலே சத்துருக்கமகாராஜனனவர் கண்டு லவனுக்குப் பிரியவசனஞ் சொல்லியும் அவன்கேளாமற் சத்துருக்கமகாராசனுடனெ திர்த்து யுத்தம்புரிந்தபடியினால் சத்துருக்க மகாராசன் லவ னைப் பிடித்துக் கட்டிவிட்டார் இதுகளை நீயோசியாமல யிப் படிவீணிற் சேனைகளைக் கொல்லுகிறாய், இவ்வண்ணம் போர் புரிந்தோ உன்தம்பிலவனை விடுவிக்கப் போகிறாய், வருஷம் பன்னிரண்டானாலும் சத்துருக்கமகாராசனைச் செயிக்க வல்ல மையுண்டோ இராது, நீயும் வீணில்மடிந்துபோகாமல் சத் துருக்கமகாராசனை வணங்கி உன் தம்பிலவனை விடுவித்துக் கொண்டுபோ வென்றான். அப்படிக்கூறிய சல்லியனைக் குசல ராசன்பார்த்து சொல்லுகிறான். ஓ! இராசனே? கேளும், எங் கள் வனத்திற்கு நீங்கள் விட்டகுதிரை வந்தபடியினால் என்தம்பிலவன் பிடித்துக்கட்டினான், உங்கள் குதிரை உங்கள் பட்டணத்தைச் சுற்றிப் பிரதட்சணம் வரவேண்டுமேயல்லா மல் எங்கள்வனம் வரலாமோ வந்தபடியினால் யுத்தம்பண்ணி னான் அவனை நீங்கள் கட்டிக்கொண்டுபோக என்னஞாய மிருக்கிறது அப்படிஞாயமின்றி அவஞாயமாகஎங்கள் வன த்தில் நீங்களும் உங்களுடையகுதிரையும் அடிவைத்ததுமல் லாமல் என்தம்பிலவனைப்பிடித்துக்கட்டிக்கொண்டுபோனபடி யினால் சத்துருக்கமகாராசனுக்குத் துணையாகவந்த உன்னை யும் உன்னுடைய சேனைகளையும் உன்ராசனாகிய சத்துருக்க

மகாராசனையுங்கொன்று என்தம்பி லவனைமீட்டுக்கொண்டு உங்கள்குதிரையையும்பிடித்துக்கட்டி அதற்குமேல்வரப்பட்ட சேனைகளைக் கொன்று இராமலட்சுமணர் பரதனைக்கொல்லா மற்போவேனேயானால் நான் பிடித்தது பிரசண்டகோதண்ட முமல்ல என்பேர் குசலராசனுமல்லவென்று சபதம் பண்ணினான்.

அப்படி குரூரமாகச்சொல்லிய குசலராசன் வார்த்தையைச் சல்லிராசன் கேட்டுசொல்லுகிறான். அடா! குசலனே? என்னைக்கொல்ல வல்லமையுனக்குண்டோ நல்லது உன்னை என்னுடைய பாணங்களினால் முன்னங்கொல்லாமல் விடுவேனேயானால் நான் பிடித்தது வில்லுமல்ல, நானேறிவந்தது பட்டத்துயானையுமல்ல, என்பேர் சல்லியராஜனுமல்ல, என்னைக்கொல்லப்பட்ட அஸதிரத்தை எதோ எடுத்துவி பார்ப்போமென்றான். அப்படி அதிக உக்கிரமாகசெப்பிய சல்லியனை நோக்கி ஓ! இராசனே? உன்னிலுமிஞ்சிய புஜபல பராக்கிரமமுள்ள பேரெல்லாம் உனக்கு முன்னிறந்துபோனதை நீ கண்டிருந்தும் சபதம் பண்ணலாமோ அவர்களிலும் அதிக வீரசூர பராக்கிரமமுள்ளவன் நீயானால் எதோ எடு தொடு விடு இல்லாவிடில் அடிபடு கொடுயென்று வில்லைக் குணத்தொனி பண்ணவே அந்த ஓசையைச் சகலரும் கேட்டு மனது திடுக்கிட்டார். அப்படி திடுக்கிடும்படியாய் ஒருசிங்கமுகாஸதிரத்தை யெடுத்து மந்திராபூதிகொடுத்து தனுசிற்றொடுத்து விடுத்தான் அந்த சிங்கமுகாஸதிரமானது, விடுசட்டு அனேக சிங்கங்களாக உருவுகொண்டு வரும்போது சல்லியராஜன் கண்டு அனேக திவ்வியாஸதிரங்களை வில்லிற்சந்தித்துப்பிரயோகஞ் செய்தான் அந்த திவ்மியாஸதிரங்களையும் தடாய்த்துக்கொண்டு வரும்போது மதனமென்னப்பட்ட யானையானது கண்டு பயந்து ஓடத்தலைப்பட்டது. அதனை சல்லியராசன் பார்த்து மாவுத்தனை யெச்சரித்து யானையை முன்னுக்கு நடத்தி ஒரு சத்தியை யெடுத்து பூசைநைவேத்தியஞ் செய்து குசலராஜன் விடுத்த சிங்கமுகாஸதிரத்தை யறுத்து அவ்விராஜன்பேரிற் சத்தியானது வருகையில் அவன் கண்டு தானும் ஒருசத்தியை யெடுத்து சல்லியராசன் விட்ட சத்தியை அறுத்தெறிந்தான் அதனைக் கண்ட சல்லியராசன் அதிககோபாவேசத்துடன் மாவுத்தனை யெச்சரித்து யானையைநடத்தி வில்லிலனேக திவ்வி

யாஸ்திரங்களைப் பூட்டிப் பிரயோகஞ் செய்தான். அந்த திவ்வியாஸ்திரங்களும் விடுபட்டு அதிக அக்கினிச் சுவாலையுடன் வரும்போது குசலராஜன் ஐம்பது திவ்வியாஸ்திரங்களைப் பிரயோகித்து சல்லியராசன் விட்ட திவ்வியாஸ்திரங்க ளனைத்தும் அறுத்து அதனமாக ௧00-திவ்வியாஸ்திரங்களும் விடுத்து தகத்தகாயமாய் தங்கக்கட்டுகளுடனே பிண்டபட்கி யிறகுபூண்ட நெருப்புப் பொறிகளைக் கக்கிக்கொண்டு வருகிறபோது சல்லியராசன் இருபதுபாணங்களெடுத்து வில்லிற்றொடுத்து விடுத்தான் அந்தயிருபது திவ்வியாஸ்திரங்களும் விடுபட்டு குசலராசன் விட்ட திவ்வியாஸ்திரத்தின்பேரில் சடாலென்று வந்துமோதி குசலனுடைய திவ்வியாஸ்திரத்தினு லறுபட்டு பூமியில் விழுந்து போயிற்று பின்னுங்குசலராஜனுடைய திவ்வியாஸதிரமானது உக்கிரம் அடங்காமல் சல்லியராசன்பேரிலும் பட்டத்து யானைபேரிலும் அம்பாரியின்பேரிலும் எப்படிவிழுகிற தென்றால் யானைக்கு திவ்வியாஸதிரம்-௧ அம்பாரிக்கு திவ்வியாஸதிரம்-௨ மாவுத்தனுக்கு திவ்வியாஸதிரம்-௧ இந்தப்படி கணக்காக திவ்வியாஸதிரம் விடுபட்டுவந்து சேனைகள் மீது விழுந்து யானைவாலறுந்தும், மாவுத்தனுக்கு மண்டையுடைந்தும், சல்லியராசனும் யானையும் சிறமறுந்து பூமியில்விழுந்து மரணமடைந்துபோனார்கள். அதுகண்டு குசலராஜன் சந்தோஷமாகி விலலிலனேக பாணங்களை விடுத்துக்கொண்டிருந்தான்.

சாத்மீகராஜனுக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

---

கலிவிருத்தம்.

வில்லும்வேலு மொழிந்தசல்லியன்
சொல்லொடுங்கி புவிமிசைசேரவே
ரெல்லற்கென்செய்வோ மென்றுசாத்மீகனும்
பல்லைக்காட்டி படுகளத்தோடினன்.

அப்போது சாத்மீகராஜனனவன் குசலராஜன்பேரில்யுத்தஞ்செய்துக்கொண்டிருந்த தன்பிள்ளைகளுந் தமையனும் இறந்துபோனார்களென்று கேள்வியுற்று மகாவிசனப்பட்டுச் சாரதியையெச்சரித்துக்குசலன்முன்னுக்கு இரதத்தைநடத்தி அவ்விராசனைப்பார்த்துச் சொல்லுகிறான். அடா! ரிஷிகுமாரா? உன்னைப்போல் வீண்சண்டை தேடிக்கொண்ட பிள்ளையை நானெங்குங் கண்டதில்லை அதுவுமன்றி உன்வித்தையும் சூரதத்துவமும் எங்கள்முன்பா காண்பிக்கிறது நீ சிறு

பிள்ளையென்று உனக்கு ஞாயம்சொல்லி விலக்கவந்தபேரை யெல்லாம் இப்படி அஸ்திரங்களைவிட்டு கஸ்திப்படுத்திச்சித் திரவதை செய்யலாமோ சொல்லடாவென்றான். அப்படிச் சொல்லிய சாத்மீகராஜனைப்பார்த்து குசலராஜன் ஓ! இராச னே? கேளும் யெனக்கு ஞாயஞ்சொல்ல வந்தவர்களை யெல் லாம் வீணில் மாய்த்துப்போட்டேனென்று நீர் ஞாயஞ்சொ ல்ல வந்தீரல்லவா, எங்கள் வனத்திற்கு உங்கள் குதிரைவந் தடி வைத்ததுமல்லாமல் என்தம்பி லவனுடனே யுத்தஞ்செ ய்து அவனைப் பிடித்துக்கட்டிக் கொண்டுபோக ஞாயமுண் டோ சொல்லுமென்று கேட்டான். அதற்குச் சாத்மீகராஜன் சொல்லுகிறான். அடா தம்பி ரிஷிகுமாரா, என்னவசனம் பகர்ந்தாய் பராபரவஸ்துவாய் விளங்கப்படாநின்ற ஸ்ரீமந் நாராயணரே ஸ்ரீராமனாகத் தசரதராஜன் வயிற்றிலவதரித்த ஸ்ரீராமபிரானுக்குத் தன்பட்டணமென்றும் என்னுடு தேசம் பூமியென்றும் அவருக்கு வேற்றுமையுண்டோ, அவர் விட் டகுதிரை உங்கள் வனத்தில்வர என்னபாக்கியம் பண்ணினீர் கள் நீசிறுபிள்ளைத் தன்மையனானபடியினாலே அவர்விட்ட குதிரையைப் பிடித்துக்கட்டி அவருடைய சேனைகளையிப்படி அனியாயமாகக் கொன்றாய் இந்த புத்தியைக்கொண்டோ அ வரை ஜெயிக்கப்போகிறாய் உன்னால் அவரை ஜெயிக்கவல்ல மையிராது இன்னமும் நான்சொல்லப்பட்ட புத்தியைக் கே ள் சிறுபிள்ளைகட்டிய சிற்றுடைபோலாகாது உன்னுயிர் தப் பித்துக்கொண்டு உன் தாய் தந்தையிடம் போய்ச்சேர் இல்லை யென்றால் வானுலக மனுப்பிவிடுவார்கள். அப்படி வராத படி சத்துருக்க மகாராஜனை வணங்கி உன்தம்பி லவனை மீட் டுக்கொண்டு போகிறதே காரியமென்றான் அப்படி சொன்ன சாத்மீகராஜனை குசலராசன்பார்த்து யிவன் வல்வாயனென்று மனதிற்கருதினவனாக ௬00-நாராச பாணமெடுத்து வில்லிற் சந்தித்துவிட்டான் அந்தபாணங்கள் விடுபட்டுச் சண்டமா ருதம் வீசினதுபோல் அதிகஉக்கிரமாகவந்துசாத்மீகராஜனை இரத்தமயமாக்கிசல்லடைகண்களாகத்துளைத்துவிட்டது அத னால் தன்சரீரம் இரத்தங்கள் சொரிய ஆயாசத்தோடு ஸ்ரீராமா ராமா வென்று வில்லை தேரின்மீது நழுகவிட்டு இரதத்தின்பே ரில் அடியற்ற மரம்போல் முடியற்றுமூர்ச்சையடைந்தான்,

## சூரசேனனும் வீரசேனனும் குசலராசன்பேரில் யுத்தம் பண்ணுதல்.

### விருத்தம்.

மானமிழிந்தொடியார் சாத்மீகன்றன்னை மணிரதத்திலேற்றியப்பாற்கொடு போய்தோற்ற, வானளவுமுயர்ந்தநெடுந் தேர்மேலேறி வாரிதிபோற்றிரண்ட பெருஞ்சேனைசூழத், தீனபராக்கிரம சூரசேனனோடு திண்ணமுறவிற்றுகும் வீரசேனன், ஆனவிருவருங்கூடிக் குசலன்மீது அக்கினிபோற் பொறிசிதற லமர்செய்தாரே.

அப்போது யானைதேர் பரிசேனைகளைக் குசலராஜன் விடாமல் அஸ்திரங்களைவிட்டு அல்லோல கல்லோலப்படுத்துவதைப்பார்த்துசூரசேனனும்வீரசேனனும் ரதத்தை நடத்திவில்லை வளைத்து நாணிபிகிந்து சரங்களைச் சொரியும்போதுகுசலராஜன்கண்டு வில்லிற்பாணங்களைத் தொடுத்துவிடுத்து வீரசேனன் சூரசேனன்இருவர்விட்ட அஸ்திரங்களையெல்லாமறுத்துத்தள்ளினான் அதுகண்ட மட்சயந்த மகாராஜனுடையகுமாரனாகியவீரசேனமகாராஜனும் ஸ்ரீராமருடைய அறுபதினாயிரம் அக்ரோணி சேனைகளுக்கும் சேனாதிபதியானசூரசேனனும் அதிக கோபமாகிவில்லிலனேக பாணங்களைச்சந்தித்துப்பிரயோகப்படுத்தினார்கள். அப்போது குசலராசன் ஐம்பதுதிவ்வியாஸ்திரமெடுத்துவிட்டுஅவர்களிருவர்விட்டபாணங்களையறுத்து அதனமாக ௬௦-நாராசபாணங்களெடுத்துஇருவர்மீதிலும்பிரயோகஞ்செய்தான் அதுநாகசற்பம்போற்சீறிவருகிறபோதுவீரசேனமகாராசன்கண்டு ௱-நாராசபாணங்களை வில்லிற்றொடுத்துப்பிரயோகப்படுத்திகுசலராசன்விட்ட ௬௰நாராசபாணங்களையும்றுத்து அதனமாக ௱-அர்த்தசந்திரபாணங்களைப் பிரயோகஞ்செய்தானதுகள் ஒன்றோடொன்றுராய்ந்து நெருப்புப்பொறிகளைக் கக்கிக்கொண்டு அதிகவிரைவில் வருகிறபோது குசலராசன்கண்டு வெகுண்டு ௫00-அர்த்தசந்திராஸ்திரமெடுத்து வீரசேனனுடைய நாராசபாணங்களையு மறுத்து அதனமாக நான்கு இடியாஸ்திரங்கள்விட்டு அவனேறிவந்த இரதத்தையுடைத்தெரிந்து போட்டான் வீரசேனன் வேறு தேரேறிவர அந்த இரதத்தையும் நான்கு இடியாஸ்திரம் விட்டு அவனேறிவந்த இரதத்தையுடைத்தெரிந்து போட்டான் வீரசேனன் வேறுதேரேறிவர அந்த இரதத்தையும் நான்குஇடியாஸ்திரம் விட்டு தும்சப்படுத்தினான் இந்தப்படியாய் கூ-ரதம் வரையில் உடைந்துபோகவே அதுகண்டு சூரசேன

னும் வேறுரதமேறி சாரதியை யெச்சரித்து ரதத்தை குசல ராசன் முன்னுக்குநடத்தி குசலராசனைப்பார்த்துச் சூரசேன ன் சொல்லுகிறான்.

அடாதம்பி ரிஷிகுமாரா, உன்னைப்பார்த்தால் சிறுபிள்ளை யாயிருக்கிறாய் உன்தாய் தந்தை பேரையும் உன்பேரையும் உ ன்குலங் கோத்திரங்களையுஞ் சொல்லென்றான். அந்த சூர சேனனைப்பார்த்துக் குசலன் சொல்லுகிறான். ஓ? இராச னே? நீயோ என்தாய் தந்தைபேரைக் கேட்கிறவன், யுத்தத் திற்குவருகிற பேருக்கெல்லாம் தாய்தந்தைபேரைச் சொல் லிக்கொண் டிருக்கின்றதோ படுகளத்தில் ஒப்பாரியுண்டோ, உமக்கு சாமார்த்திய முண்டானுலென்னுடன் யுத்தஞ்செய் யும் சக்தியில்லாவிட்டாற் சொல்லாமலும் என்முன்னில்லாம லும் நடந்துவிடு ஏன் வீணில்வந்து மடிகிறீர்கள் ஒருவனுகி லும் ஒருநாழிகை பரியந்தம் நின்று யுத்தம்பண்ணினவனைக் காணேன் இவ்வளவு வலிவைக் கொண்டோ என்னை ஜெயிக் கப்போகிறீர்கள் அதுயிருக்கட்டும் நீ சண்டைசெய்யப் பய ந்து என் தாய்தந்தைபேரைக் கேட்கவந்தாய் வருகிறவனுக் கெல்லாம் நான் சொல்லிக்கொண்டே யிருப்பேனு நானினி யொருவருக்குஞ் சொல்லமாட்டேன் நீயுத்தம் பண்ணவேண் டாமென்று அதிககோபத்துடனே பாணங்களை யெடுத்தான். அப்படி பாணங்களையெடுத்த குசலராசனை வீரசேனன் சூர சேனனும் பார்த்துச் சொல்லுகிறார்கள். அடா, தம்பி சிறு பிள்ளாய், அரசரானவர்கள் யுத்தம் வந்தவேளையில் அதற் குப்பயந்து தாய் தந்தைபேரை கேட்பார்களோ நீசிறுபிள் ளையானதால் உன்தாய் தந்தைபேரைக்கேட்டு யுத்தம் பண்ண லாமென்று பெரியவர்களாக யிருக்கப்பட்டவர்கள் கேட்டால் சண்டைக்குப்பயந்து என்தாய்தந்தைபெயரைக்கேட்கவந்தீர் களென்று சொல்லலாமோ வென்றார்கள். அப்படிசொல்லிய வீரசேனன் சூரசேனனுக்குக் குசலராசன் சொல்லுகிறான். ஓ! இராசனே? கேளீர் என் தாய்பேர் ஜானகியம்மாள், எங் களையர்பேர் வால்மீகமகாரிஷி, என்பேர் குசலன், என்தம்பி பேர் லவன், என்குலங்கோத்திரம் எனக்குத்தெரியவராதென் றான். அப்படி சொல்லியதைச் சூரசேனனும் வீரசேனனும் கேட்டுச் சொல்லிக் கொள்ளுகிறார்கள் இவன் ரிஷிபிள்ளையெ ன்று சொல்லுகிறான். இவனுடைய ரூபத்தைப் பார்ப்போ மென்றால் நிலவு வெளிச்சத்திற் றெரியவில்லை யுத்தம் பண் ண வேண்டாமென்றாலு மிவன் கேட்கமாட்டான் இவனு

டைய வீரபராக்கிரமந்தானென்ன இவனாலே வெகுஜனங்கள் மடிந்துபோனார்கள். நாம் சமுத்திரமெல்லாந் தாண்டி சிறிய கால்வாயில் வந்து தாண்டமாட்டாமலகப்பட்டுக்கொண்டோம் சீதாலட்சுமியில்லாமல் இராமருடைய யாகத்திற்குப் பின்னம் சம்பவித்தது இதற்கெப்படி யோசனையென்று சற்றேசும்மா யிருந்தார்கள்.

அதுகண்டு குசலராஜன் ஓ! ஓ! இராஜரே? இப்படி ரணக்களத்தில் ஒப்பாரிக்கொண்டு சும்மாயிருந்தால் நான் விடுவேனோ நீங்கள் இனிசொல்லாமல் ஓடிப்போகிறேமென்றாலும் உங்களை விடமாட்டேன் வில்லையெடுத்து பாணத்தைத் தொடுங்களென்றுசொன்னான். அப்படி சொல்லிய குசலனுடைய வார்த்தையை யிருவருங்கேட்டு அவ்விராசனைப் பார்த்து வீரசேனமகாராஜன் சொல்லுகிறான். அடா! தம்பி குசலனே? அவரையாரென்று இப்படி ஏளிதமாய்ப்பேசுகிறாய் பராபரவஸ்துவாய் விளங்காநின்ற ஸ்ரீமந்நாராயணரே ஸ்ரீராமனாக அவதரித்துதன்னுடைய அறுபதினாயிரம் அக்ரோணிசேனைகளுக்குச் சேனாதிபதியாக பட்டங்கட்டிவைத்தார் அப்படிப் பட்ட வீரசூரனான சூரசேனமகாராஜனைச் சண்டைக்குப் பயந்தாரென்று ஏளிதமான அற்பவிசேஷஞ் சொல்லலாமோ, அவருடைய சாமார்த்தியம் இன்னமுனக்குத் தெரியவாராதென்றான், அதுகேட்டு குசலன் அதிகபுஞ்சிரிப்போடு குலுங்க நகைத்துச் சொல்லுகிறான், ஓ! இராஜனே? உங்களுக்கு முன்னம்வந்து யுத்தஞ்செய்து இறந்தவர்களில் சேனாதிபதியான காலசித்தனென்னப்பட்ட இராக்கதன்வந்து தன்னிலுமிகுந்தசூரரில்லையென்று வெகுநேரம் போர்புரிந்துக்கொண்டிருந்தான் அவனுக்கு மிஞ்சினவர்களானால் அஸ்திரங்களை எடுங்கள் உங்களாற் கூடியவரையில் விடுங்கள் பார்ப்போமென்று கூறிய குசலன்வார்த்தையை இருவருங்கேட்டு சூரசேனன் சொல்லுகிறான். குசலனே நீவிசேஷத்தைமிஞ்சாதே அப்படி வீரசூரராய்வரப்பட்ட பேரையெல்லாம் நீ சங்கரிக்கப்பட்ட ரணரங்க சூரனாகையால்கையிலாகாத சிலரைக் கொன்றேமென்று கர்வித்திருக்கிறாய் அந்தகர்வத்தை க்ஷணநேரத்திற் காண்பிக்கிறேன் பாரடாவென்று ௫0-சிங்கமுகாஸ்திரங்களைவில்லிற் சந்தித்துக் குசலராஜன்பேரிற் பிரயோகஞ்செய்தான் அந்த ௫0-சிங்கமுகாஸ்திரங்களும் விடுபட்டு ஆலகாலவிஷம்போற் சீறிக்கொண்டு குசலராஜன்பேரில் வருகிறபோது அவ்

விராசனும் உ-ம்-சிங்கமுகாஸ்திரம் விடுத்து ஆலகாலவிஷத்தை யள்ளியுண்ட ருத்திரனைப்போல வரப்பட்ட சிங்கமுகாஸ்திரத்தையுமறுத்துத் தன்பேரில் வரப்பட்ட சிங்கமுகஸ்திரத்தையுமறுத்துத்தள்ளவே,சூரசேனன்விட்ட டும்-சிங்கமுகாஸ்திரத்தின் அடி துண்டுகள் வேகமடங்காமல் அதிவேகத்துடன்வந்து குசலராஜன் பிடித்திருந்த வில்லின்பேரிலும் வில்நாணியின்பேரிலும் தடாலென்றுமோதி சிங்கமுகாஸ்திரங்கள் பிளந்து பூமியில் விழுந்துபோயிற்று.

அதுகண்டு குசலராஜன் சூரசேனனையும் வீரசேனனையும் பார்த்துச் சொல்லுகிறான். அடா சூரசேனனே வீரசேனனே நீங்களிருவரும்விட்ட பாணத்தினுடைய வல்லமை யிவ்வளவுதானே இதோயிந்த அஸ்திரத்தினால் நீங்களிருவரும் பிடித்திருக்கிற வில்லைக் கண்டித்துப்போடுகிறேன் பாருங்களென்று தன்தாயாரைமனதிற்றியானித்து இரண்டு அர்த்தசந்திராஸ்திரத்தை எடுத்து மந்திரித்து வில்லிற்றொடுத்து பிரயோகம் பண்ணினான். அந்த அர்த்தசந்திராஸ்திரங்களும் விடுபட்டு தகத்தகாயமாய் நாறு-கூ-சந்திரனைப்போலச் சோதிப் பிரகாசமாய் விரைவாக வருகிறபோது சூரசேனனும் வீரசேனனுங் கண்டு அதிசீக்கிரமாய் நிமையோடுநிமை தட்டுமுன்னமே கோடி அர்த்தசந்திராஸ்திரங்களை யெடுத்துவிட்டார்கள். அந்தகோடி பாணங்களும் குசலன்விட்ட அர்த்த சந்திராஸ்திரத்தின்பேரில் சடாலென்று வந்துமோதிக் குசலராசனுடைய அர்த்த சந்திராஸ்திரத்தினாலடிபட்டு பூமியில் விழுந்துபோகவே, குசலராசனுடைய அர்த்த சந்திராஸ்திரங்கள் வேகமடங்காமல் அதிகவேகத்துடன்வந்து வீரசேனன் சூரசேனன் பிடித்திருந்த வில்லுகளைக் கண்டதுண்டங்களாய் நறுக்கிப் போட்டு அம்புறாவில் வந்தடைந்தது அதுபோகவே சூரசேனனும் வீரசேனனும் வேறுவில்லைக்கையிலெடுத்து இரண்டு சுழற்பாணத்தையும் தனுசிற்றொடுத்துப் பிரயோகம்பண்ணினார்கள். அந்தசுழற்பாணங்களும் வில்லைவிட்டு விடுபட்டு சண்டமாருதம் வீசினதுபோல உக்கிரமாகக் காற்றுகளெழும்பிக்கிறுகிறென்று சுழன்றுக்கொண்டுவர அதைக்கண்டுகுசலராசன் அதிகவேகமாய் ஒருசுழற்பாணத்தையெடுத்துதனுசிற்றொடுத்துவிட்டு வீரசேனனும் சூரசேனனும் விட்ட இரண்டு சுழற்பாணத்தையுமறுத்து அதனமாக ா-நாராசபாணத்தையும் விட்டு சூரசேனனுடைய சரீரத்தையும் வீரசேனனுடைய திரேகத்தையும் சல்லடைக் கண்களாகத் துளைத்துவிட்டான்.

அதனாற் சூரசேனனுடைய மெய்யும் வீரசேனனுடைய சரீரமும் ரத்தங்கள்சொரிய மகாஆயாசத்தோடு ஸ்ரீமந்நாராயணாவென்று கைவில்லைத் தேரின்பேரில் நழுகவிட்டு இரதத்தின்பேரில்சாய்ந்து மூர்ச்சையடைந்தார்கள். அதுகண்டு சந்தனமகாராசன் கோபமாகி சாரதியை யெச்சரித்து இரதத்தை நடத்தி வில்லையெடுத்து நாணிபிகிந்து வில்லிலநேக அஸ்திரங்களைச் சந்தித்து குசலராசன்பேரில் பிரயோகம்பண்ணினான். அந்தபாணங்கள் வில்லைவிட்டு அதிகவேகத்துடன் வருகிறபோது குசலராசன்கண்டு பத்துதிவ்வியாஸ்திரங்களையெடுத்து வில்லிற்சந்தித்துப்பிரயோகப்படுத்தி சந்தனமகாராசன்விட்டபாணங்களையறுத்து அதனமாக ஒரு வாய்வாஸ்திரமெடுத்து பிரயோகஞ்செய்தான் அந்தவாய்வாஸ்திரமும் வில்லில்விடுபட்டு சண்டமாருதம் வீசினதுபோல அதிகவெகத்துடன்வந்து சந்தனமகாரர்சன்ரதத்திற்புகுந்து ரதத்தை பின்னிட்டவாக்காய் கிழக்கே நூறுயோசனை தூரத்திற் றள்ளிக்கொண்டு போய்விட்டது. அப்பாற் குசலராஜன் யானைதேர் பரிசேனைகள்பேரில்முனைந்து பாணங்களை வில்லிற்சந்தித்து பிரயோகஞ்செய்தான் அந்தப்பாணங்களால்யானைகள் காலறுந்தும், வாலறுந்தும், தும்பிக்கையறுந்தும், துடையறுந்தும், ரதங்கள் அச்சொடிந்தும், ஆணிகழன்றும், மச்சுமுறிந்தும், கொடியறுந்தும், குதிரைகள் வாலறுந்தும், தலையறுந்தும், குடல்சரிந்தும், சேனைகள் கைவேறு, கால்வேறு, உடல்வேறு, எலும்புவேறு, இறைச்சிவேறு, இவ்விதமாகவிழுந்து, உதிரவெள்ள மோடத்தலைப்பட்டதைக்கண்ட குசலராஜன் சந்தோஷமாகி நாலாவது அணிகடந்து ஐந்தாவது அணியில் வருகிறபோது ஐந்தாமணியிலிருக்கப்பட்ட படைத்தலைவருஞ் சேனாதிபதிகளும் இராக்ஷதசேனைகளுங்கண்டு குசலராசனை ஐந்தாமணிக்குள் வரவொட்டாமல் வில்லிலநேக பாணங்களைச் சந்தித்து மழைமாரிபொழிவதுபோலச் சரமாரியாகக் குசலராசன்மீது பொழிந்தார்கள். அதுகண்டு குசலராசன்மேல் விழுந்து வரப்பட்ட இராக்ஷதசேனைகள்பேரில் அநேக அஸ்திரங்களைப் பிரயோகப்படுத்தினான். அந்த அஸ்திரங்களும் வில்லைவிட்டு வெளிப்பட்டு திகுதிகுவென்று அக்கினிச் சுவாலைகளுடன் அதிவேகத்துடன் வந்து இராக்ஷதர்கள்மீது விழுகிறபோது அந்த இராக்ஷதர்கள் கால்வேறு, கைவேறு, உடல்வேறு, சதைவேறு, எலு

ம்புவேறு, இறைச்சி வேறுவேருக விழுந்து இராக்ஷதாள் விட்ட பாணங்களுமுறிந்து கோஷ்டங்க ளெழும்பியது.

அதுகண்டு சத்துருக்கமகாராசன் கடுஞ்சினங்கொண்டு வெகுண்டு சாரதியை யெச்சரித்து இரதத்தை குசலராசன் முன்னுக்கு நடத்தச்சொன்னுர். அத்தருணத்தில் வாரணுபுரி பட்டணத்தைப் பரிபாலனம் பண்ணப்பட்ட சோமகாசமகாராசன் இரதத்தை நடத்தி சத்துருக்கமகாராசனைப் பார்த்துச் சொல்லுகிருன். ஐயா, சத்துருக்க மகாராஜரேகேளும் அந்தச் சிறுவனுகிய குசலனை ஒருபெரிதாயெண்ணி தேவரீர் அவன்பேரில் யுத்தத்திற்குப் போகவேணுமோ இன்னம் அநேக இராக்ஷதாளும் இராஜமன்னருமிருக்கையில் என்ன முழுகிப்போயிற்றென்று நீர் யுத்தத்திற்குப்போகிறது நலமாகக்காணவில்லை நில்லு நில்லுமென்று சத்துருக்கமகாராசனை நிறுத்தி சாரதியை யெச்சரித்து குசலராசன் முன்னுக்கு இரதத்தை நடத்திஞன் அவன் இரதம் நடக்கையில் வீரசேனமகாராசன் தகப்பனுகிய மக்ஷயந்தமகாராசனும் இரதத்தை நடத்திஞன். அந்தவேளையிற் சந்தனமகாராசனும் பாண வேகமடங்கி இரதத்தை வேகமாக நடத்திக்கொண்டு ரணக்களம்வந்து குசலராசனை நாலாமணியிற் காணுமல் ஐந்தாமணியில் நிற்கிற குசலராசன்பேரில் வில்லைநாட்டி பாணங்களைப் பூட்டிப் பிரயோகம் பண்ணிஞன்.

சந்தனமகாராஜனுக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

---

கலிவிருத்தம்.

முந்திவந்த விருவர்முனையழிந்
துந்துமிந்தேரு மொழிந்திடக்கண்டதோர்
சந்தனமகாராஜ னென்றக்கயவன்
வந்துவில்லைவணங்கிப் பொழிந்தனன்.

அதனைக்கண்ட குசலராசனும் தனுசி லநேகபாணங்களைச் சந்தித்துப் பிரயோகப்பத்திவிட்டு சந்தனமகாராசன் விட்டபா ணங்களைந்துமறுத்து அதனமாய் உ௰-நாராசபாணங்களெடுத்து விட்டுவிட்டான். அப்பாணங்கள் புறப்பட்டு நாகசற்பம்போற்சீறி வருகையில், சந்தனமகாராசன் கண்டு உடனே நூறு-நாராசபாணங்க ளெடுத்து வில்லிற் சந்தித்துவிட்டு

குசலன்விட்ட இருபது நாராசபாணங்களையுமறுத்து அதிகமாகப் பத்து நாராசபாணங்களைவிட்டார் விடுகிறபோது குசலராசன்கண்டு இருபது திவ்வியாஸ்திரமெடுத்துப் பிரயோகஞ்செய்து சந்தனமகாராசன்விட்ட நூறு திவ்வியாஸ்திரங்களையும் அறுத்து அதனமாக ௬௰-அர்த்த சந்திராஸ்திரங்களைப் பிரயோகப்படுத்தினன். ௬௰-அர்த்த சந்திராஸ்திரங்களும் தகத்தகாயமாக அக்கினிப்பொறிகள்பறக்க ஒன்றேடொன் றுருய்ந்துகொண்டு பூரணச்சந்திரனைப்போற் பிரகாசித்து அதிக வேகத்துடன் வருகிறதைச் சந்தனமகாராசன்கண்டு அதிசீக்கிரமாக நிமையோடு நிமைதட்டு முன்னமே ௱- அர்த்த சந்திராஸ்திரங்களை யறுத்து அதனமாக இரண்டு அக்கினியாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகம் பண்ணினன். அந்த இரண்டு அக்கினியாஸ்திரங்களும் வில்லில் விடுபட்டு காட்டுதீய்க்களுக்குச் சமதையாக திகுதிகுவென்று அக்கினிச் சுவாலைகளை வீசிக்கொண்டு நாக சர்ப்பம்போல வேகமாகவருகிறபோது குசலராஜன்பார்த்து ஒரு அக்கினியாஸ்திரத்தை யெடுத்து வில்லிற் சந்தித்துச் சந்தனமகாராசன் விட்ட அக்கினியாஸ்திரத்தின் பேரில் பிரயோகப் படுத்தினன் அந்த அக்கினியாஸ்திரமும் வில்லில் விடுபட்டு வடவாமுகாக்கினியை வாரியிறைத்துக்கொண்டு அதிகவேகத்துடன்வந்து சந்தனமகாராசன் விட்ட அக்கினி யாஸ்திரங்களைக் கமளீகரம்பண்ணி அம்புருப்பொதியில் வந்தடைந்தது.

அதுகண்டு சந்தனமகாராசன் இரண்டு சத்தியை யெடுத்து பூசை நைவேத்தியங் கொடுத்து, குசலராசனுடைய மார்பைப்பார்த்து விட்டு விட்டான். அந்த சத்தியும் விடுபட்டு அண்டரண்ட பகிரண்டங் குலுங்க அக்கினிச் சுவாலைகளுடனே, அதிகவேகமாக வருகிறபோது குசலராசனும் தன் தாயார்கொடுத்த உக்கிரவீர சத்தியையெடுத்து பூசைநைவேத்தியங் கொடுத்துவிடுத்தான். அந்த வீரசத்தியானது வில்லைவிட்டு வெளிபட்டு அண்டபிண்ட பிர்ம்மாண்டம் ஆயிரத்தெட்டண்டங்களும் நடுங்க ஆலகால விஷத்தைப்போற்சீறி அக்கினிச்சுடர்க ளெழும்பவேகத்துடன் வந்து சந்தனமகாராசன் விட்ட இரண்டு சத்தியையும் அடித்து முறித்து கமளீகரம்பண்ணி அம்புருவில் வந்தடையவே, சந்தனமகாராசன் கோபங்கொண்டு நாராயணாஸ்திரத்தை யெடுத்து வந்தனைவழிபாடுடன் தூபதீபங்கொடுத்து குசலராசன்மீது விடுத்தான்.

அந்த நாராயணாஸ்திரமும் வில்லைவிட்டு வெளிப்பட்டு பாதாளமும் ஆகாயமும் அல்லோல கல்லோலப் படுவதாக வருகிறபோது குசலராசன் சற்றுவது அச்சமின்றி தன் தாயார் கொடுத்த நாராயணாஸ்திரத்தை யெடுத்து மந்திராபூதியுடன் பூசைபுரிந்து, சந்தனமகாராசன் விட்ட நாராயணாஸ்திரத்தை ஜெயம் பெற்றுவாவென்று பிரயோகம் பண்ணினான். அந்த நாராயணாஸ்திரமும் வில்லில் விடுபட்டு அண்டரண்டங்களுங் குலுங்க, அம்புவிகள் நடுங்க, ஆலகால விஷம்போற் சீறிக் கொண்டு ஆவென்று வாயைத்திறந்து அக்கினிகளைக் குபீல் குபீலென்று கக்கி ஆகாயத்திலும் பூமியிலும் அக்கினிச்சுடர்கள்வீச அந்த அக்கினிச் சுடர்களினாலே ஆகாயவீதியி லிருக்கப்பட்ட தேவர்களுங்கண்டு பயந்து மேலண்டமோடிப் போக, பூமியிலிறந்துகிடக்கிற யானை பரிசேனைகளுஞ் சுடு நாற்றங்க ளெழும்ப அதிக உக்கிரசிங்கம்போலவந்த சந்தன மகாராசன் விட்ட நாராயணாஸ்திரத்தையும் கமளீகரம் பண்ணியும் உக்கிரம் நீங்காமல் வரும்போது சந்தனமகாராசன் மனதுகலங்கி வில்லிலனேக பாணங்களைப்பூட்டிவருகிற நாராயணாஸ்திரத்தின் பேரில் மழைமாரிபோல சரமாரியாய்ப் பொழிந்துக் கொண்டிருந்தான். அப்படி சந்தனமகாராசன் பாணங்களை ஓய்வு சாய்வுயில்லாமல் பொழிகையிற் குசலராசனுடைய நாராயணாஸ்திரமானது வருகிறபாணங்களையெல்லாம் கமளீகரம் பண்ணிக்கொண்டு அதிவேகத்துடன் வந்து சந்தனமகாராசன் ஏறிவந்த இரதஞ்சாரதி குதிரைகளுடனும் பஸ்மீகரம்பண்ணிச் சந்தனமகாராசனுயிரையும் பிரித்து அம்புராவில் வந்தடைந்தது. அப்போது பத்மாவதி பட்டணத்தை பரிபாலனம் பண்ணப்பட்ட சந்தனமகாராசன் இறந்தது கண்டு வாரணாபுரி பட்டணத்தை யாளப்பட்ட சோமகாசமகாராசன் கோபதீப்தனாகி குசலராசன் முன்னுக்கு இரதத்தை நடத்தினார். அந்தராசன் இரதத்தை நடத்தவே, மதனாபுரிபட்டணத்தைப் பரிபாலனஞ் செய்யப்பட்ட மட்சயந்த மகாராசன் தன் இரதத்தைநடத்திச் சோமகாச மகாராசனைப் பார்த்துச் சொல்லுகிறார். வாருஞ் சோமகாசமகாராசரே? இன்னமனேக இராஜமன்னர்களும் இராட்சதர்களும் மந்திரிபிரதானிகளும் நானுமிருக்க நீர்முந்தி யுத்தத்திற்குப் போகிறது நலமாய்க்காணவில்லை அந்தக்குசலனை யமலோகத்துக் கனுப்பிவிடாமல் இனி நான் சும்மாவிடமாட்டேன் நீர்

நில்லும் நில்லுமென்று சோமகாசமகாராசன் இரதத்தை முன்னுக்கு நடத்திச்சொல்லுகிறார். அடா! தம்பி குசலனே? நீயார் உன் தாய்தந்தை பேரென்ன, உன்னுடைய குலங்கோத்திரமென்ன இந்தப்படிக்கு எங்களுடைய சேனைகளைக் கொல்ல நீயார், உன்னுடைய பூர்வோத்திரங்களை எனக்கு நன்ருய் இன்னுரின்னுரென்று தெரியச்சொல்லடா தம்பி குசலனே யென்ருன். அதுகேட்டு ஓகோ! இராசனே ? நீரென்னவசனஞ் சொல்லவந்தீர் முந்தியுத்தத்திற்கு வருகிறபேரையெல்லாம் நிறுத்தி எனக்கு எமலோகத்திற்கு வழிகாட்டுகிறேனென்று ரோஷத்துடன்வந்த நீர் என்னைக் கண்டுபயந்து இப்படி என்தாய் தந்தைபேரையும் என்குலங்கோத்திரங்களையுங் கேட்டு படுகளத்தி லொப்பாரி பண்ணுவாருண்டோ, நீ ஒரு இராசனென்று முகத்தில் மீசையை வைத்துக்கொண்டு என்முன் வந்துநின்று இப்படிப் பஞ்சை வார்த்தைபேசலாமோ, நீங்கள்தானே சூரியவம்சத்தில் பிறந்த சூரத்துவம் பொருந்தி யிருக்கப்பட்ட இராசாக்கள் முன்னுக்குவந்து பின்னுக்கு வாங்கலாமோ உன்னுடைய சாமர்த்தியம் இவ்வளவு தானே நில்லு நில்லுமென்று சுழற்பாணத்தை யெடுத்து வில்லிற்சந்தித்துப் பின்னையும் மட்சயந்த மகாராஜனைப்பார்த்துச் சொல்லுகிருன்.

ஓ! ஓ!! இராஜனே? உனக்கு எமலோகத்திற்கு வழிகாட்டு கிறேன் பாரென்று வில்லிற் சந்தித்தசுழற்பாணத்தை பிரயோகம் பண்ணிவிட்டான். அந்த சுழற்பாணமானது வில்லில் விடுபட்டு சண்டமாருதம் வீசுவதுபோல் உக்கிரகாற்றுக ளெழும்பிச்சுழன்று அதிவேகமாய் வருகையில் மட்சயந்த மகாராஜன் கண்டு பதிலஸ்திரமெடுத்து வில்லில் சந்திக்கு முன்னமே குசலனஸ்திரமானது வந்து மட்சயந்த மகாராஜனுடைய இரதத்திற் புகுந்து சாரதி குதிரைகளுடன் ஆகாயத்திற் கிளம்பிக் கொண்டுபோயிற்று. மட்சயந்த மகாராஜன் கண்டு ஏதடாமோசம் வந்ததென்று வில்லைத்தேரின்பேரில் வைத்துக் குத்துக் காலை யிரண்டுகையினுலும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு நின்ருன்.

அப்போது அந்தரதமானது எப்படிச்சுழல்கின்றதென்ருல், குயவனுடைய சக்கரமானது எப்படிச்சுழலுமோ, அப்படிபோல ஆகாயவீதியில் சுழன்று மேகமண்டலம், வருணமண்டலம், வாயுமண்டலம் மட்டுமாய் இரதமானது சுழன்று போய் மறுபடியும் திரும்பிவருகிறபோது பாணவேகமடங்கி

பூமியைச் சேரவருகிறபோது மட்சயந்தமகாராஜன் சுவாசத்தைப் பந்தனம்பண்ணி பூமியிற்குதித்தான். அப்படி குதித்த மாத்திரம் இரதமானது சாரதிகுதிரைகளும் பூமியில்விழுந்து அச்சுவேறு, ஆணிவேறு, கும்பகலசம்வேறு, கடகம்வேறு, பலகைவேறு,' குத்துக்கால்வேறு, கொடுங்கைவேறு, கொடிச்சீலேவேறு, குதிரைவேறு, சாரதிவேருகப் பூமியில் விழுந்து மாய்ந்ததுகள்.

அதுகண்டு மட்சயந்த மகாராசன்கோபமாகிமறுதேரிலேறிவில்லேவளேத்து நாணிபிகிந்துவில்லில் நல்லகூர்மையோடுங்கூடியிருக்கப்பட்ட அனேகபாணங்களே வில்லில்சந்தித்துப்பிரயோகம் பண்ணிஞர். அந்த நாராசபாணங்களும் வில்லில் விடுபட்டு நாகசர்ப்பம்போற் சீறிக்கொண்டு வருகிறபோது குசலராஜன் கண்டு அதிசீக்கிரமாய் மும் - நாராசபாணங்களே யெடுத்து வில்லிற்ருெடுத்து பிரயோகப்படுத்தி மட்சயந்த மகாராசன் விட்ட நாராச பாணங்களே நடுவதுபாதியில் துண்டித்து அந்தமட்சயந்த மகாராசன் மார்பிலணிந்த கவசங்களேயும் அறுத்துசரீரங்களேயும், ரத்தமயமாக்கிவிட்டான். அதுகண்டுமட்சயந்த மகாராசன் தைரியம்விடாமல் அதிகசீக்கிரமாய் வில்லேமுகத்திற்குநேராய்ப் பிடித்துப் பாணங்களேயெடுத்து வில்லிற்சந்தித்து மாரிபொழிவதுபோல ஒப்வில்லாமல் ஒன்றரை நாழிகை பரியந்தம் மூச்சுவிடாமற் சலவருஷம்போல் பொழிகிறதை குசலராஜன்கண்டு அனேகபாணங்களே வில்லிற் சந்தித்துப் பிரயோகப்படுத்தி மட்சயந்த மகாராசன் விடப்பட்ட பாணங்களேயெல்லாம் நிமையோடு நிமைதட்டுமுன்னமே அறுத்து அதனமாய்ப்பத்து திவ்வியாஸ்திரங்களெடுத்து வில்லிற் சந்தித்துப் பிரயோகப் படுத்திஞன். அந்த திவ்வியாஸ்திரங்கள் வில்லில் விடுபட்டு அக்கினிச் சுவாலேகளெழும்ப அதிக வேகத்தோடு வருகிறதைக்கண்ட மட்சயந்த மகாராசன்பல்லே நெற நெற வென்று கடித்து நாறுதிவ்வியாஸ்திரங்களெடுத்து வில்லிற் சந்தித்துப் பிரயோகப்படுத்திக் குசலராசன்விட்ட திவ்வியாஸ்திரங்களேயு மறுத்து சாரதியையெச்சரித்து இரதத்தைக் குசலராஜன் முன் நடத்திஞன்.

அந்தச்சமயத்தில் மட்சயந்த மகாராசனுடைய குமாரனுகிய வீரசேனமகாராசன் மூர்ச்சைதெளிந்து கண்ணே விழித்துப்பார்த்து சூரசேனனும் மூர்ச்சையாயிருக்கிறது கண்டு குசல

ராசனைக்காணுமல் இரதத்தைவிட்டுப் பூமியிற் குதித்துமறுதே ரிலேறி சாரதியை யெச்சரித்து இரதத்தைக் குசலராசன்முன் னுக்கு நடத்திக் குசலராசனைப் பார்த்துச் சொல்லுகிருன் அடா! குசலனே? ஏன் தலைகீழாய் விழுகிருய் உன்னைவிட சூரனில்லையென்றுங்கையிலாகாத சில இராக்ஷதரைக் கொன்ருேமென்று கெர்வத்தினுலே துள்ளாதே, அந்த கெர்வத்தைஇதோ ஒருக்ஷணநேரத்தில் தெரிவிக்கிறேன் பாரடாவென்று வில்லை யெடுத்தான்.

அதுகேட்டு குசலராசன் கோபமாகி வீரசேனன் யுற்றுப் பார்த்துப்பல்லைநெறநெறவென்றுகடித்துபத்துநாராசபாணங்களெடுத்துவில்லிற்சந்தித்துச்சொல்லுகிருன். ஓ!இராசனே நல்லவசனம் புகன்ருய் நீயொரு ராசனென்றுமுகத்தில்மீசை வைத்துக்கொண்டுஎன்முன்வந்துநின்ருய்உன்னைப்போல்சூரத்துவம்பொருந்தியஇராஜர்களையும்இராட்சதர்களையும் அநேகம்பேரைக்கண்டேன் இறந்தவன்பிறந்தவன்போலும்வந்தாய் இதோஎன்னுடைய அஸ்திரத்தினுலே உன்னைக்கண்டதுண்டம்பண்ணுகிறேன் பாரடாவென்று வில்லிற்சந்தித்த ௰-நாராசத்தையும் வீரசேனன்பேரில் பிரயோகம்பண்ணிவிட்டுவிட்டான் அந்தபத்து நாராசபாணங்களும் வில்லில் விடுபட்டு நாகசற்பம்போற் சீறிக்கொண்டு அதிகவேகத்துடன் வந்து வீரசேனனுடைய சரீரத்தை சல்லடைக்கண்களாகத் துளைத்துரத்தமயமாக்கிவிட்டுப்போயிற்று அதனுல்வீரசேனன் மிகவும்நொந்து தைரியம்விடாமல் ரோஷத்துவேஷனுக வில்லிலநேக பாணங்களைச் சந்தித்துக் குசலராஜன்மீது மழை பொழிவதுபோல சரமாரியாய்ப் பொழிகிறபோது குசலராஜன்கண்டு நூறுதிவ்யாஸ்திரத்தை யெடுத்து வில்லிற்சந்தித்து பிரயோகம் பண்ணிவிட்டுவீரசேனன் விட்ட திவ்வியாஸ்திரங்களையெல்லாமறுத்து அதனமாய் இரண்டு இடியாஸ்திரம்விட்டு வீரசேனனேறிவந்த இரதஞ் சாரதி குதிரைகளுடன் உடைத்தெறிந்துபோட்டான் அந்தரதம் போகவே வீரசேனனுனவன் லகுவில் தப்பித்துக்கொண்டு மறுதேரிலேறி வில்லையெடுத்து வளைத்து நாணிபிகிந்து சாரதியை எச்சரித்துக் குசலராஜன் முன்னுக்கு நடத்தி குசலனைப் பார்த்துச்சொல்லுகிருன்.

அடா! குசலனே? உன்னைச் சிறுபிள்ளையென் றெண்ணிப் பார்த்ததற்கு உன்னுடைய சிறுபிள்ளை தனத்தையுங்

கண்டேன் வாய்ச்சொல் வாய்க்குள்ளிருந்துவருமுன்னமே பாணத்தைவிட்டுக் கொல்வாருமுண்டோ அப்படிச் சிறுபிள்ளையின் தன்மையையடைந்த உன்னை என்னுடைய நாகபாசத்தைவிட்டு கண்ட துண்டம்பண்ணிவிடுகிறேன் அடா குசலனேயென்று நாகபாசத்தையெடுத்தான் அந்த வாசுகியென்னப்பட்ட நாகபாசமானது வீரசேனனுக்கு எப்படிவந்து சேர்ந்ததென்றால் ஒருநாள் வீரசேனமகாராசனவர் வேட்டைக்குப்போகவேண்டி ரதகஜதுரகபதாதிகளுடன் வெளியே புறப்பட்டு வடமுகம் நோக்கி கந்தமாமலையென்றொரு பர்வதமிருக்கின்றது அந்தப்பர்வதத்தைச்சேர்ந்த வனத்தில்வேட்டையாடிக்கொண்டு கந்தமாமலையண்டையி லிறங்கி கூடாரமடித்திருக்கையில் வீரசேனமகாராசனவர் சாயந்திரவேளையில் சிலதுரைகளுடன்வில்லையுமெடுத்து இரதத்தில்வைத்து ஆயுதபாணியாக கந்தமாமலையைச் சுழற்றி ;வருகிறபோது அந்த கந்தமாமலையில் ஈசானியமூலையில் எலும்புகளைமலையாகக்குவித்திருந்தது அந்த எலும்பு மலையைப்பார்த்து ஆச்சரியப்பட்டு அந்த எலும்பை சுற்றிவருகிறபோது அவ்விடத்தில் பாதாளத்திற்குவழிபோகின்றது அதுகண்டு வீரசேனனும் கூடவந்த இராசாக்களும் இரதம்விட்டுகீழிறங்கி அதிசயத்தைப்பார்த்துக்கொண்டிருந்தார்கள். அந்தவேளையில் வாசுகியென்னப்பட்ட நாகமானது பூலோகத்தைப்பார்க்கவேணுமென்று சிறிது கூட்டங்களுடனே கூடிக்கொண்டுபாதாளலோகத்தைவிட்டு பூலோகத்தின் வாசற்படியில்வந்து கருடபகவான் வந்துவிட்டானோவென்று திடுக்கிட்டு மனதுகலங்கி வந்துநிற்கின்ற இராசாக்களைக்கண்டு மனதுபிரியமாகி வாசுகியென்னும் நாகமானது வீரசேனனைப்பார்த்துச் சொல்லுகின்றது.

வாராய் இராசகுமாரா, நான் யாரென்றிருக்கிறாய் அனந்தனென்னப்பட்ட ஆதிசேஷனுண்டே அந்த ஆதிசேஷனுடைய குமாரன் என்பேர் வாசுகியென்று சொல்வார்கள் இப்போதெனக்குப் பூலோகம்பார்க்கவேண்டி வெகு ஆசையுடனேகூட இவ்விடம்வந்தேன் இவ்விடத்திற்கு கருடனாலே எங்களினத்தார்மாண்ட எலும்புமலையைக் கண்டேன் காணவே எனக்கு முன்னும் பின்னும் வரக்கூடவில்லை பின்னும் போகக்கூடவில்லைகருடன்வந்தால் என்னையும் என்னினத்தாரையுங் கொன்றுபோடுவான் இதற்கெப்படியென்று யோசனை

செய்துக்கொண்டிருந்தேன் இப்போது உம்மைக்கண்டவுட னே மனதுபயந் தெளிந்தேனென்ருன்.

அதுகேட்டு வீரசேனமகாராசன் வாசுகியைப்பார்த்துச் சொல்லுகிருன். வாராய், வாசுகியே? உனக்கிப்படிப்பட்ட ஆபத்துங் கருடனுல்வருமென்றல்லவோ பயந்துசொல்லுகி ருய் அந்தக்கருடன் இந்நேரம் இவ்விடம்வந்தானேயாகில் எங்களுடைய அஸ்திரங்களினுல் அந்தக்கருடனைக் கண்ட துண்டம் பண்ணிப்போடுவோம் நாங்களிருக்கும்போதே உ ன்னுடைய கூட்டத்துடன் வெளியேவாருங்கள் நீங்கள் ப யப்பட வேண்டாமென்ருன்.

அப்படி கூறிய வீரசேனமகாராசனுடைய வார்த்தை யை வாசுகி யென்னப்பட்ட நாகமானது உற்றுக்கேட்டுச் சொல்லுகின்றது வாரும் இராசகுமாரனே கருடனே மகா பலவான் மும்மூர்த்திகளுமீட்ல்ல அந்த கருடனுலே எங்க ளுக்குச் சகாயமாக வந்தவர்களெல்லா மாண்டுபோனுர்கள் உம்முடைய பாணங்களைச் சட்டைபண்ணமாட்டான். அவ ன்சேதி உமக்குநன்ருய்த் தெரியவராது எங்களால் நீரேன் மாண்டுபோகிறீர் அப்படி எங்களைக் காக்க வேணுமென்று வல்லமையுண்டானுல் அந்தக் கருடனைச் செயித்து என் னையும் என்னினத்தாரையும் இரக்ஷித்துக்கொள்ளும் அப் படி எங்களை இரக்ஷித்தீரேயாகில் உம்முடைய அம்பு ருப்பொதியில் நானே ஒருபாணமாக யிருக்கிறேன் உனக்கு உயிர்ச்சேதம் வருகிறவேளையில் எதிரிபேரில் என்னையெடுத்து விட்டீரேயானுல் ஆலகாலவிஷத்தையுண்ட ஈஸ்வரனுனு லு ஞ்சரி, ஆதிசேஷன்மீது பள்ளிகொண்டிருக்கப்பட்ட ஸ்ரீமந் நாராயணராணுலுஞ்சரி, சத்தியலோகவாசகராயிருக்கப்பட்ட பிரமதேவராணுலும் இன்னுமெவர்களாணுலுஞ்சரி, என்னு டைய விஷாக்கினியாற் றகித்துப்போடுகிறேன்.

அதற்கு நீ சந்தேகப்படவேண்டாம் இந்தவேளையில் எ ங்களைக் காப்பாற்றவேணுமென்று சத்தியவசனமாகச் சொல் லிய வாசுகியென்னப்பட்ட நாகத்தின் வார்த்தையை வீர சேன மகாராசன்கேட்டுச் சொல்லுகிருன். வாராய் வாசுகி யே அந்தக்கருடன் எவ்வளவுபலம் படைத்தவனுயிருந்தாலு மென்னுடைய அஸ்திரத்தினுல் கருடனைச் செயம்பண்ணி உன்னையும் உன்னினங்களையும் காப்பாற்றுகிறேன் அப்படிக் காப்பாற்ருமற் போனேனேயாமானுல் யென்னை மக்ஷயந்த

மகாராசனுடைய குமாரன் வீரசேனனென்று சொல்லவேண்டாமென்று சொன்னான்.

அப்படி சொன்ன வீரசேனமகாராசனுடைய வார்த்தையை வாசுகியென்னப்பட்ட நாகமானது கேட்டு சந்தோஷமாய் வாராய் வீரசேனமகாராசனே உம்முடைய வார்த்தையை நம்பி வெளியில்வரச் செலவு கொடுமையாவென்று வாசுகி கேட்க, அதுகேட்டு வீரசேனமகாராசன் வாசுகியைப் பார்த்துச் சொல்லுகிறான். வாராய் வாசுகியே ஆகாயவாணி பூமிதேவியறிய கருடனைச் செயம்பண்ணி உன்னையும் உன்னுடைய சேனைகளையும் இரக்ஷிக்கிறேன் நீ யாதொன்றுக்கும் பயப்படவேண்டாம் வெளியே வாருங்களென்று பரவசமாகச் சொன்ன வீரசேனமகாராசன் வார்த்தையை வாசுகியென்னும் நாகங்கேட்டு கூட்டத்துடனே பூலோகம் வந்து தன்னினத்தார்களின் எலும்புமலையைச் சுற்றிப் பார்த்து அவ்விடத்திலிருக்கப்பட்ட கந்தமாதன பர்வதத்தின்பேரிலுள்ள காடுசெடிகள் புதறுகளெல்லாம் வாசுகியினுடைய விஷங்கக்குகிறபோது அந்த விஷக்காற்றினால் காடுசெடிகளெல்லாம் நீறு நீறாய் வெந்துபோயிற்று. அப்படி விஷச்சுவாலையுடன் பர்வதத்தின்பேரில் போகிறபோது அந்தவேளையிற் கருடபகவானானவர் வைகுந்தம்விட்டு கந்தமாதன பர்வதத்திற்கு வருகிறபோது இவரது இரண்டுசிறகினுடைய காற்றின் வலுவானது சண்டமாருதம் வீசினதுபோலக் காற்றாகளெழும்பி அதனால் மலைக்குன்றுகளெல்லாஞ் செண்டுபோலெழும்பிப் பதினாறுகோடி சூரியப்பிரகாசம்போலே மேனிதுலங்க அதிவேகமாய் வருகிறதை வாசுகியும குமாரர்களுங் கண்டு பயந்து பர்வதத்தைவிட்டு அதிவேகமாக எழும்பி ஓ! வீரசேனமகாராசனே? இதுசமயம் அபயம் அபயங் காருமென்று ஓடி வந்துவிட்டார்கள்.

அதுகண்டு வீரசேனன் வாசுகியென்னபபட்ட நாகத்தைப் பார்த்து பயப்படாதேயென்று வாரியெடுத்துத் தன்னுடைய அம்புருப்பொதிக்குள்ளே விட்டு நாககூட்டத்துடன் இரதமேறி வாசுகியினுடைய கூட்டங்களையுந் தங்கள் இரதங்களிலடக்கிக் கொண்டார்கள். அந்தவேளையிற் கருடபகவானானவர் சிறகுகளை அடித்துக்கொண்டு வருகிற வேகத்தினால் சண்டமாருதமான காற்றுகளெழும்பி வீரசேனமகாராசனுடைய ரதத்தையும் ராசமன்னர்கள் இரதத்தையும் ஆலமரச் சருகுபோல் கூடு-காதவழி கொண்டுபோய்விட்டது.

அதுகண்டு வீரசேனனும் இராஜகுமாரர்களும் ஆச்சரியப்பட்டு இனிகருடனிடத்திற்போனால் கருடனால் மாண்டு போவது நிச்சயமென்று நாகத்தைப்பார்த்து சொல்லுகிறான் வாராய் வாசுகியே நீ கருடன் மகாபலவந்தனென்று சொன்னது திடமாயிற்று கருடனுடைய சிறகடிகாற்றினாலே நம்முடைய இரதத்தை வெகுதூரத்திற் கொண்டுவந்துவிட்டது ஆகையால் உன்சேனைகளும் பிழைத்தது நானும் இராஜமன்னரும் பிழைத்தோம் அல்லவென்று எதிர்நின்றோமேயானால் எல்லோருங் கருடனாலடிபட்டு மாண்டுபோவதுமல்லாமல் எங்களை நம்பிவந்த நீயும் உன்சேனைகளு மாண்டுபோவீர்கள் அதற்கு சந்தேகமில்லை ஆகையால் உன்னுடைய லோகம்போக மனதிருந்தாற்போய்விடு அல்லவென்று என்னிடத்தில் உனக்கிருக்க சம்மதியானால் பயமில்லாமல் இரும் உங்களை இரட்சித்துக்கொண்டு வருகிறேனென்று சொல்லிய வீரசேனன் வார்த்தையை வாசுகிகேட்டு நம்முடைய லோகம்போனாலும் கருடன் வராமலிருக்கப்போகிறதில்லை கருடனாலே யச்சமாயிருக்கும் இந்த பூலோகராசனிடத்தி லிருந்தோமேயானால் நமக்கு யாதொரு பயமிராதென்று மனதிலெண்ணி வீரசேனமகாராசனைப் பார்த்துச் சொல்லுகிறான்.

வாராய், வீரசேன 'மகாராஜனே? கருடனுடைய சிறகடிகாற்றினாலே வெகுதுலைவில் வந்துவிட்டோம் இனி கருடனாலே நமக்குப்பயமில்லை நான் பாதாளலோகத்துக்குப் போகிறதில்லை எங்களை இரக்ஷித்துக் கொள்ளுமென்று வாசுகியென்னப்பட்ட நாகேந்திரன் சொல்ல, அதுகேட்டு வீரசேனமகாராசன் சந்தோஷப்பட்டு அன்று முதலின்றையவரைக்கும் யாதொரு விசனமில்லாமல் ரட்சித்துக்கொண்டு வந்தான் அப்படிப்பட்ட நாகபாசத்தையெடுத்து வில்லிற்றொடுத்து குசல ராசனைப் பார்த்து விடுத்தான். அதுகண்டு குசலராசன் வீரசேனமகாராஜனைப்பார்த்து இவன்கிஞ்சித்து பலவானாக காண்கிறானென்று யோசித்துக்கொண் டிருக்கிறபோது வீரசேனமகாராஜன் விட்ட அந்த வாசுகியென்னப்பட்ட நாகபாசமானது வெளிப்பட்டு ஆலகாலவிஷங்களைப் போல விஷங்களைக் கக்கிக்கொண்டு அக்கினிச்சுவாலை வீசி அக்கினியானது குபீல் குபீலென்று சிதறவேகத்துடன் குசலராஜன் எங்கே எங்கேயென்று நாகாஸ்திரமானதுவருகிறபோது குசலராஜன்கண்டு நன்றாய் வுற்றுப்பார்த்து ஏதடா சற்பமா

னது சீறிக்கொண்டு வருகிறதென்று அதிசீக்கிரமாகச் சக்கரத் தையெடுத்து மந்திராபூதிகள் கொடுத்து வருகிற நாகபாசத் தின்பேரில் பிரயோகம் பண்ணி விட்டான். அப்படிச் சக்கரத் தாழ்வார் மந்திராபூதிகொண்டு குசலராஜன் கைவில்லில் விடு பட்டு தகத்தகாயமாய்ப் பதினாறுகோடி சூரியப் பிரகாசமாய் அண்டரண்ட 'பிரமாண்டங்களும் ஆயிரத்தெட் டண்டங் களும் நடுங்க, தேவரெல்லாம் திடுக்கிட்டுப் பயந்தோட அதி வேகத்துடன் வீரசேனன் விட்ட நாகபாசத்தையும் கண்டம் பண்ணி அந்த வுக்கிரம் விடாமல் வீரசேனனுடையசிரசையு மறுத்துச் சாரதி குதிரைகளையுங்கொன்று ஆயுதம் பிடித்திரு ந்த இராட்சதர் முடிகளைத் துணித்துக் குசலராஜன்விட்ட சக்கரமானது திரும்பி யவனிடம் வந்தடைந்தது.

மட்சயந்தமகாராஜனுக்கும் குசலராஜனுக்கும்யுத்தம்.

சந்த விருத்தம்.

அந்தமிலானருளுஞ் சிசுவால்விளையாடபோரில்
வந்தபதாதிகரித்திரள்யாவுமழிந்தவு
சந்தனனென்றுமதங்கள் கடிந்தவையோரமட்ச
யந்தனெனும் ரதமேனியடர்ந்தானே.

அதுகண்ட மட்சயந்தமகாராஜன் பிள்ளையிறந்துபோனா னென்று அதிககோபாக்கினியுடன்வில்லையெடுத்து நிறுத்திப் பாணங்களை வில்லிற்சந்தித்து மழைபொழிவதுபோல்சரமாரி யாகப் பொழிந்து ஒருசத்தியை எடுத்துப் பூசைசெய்துபாண வேகத்தோடுகூடகுசலராஜனுடையவில்லைபார்த்துவிட்டான். அந்த சத்தியானதுவிடுபட்டு அண்டரண்டபுவனங்களும்நடு ங்க, அக்கினிச்சுவாலையெழும்ப அதிவேகத்துடன் வருகிற போது, குசலராஜன் கண்டு அதிசீக்கிரமாய்த் தன்னுடைய வில்லிலனேக திவ்யாஸ்திரங்களைச் சந்தித்துவிட்டு மட்சயந் தமகாராசனுடைய அஸ்திரங்களையெல்லாங்கண்டித்துவருகி றசத்தியின்பேரில் சடாலென்றுவந்து பாய்ந்துசத்தியினலடி பட்டு பூமியில்சாய்ந்துப்போயிற்று அப்போது சத்தியானது வேகத்துடன் குசலராஜனுடைய பிரசண்ட கோதண்டத்தின் பேரில் வந்துவிழுந்தது. அதைக்குசலன் யறவெட்டிப் பூமி யில் தள்ளிவிட்டான்.

அப்போது சத்தியானது குசலராஜனுடைய கோதண்ட த்தைப் பிளக்கவொட்டாமல்பின்னப்பட்டு குசலராஜனுடைய

வாளாயுதத்தினால் வெட்டுண்டு பூமியில் விழுந்துபோனதையு மட்சயந்த மகாராஜன் கண்டு கடுங்கோபங்கொண்டுநாராயணு ஸ்திரத்தை யெடுத்துப் பூசை செய்து வில்லிற் சந்தித்துப் பிர யோகம் பண்ணினான். அந்த நாராயணாஸ்திரமானது வில்லில் விடுபட்டு அண்டரண்ட பகிரண்ட மாயிரத்தெ ட் டண்டங்களுங்குலுங்க, ஆலகால விஷத்தைப்போல அக்கினிச் சுவாலைகளுடன் அதிவேகமாகவருகிறபோது குச லராசன் கண்டு கோபமாகி தானும் ஒருநாராயணாஸ்திரத்தை யெடுத்துப் பூசைசெய்து வில்லிற்சந்தித்துப் பிரயோகம்பண் ணினான். அந்த நாராயணாஸ்திரமும் வில்லில் விடுபட்டு ஆ காயம் பூமியுமொன்று யுருவுகொண்டு வருவதைப்போல் அக் கினிகளைக் குபீல் குபீலென்று கக்கி, ஆலகால விஷத்தைப் போலச் சீறிக்கொண்டு அதிவேகத்துடன் மட்சயந்த மகாரா சன் விட்ட நாராயணாஸ்திரத்தை கமளீகரம் பண்ணி விட்டு அம்புறுத்தூணியில் வந்தடைந்தது.

அதுகண்டு மட்சயந்தராசன் கணக்குமிதமில்லாத பாண ங்களையெடுத்து வில்லிற் சந்தித்து சோனைமாரிபோலக் குசல ராஜன்பேரிற் பொழிந்துவிட்டார். அப்போது குசலராசனன வன் அனேகபாணங்களைப் பிரயோகப்படுத்தி மட்சயந்த மகா ராசன் விட்ட பாணங்களையுமறுத்து மிச்சமாகஜந்து திவ்வி யாஸ்திரங்களை விட்டு மட்சயந்த மகாராசனேறிவந்த இரத ஞ்சாரதி குதிரைகளுடன் அதஞ்செய்து மட்சயந்த மகாராச ன் சிரசையுங் கரகரவென்று அறுத்துத் தள்விட்டான்.

சோமகாசமகாராஜனுக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

---

கலிவிருத்தம்.

மட்சயந்த வரசன்மடிந்தபின்
துஷ்டனும்சோம காசனுள்ளந் துடித்
திட்சணத்தி லடுத்தவனுவியை
பட்சணஞ்செய்கு வேனெனப்பாய்ந்தனன்.

அதுகண்டு வாரணபுரியை யாளப்பட்ட சோமகாசமகா ராஜன் பல்லை நறநறவென்று கடித்து கோபமாய் இரதத்தை க் குசலராசன் முன்னடத்தி வில்லையெடுத்து நாணிபிகிந்து ஒருமுகூர்த்தம் மூணேமுக்கால் நாழிகைபரியந்தம் வோய்வி ல்லாமலும் மூச்சுவிடாமலும் சரசரவென்று குசலராசன் மீது அனேகபாணங்களை யெல்லாமறுத்து அதனமாக பத்து

திவ்வியாஸ்திரங்களெடுத்து கோதண்டத்திற் சந்தித்துப்பிரயோகம்பண்ணினன் அதுகள் கோதண்டத்தில் விடுபட்டு காட்டுத்தீயைப்போற் கனகன வென்றெரிந்துக்கொண்டு வருகிறபோது சோமகாசமகாராசன் கண்டு நூறு திவ்வியாஸ்யாஸ்திரமெடுத்து வில்லிற்றொடுத்து விட்டுக்குசலன் விட்ட பத்து திவ்வியாஸ்திரத்தையு மறுத்துத் தள்ளிப்போட்டான்.

அதுகண்டு குசலராசன் வெகுண்டு நூறு நாராசபாணங்களெடுத்து பிரயோகம்பண்ணினன் அந்த நூறு நாராசபாணங்களும் காலக்கோடி விஷம்போற் சீறிக்கொண்டு அதிவேகத்தோடு வருகிறபோது சோமகாசமகாராஜன்கண்டு வில்லிலனேக பாணங்களை சந்தித்துப் பிரயோகப்படுத்தி குசலன் விட்ட நூறு நாராசபாணத்தையும் கண்டித்து அதனமாய்ப் பதினைந்து திவ்வியாஸ்திரம் விடுத்தான். அந்த அஸ்திரங்களும் வாய்வேக மனோவேகமாய் வருகையில் குசலராசன் கண்டு நான்கு திவ்வியாஸ்திரங்களையும் தும்சஞ்செய்து அவன்மார்பிலணிந்த நவகவசத்தையும் 'பொடியாக்கினன். அப்படி நவகவசங்களும் பொடியாகவே சோமகாசமகாராஜன் அதிககோபமாகி அறுபது சிங்கமுகாஸ்திரத்தை விடுத்தான் அதையும் குசலராசனறுத்து இரதஞ்சாரதி குதிரைகளுடன் தும்சம்பண்ணினன்.

இந்தப்படி குசலராஜனும் சோமகாசமகாராஜனும் ரோஷத்துவேஷத்துடன் மிதமில்லாத அஸ்திரங்களைவிட்டு யுத்தஞ்செய்துக்கொண் டிருக்கையில், இலங்காதிபதியான காலசித்தன் மூர்ச்சைதெளிந்து கண்ணை விழித்துக்குசலராசனைப் பார்த்தான் அவ்விராசனுடைய விற்குணத்தொனி சத்தமானது வெகுதூரத்திற் கேட்டது அந்தசத்தங் காலசித்தன் கேட்டு சிந்தாக்கிராந்தனுகி விசனப்பட்டு சீதாலட்சுமியில்லாமல் ஸ்ரீராமருடைய யாகத்திற்குப் பின்னம் வந்துவிட்டது. இது யாருடைய சாபம் இப்படிவந்து விளைந்தது ஸ்ரீமந்நாராயணு! ஸ்ரீராமபத்திரா ஒ! ரகுநந்தனுவென்று மகாவிசனசித்தனுகி இரதத்தைவிட்டுப் பூமியிற்குதித்து மறுதேரிலேறிச் சத்துருக்கமகாராசனுடைய சமீபத்தில் வந்து தீர்க்கதெண்டஞ்சமர்ப்பித்து சத்துருக்கமகாராசனல் ஆசீர்வாதம்பெற்று எழுந்திருந்து அவ்விராசனைப் பார்த்துச் சொல்லுகிறன்.

ஓ! இராஜாதிராஜனே? ராஜபரமேஸ்வரா சத்துருக்க மகாராசனே கேளும் இந்திரன், அக்கினி, யமன், நிருதி,

வருணன், வாய்வு, குபேரன், ஈசானியன், இப்படிச் சொல் லப்பட்ட அஷ்டதிக்குப் பாலகருடன் யுத்தம்புரிந்து ஜெயங் கொண்டேன், அவர்களுடைய அஸ்திரங்களும் இதற்கிணை யல்ல இந்த குசலனே நமது சேனைகளுக்கு யெமனுகவந்தி ருக்கிறுன். சகலவுயிர் பிராணிகளையும் கொண்டுபோகுங் கால னைவன் யென்பேரில் தூதருடன்வந்து யுத்தம்பண்ணி யெ ன்னை ஜெயிக்காமல் எத்தனை தரமோ யென்கையி லடிபட்டு மிகவும் கஸ்தியடைந்து ஓடிப்போய்விட்டான்.

அப்படிப்பட்ட யெமனும் என்னைக் கண்டவுடனே கை யெடுத்துக் கும்பிட்டுக்கொண்டிருக்கிறுன். அந்தக் காலனு டைய பாணத்தின் சுருக்கும் இந்த குசலனுடைய பாணத் தின் சுருக்குக்கு நிகரல்ல இவனைச் சொற்பமான யுத்தஞ் செ ய்கிரு னென்றெண்ணவேண்டாம் மகாவல்லவன் என்னு டைய அஸ்திரம் பிரமதேவரை நோக்கி அநேககாலந் தவஞ் செய்து அவரால் பிரமாஸ்திரமும் பெற்றேன் பரமசிவனை வருந்தி தவஞ்செய்து சூலமும்பெற்றேன் ஸ்ரீமந்நாராயண ரை அநேககாலந் தவஞ்செய்து ஸ்ரீமந்நாராயணர் வராத படியினுலே வைகுந்த புரத்தின்பேரில் யுத்தத்திற்குப்போய் ஸ்ரீமந்நாராயணருடன் அனேகயுத்தஞ்செய்து நாராயணுஸ் திரமும் பெற்றேன் காலனுல் தெண்டும் பெற்றேன் அதனுல் சகலமான ராட்சதாளும் தேவர்களும் வணங்கும்படியாய் இ துவரையில் பேரும்பெற்றேன் இப்போதிந்தக் குசலனுல் மூம் மூர்த்திகளால் வரம்பெற்ற ஆயுதாஸ்திரங்களுந் தோற்று என்னுடையசரீரமும் அறுப்புண்டுமகாஆயாசம் இளைப்போ டுமூர்ச்சைதெளிந் தெழுந்துவந்தேனென்றுன் அவனைச் சத் துருக்கமகாராசர் தன்னுடைய கரத்தினுற் சரீரமுழுதுந் தட விக்கொடுத்துச் சொல்லுகின்றுர்.

வாராய், காலசித்தனே ? குசலன் சிறுபிள்ளையானபடியி னுல்முன்பின் யோசனையில்லாமல் அஸ்திரத்தைவிட்டுக் கொ ன்றுபோடுகிறுன். இப்போதிந்தக் குசலனுல் நம்முடையசே னசமுத்திரமெல்லாம் மாண்டுபோயிற்று இன்னமுனக்கு சூல மும் நாராயணுஸ்திரமும் பிரமாஸ்திரமும் காலனுடையதெ ண்டும், அட்டதிக்குப்பாலகரைச் செயிக்கத்தக்க ஆயுதங்களு முனக்குத் தருகிறேன் நீ பயப்படாமல் இரதமேறிக்கொண்டு குசலனை எதிர்த்து எவ்விதத்திலும் உயிர்ச்சேதம் வரவொட் டாமல் கைப்பிடியாய் பிடித்துவரவேணுமென்று சொல்லி

சூலமும் நாராயணுஸ்திரமும் பிரமாஸ்திரமும் காலனுடைய தெண்டைப்போலொத்த தெண்டுமெடுத்துகாலசித்தனுடைய கையிற்கொடுத்தார்,

அவர்யாரென்ருல் பல்லாயிரங்கோடி அண்டத்தையுங் கெற்பத்தில்வைத்து ரட்சிக்கப்படாநின்ற நமது ஸ்ரீராமபத்திரசுவாமியாருடைய சகோதரனுகவிளங்கப்பட்ட சத்துருக்க மகாராஜன் அப்படிப்பட்டசத்துருக்கமகாராஜனைப்பார்த்துக் காலசித்தன் சொல்லுகிருன் ஐயா சத்துருக்கமகாராஜனேகேளும் அந்த குசலனது மாளாத அட்சயதூணியாயிருக்கிறது அந்தவில்லோ பிரசண்டங்கள்கண்ட வில்லுபோலிருக்கிறது அந்தவில்லினுடைய முறப்புக்கு திரிமூர்த்திகளும்முன்னிற்க மாட்டார்கள் எத்தனை அஸ்திரமந்த வில்லின்பேரில் விட்டாலுங் கூர்மடங்கி பூமியில் விழுந்துபோகிறதேயல்லாமல் வில் முறிந்தபாடில்லை குசலராஜனைப்பார்த்து பாணமெடுக்கும்போதே சிரசு போய்விடுகின்றது மேலும் அந்த குசலனுடனே யார் நின்றுயுத்தம்பண்ணுவார்கள் இது யாருடைய சாபமோ இப்படி சிறுவன்கையினுல் மாண்டுபோக காலம்வந்ததே ஸ்ரீராமருடைய யாகத்திற்குபின்னம்வந்துவிட்டதே சமுத்திரமெல்லாந்தாண்டி சிறியகால்வாய் தாண்டமாட்டாமற் போனேமே என்னசெய்வோம் சத்துருக்கமகாராஜனே என்ருன்.

அப்படி சொன்ன காலசித்தனுடைய வார்த்தையை சத்துருக்கமகாராஜன்கேட்டு சொல்லுகிருர் வாராய் காலசித்தனே இந்த குசலனை ஒருபெரிதாக எண்ணி இப்படி விசனப்படுவார்களுமுண்டோ இந்த குசலன் எமலோகம் அல்லது கைலாயம் வைகுந்தம்போ யொளித்தாலும் என்னுடைய அஸ்திரம் விடாது நான்போ யந்தகுசலனுடனே யுத்தம் பண்ணி செயிக்கிறேன் பாருமென்று ஒருவர்க்கொருவர்பேசிக்கொண்டிருக்கும்போது குசலராஜனனவன் மிதமில்லாத பாணங்களைவிட்டு சோமகாசமகாராஜனுடைய சரீரத்தை சல்லடைக்கண்களாகத் துளைத்து இரதத்திற்கட்டிய துவசத்தையுமறுத்துத்தள்ளினுன் துவசமறுந்துபோகவே சோமகாசமகாராஜன் கடுஞ்சினங்கொண்டு சாரதியை எச்சரித்து ரதத்தை குசலராஜன் முன்னுக்குநடத்தி குசலராஜனைப்பார்த்துச் சொல்லுகிருன் வாராய்சிறுபிள்ளாய் நீயார் உன்குலமென்ன

உன்தாய்தந்தைபேரென்ன நீ எங்களுடன் யுத்தம்புரியவேண்டிய காரியமென்னவென்று கேட்டான்.

அதற்கு குசலராஜன் சோமகாசமகாராஜனைப்பார்த்து சொல்லுகிறான் ஓ ராஜனே என்தாய்தந்தைபேரை கேட்கப்பட்டவர்க்கெல்லாம் சொல்லிக்கொண்டு நானிருக்கவோ யுத்தமுனையில் உறவு,நடத்துவாருமுண்டோ ஒருவராகிலும் என் கைதிமிர் நீங்க யுத்தம்பண்ணுவாரைக் காணேன் நீயொரு இராஜனென்று வில்லைக் கையிற்பிடித்தாய் என்முன்வந்து நின்று வாய்விசேஷங்கேட்கவந்தாய் அப்படிவிசேஷங்கேட்டு தப்பித்துக்கொள்ளவந்த உன்னை இதோ என்கைபாணத்தினால் கண்டதுண்டம்பண்ணுகிறேன் பாரென்று மகா உக்ராகாரத்துடன் ௰-நாராசபாணமெடுத்து வில்லிற்றொடுத்துவிடுத்து சோமகாச மகாராஜனுடைய தேகத்தை சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டா னதனாற் சோமகாசமகாராஜன் மிகவும் மனநொந்து இவனைக்கொன்றால் தோஷமில்லையென்று நாராயணாஸ்திரத்தை எடுத்து மந்திராபூதிகள்செய்து பிரயோகம்பண்ணின னந்த நாராயணாஸ்திரமானது வில்லிலிருந்து விடுபட்டு அண்டபகிரண்டங்களும் நடுங்க ஆலகால விஷத்தைப்போற் சீறிக்கொண் டக்கினிப்பொறிகள் சிதறும்படியா யதிவேகத்துடன் வரும்போது குசலராசன்கண்டு கோபாக்கினியுடன் தானுமொரு நாராயணாஸ்திரத்தை யெடுத்து வில்லிற்றொடுத்து மந்திராபூதிகள் செய்துவிட்டா னந்த நாராயணாஸ்திரமும் வில்லில்விடுபட்டு அண்டபகிரண்டங்களும் ஆயிரத்தெட்டண்டங்களும் நடுங்க, ஆவென்று வாயைத் திறந்து வடவாமுகாக்கினியை வாரி யிறைத்துக்கொண்டு அதிவேகமாய் வந்து சோமகாசமகாராஜன் விட்ட நாராய ணாஸ்திரத்தின்பேரில் சடாலென்று பாய்ந்து அந்த அஸ்திரத்தை கபளீகரம் பண்ணிப்போட்டு அம்புறாத்தூணியில் மறுபடியும் வந்தடைந்தது.

அதுகண்டு திகிற்கொண்டு சோமகாசமகாராஜன் தயிலத்திற்றோய்த்து கூர்மைதங்கியிருக்கும் வேலாயுதத்தையெடுத்து தூப தீபநைவேத்தியங்கள் கொடுத்து அடையவர்கள்போற் படைகளில்முந்திவந்திருக்கும் தசரதமகாராஜன்பௌத்திரனாகிய குசலராஜன்மார்பில் லக்குபார்த்துவிட்டுவிட்டா னந்தவேலாயுதம்விடுபட்டு அண்டரண்டபிர்மாண்டமும் ஆயிரத்தெட்டண்டங்களும் நடுங்க, அண்டமுகடுகிழிய, அண்டகோளத்

தையும் பிளக்குமாப்போல ஆவென்று வாயைத்திறந்து அக்கினிகளை குபீலென்று கக்கிக்கொண்டு வருகிறபோது அண்டத்திலுள்ள தேவர்களு மத்தக்கினிச் சுவாலையைப் பொறுக்கமாட்டால் மேலண்டத்திற்கோடிப்போய் பாரத்துக்கொண்டிருந்தார்கள் அந்தசமயத்தில் சோமகாச மகாராஜன்விட்ட வேலாயுதத்தை கமளீகரஞ்செய்து அவன்மார்பில் பாய்ந்து முதுகிலுருகி திருப்பாற்கடலில் ஸ்நானஞ்செய்து அம்புருத்தூணியில் வந்தடைந்தது. சோமகாசமகாராஜன் வில்லை நழுகவிட்டு தேரின்பேரில் விழுந்து ஸ்ரீமந்நாராயணாவென்று உயிரைவிட்டான்.

அதுகண்டு குசலன் சந்தோஷமாகி வில்விலநேக அஸ்திரங்களைச் சந்தித்து இராட்சதாள்பேரில் பிரயோகம்பண்ணினன் அந்த அஸ்திரங்களால் இராட்சதர்கள் தலைசாய்ந்தவரும், சிலைமாய்ந்தவரும், கண்டமானவரும் துண்டமானவரும், கதருவார்களும், உயிர்தப்பி மீளோமென்று பதறுவார்களும், நானுவிதமாக சிதறுவார்களும், சடசடவென்று வருவரிர்களும், படபடென்று போவார்களும் இப்படியாக சிலர் ஓடத்தலைப்பட்டார்கள்.

சத்துருக்கமகாராஜனுக்கும் குசலரராஜனுக்கும் யுத்தம்.

கலிவிருத்தம்.

சத்துருக்கன் சினத்துடன்வந்துபோர்
முற்றுமாடி மூறியசரச்சிலை
சித்தவேத்தி கற்றவனோர்புறஞ்
செந்தவன்போ லிருக்கச்சிரித்தனன்.

அதனை சத்துருக்கமகாராஜன் கண்டு கண்களிற் பொறிபறக்க, காதுகளிரண்டிலும் புகைகளெழும்ப, மீசையாளது படபடென்று துடிக்க, இரண்டுகைகளும் பதைக்க, உக்கிரசிங்கம்போல அதிககோபமாகி சாரதியை எச்சரித்து குசலராஜன் முன்னுக்கு இரதத்தை நடத்தி சொல்லுகிறார். வாருந்தம்பி சிறுபிள்ளாய் நீயார் உன் தாய்தந்தைபேரென்ன உன்பெயர் யாது உன்குலமென்ன சொல்லென்றார்.

அதற்கு குசலன் புகலுகின்றான் ஓ! இராஜனே? கேளும் இராஜாக்களாய் பிறந்தபேர்களுக்கு யுத்தம்வந்து நேர்ந்த காலையில் யுத்தத்திற்கு பின்னிடைந்து உறவு நடத்துவாருமுண்டோ வந்தபேருக்கெல்லாம் தாய்தந்தைபேரை சொல

லிக்கொண் டிருக்கிறதோ யுத்தத்திற்கு பயந்தால நான்விடு வேஞே விடேனென்று னப்படிகூறிய குசலன்மொழியை சத்துருக்க மகாராஜனுணர்ந்து சொல்லுகிறுர். வாரும் பிள் ளாய் யான் யுத்தத்திற்கு பயந்து உன் தாய்தந்தைபேரை வின வவில்லை நீசிறுவனுகையால் உன்னையீன்றேர் பெயரை யறி ந்துக்கொண்டு போர்புரியலாமென்றுல் நீஇப்படி சொல்ல லாமா ஆகையால் சந்தேகமின்றி தந்தையின் பெயரும் உன் வரலாறும் எனக்கறிவியென்றுர்.

அவ்வாறு கூறிய சத்துருக்கமகாராஜன் திருமொழியை ச் சிறுவனுன குசலன் கேட்டுச் சொல்லுகின்றுன். கேளும், இராஜனே ? என்தாயார்பேர் ஜானகியம்மாள் எங்கள் ஐயர் பேர் வால்மீகரிஷி என்பேர் குசலன் என்தம்பிபேர் லவன் எ ங்கள் குலமெனக்குத் தெரியாதென்றுன். அதைக்கேட்ட சத் துருக்கமகாராஜர் யோசித்து இவன் ரிஷிபிள்ளையென்றேது கிறுன். ஆனுற் சீதாலட்சுமிக்கும் இரண்டுபிள்ளைகளுண்டா வானே னதிசயமா யிருக்கிறதென்று சந்தேகித்து இன்ன மிவனது வாய்பேச்சை ஆராய வேணுமென்று குசலனைப் பார்த்துச் சொல்லுகிறுர். வாருந் தம்பி! குசலனே ? உன் தாய்தந்தைபேரையும் உன்பேரையும் புகன்றுயல்லவா என் னுடைய சேனைகள் என்ன செய்ததென்று இப்படி வீணில் மாய்த்துவிட்டாய் சொல்லென்றுர்.

அதற்கு குசலராஜன் சொல்லுகிறுன். ஓகோ! இராஜ னே ? கேளும், என்தம்பி லவனுனவன் உங்களை என்னசெய் தானென்று பிடித்துக் கட்டிக்கொண்டு போனீர்கள் அதை சொல்லென்றுன். அதற்கு சத்துருக்கமகாராஜர் சொல்லு கிறுர். வாருந்தம்பி குசலனே ? அயோத்தியாபுரி பட்டணத் தை பரிபாலனஞ் செய்யப்பட்ட ஸ்ரீராமபத்திரசுவாமி அஸ்வ மேதயாகம் பண்ணவேண்டி குதிரையைவிட்டாரந்த அஸ்வ மானது இந்த வனத்திற்கு வந்தது அதை உன்தம்பி லவன் கண்டு குதிரையைத் பிடித்துக்கட்டி பின்வந்த சேனைகளையுங் கொன்று என்னுடைய சேனைகளையு மல்லோல கல்லோலப் படுத்தினபடியால் நான்வந்து குதிரையைவிடச் சொல்லிக் கேட்டால் என்னையும் உதாசினமாக தூஷித்துப் பாணப்பிர யோகம் பண்ணிஞன். அந்தபாணங்களை யெல்லாமறுத்து மூர்ச்சையாக்கிப் பின்கட்டாகக்கட்டி போட்டோமென்றுர்.

அவ்வார்த்தையை குசலராஜன் கேட்டு இரண்டுகண்களு ஞ் சிவப்பேற, இரண்டு காதிலும் புகையெழும்ப சரீரந்துடிக்

க கைகளிரண்டும் பதைக்க, அதிக கோபாக்கினியுடன் சத்து ருக்க மகாராசனைப்பார்த்து இடிமுழக்கத்தைப்போலே பல்லை நெறநெறவென்று கடித்து ஓ! சத்துருக்கமகாராசனே ? என் னவசனம் புகன்ருய், அயோத்தியாபுரியை பரிபாலனம் பண் ணப்பட்ட ஸ்ரீராமபிரான்விட்ட குதிரை அவர் பட்டணத்தை ச்சுற்றி பிரதட்சணம் வரவேணுமேயல்லாமல் எங்கள்வனத் திற்கு அந்தகுதிரை வந்தபடியினல் என்தம்பி லவன் பிடித் துக்கட்டினன். ஆனலவனுடன் நீங்கள் வந்தெதிர்த்து யுத் தஞ்செய்து பிடித்து கட்டிக்கொண்டுபோக உங்களுக்கென்ன ஞாயமிருக்கிறது சொல்லென்ருன். அப்படிகூறிய குசலனு டைய வார்த்தையை சத்துருக்கமகாராசன் கேட்டு சொல்லு கின்ருர் வாருந்தம்பி குசலராஜனே ; ஆயிரத்தெட் டண்டங்க ளும் உஉச-புவனமும் சத்தசாகரமுஞ் சூழ்ந்த ஈரேழுபதினு லுலகத்தையும் ஏகசக்கிரமா யாளப்பட்ட இராவணேஸ்வர னை இராமபாணத்தைவிட்டு சங்கரித்து ஆயிரத்தெட்டண்டம் உஉச-புவனமும் சத்தசாகரமுஞ் சூழ்ந்த ஈரேழு பதினலு லோகத்தையும் நிலைநிறுத்திய ஸ்ரீராமபத்திரசுவாமி யாருக் குத் தன்பட்டணமென்றும் உங்கள் வனமென்றும் யிருக்கு தோ சிங்கத்துக்கு தன்காடென்றும் புறங்காடென்றுமிருக்கு தோ அப்படி யவர்விட்ட குதிரை உங்கள் வனமென்றும் எங் கள் வனமென்றும் வேற்றுமையிராது கண்டாய், இப்போ உன் தம்பி சேனையை வீணிலே கொன்றபடியினலே நானவ னைபிடித்துக் கட்ட ஞாயமிருக்கிறது நீ, சிறுபிள்ளையானபடி யினல் உனக்கிவ்வளவு ஞாயந்தெரியாமல் என்னுடைய சே னையை முன்பின் பாராமல் அஸ்திரத்தைவிட்டுக் கொன்று போட்டாய் அந்தக் குற்றத்தைப் பாராட்டாமல் நீ சிறுபிள் ளையென்று நான் மனம் பொறுத்தேன் வேறே எவர்களானு லும் என் குதிரையைப் பிடித்துக் கட்டினதற்கு இந்நேரம் அவர்களை வானுலகமடையச் செய்வேன் அன்றியும் உன்னு டைய உயிரைத் தப்பித்துக்கொண்டு உன் தாயுடன் பிள்ளை யாய்ப் போய்ச் சேரென்ருர்.

அதனைக்கேட்ட குசலராஜன் சத்துருக்க மகாராஜனைப் பார்த்துச் சொல்லுகிருன். அடா ! சத்துருக்கனே ; என்ன வசனம்புகன்ருய் சிங்கத்திற்கு தன்காடென்றும் பிறர்காடெ ன்றுமுண்டோ என்று சொல்லவந்தாய் நீயும் அந்த இராம னும் இன்னம் சற்றுநேரத்தில் படப்போகின்ற பாடு தெரியா மல் என்னை யிகழ்ச்சியாகச் சொன்ன உன்னையிதோ அரைட்

சண நேரத்திற்குள் உன்னுடைய மர்மசர்மமெல்லாம் வெளிப்படுத்திவைக்கிறேன் பாரென்று பிரசண்ட கோதண்டத்தைக் குணத்தொனிபண்ணி ௧0 - நாராசபாணங்களை யெடுத்து கோதண்டத்திற் சந்தித்து சத்துருக்கமகாராசன்பேரில் பிரயோகம் பண்ணினனந்த நாராச பாணங்களும் வில்லில் விடுபட்டு நாகசற்பம்போற் சீறிக்கொண்டு வருகிறபோது சத்துருக்கமகாராசன்கண்டு பாலன் பாணமிஞ்சினனென்று ௧0-நாராசபாணமெடுத்து வில்லிற் சந்தித்துவிடவே அந்த பாணங்களானது அவயத்திலிருந்த நாகசர்ப்பம்போற் சீறிக்கொண்டு அதிகவேகமாகப் புறப்பட்டு குசலராஜன் விட்ட நாராசபாணங்களின்பேரில் சடாலென்று வந்துபாய்ந்து ஒன்றோடொன்று தாக்கி ஆகாசமார்க்கத்திலெழும்பி யுத்தங்கள் செய்து இருவருடைய பாணங்களும் கூர்மழுங்கி பூமியில் விழுந்து அவரவர்களுடைய அம்புருப்பொதியில் வந்தடைந்தது. அதுகண்டு குசலராஜன் கோபமாகி வில்லையெடுத்து அனேக அஸ்திரங்களைச் சந்தித்து வருஷகாலத்தில் சத்த மேகங்களும் ஏககாலத்தில் ஒன்றாகக்கூடி இடிமின்னல் குமுற லுடனே குமுகுமுவென்று ஓய்வு வொழிச்சலில்லாமல்இடைவெளியில்லாமல் சரவருஷம் பொழிந்தாலெப்படியோ அப்படியாக சரவருஷமாய் மிதமில்லாத பாணங்களைச் சொரிகிறபோது சத்துருக்கமகாராசன் கண்டு வில்லிலனேக பாணங்களைச் சந்தித்து ஈசானிய மூலையிலிருந்து மேகமானது கெற்சித்தாலெப்படியோ அவ்வாறு கெற்சித்து சரவருஷம் பொழிந்து குசலராசனுடைய அஸ்திரங்களுடன் ஒன்றோடொன் றாடுதாக்கி யுத்தங்கள்செய்து கூர்மடங்கி பூமியில் விழுந்து அம்புறாப்பொதியில் வந்தடைந்ததுகள். அதுகண்டு குசலராசன் கோதண்டத்தில் அமோகமான அஸ்திரங்களைச் சந்தித்து சத்துருக்க மகாராசன்பேரில் பிரயோகப்படுத்தினனந்த திவ்வியாஸ்திரங்களும் வில்லில் விடுபட்டு ஒன்றோடொன் றுரய்ந்துகொண்டு நெருப்புப் பொறிபறக்க வருகிறபோது சத்துருக்க மகாராசன் கண்டுதானும் வில்லிலனேக திவ்வியாஸ்திரங்களைத் தொடுத்து பிரயோகம் பண்ணினர். அந்த திவ்வியாஸ்திரம் அதிக விரைவோடு அக்கினி பொறிகள் சிதறச் சென்று குசலராசன் 'விட்ட பாணங்களின் மீது பாய்ந்து ஒன்றோடொன்றுதாக்கி கூர்மடங்கி பூமியில்விழுந்து அவரவர்களுடைய அம்புருப்பொதியில் வந்தடைந்தது.

அதுகண்டு சத்துருக்கமகாராசர் பின்னும் ௱-சிங்கமுகாஸ்திரத்தையெடுத்து பிரயோகம்பண்ணினர்.

அந்த சிங்கமுகாஸ்திரம் வில்லில் விடுபட்டு உக்கிரசிங்கம்போல அக்கினிகளை கக்கிக்கொண்டு அதிகவேகத்துடனே வரும்போது குசலராசன்கண்டு தானும் நூறு சிங்கமுகாஸ்திரத்தை வில்லிற்சந்தித்துவிடுத்தான் இப்படி இருவர்விட்ட சிங்கமுகாஸ்திரங்களும் ஒன்ருேடொன் றூடுதாக்கி மற்கட்டியுத்தங்கள்செய்து கூர்மழுங்கி பூமியில்விழுந்து அவரவர்களுடைய அம்புருவில் வந்தடைந்தது அதுகண்டு குசலராசன்சினங்கொண்டு ஒரு அக்கினியாஸ்திரத்தையெடுத்து அபிமந்திரித்துப் பிரயோகம் பண்ணினன்.

அந்த அக்கினியாஸ்திரமானது வடவாமுகாக்கினியை வாரி யிறைத்துக்கொண்டு ஆலகாலவிஷத்தைப்போற் சீறிக்கொண்டு அதிகவேகத்துடன்வருகையிற் சத்துருக்கமகாராசன்கண்டு பிரமைகொண்டுமனம்விண்டு இந்த அக்கினியாஸ்திரம் மகாமகிமையுடன்வருகிறதென்றுதன் தமயன்கொடுத்த இராமபாணமாகிய அக்கினியாஸ்திரத்தையெடுத்து அபிமந்திரித்து பிரயோகம்பண்ணினரந்த அக்கினியாஸ்திரமும்வில்லில்விடுபட்டு தகத்தகாயமாய் தங்கக்கட்டுகளுடன் அசுணபட்சியிறகு பூண்ட அக்கினியாஸ்திரமானது ஆலகாலவிஷத்தைப்போல் வடவாமுகாக்கினியை வாரியிறைத்துக்கொண்டு சடசடவென்கிற தொனிகளுடனேயு மதிசீக்கிரமாய் குசலராஜன் விட்ட அக்கினியாஸ்திரத்தின்பேரில் சடாலென்று வந்துபாய்ந்து ஆகாயமார்க்கம் கிளம்பி ஒன்ருேடொன் றூடுதாக்கி எதிர்த்துப் போராடி அக்கினிகளையுங் கக்கிக்கொண்டுயுத்தம்புரிகையில் தேவர்கள்கண்டு தியக்கங்கொண்டு அக்கினிச்சுவாலைகளை பொறுக்கமாட்டாமல் மேலண்டத்திற் கோடிப்போனர்கள். அப்படியிரண்டு அக்கினியாஸ்திரமும் ஒன்றுக்கொன்று தோர்வையில்லாமல் யுத்தஞ்செய்யத்தலைப்பட்டதுகள். அதனைப்பார்த்த குசலராஜனேதடா சத்துருக்கன் பலவானயிருக்கிருன் நாம் விடப்பட்ட அஸ்திரத்துக்கெல்லாம் பதில்விட்டு யுத்தம்பண்ணுகிருன் இன்னம் அவனுடைய சமர்த்தை யறிவோமென்று தன் தாயார்கொடுத்த இந்திரனுடைய வச்சிராயுதத்தையும் யமனுடைய காலதண்டாயுதத்தையும் ஈசனுடையசூலாயுதத்தையும் எடுத்து மந்திராபூதிகள்கொடுத்து ஒன்றின்மே லொன்ருக விட்டுவிட்டா னந்த

ஆயுதங்களும் குசலராஜன்கையில் விடுபட்டு அண்டரண்ட பிர்மாண்டங்களும் நடுங்க, அண்டகோளத்தையும் பற்றிஎறிய, அண்டச்சுவர்களும்நெக்குவிட, அண்டத்திலுள்ளதேவர்களும் பயந்தோடவருகிறபோது, சத்துருக்கர்கண்டு ஏதடா குசலன் மகாபராக்கிரமசாலியாயிருக்கிறு னிவன்விட்ட அஸ்திரங்களு மகாமகிமையோடு மிருக்கின்றது இவன் சிறுபிள்ளையாயிற்றே இவனுக்கிப்படிப்பட்ட அஸ்திரம் யார்கொடுத்தது எல்லாங்கண்டறிவோமென்று தம்முடைய ஸ்ரீராமபாணமாகிய வச்சிராயுதமுந் தண்டாயுதமுஞ் சூலாயுதமுமெடுத்துமந்திராபூதிகள் கொடுத்து ஒன்றின்மேலொன்ருய் குசலராஜன்விட்ட ஆயுதத்தின்பேரில் விடுத்தாரந்தமூன்ருயுதமும் சத்துருக்கமகாராசன்கையில் விடுபட்டு மும்மூர்த்திகளைப்போல் ஒருவரும் நிகரில்லாமல் அதிகவேகத்துடன் குசலராசன் விட்ட ஆயுதங்களின்பேரில் சடாலென்று வந்துபாய்ந்து ஒன்றுக்கொன் றூடுதாக்கி ஆகாயமார்க்கஞ்சென்று இருவர் விட்ட அஸ்திரங்களும் யுத்தஞ்செய்துக்கொண்டிருக்கையில் குசலராஜன் தன்தாயார்கொடுத்த நாராயணுஸ்திரத்தையெடுத்து பூசைசெய்துவில்லிற்சந்தித்துப்பிரயோகம்பண்ணினுன்.

அந்த நாராயணுஸ்திரமு மண்டலங்குலுங்க, அம்புவி கலங்க ஆவென்று வாயைத்திறந்து அக்கினிபொறியை குபீல் குபீலென்று வாரியிறைத்துக் கொண்டுசத்துருக்கமகாராசனெங்கே யெங்கேயென்று வரும்போது சத்துருக்க மகாராசன் கண்டு தன்னுடைய நாராயணுஸ்திரத்தை எடுத்து ஸ்ரீராமரைத் துதிசெய்து தூபதீப நைவேத்தியங்களுடன் பூசைசெய்து வில்லிற்சந்தித்து பிரயோகம் பண்ணினது வும் வில்லைவிட்டு வெளிப்பட்டு ஆழிவானமம்புவிபரவ ஆவென்று வாயைத் திறந்துக்கொண்டு குசலராசன்விட்ட நாராயணுஸ்திரத்தின்பேரிற் சடாலென்று வந்துபாய்ந்து ஒன்ருே டொன்று ஊடுதாக்கி ஆகாயவீதியிற் கிளம்பி ஒன்றுக்கொன்று தோர்வையில்லாமல் யுத்தம்பண்ணுகிற போது இருவருடைய அஸ்திரத்திஞல் தேவர்களுடைய முகங் கருகி அப்போது தேவர்கள் சொல்லிக் கொள்ளுகிருர்கள் இது என்ன சுப்பிரமணியரும் சூரபத்மனுடைய யுத்தத்திலும் நமக்கிப்படிப்பட்ட துன்பமும் வந்ததில்லையே நாம் வேடிக்கை பார்க்க வந்தது போதுமென்று மேலண்டத்திற் கோடிப்போனுர்க ளப்போ

து இருவர்விட்ட நாராயணாஸ்திரங்களும் ஒன்றோடொன் றெதிர்த்து யுத்தம்பண்ணத் தலைப்பட்டதுகளதுகண்டு குசல ராஜன் கோபமாகி சக்கரத்தைக் கையிலெடுத்து மந்திராபூதிக ளுடன் விட்டுவிட்டானந்த சக்கரத்தாழ்வார் மந்திராபூதியை உட்கொண்டு குசலராஜன் கையில் விடுபட்டு தகத்தகாயமாய்ப் பதினாறுகோடி சூரியனைப்போற் பிரகாசித்துக்கொண்டு அண் டங்கள் யாவுங்குலுங்க, அண்டமுகடுவரையிலும் பத்தியெரி ய, மூவர்கள் வாட, தேவர்கள் பயந்தோட, ஆலகால·விஷத் தைப்போற் சீறி எறிய, புகைகளுடன் சிடசிட படபடவென் ற சத்தத்துடன் சத்துருக்கனெங்கேயென்று வரும்போது சத்துருக்கமகாராசன் கண்டு ஏதடா சக்கரமானது மகாமகி மையுடன் வருகுதென்று தன்தமையன் கொடுத்த ஸ்ரீராம பாணமாகிய சக்கரத்தைவிட இதுவும் பூசைகொண்டு தகத் தகாயமாய் இரவுபகலாய்ப் பிரகாசித்துக்கொண்டு கீழேழுலக மும் மேலேழுலோகமும் ஒன்றுயுருவுக்கொண்டு வரும்போ து அண்டத்திலுள்ள தேவர்களும் யாவரும் எங்கே நம்மு டையபேரில் சக்கரம்வருகிறதோவென்று பயந்தோட, ஆர்ப் பரித்து குசலராஜன்விட்ட சக்கரத்தின்பேரில் தடாலென்று மோதி ஒன்றோடொன்றூடுதாக்கி ஆகாயமேகிளம்பி ஒன்றுக் கொன்று தோர்வையில்லாமல் யுத்தம்பண்ணத் தலைப்பட்ட களதுகண்டு குசலராஜன் தன்தாயார் கொடுத்த வேலாயுதத் தை எடுத்து மந்திராபூதியுடன் பூசைசெய்து சத்துருக்க மகா ராசனுடைய மார்புக்கு லக்குபார்த்துசத்துருக்கனை ஜெயம டைந்து வாவென்று விட்டுவிட்டானந்தவேலாயுதமானது குசலராஜன் கையில் நின்றும் விடுபட்டு ஆகாயம்பூமியுமொ ன்றாக வாயைத்திறந்து வடவாமுகாக்கினியை வாரியிறைத்து அண்டகோளத்தையும் பற்றி எறிய அண்டமுகடுகிழிய வரு வதைச் சத்துருக்க மகாராசன்கண்டு இந்த வேலாயுதம் மகா உக்ரத்துடன் வருகிறதென்று தன் தமயன்கொடுத்த உக்ர வேலை எடுத்து மந்திரபூர்வத்துடனே பூசைகள்செய்து குச லன்விட்ட வேலாயுதத்தை செயம்பண்ணிவாவென்று விட்டு விட்டார். அந்தவேலாயுதமும் விடுபட்டு அண்டம்படாலென் று வெடிக்கத்தக்கதாக அக்கினிப்பொரிகளெழும்ப கணகண வென் றதிவேகத்துடன் சடாலென்று வந்து குசலராஜன் வேலாயுதத்தின்பேரில் விழுந்து வேகமாய் ஒன்றோடொன்

றாடுதாக்கி ஆகாயவீதியிற் கிளம்பி ஒன்றுக்கொன்று தோர் வையில்லாமல் பிரசண்ட யுத்தம்பண்ணத் தலைப்பட்டதுகள்.

அதுகண்டு குசலராஜன் கோபமாகி தன்தாயாரைத் துதி பண்ணி உக்கிரவீரசத்தியை எடுத்து மந்திராபூதிகளுடன் பூசைசெய்து சத்துருக்கனுடன்போய் போராடி செயஞ்செய்வாவென்று விட்டுவிட்டானந்தசத்தியானது விடுபட்டு ஆகாயம் பூமியுமொன்று யுருவுகொண்டு ஆவென்று வாயைத்திறந்து அக்கினிகளைக் குபீல் குபீலென்று கக்கிக்கொண்டு அதிக உக்கிராகாரத்துடன் உக்கிர வீரசத்தியானது வருகிறபோது சத்துருக்கமகாராசன் கண்டு தன்தமையன் கொடுத்த ஸ்ரீராமபாணமாகிய சத்தியை பூசைசெய்து விட்டுவிடவே அச்சத்தியும் அதிக உக்கிராகாரத்துடன் குசலராஜன்விட்ட சத்தியின் பேரில் சடாலென்று வந்துமோதி ஒன்றுக்கொன்று யுத்தங்கள்செய்து சத்துருக்க மகாராசன்விட்ட சத்தியை இரண்டு துண்டாக நறுக்கி பூமியிற்றள்ளிப்போட்டு உக்கிரவீரசத்தியானது வரும்போது சத்துருக்கமகாராசனும் வில்லையெடுத்து நிறுத்தி அநேக ராமபாணங்களை வில்லிற்சந்தித்து நிமையோடு நிமைதட்டு முன்னமே கோடிராமபாணம்விட்டாரந்த ராமபாணங்களையெல்லாம் உக்கிரவீரசத்தியானது கமளீகரம்பண்ணிவிட்டு அதிவேகமாய் வருகிறபோது சத்துருக்கமகாராசன் பல்லை நறநறவென்று கடித்து நிமையோடு நிமைதட்டுமுன்னமே தன்னுடைய முப்பத்திரண் டாயுதங்களையும் றிவ்றிவ்வென்று சத்தியின்பேரில் விட்டுவிட்டாரந்த உக்கிர வீரசத்தியானது முப்பத்திரண்டாயுதங்களையும் கமளீகரம்பண்ணிக்கொண்டு வருகிறபோது சத்துருக்கமகாராசன் கோபித்து தன் தமையன் கொடுத்த மந்திரவாளையுருவி சத்தியின்பேரில் வீசிவெட்டினர் அந்த வெட்டானது சத்தியின் பேரிற் படவே இரண்டுதுண்டாய் பூமியில் விழுந்து உடனே யுருவாகி அக்கினிக் கொழுந்துகளைவிட்டு அதிவேகத்துடன் சத்துருக்க மகாராசனுடைய மார்பிற் சடாலென்று வந்துபாய்ந்து உருகமாட்டாமல் முதுகிலுருகி திருப்பாற்கடலில் ஸ்நானம்பண்ணி குசலராசனுடைய அம்புருப்பொதியில் வந்தடைந்தது அப்படி உக்கிரவீரசத்தி மார்பிற்பட்டிருகவே சத்துருக்கமகாராசன் கைசோர்ந்து மெய்சோர்ந்து தருதிகள்பிரீட ஸ்ரீராமபத்திரா ஸ்ரீராமபத்திரா ரகுநந்தனவென்று தேரின்பேரில்விழுந்து மரணமூர்ச்சையடைந்தார்.

அப்படி சத்துருக்கமகாராசர் தேரின்பேரில்விழவே, தேவேந்திராதி தேவர்களெல்லாங்கண்டு துக்காகிரந்தராய் ஸ்ரீராமா ராமாவென்று விசனப்பட்டார்கள். அப்போது குசலராசன் மகாசந்தோஷமாய் பிரசண்டகோதண்டத்தை குமுகுமுவென்று குணத்தொனிபண்ணி குசலராசனுனவன் குகன் காலசித்தன் முப்பதினுயிரம் ராசகுமாரர்களும் ஐயாயிரம் மந்திரிபிரதானிகளு முப்பதினுயிரங்கோடி படைத்தலவர்களுஞ் சேனுதிபதிகளும் ஒன்ருய்க்கூடி குசலராசன்முன்னுக்குஇரதத்தைநடத்தி குசலராசனேவளைத்துக்கொண்டு யுத்தஞ்செய்திருந்தார்கள். அந்தச்சமயத்தில் இரண்டு இராட்சதாள் ஆகாயமார்க்கத்திலெழும்பிவாய்வேக மனோவேகத்துக் கதிகமான வேகத்துடனே அயோத்தியாபுரியில் வந்து குதித்து சகலரோடுங் கொலுவாயிருக்குங்கொலுமண்டபம்வந்து ஸ்ரீராமரைக் கண் டடிபணிந்து மிகுந்த வணக்கத்தோடுஞ் சொல்லுகிருர்கள்.

ஓ! சுவாமி, அயோத்தியாபுரியிலிருந்து நேர்வடக்காகத் திரும்பி பத்மாவதிபட்டணம்போய் அவ்விடத்திலிருந்து சேதுபந்து ராமேஸ்வரம்வந்து அவ்விடத்திலிருந்து நேர்மேற்கிலிருக்கும் வால்மீகர் வனம்போய்ச்சேர்ந்து அஸ்வமானது மேய்ந்துக்கொண்டிருந்தது அதனை அவ்வனத்தில் ஒருசிறுபிள்ளை லவனென்னப்பட்டவன் பிடித்துக்கட்டி யுத்தஞ்செய்தான். அதுகேட்டு சத்துருக்கமகாராசர் போய் யுத்தம்புரிந்து லவனை மூர்ச்சையாக்கி தம்முடைய இரதத்தின்குத்துக்காலில் பிடித்துக் கட்டிக்கொண்டுவந்துவிட்டார் அந்தசங்கதி அவன் தமையன் குசலன்கேட்டு ஓர் பெரியவில்லைக் கையில்பிடித்துக் கொண்டுவந்து நம்முடைய சேனைகளையெல்லாங்கொன்றுமூர்ச்சையடையவுஞ்செய்துவிட்டான். அவனுக்கு எவ்வளவு பிரியவசனஞ்சொன்னுலுங்கேளாமல் சத்துருக்கமகாராசரோடும் எதிர்த்து யுத்தஞ்செய்து அவரையுமூர்ச்சையடையச் செய்துவிட்டான். அவர்களிருவருடைய வடிவும் அழகையும் பார்த்தால் தங்களைப்போலவேயிருக்கிருர்க ளவர்களுடையதாய்தந்தையின்பேரைக்கேட்டால் தாயார்பேர் சீதாலட்சுமியென்றும் ஐயர்பேர் வால்மீகரிஷியென்றும் சொல்லுகிருர்கள். அவர்களைப்பார்த்தால் ஒட்டைச்சாணில்லை அவர்கள் கைவில்லைப் பார்த்தால் ரணரங்கங்கண்ட வில்லைப்போலிருக்கின்றது அவர்களைமடக்கிக்கொண்டு சில இராட்சதர்களும்படைத்தலைவரு

ஞ்சேனுதிபதிகளும் மந்திரிமார்களும் இராசகுமாரர்களும்யுத்தஞ்செய்துக்கொண்டிருந்தார்கள். அவர்வளுமிந்நேரம்மாண்டுபோயிருப்பார்களென்று தோற்றுகிறதென்றூர்கள்.

அதுகேட்டுஸ்ரீராமபத்திரசுவாமியுந் தம்பிமார்களும்மந்திரிசுமந்திரரும் விபீஷணரும் அனுமார் அங்கதனும் சுக்கிரீவரும்யோசனையானூர்கள். அப்போது ஸ்ரீராமபத்திர சுவாமியாருக்கு தம்முடைய துயாமனைத்தும் நீங்கி பிள்ளைகள் தம்மைப்போலிருக்கிறதென்று சொல்லவே, மிகவும் சந்தோஷமாகி பரதலட்சுமணரே ஜானகியில்லாமல் நம்முடைய யாகத்திற்கு பின்னம்வந்து நேரிடும்போலிருக்கின்றது ஆகையால் ஜானகி வால்மீகருடைய வனத்திற்கு னிருக்கவேணும்அந்த இரண்டு பிள்ளைகளையும் கைப்பிடியாய் பிடித்துவந்தால் பிள்ளைகளாலேஜானகி உயிருடனிருக்கிறதும் இறந்துபோனதுந்தெரிந்துக்கொள்ளலாமென்றூர். அதற்குபரதலட்சுமணர்சொல்லுகிறூர்கள் அண்ணுவே தங்களுடைய திருவுளப்படியாரை அனுப்புகிறீர்களோ அவர் சென்று சிறுபிள்ளைகளுக்குஉயிர்ச்சேதம் வரவொட்டாமற் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வருகிறேமென்றூர்கள்.

அப்போது ஸ்ரீராமர் இளையபெருமாளாகிய இலட்சுமணரை யழைத்து நம்முடைய எழுபத்திரண்டு வெள்ளம் வானரரையும் பயணப்படுத்தி அனுமார் அங்கதன் இருபத்துநான்குபடைத் தலைவர்களையும் இருபத்தைந்து வெள்ளம் இராட்சதர்களையுங் கூட்டிக்கொண்டுபோய் அந்தசிறுபிள்ளைகள் இரண்டுபேரையும் உயிர்ச்சேதம் வரவொட்டாமற் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வாருங்கள் கையிலகப்படாமற் போனுல் அஸ்திரங்களை விட்டாகிலும் மூர்ச்சையாக்கி இரதத்திற் கட்டிக்கொண்டு வாருந்தம்பியென்று வில்லம்புங்கொடுத்தார். அதனை இலட்சுமணர் இரண்டுகரத்தாலும் வாங்கிக்கொண்டு சுவாமியையும் பரதரையுஞ் சேவித்து அவர்களிடத்தி லாசீர்வாதம்பெற்று வெளியே புறப்பட்டார். இலட்சுமணரானவர் அதுகண்டு அனுமார் அங்கதனும் எழுந்திருந்து சுவாமியையும் பரதரையுஞ் சேவித்து நிற்க அவர்கட்கு ஆசீர்வாதஞ்செய்து ஸ்ரீராமபத்திர சுவாமியார் அனுமார் அங்கதன் சாம்புவந்தரையுமழைத்துச் சொல்லுகிறூர். நீங்களும்தம்பி இலட்சுமணர் பின்சென்று ஆலசியமில்லாமல் அந்தசிறு

பிள்ளை குசலவர்களுடைய வாய்மொழியைக் கேட்டு கிட்டே நெருங்கி கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டுவந்தால் சீதை இறந்துபோனது மிருக்கிறதுமறிந்துக் கொள்ளலாம்சீதையில்லாமல் யாகத்திற்கு பின்னம்வந்துநேர்ந்தது சீக்கிரமாய்தண்டுதளத்தைக் கூட்டிக்கொண்டு நடவுங்கவென்றார்.

அப்போது சாரதியானவன் இரதத்தைச்சிங்காரித்துஆசாரவாசலின் முன்பாகக்கொண்டுவந்துநிறுத்தினான்அந்தஇரதத்தின்பேரில் இலட்சுமண ரானவரேறி ஆரோகணித்துக்கொண்டார். அனுமார் அங்கதன் இருபத்துநான்குபடைத்தலைவர்களும் இரதமேறி புறப்பட்டார்கள். அவர்கள்புறப்படவே, சரிபந்தி போஜனஞ்செய்யப்பட்ட ஐயாயிரம் இராசகுமாரர்களும் இரதமேறிபுறப்பட்டார்கள். அப்போது ராயபேரி, வெங்கலபேரி, ரணபேரி, முரசு, வெண்கலமுரசு, டங்காவணி, முரசு, மத்தளம், ருத்திரவீணை, கர்னபூரி, தம்பட்டம், கைத்தாளம், குடமுழா, பஞ்சநாதம் என்று சொல்லப்பட்ட முப்பத்திரண்டு மேளவாத்தியங்களும் தாம் தாமென்று முழங்க, அரவக்கொடிபறக்க, அம்புவியிற்சிறக்க, அயோத்தியைவிட்டு ஆறு, மடுவு, குளங்கள்தாண்டி, பாலவனம் வந்தார்கள். அப்போது பலபல வென்று பொழுது விடிந்தது. சூரியபகவானும் இலட்சுமணருடைய யுத்தம் பார்க்க வந்தவரைப்போல உதயமாகவே, அவ்விடத்தில் தண்டுபாளையமிறங்கினார்கள். அப்போது இலட்சுமணர் தனுசை யனுமார் கையில் கொடுத்து அங்கதன் கையில் உடைவாளைக் கழட்டிக்கொடுத்து தடாகத்திலிறங்கி ஸ்நானஞ்செய்து நித்திய நேம நிஷ்டைகளை முடிந்துக்கொண்டு புறப்பட்டார்கள்.

அப்போது குசலராசனானவன் வில்லி லனேகபாணங்களைச் சந்தித்து இராட்சதாள் பேரிலும் குகன் காலசித்தன் பேரில்விட்டு கொல்லுகிறபோது இராட்சதரும் இராசகுமாரர்களும் மந்திரி பிரதானிகளும் குகன் காலசித்தனுந் தனுசிலஸ்திரங்களைப்பூட்டி மாரிபொழிவதுபோல் சரமாரியாய் குசலராசன்மீது பொழிகிறபோது குசலராசன் அகோரமான அஸ்திரங்களைவிட்டு அவைகளை யறுத்துத்தள்ளி தன் தாயார் கொடுத்த உக்ர வீரசத்தியை யெடுத்து பூசை செய்து இராட்சதாள் இராசகுமாரர்கள் மந்திரி பிரதானிகள் குகன் காலசித்தன் பேரிலும் விட்டுவிட்டான். அந்த உக்ரவீரசத்தியும் வெளிப்பட்டு உக்ராகாரத்துடன் விண்மண்ணதிர ஆவெ

ன்று வாயைத் திறந்து வடவாமுகாக்கினியை வாயிற் குபீல் குபீலென்று கக்கிக்கொண்டு வருகிறபோது காலசித்தன் கண்டு, வில்லில் நாராயணாஸ்திரத்தையெடுத்து சந்தித்து மந்திர பூர்வகத்துடனே பூசைகள் செய்து குசலராஜன் விட்ட சத்தியின்பேரில் பிரயோகப்படுத்தி சத்தி, வேல், சூலம், கால தெண்டாயுதமெடுத்து ஒன்றின்மேலொன்றாய் மந்திராபூதிகள் செய்து குசலராஜன் விட்ட சத்தியின் பேரில் பிரயோகப்படுத்தி விட்டுவிட்டான். அந்த ஆயுத அஸ்திரங்களும் அண்டம் ஆயிரத்தெட்டும் நடுங்க, ஆலகால விஷத்தைப்போல அக்கினிச்சுவாலைகளை வீசிக்கொண்டு அதிக வேகத்துடன் சடாலென்று சத்தியின்பேரில் வந்து பாய்ந்து யுத்தஞ்செய்தது கள். அப்போதந்த சத்தியானது அதிக உக்ராகாரத்துடன் ஆயுதாஸ்திரங்களை அடித்துப் பூமியிற் றள்ளிவிட்டு வருகிற போது இராட்சதாள் விடப்பட்ட அஸ்திரங்களையும் கமளீகரம் பண்ணிவிட்டு ராட்சதாளுடைய மார்பிலும் குகன் காலசித்தன் மார்பிலும்பட்டு முதுகில் வுருகி பால்சமுத்திரத்தில் ஸ்நானம் பண்ணிவிட்டு குசலராஜனுடைய அம்புறுப்பொதியில் வந்தடைந்தது.

அதுகண்டு குசலராஜன் மகா சந்தோஷத்துடனே கோதண்டத்தைக் கையிலே பிடித்துக்கொண்டு கொஞ்சந்தூரம் நடந்துபோய்ச் சத்துருக்கமகாராஜனுடைய இரதத்தின்பேரிலேறித் தேர்க்காலுடன் கட்டியிருக்கிற லவனுடைய கட்டை யவிழ்த்துவிட்டு மூர்ச்சை தெளியவே கண்ணை விழித்து பார்த்து தன் தமயன் மூர்ச்சை தெளிய வைத்தாரென்று தெரிந்தவனாக வெழுந்திருந்து குசலராஜனை சேவித்து நடந்த சமாச்சாரத்தை யெல்லாம் குசலராஜனுக்குச்சொல்லி சத்துருக்க மகாராஜர் மூர்ச்சை யடைந்திருக்கிறதையுங்கண்டு, இரதத்தைவிட்டு இருவருங்கீழே குதித்து ஒருவர்க்கொருவர் சாமர்த்தியத்தை பேசிக்கொண்டு வருகிறபோது அஸ்வமேதக் குதிரையைக் காணாமல் ரணக்களத்தைவிட்டு புன்னைமரச் சோலையில் வருகிறபோது அவ்விடத்தில் ஒருமரத்திற் கட்டிவைத்து கறு00-இராக்ஷதாள் அக்குதிரைக்கு காவலிருக்கிறதையுங் கண்டு அவ்விடம் வருகிறபோது இராக்ஷதாள் குசலவர்களைக்கண்டு அதிக கோபங்கொண்டு வில்லை வளைத்து அஸ்திரங்களை வில்லிற் சந்தித்து குசலவர்களைப்பார்த்து சொல்லுகிறார்கள். அடா! சிறுபிள்ளைகளை? எங்கேவருகிறீர்கள்

நில்லு நில்லுங்களென்று சொல்லி அஸ்திரங்களை விடுகின்ற போது அதைக் குசலராஜன் கண்டு தலையை யசைத்து குஞ் சிரிப்புகொண்டு அதிக கோபமாகி வில்லில் ௧௦௦-திவ்வியாஸ் திரத்தை யெடுத்து சந்தித்து விட்டு இராக்ஷதாள் விடப்பட் ட அஸ்திரங்கள் அனைத்தையுமறுத்து அதனமாக ௧௫-திவ் வியாஸ்திரத்தைவிட்டு ௧௫௦௦-இராக்ஷதாளையுஞ் சம்மாரம் ப ண்ணி அஸ்வமேதக் குதிரையைப் பார்த்து ஆச்சரியப்பட்டு குதிரையினுடைய நெற்றியிற் கட்டியிருக்கிற பட்டயத்தை வா சித்துப்பார்த்து தம்பியாகியலவனைநோக்கிச் சொல்லுகிறான்.

அடா! தம்பி லவனே? நம்முடைய கையிலகப்பட்ட கு திரையை விடுவிக்க சத்துருக்கன் தமயனைப்போலொத்தராம ன் நூறுராமன் வந்தெதிர்த்தாலும் நம்முடைய பாணத்தின லே நன்றாய்ப் பூசைசெய்தனுப்பலாம் நமது கையிற் சிக்கின குதிரையை விடுவித்துக்கொண்டு இராமன் கையினால் அஸ்வ மேதயாகம் பண்ணுகிறது ஸ்ரீமந்நாராயணருக்கே தெரியவரு ம், இன்னம் அந்தராமனுக்கு எவ்வளவுசேனைதானிருக்கின்ற தோவருகிற சேனைகளுக்கெல்லாம் உன்கை யஸ்திரமிருக்கை யிற் பயமென்னவென்று அஸ்வத்தை கட்டவிழ்த்து அப்பா ற்கொண்டுபோய் சுதட்சணமரத்திற் கட்டிவிட்டு சரஸ்வதியா ற்றில் ஸ்நானம்பண்ணி நேமநிஷ்டைகளை முடித்துக்கொ ண்டு ஒருதோப்படியில்வந்து காமதேனுவை நினைக்க அக்கா மதேனுவானதுவந்து அமுதளிக்க இருவர்களும் புசித்து கைகாலலம்பி சற்றுநேரமிளப்பாறிக்கொண் டிருந்தார்கள்.

அப்போது இலட்சுமணருடைய தண்டானது மண்ண திரவிண்ணதிர டமரபேரிகை வாத்தியங்கள்முழங்க, பாலவ னத்தைவிட்டு புறப்பட்டு தமது சேனைகளானது ஆரவாரத் துடனே தண்டானது வருகிறபோது குசலவர்கள் அந்தசத் தங்கேட்டு இன்னம் வெகுசேனைத்திரள் வருகிறதுபோல காணுகிறதென்றிருவரும் அண்டகோளத்தை யளாவிநின்ற சுதட்சணமரத்திலேறி உச்சிக்கிளையினின்று இலட்சுமணரு டையதண்டின்பெருக்கத்தைப்பார்த்தார்கள் அது கங்குகரை கொள்ளாத சேனைகளும் யானைகளும் இரதங்களும் குதிரைக ளும் கண்ணுக்கெட்டாததூலவில் வருகிறதைக்கண்டு மரத் தைவிட்டிறங்கி இருவரும் ரணக்களத்தைச் சுற்றிக்கொண்டு

வருகிறபோது லவனானவன் குசலராஜனுடைய பிரசண்ட கோதண்டத்தையும் அம்புருப்பொதியையும்பார்த்து சொல்லுகிறார்.

அண்ணாவே இந்தபெரியவில்லும் அம்புருப்பொதியையும்யாரளித்தது சொல்லுமென்றானதுகேட்டு குசலராசன் லவனைப்பார்த்துசொல்லுகிறான். வாருந்தம்பி லவனே, உன்னுடன் சத்துருக்கமகாராஜன் யுத்தஞ்செய்து உன்னை மூர்ச்சையடையச்செய்து இரதத்திற்கட்டிக்கொண்டு போனாரென்று வனத்துப்பெண்கள் நமது தாயாருக்கு சொன்னதாய் நம்முடைய தாயார் நான் மறுவனம் வேட்டையாடிவருகிறபோது அழுதுக்கொண்டிருக்கிற சத்தங்கேட்டு சீக்கிரமாயோடி வந்து அம்மா நாங்கள் இருக்கிறபோது இப்படி உனக்கு துக்கமுந் துயரமும் வருவானேனம்மா வென்றேன். அப்போது அம்மாள் வனத்துப்பெண்கள் சொன்னபடி சொல்லியழுது ஸ்ரீமந்நாராயணர் கையில்லும் இந்த அஸ்திரமும் அம்புருப்பொதியு மழைப்பித்துக்கொடுத்து உன் தம்பி லவனைப்பிடித்துக் கொண்டுபோனவர்களை சம்மாரஞ்செய்து தம்பியை மீட்டுக்கொண்டுவா மகனே யென்றுவிடைகொடுத்தனுப்பினார்கள். அந்தப்படியே நான் அம்மாள்திருவாக்கைத்தள்ளாமல் வந்தெதிர்த்த இராஜாக்களையுஞ் சம்மாரஞ் செய்து உன்னையு மூர்ச்சைதெளியவைத்தேன் தம்பிலவனேஎன்றான்.

அதுகேட்டு லவனானவன் நம்முடையவில்முறிந்துபோயிற்றே எதிரியினுடைய தண்டாலால் நெருங்கிவந்துவிட்டதே நமதுகையில் வில்லில்லாமற்போயிற்றே ஆகிலும் பெரிதல்ல நமக்கு ஐயர்சொன்ன சூரியமந்திரமிருக்கின்றதல்லவா இப்போது அந்தமந்திரபலனை யறியவேண்டுமென்று தடாகக்கரையில்வந்துநின்று சூரியநமஸ்காரஞ்செய்து சூரியமந்திரத்தை யுச்சாடனஞ்செய்யவே, சூரியபகவானும் லவனுடைய மந்திரத்தி லுந்நியகோரிக்கையறிந்து லவன்முன் பிரசன்னமானார். அப்படி சூரியபகவான் பிரசன்னமாகவே லவனானவன் அதிகசந்தோஷத்துடனவரை நமஸ்கரித்தான். அந்த சூரியபகவான் லவனை ஆசீர்வதித்து நம்மை துதிசெய்து வருந்தியழைப்பித்த காரியத்தை சீக்கிரமாய் சொல்லுந் தம்பியென்றார்.

அப்போது லவனுனவன் மிகவும் வணக்கத்துடன் சுவாமி அடியேனுக்கு ஒடியாத வில்லும் அம்புருத்தூணியும் மாளாத அஸ்திரமுந் தந்தருளவேண்டுமென்று கந்தமுருஞ் சுந்திரவடியில்சேவிக்க, சூரியபகவான் லவன் மனதில்நினைத்தபடியே தம்முடைய வில்லம்புருப்பொதியுங்கொடுத்து ஜெயமடையக்கடவதென்று ஆசீர்வாதஞ்செய்தனர். அதனைப்பெற்ற லவனுனவன் சந்தோஷமாகி முதுகில் அம்புருப்பொதியுங்கட்டி கையில் வில்லைபிடித்துக்கொண்டு தடாகக்கரையை விட்டு வெளியில்வந்து தமையனுக்கு வில்லையும் அம்புருப்பொதியையுங் காண்பித்து சந்தோஷமாக பேசிக்கொண்டிருந்தார்கள்.

அப்போது இலட்சுமணருடைய தண்டானது சரஸ்வதியாரு தாண்டி ரணக்களம்வந்து இலட்சுமணர், அனுமார், அங்கதன், சாம்புவந்தன், நீலன், குமுதன், மத்தகன், மக்கரசன், கெந்தபிரலன், உல்முகன், கும்பன், சாம்பன், கேசரி, இடும்பன், பரசன், எமுகன், கோமுகன், துய்யசாதனன், துற்சாவலி, முகன், மந்துவாதி, அகம்பன், அரக்கன், அனுவன், இப்படி சொல்லப்பட்ட உச - படைத்தலைவர்களும், எஉ - வெள்ளம் இராட்சதாளும் ருOO - இராஜகுமாரர்களுங் குசலவர்களைக் கண்டு இந்த சிறுபிள்ளைகளாலே இவ்வளவு சேனைகள் மாண்டுபோயிற்றென்று மனங்கலங்கி எல்லாம் ஸ்ரீராமருடைய கிருபை என்று மனதைத்திடப்படுத்திக்கொண்டு ரணக்களம்வந்து சேனைகளைப் பவுஞ்சிட்டு நிறுத்தி இலட்சுமணரையும் அனுமாரையும் ருOOO-இராஜகுமாரர்களை நடுவணியில் நிறுத்தி அங்கதனையும் சாம்புவந்தரையும் அதற்கு முன்னணியில் நிறுத்தி உரு-வெள்ளம் இராட்சதாளையும் உசOOO-கோடி இராட்சதப் படைத் தலைவர்களுமதற்கு முன்னணியில் நிறுத்தி தான் முன்னின்று இராட்சத பேரிகையறைவித்தான் வானராள் தண்டிற்குசேனதிபதியான நீலனுனவன். அந்தச் சத்தங் குசலராசன்கேட்டுமகாசந்தோஷத்துடன் லவனைப்பார்த்து குசலராஜன் சொல்லுகிறுன்.

கேளுந்தம்பி! லவனே? இந்த தண்டில்வந்திருக்கிற பிரமுகாள்பேரில் நான் யுத்தஞ் செய்கிறேன் நீ என்னை விட்டுப் பிரியாமல் நின்றுக்கொண்டே சேனைகள்பேரில் யுத்தம்பண்ணு இன்றையதினம் நல்லயுத்தம்போற் காண்கின்றது சாக்கிரதையாயிருவென் றுத்தரவு செய்தான் அவ்வாறேலவனும்

வில்லையதிக சீக்கிரத்தில் வளைத்து நாணிபிகிந்து லகயிற்பிடித்தான் அதுகண்டு குசலராஜன் அட்டகாசஞ்செய்து கோதண்டத்தை அண்டகடாகம் படீலென்று வெடிக்க, அண்டத்திலுள்ள தேவர்களும் கிலிபிடிக்க, நக்ஷத்திரங்கள் பலபல வென்றுதிர். பூமியானது நடுங்க, ஆதிசேஷன் ரத்தங்களை கக்கிக்கொண்டொடுங்க, அஷ்டகெஜங்கள் வீறிட, அஷ்ட திக்கும் அசைந்தாட, இராக்ஷதாளை வளைத்து நாணேசை கொண்டான் அதை இராக்ஷதாள்கேட்டு திடுக்கிட் டேங்கி, சேனாதிபதியான நீலன் சாரதியையெச்சரித்து இரதத்தை குசலராஜன் முன்னுக்குச் செலுத்தி நீயார் உன் பேரென்ன சொல்லென்றான்.

சேனாதிபதியான நீலன்பேரில்
குசலனும் லவனும் யுத்தம் புரிதல்.

---

விருத்தம்.

விதிமுதலோர்புகழ்கானி லுறைந்திடுஞ்சீதை
சதிருடைதந்ததெனயரு மாசியத்தோனும்
துதிபெருசபைநினைந்தொரு நிழல்சொற்சேனா
பதியெனு நீலனுறம்கொடு சமர்செயவந்தனனே.

அவ்வார்த்தையைக்கேட்ட குசலராசனானவன் தம்பியாகிய லவனைப்பார்த்துச் சொல்லுகிறான். அடா! தம்பிலவனே குரங்கு சொன்ன வார்த்தையை கேட்டாயோ குரங்குக்கோ வில்லம்பில்லை இராஜாக்களைப்போல ரதமேறிக்கொண்டு நம்மை சட்டை பண்ணாமல் நம்முடைய தாய் தந்தை பேரையும் கேழ்க்கின்றது காட்டில் வாசஞ்செய்யுங் குரங்கு நம்முடையபாஷையை கற்றுக்கொண்டு நமது பேரிற் போர்புரிய தேரேறி நேராய் வந்துவிட்டது இந்த குரங்குக்கு நம்முடைய தாய்தந்தை பேரையோ சொல்லுகிறதென்றான். அதுகேட்டு லவனானவன் தமையனைப் பார்த்துச் சொல்லுகிறான். அண்ணாவே? காட்டுக்கிழங்கை பிடுங்கிக் கடித்து சுனை நீரைக் குடித்து பாரைமீதுஞ் செடிமீதும் உறங்கிக்கொண்டிருக்கும் வானரத்தை இராமன்பிடித்து கும்புகூட்டி சேவகத்திற்கு வைத்துக்கொண்டவனாகவேணும், இந்தகுரங்குகள் நம்மை என்ன செய்யக் கூடும், இந்த குரங்கை ஒரு பொருட்டாக வெண்ணி நாம் தாய்தந்தைபேரைச் சொல்லுகிறதோ முன்பின் பாராமல் பாணங்களை விட்டு யுத்தஞ் செய்து வெற்றியடைந்து நம்

ழுடைய தாயாரிடஞ் சலதியிற்போய்ச் சேரவேணும் என்றான் லவனானவன். அப்படி கூறிய லவனுடைய வார்த்தையை குசலராஜன் கேட்டு முன்பின்யோசனை பண்ணாமல் சிறுபிள்ளை புத்தியானபடியால் அம்புறாப் பொதியிற் கையைவைத்து நான்கு திவ்வியாஸ்திரங்களெடுத்து கோதண்டத்திற் சந்தித்துக்கொண்டு நீலனைப்பார்த்து அடா நீலனே? நீ என்னவார்த்தை சொல்லுகிறாய் இராமன் உப்பைத்தின்று இராமனுக்கு எதிரிகள்வந்து வளைத்துக்கொண்டவேளையில் அவர்களுக்கு நீங்கள் பயந்து பிரிய வசனஞ்சொல்லி உயிர் தப்பித்துக்கொள்ள என் தாய்தந்தைபேரை கேழ்க்கவந்தாயோ அப்படி தாய்தந்தையர்பேரை எனக்குச் சமதையான மனிதருக்கல்லவோ நான் சொல்லவேண்டியது காட்டில் வாசம் பண்ணப்பட்ட குரங்குக்கோ நாம் சொல்லுகிறது அடா குரங்கே யென்று அதிக கோபாக்கினியுடன் நான்கு திவ்வியாஸ்திரங்களையும் விட்டு விட்டான். அந்த நான்கு திவ்வியாஸ்திரங்களும் விடுபட்டு தகத்தகாயமாய் தங்கக் கட்டுகளுடன் பிண்டபட்சியிறகு பூண்டு ஒன்றோடொன் றுராய்ந்துக் கொண்டு நெருப்புப்பொறிபறக்க அதிவேகத்துடன் வருகின்றபோது, நீலனானவன்கண்டு ஏதடா சிறுபிள்ளை புத்தியைக்காண்பித்தாய்பார்த்தையோவென்று அதிககோபங்கொண்டு இரதத்தை விட்டு குதித்து ஆகாயமளாவிய ஒரு ஆலவிருக்ஷத்தின்மேல் பாய்ந்துமடமடவென்றுவேருடன்பிடுங்கி அடியும் நுனியும் தரித்துப்போட்டு தண்டாயுதம்போற்பிடித்து காகரவென்று குசலவாள்போரில் வருகிறதிவ்வியாஸ்திரங்களைத் தடாய்த்துக்கொள்ளவே, குசலராஜன் லவனைப் பார்த்து ஏதடா குரங்கு மகாபலவான்போல் காணுகின்றதென்று கோபங்கொண்டு இராட்சத சேனைகள்பேரில்லவனும் நீலன்பேரில் குசலராஜனும் மூனந்துயுத்தஞ்செய்யத் தலைப்பட்டார்கள். அப்போது உடு-வெள்ளம் இராட்சதாளும், இருபத்து நாலாயிரங்கோடி படைத்தலைவர்களும் வில்லைவளைத்து அநேக அஸ்திரங்களைவாரிக் குசலவர்கள் பேரில்பாணம்விடுகிறபோது இருபத்தைந்துவெள்ளம் இராக்ஷதர்களும் இருபத்து நாலாயிரங்கோடி படைத்தலைவர்களும் எத்தனைபாணம்விடவேணுமோ அத்தனைபாணமென்று கணக்கறிந்துக்கொள்ளுங்கள் ஒருவருஷ காலத்தில் ஈசானிய மூலையிலிருந்து மேகமானது விடுபட்டு இடிமின்னல் பெருங்காற்றுடன் குமுகுமுவென்று சந்தித்து சந்து பிசகா

மல் சரவருஷம் ஒண்ணரை நாழிகை பரியந்தம் பொழிந்தா லெப்படியிருக்குமோ அப்படியாக இராட்சதாள் ஓய்வு ஒழிச் சலில்லாமல் குசலவர்கள்பேரிற்பொழிகிறபோது குசலவர்கள் மிதமில்லாத பாணங்களை இராட்சதாள் விடப்பட்ட அஸ்திர ங்களின்மீதில் பிரயோகஞ்செய்து விட்டறுத்து அதிகமாக ஆயிரந் திவ்வியாஸ்திரங்களையெடுத்து வில்லிற் சந்தித்துப் பிரயோகப் படுத்தினார்கள்.

அந்த திவ்வியாஸ்திரங்களானது வில்லில் விடுபட்டு ஒன் றேடொன்றுருய்ந்து நெருப்பிப்பொறியை கக்கிக்கொண்டு அதிவேகமாய்வருகிறபோது இராட்சதா ளநேகபாணங்களை மழைபொழிவதுபோல் குசலவர்கள் விட்ட பாணுஸ்திரத்தின் பேரில் விட்டார்கள் அதுவந்து பாய்ந்து குசலவர்கள்விட்ட பாணங்களினுல் அடிபட்டு பூமியில் விழுந்துபோயிற்று அப் போது குசலவர்களுடைய அஸ்திரமானது இராட்சதாள் விட்ட அஸ்திரங்களை எல்லாம் பரித்துக்கொண்டு இராட்சத கூட்டங்களில் விழுந்து அவர்களுடைய சிரசை கரகர வென் று பூமியிலறுத்துத் தள்ளிவிட்டது.

அதுகண்டு நீலனுனவன் கண்களிரண்டுஞ் செவ்வானம் போற் சிவக்க, காதுகளிரண்டிலும் புகைகள ளெழும்ப, அதிக கோபாக்கினியுடன்கையிற் பிடித்திருந்த ஆலவிருக்ஷத்தைகிறு கிறென்று சுழட்டிக் குசலராஜன் வில்லைப் பார்த்துவிட்டெறிந் தான். அந்த விருட்சமானது சுழன்றுக்கொண்டு வருகிறபோ து குசலராஜன்கண்டு நான்கு நாராசபாணத்தை வில்லிற் சந் தித்து பிரயோகப்படுத்தி வருகிற ஆலவிருட்சத்தை நூறு பத் தலாகப் பிளந்தெறிந்துப்போட்டான். அதுபோகவே நீலனு னவன்கோபமாகி இறந்துகிடக்கிற இராட்சதாளுடைய இரு ப்புத் தண்டாயுதத்தைக் கையி லெடுத்துக்கொண்டு ஓட்டமா யோடி வருகின்றபோது குசலராஜன் ௰-திவ்வியாஸ்திரத்தை விட்டு நீலன்கையில் பிடித்திருந்த தண்டாயுதத்தையும் பஸ்மீ கரம் பண்ணிவிட்டான் பின்னும் நீலனுனவன் வால்மீகரு டைய வனத்தில் அண்டகோளகை மட்டும்வளர்ந்திருக்கின்ற ஆலவிருட்சங்களையும் அகில்விருட்சங்களையும் தேக்கு விருட் சங்களையும் மடமடவென்று பிடிங்கி குசலராஜன்பேரில் விட் டெறிந்தான். அதுகள் புறப்படவே குசலராஜன்கண்டு ஏதடா குரங்காளுல் நாம்விடப்பட்ட பாணங்களையு மறுத்துத்தள்ளி பலமானயுத்தம் பண்ணுகின்றது இந்தகுரங்கை கொல்லவே

ணுமென்று அநேக பாணங்களை நீலன்பேரில் விடுத்துச் சரீரத்தை சல்லடைக்கண்களாக துளைத்துவிட்டான் அதனால் நீலனுடைய சரீரங்களில் துளைப்பட்டு இரத்தங்கள் பீறிட்டு தாரை தாரையாய் வடியப் பின்னுந் தைரியம்விடாமல் மலைகளை எடுத்துவந்து போடத் தலைப்பட்டான் அம்மலைகளை எல்லாம் குசல னஸ்திரங்களினாற் பொடிசெய்துவிட்டான்.

அதுகண்டு நீலனானவன் ஏதடா நாம் ராவணகும்பகர்ணன் இந்திரசித்து அதிகாயன் கும்ப னிகும்பன் பவர்னன் என்றுசொல்லப்பட்ட அதிவீரசூர பராக்கிரமமுள்ள ராட்சத சிரேஷ்டர்களுடன் இரண்டாயிரவெள்ள மிராட்சதர்களுடன் யுத்தஞ்செய்தோம் அவர்களும் வரம்பெற்ற அஸ்திரங்களை எடுத்துவிட்டார்கள் அவரவர்கள்விட்ட அஸ்திரத்தினுடைய சுறுக்கு நமக்கிப்படிதைத்து உதிரம் பீறிட்டோடினதுமில்லை இந்த குசலனுடைய அஸ்திரத்தினுடைய சுறுக்கு சரீரமெல்லாந் துளைபட்டு ரத்தங்கள் பீறிட்டது பார்த்தாயோ வென்று கோபாவேசனாகி சிவ்வென்று ஆகாயமார்க்கமாக கிளம்பி குசலராஜனுடைய வில்லின்பேரில்வந்து குதித்தானப்படி குதித்த வானரசேனாதிபதியான நீலனை குசலராஜனானவன் தனது வில்லினாலே தட்டின மாத்திரத்தில் ௩00-யோசனை பதிங்காதவழி தூரத்திற்போய் விழுந்தான்.

அதுகண்டு குசலராஜன் நகைபுரிந்து லவனைப்பார்த்து அடா! தம்பிலவனே? குரங்கினுடைய சேஷ்டை போகாமற்போய்விட்டது இப்படி துஷ்டத்தனமுள்ள குரங்குகள் எத்தனை குரங்குகள் வந்திருக்கின்றதோ தெரியவராதென்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டிருக்கும்போது ராட்சதாளுடைய படைத்தலைவர்கள் குசலவர்களை வளைத்து உள்ளே போட்டுக்கொண்டு யுத்தஞ் செய்கையில் சேனாதிபதியான நீலனானவன் ௩00-யோசனை பதிங்காதவழியிற் போய்த் திரும்பி அதிவேகமாய்ப் புறப்பட்டு குசலராஜனைக் கொல்லவேணுமென்று பிரமாண்ட கெதியா யிருக்கப்பட்ட பர்வதத்தை தூக்கிக்கொண்டு வந்து குசலராஜனைப் பார்த்துச் சொல்லுகிறான். அடா! குசலனே? என் கையிலிருக்கிற பர்வதத்தை பார்த்தாயோ இந்த பர்வதத்தைவிட்டு உன்னைக் கொன்றுபோடுவேன் அப்படி வராமுன்னம் அஸ்வத்தைவிட்டு எங்கள் எஜமானாகிய இலட்சுமணப் பெருமாளை வணங்கிப் பிழைத்தா

லுன்னுயிர் தப்பித் தாயுடன் பிள்ளையாய் போய்ச்சேர்வாய் இல்லையென்றால் என் கையிலிருக்கிற பர்வதத்தைவிட்டு கொன்றுபோடுவேன் பாரடா குசலனே என்றான்.

அதுகேட்டு குசலராஜன் கடிந்து சொல்லுகிறான். அடா! வானரனே? நல்ல வசனங் கூறினாய், உன்னுடைய சேவகமும் பலமு மென்னுடைய கோதண்டத்தின் முன்னளவிற் கண்டுவிட்டேன். அப்போதில்லாத பலாபலன் இப்போதிந்த மலையினளவில் உனக்கு வந்துவிட்டதோ, நீபோடப்பட்ட மலையை எதோபோடு பார்ப்போமென்று னப்படிச் சொன்ன குசலராஜனுடைய வார்த்தையை நீலன்கேட்டு கடின கோபமுண்டாகி கையிலிருந்த பர்வதத்தை விட்டெறிந்தான். அந்த பர்வதமானது சுழன்றுவருவதைக் குசலராஜன் கண்டு சீக்கிரமாய் தன்னுடைய வில்லிலனேக திவ்வியாஸ்திரங்களைச் சந்தித்து வருகிற பர்வதத்தின்பேரிற் பிரயோகம் பண்ணினான். அந்த திவ்வியாஸ்திரங்களும் விடுபட்டு வடவா முகாக்கினியை வாரி யிறைத்துக்கொண்டுவந்து அப்பருவதத்தை தும்சம் பண்ணியும் அப்பாணத்தின் வேகம் அடங்காமல் நீலனுடைய நெஞ்சுக் குழியிற்பட்டும் பிடரியிலுருகிப் போய்விட்டது. அப்போது நீலனானவன் ஸ்ரீமந் நாராயணரை நினைத்து கண்ணீரானது இருபக்கத்திலும் ஆறுயோட விட்டு பிராணனை விட்டான்.

அப்போது இராட்சதப் படைத்தலைவர்கள் சினங்கொண்டு இந்திரபாணம், சந்திரபாணம், மேகபாணம், நாகபாணம், என்று சொல்லப்பட்ட பாணங்களை மிதமில்லாமற் குசலராஜன்பேரில் மோகமாய்க் குடங்கொண்டு பொழிவதுபோல பொழியத் தலைப்பட்டார்கள். அந்த பாணங்களும் வில்லை விடுபட்டு ஒன்றின்மேலொன்றாய்ச் சடசடவென்கிற தொனிகளுடனே காட்டுத்தீயைப்போல கனகனவென் றெரிந்துக் கொண்டு வேகமாக வருகிறபோது குசலராஜன்கண்டு வாய்வாஸ்திரம், வருணாஸ்திரம், பிரம்மாஸ்திரம், அக்கினியாஸ்திரம், சூரியாஸ்திரம், எமனாஸ்திரம், என்று சொல்லப்பட்ட அஸ்திரங்களை யெடுத்து வில்லிற்றொடுத்து பிரயோகம் பண்ணினான். அதுகள் க-ம-ന-கூ-மாகிய வடவா முகாக்கினிக்கு சமதையாய் நெருப்புகளைவாரி யிறைத்துக்கொண்டு படபடவென்கிற சத்தத்துடன் இரைச்சலிட்டுக்கொண்டு இராட்சதப் படைத்தலைவர்கள் விட்ட பாணங்களை குசலராஜன் முன் போகவொட்டாமல் வருகிற பாணங்களையெல்லாம் அறுத்துத்தள்ளிவிட்டு இராட்சதப் படைத்தலைவர்கள் பிடித்திருந்த

வில்லையு மார்பிலணிந்த கவசங்களையு மறுத்து விட்டது. அதுகண்டு இராட்சதப் படைத்தலைவர்கள் மறுவில் லெடுத்து மகா உக்ராகாரத்துடன் காளியாஸ்திரம், பர்வதாஸ்திரம், நாராயணாஸ்திரம், சிங்கமுகாஸ்திரம், சண்முகாஸ்திரம், கமலாஸ்திரம், கருடாஸ்திரமென்று சொல்லப்பட்ட அஸ்திரங்களை வில்லிற் சந்தித்து மந்திராபூதிகள் செய்து குசலராஜனுடைய மார்பிற்கும், தோளிற்கும், தண்டகத்திற்கும், வில்லுக்கும், லக்குபார்த்து பிரயோகம்பண்ணிவிட்டார்கள்.

அப்படி உசஅ-கோடி இராக்ஷதப்படைத் தலைவர்களும் விட்ட பாணங்களானது அண்டரண்ட புவனங்களு மதிர ஆவென்று வாயைத்திறந்து கொண்டு அக்கினியைக் குபீல் குபீலென்று கக்கிக்கொண்டு குசலராஜன் எங்கே எங்கே யென்று தேடிக்கொண்டு வருகிறபோது குசலராஜன்கண்டு மகா கோபங்கொண்டு தன் தாயார்கொடுத்த நாராயணாஸ்திரத்தை எடுத்து பூசைசெய்து வில்லிற் சந்தித்து பிரயோகம்பண்ணினான். அந்த நாராயணாஸ்திரமானது வில்லில் விடுபட்டு அண்டபகிரண்டம் ஆயிரத்தெட்டண்டங்களும் குலுங்க, அண்டத்திலுள்ள தேவர்களும் பயந்தோட, அண்டகோளகையுந் திகுதிகென்று பத்தி எறிய, அண்டச்சுவர்களும் வெடிக்க, ஆங்கார ஓங்காரத்துடன் அநேகமாயிர ரூபங்கொண்டு இராக்ஷதப் படைத்தலைவர்விட்ட அஸ்திரங்களுக்கெல்லாம் பதிலஸ்திரங்களாக ஒன்றுக்கொன்று வூடுதாக்கி கமளீகரம் பண்ணிவிட்டு வில்லம்பு பிடித்த உஅ-கோடி இராட்சதப்படைத் தலைவர்களையும் உருஅ-வெள்ளம் பரிசேனைகளையும் கரகரவென் றறுத்துத் தள்ளி திருப்பாற்கடலில் ஸ்நானம்பண்ணி குசலராஜனுடைய அம்புருப் பொதியில் வந்தடைந்தது.

அப்படி உருஅ-வெள்ளம் யானை தேர் பரிசேனைகளும் உசஅ-கோடிபடைத்தலைவர்களும் மாண்டு உதிரவெள்ளமானது உ-பனைமரமுயரம் ஆறுபோலோடத் தலைப்பட்டது. அந்த உதிரவெள்ளமானது ஆனைதேர் பரிசேனைகள் புரட்டிக்கொண்டுபோகையில் தலையில்லாத முண்டங்கள் எழுந்து கூத்தாட, அந்த முண்டங்கள் பேரிலே கழுகுகள் கூத்தாடவும், டாகினி, ஜாகினி, பூதப்பிசாசுகளும் பிணங்களை பிடிங்கிப்புசித்து இராட்சதர்களுடைய டமாரபேரிகைகளை கழுத்தில் மாட்டிக்கொண்டு உதிரவெள்ளத்திலோடுகிறதையும் இராட்சதசேனை

களும் படைத்தலைவர்களு மாண்டு தலைமாடு கால்மாடு தெரியா மல் விழுந்து கிடப்பதைக் கண்ட வானராளும் வானரப்ப டைத் தலைவர்களும் பேசிக் கொள்ளுகிறார்கள். அப்பப்பா, இவனுடைய கரவேக சரவேகந்தா னென்ன இவன் வில்லி ன் பெருமைதானென்ன இவன் புஜபல பராக்ரமந்தா னென் ன இவனோ ஒட்டை சாணில்லை இவன் பிடித்திருக்கிற வில் லைப்பார்க்கச்சே கெற்பங் கலங்குகிறது நாமோ இராவணன், கும்பனிகும்பன், அதிகாயன், கும்பகர்னன் முதலான இராட் சத சிரேஷ்டர்களோடு யுத்தஞ்செய்து செயங் கொண்டோம் அந்த கூட்டத்திலேயும் இப்படிப்பட்ட கரவேக சரவேகத்து டனே பாணந்தொடுப்பாரையுங் காணோம், இவன்முன் சாம் புவந்தர் எப்படி நிர்வகிக்கப் போகிறா ரென்று யோசனையாளு ர்க ளந்தசமயத்தில் உ௫-வெள்ளம்வானராளும் உசது-படை த்தலைவர்களும் மலைவனங்களையும் விருட்சங்களையும் பிடுங்கிக் கொண்டுவந்து குசலவர்கள்பேரில் யுத்தஞ்செய்துக் கொண் டிருக்கையில், இரத்தமழை பெய்தது அதனை இலட்சுமணர் அங்கதன் சாம்புவந்தர் முதலானவர்களுங்கண்டு திடுக்கிட் டார்களப்போது லட்சுமணரானவர் அனுமாரைப்பார்த்துச் சொல்லுகிறார், வாரும் அனுமாரே ? நாம் அனேக யுத்தங்க ளில் கைகண்டிருக்கிறோம் அந்த யுத்தங்களில் நமக்கிப்படிக் கொத்த அவசகுனங் கண்டதில்லை இப்போதிந்த குசலவர்கள் யுத்தத்தில் நமக்கு துன்பத்துக் கடையாளமான சகுனங் கா ணவேண்டியதென்ன சொல்லும் அனுமாரே யென்றார். அ தற்காஞ்சநேயர் சொல்லுகிறார் வாரும், இளையபெருமாளே? சதகண்ட ராவணன் முதலான மூவருடைய யுத்தத்திலேயும் நம்முடைய சேனைகள்பேரில் இப்படிக்கொத்த இரத்தமழை பேய்ந்ததில்லை மகாலட்சுமி யில்லாதபடியால் ஸ்ரீராமருடைய யாகத்திற்கு பின்னம் வந்ததென்று திரிகாலங்களையும் உணர் ந்த அனுமார்சொன்னார்.

அதைக்கேட்ட இலட்சுமணர் பதிலுத்தரவு சொல்லாம ல் மௌனமா யிருந்துவிட்டார் அப்போது குசலராஜனனவ ன் பிரசண்ட கோதண்டத்தில் நாராசபாணங்களை மிதமில்லா மற் பிரயோகம்பண்ணிவிட்டானந்த பாணங்களும் வில்லில் விடுபட்டு ௰-ா-பதினாயிரம்-நூறாயிரம்-கோடி-சங்கம் மகாசங்க மென்று சொல்லப்பட்ட கணக்கில்லாத பாணங்கள் பிறந்து நாகசற்பம்போற் சீறிக்கொண்டுவந்து வானரப் படைகளின்

மீது விழுந்து கொல்லத் தலைப்பட்டது. அப்போது வானரர்கள் கால்வேறு, கைவேறு, தலைவேறு, உடல்வேறு, சதை வேறு, எலும்பு வேருகவிழுந்து, உதிரவெள்ளம் ஓடிற்று. இப்படி வானரால் மாண்டுபோகவே, குமுதன், சாம்பன்,உல்முகன், கெந்தமாதனன், அரக்கன், மந்துவால்கேசரி அகம்பனென்ற அ-வானர படைத்தலைவர்களும் மகா கோபத்துடனே பேருக்கொரு மலையைப் பிடுங்கி குசலன் தலையை உடைக்கிறோமென்று குசலவர்கள் முன்னின்றுக்கொண்டு அடா சிறுபிள்ளாய் பதராதே, ஒருவசனஞ் சொல்கிறோம் கேள், நீமகா சிறுபிள்ளை உன்னோடு யுத்தம்பண்ண எங்களுக்கு ஞாயமில்லை ஆகையால் எங்களஸ்வத்தை விட்டு லட்சுமணப் பெருமாளை வணங்கி சேவித்துக்கொண்டால் தாயுடன் பிள்ளையாய்ப்போய்ச் சேருவீர்களென்று பிரியவசனத்தோடு சொன்னார்க ளதனைக்கேட்ட குசலராஜன் அந்த அ-வானரப் படைத்தலைவரைப்பார்த்து குலுங்க நகைத்து ஒருவசனம் சொல்லுகிறு னடா வானரங்களே? நல்ல தந்திரஞ்சொல்லி தப்பித்துக் கொண்டுபோகவந்தீர்கள் நீங்களும் ஒருசேவகரென்றுசேவகத்தில்வைத்துக்கொண்ட இராமன் உங்களிலும்பலவானு யிருப்பானே நீங்கள் தப்பித்துக்கொண்டு போகிறோமென்றாலும் நான் விடுவேனென்று நம்பவேண்டாம் நீங்கள் ஒன்றாகக் கூடிவந்து சபதவார்த்தையை பேசிக்கொண்டு மலையைப் போடுகிறோமென்றீர்கள் அந்தமலையை எதோபோடுங்கள் வானரங்களே யென்றான்.

அப்படி கூறிய குசலராஜனுடைய வார்த்தையைக்கேட்ட வானரவீரர்கள் மகாகோபங்கொண்டு அட்டகாசஞ் செய்து குசலவன்பேரில் தங்கள் கையிலிருந்த மலைகளைவிட்டெறிந்து விட்டு ஆகாயமளாவிய விருட்சங்களைப் பிடுங்கி அடியும் நுனியுங் கொய்து நடுத்துணுக்கையை தண்டாயுதம்போலே கையில் பிடித்துக் கொண்டு வருமுன்னமே, கிறுகிறு வென்று சுழன்று வரும் மலைகளைக் குசலராஜன் பார்த்து அதிவ்வியாஸ்திர மெடுத்து விடுத்து வருகிற மலையை தூளிதப்படச் செய்துவிட்டு வில்லிலனேக பாணங்களைச் சந்தித்து வருகிற வானர வீரர்கள் பேரிலே ஐப்பசி கார்த்திகை மாதத்தில் ஈசானிய மூலையிலிருந்து விடுபட்டு இடிமின்னல் குமுறலுடன் மழைபெய்தால் எப்படியோ, அப்படிபோலே பாணங்களைப்பொழிந்துவிட்டா னதுகளுங் காலகோட்டி விஷம்

போல சீறிக்கொண்டுவந்து வானரப்படைத்தலைவர் கையிலி ருந்த தண்டாயுதத்தையும் பொடியாக்கிவிட்டு அவர்கள்பேரி லுஞ் சுருக்குசுருக்கென்று தைத்து குருதிகள் பீறிட்டோடச் செய்தது அப்போது வானரவீரர்கள் அதுகளையெல்லா முத றிப்போட்டு இறந்துகிடக்கிற இராட்சதாளுடைய கத்திகேட யங்களை எடுத்துக்கொண்டுவந்து முன்கந்துபின்கந்து மூப்ப த்திரண்டு கந்தும்பாய்ந்து குசலராஜனை வெட்டவேணுமெ ன்று ஓடிவரும்போது குசலராஜன்கண்டு நாலிரண்டெட்டு கண்டங்கத்திரிபாண மெடுத்துவிடுத்து கத்திகேடயம் பிடித்தி ருந்தகையை யறுத்துத்தள்ளினன். அவர்கைகள் பூமியில் விழவே, அ-வானரவீரரும் கோபங்கொண்டவராய் எழும்பி குசலராஜனை உதைத்து கொல்லவேணுமென்று வருகிறதை குசலராஜன்கண்டு இவர்களுடைய சாமர்த்தியந்தானென்ன கையற்றுஞ் சரீரங்களெல்லாந் துளைப்பட்டுஞ் சாகாதிருக்கி றார்கள் நல்லதாகட்டுமென்று நாலிரண்டெட்டு அர்த்தசந்தி ராஸ்திரமெடுத்துவிட்டு வானரபபடைத்தலைவர்கள் சிரசுகளை யறுத்துத் தள்ளினன். அவர்கள் மாண்டுபோகவே வானர தண்டில் கூக்குரலெழும்பத் தலைப்பட்டது.

அப்போது இடும்பன், பரசன், திருமுகன், மந்தகன், மக்கரன், கும்பன், சரவலி, துன்முகன்முதலானபடைத்தலை வர்களும் மகாகோபத்துடன் கடுகடுத்துபேருக்கொரு விருட் சங்களை பிடுங்கிக்கொண்டு அடியும் நுனியுந்தரித்துவிட்டுகை யில்பிடித்துக்கொண்டு ஓடிவரும்போது குசலராஜன்கண்டு அதிககோபங்கொண்டு வில்லைநிறுத்தி அநேகபாணங்களைச் சந்தித்து மாரிசொரிவதுபோல் ஓய்வில்லாமல் ஒருஜாமபரி யந்தம் சரமாரியாய்பொழிகிறபோது வானரப்படைத்தலைவ ருடைய சரீரமெல்லாஞ் சல்லடைக்கண்களாகத் துளைபட்டு குருதிகள்தாரைதாரையாய் பீறிட்டோடிவழிந்து பூமியில் விழுந்தது அது எத்தன்மையாயிருந்ததென்றால், முன்னால், இந்திரசித்தனனவன்இராவணசம்மாரகாலத்தில் ச-நாள்யுத் தத்தில் உச-படைத்தலைவர்பேரிலு முனைந்து பாணங்களை விட்டு சரீரங்களைச் சல்லடைக்கண்களாக எப்படி துளைத்து விட்டானோ அத்தன்மையாயிருந்தது மேலும் குசலராஜனு டைய அஸ்திரங்களினால்வுதையுண்ட வானரப்படைத்தலை வர்களுடைய சரீரங்கள் தளர்ந்துகைகால் ஓய்ந்து நடக்கச் சீவனற்று சுவாசமின்றி ஸ்ரீராமா ரகுநந்தனவென்று வாய் விட்டலறி சாவுக்குச்சமதையானவர்களாய் பூமியில்விழுந்து

மூர்ச்சையடைந்தார்கள். அதுகண்டு குசலராஜன் சந்தோஷமாய் இன்னஞ்சிறிதுவானரப் படைத்தலைவரும் வானராளுமிருக்கிறார்களவர்களையுங்கொன்று இராஜாவாய்வந்திருக்கிற லட்சுமணரையுங் கொன்று அஸ்வத்தைக்கொண்டுபோகவேணுமென்று மனதிலெண்ணினவனாய் முன்னணியில் வந்து நின்று வில்லிலநேக பாணங்களைச்சந்தித்துவிட்டு கொல்லுகிறபோது வானரசேனைகள் கால்வேறு கைவேறு எலும்பு வேறுவேறாக விழுந்து உதிரவெள்ளமானது ஆறுபோல ஓடியது அப்போது சிலவானராள் பாணங்களினால் காயம்பட்டு முன்வைத்த காலை பின்வைத்து ஒருவருடன் ஒருவர் சொல்லாமல் ஓடினார்கள் அவ்வேளையில் சிலது வானரப்படைத்தலைவர் அவர்களை ஓடவொட்டாமல் மடக்கிக்கொண்டு சொல்லுகிறார்கள்.

அப்பா வானராளே முன்னம் இராட்சதாளை ஜெயித்துபெற்றகீர்த்தியை இன்றோடு ஒழிந்து தேவர்கள்நகைக்க அபகீர்த்திபெற்றோம், இப்போது குசலவரை ஜெயிக்க சாமர்த்தியம் உங்களுக்கில்லையோ ரோஷபாஷந்தான் வுங்களுக்கில்லையோ நாமெல்லோரும் ஒருமுகமாய்க்கூடி குசலவர்களை ஜெயிக்கக்கூடாதோ ஓடினாலும் ஸ்ரீராமதுரோகம் விடாதே பயப்படாதே நீங்கள்வாருங்களென்று ஒன்றாய்க்கூடி மலைகுன்று விருட்சங்களை பிடுங்கிக்கொண்டுகுசலன்பேரில் கரகரவென்று சுழட்டிவிட்டார்கள். அதனைக்கண்ட குசலராஜன் தனுசிலநேக அஸ்திரங்களைச் சந்தித்து சரசரவென்று விட்டு மலைகுன்று விருட்சங்களை தவிடுபொடியாக்கிவிட்டு அவர்களையுங்கொன்று உதிர ஆறோடும்படிச்செய்துவிட்டான்.

அதைக்கண்ட இளையபெருமாளாகிய இலட்சுமணர் சிந்தாக்கிரந்தராய் மகாகோபத்தோடு செவ்வானம்போ லிருகண்களும் சிவக்க, கையிலிருந்த வில்லை வளைத்து நாணிபிகிந்து பல்லைநெறநெறவென்று கடித்து மீசை படபடவென்று துடிக்க உக்கிரத்துடன் சாரதியை அதட்டினமாத்திரத்தில் இரதமானது குசலராஜன்முன் வந்துவிட் டதனைக்கண்ட வானரசிரேஷ்டாளாகிய அனுமார், அங்கதன், சாம்புவந்தரும், இலட்சுமணர் முன்னமேவந் தடிபணிந்து கைகட்டி வாய்பொத்தி மிகுந்த வணக்கத்துடன் நின்று சொல்லுகிறார்கள் கேளும், இளையபெருமாளே நாங்களெல்லாமிருக்க எந்தப்படை முழுகிப்போச்சுதென்று வில்லெடுத்தீர், பாலன்பயப்படுவான், வில்நாணியைத் தளர்த்திவிடும், யெதிரிமீதில்ஸ்ரீரா

மபாணந் தொடுத்தாப்போல் நாங்களிருக்கதாங்கள்போவது தகுதியல்ல, நில்லுஞ் சற்றுநேரம் தேவரீர்வேடிக்கை பார்த்துக்கொண்டிருங்களென்று அனுமார் அங்கதன், சாம்புவந்தர்சொல்ல, இலட்சுமணர்கோபமடங்கிவில்நாணியைத் தளர்த்தினர்.

இவையெல்லாம் குசலராஜன் கண்டு நல்லதாகட்டுமென்றுபல்லை நெறநெறவென்றுகடித்து வில்லைக் குமுதமென்று குணத்தொனிபண்ணி நின்றான். அந்த சத்தமானதை அனுமார், அங்கதன், சாம்புவந்தன் முதல்சகல இராஜாக்களும் மந்திரி பிரதானிகளுங் கேட்டு மனதுதியக்கங்கொண்டார்கள். இலட்சுமணரும் குணத்தொனிபண்ணினசத்தங்கேட்டு ஆச்சரியப்பட்டு நமதுதமயனுடைய கோதண்டத்திற்கு நிகராமென்று அனுமார் அங்கதன் சாம்புவந்தருக்குக் காண்பித்து இந்தப் பிரசண்டகோதண்டத்திற்கு முன்னே சூலபாணியாய் விளங்கப்பட்ட காலகண்டதிரிநேத்திரமுடையவர்பூதப்படைகளுடன் எதிர்வந்தாலும் இவன்முன்னின்றாலும் முன்னிற்கமாட்டார்கள். இதுமகாபலம்பொருந்திய வயிர்கோதண்டம் இந்தக் கோதண்டத்தினுடையபெருமையைச் சொல்ல என்னால்முடியாது யுலகமுழுகிப்போகிறகாலங்களிலேயும் இந்தப் பிரசண்ட கோதண்டத்தையெடுக்கிறதில்லை இப்போதிந்தபிரசண்ட கோதண்டத்தை யார் யெடுத்து உலகத்தை முழுகப் பண்ணினர்களோ தெரியவராது. இந்தப்பூலோகத்து நரஜென்மங்கள் யென்ன பாவம் பண்ணினர்களோ கடல்கொள்ளாத யானை தேர் பரிவாரங்களை க்ஷணநேரத்தில் உதிரவெள்ளத்தில் கலந்துவிட்டான்.

இவனுடைய சேவகந்தானென்ன, அந்தப் பரஞ்சுடராயிருக்கப்பட்ட ஸ்ரீராமபிரமத்திற்கு பிடிபடுமேயல்லாமல் மற்றபேர்கையில்பிடிக்கப் பலம்போராது இதிலேதெரிந்துக்கொள்ளும் அனுமாரேயென்றார் இலட்சுமணப்பெருமாளானவர். அதைக்கேட்ட அனுமார் அங்கதன் சாம்புவந்தர்முதலாகிய இராஜாக்களும் மனது திடுக்கிட்டு முன்வைத்தகாலைபின் வைத்தார்கள் அதைக்கண்ட இலட்சுமணப்பெருமாள் தன் தமயனாகிய ஸ்ரீராமபிரமத்தை மனதிலெண்ணினவராய் மகாதைரியங்கொண்டு அனுமார் அங்கதன் சாம்புவந்தரைப்பார்த்துச் சொல்லுகிறார். வாரும்வானர சிரேஷ்டர்களே? ஸ்ரீராமா ராமா வென்று துதிபண்ணி தைரியத்துடனின்று குசலவன் வில்லை லகுவிற்பிடித்துக்கொள்ளவேணும் அதற்குப்பின்சிறு

பிள்ளையான லவனைக்கைப்பிடியாகப் பிடித்துக்கொள்ளவும் வேணும் அவனுக்கோ யானை தேர்பரிவாரங்களில்லைபாதசாரியாய் நின்று யுத்தம்பண்ணுகிறான். அப்படி பண்ணுகிறவன்பேரில் வில்லெடுத்து யுத்தம்பண்ணினேனேயானால்தேவர்கள் நகைப்பார்கள். ஸ்ரீராம பிரமந்தான் என்னசொல்லுவாரென்றார் அதைக்கேட்டு அதிபக்திவிநயத்தோடு இலட்சுமணரைநோக்கி அனுமார் சொல்லுகிறார்.

கேளும், இளையபெருமாளே சின்ன பாம்பானாலும் பெரியதடிகொண்டடிக்கவேண்டும் அவர்களைப்பார்த்தால் ஸ்ரீராமரைப்போல வடிவழகும் நடையுமாயிருக்கிறார்கள் அந்தச் சிறுபிள்ளைகளினுடைய வாய்விசேஷத்தைக்கேட்டு யுத்தம் பண்ணுவோம் இனி ஒரு க்ஷணப்பொழுதில் கண்டறிந்து விடுகிறேனென்று இலட்சுமணரைச் சேவித்து குசலராஜன் முன்னுக்கு அங்கதன் சாம்புவந்தர் திரும்பினார்கள். அதைக் கண்ட குசலராஜன் தம்பியாகிய லவனைநோக்கி ஒருவசனஞ் சொல்லுகிறான். வாருந்தம்பிலவனே? அதோவருகிறமூன்று குரங்குகளைப்பார்த்தாயோ இரதத்தை நடத்திவந்த ராஜனை குறுக்கேவந்து மடக்கிக்கொண்டு இரண்டொரு விசேஷஞ்சொல்லி நிறுத்திப்போட்டுத் தாங்களே சாமார்த்தியரென்று அதிவேகத்தோடு வருவதைப்பார்த்தால் நம்மை யெதிர்த்து யுத்தம்பண்ணிக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டுபோவார்கள் போற் காண்கிறது முன்வந்துயெதிர்த்து மாண்டுபோன குரங்குகளுக்கெல்லாம் எஜமான்போற்காணுகின்றது இந்தமூன்றுகுரங்குகளுடனே நான் யுத்தம்பண்ணுகிறேன் பின்னேயிருக்கிற இலட்சுமணன்பேரிலும் சேனைகளின்பேரிலும் நீயுத்தஞ்செய். இந்தவேளை யென்னுடநின்று யுத்தம்பண்ணவேண்டாம் சலுதியில் இராட்சதப்படைகளை வெல்லவேண்டும் தம்பியென்று சொல்லியவார்த்தையை லவன்கேட்டுவாருமண்ணவே, செங்குரங்கு, கருங்குரங்கு ஒரு குட்டக்குரங்குமாகவருகிறதைப்பார்த்தால் நீர் சொல்லியபடியே செய்வார்போற்காணுகின்றதாகையால் தாங்கள் மிகுந்த ஜாக்கிரதையுடன் நின்று யுத்தம்பண்ணுமண்ணவென்று சற்றிடைந்துபோய் யுத்தஞ்செய்துக்கொண்டிருந்தான்.

அப்போது அனுமார், அங்கதன், சாம்புவந்தர், இம்மூவரும் அதிகவேகத்துடன்வந்தெதிரில்நின்று குசலவர்களைப் பார்த்து அனுமார் ஒருவசனஞ்சொல்லுகிறார். தம்பிசிறுபிள்

ளைகளாகாட்டுகிழங்குகளைத்தின்றுசுனைநீர்குடித்துப்பாரைமே ல்படுத்துக்கிடக்கிற குரங்குகள் உங்களையென்னபண்ணினதெ ன்று இப்படிக்கொன்று பிணக்குவியலும் இரத்தப்பிரளயமு மாக்கிவிட்டீர்கள் அதிருக்கட்டும் நீங்கள்யார்உங்கள்பேரென் னஉங்கள் தாய்தந்தைபேரென்ன சொல்லுந்தம்பியென்றுகே ட்டதற்கு குசலராஜன் தம்பிலவனை முகத்தையேரப் பார்த் தான். அச்சாடையறிந்தவனாய் அருகில் நெருங்கி அனுமா ரைப்பார்த்தொருவசனஞ்சொல்லுகிறான் அடா! குரங்கே? என்னவார்த்தை சொன்னாய், காட்டுக்கிழங்குகளைத் தின்று சுனைநீர்குடித்துப் பாரைமேல் படுத்துகிடக்கிற குரங்குகள் யென்ன பண்ணிற்றென் றல்லவோகேட்டாய், ஆனால்சொல் லுகிறேன் கேள், அயோத்தியாபுரியை யாளப்பட்ட ஸ்ரீராமர் யாகம்பண்ணவேண்டி அஸ்வத்தை விட்டார் அந்த அஸ்வ மானது எங்கள் வனத்தில் வந்தபடியால் அதை நான் பிடித் துக் கட்டினேன் அந்தச் சமாசாரங் கேட்டு சத்துருக்கன் தன்சேனைகளைக் கூட்டிக்கொண்டு வந்து எங்களுடனே யெதி ர்த்து யுத்தம்புரிந்து அவனும் அவனுடைய சேனைகளும் மாண்டுபோய்விட்டார்கள்.

அந்தச்சமாச்சாரம் ஸ்ரீராமர்கேட்டு அவன் தம்பி இலட்சு மணனை அனுப்பினானும் அவன்கையில் எங்கள் பிராணனை யாகிலும் கொடுக்கிறோம் அல்லது எங்கள்கையில் அவனா கிலுமிறக்கிறான். அப்படி ஞாயமிருக்க நீங்களார் உங்களை யுத்தத்திற்கழைத்தவர்கள் யார் சோளத்தட்டில் நெருப்புப் பற்றியெறிந்து வுதிர்த்தாப்போல் நீங்களேன் வீணில்வந்து மடிகிறீர்கள் இனியாகிலும் நீங்களிருக்கும் காட்டகத்தில் தப் பிப்பிழையுங்கள் எங்கள் முன் நில்லாதீர்கள் நின்றீர்களேயா னால் சிரசுபோய்விடும் காட்டில் வாசம்பண்ணப்பட்ட குரங் குக்கோ எங்கள் தாய்தந்தைபேரைச் சொல்லுகிறது எங்கள் பேர் குசலவர்களென்று சொன்ன விசேஷத்தைக்கேட்ட அ னுமாருக்கு இரண்டு காதிலும் புகைகளெழும்ப 'சரீரமாதியந் தமும் அக்கினிப்பற்றி யெரிய அதிகோபத்தோடும் மண்டி யிட்டுக் குசலவர்களைப் பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறார்.

அடா! குசலவர்களே? என்னையறிவீர்களோ நீங்கள் சிறுபிள்ளைகளானபடியினால் அறியமாட்டீர்கள் அரி ஹரப் பிரமாதிகளும் என்னைக்கண்டால் நடுங்குவார்கள் காலனு மொடுங்குவான் இந்திரனும் பயந்தோடுவான் அப்படிசகல

தேவர்களும் வாய்வுபுத்திரன் ஸ்ரீராமருடைய சேவகன் அநுமந்தனென்று மறிவார்கள். அப்படியென்னைச் சற்றுகிலும் யெண்ணுமல் சிரசைத் துணிப்பேனென்று சொன்னவாயைக் கிழித்தெறிவேன் நீங்கள் சிறுபிள்ளைகளென்று மனம்பொறுத்தேன் வீணிலேன் ஆயுளை முடித்துக்கொண் டிறந்து போகிறீர்கள் உங்கள் தாய் தந்தைபேரைச் சொல்லி லகுவிற் குதிரையை விட்டுவிட்டு இலட்சுமணப்பெருமாளை சரணமடைந்தால் பிழைப்பீர்கள் இல்லாவிடில் என்கை குத்தினுல் உங்களிருவருயிரையும் எமலோக மெட்டிப் பார்க்கச்செய்வேன் அப்படி வராதபடிக்கு நடந்துக்கொள்ளுங்களென்று அஞ்சனுதேவி குமாரன் சொல்லிய வசனத்தைக்கேட்ட குசலராஜன் குலுங்கநகைத்துச் சொல்லுகிருன். ஓகோ! அநுமந்தாகேளும், சூட்சமறியாதவனுக்கு மோட்சமில்லை யென்பதுபோல காட்டில் வாசம்பண்ணப்பட்ட குரங்குகளுக்குத் திரிமூர்த்திகளும் பயந்து எதிர்நின்று போராடமாட்டாரென்று சொல்லிச் சூட்சத்தில் வெல்லவந்தாயோ அப்படி திரிமூர்த்திகளைவென்ற சாமர்த்தியமுடையவன் நீயானுல் என்பேரில் எதோ காட்டு பார்ப்போமென்ருன். அதனைக்கேட்ட அநுமார் சொல்லுகிருர் அடா! குசலனே? என்னைக் காட்டில் வாசம்பண்ணப்பட்ட குரங்கென்று பலத்தை காட்டென்றுமல்லவோ சொல்லுகிருய் ஆனுல் என்பலத்தைக் காட்டுகிறேன் அதோதெரிகிற அந்த பர்வதத்தை நான் இங்கிருந்தபடியே யழைப்பிக்கிறேன் பாரென்று தன்னுடைய வாலை வளர்த்தி அந்தபர்வதத்தை மூன்றுசுற்றுகச்சுற்றி நெருக்கி யிழுத்தமாத்திரத்தில் பர்வதம் அருகில் வந்தவுடனே தன் வாலை சுருக்கிக்கொண்டார்.

அதுகண்டு குசலராஜன் தம்பி லவனைப்பார்த்துச் சொல்லுகிருன். இந்த அநுமான் ஜெகஜாலவித்தை கற்றவன் துலைவிலிருந்த மலையை வாலைவிட்டு நெருக்கியிழுத்ததை நாம் கண்ணினுலேகண்டோம் நம்மையு மிப்படிதான் வாலைவிட்டிழுப்பானே என்னமோ தெரியவில்லை முன்வந்த குரங்குகளிலேயும் இவன்மந்திரங் கற்றவனைப்போலு மிருக்கின்ருன். நாம் அசாக்கிரதையாயிருந்தால் வாலைவிட்டுக் கட்டிக்கொண்டு போவான்போற் காண்கின்றது பாணத்தை வில்லிலே பூட்டிக்கொள்ளுந் தம்பி யென்ருன். அதுகேட்டு லவன் சொல்லுகிருன். வாரும் அண்ணுவே, அப்படி ஜெகஜால

வித்தை கற்றவன் என்னமோசம் பண்ணுவானோ முன்பின் பாராமற் பாணப்பிரயோகம் பண்ணுகிறதே காரியமென்றான்.

அதுகேட்டு அங்கதன் சொல்லுகிறான். வாருந்தம்பிகுசலனே? இளங்கன்று பயமறியாதென்பதுபோலப் பெரியோர்கள் சொன்ன வார்த்தையைச் சிறியோர்களாயிருக்கப்பட்டவர்கள் கேழ்க்கவேணும் அவர் ஆரென்று இப்படிச்சொல்லுகிறீர் ஆயிரத்தெட் டண்டத்தையும் கவிழ்த்துப்போடவும் இந்த பூமியைப் பிடுங்கிச் சமுத்திரத்திற்போடச் சொன்னாலும் போடுவார், இந்தலோகத்தையும் எடுத்துசுழட்டி எறிவார் அவர் யாருக்கும் பயப்படார். ஸ்ரீராமமூர்த்தியின் ஊழியன், அனுமார் அவர் எப்படி சொல்லுகிறாரோ அப்படியேகேளுங்கள் தம்பியென்றான்.

அதுகேட்டு குசலராஜன் நகைத்து ஒருவசனஞ் சொல்லுகிறான் அடா! வானரங்களே; தங்கள் பெருமையை தங்களுக்குள்ளே சொல்லிக்கொள்ளுகிறீர்கள் அந்தப் பெருமையும் பராக்கிரமமும் என்முன்னே சற்றுநேரங் காண்பிக்கலாகாதோ நீங்கள் சொல்லப்பட்ட விசேஷமெல்லாங் கூத்தாடிச் சிலம்புபோலாச்சுது இப்படிக்கொத்த சொற்களெல்லாம் உங்களுக்கு யார் கற்பனைபண்ணினது ஆராகிலுந் தியாகங் கொடுக்கிறயிடத்தில் உங்கள் பெருமைகளையும் பிரதாபத்தையும் சொன்னால் தியாகங்கொடுப்பார்கள் உங்களில் கையூரல் தீர யுத்தம்பண்ணுவார் ஒருவருமில்லையென்று குசலராஜன் மொழிந்தான்.

அனுமாருக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

---

சந்த விருத்தம்.

கஞ்சமலர்க்கரவேகமதாய் மிருகாளையாகித்
துஞ்சிய நீலனைக்கண்ட சொலத்தகுதேர்ப்பாகன்
வெஞ்சமர்பூமியைவிட்டு பதஞ்செலமேலானோம்
அஞ்சனைபாலனெனும் அனுமானும்நடந்தானே.

அதுகேட்டு அனுமாரும் சாம்புவந்தரும் அதிக கோபமுண்டாகி அங்கதன் முகத்தைப்பார்த்தார். அதுகண்டு அங்கதன் அனுமார்பின்னாலிருந்த பர்வதத்தை செண்டுபோலெடுத்து குசலன்பேரில் விட்டெறிந்தான். அந்தபர்வதமானது சுழன்றுவருமுன்னமே குசலராஜன் ஒருவச்சிராயுதத்தை யெடுத்து விடுத்து அப்பர்வதத்தை பொடிபொடியாய் உடைத்து

விட்டான். அதுகண்டு அனுமார் பூமியிலேகிடக்கிற தெண்டாயுதங்களையெல்லாம் பொறுக்கி தன்னிடத்திலொரு பர்வதம்போலக் குவித்துக்கொண்டார் அதுகண்டு அங்கதன் பிர்மாண்டகதியாயிருக்கப்பட்ட ஆலவிருக்ஷத்தை மடமடவென்று பிடுங்கி அடிநுனியையுங் கொய்துகையிலே பிடித்துக்கொண்டு கிறுகிறுவென்று சுழட்டி குசலராஜன் பேரில் விட்டெறிந்தான். அதுகண்டு குசலராஜன் நாலிரண்டெட்டு சூருவளிபாணம் விட்டு அதைத் தும்சம்பண்ணிப் போட்டான். அதுகண்டு அங்கதன் லவன்பேரி லெதிர்த்து யுத்தம்பண்ணிக் கொண்டிருந்தான்.

அப்போது அனுமார் இந்தக்குசலராஜனுடைய சாமார்த்தியத்தைப் பார்க்கவேணுமென்கிறதாய் தன்னண்டை பர்வதம்போலக் குவித்திருக்கிற தெண்டாயுதங்களை யெடுத்து க-ல-ா-சூ-லசூ-சங்கம் மகாசங்கம் அற்புதம் நிற்புதமென்று கண்ணிமையோடு நிமைகொட்டு முன்னமே வாலினாலும் கையினாலும வாரிவாரி குசலராஜன்பேரில் விட்டெறிந்தான் அப்போது குசலன் க-ல-ா-சூ-இப்படியாக பாணங்கள் விட்டுவருகிற தண்டாயுதத்தை யெலலாம் உடைத்தெறிந்து இடைவிடாமல் அஸ்திரங்களைவிட, அனுமார் இவன் இந்திரஜித்திலு மகாசாமர்த்தியனா யிருக்கிறான் அவன்மாய்கை சூதுதெரிந்தவன் இவனுக்கு மாய்கைசூது தெரியாது நிலமையுடனே நின்று யுத்தம்பண்ணுகிறான். இவனுடனே நாம் கையூரல் தீரயுத்தம்பண்ண வேணுமென்று தன்பேரில் வந்துவிழுகிற பாணங்களையெல்லாம் ஒருநொடியி லுதறிவிட்டு குசலராஜன் வில்லின்பேரில்வந்து பாய்ந்தார், அதுகண்டு குசலராசன் அனுமாருடைய சிரசைப்பார்த்து வில்லினாலடித்தான். அந்த அடி அனுமாருடைய சிரசில்பட்டு கபாலந்திறந்து உதிரவெள்ளமோட ஸ்ரீராமாராமாவென்று வாய்விட்டலறி அடித்து மோதி பூமியில்விழுந்து மூர்ச்சையடைந்தார்.

## சாம்புவந்தருக்கும் குசலராஜனுக்கும் யுத்தம்.

### சந்தவிருத்தம்.

அண்டமனைத்தும் அதிரிடவந்திடும் அனுமந்தனும்
கண்டகனுந்தியகணைவலியாற் கனைபோட்டோய
விண்டுவெழுந்திடு புவனென்றிடு வில்லோன்தேர்
கொண்டுபழங்கணை பெய்துகொடுஞ்சமர்செய்தானே.

அதுகண்டு தேவர்க ளெல்லாம் துயரப் பட்டார்கள். சாம்புவந்தர் கோபமாகி சேற்கெண்டை பாய்ந்து வருவது

போல் கையை முறித்துக் கொண் டோடிவந்தார். அவ் வேளை குசலராசன் இந்தக் கிழக்குரங்கினுடைய சாமார்த்தி யத்தைப் பார்ப்போ மென்று வில்லை யெடுத்து ம-நாராச பாணங்களைச் சந்தித்து விட்டு சாம்பு வந்தரை நோக வெய்தான். அந்த நாராச பாணங்களை சாம்பு வந்தர் பிடுங்கி யெறிந்துப்போட்டு இறந்துகிடக்கிற ராட்சதர்களு டைய சந்திராயுதத்தை யெடுத்துக்கொண்டு குசலராஜனையும் அவன்வில்லையும் ஒரேவீச்சினலே வெட்டியெறிந்து போடுகி றேனென்று மகாகோபத்துடனே ஓடிவருகிறபோது குசலரா ஜன் கண்டு ஏதடா குரங்கானலுஞ் சந்திராயுதத்தை யுருவிக் கொண்டு ஓடிவருகிறதென்று மகாகோபாக்கினியுடனே நாலு திவ்வியாஸ்திரங்களையெடுத்து கடுகடுத்து வில்லில்தொடுத்து விடுத்து சந்திராயுதத்தை இரண்டுதுண்டமாக வெட்டிப் போட்டான்.

அதுகண்டு சாம்புந்தர் இரணக்களத்தில் புகுந்து இர தங்களைவாரி குசலராஜன்பேரில் விட்டெறிந்தார். அப்போது குசலராஜன் ஒருயிடியாஸ்திரம்விட்டு இரதங்களையெல்லாஞ் சுக்கல் சுக்கலாய் உடைத்தெரிந்தான். அதன் பின்பு சாம்பு வந்தர் இறந்துகிடக்கிற யானை குதிரைகளை வாரி வாரிக் குச லராஜன்பேரிற் போடவே, குசலராஜன் ம-திவ்வியாஸ்திரங் களை விட்டு துண்டுதுண்டாக யெறித்துவிட்டான். அதுபோக வே, சாம்புவந்தர் இராட்சதப்பிணங்களை வாரி வாரி விட்டெ றிந்தார் அதுகண்டு குசலராஜன் கோபங்கொண்டு வருகிற இராட்சத பிணங்களை யெல்லாம் பாணங்களைவிட்டு அறுத்துப் போட்டு ௱-நாராசபாணங்களை யெடுத்து வில்லிலே சந்தித்து விட்டு சாம்புவந்தரைமிகவும் நோகச்செய்தான். அதனலே சாம்புவந்தர் நொந்து தன்திரேகத்தில் தைத்திருக்கும் ம-நா ராசபாணங்களைக் கையினற் பிடுங்கி குசலராஜன்பேரில் விட் டெறிந்தார். அதுகண்டு குசலராஜன் ஏதடா கிழக்குரங்கு நாம்விடும் பாணத்தைப்பிடுங்கி நம்முடைய பேரிலே விட்டெ றிந்தது நல்லது ஆகட்டுமென்று வில்லில் அநேகபாணத் தைச்சந்தித்து ஒன்றின்மேலொன்றாய்மழைபொழிவதுபோ ற் பிரயோகம்பண்ணிவிட்டான். அந்தப் பாணங்கள் வில்லை விட்டு விடுபட்டு சடசட வென்கிற தொனிகளுடனேயும் அக் கினியானது பத்திக்கொண்டு வருவதுபோலும் அதிவேகமா ய் வந்து சாம்புவந்தர்பேரில் பாய்ந்து சரீரத்தை இரத்தமய மாக்கிவிட்டது. அதனலே சாம்புவந்தர் மிகவும் நொந்து

கைகா லுதரிக்கொண்டு ஸ்ரீராமா ராமாவென்று அடியற்ற மரம்போல் முடியற்றுப் பூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தார்.

அதுகண்டு குசலராஜன் கருங்குரங்கு செங்குரங்கும் மாண்டுபோயிற்றென்று அதிகசந்தோஷமடைந்து இராட்சதப் படைத்தலைவர்களின்பேரில் வருகிறபோது இலட்சுமணர் கண்டு கண்கள் செவ்வானம்போற் சிவக்க, காதுகளில் புகைகளெழும்ப, மீசைகள் துடிக்க, பல்லை நெறநெறவென்று கடித்து வில்லையெடுத்து நாணிபிகிந்து சிலபாணங்களைத் தொடுத்து சாரதியை யதட்டி இரதத்தை குசலராசன் முன்னுக்குக் கொண்டு நிறுத்தி குசலராசனுடைய முகத்தைப்பார்த்து இப்பிள்ளைதான் ஸ்ரீராமரைப்போ லிருக்கிறதென்று அதிக சந்தோஷமாகி ஆனந்த வெள்ளத்தில மூழ்கினவராய் கையில் பிடித்திருந்த வில்லைத் தேரின்பேரில் வைத்துவிட்டு சும்மாயிருந்து விட்டார்

அப்போது குசலராஜன்ஏதடா, இரதத்தைநடத்திக்கொண்டு நமதுமுன்வந்தராஜன் நம்மைக்கண்டு பயந்து வில்லை இரதத்தில் வைத்துவிட்டு சும்மாயிருந்தால் நாம்சும்மாவிடப் போமா நம்முடைய தாயார்சொன்னபடி வந்தபேரையெல்லாங்கொன்று ஜயங்கொண்டு போகவேணுமென்று மனதில் கருதினவனாக இலட்சுமணரைப்பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறான். ஓ! இராசனே? என்னைக் கண்டவுடனே பயந்தது நீதியோ, நான் சும்மா விடுவேனோ, இவ்வளவு சாமர்த்தியமில்லாதபேர் யாகஞ்செய்யக் குதிரையை விடலாமா முகத்திலேயிருப்பது மீசையல்லவோ நீபிடித்தது தனுசு அல்லவோ உனக்கு சாமார்த்தியம் போதாதோ நீக்ஷத்திரியனானல் நான் சொல்லப்பட்ட விஷயம் உனக்கு ரோஷம் உண்டாகுமென்று சொல்லவே அதற்கு இலட்சுமணர் ஒருவசனஞ் சொல்லுகிறார். வாருந்தம்பி சிறுபிள்ளாய், ஏன் அதிகவிசேஷத்தை மிஞ்சிப்பேசுகிறாய் நீயார் சிறுபிள்ளை உன்னுடைய தாய்தந்தை பேரைச்சொல்லும் அப்புறம் உன்னுடன் யுத்தம்பண்ணுகிறேனென்றார்.

அதுகேட்டுக் குசலன் இலட்சுமணரைப்பார்த்துச்சொல்லுகிறான். ஓ! இராசனே? கேளும், என்பேர் குசலன், என் தம்பிபேர் லவன், என்தாய்பேர் சானகியம்மாள், எங்களையர் பேர் வால்மீகரிஷி, இனி எதோ உம்முடைய சாமர்த்தியத்தைக் காட்டும் பார்ப்போமென்று ஒரு அர்த்தசந்திராஸ்திரத்

தையெடுத்து வில்லிற் சந்தித்துவிட்டுவிட்டானப்போது இல ட்சுமணர் வில்லெடுக்க நேரமில்லாமல் மண்டியிட்டுதன்பலத் தையெல்லாமுன்கையிலே கொண்டு பாயவந்த பாணத்தை ஒரு அரைகொடுத்து வந்தவழி தெரியாமலோடவிட்டா ரப் போது குசலராசன் வில்லிலனேக பாணங்களைச் சந்தித்து அற்பிசி கார்த்திகைமாதத்தில் ஈசானிய மூலையிலிருந்து மேக மானது விடுபட்டு இடிமின்னல் குமுறலுடன் ஓய்வில்லாமல் சலம் வருஷிப்பதுபோல பாணங்களைக் கட்டுகட்டா யுருவி விடுகிறபோது, இலட்சுமணரும் வில்லிலனேக அஸ்திரங்க ளைப் பூட்டி மழைபொழிவதுபோல சரமாரியாய் பொழிந் வருகிற அஸ்திரங்களை யெல்லா மறுத்து, மிதமில்லாத பாணங்களை எடுத்துவிடுகிறபோது பாணங்களானது ஆகா யமார்க்கத்தில் எழும்பி ஒன்றுக் கொன்று தோர்வையில் லாமல் யுத்தங்கள் புரிந்துக்கொண்டிருக்க, அவ்வேளையி ல னுமார் மூர்ச்சைதெளிந்து கண்ணைவிழித்துக் குசலனெங் கே யிருக்கிறனென்று பார்த்தார். குசலன் வெகு தூலவில் யுத்தம் பண்ணுகிற னென்றறிந்து யெழுந்து சாம்புவரிடத் தில் வந்து அவர்மூர்ச்சை யடைந்திருப்பதைக்கண்டு அவ்வி டம்விட்டு லவனிடத்தில் யுத்தம் புரிந்துக்கொண்டிருக்கும் நீ லனைக்கண்டு இவனுடனே யின்ன மென்னத்திற்குப் போரா ட்டம் ஒரேயறையிலே யமலோக மனுப்பிவிடுமென்று கூறிய மொழியை லவன்கேட்டு, அதிககோபங்கொண்டு அனுமா ரையுங்கூட வளைத்துக்கொண்டு யுத்தம் பண்ணும்போது சா ம்புவந்தர் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து அனுமார் அங்க தன் யுத்தம் புரியுமிடம் வந்தார். அதுகண்டு லவன் சாம்பு வந்தரையு மடக்கிக்கொண்டு யுத்தஞ்செய்தான் மூன்றுபேருங் கூடி அதிக உக்ராகாரத்துடன் தேவர்களும் நடுங்க யுத்தம் புரிந்தார்கள்.

அதெப்படி யிருந்ததென்றால், அனுமார் பாய்ந்து பா ணத்தையுடைத்தெறிந்து போடுவார் சாம்புவந்தர்பேரில் பா ணம்பட்டால் அங்கதனெழும்பி பாணத்தை உடைத்தெரிந்து போடுவான் இநதப்படி லவனை வளைத்துக்கொண்டு யுத்தம் பண்ணினர்கள். இம்மூவரையும் இலேசாக யெண்ணவேண டாம் மும்மூர்த்திகளாலும் இவர்களெதிர் நின்று நிர்வாகம் பண்ணர்கள். இவர்கள் அனேக யுத்தங்களில் கைகண்டு கீர் த்திபெற்றவர்கள் லவனோவென்றால், இலட்சுமணப்பெருமா ளுக்கு சரிபலன் படைத்தவன், அவன் பாணமெடுக்கிறதுந்

தொடுக்கிறதும் இம்மூவருக்குந் தெரியவில்லை இவனுடைய கரவேகஞ் சரவேகந்தானென்னமோ, கைதான் சலியாதோ, புஜந்தான் வலியாதோ, மண்டியிட்டகால் புரந்தானெறியாதோ வென்று, தேவர்கள் மெச்சும்படியா யுத்தம்புரிந்துக்கொண்டிருந்தார்கள். அப்போது குசலராசனுடைய பாணமும், இலட்சுமணருடைய பாணமும், ஆகாயத்தில் யுத்தம் பண்ணுகிறபோது, அதில் குசலராசன் பாணமிஞ்சி இலட்சுமணருடைய பாணங்களை அதம் பண்ணிப்போட்டு அம்புருத்தூணியில் வந்தடைந்தது. அதுகண்டு இலட்சுமணர் மகாகோபாக்கினியுடன் அதிகவிரைவில் நூறு திவ்வியாஸ்திரமெடுத்து மந்திராபூதிகள் கொடுத்து வில்லிலே தொடுத்து பிரயோகஞ்செய்தார். அந்த நூறு திவ்வியாஸ்திரங்களும் வில்லில் விடுபட்டு அவயத்திலிருந்த நாகசர்ப்பத்தைக் கோலால் தட்டினல் எப்படிசீறிக்கொண்டுவருமோ அப்படிசீறிக்கொண்டுவிஷாக்கினியுடனே வருகிறபோது குசலன் கண்டு நூறுதிவ்வியாஸ்திரமெடுத்து வில்லிலே சந்தித்துவிட்டு இலட்சுமணர் விட்ட நூறுதிவ்வியாஸ்திரங்களையும் கண்டித்து அதனமாய் பத்து நாராசபாணங்களெடுத்து தனுசிற்றொடுத்துவிட்டான். அந்த நாராசபாணங்களும் அதிக உக்கிரத்துடன் வருகிறபோது, லட்சுமணர் கண்டு தமயன் கொடுத்த ராமபாணமாகிய ஐம்பது நாராசபாணங்களெடுத்து பிரயோகஞ்செய்து அந்த நூறு திவ்வியாஸ்திரங்களையு மறுத்தெரிந்து போட்டார்.

அதுகண்டு குசலராசன் நூறு அர்த்த சந்திராஸ்திரமெடுத்து தூபதீபங்கொடுத்து இலட்சுமணர்பேரில் பிரயோகஞ்செய்தான். அதுகண்டு லட்சுமணர் நூறு அர்த்தசந்திராஸ்திரத்தைவிட்டு அறுத்தெறிந்தார், அதுகண்டு குசலராசனுக்கு கண்களிரண்டும் செவ்வானம்போல் சிவந்து, காதுகளிரண்டும் புகைகளெழும்ப, அதிகரோஷத் துவேஷனுய் அம்புருப்பொதியிற் கையைப்போட்டு ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினுயிரம், கோடி, சங்கம், மகாசங்கமென்று கணக்குமிதமில்லாத பாணங்களை மழைபொழிவதுபோல சாமபரியந்தம் சரமாரியாய்ப் பொழிந்துவிட்டான். அதுகண்டு இலட்சுமணர்தாமும் அப்படியே பாணங்களையெடுத்து விட்டறுத்துப்போட்டு நாலு சிங்கமுகாஸ்திரமெடுத்து வில்லிலே சந்தித்துவிட்டு குசலராசனுடைய வில்நாணியை படீலென் றறுத்தெரிந்துவிட்டார் வில்நாணி அறுபடவே அண்டகடாகம்

படீலென்று வெடித்ததுபோலிருந்தது குசலராசனுந் திடுக்கிட்டுப் பிதிர்கலங்கி மனதைரியப் படுத்திக்கொண்டு அந்த நாணியை உருவப்பார்த்தான் அது ஒன்ருய்க் கூடியதைக்கண்டு குசலராசன் சலுதிலேயே நாணியைப் பிகிந்து பாணங்களைச் சங்கோப சங்கமாய் வில்லிற் சந்தித்துவிட்டு அதனமாயிரண்டு நாராசபாணங்களெடுத்து இலட்சுமணருடைய வில்லுக்குலக்குபார்த்து பாணத்தினுடைய சந்திலே விட்டுவிட்டான். குசலன் விடப்பட்ட பாணங்களுக்கு பதில் பாணங்கள் விட்டறுத்துக்கொண்டே யிருந்தார்.

அந்தச்சமயத்தில் இரண்டு நாராசபாணங்களும் வந்து இலட்சுமணருடைய கைவில்லைநாலுபத்தலாகக் கிழித்தெரிந்துப்போட்டது. அதுகண்டுஇலட்சுமணர் குசலராசனை மெச்சி பளாபளா நன்ருச்சுது இராவணன், கும்பகர்னன், இந்திரஜித்து, அதிகாயன், கும்பனிகும்பன், இப்படி சொல்லப்பட்ட பிரமுகாளிடத்திலேயும் பின்னையும் இராட்சதாளுடனேயும், யுத்தம்பண்ணினேன் இதுவரையில் நம்முடைய வில்லை யிப்படிப்பிளந்தவர்களில்லை இவன் மகாபலவந்தனென்று சொல்லிக்கொண்டு வில்லை உருவப்பார்த்தார் ஒன்ருய்க் கூடிவிட்டது அப்போது இலட்சுமணரிவனை ஜெயம்பண்ணிக் குதிரையை விடுவிக்கவேணுமென்றும் அசாரிசமாய் இவனுடனே யுத்தம்பண்ணலாகாதென்றும் அப்படிப்பண்ணினுல் கொன்றுவிடுவானென்றும் மனதில் திடப்பட்டவராய் தன்னிடத்தி லிருக்கப்பட்ட பாணங்களை யெல்லாம் வில்லிலே சந்தித்து மந்திராபூதிகள் செய்து குசலவனுடைய மார்புக்கும் கண்டத்திற்கும் லக்குபார்த்து விட்டுவிட்டார். அந்த இராமபாணங்களானது எடுக்கச்சே ஒன்று, வில்லில் வைக்கச்சே பத்து, தொடுக்கச்சே நூறு, யிழுக்கச்சே ஆயிரம், விடுக்கச்சே பதிணுயிரம், புறப்படச்சே லட்சம், ஒருபாண மித்தனையாணுல் விடப்பட்ட இராமபாணத்துக்கெல்லாம் எத்தனையென்று கணக்குப் பார்த்துக்கொள்ளுங்கள் அந்த பாணங்களானது விடுபட்டு தகத்தகாயமாய் தங்கக்கட்டுகளுடனே பிண்டபட்சி யிறகுபூண்ட வடவாமுகாக்கினிக்குச் சமத்தையான அக்கினிக் கொழுந்துகள் விட்டெறிந்துக்கொண்டு அதிவேகத்துடனே வருகிறபோது குசலராசன் கண்டு அநேக பாணுஸ்திரங்களை வாரி அபரிமிதமில்லாமல் பிரயோகம் பண்ணி வருகிற இராமபாணங்களை யெல்லாம் அறுத்தெறிந்து போட்டான்.

அதுகண்டு இலட்சுமணர் முப்பத்திரண்டு சிங்கமுகாஸ்திரமெடுத்து வில்லில் சந்தித்துமந்திராபூதிகள் கொடுத்து பிரயோகம் பண்ணிவிட்டார். அதுகண்டு குசலராசனறுபத்திஞலு சிங்கமுகாஸ்திரமெடுத்து வில்லிற்சந்தித்து பிரயோகம் பண்ணிவிட்டான். அதனமாய் அக்கினியாஸ்திர மெடுத்து அபிமந்திரித்துப் பிரயோகம்பண்ணினன். அதுவும் விடுபட்டு வடவாமுகாக்கினியை வாரியிறைத்துக்கொண்டு கடகடவென்கிற தொனியுடனே காடுசெடிகள் பற்றியெறிய கரகரவென்று அதிகஉக்கிரத்துடன் வருவதை இலட்சுமணர் கண்டு தம்மிட ஸ்ரீராமபாணமாகிய அக்கினியாஸ்திரம் ஒன்றெடுத்து விடுத்தார். அதுவும் விடுபட்டு வடவாமுகாக்கினியை வாரியிறைத்துக்கொண்டு சடசடவென்கிற தொனிகளுடனே புறப்பட்டு குசலராசன்விட்ட அக்கினியாஸ் திரத்தின்பேரில்தடாலென்று வந்து மோதி ஒன்றுக்கொன் றூடுதாக்கி ஆகாயமேகிளம்பி யுத்தம்பண்ணத் தலைப்பட்டது.

அதுகண்டு குசலராஜன் ஒரு பர்வதாஸ்திரத்தை யெடுத்து வில்லிற்ருெடுத்து மந்திராபூதிகள் செய்து விட்டு விட்டான். அந்தபர்வதாஸ்திரமானது வில்லில்விடுபட்டு அனேக பர்வதங்களாக வுருவுகொண்டு வருகிறபோது இலட்சுமணரானவர் அந்த பர்வதாஸ்திரங்களானது வருமுன்னம் தம்முடைய ஸ்ரீராமபாணமாகிய பர்வதாஸ்திரத்தையெடுத்து வில்லிற் சந்தித்து மனோபூசைகள் செய்து பிரயோகப்படுத்தினர் அந்தப் பர்வதாஸ்திரமும் ஆகாயமார்க்கங் கிளம்பிக் குசலராஜன்விட்ட பர்வதாஸ்திரத்துட னெதிர்த்து ஒன்ருே டொன்று கிட்டி முட்டி கட்டிப் புரண்டு செயித்திட வேண்டுமென்று யுத்தம்பண்ணத் தலைப்பட்டது அதுகண்டு தேவர்களெல்லாம் நமதுபேரி லெங்கேவந்து விழுகிறதோவென்று ஓரண்டமுயர மோடிப்போனர் அப்போது குசலராஜன் பிரம்மாஸ்திரத்தை யெடுத்துப் பூசைபுரிந்து மந்திர உச்சாடனங்களுடன் வில்லிற்சந்தித்துப் பிரயோகம் பண்ணினன் அந்த பிரமாஸ்திரமானது வெளிப்பட்டு அண்டபுவனங்களும் நடுங்க ஆலகாலவிஷம்போற் சீறிக்கொண்டு இலட்சுமண ரெங்கே யென்று திகுதிகென்றெரிந்துகொண்டு வருகிறபோது இலட்சுமணப்பெருமாளானவர் கண்டு தம்முடைய ராமபாணமாகிய பிரமாஸ்திரத்தை யெடுத்து வில்லிற் ருெடுத்துப் பிரயோகம் பண்ணிவிட்டார் அதுவும் வில்லில் விடுபட்டு தகத்தகாயமாய்

தங்கக் கட்டுகளுடனே பிண்டபட்சி யிறகுபூண்ட பிரமாஸ்திர மானது குசலராஜன் விடப்பட்ட பிரமாஸ்திரத்தின்பேரிற் பாய்ந்து இரண்டு பிரமாஸ்திரமானது சந்தித்து யுத்தம்பண்ணத் தலைப்பட்டதுகள் அத்தருணத்தில் குசலராஜன் ஏதடா இலட்சுமணன் மகா பலசாலியாயிருக்கிறன் நாம் விடப்பட்ட அஸ்திரத்திற்கு பதிலஸ்திரம்விட்டு யுத்தம்பண்ணுகிறன் நம்முடைய அஸ்திரமோ வைகுந்த வாசகரா யிருக்கப்பட்ட ஸ்ரீமந்நாராயணருடைய தாயிற்றே இந்த லட்சுமணன் நரனுச்சுதே இவனுக்கேது பலம்பொருந்திய அஸ்திரம் நம்முடைய அஸ்திரமெல்லா மறுத்துவிடுகிறன். இவனே புஜபல பராக்கிரம சாலியாயிருக்கிறன். யுத்தங்களிற் கைகண்டவன் போலும் காணுது நா மசாரிசமாயிருந்தோமே யானுல் நம்மை யெமனுலகமனுப்பி விடுவானென்று மனதிற்றிடங் கொண்டவனுகத் தன் தாயார் கொடுத்த சக்கரத்தைக் கையிலேந்தினன் அதுகண்டு மண்ணுளோரும் விண்ணுளோரும் யோசனைபண்ணிக் கண்ணனை யெண்ணி துதிபண்ணி மனங்குண்ணி வாடிப்போனர்க ளப்போது குசலராஜனனவன் சக்கரத்திற்குத்தக்க மந்திராபூதிகள்செய்து தூபதீப நைவேத்தியங்களுடனே சோடசோபசாரஞ்செய்து இலட்சுமணருடைய கண்டத்திற்கு லக்குபார்த்து விட்டுவிட்டான். அந்தச் சக்கரமானது வெளிப்பட்டு காடுகள் யெரியத்தக்கதாக இலட்சுமணரைப் பட்சணஞ்செய்வேனென்று தேடியோடி வரும் போது அதுகண்டு இலட்சுமணரானவர் நிமையோடு நிமை தட்டு முன்னமேகோடிராமபாணங்களைச் சக்கரத்தின்பேரில் விட்டார். கோடிராமபாணங்களையு மறுத்து பூமியிற்றள்ளி விட்டு இலட்சுமணர்பேரில் சக்கரமானது வருகையில் இலட்சுமணர் பயந்து நாராசத்தையும் பாசுபதாஸ்திரத்தையும் சிவாஸ்திரத்தையுமெடுத்துவிடுத்தார் அம்மூன்றஸ்திரங்களும் புறப்பட்டு சக்கரத்தின்பேரி லெதிர்த்து யுத்தம் பண்ணத் தலைப்பட்டதுகள், அதுகண்டு குசலராஜன் தன்தாயார கொடுத்த உக்கிரவீர சத்தியை யெடுத்து கையிற்பிடித்து மந்திர உச்சாடனஞ் செய்யும் போது அனுமார் கண்டு ஏதடா குசலவன்' உக்கிரவீர சத்தியை யெடுத்து உச்சாடனம் பண்ணுகிறன். இந்தச் சத்திவிட்டால் இலட்சுமணர் பிழையாரென்று திடுக்கிட்டு மனது கலங்கி குசல னுடைய சத்தியை யொடித்தெறிந்து போடவேணுமென்று மனதிலெண்ணி சத்தியின்பேரில்வந்து பாய்ந்தார் அதுகண்டு குசலராஜ

னேதடா செங்குரங்குநமது பேரில் வருகுதென்று பிரசண்ட கோதண்டத்தைச் சுழட்டியடித்தானவ்வடியானது அனுமார் மேற் படவே, கபாலந்திறந்து ஸ்ரீராமா ராமாவென்று வாய் விட்டலறி குப்புறப் பூமியில்விழுந்து விட்டார்.

அந்தவேளையிற் குசலன் சத்தியையெடுத்து விட்டுவிட்டான். அந்தச் சத்தியானது மேலுலகமேழுந் தத்தளிக்க முயர் வாயெழும்பி தெந்தனம் பாடிக்கொண்டுவர இலட்சுமணர் கண்டு கோபமாகி அனேகஇராமபாணங்களைகண்ணிமையோடு நிமைதட்டுமுன்னமே கட்டுகட்டா யுருவிவிட்டார். அந்த இராமபாணங்களையெல்லாஞ் சத்தியானது கமளீகரம் பண்ணிக்கொண்டு இலட்சுமணர்மீது வருகிறபோது அங்கதனேதடா நமது லட்சுமணர்மீதுவருகின்றது இந்தச்சத்திபட்டால் இலட்சுமணர் பிழையாரென்று கருடனுனவன் நாகசர்ப்பத்தை லகுவாயடித்துக்கொண்டு போவதெப்படியோ, அவ்வாறாக அங்கதனுனவன் சத்தியைப்பிடிக்க வருகிறபோது குட்டிக்குரங்கின் சேஷ்டை காண்பிக்காமற் போகாதென்று நான்கு நாராசபாணங்களைத்தொடுத்து அங்கதனுடையதிரேகமுழுதுஞ் சல்லடைக் கண்களாகத் துளைசெய்தான். அதனுலங்கதன் இரத்தங்களைக் கக்கிக்கொண்டு ஸ்ரீராமாராமாவென்றுவாய்விட்டலறி பூமியில் விழுந்தான்.

அந்தவேளையிற் சத்தியானது மகாவுக்கிரத்துடன்வரும் போது இலட்சுமணர்கண்டு சத்தி வேல் சூலம் இம்மூன்றையுஞ் சத்திமேலெடுத்துவிட்டார். இம்மூன்றுயுதங்களுஞ் சத்தியின்பேரிலெதிர்த்து யுத்தம்பண்ணி சத்தியினுலடிபட்டுபூமியில்விழுந்துபோயிற்று மேலுமந்த உக்கிரவீர சத்தியானது உக்கிரம் விடாமல் இலட்சுமணர்பேரில் வருகிறபோது இலட்சுமணர் மந்திரவாளையெடுத்து உக்கிரவீரசத்தியை யிரண்டு துண்டாக வெட்டினுர். வெட்டவே துண்டமிரண்டாகி மறுபடியுமொன்றுய்க்கூடி இலட்சுமணருடையமார்பிலே தடாலென்று வந்துபாய்ந்து முதுகிலுருகிப்போய்விட்டது அதனுல் இலட்சுமணர் ஸ்ரீமந்நாராயணுவென்று தேர்தட்டில் விழுந்துவிட்டார். சாரதியானவன் குதித்தோடிப்போயினுன். அந்தரவாசிகள் சுந்தரம்பொருந்திய இலட்சுமணர் யிறந்தாரென்று துயரமுற்றுர்கள். அந்தவேளையி லுக்கிரவீர சத்தியானது சமுத்திரத்தில் ஸ்நானஞ்செய்து அம்புறுத்தூணியில் வந்தடைந்தது. அதுகண்டுகுசலராஜன்சந்தோஷமாகிவி

ல்நாணியைத் தளர்த்தினனப்போது லவனுனவன் டுக-இரா சகுமாரர்களுடனும் சாம்புவந்தனுடனும் யுத்தம் பண்ணிக் கொண்டிருக்கிறபோது இராத்திரி பதினெட்டுநாழிகையா யிற்று.

அப்போதிரண்டு தூதர்கள் உச்சியின்மீது இரண்டுகைக ளைக்கூப்பி இசைக்குகந்த இலட்சுமணர்செய்தியைஇட்சணம் சொல்லவேண்டுமென்று கூவியழுதுக்கொண்டே ஆகாயமார் க்கமாகச்சென்று ஆவிக்குரிய ஸ்ரீராமரைக்குறித்துத்தொழுது குய்யோமுறையோவென் றவரிருக்குமிடந்தேடியோடி அயோ த்தியைநாடிபலவாய் துதிகள்பாடி எங்களைக்காக்குமையனே தேசார்ந்தமெய்யனே கேட்டருள்வீர் இலட்சுமணப்பெருமா ள்அனுமார்அங்கதன்சகலவானரத்தலைவர்களும் இராட்சதா ளும்குசலவாள்பேரில்யுத்தஞ்செய்துமாண்டார்கள் நாங்கள் மாத்திரந்தப்பியோடிவந்தோமென்ருர்கள். அதுகேட்டுஇரா மபத்திரர், இலட்சுமணர், அனுமார், அங்கதன், இறந்தார்க ளென்று சொல்லவே, ஆயாசமுற்று அருட்கண்ணீர் பெருகி அப்பாதம்பி இலட்சுமணுமுன்னல் பரசுராமன் நமதுதந்தை யாகியதசரதமகாராஜரைமடக்கிக்கொள்ள அந்த பரசுராமனை ஒரேபாணத்தினுற் கொன்றுவிடுகிறேனென்று யுத்தரவுகொடு மென்ருயே அந்ததைரியமுஞ்சவுரியமும் பலாபலமும்சிறுபி ள்ளை குசலவாள்பேரில் காண்பித்தால்பிள்ளைகள்பயப்படுவார் களென்று சிறுபிள்ளைகள் பாணத்தினு லிறந்தாயோ கைகேசி யம்மன் சொற்பிரகாரம் பதினுலுவருஷம் காட்டிற்குப் போகச் சொன்னுர்களே அப்போதாசாரவாசலில் நீவந்து கைகேசி யையும் தசரதனையும் கொல்வேனென்று வில்லைகுணத்தொனி செய்து ஆரவாரஞ்செய்யவே அதுவுமன்றி சீதையுடன் பஞ் சவடி தீர்த்தத்திலிருக்கிறபோது சூர்ப்பனகியானவள் வந்து உன்னைத் தோதகஞ்செய்யுமவளை மூன்ருக்கினைபுரிய அவளா ல் கரதூஷணன் யுத்தத்திற்குவர அவனை நான் கொன்றே னே பின்னையுஞ் சுக்ரீவன் வாலியைக் கொல்லவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய நாமதற்கிசைய அப்போது சுக்கிரீவன் சொன்ன துந்துபியெலும்பு மராமரமுமிருக்கிறது அதையெ ய்தால் வாலியைக் கொல்லத் தக்கினவர்களென்று சொன்னு னதுகேட்டு உன்னைக்கண்டு ஜாடைசெய்ய நீயதையறிந்து துந்துபி யெலும்பை பெருவிரலினு லிரடிவிட்டாய், அது எ ந்தசமுத்திரம்போய் விழுந்ததோ தெரியாதே பின்னும் என்

ளைக்காப்பாற்ற வேணுமென்று பதினாலு வருஷம் அன்னாகா ரித்திரையில்லாமலிருந்து இராவண சம்மார முடிப்பித்துக் கொண்டு என்னைக்காத்தாலே அப்படிப்பட்ட உயிர்த்தோழ னாகிய உன்னைவிட்டு எப்படிப் பிரிந்திருப்பேன் தம்பி லட்ச மணாவென்று பிரலாபிக்கையில் பரதாழ்வாரானவர் அண்ணா வே, அடியேனுக்குத் திருவுளம் புரிந்தால் நம்முடைய தம்பி மார்களைக்கொன்ற இரண்டு பிள்ளைகளையும் கண்டதுண்டம் பண்ணி சகலரையு மெழுப்பிக்கொண்டு வருகிறேனென்றார்.

அதனைக்கேட்ட ஸ்ரீராமசந்திர சுவாமியானவர் சொல் லுகின்றார். வாராய் தம்பி பரதாழ்வாரே சிறுபிள்ளைக ளிரு வரையுங்கொன்றால் சீதையிருப்பிட மெவ்வாறறியலாம் சீதை யில்லாமல் யாகத்துக்கு பின்னம்வந்து சம்பவிக்கது ஆகையா லந்தயிரண்டு பிள்ளைகளையுங் கொல்லாமல் கைப்பிடியாகப் பி டித்துவந்தால் அந்தச் சிறுவர்களால் சீதையிருக்குமிடங் க ண்டறியலாமென்று நாலுவெள்ளம் இராட்சதரைக் கூட்டி க்கொண்டுபோய் யந்தப்பிள்ளைகளை எந்தவிதமாகிலுங் கைப் பிடியாகப் பிடித்துக்கொண்டு வாவென்று நாராயணாஸ்திரத் தையெடுத்துக் கொடுத்து சிலராமபாணமும் சத்திவேல் சூல முங் கொடுத்து மந்திரங்களையுஞ் சொல்லியனுப்பினார்.

### பரதமகாராஜன் யுத்தத்திற்குப் புறப்படுதல்.

---

கலிவிருத்தம்.

வரதமோங்கு குசலன்றன்வாளியாற்
றாதவமுனி கரியுந்துணிபட
விரதமோய்ந்து விலட்சுமணன்றனைப்
பரதன்கண்டு பரிந்துடன்வந்தனன்.

அப்படியே பரதாழ்வார் சகலமான சேனைகளையும் யானை களையும் காலாட்களையுங் கூட்டிக்கொண்டு சர்வாடம்பரத்து டனே தேவதத்தால் ஒருயானையின்மீது சிங்கக்கொடி பிடிக்க அயோத்தியைவிட்டுப் புறப்பட்டார்கள். பொழுதுவிடிய இ ன்னமைந்து நாழிகையிருக்கின்றது அப்போது லவனானவ ன் குச-இராஜகுமாரர்களோடனும் மந்திரி பிரதானிகளோடனும் யுத்தம்பண்ணுகையில் சாம்புவந்தர் இறந்துகிடக்கின்ற இ ராட்சதப்பிரேதங்களை வாரி வாரி குசலன்பேரில் விட்டெறிந் து யுத்தஞ்செய்துக் கொண்டிருக்கையில் அனுமார் மூர்ச்சை தெளிந்தெழுந்து இலட்சுமணர் சோகித்திருப்பதைக் கண்

அதிக கோபாக்கினியுடன் இரண்டு கண்களுஞ் செவ்வானம் போற்சிவக்க, மீசை படபடவென்று துடிக்க, உக்கிரசிங்கம் போல் கெர்ஜித்து அட்டகாசஞ்செய்தார். அந்த அட்டகாசத்தை தேவர்கள்கேட்டு நடுங்கவுங் குசலவர்களுங்கண்டு பயங்கொள்ளவும் வருகிறபோது ஏதடா செங்குரங்கு மகா பெரல்லாததாய் காண்கிறது இந்தக்குரங்கை யெத்தனைதரங் கொன்றாலும் சற்றுநேரம்பொறுத்து சண்டைக்குவருகிறது இந்தக்குரங்கை முன்னே கொல்லவேணுமென்று ஐம்பது நாராசபாணங்களை யெடுத்து வில்லிற்பூட்டி அனுமார்பேரில் விட்டானந்தபாணமானது நாகசற்பம்போற் சீறிக்கொண்டு வருகிறபோது சாம்புவந்தர் ஆகாயமார்க்கங் கிளம்பிவந்து ஐம்பது நாராசபாணங்களையும் பிடித்தொடித்துப் போட்டா ரதுகண்டு குசலராஜன் நகைத்து இருபது திவ்வியாஸ்திரத் தையெடுத்து சாம்புவந்தர்பேரில் பிரயோகம் பண்ணினன் அதுகண்டு அனுமார் கெந்துபாய்ந்து இருபது திவ்வியாஸ் திரங்களையும் பிடித்து ஒடித்தெறிந்துபோட்டார். இந்தப்படி யாய் குசலராஜன் விட்டபட்ட பாணங்களை யெல்லாம் ஒடித் தெறிந்தார்கள்.

அப்போது குசலராஜன் அதிககோபாக்கினியுடன் அக்கி னியாஸ்திரத்தையெடுத்து வில்லிற்சந்தித்து மந்திராபூதிகளு டனே அனுமார்பேரிற் பிரயோகம்பண்ணினன் அதுகண்டு அனுமார்வருகிற அக்கினியாஸ்திரத்தைப் பிடித்துமுறுக்கிப் பிழிந்துபோட்டார் அதுபோகவே, குசலராஜன் ஒருவேலெ டுத்து பூசைசெய்து அனுமார் மார்புக்கு குறிபார்த்துவிட்டா ன். அந்த வேலாயுதமோ சுப்பிரமணியருடைய வேலாயுதம் அந்தவேலினுல் சூரபதுமனை ஜெயமடைந்தது. அப்படிப் ப ட்ட வேலாயுதத்தை மகாலட்சுமியான சீதையம்மன்வாங்கித் தன்பிள்ளை குசலனுக்குக் கொடுத்தாள். அதனை அனுமார்பே ரில்விட்டபடியினுல் அதுபுறப்பட் டாயிரத்தெட்டண்டமு நடு ங்க ஆங்கார ஓங்காரரீங்கார சத்தத்துடன் அக்கினிச் சுவாலை கள் ஜொலிக்க வருவதை சாம்புவந்தர்கண்டு இதென்ன யுக முழுகிப் போவதுபோல வருகின்றதே இந்த வேலாயுதத்தை த்தடுக்க நம்மாலாகாது ஸ்ரீராமராண்டால் நயமென்ன குசல னுண்டால் நஷ்டமென்ன போம்போம் அனுமாரே யென்று சாம்புவந்தர் பின்னிடைந்தார்.

அதுகண்டு அனுமார் நகைத்து அதிசீக்கிரமாய் விஸ்வரூபத்துடன் முன்கையிற் பிடித்து அடிமானங் கறுத்து, நுனிமானஞ்சிவந்து, நடுமானமின்னல்மின்னி, உச்சியில் பேரிடியிடித்தா லெப்படியிருக்குமோ, அப்படியாக வேலாயுதத்தின்பேரில் தபாலென் றெருகுத்தானது விட்டார் அப்போதந்த வேலானது பின்னிடைந்து மறுபடியு முருவுகொண்டு அனுமார்பேரில் வருகிறபோது அனுமார் சற்றும் பயமில்லாமல் ஸ்ரீராமாவென்று ஆகாய மெழும்பி வேலாயுதத்திற் குறுக்கேபாய்ந்து வேலாயுதத்தைப் பிடித்து முழங்காலில் வைத்து இருதுண்டாய் ஒடித்தெரிந்துபோட்டார். மறுபடியும் வேலாயுதமானது இருதுண்டும் ஒன்ருய்க்கூடி மகா உக்கிரத்துடன் அனுமாருடைய மார்பில் வந்து பாய்ந்து உருவ மாட்டாமலுருவிப்போய் திருப்பாற்கடலில் ஸ்நானம் பண்ணி குசலராசனுடைய அம்புருப்பொதியில் வந்தடைந்தது. அனுமாரானவர் ஸ்ரீராமாராமாவென்று வாய்விட்டலறி பர்வதம்போல பூமியிற் சாய்ந்துவிட்டார். அதனுல் சுவர்க்கவாசிகள் துயரமடைந்தார்கள். அப்போது சாம்புவந்தர் பசங்கள் கண்ணிலகப்படலாகாதென்று பதுங்கி யொதுங்கிப் போகிறவரை குசலராஜனெதிரோடி வளைத்துக்கொண்டு பாணப்பிரயோகம் பண்ணினுன். அப்பாணங்கள் சாம்புவந்தர்மீது வந்துதைக்கவே சாம்புவந்தர் இந்த சண்டை நமக்கு வேண்டா மென்று போகிறவன் மீது வலியசரங்களை விடுகிருனே இந்தக்குசலனுடைய ஆண்மைதானென்ன இவனுடைய புஜபலபராக்கிரமந்தா னென்ன இலட்சுமணர் அனுமார் முதலாயினேர் விழுந்து போனுர்கள். நாம் சும்மா போகிறே மென்ருலும் பாணம்விட்டுக் கொல்லுகிருன். இதற்கென்ன செய்வேன் ஓய் ஸ்ரீராமராமா எங்களையிந்தபசங்கள் கையிற் காட்டிக்கொடுத்து நீர் அயோத்தியில் இருக்கலாகுமோ ஸ்ரீராமராமாவென்று கன்றைப்பிரிந்த பசுவைப்போல சாம்புவந்தர் கதறி மூன்றுதரம் ராமநாமத்தைச் சொல்லவே சாம்புவந்தருக்கிரட்டிப்பு பலமுண்டாகி தைரியமேலிட்டு தன்மேற்படிந்த அம்புகளையெல்லாம் பிடிங்கி யெறிந்துவிட்டு குசலராசன்முன்னுக்குத் திரும்பி இராட்சதாளேறிவந்த இரதங்களை யெல்லாம் வாரிவாரி குசலராஜன்பேரில் விட்டெரிந்தார். அதுகண்டுகுசலராஜன் கோபமாகி ஐம்பது அர்த்தசந்திராஸ்திரத்தை யெடுத்துவிட்டு வருகிற இரதங்களையெல்லா மறுத்து அதனமா

ய் நூறுநாராசபாணங்களெடுத்து சாம்புவந்தர்பேரிலே பிர யோகம்பண்ணிவிட்டான். அந்தநூறு நாராசபாணங்களும் சாம்புவந்தர் பேரிலே வந்துபாய்ந்தது. அதனாலே சாம்புவந்தருக்குச் சரீரம் நொந்து கைகால்களை யுதறிக்கொண்டு ஸ்ரீ ராமா ராமாவென்று பூமியிலே விழுந்து மூர்ச்சை யடைந்தார். பூமியுண்டாகி மூன்றுநாட் பிறந்தவராகிய சாம்புவந்தரானவர்.

அப்போது ௬௦௨-வெள்ளம் வானராளும் ௨௫-வெள்ளம் இராட்சதாளும் ஐயாயிரம் இராஜகுமாரர்களும்மாண்டு, மந்திரி பிறதானிகளுமிறந்து, இரத்தவெள்ளம் ஆறாகஓட அந்த இரத்த வெள்ளத்திலே தலையில்லாத முண்டங்க ளெழுந்து கூத்தாட, அந்தமுண்டங்கள்பேரிலே கழுகுகளேறிக் கூத்தாடிக்கொண்டு போக, டாகினி, ஜாகினி, பூதபைசாசங்கள் பிணங்களின் சதைகளைப் பிடுங்கித்தின்று, உதிரங்களைக்குடித்து, கழுத்தில் பேரிகைகளை மாட்டிக்கொண்டு அயோத்தியை நோக்கி இன்னஞ் சண்டையுண்டோவென்று பேரிகை வாத்தியங்களை முழக்கிக்கொண்டு ஓடுகிற உதிரவெள்ளத்திலே ஓடுகிறதும், அப்போது குசலவர்கள் வில்நாணியைத் தளர்த்தி ஒருவர்க்கொருவர் சாமார்த்திய வார்த்தைகளைப் பேசிக்கொண்டு சரஸ்வதியாற்றில் ஸ்நானஞ்செய்து நேம நிஷ்டைகளை முடித்துக்கொண்டு, காமதேனுவால் பஞ்சகச்சாய வர்க்கங்களுஞ் சாப்பிட்டு கதம்பகஸ்தூரி பரிமளாதிகளை யணிந்து ஒருலட்சண மரத்தடியில் கட்டியிருக்கின்ற அஸ்வத்தண்டையில் வந்து உட்கார்ந்துக்கொண்டு அஸ்வத்தினுடைய இலட்சணத்தையும் குறிகுணத்தையும் பார்த்துக் குசலன் சொல்லுகிறான். வாரும், தம்பிலவனே இந்த அஸ்வத்தை நம்முடைய தாயாரிடத்திற்குக்கொண்டுபோய் காண்பித்து நாமேறிக்கொண்டு திரிவோமென்றான் குசலராஜனானவன். அப்படி ஒருவர்க்கொருவர்பேசிக் கொண்டிருக்கிறபோதுபரதருடைய தண்டானது பாலவனங்கடந்து சரஸ்வதியாற்றின் சமீபத்தில்வந்தன.

அதுகண்டுகுசலன் தம்பி லவனைநோக்கிச் சொல்லுகிறான். வாருந்தம்பி லவனே? இன்னம் ஸ்ரீராமபிரானுக் கெவ்வளவு சேனைத்திரள்தா னிருக்கிறதோ தெரியவில்லை ஆனாலும் இப்போது வெகுசேனைத்திரள் வருவதுபோற் காணுகின்றது இன்றைக்கு யுத்தத்திற்கு வருகிறவன் நல்லபலவான்போற் காணுகின்றது நாம் ஜாக்கிரதையுடனே யுத்தஞ்செ

ய்ய வேணுமென்று யோசித்துக்கொண் டிருக்கையில் பரதாழ்வாருடைய தண்டானது இரணக்களம்வந்து சூழ்ந்துக்கொண்டு குசலவர்களெங்கே எங்கேயென்று தேடும்போது பொழுதுவிடிந்தது சூரியபகவானும் பரதாழ்வாருடைய யுத்தத்தைப் பார்க்கவந்தவர்போல உதயகிரி பர்வதத்தில் வந்து உதயமானார் அப்போது தேவசுந்தரன் யானைகளை யொருபக்கத்திலும் இரதங்களை யொருபக்கத்திலுஞ் சேனைகளை யொருபக்கத்திலும் ராஜகுமாரர்களையும் பரதாழ்வாரையும் நடுஅணியில் நிறுத்தி தானே யுத்தசன்னுத்தனாக இரதமேறி வில்லை வளைத்து குணத்தொனி பண்ணினான்.

அதுகண்டு குசலவர்கள் வில்லைவளைத்து நாணிபிகிந்து தண்டிருக்குமிடமே வந்தார்கள். அப்போது தேவசுந்தரன் குசலவர்கள் முன்னுக்கு இரதத்தைநடத்தி குசலவர்களைப்பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறான். வாருந்தம்பி சிறுபிள்ளைகளே இந்தப்படி ஸ்ரீராமபத்திர சுவாமியாருடைய தண்டுகளை ஏன் வீணிலே கொல்லுகிறீர் உங்களை என்ன பண்ணினார்கள் நீங்கள் சிறுபிள்ளையென்று உங்களுக்கு ஞாயஞ்சொல்ல சொல்லவந்த பேரையெல்லாங் கொன்று போட்டீர்கள். ஸ்ரீராமபத்திரசுவாமியார் பாணப் பிரயோகம்பண்ணினால் நீங்கள் தெய்வலோகம் பிரமலோகம் வைகுந்தம் போனாலும்விடாது விடாதேயென்று சொல்லினான் அதுகேட்டு குசலராஜன் கண்களிரண்டுஞ் செவ்வானம்போற் சிவந்து காதுகளிரண்டிலும் புகையெழும்ப கைகளிரண்டும் பதைபதைக்க கால்களிரண்டுந் துடிதுடிக்கக் கோபமாகி தேவசுந்தரனைப் பார்த்து ஒரு விசேஷம் சொல்லுகிறான். அடா! இராட்சதப்பட்டி மகனே? யென்னவார்த்தை சொன்னாய் ஞாயஞ்சொல்ல வந்தபேரை யெல்லாம் கொன்றதா யல்லவோ சொல்லுகிறாய், நீ யாண்பிள்ளையானால் பாணத்தைவிட்டு யுத்தம்பண்ணி யென்னை ஜெயங்கொள்ளடா இராட்சதனேயென்று வில்லிலனேக பாணங்களைச் சந்தித்துவிட்டு தேவசுந்தரன் ரதத்தைப் பத்தல்பத்தலாக உடைத்தெரிந்தான். உடனே தேவசுந்தரன் லகுவிற்குதித்து மறுதேரிலேறி வில்லைவளைத்து அனேக பாணங்களைப்பூட்டி மழைமாரி பொழிவதுபோற் பிரயோகம்பண்ணி விட்டான். அதுகண்டு குசலராஜன் வில்லிலனேக பாணங்களைத் தொடுத்துவிட்டு தன்பேரில்வருகிற பாணங்களை யெல்லா மறுத்து வெட்டவெளியாக்கி அதிகமாய் நூறுபா

ணம் விட்டு கால்கைகளாட வொட்டாமலும் வில்லைப்பிடிக்க வொட்டாமலும், அஸ்திரங்களைப்பூட்ட வொட்டாமலும், சாரதிரதத்தை நடத்தவொட்டாமலும், பிர்மிக்கச்செய்து விட்டு இரதத்தையும் உடைத்தெரிந்தான்.

அப்போது தேவசுந்தரன் லகுவிற்றுதிந்து மறுதேரிலேறிக்கொண்டு இராட்சதாளை யேவிவிட்டுத் தானும் வில்லிலனேக பாணங்களைப்பூட்டி மழைமாரி சொரிவதுபோல பொழிந்துவிட்டான். கOஉ-வெள்ளம் இராட்சதாளும் ஆளொன்றுக்கு நூறுபாணப்பிரயோகம் பண்ணினார்கள் அதுகள் எத்தனை பாணங்களாகுமோ, அத்தனை பாணங்களுக்குக் குசலவர்கள் பதிலஸ்திரங்கள் ஒன்றரை நாழிகை பரியந்தம்விட்டு அறுத்துத் தள்ளியும் மாளாமலும் பாணங்களானது சூரியனை மறைத்துக்கொண்டு காரிருள் சூழ்ந்துக்கொண்டது.

அவ்வேளையில் குசலவர்கள் அனேக பாணங்களைவிட்டு தங்கள்பேரில் அநேகமாய்வருகிற பாணங்களை எல்லாமறுத்துவெட்ட வெளியாகக்கண்டு சற்றுகிலும்பயப்படாமலெதிர்த்துப் பாணங்களைவிட்டு இராட்சதாளைக் கொல்லுகிறபோது இராட்சதாள் கால்வேறு, உடல்வேறு, சதைவேறு, வேறு வேறாக விழத்தலைப்பட்டார்கள். யானைகளோ வென்றால் மத்தகம்பிளந்தும், காலறுந்தும், வாலறுந்தும், முகமறுந்தும், தும்பிக்கையறுந்தும், துடையறுந்தும், விழுந்ததுகள் குதிரைகளோ வென்றால், கால்வேறு, வால்வேறு, உடல்வேறு, தலைவேறு, இப்படி யறுந்து விழுந்ததுகள். இரதங்களோ வென்றால், அச்சுமுறிந்தும், ஆணிசுழன்றும், மச்சுமுறிந்தும், துஜமறுந்துஞ் சாரதிதலையறுந்துங் கொடையறுந்தும், இராஜமுடிகளறுந்துஞ் சவுடால்கள் முறிந்துங் கல்லணைகள் முறிந்தும் இந்தப்படி பத்துவெள்ளம் இராட்சதாள் மாண்டு இரத்தவெள்ளமோடிற்று மற்ற இராட்சதர்களோவென்றால் உயிரிருந்தால் உப்புமாரி பிழைக்கலாம் இந்த சண்டை நமக்கு வேண்டாமென்று ஓடத் தலைப்பட்டார்கள்.

அதுகண்டு தேவசுந்தரனைவன் இரதத்தை நடத்தி இராட்சதாள் முன் கொண்டுவந்து இராட்சதாளை மடக்கிக்கொண்டு ஒரு வசனஞ் சொல்லுகிறான். அடா! இராட்சதர்களே? ஏன் வோடுகிறீர் இப்போதென்ன முழுகிப்போச்சுது நீங்கள் முன்னே நல்லயுத்தங்களிற் கைகண்டவர்களாச்சுதே உங்களை யிப்போ தேவர்கள் கண்டால் நகைப்பார்களே, ஸ்ரீ

ராமத்துரோகிகளாக வேண்டாம் ரோஷத்துவேஷத்தோடு நின்று யுக்தஞ் செய்யவேண்டும் வாங்களென்று ஒன்ருய்க் கூடி கத்தி கேடயம் ஈட்டி எறியீட்டியென்று சொல்லப்பட்ட ருஉ-ஆயுதங்களுடன் குசலவர்களை வளைத்துக்கொண்டு நாலு பக்கத்திலும் குடைசூழ்ந்தாலெப்படியோ, அப்படி அறுபது வெள்ளம் ராட்சதாளும் றிவ் றிவ்வென்று புற்றிலிருந்த ஈச ல்கிளம்பினு லெப்படியோ, அப்படிபோல் ஆயுதங்களை சுழட் டிவிட்டு கொண்டிருக்கும்போது தேவசுந்தரனும் வில்லில் அ னேக பாணங்களைச்சந்தித்து விட்டான் அதுகண்டு குசல வாள் அதிககோபங்கொண்டு அநேக பாணங்களை எடுத்துக் கடுகடுத்து வில்லிற்ருெடுத்து விடுத்து தங்கள்பேரில் வருகிற ஆயுத அஸ்திரங்களையெல்லா மறுத்துத் தள்ளினதுமன்றி ஐம்பது வெள்ளம் இராட்சதாளைக் கொன்று போட்டாரப் போது இரத்தாரோடத் தலைப்பட்டது. அதுகண்டு தேவசுந் தரன் வில்லிலனேக பாணங்களைச் சந்தித்துவிட்டான். அது கண்டு குசலவாள் அதிககோபங்கொண்டு அனேக பாணங் களை எடுத்துக் கடுகடுத்து வில்லில் தொடுத்து விடுத்து தங்கள் பேரில் வருகிற ஆயுத அஸ்திரங்களையெல்லா மறுத்துத் தள் ளினதுமன்றி ருO-வெள்ளம் இராட்சதாளையுங் கொன்றுபோ ட்டாரப்போது இரத்தாரோடத் தலைப்பட்டது. அதுகண்டு தேவசுந்தரன் வில்லிலனேக பாணங்களைச் சந்தித்துவிட்டா ன். குசலராஜன் நூறு அர்த்தசந்திராஸ்திரத்தை வில்லிற் சந்தித்துவிட்டு தேவசுந்தரனுடைய இரதஞ்சாரதி குதிரைக ளுடனே தும்சம்பண்ணினுன். அந்தச்சமயத்தில் குசலராஜ னனவன் இராட்சதப்படைகள் பேரிலும் இராட்சதப்படைத் தலைவர்பேரிலும் பாணப்பிரயோகம் பண்ணிக் கொல்லுகிற போது குசலராஜன் கையில் நூறு வெள்ளம் இராட்சதர்க ளுள் சில இராட்சதப்படைத் தலைவர்கள் தவிர மற்றவர்கள் லவன்கையில் மாண்டுபோனுர்கள். அப்போது இராட்சத தண்டில் பெரியசத்த மூண்டாயிற்று அந்தச்சத்தம் பரதாழ் வார்கேட்டு சாரதியை யதட்டினுர். உடனே இரதமுங் குசல ராஜன் முன்னுக்குவந்துவிட்டது.

அப்பேரதனுமார் மூர்ச்சை தெளிந்து இராட்சதாள் யுத் தம் பண்ணுகிறதையும் பரதமகாராஜன் வந்து விட்டதையுங் கண்டு பெருஞ் சந்தோஷமடைந்தார் அத்ததியில் சாம்புவந் தர் மூர்ச்சைதெளிந்து குசலவர்களுக்குப்பயந்து செத்துகிட க்கிற பிணங்களைவாரி மேலேபோட்டுக்கொண்டு கண்ணைமூடி சுவாசத்தைப்பந்தனஞ் செய்துக்கொண்டிருப்பதை அனுமா ரறிந்து நகைபுரிந்து சொல்லுகிருர். ஐயா சாம்புவந்தரே நீரிப்படிசெய்தால் மற்றவர்களெப்படி செய்யார் பரதமகாரா ஜனும் தண்டுடன்வந்து யுத்தம்பண்ணுகிருர். இந்தச்சமை

யத்தில் நாம் சும்மாயிருக்கப்போகாது இராமத்துரோகம் வந்து சித்திக்குமென்று சொல்லுகிற அனுமாரை சாம்புவந்தர் கண்ணைத்திறந்து பார்த்துச்சொல்லுகிறார். இலட்சுமணரைப்பார்க்கிலும் பரதமகாராஜன் சாமார்த்தியனே எல்லாம்பொழுதுபோனால் தெரியும் அந்தப்பசங்கள் நம்மைக்கண்டால் சும்மா விடமாட்டார்கள் முன்பின்பாராமல் பாணம்விட்டுக்கொன்றுகொண்டே யிருக்கிறார்கள். நான் வரமாட்டேனென்றான். அதுகேட்டு அனுமார் மனதிடஞ்சொல்லி கூட்டிக்கொண்டு பரதமகாராஜனைக் கண்டு சேவித்து ஆசீர்வாதங்கள்பெற்று ஒருவசனஞ் சொல்லுகிறார் கேளும், பரதமகாராஜனே? ஸ்ரீராமரைப்போல அழகும் வடிவுமுள்ளவர்களாயிருக்கிறார்கள். நாம் சந்துருஷ்டியுடனே அவர்களிடத்திற்போனால் உடனே பாணம்விட்டுக்கொல்லுகிறார்கள் நாம் நியாயஞ்சொன்னாலும் அவர்கள் கேளாரென்று சொன்னார்.

அதைப் பரதாழ்வார்கேட்டு சொல்லுகிறார் அந்த சிறுபிள்ளைகளத்தனைசூரரோ அப்படி சூரரானால் தனுர்சாஸ்திரவிதிப்படி யுத்தம் பண்ணுவார்களல்லவோ, அந்த சாமார்த்தியத்தை யொருக்கணநேரத்தி லறிகிறேன் பாரென்றுசொல்லி குசலவானைப்பார்த்து ஒருவசனஞ்சொல்லுகிறார். வாருந்தம்பி! சிறுபிள்ளைகளா? உங்கள் தாய் தகப்பன்பேரென்ன உங்கள் குலம்யாதொன்று எனக்குத் தெரியச்சொல்லுந் தம்பியென்று ரதுகேட்டு குசலன் சொல்லுகிறான். ஓ! இராஜனே? யுத்தத்திற்குவந்த பேருக்கெல்லாம் என் தாய் தகப்பன் பேரையும் எங்கள் பேரையுஞ் சொல்லிக்கொண் டிருக்கிறதோ, ஆனாலுஞ் சொல்லுகிறேன் கேளும் என் தாய்பேர் ஜானகியம்மாள், எங்களையர்பேர் வால்மீகரிஷி, எங்கள் குலம் எனக்குத் தெரியவராது என்பேர் குசலன், என்தம்பிபேர் லவன், என்றானதைக்கேட்ட பரதாழ்வார் யோசனை பண்ணிச் சொல்லுகிறார். வாருந்தம்பி குசலனே உன்தாய்பேர் ஜானகியம்மாள் என்று சொன்னபடியினாலே உங்களுடனே யுத்தம் பண்ணமாட்டேன் என்னுடைய சேனைகளையுஞ் சகோதரர்களையு மற்றுமுள்ள உறவின்முறை கூட்டங்களையு மெழுப்பிக் கூட்டிக்கொண்டுபோ யஸ்வத்தை யழைத்துக்கொண்டு அயோத்திக்குப்போய் யாகஞ்செய்வித்துக் கொள்ளுகிறேன் நீங்களுந்தாயுடன் பிள்ளையாய்ப்போய்ச் சேருங்களென்றார். அதைக்கேட்ட குசலன் ஒருவசனஞ் சொல்லுகிறான். ஓ! இராசனே? நல்லவிசேஷஞ் சொல்லவந்தாய், உன்தம்பி சத்துருக்கன் என்தம்பியை மூர்ச்சையாக்கி இரதத்திற் கட்டிக்கொண்

டு வந்துவிட்டான் அந்தச் சங்கதி என்தாயாரறிந்து என்னை யழைத்துச்சொன்னது என்னவென்றால், உன்தம்பியை யாரோ ஒரு அரசன் மூர்ச்சையாக்கி கட்டிக்கொண்டு போய்விட்டானும் அவனையுஞ் செயித்து அவனுக்கு உபபலமாக வருகிறவர்களையுஞ் செயித்து உன்தம்பியை விடுவித்துக்கொண்டுவா மகனே யென்று அனுப்பிவைத்தபடியினாலே அந்தப்படியே தான் உன் தம்பி சத்துருக்கனை செயித்து அவனுக்கு உபபலமாய்வந்த இராஜாக்களையுஞ் சேனைகளையுங் கொன்றேன் உன்னையுங்கொன்று இன்னம் வரப்பட்டவர்களையுங் கொன்று விட்டுப்போவேனே யொழிய மற்றப்படி 'யோசிக்க வேண்டாமென்றான். அதைக்கேட்ட பரதமகாராஜன் குலுங்க நகைத்துச் சொல்லுகிறார். வாருந்தம்பி குசலனே? என் தமையனுத்தரவின்படி உன்னையும் உன்தம்பிலவனையும் கைப்பிடியாகப் பிடித்துவரச் சொன்னபடியினாலே நீங்கள் தடையன்றி வந்தாலாச்சுது வராவிடில் உங்களை மூர்ச்சையாக்கிக்கொண்டு போவேன் பாரென்றார்.

அதைக்கேட்ட குசலராஜனுக்கு அதிக கோபமாகி பரதாழ்வானைநோக்கி ஒருவசனஞ் சொல்லுகிறான் ஓ! இராஜனே? நல்லவசனஞ் சொல்லவந்தாய் உன் சொற்படி எங்களைப்பிடிக்கவந்தபேரெல்லாம் உனக்குமுன் மாண்டுகிடப்பதை நீ பார்க்கவில்லையோ உங்களுக்குச்சேனைகள் மிச்சமாயிருக்குதென்று ஓட்டைத் தப்பட்டை தமுக்குகளை யடித்துக்கொண்டு இவ்விடத்திலோடி வருகிறதுஞ் சாகிறதும் உங்களுக்கொரு வீரியம்போற் காணுகிறதென்றான். அதைக்கேட்டபரதாழ்வார் ஏதடா குசலன் நம்மையெண்ணுமற் பேசுகிறான். இவனுடைய ஆண்மைதானென்னவென்று இவனைக்கொன்றாலுந் தோஷமில்லை அப்படிக்கொன்றால் நமது தமையன் மனதிற்கு ஆயாசம் வருமேயென்று யோசனைபண்ணி குசலவனைப் பார்த்து ஒரு வசனஞ்சொல்லுகிறார். அடா! குசலனே? நாங்கள் ஒரு ஓட்டைத் தமுக்கை யடித்துக்கொண்டு ஓடிவருகிறதுஞ் சாகிறதும் எங்கள் சாமார்த்திய மென்றல்லவோ சொல்லுகிறாய், இப்போது உன் தம்பியைக்கூட்டிக்கொண்டு தாயுடன் பிள்ளையாய்ப்போய்ச்சேர் இல்லாவிடிலுங்களைக் கொன்றுவிடுவேன் பாரென்றான்.

## குசலராஜனுக்கும் பரதமகாராஜனுக்கும் யுத்தம்.

கலிவிருத்தம்.

மண்ணும்விண்ணுங் கலங்கவறிச்சிலை
எண்ணுதற்கரிய தாகவளைத்தலால்
கண்ணுதலி லெழுந்தகனலென
பண்ணுவர்களும் பார்த்துவெருண்டனர்.

அதைக்கேட்ட குசலராஜன் கண்களிரண்டுஞ் செவ்வானம்போற் சிவக்க காலாக்கினி ருத்திரனைப்போலச்சீறி வில்லை வளைத்து நாணிபிகிந்து அநேக அஸ்திரங்களையெடுத்து கடு கடுத்து வில்லிற்றொடுத்து விடுத்து பரதமகாராஜனை நோக வெய்தான் அதுகண்டு பரதாழ்வார் பாலன் பாணமிஞ்சினானென்று வில்லையெடுத்து நிறுத்தி அநேகபாணங்களைச் சந்தித்து பிரயோகம்பண்ணின ரது அவையத்திலிருந்த நாகசற்பம்போற் சீறிக்கொண்டு வரும்போது குசலராஜன்கண்டு அதிக சீக்கிரத்தில் ௨௫-வாய்வாஸ்திர மெடுத்துவிட்டு பரதனுடைய அஸ்திரத்தை யறுத்துத் தள்ளி அதனமாக நூறு திவ்வியாஸ்திரத்தை வில்லிலேசந்தித்துப் பிரயோகம் பண்ணிவிட்டான். அதுகண்டு பரதமகாராஜன் மகாகோபமாகி ௧௨௰-திவ்வியாஸ்திரத்தை யெடுத்து வில்லில் தொடுத்து விடுத்துக் குசலராஜன்விடுத்த நூறு திவ்வியாஸ்திரங்களையு மறுத்து அதனமாய் ௫௰-திவ்வியாஸ்திரமெடுத்து வில்லிற் சந்தித்து விட்டு குசலராசன் கைகாலாட வொட்டாமலும், வில்லை பிடிக்கவொட்டாமலும் பாணங்களை யெடுக்கவொட்டாமலும், அங்கே நிற்கவொட்டாமலும், இரண்டுநாழிகை பரியந்தம் பிரமிக்கப்பண்ணி பின்னையுமிரண்டு திவ்வியாஸ்திரங்களை விட்டு குசலராஜனுடைய சரீரங்களையெல்லாஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டு இரண்டு சிங்கமுகாஸ்திரத்தை யெடுத்துவிட்டு விட்டான். அந்த சிங்கமுகாஸ்திரங்கள் வில்லைவிட்டு விடுபட்டு சிங்கத்தைப்போற் சீறிக்கொண்டு அதிக வேகத்துடனே வந்து குசலனுடைய வில்நாணியைப் படீலென்றறுத்து குசலனுடைய நெற்றியிற்பாய்ந்து உருகிப்போகவே உதிரவெள்ளம் ஆறுபோயோடிற்று. அப்போது குசலராஜன் பாணம்பட்டு நிர்வாகம்பண்ண மாட்டாமல் வில்லைநழுகவிட்டு அம்மா சீதா வென்று புலம்பி பூமியில்விழுந்து மூர்ச்சை யடைந்தான்.

அதுகண்டு அனுமார், சாம்புவந்தர் முதலான பேர்களுந் துயரப்பட்டார்கள். பரதமகாராஜன் சந்தோஷமா யிருக்கிறதை யொழித்து இரதத்தைவிட்டுக் கீழேகுதித்து வில்லையுங் குசலனையு மெடுக்கவோடிவந்தார். அந்தச்சமயத்தில் இராட்சதாளுடனே யுத்தம்புரிந்துக் கொண்டிருக்கும் லவன்வந்து பரதமகாராஜனுக்குங் குசலன் மூர்ச்சையடைந்திருக்கிற யிடத்திற்கு மத்தியில் சரக்கூடம்போட்டு பரதனைமடக்கி விட்டு குசலனையெடுத்து மூர்ச்சை தெளியவைத்தான். அதுகண்டு அனுமார், சாம்புவந்தர், இலட்சுமணருடைய பலாபலத்திற்கு பரதருடைய பலாபலமெவ்வளவென்றிருந்தோமே இப்போதிவருடைய பலாபலந் தெரியவந்தது பரதனுடைய பலாபலத்துக்கு குசலன்கூட எதிர்நின்றுபோராடமாட்டான் போற்காண்கின்றது எல்லாமின்னமரைநாழிகையிற் றெரியவரும் நாம் மௌனமாய் இப்போதிருக்கக்கூடாதென்று பரதருடனே கூடிக்கொண்டுபோனார்கள். அப்போது பரதமகாராஜன் தேரிலேறி வில்லிலநேக கடூரமானபாணங்களைச் சந்தித்துவிட்டு சரக்கூடத்தையறுத்தெரிந்தார். அதுகண்டு லவன் உக்கிராகாரத்துடன் வில்லையெடுத்துநிறுத்தி குணத்தொனி பண்ணி வில்லி லநேகபாணங்களைப்பூட்டி பரதமகாராஜருக்கும் அனுமாருக்கும் சாம்புவந்தருக்கும் லக்குபார்த்து விட்டு விட்டான். உடனே பரதமகாராசன் சிலபாணங்களைவிட்டு தங்கள்மூவர்பேரிலேயும்வருகிற பாணத்தையெல்லா மறுத்துப்போடவே, அப்போதனுமாருஞ் சாம்புவந்தரும் பரதமகாராசனை மெச்சினார்கள்.

அதுகண்டு லவன் பல்லை நெறநெறவென்று கடித்து அதிக கோபத்துடனே வில்லில் க-ம-ஈ-கூ-பதினாயிரம் நூறாயிரம் கோடி சங்கம் மகாசங்கம் அற்புத நிற்புதமென்று ஆச்சரியப்படத் தக்கதாக கணக்கிலடங்காத பாணங்களைச் சந்தித்து விட்டுவிட்டான். உடனே பரதமகாராசன் வில்லில் அநேக ஸ்ரீராமபாணங்களைத் தொடுத்து அறுத்துப்போட்டு அதனமாய் ஐந்துபாணங்களைவிட்டு லவன்பிடித்திருந்த கைவில்லையுங் கண்டித்து பத்தலாய்க்கிழித்துப்போட்டு லவனுடைய சரீரமெல்லாஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டான் அதனாலே அவன் மிகவும் நொந்து தைரியம்விடாமல் மனதைத் தைரியப்படுத்திக்கொண்டு வில்லிலே கடூரமா யிருக்கப்பட்ட பாணங்களைச் சந்தித்துவிட்டு பரதமகாராசனைக் கைகாலாட

வொட்டாமலும் வில்லைப்பிடிக்க வொட்டாமலும் வில்லில்பா ணங்களைத் தொடுக்கவொட்டாமலும், செய்துவிட்டு பரதமகா ராசனுடைய சரீரமெல்லாஞ் சல்லடைக்கண்களாகத் துளைத் துவிட்டானதனாலே பரதமகாராசன் மிகவும்நொந்து தைரி யம்விடாமல் சிங்கமானது குகையிலிருந்து சீறிக்கொண்டுவந் தாலெப்படியோ அப்படிபோல அதிக உக்கிரா காரத்துடன் சீறி ஸ்ரீராமபாணங்களை வில்லில் தொடுத்துவிடுத்து லவனு டையவில்லை இரண்டுதுண்டாய் உடைத்தெரிந்து அவன்மா ர்பையும் பத்தலாய்க் கிழித்தெறிந்து போட்டார் அப்போது லவன் கைவில்லை நழுவவிட்டு அம்மா சீதாசீதாவென்று பூமி யில்விழுந்து மூர்ச்சையடைந்தான். அதுகண்டு தேவர்களெ ல்லாம் துயரமானார்கள். பரதமகாராசன் சந்தோஷமாகினான் அனுமாரும், சாம்புவந்தரும், குசலன் மூர்ச்சை தெளிந்தி ருக்கிறான் எல்லாம் பொழுதுபோனால் தெரியவருமென்று மவுனமாயிருந்து விட்டார்கள்.

அதுகண்டு குசலராசன் சீதாலட்சுமியுடைய பரம கிரு பையால் எழுந்து பிரசண்ட கோதண்டத்தைக் கையிலெடுத் து குமுமுகுவென்று குணத்தொனிபண்ணி வில்லிலே க-ம-ா சூ-மசூ-க00000-கோடி சங்கம் மகாசங்கம் அற்புதம் நிற்புத மென்று சொல்லப்பட்ட கணக்கிலடங்காத பாணங்களைப் பூ ட்டி சாமம்வரையில் மழைகாலத்தில் மாரிபொழிவதுபோல் கட்டுகட்டாயுருவி கைசலியாமல் விட்டுவிட்டான். அந்தபா ணங்கள் வில்லைவிடுபட்டு புற்றிலிருந்து கிளம்பும் ஈசலைப் போல் ஒன்றின்மேலொன்றாய் சிடசிடவென்ற தொனிகளுட னே அக்கினிபொறிகள் சிதறும்படியாய் அதிவேகத்துடனே வந்து பரதமகாராசன்பேரில் வருகையில் அப்போது பரத மகாராசன் தன்பேரில்வருகிற அஸ்திரங்களை யெல்லாமறுத் து அதனமாய் ரு-ா-பாணத்தை யெடுத்துவிட்டான். அதுக ண்டு குசலராசன் ா-நாராசபாணங்களைவிட்டு அறுத்துத்தள் ளி அதனமாய் ா-அர்த்த சந்திராஸ்திரத்தையெடுத்து வில் லிலேதொடுத்து கடுகடுத்து விடுத்து கைகாலாட வொட்டாம லும், க-நாழிகைபரியந்தம் பிர்மிக்கச்செய்து அதனமாய்-உ பாணம் விட்டுவிட்டான். அந்தபாணங்கள் பரதருடைய நெ ற்றியில்பட்டு உதிரவெள்ளம் ஆறுபோடத் தலைப்பட்டது அதனாலே பரதர் மிகவாய்நொந்து கைவில்லை நழுகவிட்டு தேரில்விழுந்து ஸ்ரீராமாராமாவென்று மூர்ச்சையடைந்தார்,

அப்போது தேவர்களெல்லாம் துயரமானார்கள். குசலராஜன் அதிகசந்தோஷமுற்று தம்பிலவனை வாரியெடுத்து மூர்ச்சை தெளிவித்தான், லவனுஞ் சீதாலட்சுமியுடைய அபாரகிருபாகடாட்சத்தினாலே மூர்ச்சை தெளிந்து எழுந்து இருவரும் இராட்சதாள்பேரில் பாணங்களைப் பிரயோகம் பண்ணினார்கள்.

அதுகண்டு அனுமார் சாம்புவந்தர் ஒருபெரிய ஆலவிருட்சத்தை மடமடவென்று பிடுங்கி அடியும் நுனியும் தரித்துப்போட்டு நடுத்தண்டை தண்டாயுதமாக ஒருகையிற் பிடித்துக்கொண்டு குசலவர்கள் முன்னேவந்து நின்றுக்கொண்டு அனுமார் ஒருவசனஞ் சொல்லுகிறார். அடா! குசலவர்களே? ஏன் தலை கீழாய் விழுந்துபோகிறீர்கள் கையிலாகாத சிலபேரைக் கொன்றோமென்று கெர்வம் வேண்டாம் அந்தத்துள்ளலை ஒருக்ஷணநேரத்தில் காட்டுகிறேன் பாரடா, இதோ என்கையிலிருக்கிற விருட்சத்தைப் பார்த்தாயோ, நாங்கள் எத்தனையாய்ச் சொன்னாலுங் கேளோமென்றீர்கள். ஸ்ரீமந்நாராயணராய் விளங்கப்பட்ட ஸ்ரீராமர் வரும்படியாய்ச் செய்கிறீர்கள் அவர் வந்தாரேயானால் அவர் முன்னின்று எதிர்த்து போராடமாட்டீர்கள் உங்களுடையபாணம் அவரை யென்னசெய்யக்கூடும் ஒன்றுஞ் செய்யமாட்டாது எங்கள் வார்த்தையைக்கடவாமல் அஸ்வமேதக் குதிரையை விட்டால் நாங்கள் எங்களுடைய ஜனங்களை எழுப்பிக்கொண்டுபோகிறோம் இல்லாவிடில் ஸ்ரீராமரிவ்விடம் வருவார் நாங்களுங்களை ஜெயிக்கமாட்டோமென் றெண்ணாதீர்கள்.

அதுகேட்டு குசலராஜன் லவனைநோக்கி ஒருவசனஞ் சொல்லுகிறான். வாரும், தம்பி லவனே? செங்குரங்குங் கருங்குரங்குஞ் சொன்னவார்த்தையைக் கேட்டாயோ, நாம் எத்தனைபாணம் விட்டுக்கொன்றாலும் மறுபடியும் எழுந்துவந்து யுத்தம்பண்ணுகிறார்கள். இவர்களுக்குச் சாவுதானில்லையோ, எண்ணுஞ் சிரஞ்சீவியோ, தெரியவில்லையென்றான். அதுகேட்டு லவன் சொல்லுகிறான் வாரும் அண்ணாவே, காட்டிலே வாசம்பண்ணப்பட்ட குரங்குகளுக்கு எண்ணுஞ் சிரஞ்சீவியேது, காட்டிலே வாசம்பண்ணின வானரங்களுக்கு தலைமையான குரங்குகள் இதுகளுக்கு ஸ்ரீராமர் பஷையைக் கற்றுக்கொடுத்து தன்னிடத்தில் சேவகத்துக்கு வைத்துக்கொண்டிருக்கிறான்போற் காண்கிறதென்றான். அதுகேட்டு குசலராஜன் சிறுபிள்ளையானபடியினாலே எத்தனைவேதசாஸ்திரங்

களைப் படித்திருந்தாலுஞ் சிறுபிள்ளைகளுடைய பாலிய புத்தியினாலே அனுமாரையும் சாம்புவந்தரையும் பார்த்துச் சொல்லுகிறானடாவானரர்களே கேளும் நாங்கள் பிடித்த குதிரையை விடுவிக்க அரியரப்பிர்மாதிகள் வந்தாலும் எதிர்த்து யுத்தம்பண்ணுவோம் தெரிந்துக்கொள்ளுங்கள் நான் உங்களை எத்தனைதரங் கொன்றாலும் உங்களுக்கு வெட்கமில்லாமல் எழுந்தெழுந்து யுத்தத்திற்கு ஓடிவருகிறீர்கள் நீங்கள் குரங்கென்றல்லவோ, அசகாயமாய் விட்டுவிட்டோம் முன்னே உங்களைக் கொன்றுபோட்டு பின்பு இராட்சதாளைக் கொன்று மேலோகமனுப்புகிறோம் பாரடாவென்றான்.

அதுகேட்டு அனுமார் குசலனைப்பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறார். உன்னைப்போலும், உன்தம்பி லவனைப்போலும், ௯அ-குசலவாள் வந்தாலும் எங்களிருவரையும் செயிக்கமாட்டார்கள். நாங்கள் வேணுமென்றால் நீங்கள் மிகவுஞ் சிறு பிள்ளைகளென்றும் ஸ்ரீராமருடைய வார்த்தைக்கஞ்சுகிறோம், இல்லாவிடில் ஒருகைகுத்தினால் உங்களை யமலோகமனுப்பிவிடுவோமென்றார் அதற்குக் குசலராஜன் தம்பி லவனை நோக்கி, ஒரு வசனஞ்சொல்லுகிறான். வாருந்தம்பி லவனே செங்குரங்குங் கருங்குரங்கும் சொன்னவார்த்தையைக் கேட்டாயோ, நீ கருங்குரங்குடன் சாக்கிரதையா யுத்தம்பண்ணி யமலோகமனுப்பிவிடும் நான்செங்குரங்குடன் யுத்தம்பண்ணுகிறேனென்று அதிக கோபத்துடனே தன் வில்லிலே அனேக நாராசபாணஞ் சந்தித்து விட்டுவிட்டான். அந்த நாராச பாணங்கள் வில்லைவிட்டு வெளிப்பட்டு காலக்கோடி விஷத்தைப்போல் சீறிக்கொண்டு அதிகவேகத்துடனே அனுமார் பேரில் வருகிறபோது அனுமாரானவர் தன் கையிலிருக்கிற விருட்சத்தினாலே அடித்துப் பாணங்களை வந்தவழி போனவழி தெரியாமலோட்டிவிட்டார்.

அதுகண்டு குசலராஜன் கடுங்கோபங்கொண்டு ௰-திவ்வியாஸ்திரத்தையெடுத்துக் கடுகடுத்து வில்லிலே தொடுத்து விடுத்து அனுமார் பிடித்திருந்த விருட்சத்தை தூள் தூளாக்கிப்போட்டு அதனமாய் ௫-நாராசபாணமெடுத்து அனுமார் மார்புக்கு லக்குபார்த்து விட்டுவிட்டான். அதுகண்டு அனுமார் கோபங்கொண்டு மார்பிற்பதிந்த அஸ்திரங்களைப் பிடுங்கிப் போட்டு யானைதேர் பரிசேனைகளை வாரிவாரி குசலராஜன்பேரில் விட்டெறிந்துகொண்டே யிருந்தார். அதுகண்டு குசல

ராஜன் அனேக பாணங்களை விட்டு அவைகளையெல்லாம் தும்சம்பண்ணிப்போட்டு ஒருசத்தியை யெடுத்து பூசை நைவேத்தியங்கள்செய்து விட்டுவிட்டான். அந்த சத்தியானது வில்லில் நின்றுவிடுபட்டு அண்டரண்டமதிர, அண்டத்திலுள்ள தேவர்களெல்லாம் நடுங்க ஆலகாலவிஷத்தை குபீல்குபீலென கக்கிக்கொண்டு அக்கினிச் சுவாலையை எங்கும் வீசிக்கொண்டு அதிவேகத்துடனே அனுமார் எங்கேயெங்கேயென்று வருகிறபோது அனுமார்கண்டு ஏதடா நம்மைக்கொல்லவேசத்தியை விட்டானென்று மனதில் கருதினவராய் கையை ஆகாயத்திலே ஓங்கிக் கிறுகிறுவென்றுசுழட்டி சத்தியின்பேரிலே ஒரு குத்துவிட்டார். அந்த சத்தியானது வந்த வழிதெரியாமல் அடிபட்டு முறிந்துபோய் பின்னும் மந்திரத்தினாலே உருவாகி அதிக வேகத்துடனேவந்து அனுமார் மார்பிலே தடாலென்று பாய்ந்து உருவமாட்டாமல் உருகிப்போய்விட்ட தப்போது அனுமார் ஸ்ரீராமாராமாவென்று வாய்விட்டலறி பூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தார்.

அதுகண்டு குசலராஜன் சந்தோஷமாகி சாம்புவந்தர்பேரிலேதிரும்பி லவனுடனேகூடி பாணங்களைவிட்டு அடிக்கிறபோது சாம்புவந்தர் தாளமாட்டாமல் கையுதறிக்கொண்டு பூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தார். அப்போது குசலவாள் மிகுந்த சந்தோஷமடைந்து அனுமார் சாம்புவந்தர் இருவரையும் வந்துபார்த்து சுவாசம் இல்லாததைக்கண்டு ராட்சதாள்பேரிலே முனைந்து யுத்தம்பண்ணுகிறபோது இராட்சதாளும், இராட்சதப் படைத்தலைவர்களும் முனைந்து, யுத்தம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். அப்போது இரண்டு இராட்சதாள் தலைமீதில் கையைவைத்துக் குய்யோமுறையோவென்றழுதுக்கொண்டு அயோத்தியை நாடி அதிகவேகமாயோடி ஸ்ரீராமர் கொலுமண்டபந்தேடி அவரைக்கண்டு மிகவணக்கங்கொண்டு அவருடைய பாதத்தில்விழுந்து சேவித்து எழுந்து நின்று சொல்லுகிறார்கள் ஓ! சுவாமி? பரதமகாராஜனும் சேனைகளும் மூர்ச்சையாய்ப்போனார்கள் கொஞ்சம் இராட்சதாள் மாத்திரம் குசலவாளை மடக்கிக்கொண்டு யுத்தம்பண்ணிக்கொண்டிருக்கிறார்கள் அந்த உ-சிறு பிள்ளைகளை ஜெயிக்க அரியரப்பிர்மாதிகளாலேயும் ஆகாதென்றார்கள்.

அதுகேட்டு ஸ்ரீராமபத்திரசுவாமி, அடித்துமோதி பூமியிலேவிழுந்து அலறியெழுந்து தம்பி பரதா இலட்சுமணா!

என்னைத்தனியேவிட்டு சிறுபிள்ளை குசலவர்களாலே மூர்ச்சை யானீர்களோ, உங்கள்கையில் பலமில்லாமற் போச்சுதோ உங் கள் புஜபலபராக்கிரமங்களை காட்டினால் பாலர்கள் பயப்படு வார்களென்று அஞ்சியவர்கள் கையால்மூர்ச்சையானீர்களோ உங்கள்பலத்துக்கு அரியரப்பிர்மாதிகள் தானீடோவென்று க திழந்த பசுவைப்போலவே கதறிக்கதறி யழுதுக்கொண்டிருந் தார் அவர் யாரென்றால் பல்லாயிரங்கோடி அண்டத்தையும் கெற்பத்தில் வைத்து இரட்சிக்கப்படாநின்ற பரப்பிர்மமாய் விளங்கப்பட்ட ஸ்ரீராமரானவர். அப்போது அவர் துக்கத் தை விபீஷணரும் சுக்ரீவனுமாற்றினார்கள். அந்தப்புரத்தி லே கௌசலை கைகேசி சுமித்திரை சகலருங்கேட்டு, பரதரு க்கு துக்கங்கொண்டாடினார்கள். அந்தச் சமயத்தில் ஸ்ரீரா மர் விபீஷணரையும் சுக்ரீவரையும் பார்த்து ஒரு வசனஞ்சொல் லுகிறார். விபீஷணரே சுக்ரீவரே கேளுங்கள், நாம் மூன்று தம்பிமாருடன் பிறந்து விஸ்வாமித்திரருடைய யாகத்தை அ ழித்த தாடகை சுவாகுவைக்கொன்று, மாரீசனை ஓட அடித்து அகலிகைக்கு மோட்சங்கொடுத்து, ஜனகன்வைத்திருந்த ஒரு வராலும் வளைக்கப்படாத வில்லை உடைத்தெறிந்து, ஜானகி யை மணம்புரிந்து பரசுராமனைப் பங்கப்படுத்தி வில்லைப் பறி த்துக்கொண்டு கச-வருஷம் வனவாசஞ்செய்ய அவ்விடத்தி லிருந்து பஞ்சவடியில் போயிருக்கச்சே என் தம்பி, இலட்சு மணனை சூர்ப்பநகை தோதகம்பண்ண அந்த சூர்ப்பநகைக்கு மூன்றுக்கினையுஞ்செய்து, அவளாலே கர தூஷணனைக்கொன் று அப்புறம் லங்காதிபதியாகிய இராவணன் ஜானகியை எடு த்துக்கொண்டுபோய், அசோகவனத்தில் வைத்திருக்கநானும் தம்பி இலட்சுமணருஞ் சீதையைத் தேடிக்கொண்டுபோய் அ னுமார் சுக்ரீவனைச்சினேகம்பண்ணி வாலியைக்கொன்று சமு த்திரத்தை நளனாலே யடைத்து எஉ-வெள்ளம் வானரசேனை யுடனே இலங்கைக்குள் புகுந்து இராவண சம்மாரமுடிப்பி த்து அதிகாயன் முதலான உது-வெள்ளம் இராக்ஷதாளைக் கொன்று ஜானகியை சிறைமீட்டி அயோத்திக்குவந்து பட் டாபிஷேகராய்ப் பட்டந்தரித்துக்கொண்டு ராஜரீகம் பண்ணு கிறபோது சதகண்டராவணனென்றும் கஉ0000-வெள்ளம் இராக்ஷதாளுடனே வந்து யுத்தம்பண்ணினார்கள். அவர் களை ஜானகி கொன்றுபோட்டு ஒருவரும் நிகரில்லாமல் ஜெய ங்கொண்டாடி நமக்கு ஜானகிவனம் போகவே இவ்விட மும்

மாரிபொழியப்பட்டமழையும்மட்டிட்டு விளைவுமில்லாமல் குடிகளும் நொந்து மண்மாரிபொழிந்து பெருங்காற்றடித்து அரண்மனை ஆஸ்தானங்களு மிடிந்து யானைகுதிரை சேனைமடிந்து வீதிகள்தோறும் பாழடைந்தது போதாமல் அஸ்வமேதயாகம் பண்ணுகிறதற்கு குதிரையைவிட்டு பிரதட்சணம்பண்ண அனுப்பிவைத்தோம் அந்த அஸ்வத்தை உ-சிறுபிள்ளைகள் பிடித்து நம்முடைய சேனைகளையுந் தம்பிமார்களையுங்கொன்று போட்டார்கள். இது நமக்கு அபஜெயகால மல்லவோ வந்தது. இப்போதிதற்கு என்னசெய்யலாம் விபீஷணு சுக்ரீவாவென்றார்.

அதைக்கேட்ட விபீஷணருஞ் சுக்ரீவருஞ் சொல்லுகிறார்கள். ஓய் சுவாமி, முன்னாலே சீதாலட்சுமியை இராவணன் பர்ணகசாலையோடு பேர்த்துக்கொண்டுபோய் அசோகவனத்தில் வைக்கவே அந்த அம்மனழுத கண்ணீராலே லங்கை தீப்பட்டுப்போச்சுது அந்தமகாலட்சுமியான சீதையம்மன்வனம்போய் அழுதகண்ணீரால் அயோத்தியாபுரிபட்டணம் பாழடைந்து பரதரும் இலட்சுமணரும் மாண்டுபோனார்களென்று அதிக விசனத்துடனே சொன்னார்கள்.

அதுகேட்டு இராட்சத சிரேஷ்டனான மாலியவான் ஒரு வசனஞ் சொல்லுகிறான். வாருஞ்சுவாமி பரப்பிர்மமே நீர் லோகத்து மனிதரைப்போல் இப்படிவிசனப்படலாமோ கைலாயத்தில் பார்வதிசமேதராய் விளங்கப்படாநின்ற காலகண்ட திரிசூலநேத்திர முடையவர் நீரல்லவோ! வைகுந்தத்தில் மகாலட்சுமி சமேதராய் விளங்கப்படாநின்ற ஸ்ரீமந்நாராயணர் நீரல்லவோ! பிரம்மலோகத்திலே சரஸ்வதி சமேதராய் விளங்கப்படா நின்ற அந்த பிர்ம தேவர் நீரல்லவோ! அப்படியிருக்க! உமக்கு பெண்சாதி பிள்ளைதானேது சகோதராள் தானேது தாய்தந்தைதானேது நீர் ஆணுக்கு ஆணுமல்ல பெண்ணுக்கு பெண்ணுமல்ல அனாதரக்ஷகராய் விளங்கப்பட்ட பரஞ்சுடர் நீரல்லவோ! தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் ராவணன் கும்பகர்ண னிவர்களாலே உண்டாகிய துன்பத்தை நீக்கும்பொருட்டு தசரதமகாராஜனுடைய வயற்றிலவதரித்த தீனதயாளரட்சகர் நீரல்லவோ! தேவர்கள், முனிவர்கள், இராட்சதாள், மானிடர்கள், கண்ணாரக்கண்டு சேவித்து காட்சி காணக்கிடையாத திருப்பாதாரவிந்தத்தைக் காணும்படியாக கிருபைபெற்ற நாங்கள் என்னபுண்ணியம் பண்ணி

ஞேமோ சுவாமி இந்தலோகநடத்தைவிட்டு யாகம் நிறைவே றுங் காரியத்தைப்பாருஞ் சுவாமியென்ருன். அதைக்கேட்ட ஸ்ரீராமருக்கு பூர்வக்கியானம்வந்து இனி நடக்கப்போகிற காரியங்களெல்லாந் தெரிந்தவராய் மனதிலதிக சந்தோஷமடைந்தார். உடனே பூர்வக்ஞானம் மறந்துவிட்டது இப்பால் ஸ்ரீராமர் மால்யவானுக்கு கிருபைகூர்ந்து சுக்ரீவனைப் பார்த்து வாராய் சுக்ரீவரே நம்முடைய தண்டுதளத்தை யெல்லாம் தயார்பண்ணி பட்டணத்தி லுண்டாகிய அறைஞாண்கயறுகட்டின பிள்ளைமுதல் வில்லெடுத்து யுத்தத்திற்கு வரும்படியாய் தண்டோருபோடும் சுக்கிரீவ ராஜனே யென்று உத்திரவுபண்ணினர்.

அப்படி திருவாய்மலர்ந்தருளிய வுடனே சுக்ரீவனெழுந்து சுவாமியைச்சேவித்து மதனென்னப்பட்ட சேனுதிபதியை யழைத்து அயோத்தியிலுள்ள அறைஞாண்கட்டின பிள்ளை முதல்.ஆயுதங்களைக் கையிலெடுத்துக்கொண்டு வரும்படி தண்டோரு போட்டுவையுமென்று உத்தரவுபண்ணி இராஜதண்டிருக்குமிடம் போய் தண்டைவெளியே கொண்டுவந்து நிறுத்தி கன்னமதங் கபோலமதம் கரடமதமென்று சொல்லப்பட்ட கன்னங் கரேலென்றிருக்கும் கருமலைக்கு கைகால் முளைத்து வந்ததைப்போ லுள்ள யானைகள்பேரில் அம்பாரி சவுடால்கள் வைத்து யானைகளுக்கு எண்ணையிட்டு வர்ணந்தடவி சங்கிலி இருப்புலக்கைகள் கையிற் கொடுத்து இராஜமன்னர்கள் ஆபரணம் பூண்டு ஏறிக்கொண்டு வரிசைவரிசையாக பவுஞ்சிட்டு கூடு-வெள்ளம் இராஜமன்னர்களும் இரதங்கள் அச்சுச்கு யெண்ணையிட்டு மச்சுக்கு வர்ணந்தீர்த்து குத்துக்கால் கொடுங்கைசட்டம்பரப்பி குடை கொடை சீலைகளிட்டு டால்துவசங்கட்டி மேகமண்டலத்தை யளாவியிருக்கப்பட்ட இரதங்களின்பேரில் இராஜமன்னர்களேறி வில்லைக்கையில் பிடித்துக்கொண்டு கூடு-வெள்ளம் இராஜமன்னர்கள் புறப்படச்செய்தார்! அதன்பின்னே குதிரைகளானது சூரியபகவானுடைய இரதத்திற்கட்டிய பச்சைப் புரவிகளுக்கு மேலாகியும் வாய் வேக மனோவேகத்திலும் மிஞ்சினதாயு மிருக்கப்பட்ட புரவிகள்பேரிலே கல்லணைகள்வைத்து நல்லவீரரா யிருக்கப்பட்ட கஅுடு-வெள்ளம் இராட்சதாள் ஏறிப் புறப்படச் செய்தான் அந்தவீரர்களானவர்களும் ருருடு-சிங்கத்தினுடைய பலாபலம் பொருந்தினவர்களாய் அதன்பின்னே கால் பலமான

சஉ௰- வெள்ளம் இராட்சதாளையும் கஙஉ-ஆயுதங்களையும் பி டித்துக்கொண்டு புறப்படச் செய்தார்கள்.

அப்போது மதனென்னப்பட்ட சேனாதிபதி பட்டணத் திலுள்ள ஆண்பிள்ளைகளையும் தேர் பரிசேனைகளையுந் தயார் படுத்தி இராட்சததண்டுடனே கொண்டுவந்து சேர்த்து விட் டான். அதெவ்வளவென்றால், இலட்சத்தி ருகூ-அக்ரோணி சேனைகள் அதுவுமல்லாமல் அடிமானங் குமுறினாற்போலஇ ராயபேரி,ரணபேரி,வெங்கலபேரி, கர்ணபூரி, தப்பட்டை,புள் ளாங்குழல், மத்தளம் ருத்திரவீணையென்று சொல்லப்பட்ட ஙஉ-சங்கீத வாத்தியங்களுந் தாம்தாமென்று முழங்கிக் கொ ண்டு, முன்னே ஒருயானையின் பேரில் கருடக்கொடி பிடித்து சேனைகளானது புறப்பட்டசத்தங்கேட்டு ஸ்ரீராமபத்திரசுவா மி கிரீடந்தரித்து புஜகீர்த்தியணிந்து முதுகிலிரண்டுபக்கத் லும் அம்புறுப்பொதிகட்டி காதிலேகவச குண்டல மணிந்து மார்புக்கு முத்துமாலைமோகனமாலை இரத்தினபதக்கந் தரித் து பாதத்தில் வீரகண்டாமணியணிந்து மல்லிகைமுல்லை இ ருவாட்சி பாதிரிபுன்னைமருக்கொழுந்து, வெட்டிவேர் வில்வ ம் துளசிவெண்டாமரை அலரிபாரிசாதம் இப்படிசொல்லப் பட்ட வாசனை பொருந்திய புஷ்பங்களைக் கண்டமாலையாக த்தரித்து கையில்கோதண்டத்தைப்பிடித்து ஈகூ-கன்னியர் பு டைசூழ, மத்தளம் ருத்திரவீணை புள்ளாங்குழல் தப்பட்டை சங்கீத மேளவாத்தியங்கள்முழங்க, வேசியர்கள் நடனமாட, கவிவாணர்பாட, வித்வான்கள்புகழ, கட்டியக்காரர் கட்டியங் கூற, பொற்பிரம்புக்காரர் பராமரிபண்ண திருச்சின்னம்பரி மாற, வெற்றிசங்குகளுங்குறிக்க, முத்துக்குடை ரத்தினக்கு டைகள் கவிய, ஆலவட்டம் வெண்சாமரைகள்வீச ஙஉ-விரு துகளும் பிடிக்க, சகல ஆடம்பரத்துடனே அரண்மனை கோ புரவாசற்படி யேழுங் கடந்துவருகிறபோது சாரதியானவன் இரதத்தின் அச்சுக்கு எண்ணையிட்டு மச்சுக்கு வர்ணந்தீர்ந்து குத்துக்கால் கொடுங்கை சேர்த்து சட்டம்பரப்பி பூச்சக்கிரக் குடைகளேந்தி இருபக்கத்திலுங் கெருடக்கொடி அனுமக் கொடிபறக்க, மகா சிங்காரங்களுடனே நாலுகுதிரைகள் பூட் டியலங்கரித்து முதல்தட்டிலே சாரதி காந்தாரனென்னப்பட் டவன் ஸ்ரீராமபத்திரசுவாமியை இரதத்திலேற்றி தானும் மு தல் தட்டிலே யுட்கார்ந்தான். அப்போது ஸ்ரீராமர் இரதத்

தில் ஆரோகணித்துக் கொண்டார் அப்போது விபீஷணரும் மாலியவானும் சுக்கிரீவனும் தங்கள் தங்கள் இரதமேறினார்கள்.

## ஸ்ரீராமர் அயோத்தியைவிட்டு யுத்தத்திற்குப்போகுதல்.

---

கலிவிருத்தம்.

ஒருதனியாகிய சராசரமெங்கு முயர்சீலன்
திருமகள்மேவு மயோத்தியில்வாழ்த சரதபாலன்
இருவினையாளர் தமக்கரியானெனு மெங்கோனும்
பொருரதமேறி படைத்திரள்கொண்டு புகுந்தனனே.

அப்போது ஸ்ரீராமர் சகல சேனைகளையும் கூட்டிக்கொண்டு ௩௨-சங்கீத மேளவாத்தியங்களுந் தாம்தாமென்று முழங்க, அயோத்தியைவிட்டு புறப்பட்டு பாலைவனங்கடந்து வால்மீகி வனமெங்கேயெனச் சென்று அவ்வனம் புகுந்துபோகிறபோது ரணக்களத்தில் குசலவர்கள் இராட்சதாள் படைத்தலைவர்களை வளைத்துக்கொண்டு யுத்தம் பண்ணுகிறபோது பரதர் மூர்ச்சைதெளிந்து எழுந்து சாரதியைக்கொண்டு இரதத்தை நடத்தி குசலவாள் முன்னுக்குவந்ததை குசலன்கண்டு இராட்சதாளை விட்டுவிட்டு பரதமகாராஜன்பேரில் திரும்பி வில்லிலநேக பாணங்களைப்பூட்டி விட்டுவிட்டான். அந்தப் பாணங்களும் வில்லில்நின்று விடுபட்டு வருவதைப் பரதர்கண்டு வில்லிலனேக அஸ்திரங்களைச் சந்தித்துவிட்டு தன்பேரில்வருகிற பாணங்களை அறுத்து வெட்ட வெளியாக்கி விட்டார். அதுகண்டு குசலராஜன் ௬௪-நாராசபாணங்களை யெடுத்து விலலிலே தொடுத்து கடுகடுத்து விடுத்து பரதமகாராஜனுடைய வில்லைக்கண்டித்து மார்பிலணிந்த கவசங்களையும் அறுத்துப்போட்டான். அதுகண்டு பரதமகாராஜன் கோபமாகி வேலாயுதத்தை யெடுத்து மந்திரப்பூசை நைவேத்தியஞ்செய்து குசலராசனுடைய மார்புக்கு லக்குபார்த்துவிட்டார்.

அந்தவேலாயுதமானது வில்லைவிட்டு விடுபட்டு அண்டரண்ட பிர்மாண்டம் ௬௮-அண்டங்களும் நடுங்க, அண்டங்கள் வெடிக்க, அண்டத்திலுள்ள தேவர்களெல்லாங் கலங்கி நடுங்கிட ஒடுங்கிட, ஆவென்று வாயைத்திறந்து குபீல் குபீலென்று அக்கினிப்பொறிகளை யிரைத்துக்கொண்டு வருகிறபோது குசலன்கண்டு தன்தாயார்கொடுத்த வேலாயுதத்தை

எடுத்து பூசைசெய்து விட்டுவிட்டான் அந்த வேலாயுதமும் புறப்பட்டு அக்கினிக்கொழுந்துகள் விட்டுக்கொண்டு அதிவேகத்துடன் பரதராஜன் விட்ட வேலாயுதத்தின்பேரில் தடாலென்றுபாய்ந்து ஆகாயத்தில் கிளம்பி ஒன்றுக்கொன்று யுத்தம் பண்ணிக்கொண்டிருந்தது அதுகண்டு பரத மகாராஜன் அதிககோபமாகி ஸ்ரீராமபாணமாகிய சூலாயுதத்தையெடுத்து மந்திரபூசைசெய்து விட்டுவிட்டார். அந்தசூலாயுதமும் வருகிறபோது குசலராஜன் தன்தாயார்கொடுத்த சூலாயுதத்தைப் பிரயோகம்பண்ணிவிட்வே அந்தசூலாயுதமும் பரதமகாராஜன்விட்ட சூலாயுதத்தின்பேரில் வந்துபாய்ந்து ஆகாயவீதியில்கிளம்பி ஒன்றுக்கொன்று யுத்தம்புரிந்துகொண்டிருந்தது கள். அதுகண்டுபரதமகாராசன் ஆக்கிரநிக்குரோதனாய் பல்லைப்படபடவென்றுகடித்து ஒருசத்தியைஎடுத்துப்பூசைசெய்து விட்டார்.

அந்தச் சத்தியானது அதிக உக்கிராகாரத்துடன் லோகாலோகங்கள் தடுமாறும்படியாய்ப் புறப்படவே, குசலராசன் கண்டுதனக்கு வால்மீகர் கொடுத்திருந்த சத்தியையெடுத்து பூசைசெய்து விட்டுவிட்டான். அந்தச் சத்தியானது ஆலகாலவிஷத்தைப்போலே சீறிக்கொண்டு பரதர்விட்ட சத்தியின்பேரில் சடாலென்று வந்துபாய்ந்து ஆகாயத்திற் கிளம்பி ஒன்றுக்கொன்று யுத்தம் பண்ணிக்கொண்டிருந்ததுகள். அப்போது குசலராசன் தாயார்கொடுத்த சக்கரத்தையெடுத்து பூசைசெய்து ஸ்ரீமந்நாராயணரைத் தோத்திரஞ்செய்து கிறுகிறு வென்று சுழட்டி விட்டுவிட்டான். அதுகோடி சூரியப்பிரகாசமாய் புறப்பட்டு அண்டராண்டம் ஆயிரத்தெட்டண்டங்களும் நடுங்க, அண்டகோளகை பத்தியெறிய, அண்டத்திலுள்ள தேவர்களும் பயந்தோட, குசலவனைக்கொண்டாட ஒரு அண்டமுயரம் பயந்துக்கொண்டாட, அதிவேகத்துடன் வருகிறபோது பரதர் அதிககோபமாகி பிரமாஸ்திரத்தையும் இன்னமதிக கொடிதாகிய பாணங்களையுமெடுத்து வில்லிலே சந்தித்து விட்டுவிட்டார். அப்போது சக்கரமானது பரதர் விட்ட சகல அஸ்திரங்களையு மறுத்துத்தள்ளி பரதருடைய மகர குண்டல கிரீடகேயூர ஆரமணி பதக்கங்களுடனே விளங்கப்பட்ட சிரசை கரகரவென்று அறுக்கிறபோது சரியாய் அறுபடாதபடியால் இவர் விராட சொரூபமுள்ளவரென்று சக்கரத்தாழ்வார் வெட்கி குசலராஜனிடமேபோய்ச்சேர்ந்தது

அப்போது பரதருக்குப் பாதிசிரசு அறுப்புண்டபடியால் தேர்தட்டிலேவிழுந்து மூர்ச்சையானார்.

அதுகண்டு குசலராசன் சந்தோஷமாகி லவனுடனே கூடி வில்லிலனேக பாணங்களைச் சந்தித்து இராட்சதாள் பேரிலும் யானைதேர் பரிசேனைகள் பேரிலும் விட்டுக்கொண்டு ரத்தாரோடச்செய்து வில்நாரியை தளர்த்தி சாமர்த்தியங்கள் பேசிக்கொண்டுவந்து சரஸ்வதியாற்றிலே ஸ்நானஞ்செய்து நேமநிஷ்டைகள் முடித்துக்கொண்டு காமதேனுவால் பசியாறி ஒருமரத்தடியில் உட்கார்ந்து இளைப்பாறிக்கொண் டிருக்கும்போது சூரியபகவானும் ஸ்ரீராமர் குசலவன் யுத்தத்தைப் பார்க்கவந்தவரைப்போல் உதயகிரியி லுதயமானார் அப்போது ஸ்ரீராமர் தண்டானது சரஸ்வதி யாற்றைக் கடந்து ரணக்களம் வந்து யானைகளை ஒரு பக்கத்திலும் தேர்பரி சேனைகளை ஒருபக்கத்திலும் நிறுத்தி தடம்போருமல் ரணக்களத்துக் கடுத்த அடாதவெளியில்வந்து நிறுத்தி பவுஞ்சிட்டு சுக்ரீவன் தேரிலேறிக்கொண்டு முன்னின்ற போது மரத்தடியை விட்டெழுந்து வருகிற குசலவர்களைப் பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறான். வாருந்தம்பி குசலவர்களே? நீங்களார் உங்கள் தாய்தந்தையர் பேரென்ன நீங்கள் சொல்லுங்கள் தம்பியென்றான். அடா! வானரனே? நீயோ, எங்கள் தாய்தந்தை பேரைக்கேழ்க்கிறவன் அப்படி சொல்லமாட்டேன் இப்போது யுத்தம் பண்ணின லாச்சுது இல்லையென்றால் ஒருபாணத்தினால் சிரசைவாங்கி விடுவேன் தப்பியோடிப் பிழையடா வென்றான்.

அதைக்கேட்ட சுக்ரீவன் கடுஞ்சினமடைந்து இராட்சதாளைப்பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறான். அடா! இராட்சதாளே? இவாள் சிறுபிள்ளைகளென்றும் ஸ்ரீராமரைப்போல வடிவு மழகுமா யிருக்கிறார்களென்றும் யோசியாமல் நெருங்கிப்பிடியுங்களென்றான். அப்போது இராட்சதாள் ஒருபக்கமும், தேர் ஒருபக்கமும், சேனைகளொரு பக்கமும், இந்தப்படியாய் ச-பக்கமுங் குடை கவிழ்ந்தாப்போலே நெருங்கிப்பிடிக்க வருவதைக் குசலவன் கண்டு அதிசீக்கிரத்தில் வில்லிலனேக பாணங்களைத்தொடுத்து ச-மூலையுஞ் சுழன்று விடுத்து இராட்சதாளையும் யானைதேர் பரிசேனைகளையும் கொல்லுகிறபோது, எப்படி விழுகுதென்றால், கால்வேறு, கைவேறு, துடைவேறு, தலைவேறு, அம்பாரிவேறுவேறாக இப்படி ௵-வெள்ளம் இராட்சதர்களுமாண்டு இரத்தவெள்ள மோடினது அதைக்கண்ட சுக்ரீவன் பல்லை நறநறவென்று கடித்து இரதத்

தைவிட்டுக் கீழேகுதித்து ஒரு இரும்புதண்டாயுதத்தைக் கை யிலே யெடுத்துக்கொண்டு குசலவர்களை கொல்லவேணுமென் று ஓடிவருகிறதைக் குசலன் கண்டு ச-அர்த்தசந்திராஸ்திரம் விட்டு தெண்டாயுதத்தையறுத்து சுக்ரீவராஜனுடைய சிரசை யுங் கரகரவென்றறுத்துப் போட்டான். அந்த சிரமானது ஸ்ரீராமா ராமாவென்று பூமியில்விழுந்தது. அதுகண்டு தே வர்களெல்லாம் துயரமானார்கள்.

அப்போது குசலன் தம்பி லவனோடு கூடிக்கொண்டு வில் லைவளைத்து நாணிபிகிந்து பவுஞ்சிட்டிருக்கும் யானை தேர் பரிசேனைகளின் பேரிலும் பாணங்களைக் கட்டுகட்டா யுருவிவி ல்லில்தொடுத்துக் கடுகடுத்துவிடுத்துக் கொல்லுகிறபோதுவா னுகோபன் இராட்சதாளைஏவி விட்டான். இராட்சதாளும் வி ல்லிலநேகபாணங்களைச் சந்தித்து சரமாரியாய்ப் பொழிந்து குசலவாள்விட்ட அஸ்திரங்களை எல்லாமறுத்துப்போட்டார் களதுகண்டு குசலவாள்கொடிதாகிய பாணங்களைச் சந்தித்து ஐப்பிசிகார்த்திகை மார்கழிமாதத்தில் ஈசானியமூலையிலிருந்து மேகமானது குமுகுமுவென்றுகெர்ச்சனைசெய்துஇடிமின்னல் குமுறல் பெருங்காற்றுடன் மழைபெய்தால் எப்படியோ, அப் படிபோலே கட்டுகட்டா யுருவிவிட்டு பாணமழையைப் பொ ழிந்து விட்டார்கள். அப்போது இராட்சதாள் கால்வேறு, கைவேறு, தலைவேறு, எலும்புவேறு, சதைவேறாகவும் யானை கள் தும்பிக்கையறுந்தும், கழுத்தறுந்தும், இரதங்கள் அச்சு முறிந்தும், மச்சுமுறிந்தும், கொடிமுறிந்தும், குடமுறிந் தும், துஜமறுந்தும், புரவிகள்வயிறு கிழிந்தும், எலும்பு ஒ டிந்தும், தலைகிழிந்தும், குடல்சரிந்தும், இப்படியாக கரு0- வெள்ளம் இராட்சதாளும் யானை தேர் பரிசேனைகளும் மா ண்டு உதிரவெள்ளம் ஒருபனமரமுயரமோடினது. அப்போ து அந்த குசலராஜனுடைய கோதண்டத்தில் கட்டியிருக்கிற எ-தங்கமணியில் மூன்று தங்கமணிகள் ஒன்றறை நாழிபரியந் தம் கலகலவென்று அடிபட்டது அதுகண்டு குசலவர்களும் ஆச்சரியப்பட்டார்கள். அதென்னவென்றால் யானைகள்-கூ தேர் க0கூ குதிரைகள் இலட்சம் காலாள்கள்கோடி மாண்டா ல் தலையில்லாத முண்டங்களெழுந்து கூத்தாடும் அந்த முண் டத்தின்பேரில் கழுகுகள் ஒருவெள்ளம் ஏறிக்கூத்தாடினால் கோதண்டத்திற் கட்டியிருக்கிற ஒருதங்கமணி கலகலவென்று அடிபடும் இப்படி ரு-தங்கமணிகளும் அடிபடுகிறதற்கு எவ்வ

ளவு சேனைகள் மாளவேணுமோ, அந்த கணக்கை புத்திமா ன்கள் உணர்ந்துக் கொள்வீர்களாக.

---

### குசலராஜனுக்கும் பானுகோபனுக்கும் யுத்தம்.

விருத்தம்.

வடகரிநீழலோங்கு மாதவன்போலவாங்கு
கடகரிபோன்றசெல்வ காளையாங்குசலன்மீது
தடனெடுந்தேர்மீதேறித் தானவருணராதிப்
படைகொடுசமர்விளைக்க வானுகோபன்வந்தானல்.

அதுகண்டு வானுகோபன் கோபமாகி பல்லை நெறநெற வென்று கடித்து இரதத்தை குசலன் முன்னுக்கு நடத்தி வில் லைவளைத்து குமுகுமென்று குணத்தொனி பண்ணி நல்ல கூர் மையோடுங்கூடி யிராநின்ற பாணங்களை வில்லிலேசந்தித்து பிரயோகம்பண்ணிவிட்டான். அப்போது குசலன் இராட்ச தாளைவிட்டு வானுகோபன் பக்கந்திரும்பி சு-திவ்வியாஸ்திரத் தை யெடுத்து வில்லிலே தொடுத்துவிடுத்து பானுகோபன்விட் ட அஸ்திரங்களையறுத்து அவனேறிவந்த இரதஞ்சாரதி கு திரைகளுடன் தும்சம்பணணிவிட்டான். அதுகண்டு பானு கோபன்மறுதேறிலேறிவில்லிலனேக அஸ்திரங்களைச் சந்தித் துவிட்டுவிட்டான். அந்த அஸ்திரங்கள்வில்லைவிட்டுவிடுபட்டு நாகசற்பம்போற் சீறிவருகிறபோது குசலராஜன்கண்டு திவ்வி யாஸ்திரங்களை வில்லிற்சந்தித்துப்பிரயோகம்பண்ணி பானு கோபன்விட்ட பாணங்களையறுத்து அவனுடைய சரீரங்களை யுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்து அதனமாய் ஒரு அக்கி னியாஸ்திரம் எடுத்துவிட்டு பானுகோபனையும் இரதஞ்சாரதி குதிரைகளையும் யெரித்துப் போட்டான்.

### குசலராஜனுக்கும் பஞ்சகண்டனுக்கும் யுத்தம்.

---

கலிவிருத்தம்.

பஞ்சுபோலபானு கோபனெரிந்திடத்
துஞ்சலில்சுகு மாரனையிக்கணம்
நஞ்சுடர்பத றித்தெறிப்பேனென
பஞ்சகண்டன் படைகொடுமீறினன்.

அதுகண்டு பஞ்சகண்டன் கோபமாகி வில்லிலே அநேக பாணங்களைப்பூட்டி குசலவன்மேல் விட்டுவிட்டான் அப்போது குசலவன் இவனுர் ௪0-சிரசும் ௫-கையில் வில்லுமுடையவனுயிருக்கிருன். இவன் சாமார்த்தியத்தைப் பார்ப்போமென்று ௫-திவ்வியாஸ்திரம் வில்லிலே தொடுத்து கடுகடுத்து விடுத்து பஞ்சகண்டன்விட்ட அஸ்திரங்களையறுத்து அவன் பிடித்திருந்த ௪0-வில்லையுங்கண்டித்து அவன்மார்பிலணிந்த கவசங்களையுமறுத்துப் போட்டான். அதுகண்டு பஞ்சகண்டன் மறுபடியும் ௪0-வில்லைக்கையிலெடுத்து வளைத்து நூறு நாராசபாணங்களைப்பூட்டி பிரயோகம் பண்ணிவிட்டான். அந்த நாராசபாணங்கள் வில்லில் விடுபட்டு ஆலகால விஷத்தைப்போல் சீறிக்கொண்டு வேகமாய் வருகிறபோது குசலராஜன் கண்டு சினங்கொண்டு நாராச பாணங்களை வில்லிலே தொடுத்துவிட்டான். அதனுலே பஞ்சகண்டன் மிகவும் நொந்து மூர்ச்சையடைந்தான்.

அப்போது குசலராஜன் லவனுடன் கூடிக்கொண்டு இராக்ஷதாள்பேரில் கொரரேபாணங்களைக் கட்டுகட்டாகவிட்டுக் கொல்லுகிறபோது இராக்ஷதாள் தண்டிலே அதிககோஷ்டமுண்டாகி முன்வைத்தகாலை பின்வைத்தார்கள். அப்போது ஸ்ரீராமபிரான் தண்டுகள் யோசனைதூரத்தில் வருகிறது முன்வந்த தண்டுகளெல்லாம் மாண்டுபோகப் படைத்தலைவருஞ் சேனுதிபதிகளுநங்கண்டு இரதத்தை குசலன் முன்னுக்கு நடத்தவே குசலன் மடக்கிக்கொண்டு அநேக பாணங்களைவிட்டு சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டான். அதுகண்டு, படைத்தலைவருஞ் சேனுதிபதிகளும் தைரியம்விடாமல் அநேக அர்த்தசந்திராஸ்திரத்தை வில்லிலே தொடுத்து விட்டு விட்டார்கள் அப்போது குசலராஜன் அநேக சிங்கமுகாஸ்திர மெடுத்து அவர்கள் விட்ட அர்த்த சந்திராஸ்திரங்களையும் அவர்களையும் மூர்ச்சை யடையச்செய்து விட்டான். அதுகண்டு மீதியான இராக்ஷதாள் கோபங் கொண்டு பாணங்களை சந்தித்து விடுகிற போது குசலன்விட்ட பாணங்களையறுத்துத் தள்ளினுர்கள். அப்போது மீதியான இராக்ஷதாள்பேரில் அநேக பாணங்களைவிட்டுக் கொன்று போட்டான். அப்போது நாலுபனைமரமுயரம் உதிரவெள்ளமோடிற்று அதுகண்டு கற்கோடகனும்காந்தாரனும் குசலன்முன் இரதத்தைநடத்தி அநேகதிவ்வியாஸ்திரங்களையெடுத்து வில்லிலேதொடுத்து விட்டுவிட்டார்கள் அப்போதுகுசலன் ௫0-திவ்வியாஸ்திரங்களையெடுத்து கடுகடுத்து

வில்லில்தொடுத்து அவர்களிருவர் விட்ட அஸ்திரங்களை யறுத்துத்தள்ளி அதனமாய் இரண்டு சிங்கமுகாஸ்திரம்விட்டு அவர்களிருவரையுங் கொன்றுபோட்டான் அப்போது அனுமார் மூர்ச்சை தெளிந்து சாம்புவரை 'கூட்டிக்கொண்டு குசலவாள் முன்னுக்குவந்தார் அதைக்கண்ட குசலன் அதிக கோபங்கொண்டு வில்லில் அ-சிங்கமுகாஸ்திரம் பூட்டிவிட்டா னதுகள் அக்கினிக் கொழுந்துகளுடனேவந்து அனுமார் சாம்புவந்தர்பேரில்படவே ஸ்ரீராமா ராமாவென்று கீழ்விழுந்து மூர்ச்சையடைந்தார்கள்.

அப்பொது ஸ்ரீராமர்பின் தண்டானது சரஸ்வதியாற்றைக்கடந்து ரணக்களம்வந்து வெறுங்களமா யிருப்பதைக் கண்டு அதிக துயரமுற்றார்கள் விபீஷணரோவென்றால் இராக்ஷதாளையும் யானைதேர் பரிசேனைகளையும் யூகம்வகுத்து நிறுத்தி தான் முன்னின்று குசலவனைப் பார்த்து ஒரு வசனஞ் சொல்லுகிறார் வாருந்தம்பி சிறுவர்களே உங்கள் பேரென்ன சொல்லுங்கள் தம்பியென்றார் அதைக்கேட்ட லவன் குசலவனைப் பார்த்துச் சொல்லுகிறான் வாரும் அண்ணாவே, வந்த பேருக்கெல்லாம் நம்முடைய தாய் தந்தைபேரைச் சொல்லிக் கொண்டிருந்தால் பொழுதுபோகிறது இவனையும் இரண்டொருபாணம் விட்டுக்கொல்லும் யூகம் வகுத்திருக்கிற இராக்ஷதாளுடனே நான் யுத்தம் பண்ணுகிறேன் அண்ணாவே யென்றான் அதைக்கேட்ட குசலன் மெய்தானென்று ஒரு சுழற்பாணத்தையெடுத்து வில்லிலே தொடுத்துவிட்டான். அந்த சுழற்பாணம் விபீஷணர் இரதத்தின்பேரில் வந்து விழுந்து ஆகாயத்திற் கிளப்பிவிட்டது அதுகண்டு விபீஷணர் சீக்கிரத்தில் கீழே குதித்துவிட்டா ரப்போதந்த இரதமானது மேக மண்டலம் வருணமண்டலம் வரையிற் சுழற்காற்றிலகப்பட்டு அச்சுவேறு, ஆணிவேறாயொடிந்து விழுந்து, சாரதி மாண்டான். அப்போது விபீஷணர் அதிககோபங்கொண்டு வேறொரு இரதத்திலேறி வில்லையெடுத்து வளைத்து நாணிபிகிந்து அதிசீக்கிரமாய் நூறு நாராசபாணமெடுத்து வில்லிலே தொடுத்து விட்டுவிட்டார்.

அந்த நாராசபாணங்கள் வில்லைவிட்டு விடுபட்டு அவயத்திலிருக்கும் நாகம் எழுந்தாலெப்படியோ அப்படிபோல சீறிக்கொண்டு வருகிறதைக் குசலன் கண்டு கடுஞ்சினங்கொண்டு ௱-திவ்வியாஸ்திரமெடுத்து வில்லில்தொடுத்து அந்த ௱-நா

ரசபாணங்களையு மறுத்து அவன் கைவில்லையு மொடித்து அவன் மார்பிலணிந்த கவசங்களையு மறுத்துப்போட்டான் அப்போது விபீஷணரானவர் ஈ-திவ்வியாஸ்திரம்விட்டு குசலன்வில்நாரியை அறுத்துப்போட்டார் அந்த நாரி அறுபட்டசத்தம் அண்டகடாகமும் படீலென்று வெடித்ததுபோலிருந்தது அதுகண்டு குசலன் வில்நாரியை உருகப்பார்த்தவுடன் ஒன்றாய்க்கூடிவிட்டது. அதுகண்டு குசலன் வில் நாரியைப்பூட்டி வில்லிலனேக அஸ்திரங்களைச்சந்தித்து மழை பொழிகிறதுபோல் பொழிந்து விபீஷணருடைய மார்பை பத்தலாய்க் கிழித்துப்போட்டான். அப்போது விபீஷணர் தைரியம்விடாமல் அதிககோபங்கொண்டு வில்லிலே அநேக சிங்கமுகாஸ்திரங்களைப் பூட்டிவிட்டார். அதுகண்டு குசலன் கடுஞ்சினங்கொண்டு ஈ-சிங்கமுகாஸ்திரங்களையெடுத்து கடுகடுத்து வில்லிலே தொடுத்து விடுத்து விபீஷணர்விட்ட சிங்கமுகாஸ்திரங்களை யறுத்துத்தள்ளி சாரதி குதிரைகளையுங்கொன்று விபீஷணருடைய சரீரமாதியந்தமும் சல்லடைக்கண்களாகத் துளைத்துவிட்டான். அதனாலே விபீஷணர் ஸ்ரீராமா ராமா வென்று தேர்தட்டில்விழுந்து மூர்ச்சையடைந்தார்.

அதுகண்டு மாலியவான் கோபங்கொண்டு இரதத்தை குசலராசன்முன்னுக்கு நடத்தி ஒருவசனஞ் சொல்லுகிறார். வாருந்தம்பி சிறுபிள்ளாய் யுத்தம்பண்ணிக் கொல்லுவாருமுலகத்திலுண்டோ அப்படி உங்களுக்கு நேர்ந்தபகையென்ன சொல்லுந் தம்பி இவ்விடத்தில் சுவாமியும் வந்திருக்கிறார். அவர் திருப்பாதத்தண்டை உங்களைக்கொண்டுபோய் அவருக்கு மனமிறங்கும்படியாய்ச்சொல்லி சமாதானம் பண்ணிவைக்கிறேன் அவர் ஆரென்றிருக்கிறீர்கள் ஆதிகர்த்தாவாகிய ஸ்ரீமந்நாராயணரே ஒருகாரண நிமித்தமாய் தசரதமகாராஜனுடைய வயிற்றி லவதரித்திருக்கின்றார் அவர்முன்னுக்கு உங்கள்பாணங்கள் செல்லாது உங்கள் சாமார்த்தியங்களும் நடவாது என்வார்த்தையைத் தள்ளாமல் நடத்திக்கொள்ளுந் தம்பியென்றான் அதைக்கேட்டு குசலன் கோபங்கொண்டு இந்த இராட்சதனா் நம்மைவந்து வணங்கச் சொல்லுகிறானென்று இரண்டுபாண மெடுத்து வில்லிலே தொடுத்துவிட அதுமாலியவானைக் கண்டு சண்டமாருதம் வீசினாற்போல வந்து மாலியவான் இரதத்தைப் பத்துயோசனை தூரத்தில் கொண்டுபோய்விட்டது.

அப்போது குசலன்தம்பி லவனுடன்கூடி இராட்சதாள் பேரில்திரும்பி பாணங்களைவிட்டுக் கொல்லுகிறபோது மத னென்னப்பட்ட சேனாதிபதிகண்டு கோபங்கொண்டு யானை தேர் பரிசேனைகளை குசலவாள்பேரில் ஏவி தானுந் தன்னு டைய வில்லைவளைத்து பாணங்களைச் சந்தித்துவிட்டு யுத்தம் பண்ணிக்கொண் டிருந்தார்கள் அப்போது ஸ்ரீராமர் ரணக் களஞ்சுற்றிப் பார்த்துக்கொண்டு வருகையில் ரணக்கள மெப் படி யிருக்கிறதென்றால் செக்கச் செவேலென்று செம்மானம் போற்சிவந்து 'மாண்டுகிடக்கிற யானை தேர்பரிசேனைகளை உ திரவெள்ளத்தி லடித்துக்கொண்டு போகிறதைக்கண்டு சீதா லட்சுமி நம்மைவிட்டுப் பிரிந்தபடியால் நம்முடைய யாகத் திற்கு பின்னம் வந்தது இவ்விரண்டு பிள்ளைகளால் இப்படி நம்முடைய தண்டுதளத்தைக் கொல்வதாவது அவர்களைப் பார்ப்போமென்று வருகிறபோது அந்த ரணக்களத்தில் அ னுமாரானவர் மகமேருகிரிபர்வதம் சாய்ந்தாற்போல பூமியி ல் விழுந்துகிடப்பதைக் கண்டு ஸ்ரீராமர் இரதத்தைவிட்டுக் கிழேகுதித்து அனுமார்பேரில் விழுந்து எப்படிப் புலம்பு கிறாரென்றால், என்னையனே, என்னப்பனே, அனுமந்தா, என்னைத் தனியேவிட்டு நீஎப்படிபோவாய் உனக்கு அரியரப் பிரமாதிகள் தானீடோ அந்தபராக்கிரமத்தை எங்கே ஒளித் துப்போட்டாய் என்மகனே ஒரு அறியாதபாலன்கையில் உ ங்களைப் பரிகொடுத்துவிட்டு நான் எப்படி அயோத்திக்குப் போவேன் மகனே உன்தாய் சீதாதேவியைக் கண்டுபிடிக்கவே ணுமென்று லோகாலோகங்களைத் தேடிக்காணுமல் சமுத்திர த்தைத்தாண்டி லங்கைக்குள் நுழைந்து சீதையைக்கண்டு அ சோகவனத்தையழித்து கும்பகர்ணன், இந்திரசித்து, முத லானவர்களைக் கொன்று சூடாமணி புத்தகமுங் கணையாழி மோதிரமும் அடையாளமாக வாங்கிக்கொண்டு சமுத்திரந் தாண்டி என்னிடத்தில்வந்து சீதையைக்கண்டேன் கண்டே னென்று சூடாமணிபுத்தகத்தையும் கணையாழிமோதிரத்தை யும் காண்பித்தாயே மகனேமகனேயென்று அனுமாருடைய பிரதாபத்தையெல்லாஞ் சொல்லி கன்றைவிட்டுப் பிரிந்த பசு வைப்போலக் கதறிக்கதறி அழுதுபுலம்பி அப்புரம் கொஞ்ச தூரம் இரதமேறிப் போகிறபோது சாம்புவந்தர் மூர்ச்சை தெளிந்து இறந்துகிடக்கிற யானைதேர் பரிசேனைகளை வாரி வாரி தன்பேரில் போட்டுக்கொண்டு பசங்கள் வரப்போகிறார் களென்று கண்ணைமூடிக்கொண் டிருப்பவரைப் பார்த்துக்

கொண்டு அப்புறம் போகும்போது அங்கதன் இறந்துகிடப்பதைக்கண்டு இரதத்தைவிட்டுக் கீழேகுதித்து அங்கதன்பேரில் விழுந்து எப்படிசுவாமி புலம்புகிறாரென்றால், ஐயோ, மகனே? அங்கதா, உங்களை நம்பிய என்னைத்தனியேவிட்டு உன் தகப்பனாகிய வாலியைக் காணப்போய்விட்டாயோ அடா மகனேயென்று சொல்லுதற்கரிய துயரத்தோடு புலம்பிக் கதறி அழுதுக்கொண்டிருந்தார்.

அப்போது அனுமார் மூர்ச்சைதெளிந்து எழுந்து சுவாமி புலம்புகிறதைக்கேட்டு சாம்புவந்தர் விழுந்துகிடக்குமிடந்தேடிப்போய் அவர்மூர்ச்சைதெளிந்து கண்ணைமூடிக்கொண்டு பிணங்களைவாரி தன்பேரிலேபோட் டிருப்பதைக் கண்டு ஒருவசனஞ் சொல்லுகிறார் வாருஞ் சாம்புவந்தரே? நல்ல காரியம் பண்ணினீர், இப்படி பிணங்களைவாரி மேலேபோட்டுக்கொண்டிருக்கலாமோ ஒளித்துக்கொண்டிருந்தால் ஸ்ரீராமதுரோகஞ் சித்திக்கும் எழுந்திரும் சாம்புவந்தரே யென்றார் அதுகேட்டு சாம்புவந்தர் வரும்விதிவந்தால் பட்டுத் தொலைக்க வேணுமென்று கண்ணைத்திறந்து அனுமாரைப்பார்த்து ஒருவசனஞ் சொல்லுகிறார். நான்தானே உன்கையி லகப்பட்டுக் கொண்டேன் நானேதள்ளாத பெரிய மனுஷன், நீயோவாலிபன், உனக்கார்யீடு, என்னை ஏன்வீணில் அந்தப் பசங்களிடத்தில் அடிபட்டுசாகப் பண்ணுகிறாயென்றார். அதைக்கேட்டு அனுமார் இப்போது சுவாமி வந்திருக்கிறார். நீர் வராமற்போனால் வருகிறதைப் பட்டுக்கொள் நான் போகிறேனென்று புறப்பட்டார். அதுகண்டு சாம்புவந்தரும் புறப்பட்டு இருவரும்வந்து சுவாமியைக்கண்டு வலம்புரிஇடம்புரிவந்து சுவாமிபாதத்தில் விழுந்து நமஸ்கரித்தார்கள். அவர்களைச்சுவாமி வாரியெடுத்து ஆசீர்வதித்து ஒருவசனஞ் சொல்லுகிறார். வாரும், என்னையனே, அப்பனே, அனுமந்தா, உன்னைப்போல பிள்ளை எனக்கு ஆர்கிடைப்பார்கள் உன்னாலேயல்லவோ, சீதையிருக்குமிடமறிந்து இராவணசம்மாரமுடிப்பித்தேன் உன்னை நம்பியல்லவோ அஸ்வமேதயாகம் பண்ண குதிரையை விட்டேன் என்னைத் தனியேவிட்டு நீ சிறுபிள்ளைகள் கையில் மாண்டுபோகலாமா, நீ வேணுமென்றால், அவர்கள்மாத்திரம் உனக்கும் சீதாலட்சுமிக்கும் இரண்டு சிறுபிள்ளைகளென் றும்யோசித்து அவர்கள் கையில் மாண்டீர்களோ யென்றழுதார்.

அப்படி புலம்பியழுகிற சுவாமியைச் சேவித்து அனுமார் ஒரு வசனஞ் சொல்லுகிறார். ஓ! கிருபைக்கடலே? நீரிப்படி அடியேனை யொரு பொருட்டாக வெண்ணி புகழலாமோவென்றார். அதைக்கேட்ட சுவாமியார் மிகவும் திருவுள மகிழ்ந்து ஆசீர்வதித்து ஒரு வசனஞ்சொல்லுகிறார். சத்துருக்கனையும், இலட்சுமணரையும், பாதரையும் பார்க்கவேண்டும் அவர்களைக்கொண்டுவாரும் அனுமாரேயென்றார். உடனே அனுமாரானவர்போய் சத்துருக்கர், இலட்சுமணர், பரதரையும், சுவாமிமுன்னே கொண்டுவந்துவைத்து நமஸ்கரித்து பின்னிடைந்தார். அப்போது சுவாமியானவர் மூன்று தம்பிமாரையும் பார்த்து மேலேவிழுந்துபுரண்டு அழுது புலம்புகிறபோது சுவாமியார் மூர்ச்சையாய்விட்டார். அதுகண்டு சாம்புவந்தரும், அனுமாருஞ் சுவாமியை களையாற்றினார்கள். அப்போது சுவாமியார் தன்மூன்று தம்பிமாரையும் பார்த்து எப்படி புலம்பியழுகிறாரென்றால், ஐயோ! தம்பிமார்களே நானிருக்க என்னைத் தனியேவிட்டு நீங்கள்மாத்திரம், வைகுந்தம் போகலாமோ உங்களுடைய புஜபலபராக்கிரமங்களையுஞ் சுத்தவீரத்தன்மையையும் வில்பெருமையுங் காட்டினால் பாலர்கள் பயப்படுவார்களென்று அஞ்சி அவர்கள் கையால் மாண்டீர்களோ தம்பிமார்களேயென்று கதறிக்கதறி யழுதுக்கொண்டிருப்பதை அனுமாரும் சாம்புவந்தரும் சுவாமிக்குத் தம்பிமார்களுடைய துயரத்தை யாற்றினார்கள். அப்போது குசலவர்கள் மயனென்னப்பட்ட சேனாதிபதியின்பேரிலும் இராக்ஷதாள்பேரிலும் அநேகம் பாணங்களை கட்டுக்கட்டாயுருவி வில்லில் தொடுத்து விடுத்துக்கொன்று கைசலியாமல் எங்கும் உதிரவெள்ளமாக்கிப்போட்டு இன்னம் சேனைகளுண்டோவென்று இரணக்களத்தை சுற்றிக்கொண்டு வருகிறதைக்கண்ட ஸ்ரீராமர் தம்பிமார்களுடைய துயரத்தினாலே ஒன்றுந்தோன்றாமல் புலம்பிக்கொண்டே யிருந்துவிட்டார்.

---

## குசலராஜன் ஸ்ரீராமர்பேரில் யுத்தத்திற்குப் போகுதல்.

கலிவிருத்தம்.

செய்யமேனிய னைக்குசல னும்
வையமுய்ய வெழுந்தமகிபனும்
மையனும்ராமச் சந்திரன்மீதினில்
பையம்போர்செய விண்டெழுதானரோ.

அதுகண்டு குசலராஜன் தம்பி! லவனே இரணக்களத்திலே செத்தபிணங்களை யெடுத்து வைத்துக்கொண்டு தான் சாகாப்பிணம்போலே யாரோ ஒரு இராஜன் அழுது புலம்புகிறான். அவனுக்கு குடைகளைப் பிடித்துக்கொண்டிருக்கிறார்கள். அவன்தான் அவர்களுக்கெல்லாம் தலைமையா யிருக்கப்பட்ட இராஜனாகயிருக்கவேணுமென்று சிறுபிள்ளைகளுடைய விளையாட்டு புத்தியினாலே ஒரு அர்த்த சந்திராஸ்திரத்தை யெடுத்துவிடுத்து சுவாமியாருக்குப் பிடித்திருந்த முத்துக்குடை, இரத்தினக்குடை, பூச்சக்கிரக்குடையை யறுத்துப்போட்டான். அது எத்தன்மையா யிருந்ததென்றால் முன்னாலே இராவணன் சுவாமியினுடைய தண்டுபெருக்கத்தைப் பார்க்கவேணுமென்று தேவ-கன்னியர்கள் புடைசூழ, முத்துக்குடைகள் இரத்தினக்குடைகள் பூச்சக்கிரக்குடைகள் கவிய மேளவாத்தியங்கள் முழங்க, கோபுரத்திலேறி பார்க்கவந்தவன்பேரில் சுவாமியார் ஸ்ரீராமபாணம் விட்டறுத்து எப்படி வெட்டவெளியாக்கினாரோ, அப்படிபோலிருந்தது.

அப்போது ஸ்ரீராமபத்திரசுவாமிக்கு கண்களிரண்டிலும் அக்கினிப்பொறிகளெழும்ப, காதுகளிரண்டிலும் புகைகளெழும்ப,மீசைகள் படபடவென்று துடிக்க,கைகளிரண்டும்பதைக்க,முன்னே திரிபுரத்தையெரித்தகோபத்தைமனதில்வைத்து வாலியைக்கொன்றஸ்ரீராமபாணத்தையெடுத்து கையில் பிடித்துசாரதியைத்தட்டவே, உடனேஇரதங் குசலவர்கள்முன்னுக்குவந்துவிட்டது. அந்தச்சமயத்தில்ஜெனகமகாராசனும்அக்ஷயமகாராஜனும் இரதமேறி சுவாமிபக்கத்தில் வந்து நின்றார்கள். அப்போது ஸ்ரீராமர் பிள்ளைகளுடைய வடிவையுமழகையும் அவர்கள் கைகோதண்டத்தையும் பார்த்து கோபத்தைப் பிள்ளைகள்முன் காட்டப்போகாதென்று கருதி இவர்கள் வாய்விசேஷத்தை யறியவேணுமென்று நினைந்து குசலவர்களைப்பார்த்து ஒரு வசனஞ் சொல்லுகிறார். வாருங்கள் தம்பி சிறு பிள்ளைகளே உங்கள் தாய்தந்தை பேரென்ன ஒளி

யாமற் சொல்லுங்கள் தம்பியென்ருர். அதைக்கேட்டு குசலன் ஒரு வசனஞ் சொல்லுகிருன். இராஜனே? எங்கள் தாய்பேர் ஜானகியம்மாள், எங்களையர்பேர் வால்மீகரிஷி, என்பேர் குசலன், என்தம்பிபேர் லவன், எங்கள் குடும்ப மெங்களுக்குத் தெரியாது என்ருன். அதைக்கேட்ட ஸ்ரீராமபத்திரசுவாமி, இவனென்ன ரிஷி பிள்ளையென்று சொல்லுகிருன். இவனுடைய வாய் விசேஷத்தை நன்ருயறிய வேணுமென்று மனதிலெண்ணி வாருந்தம்பி குசலவர்களே?உங்களையர் வால்மீகரென்று சொல்லுகிருயே உங்கள் தாயாரைப்பெற்ற தகப்பனே எனக்குத் தெளிவாய் சொல்லுந் தம்பியென்ருர். அதனைக்கேட்ட குசலன் ஒருவசனஞ் சொல்லுகிருன். ஓ! இராஜனே? இப்படியெல்லாங் கேட்டால் எங்களுக்குத் தெரிய வராது ஆனல் எங்களுக்குத் தாய்தந்தை குருதெய்வம் யாவும் வால்மீகரிஷி தவிரவேருருவரில்லையென்ருன். அதனைக்கேட்ட ஸ்ரீராமர் குசலனைநோக்கி ஒருவசனஞ் சொல்லுகிருர். நான் அஸ்வமேதயாகஞ் செய்யவிட்ட குதிரையை நீங்கள் பிடித்துக்கட்ட வென்ன நியாயமுண்டென்ருர்.

குசலன் ஸ்ரீராமர்பேரில் யுத்தம் பண்ணுதல்.

கலி விருத்தம்.

வெஞ்சிலைக்கணை தொட்டவிருவரும்
மிஞ்சுவைரமும் விண் ணுலகெங்க ணும்
நஞ்சுவானி யிறைந்தேதநடுக்குறப்
பஞ்சுபோலப் பரக்கமெலிந்தனன்.

அதைக்கேட்ட குசலனுனவன் சொல்லுகிருன். ஓ! இராஜனே? உன் தம்பி சத்துருக்கன் என்தம்பி லவனை மூர்ச்சைசெய்து கட்டிக்கொண்டுவர என்ன நியாயமுண்டு அப்படிப்பட்ட அனியாயஞ் செய்தபடியால் உன் தம்பிமார் மூவர்களையுங் கொன்று அவர்களுக்கு சகாயமாகவந்தபேர்களையும் இராசாக்களையும் இராக்ஷதர்களையும் யானைதேர் பரிசேனைகளையுங் கொன்று பிறகு இரணக்களத்தையும் வெறுங்களமாக்கி விட்டேன், இப்போது உம்மையுங் கொல்லுகிறேன் பாரென்று வில்லிலே பாணங்களைச் சந்தித்து விட்டுவிட்டான். அது வில்லைவிட்டு விடுபட்டு அக்கினிக் கொழுந்துகளுடன் வருகிறதை சாரதிகண்டு சுவாமிக்குத்தெரிவித்தான். சுவாமி வருகிற

பாணத்தை எட்டிப்பார்த்தார். அது தன்னுடைய சுபரூபத்தையடக்கிக்கொண்டு சுவாமியை வலம்புரியிடம்புரிவந்து அவருடைய அம்புருப்பொதியி லடைந்துவிட்டது.

அதுகண்டு குசலன் நாம்விட்ட பாணங்களைத்தடுக்க, அரியரப்பிரமாதிகளாலேயும் முடியாது இந்த ஸ்ரீராமன்மந்திரங்கற்றவனைப்போற் காணுகிறதென்று பின்னையும் அக்கினியாஸ்திரத்தை யெடுத்துவிட்டான். அந்த அக்கினியாஸ்திரம் வில்லில் விடுபட்டு அண்டகடாகமும் பத்தியெரிவதுபோல் வருவதைக் கண்டு ஸ்ரீராமர் வாரும் அக்கினியாஸ்திரமேயென அவரைச்சேவித்து அவருடைய அம்புருப் பொதியில் வந்தடைந்தது. அதைக்கண்ட குசலன் தன் தம்பியை நோக்கி ஒருவசனஞ் சொல்லுகிறான் அடா! தம்பி லவனே? ஸ்ரீராமன்செய்த மந்திரவித்தையைப் பார்த்தாயோ, நாம் விடப்பட்ட பாணங்களையெல்லாம் தன்னுடைய அம்புருப் பொதியி லடையச் செய்கிறானென்றான். அப்போது லவன்சொல்லுகிறான் வாரும் அண்ணாவே? பிரம்மாஸ்திரம், நாராயணாஸ்திரம், சக்கரம், சூலம், வேல், சத்தி, அவைகளைத்தடுக்க ஒருவராலுங் கூடாது அவைகளைப் பிரயோகம்பண்ணும் அண்ணாவே யென்றான். அதுகேட்டு குசலன் பிரம்மாஸ்திரத்தை விட்டுவிட்டான். அதுவில்லில் விடுபட்டு ஆலகால விஷத்தைப்போல் அண்டங்குலுங்க, யாவருமொடுங்க, வருகிறதைக்கண்டு ஸ்ரீராமர் வாரும் பிரம்மாஸ்திரமேயென அது உடனே சுவாமியை நமஸ்கரித்து சுடரையடக்கிக் கொண்டு சுவாமியினுடைய அம்புருப்பொதியில் வந்தடைந்தது. அதுகண்டு குசலன் நாராயணாஸ்திரத்தை யெடுத்து பூசைசெய்து விட்டுவிட்டான்.

அந்த நாராயணாஸ்திரமும் வில்லில்விடுபட்டு தகத்தகாயமாய் மகாகாந்தியுடனே அண்டங்குலுங்க, யாவருங்கலங்க, அண்டகோளகை பத்தியெரியத்தக்கதாய் வருகிறதைக்கண்டு ஸ்ரீராமர் வரட்டுமென்று மௌனமாயிருந்துவிட்டார், அப்போது நாராயணாஸ்திரம்வலம்வந்து துளசிமாலையாகசுவாமி கழுத்தில் விழுந்தது. அதுகண்டு சகலதேவர்களும் சந்தோஷமானார்கள். குசலன் கண்டு கடுஞ்சினங்கொண்டு சக்கரத்தை யெடுத்து பூசைசெய்து சுவாமியினுடையகழுத்திற்கு லக்குபார்த்து கிறுகிறுவென்று சுழட்டி விட்டுவிட்டான். அந்தசக்கரமானது கோடி சூரியப்பிரகாசமாய்ப் புறப்பட்டு அண்டம்

நடுங்க, யாவருமொடுங்க, அக்கினிபோலெறிந்துக்கொண்டு அண்டகோளகை பத்தி யெரியத்தக்கதாய் வருகிறதைக்கண்ட சகலரும்பயந்து கலங்கினர்கள், அப்போது சக்கரத்தாழ்வார் சுவாமி முகத்தைப்பார்த்து தன்சொரூபத்தை யடக்கி சுவாமி யுடைய திருக்கரத்தில் நின்றுவிட்டார். அதுகண்டு குசலன் அதிககோபங்கொண்டு வேலாயுதத்தையெடுத்து மந்திராபூதி கள் செய்துவிட்டுவிட்டான். அந்த வேலாயுதமானது அண் டரண்ட பிர்மாண்டமுதல் ஆயிரத்தெட்டண்டங்களும் நடுங் க, அண்டகோளகை பத்தியெரிய, அக்கினிச்சுடர்கள் வீசிக் கொண்டு சர்வலோகமுங்குலுங்க, யாவரும் கலங்க, அண்டம் படீலென்று வெடிக்கத் தக்கதாய் வருகிறதை சாரதியான கா ந்தாரன்கண்டு சுவாமி எனக்குமிகவும் பயமாயிருக்கிறதென்று சொல்ல சுவாமியானவர் இரதத்திலிருந்தபடியே கியாவென் று சிங்கநாதம் பண்ணினர். அந்தத்தொனி வேலாயுதம்கே ட்டு தன் ஆகாரத்தை யடக்கிக்கொண்டு சுப்பிரமணியரிடம் போய்ச்சேர்ந்தது. அப்போது தேவர்களெல்லாங்கண்டு ஆ ச்சரியப்பட்டு உளமகிழ்ந்தார்கள். அதுகண்டு குசலன் கோப ங்கொண்டு சிவன்கை சூலமெடுத்து பூசைசெய்து விட்டுவிட் டான். அந்த சூலமானது ஆயிரத்தெட்டண்டமு மொடுங்க, நடுங்கக் குலுங்க, அதிக தீட்சண்ணியமான அக்கினிச் சுவா லையை வீசிக்கொண்டு அண்டகோளகை பத்தியெரிய, ஆகா யம் பூமியுமொன்றுருவுகொண்டு வடவாமுகாக்கினியை வா ரி யிறைத்துக்கொண்டு வருகிறதைக் கண்ட சாரதி காந்தாரன் மெய்மறந்து போயினன்.

அப்போது சுவாமியார் இரதத்திலிருந்தபடியாய் ஒரு ஓ ங்காரசத்தம் போட்டார். அந்தச் சத்தங்கேட்டு சூலாயுதமு ம் தன் ஆங்காரபலத்தை யடக்கிக்கொண்டு பரமசிவனிடம் போய்ச் சேர்ந்தது அதனைக் குசலன்கண்டு துயரமுற்று கடு ஞ்சினங்கொண்டு தன்தாயார் கொடுத்த உக்கிரவீரசத்தியை யெடுத்துத் தன்தாயாரைத் தோத்திரஞ்செய்து விட்டுவிட்டா ன் அந்த சத்தியானது வில்லில் விடுபட்டு ஈரேழுபதினலு லோகமும் ஆயிரத்தெட்டண்டமும் நடுங்க, ஆலகாலவிஷத் தைப்போற் சீறிக்கொண்டு ஆகாயம்பூமியுமொன்ருயுருவுகொ ண்டு வடவாமுகாக்கினியைக குபீல்குபீலென்று கக்கி அண் டத்திலுள்ள தேவர்களுங் கலங்கிவாட, குசலனைக்கொண்டா ட, அக்கினிக் கொழுந்துகளுடன் வருகையில் சுவாமிக்கு பூர்

வக்கியானம்வந்து பேய்விடவே, கனவுகண்டாற்போலாச்சு தாம் அப்போ வுக்கிர வீரசத்தியானது சுவாமி திருமுகத்தைப்பார்த்து மார்பிலே தடாலென்று பாய்ந்து கூர்முனையழுந்தி உருவமாட்டாமல்வெட்கி குசலராஜன் அம்புறுப்பொதியில் வந்தடைந்தது. அந்த உக்கிரவீரசத்திபட்ட அதிர்ச்சியிலே தேர்தட்டில்சாய்ந்து மூர்ச்சையடைந்நார். அந்த தெப்பை பரமசிவன் முதலானவர்களுக்கும் பட்டது.

அதுகண்டு குசலவாள் ஜனகமகாராசனையும், அனுமாரையும், சாம்புவந்தரையும், மடக்கிக்கொண்டு யுத்தம்பண்ணுகிறபோது, அனுமார், சாம்புவந்தர், மாண்டுகிடக்கிற யானை தேர் பரிசேனைகளை வாரி குசலவன்பேரில் விட்டெறிந்தார்கள். சோமகாச மகாராஜனும் மாலியவானும் வில்லில் அநேகபாணங்களைச் சந்தித்து விட்டுவிட்டார்கள். அதுகண்டு குசலவர்கள் ஆள்ஒன்றிற்கு இரண்டு சிங்கமுகாஸ்திரமெடுத்து விட்டுவிட்டார்கள். அது ஆலகால விஷத்தைப்போலும் ஐந்துசிங்கங்கள்சீறி வருவதைப்போலும் வந்து இந்த ஐந்துபேரையும் பட்சணம்பண்ணித் தட்சணம்போய்விட்டது.

அதுகண்டு குசலவர்கள் ஆனந்தக்களிப்படைந்து மாண்டுகிடக்கிற சேனாதிபதிகள் இராஜசம்பந்தர்கள் இவர்களுடைய ஆபரணங்களையும் கிரீடங்களையும் கழட்டி மூட்டைகட்டி ஒருபக்கத்தில் வைத்துவிட்டு சத்துருக்கர், பரதர், இலட்சுமணர், இவர்களணிந்திரா நின்ற ஆடையாபரணங்களையும் கிரீடங்களையுங்கழட்டி ஒருபக்கத்தில்வைத்து ஸ்ரீராமரணிந்திரா நின்ற இரத்தின கிரீடத்தையும் ஆடையாபரணங்களையுங் கழட்டி மூட்டைகள்கட்டி வைத்துவிட்டு எதிர்ப்பாரில்லாமல் ரணக்களத்தைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு வருகிறபோது அனுமார் சாம்புவந்தர் கண்ணைவிழித்துப் பிணங்கள் கீழேயிருந்தபடியே எட்டியெட்டிப் பார்ப்பதை கண்ணுற்ற குசலவர்கள் ஓடி அனுமாரையும் சாம்புவந்தரையுந் தூக்கி அவர்கள் தலைமீதில் வைத்து அழைத்துக்கொண்டு அஸ்வமேதக்குதிரையின் கழுத்தில் கயிற்றைக்கட்டி யிழுத்துக்கொண்டு வால்மீகராசிரமம் வருகையில் சூரியபகவான் அஸ்தமிக்க ஒருநாழிகைபொழுது இருந்தது அப்போது அனுமாரையும்சாம்புவந்தரையும் ஆசிரமத்திற்குவெளியே நிறுத்திப்போட்டு குசலவர்கள் உள்ளேசென்று தாயாரைக்கண்டு பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தார்கள் அப்படி நமஸ்கரித்த பி

ள்ளைகளை வாரியெடுத்து ஆசிர்வதிக்க ஆசிர்வதித்ததாயாரு க்குயுத்தத்திற்குவந்த இராசாக்களுடைய பேரையும் பலாபல த்தையும் சத்துருக்கர் இலட்சுமணர் பரதர் ஸ்ரீராமர்வந்து மூர்ச்சையடைந்ததையும் அவர்கள் ஆடையாபரணங்களைக் கழட்டி மூட்டைகட்டிச் செங்குரங்கு கருங்குரங்கு தலைமீதில் வைத்து அஸ்வமேதக்குதிரையுடன் வந்ததையும் விபரத்து டன் சொன்னார்கள்.

அதைக்கேட்ட சீதாலட்சுமியும் குடிகெட்டுதே மக்களா வென்று மோதியடித்து பூமியில்விழுந்து அலறியெழுந்து பிள்ளைகளைத் தூறிக்கொண்டு வெளியேவந்து அனுமாரை யுஞ் சாம்புவந்தரையும் அஸ்வமேதக் குதிரையையுங்கண்டு சொல்லரிய துயரங்கொண்டு மகனே அனுமந்தா ஐயோசாம் புவந்தரே இந்தசிறுபிள்ளைகளுக்கு அவர்களுங்கள் தகப்பனு ரென்று சொல்லப்போகாதோவென்று அழுகிறபோது குசல வர்கள் அம்மா நீங்களாகிலும் வால்மீகராகிலும் என் தகப்ப ன்மார் அயோத்தியிலிருக்கிறார்களென்று சொன்னதில்லை அ தனாலேதான் எங்களிடத்திற்கு யுத்தத்திற்கு வந்தவர்க ளெல் லாம் எங்கள் தாய்தகப்பன்பேரைக் கேட்டார்க ளென்றுசொ ல்ல சீதை அவர்களைக் கூட்டிக்கொண்டு ரணக்களம்வந்துஅ ங்கதன் சுக்கிரீவன் விழுந்து கிடப்பதைக் கண்டு அழுது அ வர்கள் பிரதாபத்தைச் சொல்லிப்புலம்பி தன்தகப்பன் ஜென கமகாராஜனும் சத்துருக்கர் பரதர் இலட்சுமணர் ராமபத்திர ரும் மூர்ச்சையடைந்திருப்பதைக்கண்டு பூமியில்விழுந் தழு து கண்ணீரை ஆறுகயோடவிட்டு அவர்களுடைய பிரதாபத் தைச் சொல்லி புலம்பிக் கொண்டிருக்க அவ்விடத்தி லயோத் தியில் கௌசலை கைகேசி முதலானவர்கள் அழுது புலம்புகி றதை கியான திருஷ்டியினு லறிந்து வசிஷ்டமகாமுனிவர் சி ஷியர்களோடு எழுந்தருளி அயோத்திக்குவந்து கௌசலை கை கேசி முதலானவர்களைப் பார்த்துச் சொல்லுகிறார். சீதாலட் சுமி வனம்போய் அழுதகண்ணீர் வீணாய்ப்போகாமல் இத்து ன்பங்கள் நேரிட்டது இப்பவுமென்ன நாளை யுதயத்திற்குச் சகலருமெழுந்து சீதாலட்சுமியையும் பிள்ளைகளையுங் கூட்டி க்கொண்டு வருவீர்களென்று ஆறுதல் சொல்லிப் போனார்.

அவையெல்லாம் அறிந்து நாரதமகாமுனிவர் பாதாள லோகத்தில் ஆதிசேஷனிடத்தில் யாகம் பண்ணிக் கொண்டி

ருக்கிற வால்மீகரிடத்திற்குப் போய்ச்சொல்ல வால்மீகர்கேட்டு திடுக்கிட்டு அவ்விடத்தில் நில்லாமல் பூலோகத்திற்கு நாரதமகாமுனியுடன் ரணக்களம்வந்து யாவர்களையும் சீதாலட்சுமியையும் பிள்ளைகளையும் அனுமார் சாம்புவந்தரையும் ஆசிர்வதித்து வாயுதேவரை யழைத்து கமண்டலத்திலுள்ள அமிர்தத்தையெடுத்து நாலுமூலையும் விசிறினமாத்திரத்தில் அந்த அமிர்தத்தினால் எலும்பு தோல் சிரசு உடல் கால்கைகளொன்றாய்க்கூடி சகல யானைதேர் பரிசேனைகளுஞ் சத்துருக்கர் பரதர் இலட்சுமணர் ஸ்ரீராமபத்திர சுவாமியுஞ் சகல இராஜாக்களு மெழுந்தார்கள். அப்போது பரமசிவன் முதலான முப்பத்துமுக்கோடி தேவர்களும் சப்தரிஷிகளும் ரணக்களத்திற்குவந்து ஆனந்தக்களிப்புடனே புஷ்பமாரி பொழிந்தார்களதுகண்டு ஸ்ரீராமர் தம்பிமாருடனே எழுந்துவால்மீகருக்கும் நாரதருக்கும் சகலரு மர்க்கியபாத்தியங்கொடுத்து நின்றார்களப்போது சகலரும் ஸ்ரீமந்நாராயணாவென்று ஸ்தவுத்தியம் பண்ணினார்கள் ஜானகியம்மாளும் பிள்ளைகளும் ஸ்ரீராமரை வலம்வந்து சேவித்தார்கள் அப்போது ஸ்ரீராமர் சீதையையும் பிள்ளைகளையுங்கண்டு வெட்கி அம்மன்முகத்தைப் பாராமலும் பிள்ளைகளையெடுத்து ஆதரணைபண்ணாமலு மிருந்திடவே சகலதேவர்களு முனிவர்களும் சுவாமியைநோக்கி சீதாதேவியின்பேரிலும் பிள்ளைகள்பேரிலும் கோபம்வேண்டாமென்று சொன்னார்கள். அதுகண்டு சுவாமி தேவர்களையும் முனிவர்களையும் நோக்கி சொல்லுகிறார் சீதாலட்சுமிக்கு இரண்டுபிள்ளைகள் வந்தகாரணமென்னவென்று கேட்டதற்கு ஸ்ரீமந்நாராயணரை எப்போதும் தியானஞ்செய்யாநின்ற நாரதமகாமுனி சொல்லுகிறார் ஓ! சுவாமி? ரகுநந்தனா நீ வண்ணான்பேரிலே போக்குக்காட்டி கர்ப்பவதியாகிய சீதாதேவியை லட்சுமணரைக்கொண்டு வால்மீகர் ஆசிரமத்துக் கடுத்தவனத்தில் விட்டுவிட்டீர் அவ்விடத்தி லம்மன் அழுது புலம்புகிறபோது வால்மீகர்கண்டு அழைத்துக்கொண்டு போய் தன் ஆசிரமத்தில் வைத்துக்கொண்டிருக்கிற காலத்தில் அம்மன் ஒரு பிள்ளையைப்பெற்று குசலனென்று பேரிடப்பட்டு அந்தக் குழந்தையை வால்மீகர் சமீபத்திற் கொண்டுபோய்விட்டு பின்பு குழந்தையை எடுத்துவந்துவிட்டாள் ஐயர் ஜபத்திலிருந்தார் அதன்பின் கண்ணைவிழித்துப் பார்த்தார் குழந்தை

யில்லாமற்போகவே பயந்து ஒரு தர்ப்பை புல்லேப்பிடுங்கி அ
ந்தக் குழந்தைபோல சிருஷ்டித்தவுடனே அம்மனும்வந்து
இந்தபிள்ளை ஏதென்றுகேட்டதற்கு வால்மீகர் நடந்தகாரிய
த்தைச் சொன்னர் அம்மனும் இதுவுமென்பாக்கியமென்று
வளர்த்துக்கொண்ட பிள்ளை லவனென்ருர். அதைக்கேட்ட
ஸ்ரீராமர் சந்தேகந்தெளிந்து வால்மீகர் முதலான முனிவர்க
ளுடைய ஆசீர்வாதங்களையும் பெற்ற சீதாலட்சுமியையும் பி
ள்ளைகளையும் ஆசிர்வதித்துஅங்கீகரித்து சகலயானேதேர் பரி
சேனைகளையும் அஸ்வமேதக் குதிரையையுங் கூட்டிக்கொண்
டு சகல இராஜாக்களேயுந் தம்பிமாரையுஞ் சீதாலட்சுமியை
யும் பிள்ளைகளையும்இறதமேறச் செய்து தாமும் இரதமேறிச்
சகலருடன் ௲-மேளவாத்தியங்களுடனேயும் முத்துக்குடை
கள் பூச்சக்கிரக்குடைகள் இரத்தினக்குடைகள் கவிய, வெகு
ஆடம்பரத்துடனே சகல விருதுகளும்பிடிக்க, ஆலவட்டம்
வெண்சாமரை வீச, தாம்தாமென்று அவ்விடம்விட்டு சகல
ரும் புறப்பட்டுவெதிஷ்டரால் நியமிக்கப்பட்ட வனத்தில்வந்
து சேர்ந்தார்கள். அப்போது இலட்சங்கன்னியர்கள் பவ
ழங்களால் ஆலாத்தியெடுத்து வீதியில் கொண்டாடினார்கள்
சுவாமியார் அஸ்வத்தைப் பார்த்து ஆனந்தக்களிப்புகொண்
டு இராட்சதாளேப்பார்த்து அஸ்வத்தை லாயத்தில் கட்டிவை
யுங்களென்று உத்திரவுசெய்து ஸ்ரீராமரும் சீதையம்மனும்
பின்னல் குசலவர்கள் நடக்க, அதன்பின்னே சத்துருக்கர் பர
தர் இலட்சுமணர் நடக்க, யாகசாலையினுள்வரும்போது கவு
சலே,கைகேசி,சுமித்திரை முதலானவர்பேரப்பிள்ளைகள்மருும
கள் வருவதைக் கண்ணுரக் காட்சிகொண்டு எழுந்துநின்
ருர்கள்.

அவர்களை ஸ்ரீராமர் சீதாலட்சுமி பிள்ளைகள் பரதர், இல
சுமணர், சத்துருக்கர் முதலானவர்கள் சேவித்து ஆசீர்வாத
ங்களைப்பெற்று யாகமண்டபத்தில் தம்பிமார்களும்சகல இரா
ஜாக்களும் மந்திரிப்பிரதானிகள் முதலான சகலரும் புடைசூ
ழ்ந்து நவரத்தினங்களா லிழைத்த சிம்மாசனத்தின்பேரில்
உட்கார்ந்தார். மற்றயாவரும் அவர்களுக்குத்தக்க பொற்பீட
ங்களின்மீ துட்கார்ந்தார்கள். அப்போது வசிஷ்டர் சகல
ரிஷிக்கூட்டங்களுடனே கொலுமண்டபத்துக் கெழுந்தருளி
ஞர். அதைக்கண்டு ராமரும் தம்பிமார் முதலானவர்களுமெ

மூந்தெதிர்சென்று பயபக்தி வினயத்துட னழைத்துவந்து மான்தோல் புலித்தோலாசனங்களின்மீதுட்காரச்செய்து அவரவர்க ளாசனங்களிற்போ யுட்கார்ந்தார்கள். அப்போது ஸ்ரீராமபத்திரசுவாமி சொல்லுகிறுர். ஐயா, எங்கள் குருசிகாமணியாகிய வதிஷ்டரே நான் செய்த பூஜாபலத்திஞற் சகலரும் வந்திருக்கிறுர்கள். யாகத்துக்குவேண்டில பூஜாதிரவியங்களுந்தயாராயிருக்கிறது சித்திராபருவமும் வந்துவிட்டது இனியென்ன தாமதம் யாகத்தை நிறைவேற்றுமையா வென்றுர்.

## ஸ்ரீராமர் யாகஞ்செய்கிறது.

அப்போதுவதிஷ்டர் சகலரிஷிக்கூட்டங்களுடனே யாகசாலைக்கெழுந்தருளி அந்தயாகசாலையை அலங்காரஞ்செய்து காராம்பசுவின் சாணங்கொண்டுமெழுகி கோஜலந்தெளித்து நவரத்தினங்களால் கோலமிட்டு தங்கத்திஞற் குந்தளமிழைத்து வாழைமரங்கள் நிறுத்தி சுற்றிலும் நீலக்கண்ணுடி பதித்துக் கர்ப்பூர தீபங்களேற்றி அனுமார் அங்கதனுலே சகல பூஜா திரவிங்களு மழைப்பித்துக்கொண்டு வதிஷ்டர் பிரகஸ்பதி பகவானுடனேயும் கலைக்கோட்டு மகாரிஷியுடனே ஆலோசனைசெய்த காலத்தில் ஸ்ரீராமருக்குஞ் சீதாலட்சுமிக்கும் ஸ்நானஞ்செய்விக்க அறுபது வெள்ளை யானைகளின் பேரில் அறுபது பிராமண ஸ்திரீகளையும் அனுப்பித் தங்கக்குடங்களில் சரஸ்வதி தீர்த்தங்கள் கொண்டுவரச்செய்து அந்தக்குடதீர்த்தங்களை வாங்கி மந்திராபூதிகள்செய்து யாகசாலைக்குள் கொண்டுவந்து நேமநியமத்துடன் சுவாமியையும் அம்மனையும் அத்தீர்த்தத்திஞல் ஸ்நானஞ்செய்து பீதாம்பரப்பட்டுகளுடுத்தி அலங்கிருதராய் யாகசாலையில்வந்து நின்றுர்கள். அப்போது வதிஷ்டர் யாககுண்டத்தில்மந்திரபூர்வத்துடன் அக்கினி பகவானை யாககுண்டத்தில் நிறுத்தி அதில் நெய்களை யானைத் தும்பிக்கைபோல் சொரிந்து பஞ்சதிரவியங்கள் முதலானவைகளை அபரிமிதமாய்ப்போட்டு வேதகோஷ்டங்கள் பூமியுமாகாயமு மதிர்த்தக்கதாகவும், அப்போது வதிஷ்டர் பிரகஸ்பதி பகவானையுஞ் சங்குவர்ணனையும் பிரபுக்களாக வைத்து பிரம்மரிஷிகளை நித்தசுத்தகாரியரா யிருக்கச்செய்து சோமயாதிகளை யேற்படுத்தி தாம் புரோகிதராய் அகஸ்திய

ரோடு கூடவிருந்து சுவாமிக்கும் அம்மனுக்கும் மந்திரபூர்வ கத்துடன் ஓமம்வளர்க்கவே அந்த அக்கினிபகவானிடத்தி லுண்டாகியபுகை மேகமண்டலஞ் சொர்க்கம்வரையில்போய் கப்பிக்கொண்டது. அதைக்கண்ட பரமசிவன் பார்வதிசமேத ராய் ரிஷபவாகனரூடராயும், பிரமதேவர் சரஸ்வதி சமேத ராய் அன்னவாகனரூடராயும்,தேவேந்திரனிந்திராணிசமேத ராய் விமானமேறிச் சகலதேவர்களும் புடைசூழ, எழுந்தரு ளி ஸ்ரீராமர் யாகமண்டபத்துக்கு நேராய் ஆகாயவீதியில் வந் துநிறைந்தார்கள். அதுகண்டு ச அக-ரிஷிகளும் சகலருமெ ழுந்து சேவித்து யாகத்தி லுட்கார்ந்தார்கள். அப்போது யாகமண்டபம் முழுமையும் முனிவர்கள், இராஜாக்கள், இரா ட்சதாள், வானராள் முதலானவர்கள் நிறைந்து இடம்போ தாமல் இருந்தது.

ஸ்ரீராமர் சீதையம்மனை
இரண்டாவது சபதம்செய்யெனல்.

---

விருத்தம்.

இங்கிதமா துசீதைக்கு யிமையனுமிராமச்சந்திரன்
துங்கமாம்யாகந்தன்னை தூயதாரன்முகித்தே
சங்கைமேற்கொண்டுவாங்கு சதியனன்வதனநோக்கி
மங்கைநீயெனக்குசத்திய மகமதிற்செய்வாயென்றார்.

அப்படியிருக்கிறசமயத்தில் அயோத்தியில் ரசகனுகிய வ ண்ணன் சொன்னவிசேஷம் ஸ்ரீராமருக்கு கியாபகம்வந்து இ தற்கென்ன செய்யலாமென்று வால்மீகரைப்பார்த்து சொல் லுகிறார், கேளும் வால்மீகரே முன்னுல் இராவணன் சம்மா ரமுடிந்தவுடன் நமதுசீதையை சத்தியம் செய்யும்படியாகச் சொன்னேம் அவளு மப்படியே தேவர்களறியச் சத்தியஞ் செய்தாள் அதை ஐம்பத்தாறுதேசத்து ராஜாக்களும் மற்றச கலரும் அறியமாட்டார்கள். ஆகையால் இப்போது சகலதே சத்திராஜாக்களும் ரிஷிகூட்டங்களும் பந்துவர்க்கங்களும் ரா ட்சதர்களும், வானராளும், இன்னம் மற்றுமுள்ள சகலவித ஜெனங்களும் நிறைந்த யாகசாலையில் லோக அபவாதந்தீர சீதைமாதை இரண்டாஞ்சத்தியஞ் செய்யச்செய்தால் அதன் பின்பு இந்த ஈரேழுபதினலு லோகத்திலும் நம்மையொருவ ரும் இகழ்ச்சிசொல்ல மாட்டார்க ளென்று ஸ்ரீராமர்சொன்னு ர் அப்படிச்சொன்ன ஸ்ரீராமருடைய விசேஷத்தை யாகசாலை

க்குநேராக ஆகாயமார்க்கத்தில்வந்திருக்கும் பிரம்மதேவர் முப்பத்து முக்கோடிதேவர்கள் கின்னரர், கிம்புருடர், காந்தருவர், சித்தவித்தியாதரர் முதல் சகலதேவர்களுங் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அச்சமயத்தில் லோகபிராட்டியாராகிய சீதையம்மனவள் ஸ்ரீராமர் சொன்னவாக்கியத்தை யெல்லாம் தன்னிரண்டுகாதுங் குளிரக்கேட்டு அந்தயாகசாலையில் ஸ்ரீராமருக்கெதிராக சத்தியத்தைச்செய்து பிறகு பூமிதேவியைப் பார்த்து தனக்கு யிடந்தரவேணு மென்று பிரார்த்திக்கிருள். அதெப்படியெனில் ஓ! அம்மா பூமிதேவி நான்பூமியின்கண் மிதுலாபுரி பட்டணத்தை யரசாட்சிசெய்யும் ஜனகமகாராஜனிடம் பிறந்து அயோத்தியாபுரியையாளும் தசரதமகாராஜனுடைய குமாரர் ஸ்ரீராமருக்கு நான்மணமாலை சூட்டினது உண்மையானுல் இந்த ஸ்ரீராமமூர்த்தியை ஏதுவேளையும்என் மனதிலுங் கினவிலும் நினைத்திருக்கிறது மெய்யானுலும் கற்புடையபெண்களுக்கு தங்கள் மனக்காவலல்லாமல் பெரிய மதிற்காவல் வைத்தாற் பிரயோஜன மென்ன அதைப்போல எனதுமனதிலிந்த ஸ்ரீராமமூர்த்தியே பத்தாவாக திரிகாலத்திலும் நினைத்திருப்பது நிச்சயமாயிருந்தால் அட்டியில்லாமல் வந்து இடந்தரவேண்டும் பூமாதேவியேயென்று அநேக விதமாகக் கேட்கிறபோது அவ்விடத்தில் பூமியானது இரண்டாகவெடித்து அதனிடத்தில் ஒருபெரிய பிலத்துவாரமுண்டாகி அதிலிருந்து சங்கீதமேளவாத்தியங்கள் முழங்க, குடை கொடிச்சிலைகள்முதல் ௬௨-விருதுகள் நாககன்னியர்கள்பிடிக்க, ஆலவட்டம் மயில்விசிறிவெண்சாமரைவீச, நாககன்னியர்கள் நடனம் புரிய, ஆதிசேஷன் பராமரிக்கை பண்ண திருதராட்டிரன், ஜனகமகாராஜன், காற்கோடகன், தட்சகன், இன்னம் சகலமான மந்திரிகள் பொற்பிரம்பு வெள்ளித்தடி யெடுத்துவர, சிலநாககன்னியர்கள் கட்டியங்கூற சிலநாககன்னியர்கள் நவரத்தினங்களிழைத்த ஒருசிம்மாதனமெடுத்துவர பூமிதேவியானவள் அநேக ஆடையாபரணங்களெடுத்துக்கொண்டு பிலத்துவாரத்தைவிட்டு சகலரும் வெளியில்வரப் பூமிதேவியானவள் சீதையம்மனருகில் வந்து அம்மனுக்கு அநேகவிதத்தில் தேறுதலைசொல்லித் தான்கொண்டுவந்த ஆடையாபரணங்களா லலங்கிர்தஞ்செய்து நவரத்தின சிம்மாதனத்தில் ஏறிக்கொண்டு சகல மேளவாத்தியங்கள் முழங்க, இதுகளெல்லாம் ஆகாயத்திலிருக்கும் தேவர்கள் பார்

த்து புஷ்பமாரிபொழிய சகலவைபவத்துடன் பூமாதேவி சீதையுடன் பிலத்துவார வழியாய்ப் பாதாள லோகம்போய்ச் சேர்ந்தார்கள் துவாரமும் பூமியும் எப்போதும்போல மூடிக்கொண்டது.

அதன்பிறகு ஸ்ரீராமரானவர் ஒன்றுந்தோன்ருமல் மயங்கி சீதையம்மன் பிரிவிஞலுண்டான வருத்தத்திஞல் அநேகமாகப்புலம்பி மறுபடியுந்தானே மனதைத் திடப்படுத்தி அதிககோபமீறிக் கண்கள்சிவக்க, மீசைகள் படபடவென்று துடிக்க பற்களை நறநறவென்றுகடித்து எழுந்திருந்து அண்டையிலிருப்பவர்களைத் தூறி இந்தபூமாதேவிக்கு இத்தனைகெர்வமா நாஞுஞ் சீதையும் வந்திருக்கும்போது அச்சம்பயமில்லாமலும் என்ஞுடன் சொல்லாமலும் சீதையை அழைத்துக்கொண்டு போஞளே அந்த பூமாதேவியையும் அண்டரண்டங்களையும் இதோ ஒரேபாணத்திஞல் பேர்த்து சமுத்திரத்தில் தள்ளிவிடுகிறேன் பாருங்களென்று அதிக உக்ராகாரமாய் இலட்சுமணருடைய கையிலிருக்கும்வில்லை வெடுக்கென்று பிடுங்கி குழுகுழுவெனக் குணத்தொனிசெய்து இராமபாணத்தை யெடுத்து வில்லிற் சந்தித்தார். அதைஆகாயத்திலிருக்கும் பிரமன்பார்த்து இதேது யுகமுடிவுகாலம் வந்ததுபோ லிருக்கிறதென்று அதிகசீக்கிரமாய் ஸ்ரீராமருக்கு முன்னேகுதித்து அவருடைய இரண்டுகையும் பிடித்துக்கொண்டு ஓ! சுவாமி தாங்களே இப்படி கோபித்துக்கொண்டால் தங்கள் கோபத்தை யார் தணிக்கவல்லவர் தாங்கள் ஆக்யாபித்த பிரக்ாரம் நடந்ததேயொழிய வேறில்லை நான் தங்களுடைய உந்திக்கமலத்திற்பிறந்த பிரமன் தாங்கள் இராவணசம்மாரமுடித்து சகல காரியங்களும் நிறைவேற்றினது ஆதியில் தாங்கள் ஆக்கியாபித்த பிரகாரம் சீதையம்மனும் வைகுந்தத்திற்போய் தங்கள் வரவுக்கு எதிர்பார்த்துக்கொண் டிருக்கிருள் ஆகையால் தாங்கள் லோக நடத்தையைவிட்டு கோபத்தைத் தணிக்கவேண்டும் இதுவல்லாமல் வால்மீகர் உத்தரகாண்டமுழுமையும் குசலவர்களுக்குக் கற்பித்திருக்கிருர் அதைப்போல் நடந்து காத்து ரட்சிக்கவேண்டுஞ் சுவாமியென்று பிர்ம்மதேவன் சொல்லவே இராமரும் கோபந்தணிந்தார் பிரமன் ஆகாயவீதியில் அவர்களுடன் போய்ச்சேர்ந்தார் இவரும் வில்லை இலட்சுமணர்கையில் கொடுத்துவிட்டு அதிக சந்தோஷத்துடன் தர்ப்பாசனத்தின்பேரில் உட்கார்ந்தார் அப்போது வசிஷ்டருத்திரவுபடி இராமர் லட்சுமணரைக் கொ

ண்டு அஸ்வமேதக்குதிரையை யழைப்பித்து காட்டு முருக்கம ரத்தில் நன்றாயிழைத்து அமைத்த யாககுண்டத்துக் கிழக்கே நிறுத்தி புட்பம் தாம்பூலங்கள் வைத்து பூசைசெய்துகொள்ளுகிறார். ஓ! உத்தம அஸ்வமே நாங்கள் கீர்த்திபிரதாபத்தை யடையும்பொருட்டு இந்த அஸ்வமேதயாகம்பண்ணுகிறோம் நீ தயவுசெய்து உன் சரீரத்தை யாககுண்டத்தில்விட்டு திவ்விய சரீரந்தரித்து சுவர்க்கலோகம்போய்ச் சேரென்றார் அப்போது வதிஷ்டர் அந்தக்குதிரையை தூபதீபங்களினாலே பூசைபண்ணி தோத்திரங்கள்செய்து இலட்சுமணரை நோக்கி குதிரையைக் கண்டியுமென்றார் அதுகேட்டு உடனே இலட்சுமணர் சிரசறுத்து உதிரமில்லாமலமிர்தம் தாரைதாரையாக சொரிய சிவ்வென்று கேசரிமார்க்கத்திலெழுந்து ஸ்ரீமந்நாராயணரைத் தோத்திரம்பண்ணி சூரியபகவானுடன் கலந்துவிட்டது. அப்போது இலட்சுமணர் அஸ்வத்திலுள்ள மாமிசத்தை வச்சிரம்போலும் பவளம்போலும் தரித்து ஸ்ரீராமர் கையில்கொடுக்க ஸ்ரீராமர் வாங்கி வதிஷ்டர்சொல்லுகிற மந்திராபூர்வகத்துடன் யாககுண்டத்திற்போட அக்கினிபகவானும் பிரியத்துடன் வாங்கிக்கொண்டு தன்பக்கத்தில் சேர்த்து வைத்தார் அப்போது வதிஷ்டர் இராமர்கையில் பரமசிவன் பிர்ம்மதேவர் முதலான தேவர்களுந் தேவரிஷிகளுக்கும் யாக பாகத்தை யெடுத்துக்கொடுக்க அவரவர்கள் பெற்றுக்கொண்டு ஆசீர்வாதங்க ளளித்துப்போயினர் இப்பால் பிரம்மரிஷிகளுக்கு யாகபாகத்துடன் ஆனைகள்-அ௦ குதிரைகள் ௱உ௲-பாரந் தங்கமுங்கொடுத்து ஆசீர்வாதம்பெற்று இப்படியே சகலபிராமணருக்கும் ஏழைபரதேசிகளுக்கும் அளவற்ற திரவியங்களை அவரவர்கள் விகிதப்படிக்குக் கொடுக்க அவரவர்கள்வாங்கிக்கொண்டு தங்கள் தங்களிருப்பிடம் போய்ச்சேர்ந்தார்கள் இப்பால் ஸ்ரீராமரானவர் கிரமப்பிரதிஷ்டை செய்யும்படி நினைத்து அங்கிருக்கும் இராஜாக்களையும் சேனைகளையும் புறப்படும்படியாய் உத்தரவுசெய்து சந்தனமகாராஜன் முதலான ஸ்திரீஜனங்களெல்லாரும் நவரத்தினமயமான இரதங்களேறி நடக்கவும், குசலவர்முதலான இராஜகுமாரர்க ளெல்லோரும் குதிரைகளின்பேரி லேறிக்கொண்டு ஆயுதங்களைப் பிடித்துக்கொண்டு வரிசையாக நடக்கவும், இப்படி சகல ஆடம்பரத்துடன் ஸ்ரீராமரானவர் விபீஷணர், சுக்ரீவர், தம்பிமாருடனும் ரதாரூடராய்ப் புறப்பட்டு அனுமார், அங்கதன், முதலா

னவர்களும் புடைசூழ்ந்து வரந்தக்கதாக தண்டுவிட்டு நடக்கும்போது பதினெட்டு வாத்தியங்களும் தாம்தாமென்று முழங்கவும், அநேகமாயிரம் நாடகப்பெண்கள் விநயத்துடன் பரதநாட்டியங்களைச் செய்துக்கொண்டுவரவும் திருச்சின்னங்களினுடைய ஓசைகளானது பூர்வத்தில் தசரதமகாரார்ஜனுடைய வாக்கியந்தப்பாமல் பதினான்குவருஷம் வனவாசஞ்செய்ய பஞ்சவடிதீரத்தில் வந்து கரதூஷணரைக் கொன்று மாரீசனை வதைத்து சீதையையிழந்து வாலியைச் சங்கரித்து சமுத்திரத்தில் அணைகட்டி இராவணன், கும்பகர்ணன், இந்திரஜித்து, அதிகாயன், கும்பநிகும்பன், இப்பேர்ப்பட்டஇராட்சதாளைத் தும்சம்பண்ணி சீதையம்மனைச் சிறைமீட்டி அயோத்தியில்வந்து பட்டாபிஷேகராய் குசலவர்களையும்பெற்று அஸ்வமேதயாகஞ்செய்து முடித்து பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களாகிய நான்கு வருணத்தார்களுக்கும் ஆசையடங்கத்தக்க தட்சணைகள்கொடுத்து அன்னதானம்,சுவர்னதானம்,வஸ்திரதானமுதலானசோடசமகாதானங்கள்செய்து ஈரேழுபதினாலுலோகத்திலுங் கீர்த்திப்பிரதிஷ்டை பெற்று தருமசொரூபனாகி அயோத்தியாபுரியைப் பரிபாலனம்பண்ணுகிற ஸ்ரீராமமூர்த்தி வருகிறாரென்றூதவும் அநேகவீரர் வெற்றிச்சங்குகள் குறிக்கவும் பொற்பிரம்புக்காரர் சேனைகளுக்கு முன்னே நின்று மகாமகிமைபொருந்திய ஸ்ரீராமமூர்த்திபவனிவருகிறார் விலகிநில்லுங்கோளென்று சந்தடிவிலக்கிவரவும் இரண்டுபக்கத்திலும்ஆயிரம்பேர்கள் கற்பூரதீவட்டிகள் பிடித்துக்கொண்டு வரிசைவரிசையாய்வரவும், ஆகாயத்திலிருக்கும் தேவர்கள் பாரிஜாதபுட்பங்களைசலசலவென்றுவருஷிக்கவும்,இப்படிப்பட்டவைபவத்துடனே இராமமூர்த்தியானவர்நகர்பிரதிஷ்டைசெய்து மறுபடியும் நல்ல சுபமுகூர்த்தத்தில் திரும்பி அயோத்தியாபுரியில்பிரவேசித்து அரண்மனைவாசலில்வந்து இரதத்தை விட்டிறங்கி சகல ஆடம்பரங்களையும்நிறுத்தி அவர்களை யனுப்பிவிட்டு அனுமார், சாம்புவந்தர், விபீஷணர், சுக்கிரீவன், சந்தனமகாராஜன் முதலான இராஜாக்களுக்கும் வெவ்வேறுவிடுதிக ளமர்த்திவைத்துதம் பிமார்களும்குசலவர்களுடனும்கௌசலை,கைகேசி,சுமித்திரைமுதலானவர்க ளுடனும் அரண்மனைக்குள் பிரவேசித்துயிருந்துமறுநாளுதயத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர்யெழுந்திருந்து காலோசிதமான கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண் சர்வாலங்கிருதராய்ப்

புறப்பட்டு தம்பிமார்கள் குமாரர்கள் மந்திரி சாமந்திரிகள் பிர தானியர்கள் புடைசூழ்ந்துவரக் கொலுமண்டபத்திற்குவந்து நவரத்தின சிம்மாதனத்தின் பேரிலுட்கார்ந்து கொலுவாயி ருந்தார். அப்போது விபீஷணர் முதல் சகல ராஜாக்களும் வந்து நமஸ்கரித்து அவரவர்களுக்குத் தகுந்த ஆசனத்தி லுட்கார்ந்தார்கள்.

அப்போது விபீஷணர்முதல் சகல இராஜாக்களும் சுவா மியை வணங்கிச் சொல்லுகிறார்கள். ஓ! சுவாமி, தங்கள் அநுக்கிரகத்தினால் யாகதரிசனம்பண்ணினோ மிதுவரையில் எங்களுடைய தேசமெல்லாம் எப்படியிருக்கிறதோ ஆதலால் நாங்கள் போய்வருகிறோம் எங்களுக்குச் செலவுகொடுத்து அ னுப்புங்களென்று பிரார்த்திக்க ஸ்ரீராமரும் மெய்தானென்று அவரவர்களுக்குத்தக்கபடி யானைதேர் பரிசேனை தங்கம் இ வைகளெல்லாம் வெகுமதியாகக்கொடுத்து பாதசத்துருக்கரா ல் அவர்களுக்கு வழிவிடும்படி செய்து பிறகு தம்பிமார் குசல வர் அனுமார் மந்திரி பிரதானிகளுடனும் இராஜநீதிதவறா மல் மாதமும்மாரி பொழிய நித்தியமங்கல சுபசோபனங்களுட னே தானதருமங்களைச்செய்து அயோத்தியாபுரி பட்டணத் தை பரிபாலனஞ் செய்துக்கொண்டிருந்தார் இந்த அஸ்வ மேதயாகத்தை பயபக்தியுடன் யார்படித்தாலும் எழுதினாலும் காதுகுளிரக்கேட்டாலும் அவர்கள்செய்த பாதகங்கள் நீங்கி இம்மையில் சகலத்தையு மனுபவித்து மறுமையில் ஸ்ரீராம மூர்த்தியின் பாதாரவிந்தமாகிய சாயுச்சிய பதவியை பெறு வார்கள்.

உத்தரகாண்டம் - முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.



# மகாவிந்தம்.

வெண்பா.

சீர்திருச்சிற்றம்பலையர் செய்துஞ்செய்யாமல்விட்ட
ஓர்திருச்சரித்திரத்தி லோதுமிகுஞ்—சார்வாக
வேண்டியெழுதினதை மெய்ந்நூல்வல்லோர்பொறுக்க
வேண்டிமிகவணங்கு வேன்.

கலிவிருத்தம்.

கனைகட னுலகெலாங் கடகடன் னுடன்
துணைபரிவல்லியுந் துயன் று நீற்குண
இணையபநாளாண்டர சியற்றிச்செலவிழி
மனைகழலிராகவன் மகிழ்ந்திருந்தனன்.

விருத்தம்.

வானவர்துயரைப்போக்க வன்மைசேரயோத்திவந்த
போனமாம்வஸ்துவாய னுவுலகளந்தமாயன்
தானவர்தமையொழித்துத் தகைபெரும்பதவியீந்து
மானிலத்தோர்களேத்த வைகுந்தமேவினனே.

பிர்மதேவனேவலாலே யமதருமராஜன் அக்காலத்திலே தன்வடிவுமாறி அயோத்திமாநகரத்தில் மலைப்போல் நிலைகொண்டதான அரண்மனைவாசலில் முன்னே தருந்த ஒரு முனிவடிவுகொண்டுவந்து அங்கேவளர்ந்த கரடிகளுடனே அங்கதாயிடிபோல முழங்குஞ் சொற்களையுடையவர்களாகையினாலே பிரம்புங்கொண்டு வரிந்துகச்சையுடனே அங்கீகரித்து சிங்கங்கள்போல் நிற்கிறவாயில் காக்குமிலேச்சர்களைப்பார்த்து நான்உள்ளேபோய் முறம்போலுங் காதுகளையுடைய சத்துரு சஞ்சயமென்னும் பட்டத்து யானைமேல் வாத்தக்க ஸ்ரீராமமூர்த்தியைக் காணவேணும், நீங்கள்போய் ஒருதவ

முனிவந்து உம்முடைய கடைவாசலில் நிற்கிருரென்று சொல்லுங்களென்றுமிகவும்வேண்ட அப்போது கோபமில்லாதபோதும் அக்கினிபோற் கொதிக்குங் கண்களையுடைய வாயில் காப்பவர்களில் ஒருவன் முப்புரிநூலணிந்த முனிவரே நன்றென்று வணங்கிக்கொண்டுபோய் 'இராம மூர்த்தியைக்கண்டு வணங்கித்துதிசெய்து சக்கிரவர்த்தித் திருமகனை சுவாமி சந்நியாசி வேடத்தைக் கொண்ட ஒருவைதிகமுனிவர் வந்து நம்முடைய மணிமதில் சூழ்ந்த கோயிலின் முன்னேகட்டிய கோபுரவாசலில் நிற்கின்ருர் உம்மைகாணுதற் கென்றுஞ் சொல்ல அதுகேட்டு மழைப்பொழிகின்ற மலைபோலும் யானைமேல் அலங்கிருதராய்ப் பவனிவந்து உலகையாண்டு ரட்சிக்கின்ற இராமமூர்த்தியானவர் அந்தவாயல்காக்கும் வீரனைப்பார்த்து நான் முனிவர்கள்மேல் நீங்காத் தயவுகொண்டு உலகத்திலே தகாதசெய்கைகள் செய்கிற அசுரர்களை வேரறுக்கிறதே எனக்கு விரதமான படியினுலே அந்தமுனிவர் எந்த காரணத்தினுலே வந்தாரோ தெரியவில்லை நீங்கள் எவ்வளவுந்தடைசெய்யாமல் அவரை இங்கழைத்து வாருங்களென்று அருளிச்செய்த வுடனே வாயில் காப்பவன் விரைவாய் ஓடிவந்து முனிவரைக்கண்டு வணங்கி ஓ! சுவாமி, ஸ்ரீராமமூர்த்தியின் னேமனமாயிற்று தாங்களினித்தடையின்றி உள்ளே போய் சபாமண்டபத்தில் காணலாமென்றபோது உலகமெல்லாம் ஆள்கின்ற இராமமூர்த்தியை முனிவேடங் கொண்டயமதருமராஜன் வாசல்கடை நீங்கிவந்து காணலாயிற்று ஆதலாலே கடல்சூழ்ந்த உலகத்திலுள்ளவர்க்கெல்லாம் யமன் தப்பாமல்வந்து உயிர்க்கொள்வா னென்று பயந்து நல்லதவங்கள் செய்யவேணும் இன்னமும் பரமோத்தமரான இராமசுவாமியின் உயிர்கொள்ள உலகிலே கண்ணுக்குத் தோற்றவந்த தவமுனிவடிவை ஸ்ரீராமர்கண்டு ஐயா முனிவரே நீர் வேண்டுவதை யில்லையென்பேனென்று வேருருவரைப் போல் என்னை யிகழவேண்டாம் நீர்என்னை கேழ்க்கத்தக்கது ஆலோசிக்கும்போது உம்மை யொப்பானவர்க ளொருவரு மில்லை கடல் சூழ்ந்த வுலகத்திலே நான்கண்டதே யில்லை ஆகையால் உங்களையெல்லாம் நன்ருகசிருஷ்டிக்கின்ற உந்திக் கமலத்தில் பிறந்த பிரமதேவனைப் போலும் பெருமையை யுடைய நீர் வேண்டிவந்ததைச் சொல்லுமென்று இராமர்கேட்க அதற்குமுனிவேடங் கொண்ட எமன் சொல்லுகிருர் கேளும் அர

சனே நான் அந்தமகாவிஷ்ணுவினுடைய அம்சத்தி னிடத்தில் ஜெயசீலனுகிய பெரிய முனிவன் ஓய் செவ்வைக் குணத்தினரே! தேனெழுகுகின்ற மலர்மேற் கடவுளான நான்முகன் எனக்கு விடை கொடுத்தபடியே செய்யவந்தவன் யானென்று எடுத்துச் சொல்லத்தொடங்கினுன் கேளுஞ் சக்கிரவர்த்தித் திருமகனே? நான் சொல்லுவதொன்றுண்டு அதாவது நாமிருவரும் இவ்விடத்தே தனியேயிருந்து பேச வேண்டும் நாம் தனித்துபேசிக்கொண் டிருக்கும்போது யாராஞலுஞ் சரியே இங்கே நம்முடைய ரகசியம் தெரிய வருவார்களேயாஞல் அவர்கள்மேல் தாட்சணியஞ் செய்யாமல் அவர்களை நீக்கிவிடவேண்டு மென்ன அதுகேட்டு இராமன் இப்படிக் கேட்டுக்கொண்ட அந்தவைதீக முனிவருக்குஞ் சம்மதித்துக் கூடியிருந்த இளைய பெருமாளான இலட்சுமணரைப் பார்த்து தம்பி இலட்சுமணு உன்னைப்போலே யார் வந்தாலும் உள்ளே விடாமல் ஜெயபேரிகை முழங்குகின்ற அழகான நம்முடைய கடைவாசலுக்குப்போய்க் காத்துக்கொண்டிருவென்று தம்பிக்கு விடைகொடுத்துவிட்ட பின்பு இதழ்கள்விரிய மூறுக்குடைந் தொழுகுகின்ற மலராகிய மாலையணிந்த ஸ்ரீரகுவீரன் ஓய்முனிவரே இனி நீர் உம்முடைய மனமகிழ்ச்சி யுடனே சொல்லுமென்றுகேட்க, அப்போ ரகசியமான பழைய கீர்வாணபாஷையில் வழங்குகின்ற அந்தவைதீக முனிவர் சக்ரவர்த்தித் திருமகனுரை நோக்கி மூன்றுலகங்களையு முடிவு செய்ய வேண்டினுலும் செய்ய வல்லவ னெவ்விதத்திலும் சமர்த்தனுன எமதருமன் நானென்று சொல்லத்தொடங்கினுன். எப்படியென்ருல் முடிவைச் சொல்வதான கற்பனென்னும் வாழ்நாளையுடைய நான்முகனுன பிர்ம்மதேவன் முறையே நாலாயிரப் பிரபந்தம் போலப் பழையதான நான்குவேதங்களையும் பாடுவனுய் திருமாலுந்திக் கமலத்திலே பிறந்துபிரமதேவராகவந்து இந்த ஏழுலகங்களையும் சிருஷ்டித்த நான்முகக்கடவுளாலே சொல்லிய முடிவான நீ விசேஷத்தைக்கேட்பாயாக முன்னே என்னுலும் தேவர்கள் கூட்டத்தாலும் வெல்லக் கூடாதவனுய் சடாதாரனுகிய சிவன் பொருந்துகின்ற கைலாயமலையையு மெடுத்த ஒப்பற்ற பெரிய பலமுள்ளவன் இன்னமும் வாளியைப்பெற்றவன் சூரியனுஞ் சந்திரனும் வொதுங்கிச் செல்லத்தக்க இலங்கைத்தீவி லுள்ளவர்க்கு அரசனுனவன் பின்னும் மல்யுத்தத்திஞலே நிறைந்த பெரிய புஜவலிமையை யுடையவனும் தேவர்களிலே சிறந்தவர்க

ளான மூவராலும் தொலையாத மூக்கோடி என்னும் அளவை
யுடைய ஆயுசுள்ளவன் இன்னும் கொன்றைமாலை விளங்கு
கின்ற சிவந்த சடையையுடைய சிவனிடத்தில் மிகுந்த வலிவு
பொருந்திய வாளாயுதம் பெற்றவன் இரவைப்போலக் கருத்
த நிறமுடைய இராவண னென்றபெயர் நான்கு திக்கிலும்
ஜெயம்பெற்ற இராவணனுடைய உயிரைக் கொல்வதற்காகத்
திருவவதாரஞ் செய்கிறேனென்று தேவருக்குவரந்தந்த கூரி
யவேலைக்கொண்ட இராமனென்னும்பிரபுவே சூரியனுடைய
பெரியரதம்வருகின்ற குளத்திலே பள்ளிகொண்ட சற்பசயன
மும் திருப்பாற்கடலும் விட்டு இந்தத் திருவயோத்தியிலே
பிறந்தாய் அப்படி அவதாரமானகாரணத்தை முடிசெய்தாய்
இனி உன்னுடைய மெய்யானமேன்மையைக்கொண்ட பரம
பதத்துக் கெழுந்தருளவேண்டும் என்பதாக இப்படிச் சொன்
னதுமன்றி தாமதம்பண்ணாமல் நான்சொன்னயிந்தப்படியே
செய்யக்கடவாயென்று சொல்லுமளவில் நவரத்தின மாளி
கையினைச் சூழ்ந்த வாலியன் முன்னே எரிகின்ற சிவந்தமூன்
றுதீயும் வளர்ந்து வேள்வி செய்கின்ற அத்திரிமகாமுனிவ
ருடைய பெரியபுத்திரனாகவிளங்குகின்ற முப்புரிநூலணிந்த
தூறுவாசமுனிவன் வந்து ஒருவராலும் வளைக்கக்கூடாத நீ
ண்டவில்லைக் கையிலேகொண்ட இலட்சுமணப் பெருமாளை
நோக்கி ஓ! இளையபெருமாளே? வேலாயுதங்கொண்ட ரகுவீ
ரனிடத்தில் நான் கருதியுள்ளதான ஒருவார்த்தை சொல்ல
வேண்டி யிருக்கிறது ஆதலால் தூறுவாசமாமுனிவன் வந்து
வெளிவாசலில் நிற்கிறானென்று ஸ்ரீராமரிடத்தில் சொல்ல
வேண்டிய துனக்குக்கடனென்று நான்குவேதங்களுணர்ந்த
முனிவன்சொல்ல அந்த வார்த்தையை இலட்சுமணர்கேட்டு
வெண்பரிநூலணிந்த பழையவைதிகரே நீர் சொன்னபடியே
உமக்கு யாதொரு குறைவுமில்லாமல் உம்முடைய காரியத்தை
முடித்துத்தருவேன் அந்த வார்த்தையை சொல்லவேணுமெ
ன்று இளையபெருமாள் மிகவும் வணங்கிக்கேட்க உடனே அ
ந்த முனிவர்மனதிலே மிகவுங்கோபங்கொண்டு நீ உன்தமை
யனுக்கு இப்படியாக என்வரவைச் சொல்லுகிறாயா அல்ல
து இப்பொழுது உங்களுடைய படைமுழுதும் அழிவதான
அப்படிப்பட்ட ஒருசாபத்தைக் கொடுப்பேனென்று சொல்ல
அப்படி உத்தாரத்தோடு கூறிய பெரிய வேதங்களுக்குத் தலை
வரான முனிசிரேஷ்டர் சொல்லைக்கேட்டிளையபெருமாள் திடு
க்கிட்டவராய் விசனத்துடனே ஆலோசித்து இவரிடுஞ்சாப
மானது நம்முயிற்கு நேருமேயென்று பெரியவேலைக் கைக்
கொண்டவராயும் பயந்து நடுநடுங்கி இளைய பெருமாளும் வி
ரைந்து சென்று தன்குறைதீர ஸ்ரீராமரைப்போய்க் கண்டு சு

வாமி மிகுந்தபெருமையையுடைய அத்திரிமகாமுனிவர் புத்திரனுகிய ஞானத்தில் மிகுந்த தூறுவாசமுனிவர் வாசலில் வந்திருக்கின்ருர் ஏதோவிசேஷந் தங்களைக்கண்டுபேசவேணுமென்று பாதங்களில் வணங்கிச் சொல்ல அதைக் கருங்கொம்பும் நெருப்பைச்சிந்துகின்ற கண்களுங்கொண்ட எருமைக் கடாவாகனத்தில் நன்ருகமகிழ்ந் தேறுகின்றவரும் கண்ணுக்குத் தோன்ருதவருமாகிய யமனைநோக்கிவந்த தூறுவாச மகாமுனிவரை உபசரித்துபோகச்செய்து பின்னரங்கே வருகிறேமென்று ஒரே உறுதியான வார்த்தைசொல்லி யனுப்பிவிட்டு தன்னிடத்தில் வந்து சொன்னதம்பியுடனே நிலையான பெரியவேதங்களெல்லாந் தெரிந்த தூறுவாச மகாமுனிவரை வரவழைத்து அவர்வந்தபின்பு பாதங்களை வணங்கிச்சதுர்வேத முனிவரே நீரென்னிடத்தில்வந்தது என்ன காரியமென்றுகேட்க அதற்கு தூறுவாசமகாமுனிவர் கேளும் ஸ்ரீராமா உங்கள்குலத்து முன்னோர்கள் முறையே முடிசூட்டி அரசாளுகிற அக்காலந்துடங்கி ஆயிரவருஷத்திற்கொருதரம் நான் ஒருநாள்வந்து உங்களிடத்திலே போஜனஞ்செய்துக்கொள்ளுகிறதாகிய அந்தநாளின்ருகையால் நான் போஜனஞ்செய்ய வேண்டுமென்று வந்தேனென்று சொன்னர். அதுகேட்டவுடனே எட்டுத்திக்கிலும் யாகஞ்செய்வதினுலேயே கீர்த்திச்செலுத்த வல்லவனும் அமுதுபாக்கியமான முப்புரிநூலணிந்த மார்பினராய் அரசர்களுக்கு தருந்த மனமும் நிழலும்போல்வரான சுயம்பாகிகளை தகுந்தபடி அழையுமென உத்திரவளித்தனர்.

வெற்றிமாலையணிந்த இலட்சுமணராலே வரப்பட்டதூதர்கள் வாயுவேகமனோவேகமாயோடி ஒரு நொடிக்குள்ளே சுயம்பாகியைக்கண்டு விரைவிலோடி ஸ்ரீராமர் சபாமண்டபத்தி னருகே வரும்படி கூட்டிவர அமுதுசெய்பவனும் ஸ்ரீராமமூர்த்தியினிடம் வந்து வணங்கிநின்ருன். அவனைக் கண்ட ஸ்ரீராமர் சொல்லுகிருர். கேளும் சுயம்பாகியே இந்தப் பெரியோருக்குத் திருப்தியாகும்படியான அறுசுவையோடுங் கூடின உண்டிசமையல் சீக்கிரமாகவேணுமென்று கட்டளையிட்டார். அந்தப்படியே செய்கிறேமென்று ஒருவன் பொன்னினுலும் வெள்ளியினுலு மிருக்கும்பாத்திரங்களையெல்லாம் துலக்கி இரத்தினகுடங்களில் நீர்க்கொண்டு வைத்துக் கொண்டேயிருந்தான். மற்றொருவன் சாதஞ் சமைத்துக் கொண்டேயிருந்தான். அதெப்படி யென்னில் மிகுந்த சந்தனகட்டைகளாலும் குளிர்ந்த அகிற்கட்டையாலும எங்கும்வைத்து அந்தப்பானைகளெல்லாம் நல்ல வஸ்திரத்தாலே மூடமற்றபேர்கள்வந்து அவர்களுடைய திருமடப்பள்ளியில் வெந்தவெள்ளைசாதங்களை வீரர்களாலே அடுப்பெரிய மாட்டிகொ

டிய நோய்களில்லாமல் நல்லமுனைதெரியாத புழுகுசம்பா அ
ரிசிஆயிரம்படியரிசியை உலையில்பெய்து பொன் துடிப்பினாலே
துழாவிபதமாகவடித்து வகைவகையாகயிறக்கி அறுசுவையோ
டு கூடிய கறிவகைகளைச் சமைத்து அதற்குப்பின் நன்றாகத்தா
ளிதஞ்செய்துவைத்துப் பசுவிநெய்யை பதமாகக்காய்ச்சி முதி
ர்ந்த பசுமையுள்ள முக்கனிகளுடனே குழம்புபால்களுங்காய்
ச்சி இன்னும் பலவகைகளெல்லாஞ் செய்துவைக்கும்போது
வந்திருக்கிற தூருவாசமகாமுனிவரையும் பார்த்துஐயா முனி
வரே நீர்கேட்டபோஜனம்உண்டருளுமென்றுவண்டுகள் இன்
னிசை ராகங்களையெடுத்து திறைத்துப்பாடுகிற மாலையணிந்த
ஸ்ரீராமன்சொல்ல திருமாளிகையிலே ஆசனமிட்டு ஒரு பொ
ன்பாத்திரத்தில் நீர் கொண்டுவந்து கொடுக்க அந்தமுனிவர்
கள் கழுவிவந்தபின்பு பலவகை கறிகளுடனே நல்லதிருவமு
து படைத்துநின்றார்கள் அப்போது தூருவாசமகாமுனிவர்
மெய்யான மந்திரவிதிப்படி நல்லதினத்தில் குற்றமற்றதீயினா
ல் சுற்றினகையிலே கொண்ட நீரைப் பானஞ்செய்து அன்
புடனே ஐவகைமந்திரத்தினாலே அமுதருந்தி பாலாக்கினி
பால் தேன் நிலாவைப்போல் விளங்குகின்ற மலைக்கோப்பா
கக் குவித்த வெண்சோறு இவைகளை விள்ள உலாவித்திரிகின்
ற உதராக்கினி அடங்க விலாப்பக்கத்திலுள்ள பள்ளங்களெ
ல்லாம் நிறம்பவுண்டு அவர்கையிலேகொண்ட நீருங்குடித்து
வேதத்திலே சிறந்தமுனிவர் உயர்ந்தபெரிய ரத்தினக்கிரீடங்
களணிந்த பரிசுத்தரான அரசர்தங்கள் சிவந்தகையினாலே
பொன்னாகிய சொம்பிலே கொண்டுவந்த கங்காசலத்தினாலே
சிவந்தகைகள் கழுவிக்கொண்டு நாவிலே அறுசுவையும்பெரு
கி சர்க்கரைப் பாலுஞ்சோறுமான பாயாசமுஞ்சாப்பிட்டு எட்
டுத்திக்கிலு மிப்படிப்பட்ட சாப்பாடுசெய்து படைப்போர் கி
டைக்கமாட்டார்களென்று சமையல் செய்தவரிற் சிறந்தவ
ரைக் கொண்டாடி மகிழும்போது ஸ்ரீராமர் இந்த அமுது
செய்தவர்கள் யோக்கியமான குலத்தினரேயென்று அவர்கள்
குலமரபும் தமக்குறவானதையுந் தெரியச்சொல்ல அதுகேட்
டு தூருவாசமகாமுனிவர் மகிழ்ந்து தமக்கிஷ்டமான திக்கை
நோக்கிச் சென்றனர் பின்பு ரகுநந்தனரானவர் மகாகேயூர
கங்கணங்களணிந்த எமதருமன்சொன்ன உறுதிவார்த்தை
யை எண்ணிப்பார்க்கும்போது தம்மோடுகூடிப் பிரியாதிருக்
கிற இளையபெருமாள் இனிப் பிரிகிறதற்கிடமாயிற்றே யென்
று நைந்துநைந்து துன்பத்திலே முழுகியிருப்பதைக் கண்ட
இளையபெருமாள் ஓ! சுவாமி, நீர்வளம்பொருந்திய கேகய
தேசத்தரசன் மகளுக்கு வரங்கொடுத்து உமதுயிரை எமனுக்

குக்கொடுக்க நிச்சயித்திருக்கும் நீரெனக்காகத் துக்கிக்கவேண் டாம் வெற்றிமாலையணிந்த வேலாயுதங்கொண்ட இராமா வென்று பாதத்திலேவிழுந்து சேவித்து சுவாமி உம்மாலே நமது பிதாவானவர் தம்முடைய வாக்கை நிலைசெய்துக்கொ ண்டதினாலே அவர்பொய் சொல்லாதவரென்று உலகத்திலே அக்காலந்துடங்கி நிலைபெருகலாயிற்று அப்படி நம்முடைய தாய்மார்கள் வரங்கொடுத்து நிலைசெய்ததினாலே உமக்குக் கீர் த்தியும் புகழுமுண்டாயிற்று அதுபோலவே இக்காலத்திலும் எமனுக்குச் சம்மதமான வரங்களைக் கொடுத்தருளும் எனக்கு அவ்வரம் நிறைவேற விடையுங் கொடுமென்று மிகவும் வே ண்டித் தளர்வுகொள்ள அதுகேட்ட ஸ்ரீராமன் தன்னிரண்டு கண்களிலும் அருவிபோல நீரொழுகி மார்பிலேவழியத் தன் னைவிட்டு நீங்காத தமது நிலையான நிழல்போன்றவனாகிய இளையவன் பிரிவுக்கஞ்சி மிகவும் வருந்துதலாய் மிகுந்ததே னொழுகுகின்ற துளசிமாலையணிந்த பராபரரான ஸ்ரீராமன் தூதர்களைநோக்கி! தூதர்களே, நம்முடைய வளமைபொரு ந்திய பட்டணத்துச் சனங்களை வசிஷ்ட குருவுடனே கூட்டி வாருங்களென்றனுப்ப அந்தப்படியேசென்று தூதர்சொன் ன வாய்மொழியானதைக் கேட்டபின்பு பெரியபட்டணத்து ஜனங்களும் வசிஷ்டரும்வந்து அரசனாகிய தம்மைக் கண்ட பின் ஸ்ரீராமர் நிறைந்தபெரிய சபையாரையும் வசிஷ்டரை யும் பார்த்து எமதருமராஜன்வந்து தம்மிடத்தில் வரங்கேட் டுக்கொண்டதும் அத்திரிபுத்திரரான தூறுவாச னேவுதலா லே வாசல்கார்க்கின்ற தம்பி தம்மிடத்தில் வந்ததும் தெரி யச்சொன்னார்.

அதுகேட்டு வதிஷ்டர் ராமனைப் பார்த்துக்கேளும் ரா மா உமது தகப்பனார்தானேதாவுகின்ற குதிரைகட்டிய பலமா னதேர்மேல்வருகிற தசரதன் அவரிடத்தில் ஒருநாள்வந்த அத்திரிபுத்திரனான தூறுவாசர் பாதங்களில் வணங்கித் துதி த்து ஐயா என்னுடைய ராசாங்கத்துக்குத் தக்க புத்திரர்களி ல்லா திருக்கிறேன் அதற்கு நான் செய்யத்தக்கது என்னவெ ன்று மிகவும் வருந்திக்கேட்டார் அதற்குத் தூறுவாசர் பெரி தான அஸ்வமேதயாகஞ் செய்தீரானால் அறிவுள்ள நான்கு புத்திரர்களைப் பெறுவீர் ஆனால் அந்தப் பிள்ளைகளில் ஒருவ ரிறந்தால் மற்றமூவரும் இறந்துபோவார்களென்று சொல் லிய தூறுவாசர் மொழிப் பிசகமாட்டாது என்று வதிஷ்டர் சொன்னதை தான் கேட்டு மிகவும் வெகுண்டு ஆனால்விதியை வெல்ல ஒருவராலுமுடியாது என்று தேறியிருக்க இனி நீர் தம்பிக்காக விசனப்படவேண்டாமென் றிப்படிச்சொல்லும் போது இளையபெருமாள் கேட்டீரோ சுவாமி நமதுகுலகுரு வான வதிஷ்டர்சொன்னதை இனியெனக்கு விடையருளவே

ண்டுமென்று சிவந்ததிருவடிகளில் விழுந்துசேவிக்கக் கண்ட
ஸ்ரீராமன் தருமத்தில் கன்றுபோன்றதம்பி பிரியவல்லவர்கள்
நெஞ்சைப் பிளக்கிறதினாலே மலர்போலுங் கண்களிலேயருவி
சோரவிதியின்முடிவை ஆலோசித்து ஒன்றும்பேசாமல் நி
னைவு மூச்சுமில்லாமல் மௌனமா யிருக்கும்போது இளைய
பெருமாள் மரப்பாவைப்போல் பதில்வார்த்தை யொன்றும்
பேசாதிருக்கிற ஸ்ரீராமனுடைய பாதங்களை வணங்கித்துதி
த்து பேசாதிருக்கிறதே விடை யென்றெண்ணிக் கொண்டு
அங்கே நில்லாமல் அந்தப்பட்டணத்தைவிட்டுப் போகும்
போது சிலர் தன்னை நம்பின நான் மறையோருக் கெல்லாம்
உபசாரஞ் செய்துக்கொண்டு போவதனால் இதையோசித்தால்
தேவர்கள் சொன்ன வார்த்தை உலகத்திலே பிசகுமோயென்
பார்கள் சிலர்மனநடுங்குகிறது முடிவுகாலம்வந்ததென்பார்
கள் சிலர் தம்பியைப்பிரிந்து தமையன் உயிர் நிற்குமாவென்
பார்கள் சிலர் வீரத்தன்மை பொருந்திய யரசாட்சியைக்கொ
ண்டு அயோத்திமாநகரத் தரசர்களுக்குவரங்கொடுத்து உயி
ரைவிடுகிறது குலசுபாவமேயென்பார்கள் சிலர் இந்த அரசர்
களுயிரை யமன்தானுவது கொள்ளத்தகுவானோ வென்பார்
கள் சிலர் இந்த அயோத்தியாபுரியில் துன்பப்படாமல் சுக
மடைவதுண்டாவென்பார்கள் சிலர் இலட்சுமணர் பிராண
னைவிடுவாரானால் நாம் இனிப்பிராணனோ டிருப்போமாவெ
ன்பார்கள் இப்படி அயோத்தியாபுரிவாசிகள் நைந்துநை
ந்து கரைந்துகரைந்து துக்கித்து வருந்த இளையபெருமாள்
அந்தப் பட்டணத்து வாயிலை நீங்கி நவமணிகளைக் கொழி
த்து முத்துகளைப் பொன்னுடனே வாரிக்கொண்டு எவ்விடத்
தும் சலப்பிரவாகமாகி தனக்குச்சரியான நதியொன்றுமில்லை
என்ன உலகங் கொண்டாடும்படியான சரயுநதிக்குவந்துசேர்
ந்தார் வந்தபின்பு குற்றமில்லாத மணிகள் பதித்த மதில்சூழ்
ந்த அயோத்தியாபுரியில் வாசஞ்செய்கின்ற வெகுஜனங்களும்
துன்பத்தினால்வருந்தவும் பெண்கள் செந்தீயில் மூழ்கவும்
பாச பந்தத்திலகப்படாத பரதமகாராஜன் துக்கசாகரத்தில்
மூழ்கவும் இளையபெருமாள் சரயுநதியில்மூழ்கினார் அப்படிமு
ழுகிவராகவதாரத்தில் அதனுடைய நீண்ட கொம்பினாலே
பொறுக்கபட்ட துன்பத்தைத் தீர்த்து கடலிலழுந்தின உல
கையாண்ட மகாவீரனான சூரியகுலத்து இராமருடைய முதி
ர்ந்தபிணி நோய்கள்முதலான பெரிய பிறவிக்கடலின் கரை
யேறுதற்கு அந்தப்பெரியநதிக்கரைமே லேறினான் அப்படி
யேறினபின் காமக்குரோத லோபமோக மதமாச்சரியமான ப
கைகளை விளைக்கின்ற பஞ்சேந்திரியங்களையும் உள்ளேயடக்கி
வெண்மையான சங்குகள் மேய்கின்றபெரிய மணற்கரை மே

லே குத்துகின்ற வேலையுடைய இளையபெருமாள் யாகஞ்செய்துக் கொண்டிருக்கையில் தேவேந்திரன் ஆகாயத்தில் விளங்குகின்ற செம்பொன் விமானத்தின் மேலேவந்து தன்னையுத்தஞ்செய்து கொன்ற பெருமையுள்ள இளைய பெருமாளைச் சொல்லுதற்கரிதான புகழைக்கொண்ட சரீரத்துடனே மகிழ்ந்து பொன்மயமான விமானத்தின்மே லேறிக்கொண்டு போக பெரியவுலகத்தா ரெல்லாரும் அயோத்தியாபுரி வாசிகளுடனே புலம்பியழ வெற்றிவேலைக்கொண்ட இளைய பெருமாள் பொந்தியுடனே தேவலோகத்துக்குப்போய் அங்கேயிருந்து திவ்விய தேகத்தைக்கொண்டு நித்தியசூரிகள் சூழ்ந்துவரவைகுந்தம் போய்ச்சேர்ந்தருளினர்.

### ஸ்ரீராமர் இலட்சுமணரைப்பார்த்து புலம்பல்.

விருத்தம்.

ஏங்கியேதரையில்வீழ்ந் திடியிடித்ததுபோலெண்ணி
தாங்கியேமனந்தளர்ந்து சதிர்ப்பரதரையும்பார்த்து
பாங்குளதம்பியே நீ பட்டணமாள்வாய்நானும்
நீங்கியேபோறேனென்று நிலைதளர்ந்துருகுவரே.

அப்பால நடந்ததைச் சொல்லுகிறேம் எப்படி யென்றால் இங்கே எப்போது தன்னைவிட்டு நீங்காத தம்பியை நினைத்து மிகவும் வருந்துகின்ற துன்பத்துக் கிடமாகிய இராமன் தனக்குள்ளேமெலிந்து நாலுதிக்கிலும் பார்த்து தம்பியைக் காணமல் மனந்துடித்து வேர்த்துத் திருமேனியெல்லா மெலிந்து நினைந்து நெடுங்காலமெல்லா மென்னைக்கைவிடாமல் காத்ததம்பி இப்போதென்னைக் கைவிட்டுப் போனயோவென்று தாமரைப்போலும் கண்களிலே நீராகப்புலம்பத் தொடங்கி வெற்றிக்குடைகொண்ட மேகநாதனென இந்திரசித்தையொரு அம்பினலே கொன்று அறியாதபாவியான எனக்கு ஜெய முண்டாகச்செய்த என்னுயிரை திவ்விய பரிமளமாலை யணிந்த தசரதசக்ரவர்த்தி புத்திரனே புத்தியில்லாதவனுக்குத் துணையான தம்பி இனிநான் வுலகத்திலே நிலைகொள்ளேன் நிலைகொள்ளமாட்டேன் ஓ! ஓ! நான் பொறுத்திருப்பேனே என்னரசசிங்கமே யடைக்கலம் புகுந்த விபீஷணர் முன்னே யவன்வந்து சேராதபடி காத்துப்பகையான இராவணன் விட்ட வேல் முன்னே சென்று மலைபோல் மார்பிலே தாங்கின என்தம்பி இலட்சுமண என்னுயிரே இனிநா னென்ன செய்வேனென்றிப்படி பலவகை நினைத்து பிரலாபித்து பொன்னலும் இரத்தினங்களினலும் அலங்கிருதமான மலைபோலே மழை விழுவதுபோலவும் அருவி யொழுகுவது போலவும் கண்ணீர்பெருக அழுது பிரலாபித்தார் அப்படி தன்செவந்த திருவடிகளையே எல்லோருக்குந் தந்து ரட்சிக்கும் ஸ்ரீராமர்

அழும்போது அவர் நிறத்தைக்கொண்ட மலைகளும் அழுதன பெரியதிக்கு யானைகளுமழுதன ஆகாயமும் பெரியதிக்கும்வுல கங்களும் அழுதன இப்படி நினைத்து யெண்ணி யெண்ணிக் கரைந்து நையாத பொருள்களொன்றுமில்லை பின்னையும் ஸ்ரீ ராமர் யென்னுடைய இனிதானவுயிர்போனால் பொய்யான யென்னுடம்பு நிற்குமோ, ஆகையாலே இனி யெனக்கிளைய வன் போனவழியே நானும்போகக்கடவேனே யென்று ரத் னங்கள் பதித்த ராஜமுடியை நீ சூட்டிக்கொள்ளென்று எல் லாரும் துதிக்கத்தக்க யானையைப்பார்க்க அப்படிப் பார்த்த வுடனே, பரதன் விரைவிலே தமது கைகளைத்தலைமேலே குவி த்துக்கொண்டெதிர் நிற்க அவரைக்கண்டு வாசமிருந்த மாலை யணிந்த ஸ்ரீராமரானவர் ஓ! தம்பிபரதா, இனி உலகை காத்த ல் உனக்கே கடனென்றுசொல்ல அதுகேட்டு பரதன்மிகவுந் துக்கித்து இராமர் பாதத்தின் கீழே செத்தவன் போலே விழுந்து ஐயையோ இந்த ஸ்ரீராமர் விளங்குகின்ற இராஜமு டியை சூட்டிக்கொள்ளென்று எவ்வளவுந் துன்பங்கொள்ளா மற்சொன்ன தகப்பனிடத்திலே பெருமைகொண்ட கேகயரா ஜன்பெற்ற கைகேசி பெற்றுக்கொண்டவரத்திலும் கெட்டதா யிருக்கிறதென்று சுவாமி நீர் அரசாட்சி செய்கின்ற வுலகத் தை ஆலோசித்து என்னிடத்தே கொடுக்கிறது தெய்வத்தன் மையைக்கொண்ட தாங்கள் தாங்குகின்ற இந்த நால்வகை யானவுலகத்தை இந்தவுலகத்திலே திரிகிறபாம்பைத் தாங்க ளென்று சொல்வதிலுஞ் சிறந்ததே யின்னம் மத்தங்காய்ப் புல்லரிசி செந்நெல்லுக் கொப்பாகுமானாலும் மின்மினிப்பூச் சிஒளி சூரியனுக்கொப்பாமோ, ஆனாலும் வுமக்கொப்பாக நானிருந்தரசாளுகிறது வுள்ளுக்கு குற்றமேயாம் ஆனதால் முன்னேவும்மைப்போலே ஆண்மைத்தொழிலைக்கொண்டவர் கள் தன்பின்னும் நிலையாக இந்த உலகத்தை நடத்தவல்ல வர்கள் யாரென்றால் குற்றமில்லாமல் உதாரகுணங்களுடைய குசலவர்களுக்கு நீர் உம்முடைய வொளிபொருந்திய முடி யைச்சூட்டுமென்று சொல்லி பரதன் வணங்கினான்.

---

## குசலவர்களுக்கு முடிசூட்டல்.

---

விருத்தம்.

துங்கமுறு முத்துநவ ரத்தினத்தாலுன்
சொல்லரிய மரகதமா ணிக்கத்தாலும்
பொங்கமுறு சதுர்பந்த லமைத்து விண்ணோர்
புளகமுற மேதினியோர் வியப்பதாகத்
திங்கள்நிகர் குசலவர்க்கு மகுடஞ்சூட்டச்
செய்திகேட் டரசர்களுஞ் சேரவந்து

தங்கடங்கள் காணிக்கை கப்பணமுங் கட்டி
சார்ந்திட்டார் மனங்களிப்பு கூர்ந்திட்டாரே.

அப்போது இராஜாதிராஜனான ஸ்ரீராமர் மனமகிழ்ந்து அவ்விடத்தே கொல்லனுற்செய்த கொலை வேலைக்கொண்டுநிற்கிற குசலவர்களுக்கு அப்பொழுது தானே முடிசூட்டுதற்கேற்ற காப்புங்கட்டிஉயர்ந்தபெரிதான மதயானைமேல்ஏறுகின்ற அரசர்களுங்கூடிப் பிராமணர்கள்சூழ்ந்து பேரிகைகள் முழங்க, சங்குகள் முழங்க, வாசனைப்பொருந்திய பூவையணிந்த கூந்தலையுடைய பெண்கள் விளக்குகள் தாங்க பெரிய யானைமேலே நூற்றெட்டுத் தங்கக்குடங்களின் வாய்நிறம்ப கங்காசலங் கொண்டுவரச்செய்து உலகநாதரை நீங்கின ஸ்ரீராமர்தம்முடையபிள்ளைகளுக்கு மகிழ்வுடனே பட்டாபிஷேகம்பண்ணி பெரியவேதங்களிலே சொல்லியபடி ஆராய்ந்து நல்லநாளிலே பொன்னுலாகிய சிங்காதனத்தின்மேலேற்றி பொன்னுடையணிந்து யானைவீர்களெல்லாந் தங்கள் அழகியகைகளை தலைமேல்கூடக் குசலருக்கும் பெரியராஜமுடி சூட்டியருளிய பச்சிலையுடைய பழுத்த குலைகளைக்கொண்ட வாழைமரங்கள் குற்றமற்றபெண்கள் துடையிலே நீண்டுவளர்கின்ற அந்த கோசலநாட்டிலே குசலவதியென்று ஒரு குற்றமற்ற நீண்ட மதில்சூழ்ந்த பெரியஒருபட்டணம் உண்டுபண்ணி தகுதியான நல்லவகைச்சேனைகளும் அதற்குத்தகுந்த செல்வமும் வகை வகையாகவைத்து கொத்துகளோடு மலர்ந்த மாலையணிந்த குசலவனென்பவனை அந்தப்பெரியபட்டணத்திலே அரசாளவைத்து கிரீடமணிந்த அரசற்கரசனாகிய ஸ்ரீராமர்பின்னும் உத்தரகோசமென்று விளங்குகின்ற திருநாட்டில் அதிக விசித்திரமான க்ஷீராப்தியென்கிற ஒருசிறந்தநகரத்தில் வரிசையாக ரத்தினங்களால்பதித்து உயர்ந்த ராஜதானியான மாளிகையொன்றுகட்டி தம்முடைய சதுரங்கசேனைகளும் நிலைபெற்ற செல்வமும்நன்ருகக்கொடுத்துப் பொன்னுலாகிய கீர்த்தியைக் கொண்டமதில்சூழ்ந்த சிறந்த அந்தநகரத்திலே லவனை அரசாளவைத்து பின்பு அந்நாள்கடந்த மறுநாளையதினம் இலட்சுமணர்போனபடி நானும்போய்ச் சேரவேணும் சத்துருக்கருக்கும் நீங்கள் போய் சொல்லுங்களென்று வண்டுகள் தேனைக்குடித்துப்பாடுகின்ற மாலையணிந்த ஸ்ரீராமர் தூதரையனுப்பி விட்டார். தூதர்கள் சத்துருக்க மகாராஜனுடைய அதிருங் கழல்களை வணங்கி அயோத்தியாபுரியிலே விசேஷமுண்டானதும் பின்புநடந்த சமாச்சாரமும் விரைவிற் சொன்னார்கள் வாயுகதியாகவந்தவர் அப்படி ஒட்டத்துடனே வந்து சொன்னவர்கள் வார்த்தை விசேஷங்களையெல்லாஞ் செவி

கொடுத்துக்கேட்டு மெலிந்தநெஞ்சுடனே கண்களில் நீரொ
ழுக உடம்பெல்லாம் நடுங்கிமலைபோன்ற தோள்மிகவுமெலி
ந்து சோர தனக்கொப்பில்லாத மாலையணிந்த ஸ்ரீராமனு
டைய பொன்னடிகளை இனிவணங்கி உச்சீவிக்கப் போகி
றேன் நீங்கள் இந்தப்பட்டணத்தை யாண்டுக் கொண்டு சுக
மாயிருங்களென்று தன்னுடையபிள்ளைக்குஇராஜமுடிசூட்டிப்
பின்பு சந்திரன் தவழுகின்ற மாலையுடைய மதிற்புறத்திலே
விதிப்படி க்ஷிராப்தியென்று மிருதியைக்கொண்டே புதிதான
ஒருமண்டபத்தையுண்டுபண்ணித் தன்புத்திரர்களை அந்தப்
பட்டணத்திலேயிருக்கச்செய்து பின்பு பாதுகையணிந்த சிற்
றடியும பவளம் போலும் சிவந்தவாயும் கங்கணங்களணிந்த
கைகளையுடைய பெண்கள்வருந்திச் சோர்வடைய பெரிய
மாடமாளிகையுடைய மதுரைமாநகரத்தைவிட்டு சொர்னமதி
ல்கள் சூழ்ந்த அயோத்தியாபுரிக்குவந்து ஸ்ரீராமருடைய இர
ண்டுதிருவடிகளையும்வணங்கிய தன்புத்திரர்களுக்குப் பொன்
முடி சூட்டினதும் குதிரை யானைதேர்களாகிய இவைகளைக்
கொடுத்ததும் முதலாகத் தெரியச் சொன்னான் அதெல்லாங்
கேட்டபின்பு அருவிப்போல் நீரொழுகுங் கண்களையுடைய
தனக்கொப்பில்லாத வெற்றிமாலையை யணிந்த ஸ்ரீராமர் மூந்
தினநாளில் தன்னைவிட்டுப்பிரிந்த பெரியதோள்களையுடைய
இளையபெருமாள்போன நல்லவழியேசெல்ல ஆலோசிக்கும்
போது சந்திரனைவொப்பாக வெள்ளையானை முத்துக்குடை
ஆகாயத்தின்மேலே அழகுகாட்ட கட்டுத்தறியை முறிக்கப்
பட்ட மும்மதங்களைக்கொண்ட வெவ்விதானபகைகள் முனை
கின்ற யானைமேலே விபீஷணனென்னும் மெய்ஞ்ஞானியா
னவன் பின்பு எல்லோரும் அஞ்சத்தக்க இராவணனுடைய
பெரிதான பத்துமகுடங்களிலும் விளங்குகின்ற இரத்தினங்
களையும் பரித்துக்கொண்டுவந்த தமயனைப்போல் சஞ்சரிக்கின்
ற எழுகுதிரைகட்டிய தேரின்மேலே எட்டுதிக்கும் விளங்குகி
ன்ற சூரியகுமாரனென்னுஞ் சுக்ரீவனும்வந்து சேர்ந்தான்
அவனுடனே மகிழ்ந்து உதயமாகின்ற சூரியபகவானை ஒரு
பழுத்த சிவந்தகனியென்று முறையுடையவனைக் கோபித்து
வந்து உலகமெல்லாம் மோதுகின்ற பெரிய வாயுபுத்திரனும்
வந்துகூடினான் அநேகமலைகளைப் பலம்கொண்டுபோகப்போ
க ஒருகையாலே வாங்கி அவ்வானவர்மேலே கர்ச்சித்து மோ
துகின்றகடலை அணைகட்டின நளனும்வந்து சேர்ந்தான் பி

ன்புதுரங்குடனே யுத்தஞ்செய்ய இதுதானென் றெண்ணங் கொண்டு தன் பாணாஸ்திரங்களால் யுத்தம்பண்ணி வருகிற இராட்சதசேனைகளைகைகளாலும்கால்களாலும்மலைகளாலும் பிரகாசியாநின்ற வெண்மையான பரவைகளாகப் பிறந்தவர் களும் மற்ற அரசர்களும் வந்துகூடினார் ஆகையாலே முன் னே போன இளையபெருமாளுடனே கூடப்பெருமை பொரு ந்திய மலர்போலும்பாதத்தை வணங்கினபேர்களுக் கெல் லாந் தேன்பொருந்திய மாலையணிந்த ஸ்ரீராமர் தெரியச்சொ ல்லி முன்னே விபீஷணரைப்பார்த்து மின்னுகின்ற வேலைக் கொண்ட நீண்டகைகளையுடைய விபீஷணா? நீஉன்னுடைய பொன்மயமான இலங்கைக்குப் போய் உலகத்திலுள்ள சீவ கோடிகளுள்ளளவும் வாழ்ந்திருக்கக்கடவை போவென்று அன்புடனே விடைகொடுத் தனுப்பிவிட்டு சுக்ரீவனைப்பார்க்க அதுதெரிந்து சூரியகுமாரனான சுக்ரீவன்தனக்கும் விடை கொடுத் தனுப்புவாரென்று பயந்து சுவாமி, இராகவா! அங் கதனுக்கு மகுடஞ்சூட்டி அங்கேவைத்துச் சிலருடனே இங் கேகூட வருகிறதற்காக வந்தேன் என்று வணங்கினான். அப் படிவணங்க வேலைக்கையிலேகொண்ட ஸ்ரீராமர்பின்னே சூரி யகுமாரன் சுக்ரீவன் வருவதுதெரிந்து ஸ்ரீராமரானவர் ஓ! சுக்ரீவா? நிறைந்த குணத்துடையவர்களானால் திரிலோகத்தி லே யுள்ளவர்கள் யாரானாலும் ஒருவர் செய்த நன்றியை மற க்க மாட்டுவார்களோ வென்று வாய்வுபுத்திரனான அனுமா ரை மிகவும் மகிமையுடனே பார்த்து முன்னே நான்சொன்ன தெல்லாம் கேட்டாயல்லவோ, இனிவுலகத்திலே வாழ்ந்திரு ப்பது உன்கருத்துடனே கூடினதாதலால் பொன்மலைபோலு யர்ந்த தோள்களையுடைய அனுமாரே சுகமாயிருக்கக் கடவீ ரென்று சொல்லிக்கொண்டேபோக அதுகண்ட சூரிய குமார னான சுக்ரீவன் சாம்புவந்தர் வணக்கத்தையுடைய குமுதன் அரக்கரைக்கொலைசெய்தசுமித்தன் மகாவிவேகியர்ரணரங்கன் நீலன் மற்றுமுள்ள வானரவீரர்கள் உலகத்தரசர்கள் முதலிய யாவரும் ராமனுடைய வுத்திரவினாலே விலகி நில்லாதவர் களாய் அவர்களுடனே தோரணங்கட்டியும் பெரிய அயோத் தியாபுரியி லுள்ளவர்கள் அழகுமிக்க பெண்களும் வேதங்கள் நான்குமுணர்ந்த பிராமணர்களும் ஒரேமனதான அன்பினா லே பிரியமாட்டாதவர்களாய் ஸ்ரீராமருடைய நிலையான தி ருவடிகளிலே கொண்டபக்தியினாலே அந்தப் பழையதான

பட்டணமெல்லாம் பாழாகவிறைந்து சூழ்ந்துவர அவர்கள் கோட்டைவாசலைவிட்டுக் கடந்துபோனார்கள் அப்படியாகும் போது இராமனிடத்தே கொண்ட பக்தியினாலே உலகத்தா சையை வெறுத்தவர்களாய் சொல்லுதலாலே அவர்கள் பிற ந்தநாள் முதலுள்ள அயோத்தியானது முத்தமிழிலுள்ளவ ரான அகத்தியமுனிவர் கையிலே மொண்டுகுடித்த முன்னாளி லேவற்றிய கரணமிருந்த மணலையுடைய கடலைப்போலிருந் தது பின்பு ஸ்ரீராமருடனேகூடி பெருகிவருகிற நதியிலேபோ ய்த் தீர்த்தமாடுகிறவடத்திலே நீராடி வெளியே கரையிலே றினவுடனே பூவிலிருக்கின்ற நான்முகக்கடவுள் மகாவேகத் தில்மிகுந்து அனேக பிரகாசத்தையுடைய விமானங்களுட னே அழகியதான ஆகாசமுகட்டிலே வந்துதோன்றி அய்ய னே மெய்யனே துய்யவேவிளங்கும் விண்ணோர் கையனே இனி உம்முடைய திவ்வியதேகத்துடனே வந்தருளவேண்டு மென்று வணங்கிச்சொல்ல அதுகேட்டு ஸ்ரீராமரானவர் மு ன்னே தன்னைச் சரணாகதிபண்ணுந்தேவர்கள் துன்பத்தை நோக்குதற்காக உலகத்திலே நிலையாகப்பிறந்த வகையை நி னைந்து அங்கேதனக்கு நேரில்லாத அந்த சரயுநதியிலே கழி த்துவிட்டு தம்முடைய தம்பிமாருடனே பரிசுத்தமான சரயு நதியைவிட்டுப் பின்பு ஒரு தன்மையாய்ச் சேரும்போது சம் பந்தாதிகளைவென்ற வேலாயுதத்தைக்கொண்ட சோமகாஜ னாலே காவல் செய்யப்பட்ட பிரதான சேவகர்கள் அப்பியாசி க்கின்ற நான்கு வேதங்களுந் தங்களுடைய நாலுருவும் ஒரு வடிவு கொண்டதுபோலாகப் பின்பு செழுமையையுடைய மு த்துகளைப்பழிக்கப்பட்ட சரயுநதி தீரத்திலே சகலரும் குளிர்ச் சியாகக் கொண்டவர்களாய் முழுகிக்கூடி நெருங்கின பின்பு பிரியமாட்டாத விசனத்துடன்வந்த வானர வீரர்களெல்லாம் பழையதங்கள் தெய்வலோகத்தைக்கண்டு நிற்க ஸ்ரீராமர்கண்டு தம்மைவணங்கும் நான்முகக் கடவுளைப்பார்த்து மேகங்கள் மோதுகின்ற கொடிகள் கட்டின அயோத்திமா நகரத்திலே கூ ட்டங்கள்கொண்டு வாசஞ்செய்தவர்க ளெல்லாரும் அன்புட னே வாழ்ந்திருக்கத்தக்க வீடுகளமைக்கவேண்டுமென்ன நீல மேக நிறங்கொண்டு விளங்காநின்ற திவ்வியசரீரத்தைக்கொ ண்ட சக்கிரவர்த்தித்திருமகன் அருளிச்செய்வதைக்கேட்டு வீ ணநாதத்தைச்செய்யும் வண்டுகள் மொய்த்த செந்தாமரை மலரின்மேவிய பிரமதேவன் எல்லாத் தருமங்களும் விளங்கு

கின்ற கிருபைக்கடலானவர் அருளிச்செய்தபடியே அயோத்தியாபுரி வாசிகளுக்கெல்லாம் விளங்கா நின்ற சந்தானமென்னும் ஒருபெரிய பட்டணத்தை யுண்டுபண்ணினான். அப்படியே அமலனான கடவுள் அங்கே அவர்களிருக்கப் பட்டணம் வுண்டுபண்ணிய பின்பு அயோத்தியாபுரியி லுள்ளவர்களெல்லாம் நவமணிபோல் நிறங்கொண்டு தெளிந்த நீரையுடைய சரயுவென்கிற நதியிலே மூழ்கி தேவவடிவுகொண்டு கணக்கில்லாமல் வந்துலாவுகின்ற செம்பொன்னாலாகிய விமானத்தின் மேலேற்றிக்கொண்டுபோய் விசாலமாக விளங்குகின்ற சந்தணமென்னும் பட்டணத்திலே நிலைகொண்டு வந்தார்கள் பின்பு திருவாழியைக் கையிலேகொண்ட சுவாமியானவர் அதிக மகிழ்ச்சியுடனே பூவின்மேற் கடவுள் நாம் பிரமதேவன் வேதங்களைக்கொண்டு வாழ்ந்த முகடாமாணிக்க மாலைமேற் கொண்ட இந்திரன் துதிசெய்து வாழ்த்தினவுடன் சிவகணமெல்லாம்போற்ற தேவர்கள்வாழி சோபனங்கள் சொல்ல ஸ்ரீராமர் வைகுந்தமடைந்தார்.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

---

கலைமறைமுனிவர்வாழ்த்தக் காரிகையாகங்கூற
நிலைபெறமன்னர்செங்கோ னீணிலந்தன்னில்வாழ்க
அலைகடலிலங்கைமூதூ ரரக்கரைவேறறுத்த
சிலைதொடுவெல்வதாகச் செந்தமிழ்வாழவென்றே.

இனியவர்காதைமுற்று மெழுதினோர்வியந்தோர்கற்றோர்
அனையதனதனைச்சொல்வோர்க் கரும்பொருள்கொடுத்துகேட்போர்
கனயநற்புவியின்மீதே காவலர்புகழத்தாழ்ந்து
வினையையுமறுத்துமேலை விண்ணவர்பதத்துச்சேர்வார்.

மகாவிந்தம் முற்றுப்பெற்றது.

---

சக்காவர்த்தித் திருமகனார் திருவடிகளே சரணம்.

---

